# இன்றைய வங்கிப் பழக்க வழக்கங்கள் கோட்பாடுகள் பற்றி ஒரு நோக்கு

[A REVIEW OF CURRENT BANKING THEORY AND PRACTICE]

ஆசிரியர் : S. K. பாசு

தமிழாக்கம் : பு. வி. சீனிவாசன்



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க.வெ.) வரிசை எண் — 751

# இன்றைய வங்கிப் பழக்க வழக்கங்கள் கோட்பாடுகள்பற்றி ஒரு நோக்கு

ஆசிரியர்
எஸ். கே. பாசு, எம்.ஏ., பிஎச்.டி.

தமிழாக்கம்
பு. வி. சீனிவாசன், எம்.ஏ., பி.டி.,
முதல்வர், முன்னோடித் தேர்வுப் பயிற்சி நிலையம்,
சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition —June 1977
Number of Copies — 2 000
T N T B S (C P ) No 751



# A REVIEW OF CURRENT BANKING THEORY AND PRACTICE

S K Basu

*Translated into Tamil by*
P V Srinivasan

Price Rs. 11-10

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture) New Delhi

This book has been printed on concessional paper made available by the Government of India

*Printed by*
Kumaran Press
298 Mint Street
Madras-600 001

## பதிப்புரை

இன்றைய வங்கிப் பழக்க வழக்கங்கள் கோட்பாடுகள்பற்றி ஒரு நோக்கு என்ற இந் நூல், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 751ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 786 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு, கல்வி, சமூக நல அமைச்சகத்தின் 'மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்'தின்கீழ் வெளியிடப்படுகிறது.

மேலாண்மை இயக்குநர்
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

# முகவுரை

## (முதற் பதிப்பு)

அண்மையில் வர்த்தக வங்கியியலில் சித்தாந்த, நடைமுறைகளில் உலக முழுவதும் அமைதியான முறையில் ஒரு பெரும் புரட்சி ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றது. ஊறிப்போன பழைய வழக்கங்களிலிருந்து மிக விலகிச் சென்று செயலாற்றலைக் காண்கிறோம். பல்வேறு நாடுகளின் அனுபவங்களைத் தொகுத்து அவை காட்டும் பொருளாதாரப் போக்குகளை ஒரு பொதுக் கோலத்தின் வெவ்வேறு இழைகளாகக் காண்பது சுவையாக இருக்கும். ஒரு நாட்டின் பொருளாதார அமைப்புக்கு முக்கிய உறுப்பாக மைய வங்கிகள் அமைவதால் அவை தோற்றும் புதுமைகள், செயல் முறைகள், பொருளாதாரக் கொள்கைகளில் நடத்தும் புதிய பரிசோதனைகள், மாறும் உலகுக்குத் தக்கவாறு தன் வேலைகளை மாற்றிக்கொள்ளும் இயல்பு ஆகியவை கூர்ந்த கவனிப்புக்குரியவை. வர்த்தக வங்கிகளின் மாறும் இயல்புகளும் அவற்றின் இயக்கங்களின் வேறுபாடுகளும் இப் புத்தகத்தில் அழுத்தந்திருத்தமாகக் கூறப்பட்டுள்ளன. அதோடு தனியார் வங்கிகளை நாட்டுடைமையாக்குவது பற்றி விரிவாக ஆராயப்பட்டுள்ளது. எளிய மக்களைக் கவரும் வண்ணம் காலைச் செய்தித் தாள்களில் தலைப்புக்களைத் தேடும், சித்தாந்த உற்சாகத்தால் தூண்டப்படும் சீர்திருத்தவாதிகள் தீவிர முறையில் புதியதோர் பொருளாதார உலகம் சமைக்க விழைகின்றனர். இவர்களுடைய கணைகளிலிருந்து தனியார் வங்கிமுறை மற்ற நாடுகளைப் போலவே இங்கும் தப்பமுடியாத குறைகளைக் கொண்டிருக்கின்றது. மேலும் வளர்ச்சி வங்கிகள், தவணையில் வாங்கல்—கடன் முறை நிதிக் கம்பெனிகள் முதலிய 'வங்கிகள் போன்ற' நிறுவனங்களின் எழுச்சியும் வளர்ச்சியும் நாட்டின் நிதிப் பொருளாதாரத்தில் பிரச்சினைகளைத் தோற்றுவித்துள்ளன. இப் பிரச்சினைகள் ஆராயப்பட்டு இவற்றை அடக்கும் முறைகளும் விரிவாக அலசப்பட்டுள்ளன. அண்மையில் பன்னாட்டு நிதி முறையின் நடைமுறை பலரிடம் மாறுபட்டக் கருத்துகளைத் தோற்றுவித்துள்ளதால் பன்னாட்டு நாணய நிதியை 'உச்சநிலை தேசிய மைய வங்கி' கொண்டு நீக்குவதும், அல்லது 'சிறப்பு எடுப்பு முறை' கொண்டு அதனைச் சீர்திருத்துவதுபற்றி முக்கிய

கவனம் செலுத்தப்படவேண்டியிருக்கிறது. இப் புத்தகம் வளர்ச்சி பெற்ற, வளரும் நாடுகளின் பொருளாதார நிதியமைப்புக்களைப் பற்றியே எழுதப்பட்டிருப்பினும் வளரும் நாடுகளுக்கே, முக்கியமாக இந்தியாவின் பிரச்சினைகளுக்கே முதலிடம் தரப்பட்டுள்ளது.

அலுவலர், வங்கிகளின் செய்தியறிக்கைகள், மைய, வளர்ச்சி வங்கிகளின் அட்டவணைகள், ஆண்டறிக்கைகள், செய்தி வெளியீடுகள் முதலியவற்றிலிருந்தே இப் புத்தகம் பெரும்பாலும் உருவாகியுள்ளது. தவணை–வாங்கல் கடன் முறைக் கம்பெனிகளின் அதிகாரிகளை நேரிடையாகக் கண்டு அவைபற்றிய விவரங்களைத் திரட்டியுள்ளேன். மைய, வர்த்தக வங்கி அதிகாரிகளுக்கும், வளர்ச்சி நிதி நிறுவனங்களின் அதிகாரிகளுக்கும், தவணை–வாங்கல் கடன்முறைக் கம்பெனிகளின் அதிகாரிகளுக்கும் இப் புத்தகத்தை உருவாக்க அவர்கள் ஈந்த பேருதவிக்காக எனது நன்றி.

மார்ச்சு 1970. எஸ். கே. பாசு

# முகவுரை

## (இரண்டாம் பதிப்பு)

எனது மதிப்பிற்குரிய பேராசிரியர் எஸ். கே. பாசு, இரண்டாண்டுகளுக்கு முன் இறக்கும் தருவாயில் இப் புத்தகத்தை மீள்பார்வையிட என்னைப் பணித்தார். அவர் உடல் நலம் தேறித் தானே இப் பணியைச் செய்வாரென்று வாளாவிருந்து விட்டேன்.

அவரது மறைவுக்குப் பின்னர் பதிப்பகத்தார் என்னை யணுகியபோது உடனே ஒப்புதலளித்து என்னால் முடிந்த அக்கறையோடு இப் புத்தகத்தை மீள்பார்வையிட்டுள்ளேன். இதன் கையெழுத்துப் பிரதியைப் பேராசிரியர் தயாரிக்கும்போதே அவர் கூட இருந்து என்னாலியன்ற உதவியைச் செய்தேன். இப் புதுப் பதிப்பில் இன்று வரையுள்ள வளர்ச்சிகளைச் சேர்க்கும் வகையில் அதிகாரங்களில் திருத்தம் செய்துள்ளேன். புதிதாகக் கிடைத்த எல்லாப் புள்ளி விவரங்களின் உதவிகொண்டு இந்திய வங்கிக் கமிஷன் பற்றிய அதிகாரம் மீண்டும் எழுதப்பட்டுள்ளது. நடப்பு மாற்றங்களையும் புள்ளி விவரங்களையும் புகுத்திப் பன்னாட்டு நிதி முறை பற்றிய அதிகாரத்தின் பெரும் பகுதி மீண்டும் எழுதப் பெற்றுள்ளது. வங்கியர், பொருளியல் வல்லுநர், ஆய்வாளர், ஆசிரியர் முதலியோரிடம் முன் பதிப்புப் பெற்ற வரவேற்பை இப் பதிப்பும் பெறும் என நம்புகிறேன்.

கல்கத்தா,
டிசம்பர் 1973.

அலக் கோஷ்

# பொருளடக்கம்

பக்கம்

**இரண்டாம் பகுதி — வர்த்தக வங்கி முறை : கோட்பாடும் செயல் முறைகளும்**



**மூன்றும் பகுதி — வளர்ச்சி வங்கி முறை : கோட்பாடும் செயல் முறைகளும்**



**நான்காம் பகுதி — பன்னாட்டுச் செலாவணி முறை : கோட்பாடும் செயல் முறைகளும்**

# 1. மைய வங்கிக் கோட்பாடு: அதன் வளர்ச்சிப் பகுதிகள்

மைய வங்கி முறையைக் கவனமாகப் பயிலும் ஒரு மாணவன் அது பல்வேறு வளர்ச்சி நிலைகளைக் கடந்ததை அறிவான். 'மைய வங்கி முறை தற்காலத்தியது' என்று ஒரு பிரபல விமர்சகர் கூறுகின்றார். 'மைய வங்கி முறை' என்ற பதமே நூற்றாண்டுக்கால வழக்குடையதன்று; எனினும், காலப் போக்கில் இம் முறை தொடர்ந்து வளர்ச்சியடைந்துள்ளது. மைய வங்கிகளுடைய கட்டமைப்பு, உருவம், பணி, கொள்கை, பொது மக்களுடனும், அரசுகளுடனும், வெளிநாட்டு மைய வங்கிகளுடனும் அவை கொள்ளும் உறவு, உள்நாட்டுப் பொருளாதார வளர்ச்சியில் அவை காட்டும் அக்கறை முதலியவை அவைகளுடைய வளர்ச்சியைக் காட்டுகின்றன. வால்டர் பேஜ்ஹாட் 1873-ல் 'Lombard Street' என்ற தலைப்பில் எழுதிய நூலும், மைய வங்கிபற்றிய தொன்மைக் கோட்பாடு உருவானதும் மைய வங்கிக் கோட்பாட்டின் முதல் படிவத்தை உலகில் புகுத்தின.[1] பேஜ்ஹாட் காலத்திய கருத்து நாளடைவில் மாறியது. இங்கிலாந்தின் தலைமை வங்கியையே (Bank of England) மைய வங்கியின் மாதிரியென ஒரு காலத்தில் கருதினர். அதன் பழக்க வழக்கங்களையும் விதிகளையும் மற்ற நாட்டு மைய வங்கிச் சட்டங்களில் சேர்த்தனர். மற்ற நாடுகளில் உள்ள பண மார்க்கட்டுகளுடைய (Money Markets) தன்மைகளையும், பொருளாதாரச் சிறப்பியல்புகளையும் மேற்குறிப்பிட்ட சட்டங்கள் காணத் தவறின. இங்கிலாந்தில் கூட இங்கிலாந்தின் தலைமை வங்கியின் பழக்கவழக்கங்களில் சில தற்காலத்திற்குப் பொருந்தா என்பதையும் இச் சட்டங்கள் உணரவில்லை. [2]1844ஆம் ஆண்டில் நிலவிய நிலைமைக்கும் 1944ஆம் ஆண்டின் நிலைமைக்கும் இருந்த வேறுபாட்டைவிட மேலும் மிகுதியான மாற்றங்கள் 1944ஆம் ஆண்டுக்குள்ளேயே ஏற்

[1] W. Bagehot 'Lombard Street' (John Murray, 1873).

[2] திரு. டெம்ப்டர் எழுதியுள்ள 'Central Banking in the British Dominions' என்ற நூலை விமரிசிக்கும்போது 'Economic Record' என்ற சஞ்சிகையில் (Dec. 1940, p. 286) பர்ட்லின் என்பவர் கூறுகின்றார்.

பட்டன. சில இயல்புகளை நோக்கும்போது 1944ஆம் ஆண்டின் நிலைமைக்கும் 1714ஆம் ஆண்டின் நிலைமைக்கும் இருந்த வேறுபாட்டைவிட 1944 ஆம் ஆண்டிலேயே அதிக மாறுதல் இருந்தது"[1] என்று பிரபலப் பொருளாதார வரலாற்று ஆசிரியர் திரு. க்ளாப்ஹாம் (Mr. Clapham) கூறுகின்றார். இங்கிலாந்து வங்கியின் (Bank of England) பாணியில் அமைந்த மைய வங்கி இங்கிலாந்துக்கே பொருத்தமற்றிருக்கும்போது வளர்ச்சி குன்றிய நாடுகளுக்குப் பொருந்துமாறு அமைக்க அதைத் தீவிர மாக மாற்றியமைக்கவேண்டுமென்பதில் வியப்பில்லை; தொன்மை மைய வங்கிக் கோட்பாட்டில் தீவிரமான திருத்தம் செய்யவேண்டும். பழைய கோட்பாட்டில் நம்பிக்கை கொண் டிருப்போருக்கு இது அதிர்ச்சியை விளைவிக்கும். பொருளாதார வளர்ச்சி ஏற்பட்டுக்கொண்டிருக்கும் நாடுகளில் ஒரு சில பண்டங்களே உற்பத்தியாகின்றன; ஒரு சில பொருள்களே ஏற்றுமதியாகின்றன. ஏற்றத் தாழ்வுகளும், மாறுதல்களும் பொருளாதாரத்தை அடிக்கடி தாக்குகின்றன. தற்செயலாகவும் மாறுதல்கள் ஏற்படுகின்றன. வங்கிமுறை மிகக் குறைவான வளர்ச்சியடைந்திருக்கின்றது. இத்தகைய நாடுகளில் ஒரு புதிய மைய வங்கிக் கோட்பாடு உருவாகிக்கொண்டிருக்கின்றது. ஐரோப்பிய நாடுகளில் மைய வங்கிகள் அண்மையில் இரண் டாவது உலகப் போருக்குப்பின் தோன்றின. பொருளாதார இயல்புகளுக்கு உகந்தவையாக அவை அமையவில்லை. லண்டன், நியூயார்க் நிதிக் கேந்திரங்களுக்கேற்றவாறு அமைந் திருந்தன. எனவே, அவை வளர்ச்சி குறைவான நாடுகளுக்கும் மாதிரிகளாக அமையவில்லை. இந்த நாடுகளில் நன்கு அமைந்த மூலதன மார்க்கட்டுகள் இல்லை. வங்கிமுறை சரிவர வளர்ச்சி யடையவில்லை. வளர்ச்சியடைந்த வங்கித் தொழில் அயல் நாட்டினர் வசம் இருந்தது. போதிய அளவு வசதிகளோ அல்லது அலுவலர்களோ இல்லை. இந்த நிலையில் தொழில் முன்னேற்றமடைந்த நாடுகளில் இருக்கும் மைய வங்கிமுறை இந்த நாடுகளுக்குப் பொருந்தா. ஆஸ்திரேலியா, தென் ஆப் பிரிக்கா, நியூஜிலாந்து முதலிய நாடுகளில் இங்கிலாந்தின் வங்கியைப்போலமைந்த மைய வங்கிகளை நிறுவினர். ஆனால், அவைகளுடைய சாசனங்களை (Charters) விரைவில் மாற்றித் தம் நாடுகளுடைய தனி இயல்புகளுக்கேற்றவாறு அமைக்க வேண்டியதாயிற்று. லத்தீன் அமெரிக்க நாடுகளிலும், மற்ற வளர்ச்சி குறைந்த நாடுகளிலும் புது மைய வங்கிச் சட்டத்தை இயற்றினவர்கள், முன்னேற்றமடைந்த, மற்றும் வளர்ச்சி

[1] Sir John Clapham, 'The Bank of England'. A History; Vol. II, p. 417.

குன்றிய நாடுகளின் அனுபவத்தைப் பார்த்துப் பயனடைந்தனர். மேலும் பணக்கோட்பாட்டின் தற்காலத்திய முன்னேற்றங்களையும் ஆண்டுப் பயனடைந்தனர். இங்கிலாந்தின் தலைமை வங்கியின் அனுபவத்தை ஒட்டி அடிமைகளாகப் பின்பற்றவில்லை என்று திரு. ட்ரிஃபின் (Mr. Triffin) கூறுகின்றார். பன்னாட்டு நிதிக் கேந்திரங்களுடைய பழக்கங்களை ஒட்டிய கருத்துகளையும், பழக்கங்களையும் அடிப்படையாகக் கொண்டு தம் நாடுகளில் அவர்கள் மைய வங்கியை நிறுவ முயலவில்லை. அந்தந்த நாடுகளுடைய பொருளாதாரத் தேவைகளை ஒட்டியே மைய வங்கிகளை அமைத்தனர்.[1] பராகுவே (Paraguay), குவாடிமாலா (Guademala), கோஸ்டா ரிகா (Costa Rica), க்யூபா (Cuba), டாமினிக்கக் குடியரசு (Dominican Republic), பிலிப்பைன் தீவுகள் (Philippines) ஆகிய நாடுகளுடைய மைய வங்கிச் சட்டங்கள் மேற்குறிப்பிட்ட போக்கைக் காட்டுகின்றன.

லத்தீன் அமெரிக்க நாடுகளைத் தவிர அண்மைக் காலத்தில் ஆப்பிரிக்க, தென்கிழக்கு ஆசிய நாடுகளிலும் புதியதாக மைய வங்கிகள் சார்ந்த நடவடிக்கை ஏராளமாகக் காணப்படுகின்றது. புதிய மைய வங்கிகளை நிறுவப் பல நாடுகள் முனைந்துள்ளன. இதன் விளைவாக ரொடிஷிய, நயாசாலாந்து (Rodisian and Nayasaland) கூட்டாட்சியில் மைய வங்கி 1956–ல் தோன்றியது. பின்னர் இக் கூட்டாட்சி கலைந்தபின் அதன் 'வாரிசு' வங்கிகள் மாலவி (Malavi), ஜேம்பியா (Zambia), தென் ரொடிஷியா (South Rhodesia) ஆகியவற்றில் தோன்றின. கானுவில் (Ghana) 1957–லும், நைஜீரியாவில் (Nigeria) 1958–லும், லிபியாவில் (Libya) 1955–லும், மொராக்கோவில் (Morocco) 1959–லும், ட்யூனீசியாவில் (Tunisia) 1958–லும், சூடானில் (Sudan) 1959–லும், மலேயாவில் 1959–லும், பர்மாவில் 1952–லும், பாக்கிஸ்தானில் 1948–லும் மைய வங்கிகளை நிறுவினர். இந்த நாடுகளுடைய பொருளாதாரத்திற்கு ஏற்ற முறையில் இயங்கும் மைய வங்கி பற்றிய கருத்துகள் உருவாகும்வரை இவை பொறுத்திருக்கவில்லை. இவைகளுடைய பொருளாதாரத்திற்குப் பொருந்தும் மைய வங்கிக் கோட்பாடில்லை என்பதை இவை பொருட்படுத்தவில்லை. நவீனப் பணமார்க்கட்டுகளும், பன்னாட்டு நிதிக் கேந்திரங்களும் இருக்கும் சில நாடுகளுக்கு மட்டுமே மைய வங்கி வேண்டும் என்ற சிலரது கருத்தையும் இவை மனத்தில் கொள்ளவில்லை. நிதி நிருவாகத்தில் தனித்து இயங்கும் ஆற்றலையும் தம் முதிர்வு நிலையையும் நாட்டின் மைய வங்கி காட்டுவதாக இந் நாடுகள் கருதின. அரசியல் சுதந்திரத்தின் பொருளாதாரக்

[1] Robert Triffin, 'Monetary and Banking Reform in Paraguay', pp. 72-73.

கூருகவும், தேவைகளைப் பூர்த்தி செய்யும் கருவியாகவும் இவை மைய வங்கியைக் கருதின. ஆகாய விமானக் கம்பெனியும், கப்பற் படையும், பாராளுமன்றக் கட்டடமும் அளிக்கும் பெருமையை மைய வங்கியும் ஒரு நாட்டுக்கு அளிக்கும் என்று கருதின. மைய வங்கியின் இன்றைய போக்கு, பணிகள் முதலியவை பற்றிக் கருத்து வேற்றுமைகள் கூட இல்லை. ஆனால், மீளா உறக்கத்தில் கல்லறையிலிருக்கும் மான்டகு நார்மனும் (Montagu Norman), பெஞ்சமின் ஸ்ட்ராங்கும் (Benjamin Strong) இவைகளைக் கண்டிக்கத் தவற மாட்டார்கள் என்று பால் சாமுவேல்சன் (Paul Samuelson) கூறுகின்றார்.[1] 20 ஆண்டுகளுக்குப்பின் ஆங்கிலச் செலாவணி முறையைப் பரிசீலனை செய்வதற்கு இரண்டாவது ராட்கிளிஃப் (Radcliffe) குழு ஒன்று நியமனமானால், சாட்சியம் கூறுவோர் தற்காலத்திய மாறுதல்களைச் சாதாரண இயல்பு களாகக் குறிப்பிடுவார்கள். அவர்களுடைய கூற்று கோபோல்டு பிரபுவுக்கு (Lord Cobbold) அதிர்ச்சியைக் கொடுக்கக்கூடும்; பிற தற்காலத்திய மைய வங்கியர் பெரும்பாலோரையும் அதிர்ச்சியடையச் செய்திருக்கும்.

தற்காலத்தில் கூட ஒரு குறிப்பிட்ட கருத்துகளையும் முறையையுமே தரமுள்ள மைய வங்கி முறை என்று கூறுவோர் உளர். இக்காலத்திய வளர்ச்சியை அவர்கள் மைய வங்கியின் 'செம்மையற்ற பரவல்' (proliferations) என்றும் 'உண்மையான வங்கி முறையின் திரிபு' என்றும் கூறத் தயங்குவதில்லை.[2] புதிய மைய வங்கி முறை விஷயத்தில் அவைகளுடைய மனப்பாங்குக்கு ஒரு காரணம் உண்டு. மைய வங்கியின் முதன்மையான பொறுப்பு செலாவணிக் கட்டுப்பாடுதான், நாட்டின் வளர்ச்சியன்று என்பது அவர்களுடைய கருத்து. 1950-க்குப் பின் தோன்றிய புதிய மைய வங்கிகளில் பெரும்பாலானவைகளின் குறிப்பிடத்தக்க அம்சம் அவைகளுடைய வளர்ச்சியைத் தூண்டவும், உள்நாட்டுப் பண, மூலதன மார்க்கட்டுகளை அமைக்கவும், வளர்ச்சி நிலையங்களை அமைக்கவும் வேண்டுமென்ற கட்டளையைப் பெற்றிருப்பதாகும்.[3] ஆப்பிரிக்கத் தென் கிழக்கு நாடுகளிலும், முன்னர் லத்தீன் அமெரிக்க நாடுகளிலும் நிறுவப்பெற்ற மைய வங்கிகள் வளர்ச்சித் தொழிலுடன் செலாவணிக் கட்டுப்பாட்டுப் பணியையும் மேற்கொள்ள வேண்டியது இன்றியமையாதது என்பதை இங்குக்

[1] Paul Samuelson, National Bank Review, Sept. 1963, pp 15-18. Reprinted in 'Money Financial Institutions and Economy' 1965, pp. 320-24

[2] W.F. Crick, 'Commonwealth Banking Systems', pp. 10-11; 508.

[3] Monthly Review of Federal Reserve Bank of New York, July 1964.

குறிப்பிட வேண்டும். இரு பணிகளுக்குமிடையே முரண்பாடு ஒன்றுமில்லை; மாருக இரண்டையும் இணைக்கலாம் என்பது தவிர ஒன்றுடன் ஒன்றைச் சேர்க்கவும் செய்யலாம் என்பதைப் பார்க்கின்ரேம். மேற்குறிப்பிட்ட விமர்சகர்கள் போன்றவர்கள் மைய வங்கி முறையில் பலவகைகளைக் கண்டுள்ளனர். பழைய மைய வங்கி முறையைப் போலமைந்த தற்காலத்திய நிலையங்களை 'அசல் மைய வங்கிகள்' என்று கூறுகின்றனர். இவை முதல் வகையைச் சார்ந்தவை. ஆஸ்திரேலியா, கனடா. நியூஜிலாந்து, தென் ஆப்பிரிக்கா நாடுகளுடைய மைய வங்கிகள் இவ்வகையைச் சார்ந்தவை. இந்திய, பாக்கிஸ்தானிய ரிசர்வ் வங்கிகளை இவ் வகையின் எல்லையிலுள்ளவைகளெனக் கருதலாம். நைஜீரியா, கானு, ட்யூனிசியா, மொராக்கோ, சூடான், ஜமைக்கா, சீராலி யோன் முதலிய நாடுகளுடைய நிலையங்கள் இரண்டாவது வகையிலுள்ளவை. அவைகளும் மேற்குறிப்பிட்டுள்ள சில நிறுவனங்களும் சட்டப்படி ஒரு நாட்டுக்குத் தேவையான வளர்ச்சியை ஊக்குவிக்க வேண்டும்; திட்டமிட்ட முறையில் வர்த்தக வங்கிகளையும் நிறுவ வேண்டும்; செலாவணி வெளியீட்டு அமைப்புகளை மூன்ருவது வகையாக நாம் குறிப்பிடலாம். இவை மைய வங்கிகளல்ல; பழைய முறையிலமைந்தன அல்ல. ஆனல், மிகச் சீர்திருத்தம் பெற்றுப் பரந்த பணிகளை உடையன. உதாரணமாக முதிர்ந்தநிலையில் காணும் கிழக்கு ஆப்பிரிக்கச் செலாவணிக் குழு (Currency Board) அண்மையில் சுதந்திரம் பெற்று வளர்ச்சியடையும் நாடுகளுக்கு, முழு வளர்ச்சியடைந்த மைய வங்கிகளைவிட இவ்வகைச் செலாவணிக் குழுக்களே உகந்தவை என்று டபிள்யூ. எஃப். க்ரிக் (W. F. Crick) போன்றவர்கள் கருதுகின்றனர்.[1] நாம் முன்னர்க் குறிப்பிட்டதுபோல். இந்த நாடுகளுக்கு உகந்தவை செலாவணிக் குழுக்களா அல்லது மைய வங்கியா என்ற சர்ச்சை அவசியமற்றது; பயனற்றது; பொருத்தமற்றதுமாகும். பழைய செலாவணிக் குழுக்களை எப்படி விரிவாக்கிப் புதிய முறையில் அமைத்தபோதிலும். வளர்ச்சியடையும் பொருளாதாரங்களுடைய் புதிய சிக்கல்களையும், பிரச்சினைகளையும் அவற்ருல் சமாளிக்க முடியாது. குழுக்கள் தம் முழுத் திறனையும் பயன்படுத்தியபோதிலும் கூட, மைய வங்கிகளுடைய கடமைகளைச் சிறிதளவும் செய்ய முடியாத நிலை ஏற்படும். எனவே, அவைகளுடைய அதிகாரத்தை அடிக்கடி பெருக்கவேண்டிய அவசியம் ஏற்படும். இத்தகைய மாற்றங்களின் விளைவாக முழு

[1] டபிள்யூ. எஃப். கிரிக் எழுதியுள்ள 'Commonwealth Banking Systems', பக்கம் 13.

வளர்ச்சி பெற்ற மைய வங்கிகளுக்கும் குழுக்களுக்கும் உள்ள வேறுபாடு மங்கி, நாளடைவில் நீங்கிவிடலாம்.[1]

வளர்ச்சி குறைந்த நாடுகளுக்கு ஏன் மைய வங்கிகள் வேண்டும்

பல வளர்ச்சி குறைந்த நாடுகளில் மைய வங்கிகள் தோன்றியுள்ளன. இவைகளுடைய பொருளாதாரங்களுக்கு மைய வங்கிகள் தேவையா? என்ற வினு கிளம்புகிறது. வளர்ச்சியடைந்த நாடுகளில் உள்ள பொருளாதார, நிதிச் சூழ்நிலைகள் வளர்ந்த நாடுகளுடைய சூழ்நிலைகளிலிருந்து வேறுபட்டிருக்கின்றன என்பது தெளிவாக இருக்கின்றது. இவ்வாறு வேறுபட்ட சூழ்நிலைகளில் மைய வங்கிகள் இயங்கவேண்டும். வளர்ச்சிபெற்ற நாடுகளிலுள்ள நிறுவனங்கள் கையாளும் பழைய மைய வங்கிக் கருவிகள் வளர்ச்சி குன்றிய நாடுகளுக்கு முற்றிலும் பொருந்தா. அவை தத்தம் தனிப்பட்ட தேவைகளுக்குப் பொருத்தமுள்ள புதிய கருவிகளை உருவாக்க வேண்டும். இதற்கு மிகக் காலதாமதம் ஆகும். ஆகவே வளர்ச்சி குறைந்த நாடுகளில் மைய வங்கிகளை நிறுவுவது சரியா, விரும்பத்தக்கதா, இது நடைமுறையில் சாத்தியமா என்பதில் ஐயப்பாடுகள் எழுந்துள்ளன. இந் நாடுகளில் மைய வங்கிகளுக்கு அவசியமே இல்லை. இவை பொருத்தமற்ற நிலையங்களாக இயங்கும் என்றுகூடச் சிலர் கூறியுள்ளனர். 'நைஜீரியாவின் பொருளாதார வளர்ச்சிக்குத் தூண்டுதல் அளிக்கவல்ல ஒரு மைய வங்கியை நிறுவுவது சாத்தியமா, விரும்பத்தக்கதா' என்பவைகளை ஆய்வு செய்து 1952-ல் அறிக்கையைக் கொடுத்த ஜே. எல். ஃபிஷர் (J. L. Fisher) தம் அறிக்கையில் ஐயப்பாடுகளை வெளியிட்டார்.

நைஜீரியாவில் இருந்த சூழ்நிலை ஒரு மைய வங்கி இயங்குவதற்கு ஏற்றதன்று என்றும் ஃபிஷர் தம் அறிக்கையில் வாதித்தார். மைய வங்கி மிகக் குறுகிய எல்லைகளுக்குள்ளேயே இயங்க வேண்டும். மேலும், அதில் பணிபுரியத் தகுதியுள்ள சிப்பந்திகள் உளரா என்பதிலும் ஐயம் ஏற்பட்டது. அந்நாட்டில் மூலதன வளர்ச்சியும் இயல்பான சேமிப்பைத் தூண்டுவதற்கு ஒரு கருவியும் அத்தியாவசியமாக இருந்தன. இந்த நிலையில் அந்த நாட்டில் ஒரு மைய வங்கியை நிறுவுவது சரியன்று என்று கருதினர். படிப்படியான முன்னேற்றமே அதற்குகந்தது என்று குறிப்பிட்டார். நிதி நிலையங்கள் போதிய அளவு வளர்ந்தபின், சில முக்கிய நடவடிக்கைகள் எடுக்கப்பட்ட பின், நாளடைவில் ஒரு மைய

[1] எஸ். கே. பாசு எழுதியுள்ள 'Central Banking in Emerging Countries' (Asia), பக்கம் 244.

வங்கி இவைகளின் தொடர்ச்சியாகத் தோன்ற வேண்டும். ஒரு வளர்ச்சிக் கார்ப்பரேஷன் தோன்ற வேண்டும். கூட்டுறவுச் சங்கங்களுக்கு அரசு ஆதரவுடைய ஒரு கடன் நிலையம் ஏற்பட வேண்டும். அரசு குறுகிய காலக் கருவூல உண்டியல்களை வெளியிடுவதன் விளைவாக ஒரு குறுகிய காலப் பத்திர மார்க்கட்டு உருவாக வேண்டும். இவையனைத்தும் ஒரு வெளியீட்டு வங்கி (Bank of Issue) தோன்றுவதற்கு முதற்படிகள். இந்த வங்கியை முழு வளர்ச்சி பெற்ற மைய வங்கியாகப் பரிணமிக்கச் செய்யலாம்.[1]

ஹாங்காங்குக்கும் (Hong Kong) இத்தகைய அறிக்கையை 'ஹாங்காங் வங்கிமுறை பற்றிய அறிக்கை' என்ற தலைப்பில், இங்கிலாந்தின் தலைமை வங்கியில் பணிபுரிந்த எச். எஸ். டாம்கிளின்ஸ் (H. S. Tomklins) என்பவர் தயார் செய்து அளித்தார். திரு டாம்கிளின்ஸ் அறிக்கையிலும் இதே வாதங்களைக் காணலாம். மைய வங்கி மற்ற வங்கிகளைக் காக்கும் நிறுவனமன்று. அவை நினைத்தால் பொறுப்பற்ற முறையில் இயங்கலாம். இரண்டாவதாக நாட்டு வருமான மட்டம், பணத்தின் அளவு (volume of money), அயல்நாட்டுச் செலுத்தல் நிலை—இவைகளுக்கிடையே உள்ள தொடர்பை மைய வங்கியின் குறுக்கீடு பாதிக்கும். இதன் விளைவாக மிகுதியான நிதியாக்கம் ஏற்படும். மூன்றாவதாக, மைய வங்கியை நிறுவுவதால் அவசியமற்ற செலவு ஏற்படும். மைய வங்கியின் பணிகள் பலவற்றை ஹாங்காங்-ஷாங்கை வங்கிக் கார்ப்பரேஷன் (Hong Kong and Shangai Banking Corporation) சிக்கனமாகவும், திறமையாகவும் செய்து வருகின்றது என்று குறிப்பிட்டார். இக் கார்ப்பரேஷன் ஒருவர்த்தக வங்கியாகும்.[2] இதற்கு முன்னர் திரு. எச். சி. பி. மைனர்ஸ் (H. C. B. Mynors) என்பவரையும். சர் செசில் ட்ரெவரையும் (Sir Cecil Trevor) தென் ரொடிஷியா, கோல்ட் கோஸ்ட் என்ற இரு நாடுகள் மைய வங்கி நிறுவனத்தைப் பரிசீலனை செய்யுமாறு அழைத்தன. அவர்கள் மைய வங்கிகள் அமைப்பதை ஆதரிக்கவில்லை. மைய வங்கியை ஏன் அமைக்கக்கூடாது என்று வாதாடும்போது அதற்குரிய இடம் கிடைக்காததையும் ஒரு காரணமாகக் கூறினர்.[3]

[1] Report by Mr. J. L. Fisher on the desirability and practicability of establishing a Central Bank in Nigeria. Lagos. 15 December, 1952.

[2] Report by Mr. H. S. Tomklins on the Hong Kong Banking System and Recommendation for the Replacement of the Banking Ordinance. 1948. Mr. Tomklins was invited by the Hong Kong Government to advise on legislation for the Control of banking operations in Hong Kong.

[3] Sir Cecil Trevor, Report on Banking Conditions in the Gold Coast, 1951.

முன்னர் இங்கிலாந்தின் மைய வங்கியின் ஆளுநராகப் (Governor of Bank of England) பணிபுரிந்த கோபோல்ட் பிரபு (Lord Cobbold) சிறிய வளர்ச்சி குன்றிய வங்கிமுறை இருக்கும் நாடுகளில், மைய வங்கி அதிகச் செலவு பிடிக்கும் ஓர் ஆடம்பர மாகும் என்றும். பொருளாதார நிதி வளர்ச்சியின் தொடக்க நிலையில் ஒரு மைய வங்கியைச் சார்ந்திருப்பது நாட்டுக்கு ஆபத்தானது என்றும் குறிப்பிட்டார்.[1]

**வளர்ச்சி குன்றிய நாடுகளின் மைய வங்கிகளின் பணி**

வளர்ச்சி குன்றிய நாடுகளில் மைய வங்கிகளை நிறுவக் கூடாது என்று சிலர் எதிர்த்தபோதிலும் பிறர் இந்த நாடுகளில் அவை ஆற்றவேண்டிய சிறப்பான பணிகள் உள என்று உறுதியாகக் கருதுகின்றனர். ஆனால், வளர்ச்சியடைந்த தொழில் முன்னேற்றமடைந்த ஐரோப்பிய அமெரிக்க நாடுகளில் அவை செய்யவேண்டிய அலுவல்களிலிருந்து இப் பணி வேறுபட்டிருக்கின்றது. வளர்ச்சி குறைந்த நாடுகளில் பண, மூலதன மார்க்கட்டுகள் இல்லை; அல்லது அவை மிக அற்ப நிலையில் உள்ளன. சுதேச வங்கி முறை (Indigenous Banking System) நல்ல அமைப் பற்றிருக்கின்றது. செலாவணிப் புழக்கத்திற்கப்பாற்பட்ட பெரிய பகுதிகள் உள. முன்னேற்றமடைந்த நாடுகளிலுள்ள முதிர்வு பெற்ற சிக்கலான நிதிமுறைகளைக் கண்காணித்தல் அந் நாடுகளுடைய மைய வங்கிகளின் பொறுப்பு. ஆனால், இவை பின் தங்கிய நாடுகளில் இல்லை. மைய வங்கிகளுடைய பழைய கண்காணிப்புக்கருவிகளையும் அலுவல்களையும் மனத்தில்கொண்டு பின் தங்கிய நாடுகளில் அவைகளை மதிப்பிடுவது தவறு. பின் தங்கிய நாடுகளில் உள்ள சூழ்நிலையில் அவை எவ்வாறு இயங்குகின்றன என்பதைக் காணவேண்டும். பொருளாதார வளர்ச்சியையும் மூலதனப் பெருக்கத்தையும் அவை எவ்வாறு ஊக்குவிக்கின்றன என்பதைக் கொண்டு அவைகளை மதிப்பிட வேண்டும்; சிக்கலான செலாவணி முறையை எவ்வாறு கட்டுப் படுத்துகின்றன என்பதைக் கொண்டு அவைகளை மதிப்பிடக் கூடாது. பிற நாடுகளைச் சார்ந்துள்ள, வளர்ச்சி குறைந்த ஒரு நாட்டின் பொருளாதாரத்தைப் பார்க்கும்போது அதன் மைய வங்கி, 'எதிர்கால வளர்ச்சி நிலைய'மாக இயங்குகின்றதா என் பதை மட்டுமே கவனிக்க வேண்டும்: 'சமநிலை ஏற்படுத்தும் ஒரு கருவியாக' இயங்குகின்றதா என்று கேட்கக் கூடாது என்று கூறப்படுகின்றது.[2] இத்தகைய நாடுகளில் வளர்ச்சிக்கு

[1] Some Thoughts on Central Banking 'Journal of the Institute of Bankers', February 1963.

[2] W. T. Newlyn and D. C. Rowan, 'Money and Banking in British Colonial Africa', pp. 225-6.

நிதியளிக்க வேண்டிய பொறுப்பு மைய வங்கிக்கு இருக்கின்றது. நிதியுதவியை நேரடியாகவோ மறைமுகமாகவோ செய்யலாம். மைய வங்கி நேரடிக் கடன் கொடுக்கலாம் என்று கூறும்போது அது விவசாயத் தொழில் துறைகளின் கடன் நிருவாகத்தை நேரடியாகச் செய்யவேண்டும் என்று கூற வில்லை. இதற்கு வேண்டிய அனுபவத்தையும் நிருவாக இயந்திர அமைப்பையும் அது கொள்ளவில்லை. அது பங்கு முதலையும் கடனுதவியையும் அளித்து நிதி நிலையங்களுக்கு உறுதுணை யாகலாம். இச் சிறப்பு நிலையங்களைத் தோற்றுவித்துத் தம் பொறுப்பிலேயே வைத்துக்கொள்ளலாம். பொருளாதார வளர்ச் சிக்கு மைய வங்கிகள் இரு வகையில் உதவி நல்கலாம்: (1) வளர்ச்சி வங்கிகள் வெளியிடும் பத்திரங்களுக்கு உத்தர வாதம் அளிக்கலாம். இதனால் அவை உள்நாட்டிலும் அயல் நாடுகளிலும் இலாபகரமான முறையில் மூலதனத்தைக் கவரலாம். (2) வங்கிக் கடனை இரட்டைக் கண்காணிப்புக்குட் படுத்தலாம். தனியார் துறையில் கடனை முன்னுரிமைப் பகுதி களுக்குச் (priority sec'ors) செலுத்தலாம். இவ்வாறு நேரடி மற்றும் மறைமுக வழிகளில் பொருளாதார வளர்ச்சிக்கு வேண்டிய உதவியைச் செய்வதோடு மட்டுமல்லாமல், மைய வங்கிகள் வளர்ச்சித் தேவைகளைப் பூர்த்தி செய்யவல்ல சமுதாயப் பொருளாதார அமைப்பு ஒன்றை—அதாவது 'எதிர்காலப் பொருளாதார வளர்ச்சிக்கான அடிப்படைக் கட்டுக்கோப்பை' நிறுவலாம்.

நிதி நிருவாக அடிப்படை அமைப்பை நிறுவுவதில் பல அம்சங்கள் இருக்கின்றன. குறுகியகால, நீண்டகாலப் பத்திர மார்க்கட்டுகளை ஏற்படுத்துவது முதன்முதலில்[1] செய்ய வேண்டிய ஒன்றாகும். தொடக்க காலத்தில் இந்த மார்க்கட்டு களில் விற்பனையாகும் பத்திரங்கள் தொழிற் பங்குகளைவிடக் கருவூல உண்டியல்களேயாகும். மைய வங்கி அரசின் ஒத் துழைப்பைப் பெற்று அவ்வப்போது டெண்டர் முறையில் கருவூல உண்டியல்களை வெளியிடுவதற்கு வழிவகுக்க வேண்டும். இவ்வுண்டியல்களை மீள் தள்ளுபடி (rediscount) செய்ய மைய வங்கி இசையுமானால் இந்த மார்க்கட்டு விரிவடையலாம். முன்னேற்றமடைந்த நாடுகளில் இல்லாத சில சுதேசக் கடன் கருவிகள் (Credit Instruments) பின்தங்கிய நாடுகளில் உள. இவைகளை அடிப்படையாகக் கொண்டு மார்க்கட்டைப் பெருக்க லாம். கப்பல் ஏற்றுமதி ஆவணங்களையும் (bills of lading),

[1] Edward Nevin, 'Capital Funds in Underdeveloped Countries', pp. 42–43.

கிடங்கு ரசீதுகளையும் பற்றிய குறிப்புகளை மைய வங்கி ஏற்றுக் கொண்டால் இது பண மார்க்கட்டுக்கு ஓர் ஆதாரமாகும். கனடா போன்ற முன்னேற்றமடைந்த நாடுகள் முதலாக அண்மையில் விடுதலை பெற்ற ஆப்பிரிக்க நாடுகள் ஈருக உள்ள நாடுகளின் அனுபவம் மேற்குறிப்பிட்ட வழிகள் பயக்கும் விளைவுகள் எவ்வாறு குறுகியகாலக் கடன் மார்க்கட்டு வளர்ச்சியைத் தூண்டின என்பதற்கு நிறையச் சான்றிருக்கின்றன.

நீண்ட காலக் கடன் மார்க்கட்டுகளைப் பொறுத்த வரை லண்டன், நியூயார்க் நகரங்களில் உள்ள சிக்கலான பங்குமாற்று நிலையங்களை (Stock Exchanges) வளர்ச்சி குறைந்த நாடுகளில் அமைக்க இயலாது. இத்தகைய மார்க்கட்டை வளர்க்க மைய வங்கி பயனுள்ள நடவடிக்கைகள் எடுக்கலாம் என்பதை அனுபவம் காட்டுகிறது. முதன் முதலில் தொழில் பத்திரங்களைவிட அரசின் கடன் பத்திரங்களையே இந்த மார்க்கட்டில் விலையாக்குவார்கள் நாட்டின் பொருளாதாரம் வளர்ச்சியடைந்து பங்குமாற்று முதிர்வுபெற்ற பின் தனியார் பத்திரங்களும் விற்பனையாகும். நயாசாலாந்து, ரொடிஷியக் கூட்டாட்சி போன்ற தலையெடுக்கும் ஆப்பிரிக்க நாடுகளில் தொழிற்பத்திரங்கள் இந்த மார்க்கட்டில் படிப்படியாகவே விற்பனையாகத் தொடங்கின.

மிக வளர்ச்சியடைந்த நாடுகளில் வர்த்தக வங்கிகள் மட்டுமல்லாமல் கட்டடச் சங்கங்கள் (Building Societies), தவணை முறை விற்பனை நிலையங்கள், இன்சூரன்சு நிறுவனங்கள், சேமிப்பு வங்கிகள் முதலிய பல இடைநிலை நிதி நிறுவனங்கள் (Financial intermediaries) இருக்கின்றன. வளரும் நாடுகளுக்கு இவை போன்ற நிலையங்கள் அவசியம் வேண்டும். இத்தகைய நிலையங்களை அமைப்பதற்கு மைய வங்கியே சிறந்த அதிகாரியாகும். இப்படிப் பல்வகை இடைநிலை நிதி நிலையங்கள் அமைக்கப்படுவதால் பர்பலவகைப் பத்திரங்கள் மார்க்கட்டில் கிடைக்கும். வெவ்வேறு வருமானங்களைப் பெறுவோர் தம் வருவாயில் ஒரு தொகையைச் சேமிக்க இடம் ஏற்படுகின்றது. இப்படிப் பல்வேறு பத்திரங்கள் இல்லாதபோதைவிட அதிகமான தொகையை இவை சேமிக்க உதவுகின்றது. வளர்ச்சி குன்றிய நாடுகளில் தலா வருமானம் (per capita income) குறைவாக உள்ளபோதிலும் சேமிப்புக்கு வாய்ப்பு ஏற்படுகின்றது. இடைநிலை நிலையங்கள் இயங்குவதால் நிதி வசதிகளைச் செம்மையான முறையில் வெவ்வேறு துறைகளுக்குப் பங்கீடு செய்வது உறுதியாகின்றது. லத்தீன் அமெரிக்கா, தென்கிழக்கு ஆசியா, வடக்கு மைய ஆப்பிரிக்க நாடுகள் முதலிய நாடுகளில் மைய வங்கி நிதிநிலையங்களை அமைப்

பதற்கு விசேஷ முயற்சிகள் எடுக்கப்பட்டன. இந்த நிலையங்கள் குறுகியகாலக் கடன்களையும் நீண்டகாலக் கடன்களையும் கொடுக்கின்றன. பழைய முறையில் பயிற்சி பெற்ற மைய வங்கியர் இவைகளுடைய கடன் முறைகள் தொன்மை மரபுகளுக்கு (orthodox and conventional) முரணானவை என்பர்.

வளர்ச்சி குன்றிய நாடுகளில் மைய வங்கிகள் ஆற்ற வேண்டிய வளர்ச்சிப் பணிகளை உணர்ந்தே இவை பற்றிய சட்டங்களை இயற்றினர் என்பது தெளிவாக இருக்கின்றது. குறிக்கோள்களை விளக்கும் சட்டங்கள் இதைத் தெளிவாகக் காட்டுகின்றன. இதை நாம் பின்னர்ப் பார்ப்போம். இந்த லட்சியங்களைப் புனையும் போது பொருளாதார முன்னேற்றத்தைச் சிறப்பாக வலியுறுத்தினர். மேற்கூறிய சட்டங்களை இயற்றியோர் செலாவணியைக் கட்டுப்படுத்துவதையோ அல்லது அவைகளுடைய மதிப்பை நிலைநாட்டுவதையோ பிரதான நோக்கமெனக் கருதவில்லை. 'இலங்கையின் உற்பத்தி வசதிகளை முழுமையாகப் பயன்படுத்துவது', 'பிலிப்பைன் நாட்டில் வேலைவாய்ப்பையும் உற்பத்தியையும் பெருக்குவது', 'பாக்கிஸ்தானில் சாதனங்களை முழுமையாகப் பயன்படுத்துவது' போன்ற பிற குறிக்கோள்களே புதிய மைய வங்கிச் சட்டங்களில் இடம் பெற்றிருக்கின்றன. இத்தகைய குறிக்கோள்களைச் சட்டங்களில் சேர்க்காத நாடுகள் கூட—பழைய முறைகளையே பின்பற்றும் நாடுகள் கூட—அதாவது செலாவணியின் ஸ்திரத் தன்மையையே (monetary stability) தம் இலட்சியமாகக் கொண்டுள்ள நாடுகள் கூடச் சட்டங்களில் காணாத புதிய பொறுப்புகளை நடைமுறையில் ஏற்கின்றன. இந்திய ரிசர்வ் வங்கியையும், பர்மாவின் யூனியன் வங்கியையும் (Union Bank of Burma) இதற்கு உதாரணமாகக் காட்டலாம். இவை தம் சட்டங்களில் பண மதிப்பு நிலைபேற்று லட்சியம் குறிப்பிடப்பட்டிருந்தும் புதிய பொறுப்புகளை ஏற்றிருக்கின்றன.

அநேகமாக எல்லா வளர்ச்சி குன்றிய நாடுகளிலும் மைய வங்கிகள் வளர்ச்சி நிதி நிலையங்களை நிறுவுவதற்குக் கீழ்க்காணும் முறைகளில் உதவி வந்திருக்கின்றன. நிலையங்களுக்கு வேண்டிய மூலதனம் முழுவதையும் அல்லது ஒரு பகுதியைக் கொடுக்கின்றன. அவை வெளியிடும் டிபஞ்சர் பத்திர வெளியீட்டுக்கு உள்நாட்டிலும் வெளி நாட்டிலும் உத்தரவாதம் கொடுக்கின்றன. தேர்வுச்செலாவணிக் கட்டுப்பாடுகளைக் (selective credit controls) கையாளுகின்றன. பொருளாதார வளர்ச்சிக்குகந்த செம்மையான நிதி முறையை வளர்க்கின்றன. வளர்ச்சியடைந்து வரும் சில ஆப்பிரிக்க நாடுகளில் மைய வங்கிகள் வளர்ச்சி நிதி நிலையங்

களுடைய பங்குகளையும் பத்திரங்களையும் வாங்கச் சட்டம் அனுமதி கொடுக்கின்றது. சூடான், மொராக்கோ, நைஜீரியா நாடுகள் இதற்கு உதாரணம். அரசுகளும் மைய வங்கிகளும் ஒத்துழைத்துப் பொருளாதார வளர்ச்சியைத் தூண்டுவதற்கு முனைகின்றன. சூடானின் தொழில் வங்கியையும் (Industrial Bank of Sudan), பொருளாதார வளர்ச்சிக்கான மொராக்கோவின் தேசிய வங்கி யையும் (The National Bank for Economic Development of Morocco), நைஜீரியாவின் தேசியத் தொழில் வளர்ச்சி வங்கி யையும் (The National Industrial Development Bank of Nigeria) உதாரணங்களாகக் காட்டலாம்.

மைய வங்கிகளின் தொன்மைப் பணிகளில் (orthodox function) சிலவற்றைச் செய்வதற்கு வளர்ச்சி குன்றிய நாடுகளில் இடம் இல்லை என்பதையும், பிற கடமைகளைச் செய்வதற்கும் ஓரளவே வாய்ப்புகள் உள என்பதையும் காண்கிறோம். தொன்மை மைய வங்கிகள் செய்த பழைய பணிகளை மனத்திற் கொண்டு வளர்ச்சி குறைந்த நாடுகளில் மைய வங்கிகளை நிறுவுவது நடை முறைக்கு ஒவ்வாததாகும். ஆனால், பழைய பணிகளில் சிலவற்றை இந்த மைய வங்கிகள் செய்யலாம் என்பதையும் இங்குக் குறிப்பிட வேண்டும். இப்படியாக அவை செலாவணி வெளியீட்டு நிருவாகத்தையும், அரசின் வங்கியாகப் பணி புரிவதையும் ஆரம்ப முதற்கொண்டே ஏற்கலாம். மைய வங்கிகளின் தொன்மைப் பணி களுள் மிக முக்கியமான ஒன்று 'இறுதி நிலையில் கடன் கொடுப்பது' (lender of the last resort). இப் பணியைச் செய் வதற்குப் பின் தங்கிய நாடுகளில் அதிக இடமில்லை. புதிய மைய வங்கிகள் சுதேச வங்கிகளுக்கு (Indigenous Banks) இறுதிநிலை யில் ரொக்கம் வழங்கும் பணியை மேற்கொள்ளலாம். ஆனால், அயல் நாட்டுத் தொடர்புள்ள வங்கிகள் தம் தலைமை அலுவ லகங்கள் மூலம் பெரிய நகரங்களில் உள்ள மூலதனப் பண மார்க் கட்டுகளுடன் தொடர்பு கொள்கின்றன. ரொக்கநிலைச் சொத்து களுக்குக் கிராக்கி ஏற்படும்போது இவை வெளிநாடுகளிலிருந்து வேண்டிய நிதியைப் பெறலாம். இவை பன்னாட்டு நிலையங் களுடைய கிளைகள் மூலம் ஏராளமான அரசியல் செல்வாக்கையும் நிதியையும் பெற்றிருக்கின்றன. சட்டங்கள் மூலமும் மற்ற நிலை யங்களுடன் கொண்டுள்ள தொடர்புகள் மூலமும் இவை வளர்ச்சி யடைந்துள்ள நாடுகளிலுள்ள முதிர்வு பெற்ற நிலையங்களை ஒத்த நிலையில் உள்ளன. இவைகளைப் போல் வளர்ச்சியடைந்து 'இறுதி நிலைக் கடன் கொடுக்கும் நிலைய'மாகத் திகழ்வதற்குப் பழைய குடியேற்ற நாடுகளுக்கு நெடுநாள் செல்லும்.

**மைய வங்கிகளுடைய பாரம்பரியப் பணிகள்**

மான்டகு நார்மனும் (Montagu Norman — இங்கிலாந்து வங்கியின் ஆளுநர்) சர் எர்னஸ்ட் மஸ்கிரேவ் ஹார்வியும் (Sir Ernest Musgrave Harvey — இங்கிலாந்து வங்கியின் துணைத் தலைவர்) கீழ்க் காண்பவைகளை மைய வங்கியின் முக்கியமான பணிகள் என்று கூறியுள்ளனர்.

மைய வங்கி நாட்டுச் செலாவணியின் ஸ்திரத் தன்மையைப் பேணவேண்டும். இங்குப் புற, அக ஸ்திர நிலையைக் குறிப்பிடுகின்றனர். செலாவணியின் ஸ்திரத் தன்மையைக் காப்பாற்றும் நிறுவனம் அதை வெளியிடும் பொறுப்பையும் ஏற்க வேண்டும். அதாவது செலாவணியின் வெளியீட்டையும் அதன் காப்பு நிதியை வைத்திருக்கும் பொறுப்பையும் மைய வங்கி மட்டுமே செய்யவேண்டும். சட்டபூர்வமான பணக்காப்பு நிதி முழுவதும் அதன் காவலில் இருத்தல் வேண்டும். மையக் காப்பு நிதியே (Central Reserve) செலாவணி மதிப்பின் அடிப்படை. அது மைய வங்கியிடம் இருக்க வேண்டும். எனவே, அரசின் பண இருப்பையும், மற்ற வங்கிகளுடைய காப்பு நிதிகளையும் அதுவே வைத்திருக்கவேண்டும். இதர வங்கிகளுக்கு அது ஒரு வங்கியாக இயங்க வேண்டும். நாட்டுத் தொழிலுக்குத் தேவையான வங்கிச் செலாவணி (credit) எவ்வளவு கிடைக்கின்றது என்பதைத் தீர்மானம் செய்யும். செலாவணியின் புற, அக ஸ்திரநிலையைக் காக்கும் மைய வங்கி நிலைமைக்கேற்றவாறு செலாவணிப் பெருக்கமோ சுருக்கமோ செய்யவேண்டும். வங்கிகளின் வங்கியாகச் செயல்புரியும்போது அவைகளிடையே ஏற்படும் கடன்களைத் தீர்க்கும் தீர்வகமாகவும் அது செயல்புரியவேண்டும். மேலும், இறுதிநிலைக் கடன் கொடுக்கும் நிலையமாகவும் தொண்டு புரிதல் வேண்டும். முடிவில் அது அரசின் வங்கியாகவும் செயல்படவேண்டும். அரசின் கணக்குகளை வைத்துக்கொள்ள வேண்டும். இதற்காக அது ஊதியமேதும் பெறவேண்டியதில்லை. தற்காலத்தில் அரசின் நடவடிக்கைகள் மிகவும் அதிகமாக இருக்கின்றன. இவைகளைச் சரிவரத் திட்டமிட்டாலன்றி நுட்பமாக அமைந்துள்ள தற்காலத்திய மூலதன, பண மார்க்கட்டுகள் பாதிக்கப்படும். எனவே, உள் நாட்டிலும் அயல் நாட்டிலும் அரசின் நிதி நடவடிக்கைகளை மைய வங்கி மூலமே செய்யவேண்டும்.[1]

வளர்ச்சி குறைந்த நாடுகளில் சுதேச வங்கிகள் (Indigenous Banks) நன்கு முன்னேறுவதற்குப் புதிய மைய வங்கிகள்

[1] MacMillan Committee, Minutes of Evidence, Vol. V Also Vol I, pp. 1—3.

தம் செல்வாக்கைப் பயன்படுத்தி ஆவன செய்யவேண்டும். வளர்ச்சி குறைந்த பல நாடுகளில் சுதேச வங்கிகள் நல்ல அமைப்பின்றி உள்ளன. செம்மையான அமைப்புள்ள வங்கிப் பகுதி அயல்நாட்டு வங்கியர் வசம் இருக்கின்றது. முன்னேற்ற மடைந்த நாடுகளுடைய வர்த்தகம், தொழில் முன்னேற்றத்திற்கு உகந்த கொள்கையை அவை பின்பற்றுகின்றன. குடியேற்று நாடுகளுடைய பொருளாதார வளர்ச்சிக்கு வேண்டிய அடிப் படைத் தேவைகளை அவை பெரிதும் கருதுவதில்லை. மைய வங்கி, இந்த நிலையில், சுதேச வங்கிகள் வளர்ச்சியடைய உதவி செய்வதோடு, அவை சரிவர இயங்குவதற்கும் தம் செல்வாக்கை ஆளவேண்டும்.

செம்மையான வங்கி முறையை ஆளச் செய்வது, சோதித்தல், உத்தரவிடல், வழிகாட்டல் ஆகியவற்றின் மூலமாக மைய வங்கி சுதேச வங்கிகளுடைய திறமையை வளர்த்து நேர்மையைக் காக்கலாம். இவ்வழியே மக்கள் நம்பிக்கையைத் தூண்டலாம். சாதாரண வங்கிகளுடைய சரியான நிதி நிலைக்கு (solvency) மைய வங்கிகள் உறுதியளிப்பது சரியன்று என்று சிலர் கூறுகின் றனர். அவை தம் முயற்சியாலேயே நல்ல நிலையிலிருக்க வேண்டும். ஆனால், வளர்ச்சி குறைந்த நாடுகளில் செம்மை யான மரபுகள் இனித்தான் வளரவேண்டும். இவ்வித மரபுகள் இல்லாவிடில் பலமான வங்கிமுறை வளராது. தொடக்க காலத்தில் மேற்குறிப்பிட்ட பொறுப்புகளை மைய வங்கிகள் ஏற்கவேண்டும். 'இளம் செடிகளை'ப் போற்றி வளர்ப்பதும், வங்கிச் சிப்பந்திகளுக்குப் பயிற்சி தருவதும் வளர்ச்சி குறைந்த நாட்டு மைய வங்கிப் பணியில் முக்கிய அம்சங்கள். கோஸ்டா ரிகா (Costa Rica) நாட்டின் வங்கி முறையை அதன் மைய வங்கி வழிகாட்ட வேண்டும்; மேற்பார்வையிட வேண்டும்; அது பலமுறுவதற்கும் நன்கு செயல் புரிவதற்கும் தக்க சூழ்நிலையை உண்டாக்க வேண்டும்.[1] நம் நாட்டின் வங்கியமைப்பை இந்திய ரிசர்வ் வங்கியின் பணி வலிமைபெறச் செய்கின்றது. மைய வங்கி வர்த்தக வங்கிகளுக்குச் செய்யக் கூடிய தொண்டை இது எடுத்துக் காட்டுகின்றது. நாடு முழுவதும் ஆங்காங்கே பணம் அனுப்புவதற்குரிய வசதிகளை மைய வங்கி செய்யலாம். பண்டங்களைப் பாதுகாப்புடன் வைத்துக்கொள்ளக் கிடங்குகளை ஏற்படுத்த வேண்டும்; கூட்டுறவுச் சங்கங்களை வளர்க்கலாம்; உயர் வட்டி வாங்கும் பண லேவாதேவிக்காரர்களைக் களையலாம். எளிய முறையில் பெறும் மலிவுக் கடன் வசதிகளை ஏற்படுத்தலாம்.

[1] 'Financial Policy, and Credit Control Techniques in Central America', I.M.F. Staff Papers, no. 1958, p. 410.

சுருங்கக் கூறின் நாட்டின் நிதிக் கட்டுக்கோப்பில் உள்ள குறைபாடுகளை மைய வங்கி நீக்க வேண்டும். இவ்வாறு செய்யாவிடில் சில பகுதிகள் இவ் வசதிகளைப் பெறுமலே இருக்க நேரிடும்.[1]

வளர்ச்சியடைந்து வரும் நாடுகளில் மைய வங்கிகளும் வர்த்தக வங்கித் தொழிலும்

நிதி முறையில் உள்ள குறைபாடுகளை மைய வங்கி நீக்க வேண்டும். இது ஒரு பிரச்சினையை எழுப்புகின்றது. வளர்ச்சியடைந்து வரும் நாடுகளில் வர்த்தக வங்கித் தொழிலை அது செய்யவேண்டுமா என்பது பிரச்சினை. மைய வங்கி பற்றிய தொன்மைக் கோட்பாட்டினர் அது அரசினருக்கும், பிற வங்கிகளுக்கும் ஒரு வங்கியாக இருக்க வேண்டும் என்று கருதுகின்றனர். வர்த்தக வங்கித் தொழிலை நடத்தும் அளவுக்கு அது தன்னைத் தாழ்த்திக்கொள்ளக் கூடாது என்பது அவர்கள் கருத்து. மைய, வர்த்தக வங்கித் தொழிலை ஒரே நிலையம் செய்யும்போது முரண்பாடுகள் தோன்றுகின்றன. மைய வங்கி ஒரு தனி உரிமை பெற்றுள்ள நிலையம். அது தன் வாடிக்கையர்களாகிய (customers) வர்த்தக வங்கிகளுடன் போட்டியிடுவது முறையன்று. இத்தகைய போட்டி மைய, வர்த்தக வங்கியுறவைப் பாதிக்கும். மைய வங்கி, வர்த்தக வங்கிகளுடைய ஒத்துழைப்பைப் பெற முடியாது. போட்டி போடுவதால் அவைகளுடைய தலைமை நிறுவனமாக இருக்க முடியாது. ஆஸ்திரேலியக் காமன்வெல்த் வங்கியின் வர்த்தகவங்கிப் பணி மிகுந்த சர்ச்சைக்குரியதாகி விட்டது. அதன் போக்கு மைய வங்கி பற்றிய தொன்மைக் கோட்பாட்டினருக்கு அதிர்ச்சியைக் கொடுத்துள்ளது. உள் நாட்டிலும் தனியார் துறை வங்கியர் அதை வன்மையாகச் சாடுகின்றனர். அவைகளுடைய நலனுக்குக் காமன்வெல்த் வங்கியின் போக்கு ஆபத்தானது என்று கூறுகின்றனர். ஆனால், ஆஸ்திரேலியக் காமன்வெல்த் வங்கி வர்த்தக வங்கித் தொழிலை நடத்துவதற்கு ஆங்குள்ள சூழ்நிலை காரணம் என்பதை வரலாறு காட்டுகின்றது. மேலும், ஆஸ்திரேலிய நாட்டுச் சூழ்நிலையில் இப் பணிகள் மைய வங்கித் தொழிலுக்கு உதவியாக இருந்தன. டாக்டர் கூம்ப்ஸ் (Dr. Coombs) கூறியுள்ளபடி காமன்வெல்த் வங்கியின் நேரடித் தொடர்பு அதற்கு வலிமை கொடுத்தது. நாட்டின் பொருளாதாரம் குன்றி, வேலையின்மை பெருகியபோது இத் தொடர்பு பயனுள்ளதாக இருந்தது. மைய வங்கி மற்ற வர்த்தக வங்கிகளுடைய கொள்கையைத் தக்கமுறையில் திருத்தியமைக்க முடிந்தது. இதன் விளைவாக அவை மைய வங்கியின் நோக்கங்

[1] 'Financial Policy and Credit Control Techniques in Central America', I.M.F. Staff Papers no. 1958, p. 440.

களை நேரடியாக நிறைவேற்றும் நிலை ஏற்பட்டது;[1] மைய வங்கி வர்த்தக வங்கித் தொழிலில் ஈடுபடுவதைத் தனியார் வங்கி அதிகம் வெறுக்கவில்லை. வலிமையுள்ள மைய வங்கி உருவானால் தமது பழைய சுதந்திரம் கெட்டுவிடும் என்றே அவர்கள் ஏங்கினர். மைய வங்கி வர்த்தக வங்கித் தொழிலைக் கண்டிப்பதன் மூலம் மைய வங்கியின் கட்டுப்பாட்டையே அவர்கள் தடை செய்ய முயன்றனர்.[2]

மைய வங்கிகள் சாதாரண வங்கித் தொழிலைச் செய்வதால் பல நன்மைகள் ஏற்படும் என்ற வாதத்தில் உண்மை இருக்கின்றது. வளர்ச்சியடையும் நாடுகளின் தேவைகளைக் கருதும் போது. வங்கிகளே இல்லாத அல்லது போதிய அளவில் இல்லாத நாடுகளில் அடிப்படை வங்கி வசதிகளை அளிப்பது மைய வங்கியின் கடமையாகும். தொடக்க நிலையில் வளர்ச்சி குறைந்த நாடுகளில் மைய வங்கி வர்த்தக வங்கித் தொழிலை ஏற்று நடத்த வேண்டும்.

வளர்ச்சி குறைந்த நாடுகளில் முன்னேற்றமடைந்த நாடுகளில் உள்ள சிறப்பான வங்கிப் பணிகளுக்குத் தேவை இல்லை. அவை இயங்குவதற்குப் பொருத்தமான சூழ்நிலையும் இல்லை. நிக்கார்குவே, பராகுவே (Nicarguay, Paraguay) போன்ற நாடுகளில் மார்க்கட்டுகள் சிறியனவாக இருந்தன. தேர்ச்சி பெற்ற சிப்பந்திகள் போதிய அளவில் இல்லை. இந்த நிலையில் வர்த்தக வங்கிகளைத் தனியாகத் தொடங்குவது சாத்தியமாக இல்லை. பிரச்சினையைத் தீர்க்கும் வகையில் பல துறைகள் கொண்டுள்ள ஒரே நிறுவனத்தைத் தொடங்கினர். அதிகாரங்கள், நிதி, பொறுப்புகள் முதலியவைகளை அவைகளிடையே பகிர்வு செய்தனர். 1944 செப்டம்பர் மாதம் நிறைவேறிய ஆணைச் சட்டப்படி (Decree Law) தோன்றிய பராகுவே வங்கி (Bank of Paraguay) இதற்கு உதாரணம். இந்த வங்கி செலாவணித்துறை (Monetary Department), வங்கித் துறை (Banking Department), சேமிப்பு அடைமானத்துறை (Saving and Mortgage Department) என்ற மூன்று பகுதிகளைக் கொண்டிருந்தது. ஒவ்வொரு துறையும் தனித் தனியே இயங்க வேண்டும். தத்தம் கணக்குகளைத் தனியாக வைத்துக்கொள்ள வேண்டும். அவை நிருவாகக் குழுவிடம் தத்தம் இருப்புநிலைக் குறிப்பையும் (Balance sheet), இலாப இழப்புக் கணக்கையும் தனியாக அளிக்க வேண்டும். இத்தகைய கலப்பு மைய வங்கி முறை (Mixed Central Bank) 1940-ல்

[1] H. C. Coombs, 'Development of Monetary Policy in Australia', University of Queensland Press, 1956.

[2] H. W. Arndt, The Australian Trading Banks, p. 192.

நிகார்குவா மைய வங்கி அமைப்பில் இடம் பெற்றது. நிகார்குவே தேசீய வங்கி 1940-ல் திருத்தியமைக்கப்பட்டது. ஒரு தூய மைய வங்கியாக உருவாக்கப்படவில்லை. 1953வரை நாட்டின் வங்கித் தொழில்கள் எல்லாவற்றையும் அது செய்தது. மைய வங்கியின் சில பொறுப்புகளை அதன் வெளியீட்டுத் துறை (issue department) செய்தது. உதாரணமாக, செலாவணி வெளியீட்டையும், வங்கிச் செலாவணிக் கட்டுப்பாட்டையும் அது செய்தது. அதன் வங்கித்துறை நாட்டின் முக்கியமான வர்த்தக வங்கியாக இயங்கியது. அரசியலாரிடமும், தனியாரிடமும் அது டெப்பாசிட்டுகளை (deposits) பெற்றது. அது இறக்குமதி, ஏற்று மதித் துறை (import export department) ஒன்றையும் செயல் படுத்தியது. நாட்டின் அயல் நாட்டு வர்த்தகத்தில், குறிப்பாகப் பருத்தி, காபி ஏற்றுமதியில் அது ஒரு முக்கிய பங்கேற்றது. பராகுவே மாதிரியிலிருந்து அது சிறு வேறுபாடுகளைக் கொண்டிருக் கின்றது என்றாலும் இரு நிறுவனங்களும் அடிப்படை ஒற்றுமை களைக் கொண்டிருந்தன. ஆப்பிரிக்க நாடுகளின் புதிய மைய வங்கி கள் பெரும்பாலும் வர்த்தக வங்கித் தொழிலைச் செய்ய அனுமதி பெற்றிருக்கின்றன. சூடான் வங்கி (Bank of Sudan) நிதி அமைச் சர் அனுமதி பெற்றுத் தனியாரிடம் டெப்பாசிட்டுகளை ஏற்கலாம், மொராக்கோ, ட்யூனிசியா (Morocco, Tunisia) நாடு களின் மைய வங்கிகள் வர்த்தக வங்கித் துறைகளைக் கொண் டிருக்கின்றன. லிபியத் தேசீய வங்கி (National Bank of Libya) ஆரம்பத்திலிருந்தே கலப்பு வங்கியாக இயங்குகிறது.மொராக்கோ, ட்யூனிசியா, மாலி நாடுகளில் வர்த்தக, மைய வங்கிகள் இணைந்து இயங்குவது ஃபிரெஞ்சு (French) மரபை ஒட்டியுள்ளது. ஃபிரெஞ்சு முறையின் வழிவராத சில வங்கிகள்கூட, உதாரண மாக சோமாலி, புருண்டி, ஜமைக்கா (Somali, Burundi, Jamaica) நாடுகளுடைய மைய வங்கிகள் கூட வர்த்தக வங்கித் தொழிலைச் செய்ய அனுமதி பெற்றுள்ளன.[1] அவை தம் பணிகளை மட்டுமின்றி வர்த்தக வங்கிப் பணிகளையும் செய்ய வேண்டியிருந்தது. பொருளாதார வளர்ச்சி ஏற்பட்டபின் அவை வங்கித் தொழிலை விடுத்துத் தம் மைய வங்கித் தொழிலிலேயே முழு கவனத்தையும் செலுத்தின. ஆஸ்திரேலியக் காமன்வெல்த் வங்கியை இதற்கு ஓர் எடுத்துக்காட்டாகக் குறிப்பிடலாம். 1959ஆம் ஆண்டு முதல் அது ஆஸ்திரேலியா ரிசர்வ் வங்கியாகப் (Australian Reserve Bank) பணி புரிகின்றது. ரிசர்வ் வங்கிச் சட்டம் அது முழுவதும் மைய வங்கியாக இயங்குவதற்கு வழி வகுத்துள்ளது. ரிசர்வ்

[1] S. K. Basu, 'Central Banking in Emerging Countries', p. 195.

வங்கி முழு நேர வங்கியாக இயங்குவதற்கான அமைப்பைப் பெற்றிருக்கின்றது. மற்ற அலுவல்களை அது செய்யக்கூடாது.[1]

காமன்வெல்த் வங்கியை ரிசர்வ் வங்கியிலிருந்து பிரித்துவிட்டனர். ரிசர்வ் வங்கி தொழில் துறையைத் தன்வசம் கொள்ளவில்லை. ஆனால், கிராமப்புறக் கடன்துறை (Rural Credit Department) ரிசர்வ் வங்கியுடன் இணைந்திருக்கின்றது. ரிசர்வ் வங்கி தோன்றியதிலிருந்து அது சட்டப்படி மைய வங்கியாக இருத்தல்வேண்டும். ஆனால், மேற்குறிப்பிட்ட துறை அதன்வசம் நீடித்திருப்பது ஒரு முரண்பாடாகத் தோன்றலாம். ஆனல், அத்துறை கூட்டுறவுத் துறைக்கும், அரசினர் வர்த்தகத் துறைக்கும் குறுகியகாலக் கடன் வசதியளிக்கும் தனியாருடன் நேரடித் தொடர்பு கொள்வதில்லை. ஆஸ்திரேலியாவில் மட்டுமல்லாமல் வேறு நாடுகளிலும் ஆரம்பத்தில் மைய வங்கி வர்த்தக வங்கித் தொழிலை நடத்தியது. பின்னர் முழு மைய வங்கியாக வளர்ந்தது. இரான், அயர்லாந்து. எதியோப்பியா, ஐக்கிய அராபியக் குடியரசு (Iran, Ireland, Ethiopia, United Arab Republic) நாடுகளை உதாரணமாகக் கூறலாம். இந்த நாடுகளில் வர்த்தக வங்கித் தொழிலைப் புதிய வர்த்தக வங்கிகளிடம் ஒப்படைத்திருக்கின்றனர்.[2] மைய வங்கிகளின் மற்றத் தொழில்கள் திட்டவட்டமாக அதனிடமிருந்து பிரியாத நாடுகளில்கூட, அதாவது அவை வர்த்தக வங்கித் தொழிலைத் தொடர்ந்து செய்யும் நாடுகளில்கூட இரு பணிகளையும் பிரித்துள்ளனர். மைய வங்கியின் கணக்குகளைத் தனித்து வைத்துள்ளனர். லிபியாவில் அது செய்யக்கூடிய வர்த்தக வங்கித் தொழில் யாவை என்று 1953ஆம் ஆண்டுச் சட்டம் (Banking Law of April 1953) நிறைவேறிய பின் நிதியமைச்சகம் வரையறுத்துள்ளது. இரு (மைய, வர்த்தக வங்கித்) தொழிலையும் சேர்த்துச் செய்ய ஆரம்பித்த நிறுவனங்கள் காலப்போக்கில் தூய மைய வங்கியாக வளர்ச்சியடைந்தன. ஆனல், இந்த நிறுவனங்களுடைய இருவகைப் பணிகளையும் சுலபமாகவும் எளிய முறையிலும் பிரிக்க முடியவில்லை. நாளடைவில் இவை செய்யும் வர்த்தக வங்கித் தொழில் குறைக்கப்பட்டது; இறுதியில் அறவே மறைந்தது. செலாவணிக் கொள்கையை நிருவகிக்கும் துறையும், நீண்ட குறுகியகாலக் கடன்களைக் கொடுக்கும் துறையும் தனித் தனியே இயங்காதவரை இவ்வாறு பலதரப்பட்ட பணிகளை ஒரே நிறுவனம் செய்தது. அந்தந்த நாடுகளில் நிலவிய சூழ்நிலையில்

[1] The Reserve Bank Act 1969, Sec. 26 (a), (b), (c) 959.

[2] Federal Reserve Bank of New York, Monthly Review, July, 1964, p. 135.

ஒரே நிறுவனம் தேசிய வங்கித் தொழில் முழுவதையும் செய்வது சிக்கனமாகும். பற்பல நிறுவனங்களிடையே இவ்வலுவல்களைச் சிதற விடுவதைவிட ஒரே நிலையம் செம்மையாகச் செய்வது நன்மை பயக்கும். வளர்ச்சி குறைந்த நாடுகளில் மைய வர்த்தக வங்கித் தொழில்களை இணைப்பது பயனுடையது; வளர்ச்சிக்கும் உகந்திருக்கின்றது. மைய வங்கி வளர்ச்சி நடவடிக்கைகளில் பங்கு பெறுவது வர்த்தக வங்கிகளுடன் போட்டியிடுவதாகாது. மைய வங்கி இவ்வாறு இயங்கிய நாடுகளில் அதற்கும் வர்த்தக வங்கிகளுக்கும் போட்டி ஏற்படவில்லை. மாறுக வர்த்தக வங்கிகள் செய்யத் தவறும் சில அலுவல்களை மைய வங்கிகள் செய்தன. வங்கிமுறை பூரணமாகச் செயல்புரியாததால் எழும் குறைகளை அவை நீக்கின. சிலி நாட்டில் (Chile) வர்த்தக வங்கிகள் செய்யமுடியாத தொழில்களை மைய வங்கி செய்தது.[1] சுதேச வங்கிகள் இல்லாத நாடுகளில் மைய வங்கி வர்த்தக வங்கித் தொழிலைச் செய்தல் பயனுள்ளது, விரும்பத் தக்கது என்பதை லிபிய அனுபவம் மெய்ப்பிக்கின்றது. மேலும் இருவகைப் பணிகளும் இணைக்கப்படுவதால் மைய, வர்த்தக வங்கி உறவு பாதிக்கப்படுவதில்லை.[2] வர்த்தக வங்கிகளைக் கண்காணிக்க வேண்டிய மைய வங்கியின் அலுவலும் பாதிக்கப்படுவதில்லை. லிபிய தேசிய வங்கி வர்த்தக வங்கிகளுடன் தொடர்ந்து மிக நேர்த்தியான உறவைக் கொண்டிருக்கின்றன. எவ்விதத் தகராறும் இல்லை, மைய வங்கி வர்த்தக வங்கித் தொழிலைச் செய்வது வர்த்தக வங்கிகளுக்கு மட்டுமல்லாமல் மைய வங்கிக்கும் பயனுள்ளதாக இருக்கின்றது.[3] இவ்வாறு செய்வதால் மைய வங்கி தன் அலுவல்களில் சிலவற்றைத் திறம்படச் செய்ய முடியும். தானே மார்க்கட்டில் நுழைவதால், கடன்கொடுப்பதில் உள்ள குறைகளை நீக்கலாம். உதாரணமாக வர்த்தக உண்டியல்களைச் சாதகமான முறையில் தள்ளுபடி செய்வதன்மூலம் வர்த்தக உண்டியல் தொழிலை ஊக்குவிக்கலாம். இதே விதத்தில் போதிய அளவு கடன்களைப் பெறுத விவசாய, சிறுதொழில் பகுதிகளுக்கு நேரடியாக உதவி புரியலாம்.

வர்த்தக வங்கித் தொழிலைச் செய்வதால் மேலும் ஒரு முறையில் மைய வங்கி பயனடையலாம். மைய வங்கி அலுவலர்கள் வர்த்தக வங்கியின் அன்ருட வேலையை நேரில் பார்த்து அறிய

[1] Domestic Financing of Economic Development, (U.N.), p. 70.
[2] The Bankers' Magazine, June 1960, by A. C. Chandvarkar.
[3] லிபியத் தேசிய வங்கியின் 4ஆவது ஆண்டறிக்கை, 1960, பக்கம் 57.

வாய்ப்புப் பெறுகின்றனர். நாட்டின் பல்வேறு பகுதிகளின் பொருளாதார நிலையையும் அது அறியலாம்.[1]

வளர்ச்சி குறைந்த பல்வேறு நாடுகளில் உள்ள கலப்பு வங்கி முறைக்கு மாருக, அண்மையில் தோன்றிய மத்திய அமெரிக்க நாடுகளுடைய மைய வங்கிகள் அண்மையில் மைய வங்கிக் கோட்பாட்டில் ஏற்பட்டுள்ள மாறுதல்களைத் தம்மகத்தே கொண்டிருக்கின்றன. அண்மையில் நிறுவப்பெற்ற கோஸ்டாரிகா, குவாடிமாலா, ஹொண்டுராஸ் (Costa Rica, Quademala, Honduras) ஆகிய மூன்று நாடுகளுடைய மைய வங்கிகள் சட்டம் வர்த்தக வங்கிகளுடன் மட்டுமே தம் நடவடிக்கைகளை வைத்துக் கொள்ள வேண்டும். எல்சால்வடார் (Elsalvadar) நாட்டின் மைய ரிசர்வ் வங்கி (Central Reserve Bank) பொது மக்களுடன் தொடர்பு கொள்ளலாம்; ஆனல், அது பெரும்பாலும் தன் நடவடிக்கைகளைச் சாதாரண வங்கிகளுடன் மட்டுமே கொண்டிருக்கின்றது. ஆனல், நல்ல வளர்ச்சியடைந்த நாடுகளில் மைய வங்கிகள் தனி நிறுவனங்களாக இயங்க வேண்டும் என்பதைக் குறிப்பிட வேண்டும். கடன் முறையில் உள்ள குறைபாடுகளை மைய வங்கி நீக்க வேண்டும் என்று பேராசிரியர் சேயர்ஸ் (Prof. Sayers) கூறுகின்ருர். ஆனல், நிதி முறையில் குறைகள் இருக்கும் நாடுகளில் மட்டும் மைய வங்கி தற்காலிகமாகக் கலப்பு வங்கி முறையைச் செய்யலாம். வங்கி முறை போதுமான அளவுக்கு வளர்ச்சியடைந்து முதிர்வு பெற்ற நாடுகளுக்கு இது பொருந்தாது. பொருளாதார வளர்ச்சியின் ஆரம்ப நிலையில் இரு வகைத் தொழிலையும் இணைப்பது நல்ல பயனைக் கொடுக்கலாம். ஆனல், பொருளாதாரம் வளர்ச்சி பெற்று முதிர்வடையும்போது இரு பணிகளும் பிரிய வேண்டும்.

**புதியதாகத் தோன்றிய மைய வங்கிகளின் அதிகாரங்கள்**

வளர்ச்சி குறைந்த நாடுகளில் புதிய மைய வங்கிச் சட்டங்களை இயற்றுவோருக்கு ஒரு பிரச்சினை இருக்கின்றது. அது உடனடியாகச் செய்யக்கூடிய அலுவல்களைச் செய்வதற்கு மட்டும் சட்டம் இடம் கொடுக்க வேண்டுமா அல்லது நீண்ட காலத்தில் அது செய்யவேண்டிய பொறுப்புகளுக்கும் வேண்டிய அதிகாரத்தைத் தொடக்கத்திலேயே கொடுக்க வேண்டுமா? ஆனல், ஆரம்ப காலத்தில் குறுகிய எல்லைகளுக்குள் செயல் புரியக் கூடிய வகையில் சட்டம் அமையக்கூடாது என்பது நம் கருத்து. விரைவில் இவ்வெல்லைகளைக் கடக்கக் கூடிய அளவு வங்கி

[1] எட்வர்ட் நெவின் எழுதிய, 'Capital Funds in Underdeveloped Countries' பக்கம் 30-34.

வளர்ந்துவிடும். நீண்ட காலத்தில் அது இயங்குவதற்குத் தக்க முறையில் சட்டம் அமைய வேண்டும். பரவலான முறையில் செயல்பட இடம் இருக்க வேண்டும். இதுவே அறிவுடைய செயல். மத்திய அமெரிக்க நாடுகளில், சட்டம் மைய வங்கி களுக்குச் சில செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவிகளைக் (instrument of credit control) கொடுத்திருக்கின்றது. இக்கருவிகள் வளர்ச்சியடைந்த நாடுகளிலுள்ள மைய வங்கிகள் கொண்டிருக்கும் அதிகாரங்களையோ அல்லது அதற்கும் மேலான அதிகாரங்களையோ அளித்திருக்கின்றன. சமீபத்தில் நிறுவப்பட்ட நைஜீரியா, கானு, ட்யூனிசியா, மொராக்கோ, சூடான், மலேயா (Nigeria, Ghana, Tunisia, Morocco, Sudan, and Malaya) நாடு களின் மைய வங்கிகளுக்குக் கொடுக்கப்பட்டுள்ள அதிகாரங்கள் பரவலானவை. சுமார் இருபதுவகை நடவடிக்கைகளைச் செய்வதற்குச் சட்டத்தின் சம்பந்தப்பட்ட பகுதிகள் இடம் கொடுக்கின்றன. ஒரு வங்கியாகப் பணிபுரிய அல்லது தொடர்புள்ள பணிகளைச் செய்வதற்கு அல்லது சட்டப்படி தடைக்குட்படாத செயல்களைச் செய்வதற்கு மைய வங்கிகள் அதிகாரம் பெற்றுள்ளன.[1] ஜமைக்காவின் மைய வங்கி, வர்த்தக வங்கிகளைத் தேர்வுச் செலாவணிக் கட்டுப்பாடுகளுக்குட்படுத்தலாம். டெப்பாசிட்டுகளுக்கும் மற்ற உள்ளூர் சொத்துகளுக்கும் இடையே விகிதங்களையும் ஏற்படுத்தலாம். அனுமதிக்கப்பட்ட அதிகாரங்கள் பெரும்பாலும் இந்த நாடுகளில் தற்சமயம் உள்ள செலாவணி வங்கி நிலைகளுக்கு அவசியமில்லாதிருக்கின்றன. தற்சமயம் செலுத்த முடியாது என்ற காரணத்துக்காக இந்த அதிகாரங்களை முக்கியமற்றவை என்று கருத முடியாது. இந்த மைய வங்கிகள் வளர்ச்சியடைந்த நாடுகளில் உள்ளவை செய்வதுபோல் செலாவணிக் கட்டுப்பாட்டை எவ்வாறு செய்கின்றன என்பதைக் கொண்டு இவைகளை மதிப்பிடுதல் தவறு. செம்மையான செலாவணி முறையை அமைத்தலே அவை செய்யவேண்டிய முக்கிய கடமையாகும். செம்மையான நிதி நிலையங்களை உருவாக்கி நாட்டின் பொருளாதாரத்தைப் பேண வேண்டும். சட்டம் கொடுக்கும் பரவலான அதிகாரங்களைக் கொண்டு மைய வங்கிகள் புதிய சோதனைகளைச் செய்யலாம், புதிய மாற்றங்களைப் புகுத்தி அவைகளுடைய விளைவுகளைக் கவனிக்கலாம். எதிர்கால வளர்ச்சிக்குகந்த செயல்களை அவை செய்யலாம். இவ்வழியே அவை நாட்டுப் பொருளாதாரத்தில் பங்கேற்கலாம்.

[1] நைஜீரிய மைய வங்கிச் சட்டம், 1958, பகுதி 29; கானு வங்கிச் சட்டம் 1963, பகுதி 27(1), (2), ரொடிஷியா, நயாசலாந்துச் சட்டம், 1956, பகுதி9 (1), மொராக்கோ வங்கச் சட்டம், ஜூன் 1959 — 1962-ன் திருத்தப்படி டிசம்பர் 1962 சட்டப் பகுதிகள் 26 — 39.

**மைய வங்கிகளின் உருவமைப்பு**

மைய வங்கித் தொழிலை இரு துறைகளாகப் பிரிப்பதும் அவைகளுக்குத் தனித்தனி அறிக்கைகளைத் தயாரிப்பதும் இங்கிலாந்து வங்கி வழக்கம். இதை வேறுசில மைய வங்கிகளும் பின்பற்றுகின்றன. இதுபற்றிய கருத்துகளை இங்குக் காணலாம். 1844ஆம் ஆண்டு வங்கிச் சாசனச் சட்டப்படி (Bank Charter Act) இங்கிலாந்து வங்கியின் தொழில் இரு துறைகளாக—வங்கித்துறை (Banking dept.) வெளியீட்டுத்துறை (Issue dept.) பிரிந்தன. வங்கியின் அறிக்கைகளும் பெரும்பாலும் இச்சட்டத்தால் நிருணயிக்கப்பட்டன. 1928-ல் வங்கிச் செலாவணித்தாள் சட்டமும் (Bank Notes Act), பின்னர் இயற்றப்பட்ட சட்டங்களும் கொணர்ந்த திருத்தங்களை நீக்கிப் பார்க்கும்போது பாங்கின் அறிக்கை பெரும்பாலும் 1844ஆம் ஆண்டுச் சட்டத்தை ஒட்டியே இருக்கின்றது. மாக்மில்லன் குழுவினர் (Macmillan Committee) இரு துறைகளையும் பிரிக்கத் தேவையில்லை என்றும் அவைகளை இணைக்கலாம் என்றும் கூறினர். ஆனால், வங்கியின் அதிகாரிகளாகிய கோப்ல்ட் பிரபுவும் (Lord Gobbald), மைனர்ஸ் (Mr. Mynors) என்பவரும் இத்துறைகளைப் பிரித்து வைக்கவேண்டும் என்றும் பிரிவால் நன்மை ஏற்படும் என்றும் வாதாடினர். இரு துறைகளுக்கும் ஒரே அறிக்கையைத் தயார் செய்வதால் நன்மையேதும் ஏற்படாதென்றும் குறிப்பிட்டனர்.

வங்கியின் அன்றாட நிருவாகத்தையும், அமைப்பையும் மனத்தில் கொண்டு நோக்கும்போது இரு துறைகளும் தனித்து இயங்குவதைப் பூரணமானது என்று கருத முடியாது. ஆனால், அதன் இலாப-இழப்புக் கணக்கு (Profit and Loss Account) இருப்புநிலைக் குறிப்பு இவைகளை நோக்கும்போது இரு துறைகள் தனித்திருப்பது பூரணமாக இருக்கின்றது. ராட்கிளிப் குழுவினரிடம் இங்கிலாந்தின் தலைமை வங்கியின் அதிகாரிகள் மாக்மில்லன் குழுவின் சிபார்சுகள் தீய விளைவுகளை ஏற்படுத்தும் என்றும் தற்போதுள்ள முறையைத் திருத்துவது சரியல்ல என்றும் கூறினர். ஆனால், இக்கூற்றை மெய்ப்பிக்கக் கீழ்க்கண்டதை மட்டும் அவர்கள் குறிப்பிட முடிந்தது. அதாவது வெளியீட்டுத்துறை ஈட்டும் இலாபத்தைப் பொறுத்தவரை அது அரசியலாருக்குக் கடமைப்பட்டிருக்கின்றது; எனவே, இதன் கணக்கைத் தனித்து வைத்திருப்பது நல்லது. மேலும் வங்கித்துறை வங்கியின் நிருவாகக் குழுவுக்குக் கடமைப்பட்டிருக்கின்றது. இரு துறைகளும் தனித்தியங்குவதால் செலாவணித்தாள் வெளியீடும் பொதுமக்கள் கவனத்தை ஈர்க்கின்றது.

ஆனால், இன்று நாட்டிலுள்ள மொத்தப் பணத்தில் செலாவணி வெளியீடு ஒரு சிறு பகுதியே. இங்கிலாந்து வங்கி நாட்டுடைமை யான பிறகு அதன் இலாபம் அரசைச் சேர்வதால் வெளியீட்டுத் துறையின் இலாபத்தைத் தனித்துக் காட்ட வேண்டியதில்லை. மாக்மில்லன் சிபாரிசுப்படி இரு துறைகளை இணைத்துப் பொது அறிக்கையைத் தயார் செய்தால் அது புழக்கத்திலிருக்கும் செலாவணித் தாள்களைக் காட்டுவதோடு மட்டுமல்லாமல் வெளி யான செலாவணித் தாள்களையும் காட்டும். பலர் குழுவிடம் இங்கிலாந்து வங்கியின் சார்பில் சாட்சியம் அளித்தனர். இவர் களுடைய கூற்றில் உண்மை இல்லை என்பதைப் பேராசிரியர் சேயர்சும் (Prof. Sayers) பேராசிரியர் கெயிர்ன் கிராசும் (Prof. Cairncross) மெய்ப்பித்தனர். எல்லோரும் நன்கறிந்த, பிரபல மான, நிதிச் சஞ்சிகைகள் அறிந்த வழக்கத்தைக் கைவிட அவர் களுக்கு விருப்பமில்லை. 1946ஆம் ஆண்டின் வங்கிச் சட்டம் நிறைவேறிய பிறகு அதன் அமைப்பு, இலாபம், காப்புநிதி பற்றிய முடிவு எடுக்கப்பட்டது. இதற்குப் பின் பார்லிமெண்டில் இப் பிரச்சினையை எழுப்ப அவர்களுக்கு மனமில்லை.[1]

ஆங்கில மாதிரியின் (Model) செல்வாக்கு

முன்னர் பிரிட்டிஷ் காமன்வெல்த்திலிருந்த ஆங்கிலக் குடி யேற்று நாடுகளாக இருந்த அல்லது ஸ்டெர்லிங் பகுதியிலிருந்த நாடுகளில் வெளியீட்டு, வங்கித் துறைகள் தனித்தனியே இருக் கின்றன. இது ஆங்கில முறையின் செல்வாக்கைக்காட்டுகின்றது. 1930-க்குப் பின் (40க்குள்) தோன்றிய இந்திய ரிசர்வ் வங்கி யிலும், 1956-ல் தோன்றிய பாக்கிஸ்தானிய ஸ்டேட் வங்கி யிலும் (State Bank of Pakistan), 1950-க்குப் பின் தோன்றிய சில ஆப்பிரிக்கக் குடியேற்று நாடுகளின் மைய வங்கிகளிலும் இரு துறைகளும் பிரிந்திருக்கின்றன. 1957-ல் கானவில் (Ghana) வெளியீட்டு, வங்கித் தொழில்களைப் பூரணமாகப் பிரித்து இரு துறைகளாக்கியதும் பிரிட்டிஷ் முறையிலே அமைந்ததாகும்.[2] வெளியீட்டுத் துறை வசம் இருந்த அன்னியச் செலாவணி துரித மாகப் பெருகியது. வங்கித் துறையில் இருந்த தொகை, கோகோ (Cocoa) உற்பத்தி வாணிபத் தேவைகளுக்குக் குறைவாக இருந்தது. இந்த நிலையைச் சமாளிப்பதற்காக 1963-ல் இரு துறைகளையும் இணைத்தனர். 1963-லிருந்து இரு துறைகளுக்கும் ஒரே அறிக்கையை வெளியிட்டனர். ஸ்டெர்லிங் பகுதியிலிருந்த லிபியா நாட்டின் தேசீய வங்கியும் இங்கிலாந்து வங்கியைப்

[1] Qs 223-5, 231—5, 238-9, 748-9. Radcliffe Committee (Oral Evidence).
[2] The Bank of Ghana Ordinance, 1957, Sec. 6.

போலவே இரு துறைகளுடன் அமைக்கப்பட்டது. 1963ஆம் ஆண்டு ஜூன் மாதம் வங்கித்துறையை மேலும் இரு பகுதிகளாக மைய வங்கித்துறை, வர்த்தக வங்கித் துறை எனப் பிரித்தனர். இந்த வங்கி தன் பல்வேறு துறைகளுக்குத் தனித்தனி அறிக்கைகளை வெளியிடுகின்றது. ஆனால், அதேபோது நிறுவப்பட்ட நைஜிரிய நாட்டு மைய வங்கியோ அல்லது சூடான் நாட்டு வங்கியோ பிரிட்டிஷ் பழக்கத்தைப் பின்பற்றவில்லை. இங்கிலாந்தின் மைய வங்கியின் பிரிவினை ஒரு காலத்தில் மற்ற நாடுகளுக்கு முன்மாதிரியாக இருந்தது; ஆனால், பல நாடுகள் இப்பழக்கத்தைப் பிற்காலத்தில் கைவிட்டன. இரு துறைகளைத் தனித்து அமைக்க நிதி அல்லது பொருளாதாரக் காரணங்கள் ஏதும் இல்லாவிடிலும் சிலர் வங்கித்துறையிலிருந்து பிரித்துச் செலாவணித் துறையை நிர்மாணிப்பதை ஆதரிக்கின்றனர். ஏனெனில், மக்களிடையே நம்பிக்கையூட்டும் செலாவணி முறை செம்மையாகக் கண்காணிப்பதன் மூலம் நம்பிக்கையை உண்டாக்கும்.[1]

செலாவணிக் கட்டுப்பாட்டு முறையிலும், நோக்கங்களிலும், பணிகளிலும் புதுமைகள்

மைய வங்கியின் நோக்கங்களிலும், பணிகளிலும், பொறுப்புகளிலும் மட்டுமல்லாமல், அது பின்பற்றும் செலாவணிக் கட்டுப்பாட்டு முறைகளிலும் புதுமைகள் ஏற்பட்டுள்ளன என்பதை கவனிக்க வேண்டும். உலகிலுள்ள பல்வேறு மைய வங்கிகள் பழைய முறைகளை மட்டும் பயன்படுத்துவதோடு நின்றுவிடவில்லை. 'நிரந்தர விதிகள்' (Code of Eternal Rules) எதுவும் அவைகளுக்குக் கிடையாது. பழைய முறைகளை மாற்றுகின்றனர், புதிய முறைகளைப் பின்பற்றுகின்றனர். பழைய முறைகளையும் புதிய முறைகளையும் இணைக்கும் வழிகளைச் சதா ஆய்வு செய்கின்றனர். தற்காலத்திய நிலைக்கு ஒவ்வாத மிகப் பழைய முறைகளைப் புறக்கணிக்கத் தயங்குவதில்லை. நெடுங்காலமாக ஆட்சியில் இல்லாது துருப்பிடித்துப்போன முறைகளை மீண்டும் உபயோகத்தில் கொணரவும் தயங்குவதில்லை. துரிதமாக மாறிக்கொண்டு வரும் பொருளாதார நிதிநிலைமைகளுக்கேற்றவாறு தம் முறைகளை மைய வங்கிகள் மாற்றிக்கொள்கின்றன. ஒரு கட்டுப்பாட்டுக் கருவியைப் புறக்கணித்து மற்றொன்றை அவை கையாள முன்வருகின்றன. பழைய அளவுக் கட்டுப்பாடு முறைகளைக் (quantitative methods) கைவிட்டுப் புதிய தர(க்கட்டுப்பாட்டு) முறைகளையும் (qualitative methods) தேர்வு முறைகளையும் (selective methods) அவை பின்பற்றுகின்றன. மாறிவரும்

[1] Ursula Hicks, Developmental Finance, பக்கம் 55.

பொருளாதார நிலைக்கேற்றவாறு அவை தம் கருவிக் கலவையை மாற்றி ஆளுகின்றன. ஒரு சிறந்த மைய வங்கியர், 'மாறுதல்களை விரும்பாத போக்கைவிடப் பல்வேறு துறைகளிலும் சிறப்புற இயங்கும் தன்மையையே கொள்வார். என்று ஒரு பிரபல ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.[1] உண்மையில், மையவங்கியின் கொள்கை நெகிழ்ச்சியுடையதாக இருக்க வேண்டும், நிலைமைக்கேற்றவாறு மாறக்கூடியதாகவும், எதிர்கால நிலையை முன்கூட்டி அறிந்து அதற்கேற்றவாறு தன் கொள்கையைத் திருத்திக்கொள்ளக் கூடியதாகவும் இருக்கவேண்டும். இன்று மைய வங்கிகள் பல்வேறு வழிகளைக் கையாளுகின்றன. பற்பல சிக்கலான பணிகளை வளர்ச்சி குன்றிய நாடுகளிலும், வளர்ச்சியடைந்த நாடுகளிலும் பின்பற்றுகின்றன. இவை எல்லாம் புதுமைகளையும், சோதனைகளையும் அவை எந்த அளவு விரும்புகின்றன என்பதைக் காட்டுகின்றன.[2]

[1] R. S. Sayers 'Quarterly Journal of Economies', May 1949.

[2] A. R. Low 'The Varied Role of Central Banks', Economic Record, December 1946.

# 2. மைய வங்கி இல்லாமலே மைய வங்கி முறையை அமல் செய்தல் : செலாவணிக் குழுக்கள்

அண்மையில் சுதந்திரம் பெற்ற பல நாடுகள் கொண்டிருந்த செலாவணி முறையைச் செலாவணிக் குழுக்கள் என்று கூறினர். இவை மைய வங்கிப் பணிகளைச் செய்தன. குறைந்தபட்சச் செலவில் இவை செலாவணி நிருவாகத்தைச் செய்தன. இந்த நிலையில் இந்த நாடுகளில் மைய வங்கியைச் செலவு பிடிக்கும் ஆடம்பரமெனக் கருதினர். இக்கருத்தை நாம் ஆராய்ந்து செலாவணிக் குழுக்களுக்கும், மைய வங்கிகளுக்கும் உள்ள வேறு பாடுகளைக் காணவேண்டும். அண்மையில் சில செலாவணிக் குழுக்கள் மைய வங்கிகளாக மாறுவதைச் சரிவரப் புரிந்து கொள்ள வேண்டும்.

குடியேற்று நாடுகளுடைய செலாவணி முறைகள் ஏறத்தாழ ஒரே மாதிரி இருந்தன. ஒவ்வொரு குடியேற்று நாடும் தான் மிகுதியான வணிகத் தொடர்பு கொண்டிருந்த நாட்டின் செலா வணியைப் பயன்படுத்தியது. அல்லது அதன் முறை அந்த நாட்டைச் சார்ந்திருந்தது. குடியேற்று நாட்டின் வங்கிமுறை உண்மையில் அதே நாட்டின் வங்கிமுறையுடன் இணைந்திருந்தது அல்லது அதற்குட்பட்டிருந்தது. குடியேற்ற நாடுகளுக்கு இங்கிலாந்து, செலாவணி விஷயத்தில் தாய் நாடாக இருந்தது. உள்ளூர் புழக்கச் சாதனங்கள் ஸ்டெர்லிங்குடன் (Sterling) இணைந் திருந்தன. இவை குறிப்பிட்ட வீதத்தில் (rate) தடையின்றி ஸ்டெர்லிங்காக மாற்றக்கூடியவை. இவைகளுக்குப் பன்னாட்டு ரீதியில் தனி அந்தஸ்து இல்லை. குறிப்பிட்ட மாற்றுவீதத்தை (exchange rate) அமலில் வைக்கும் பொறுப்புப் பிராந்திய நிறுவனம் ஒன்றுக்கும் இல்லை. இதற்கான கொள்கையைப் பின்பற்றவேண்டிய அவசியமில்லை. இங்கிலாந்தின் செலாவணிக் கொள்கையேதான் இந்த நாடுகளுக்குரிய கொள்கையாகவும் இருந்தது.[1]

[1] Monetary Systems in Colonies—'Banker' July 1948, Feb. 1949.

குடியேற்ற நாடுகளுடைய விந்தையான சூழ்நிலையில் நேரடி நடவடிக்கைகள் எடுத்துச் செலாவணியை நிருவாகம் செய்ய இடமில்லை. சிறந்த காப்பு நிதியைக் கொண்ட ஒரு செலாவணியே இந்த நாடுகளுக்குத் தேவைப்பட்டது. செலாவணியை ஸ்டெர்லிங்காக மாற்ற இடம் இருக்கவேண்டும். ஏனெனில், ஸ்டெர்லிங் எங்கும் ஏற்கக்கூடிய பிரபல நாட்டின் செலாவணியாகும். இரு உலகப்போர்களுக்கிடையான காலத்தில் குடியேற்ற நாடுகளின் தேவையைப் பூர்த்தி செய்ய செலாவணிக் குழுக்கள் வேண்டியிருந்தன. இவை தேவையானபோது ஸ்டெர்லிங்கை ஏற்றுச் செலாவணியை வெளியிடவேண்டும். செலாவணிக்குச் சமமான மதிப்புள்ள ஸ்டெர்லிங்கைக் காப்பு நிதியாகக் கொள்ள வேண்டும். மூன்று வகைச் செலாவணிக் குழுக்கள் இருந்தன. முதல் வகை லண்டன் நகரில் நிறுவப்பெற்று அங்கு நிருவகிக்கப்பட்டது. பல நாடுகளுக்குப் பணிபுரிந்த மேற்காப்பிரிக்கக் குழுவையும், கிழக்காப்பிரிக்கக் குழுவையும் இதற்கு இரு உதாரணங்களாகக் காட்டலாம். மலேயாவின் செலாவணிக் குழுவை இரண்டாவது வகைக் குழுவுக்கு உதாரணமாகக் காட்டலாம். இது மலேயாவிலேயே இடம்பெற்றிருந்தபோதிலும் பல நாடுகளுக்குப் பணிபுரிந்தது. மூன்ருவது வகை குழுக்கள் உள்நாட்டு ஆணைகளின்கீழ் தோன்றியபோதிலும் ஒரே ஒரு நாட்டுக்குத் தொண்டாற்றின. இவைகளிடையே பல வேறுபாடுகள் இருந்தபோதிலும் ஒரு பொதுவான அமைப்பை இவை கொண்டிருந்தன. இவை வங்கிகளைத் தம் பதிலாளராக (Agents) ஆண்டன, இவைகளின் ஆட்சி நிதிச் செயலாளர்கள். அரசாங்க அதிகாரிகள் போன்றவர்களிடம் இருந்தன; லண்டனில் இருந்த ஸ்டெர்லிங்கை அடிப்படையாகக்கொண்டு இவை தம் நாடுகளில் தேவைக்கேற்ப நாணயங்களையும் செலாவணித்தாள்களையும் (Currency Notes) வெளியிட்டன. இவை தாம் பெற்ற ஸ்டெர்லிங்கை ரொக்கமாகவே வைத்திருந்தன. ஸ்டெர்லிங் வேண்டுவோருக்கு நாணயங்களையும் செலாவணித் தாள்களையும் பெற்றுக்கொண்டு ஸ்டெர்லிங்கைக் கொடுத்தன.

பொதுமக்களின் தேவைக் கேற்றவாறு செலாவணித் தேவைகளைப் பூர்த்தி செய்யும் கருவியாகவே இயங்கின. ஸ்டெர்லிங்கை வேண்டுவோருக்குக் குறிப்பிட்ட வீதமதிப்பில் அதைக் கொடுக்க இக் குழுக்கள் கடமைப்பட்டிருந்தன. இவை இதற்காக ஒரு சிறு தொகையை வசூல் செய்யலாம். தம் வெளியீட்டுக் காப்பாக 100 சதவீதம் ஸ்டெர்லிங் வைத்திருக்கவேண்டும். இதற்கு மேலும் 10 சதவீதம் வரை உபரிக் காப்புநிதியை வைத்திருக்கலாம். குழுக்கள் ஈட்டிய உபரி வருமானத்தை அவை

தொண்டுபுரிந்த நாடுகளுக்குப் பகிர்ந்து கொடுக்கலாம். வேண்டிய அளவு தம் சொத்தின் பகுதியை ரொக்கமாகக் கொண்டபின் இவை உபரியை ஸ்டெர்லிங் பத்திரத்தில் முதலீடு செய்தன. நாளடைவில் இவைகளுடைய வருமானம் பெருகிற்று.

முழு மதிப்புள்ள உலோகத்தைப் (full-bodied money) பயன் படுத்திய வியாபாரிகளும், பொதுமக்களும் நாளடைவில் செலா வணிக் குழுக்களின் தாள் பணங்களைத் தடையின்றி ஏற்றனர். ஏனெனில், இப்பணத்தை வேண்டும்போது மாற்றிக்கொள்ள முடியும்; எனவே, இதன் மீது மக்கள் நம்பிக்கை கொண்டனர். இந்த மாற்றுத் தொகை (exchange cover) வாங்காமல் வங்கிகள் லண்டன் பண மார்க்கட்டை (London money market) அணுக முடியும். சம்பந்தப்பட்ட நாடுகளிடையே குறுகிய காலக் கடன் தொகைகளை அனுப்ப முடியும். இவை யாவும் வணிகத்துக்கும், முதலீட்டுக்கும் பேருதவியாக இருந்தன.

**செலாவணிக் குழு முறை (Currency Board System) பரிணமித்த விதங்கள்**

போர்ப் பிற்காலத்தில் செலாவணிக் குழு வளர்ச்சியில் இரு மாறுதல்கள் ஏற்பட்டன. முதலில் அதன் பணிகளும் அதிகாரங் களும் பெருகியது. இரண்டாவதாகச் சில நாடுகளில் மைய வங்கி கள் தோன்றவே குழுக்கள் மறைந்தன.

முதல் மாறுதல்படி பிராந்தியச் செலாவணிக் குழுக்கள் தாம் வெளியிடும் பணத்தைக் காப்பு நிதியாகக் கொண்டு வரம்புக்குட் பட்ட ஆணைச் செலாவணியை (Fiduciary issues) வெளியிட அதி காரம் பெற்றன. காப்பு நிதிகள் பற்றிய கருத்துகள் முற்றிலும் மாறின. அதாவது அவைகளை முழுவதும் வெளி நாட்டுச் செலா வணியாகவும், பத்திரங்களாகவும் வைத்திருக்கத் தேவை இல்லை. ஒரு பகுதியை உள்நாட்டுப் பத்திரங்களாக வைத்துக்கொள்ளலாம் என்று கருதினர். லண்டனில் இயங்கிய குழுக்களும் இத்தகைய உரிமைகளைப் பெற்றன. போர்ப் பிற்காலத்தில் வளர்ச்சி நிதி (development finance) தேவைப்பட்டது. உள் நாட்டுச் செலா வணி நிருவாகம் உருவாக வேண்டும். இவ்விரு தேவைகளும் குழுக்கள் சரிவர வளர்ச்சியடைய வழி வகுத்தன. குழுக்கள் பெற்ற உரிமைகளின் முக்கிய நோக்கம், முன்னர் காப்பு நிதியாகப் பயன்படுத்திய அன்னியச் செலாவணியைப் பொருளாதார வளர்ச்சிக்கு அளிப்பதுதான். சாதாரணமாகக் கிடைக்கும் வளர்ச்சி மூலதனம் குன்றவே இம்மாறுதல் அவசியமாகிவிட்டது. புதிய உரிமைகளைக் கொண்டு செலாவணிக் குழுக்கள் குறுகிய

காலத் தாள்களைக் (short term papers) கையாள இடம் ஏற்பட்டது. குழுக்கள் சுதந்திரமாகவும், நெகிழ்ச்சியுடனும் பணிபுரிய வாய்ப்புகள் கிட்டின. ஆணைச் செலாவணியைத் தவிர சில குழுக்கள் (உதாரணமாகக் கிழக்காப்பிரிக்கச் செலாவணிக் குழு) மற்றுமொரு முறையில் செலாவணியை வெளியிடலாம்.

விவசாய நிதியளிப்பின் விளைவாகத் தோன்றிய உண்டியல்களை (Telly) வர்த்தக வங்கிகளுக்காகத் தள்ளுபடி செய்வதைக் காப்பாகக் கொண்டு செலாவணியை வெளியிடலாம். அண்மையில் கிழக்காப்பிரிக்கச் செலாவணிக்குழு பலர் கவனத்தை ஈர்க்கும் மாறுதல்களைச் செய்தது. 1964, 65ஆம் ஆண்டுகளில் செலாவணிக் குழுக்களின் பொறுப்புகள், பணிகள் என்றழைக்கப்பட்டவைகளைக் கடந்து மைய வங்கிகளின் பிராந்தியத்தில் நுழைந்தது. இந்த ருசிகரமான வளர்ச்சியைச் சிலர், 'மைய வங்கி இல்லாமலேயே மைய வங்கி முறையைப் பின்பற்றும் பெரும் சோதனை' என்று போற்றினர்.[1]

மைய வங்கி யில்லாமலேயே வங்கிச் செலாவணியை (Credit) ஆக்குதல் செலாவணிக் குழு செய்த முக்கிய மாறுதலாகும். மற்ற நாடுகளில் மைய வங்கிகள் செலாவணி நிருவாகத்தைச் செய்தன. இவ்வகை வசதிகளை ஏற்படுத்துவது மேற்குறிப்பிட்ட மாறுதலின் நோக்கம். புதிய மைய வங்கி உருப் பெறுவதை இந்த மாறுதல் எவ்விதத்திலும் தடைசெய்யவில்லை.[2]

**பழைய செலாவணிக் குழு பற்றிய திறனாய்வு**

பழைய செலாவணிக் குழு முறை இயங்கிய விதத்திற்கு இரு வகை மறுப்புகள் அளித்துள்ளனர். முதன்முதலில் அளவுக்கு மீறிய அன்னியச் செலாவணியை இம்முறை காப்புநிதியாகக் கொண்டது. நாடு ஓரளவு வளர்ச்சியடைந்தபின் இம்முறை நெகிழ்ச்சியற்றதாகவும் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்துவதாகவும் இருப்பதைக் கண்டனர். முதன்முதலில் இம்முறைப்படி புழக்கத்திலிருந்த பணத்திற்கும், காப்பு நிதியிலுள்ள ஸ்டெர்லிங்குக்கும் ஒரு தொடர்பிருந்தது. எனவே உள்நாட்டில் புழக்கத்தில் உள்ள பணத்தையும், வங்கிச் செலாவணியையும், அயல்நாட்டு வர்த்தகம், செலுத்தல் (payment) இவைகளிலிருந்து பிரிக்க முடியவில்லை. இரண்டாவதாகக் குழு வங்கிச் செலாவணியைக் கட்டுப்படுத்த இயலவில்லை. எனவே, மந்தகாலத்தில் பணச் சுருக்கத்தைத் தடுக்க முடியவில்லை.

[1] Commonwealth Banking Systems, ed. W. F. Crick, p. 7.

[2] 'Currency and Banking Development in certain Commonwealth Countries during the past ten years', Report of Bank of England, 1962.

ஏற்றுமதியும் அதன் மூலம் நாடு அடையும் வருமானமும் பெருகியபோது செலாவணிப் புழக்கமும் வங்கிகளுடைய டெப்பாசிட்டுகளும் தாமதமாகப் பெருகின. ஏற்றுமதிப் பெருக்கம் உள்நாட்டில் வீக்கத்தை (boom) ஏற்படுத்தியது. விலைகள் உயர்ந்தன. இறக்குமதிக்கும், புதிய நிறுவனங்களுக்கும் வேண்டிய நிதியை வங்கிகள் தாராளமாக அளித்தன. ஏற்றுமதியும், ஏற்றுமதி வருமானமும் குறைந்தபோது, பணப்புழக்கம், வங்கிச் செலாவணி, பொருளாதார நடவடிக்கைகள் முதலியன குறைந்தன. இந்த ஏற்றத்தாழ்வுகளை எல்லா நாடுகளும் உணர்கின்றன. ஆனால், செலாவணிக் குழுக்களைக் கொண்டுள்ள நாடுகளை இவை அதிகம் பாதிக்கின்றன. இத்தகைய மாறுதல்கள் கோட்பாட்டளவில் மிகத் தீய விளைவுகளை ஏற்படுத்தலாம். ஆனால், நடைமுறையில் இவை தீவிரமாகவோ, தாமதமாகவே சமநிலைக்கு வரக்கூடியவையாகவோ இல்லை. செலாவணிக் குழுக்களின் தாமாகவே மாறும் விசை (automatic mechanism) அரசின் குறுக்கீட்டுக்குட்பட்டது. பல நாடுகளில் வங்கிகள் நிதி வெளிச் செல்வதையும் உள் வருவதையும் ஒழுங்குபடுத்தும் சக்தி பெற்றிருந்தன. மேலும் மார்க்கட்டுக் குழுவின் நிதியும் அரசின் நிதியும் பயன்படுத்தப்பட்டன. செலாவணிக் குழுக்களின் கையிருப்பு ரொக்கம் கொண்டிருக்கும் நெகிழ்ச்சியைப் பற்றிக் குறிப்பிட்ட பேராசிரியர் சேயர்ஸ் (Prof. Sayers) மேலே குறிப்பிட்டதையே மனத்தில் கொண்டு குறிப்பிட்டிருக்க வேண்டும்.[1] ஆனால், செலாவணிக் குழுக்கள் இயங்கிய நாடுகளில் நிதி முறையின் வளர்ச்சி குறைந்திருந்தது; உள் நாட்டு வர்த்தகம் நல்ல அமைப்புப் பெறவில்லை. அயல் நாட்டு வர்த்தகத்தைவிட அது வங்கி முறையைக் குறைவாகவே நம்பியிருந்தது. செலாவணியின் ஒரு பகுதி சில வங்கிகளிடமோ, தனியாரிடமோ பயனற்று வெளி வராமல் சில காலம் தங்கலாம். மேலும் வங்கிகள் தம் நாடுகளில் உபரி டெப்பாசிட்டுகளை உள் நாட்டிலேயே கடன் கொடுக்க முடியாமல் இருக்கலாம். அவை வேறு நாடுகளிலும் ரொக்கம் வைத்திருந்தமையால் உள் நாட்டுத் தொழில் அவைகளுடைய மொத்தத் தொழிலைப் பாதிக்கவில்லை. ஒரு சுதந்திர நாடு பெற்றிருக்க வேண்டிய தனிச் செலாவணியைச் செலாவணிக் குழு ஒரு முறை கொடுக்கவில்லை. நாடு தனக்கென ஒரு முறையைப் பின்பற்ற இம்முறை இடம் கொடுக்கவில்லை என்பதும் இதன் குறைபாடாகும். இதன் கீழ் வங்கிகளும் வர்த்தக நிலையங்களும் குறுகிய காலப் பத்திரங்களையும், சுயபூர்த்தியாகும் கடன் பத்திரங்களையும் (self liquidating papers)

[1] R. S. Sayers, 'Central Banking after Bagehot' p. 114.

மட்டுமே வாங்கலாம். ஆகையால் இவை நெடுங்கால முதலீட்டை வெளி நாடுகளிலேயே செய்தன. ஆதலின் முதலீட்டு மார்க்கட்டு (Capital Market) உள் நாட்டில் வளர வாய்ப்பற்று விட்டது.[1]

ஒரு மைய வங்கி செலாவணிக் குழுவைப் போலச் செலாவணியின் மதிப்பையும், ஸ்திரத் தன்மையையும் (stability) பேணவேண்டும். ஆனால், அது வங்கித் தொழிலையும் (ஒரு சிறப்பு வங்கித் தொழிலையும்) செய்ய வேண்டும். வங்கித் தொழிலைச் செய்யும்போது, அரசுக்கும் மற்ற வங்கிகளுக்கும் கடன் கொடுக்கலாம்; பத்திரங்களை வாங்கலாம்; அதன் அயல் நாட்டுச் செலாவணி பெருகாவிடினும் அது செலாவணி வெளியீட்டை அதிகரிக்கலாம். அது இயங்குவதால் மற்ற வங்கிகளுடைய ரொக்கமும், கடனும், டெப்பாசிட்டுகளும் மாறுபாடடையும். வங்கிச் செலாவணியும் (வங்கிகள் கொண்டுள்ள டெப்பாசிட்டுகள்) மற்றச் சாதாரணச் செலாவணியும், நாட்டிலுள்ள மொத்தச் செலாவணியை நிர்ணயிக்கின்றன.

தொழில் பெருகும் காலத்தில் மைய வங்கியின் செயல் பணப் புழக்கத்தைக் குறைக்கவும், குறையும்போது அதை ஒழுங்குபடுத்தவும் பயன்படலாம். ஒரு மைய வங்கியின் அதிகாரங்கள் எவ்வளவு குறைவாக இருந்தபோதிலும் அது பணத்தின் அளிப்பைக் கண்காணிக்க வேண்டும். பண்டங்களுக்கும், பணிகளுக்கும் வெளி நாட்டுப் பொருள்கள் வாங்குவதற்குத் தேவையாகும் அன்னியச் செலாவணிக்கும் அமிதத் தேவை ஏற்படாமல் அது தடுக்க வேண்டும். மைய வங்கி அன்னியச் செலாவணியைக் காப்பு நிதியாகக் கொள்ளாமலே செலாவணியை வெளியிடலாம் என்பதால் அது செலாவணிக் குழுவைப்போல் தானாக இயங்கும் சக்தி இவைகளை நிர்ணயிக்க விட்டு விடக் கூடாது.

**சீரமைக்கப்பெற்ற செலாவணிக் குழுக்கள் அல்லது வளர்ச்சியடையும் நாடுகளுக்கு மைய வங்கிகள்**

ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சி ஒரு நிலையை அடைந்ததும் அதன் வங்கிகளும், நிதி நிலையங்களும் ஓரளவு வளர்ச்சி பெறுகின்றன. அதன் அரசியலிலும் மாறுதல்கள் தோன்றுகின்றன; தன்னாட்சி வளர்கின்றது. இந்த நிலையில் செலாவணி நிருவாகத்திற்கு ஏற்பாடுகள் செய்ய வேண்டும்.

[1] Report by Mr. J. B. Loynes on the Establishment of a Centra in Nigeria, 1957, p. 8.

இதற்காக ஒரு மைய வங்கியை நிறுவ வேண்டும். 1954-ல் உலக வங்கிக் குழுவொன்று மலேசிய, சிங்கப்பூரின் கூட்டாட்சிப் பொருளாதார நிலையைப் பரிசீலனை செய்து ஒரு மைய வங்கியை நிறுவ வேண்டும் என்று பரிந்துரைத்தது. அந்த நாட்டில் செலாவணி நிருவாகத்திற்குத் தனி வரையறைகள் இருந்த போதிலும் மைய வங்கியை நிறுவுவது சிறந்த பயனளிக்கும் என்று குழுவினர் கருதினர்;[1] 1935—40-ல் செலாவணிக் குழுக்கள் உச்ச நிலையிலிருந்தன. இந்த நாடுகள் உலகில் பல பகுதிகளில் இருந்தன. இந்த நாடுகள் பல்வேறு அளவுள்ள பொருளாதார வளர்ச்சி யடைந்திருந்தன. ஆனால், இன்று இவை எண்ணிக்கையில் குறைந்துவிட்டன. அந்தந்த நாடு சுதந்திரம் பெற்றதும் தமக்கு மைய வங்கிகளை ஏற்படுத்திக்கொண்டன. எஞ்சியுள்ள செலாவணிக் குழுக்கள் இந்துமாக்கடல், கரிபியன் கடல், மத்திய தரைக்கடல் பகுதிகளிலுள்ள சில சிறிய நாடுகளுக்குத் தொண்டு புரிகின்றன.[2] கானா, நைஜீரியா, சூடான், ரொடிசியா, நயாசாலாந்து, பர்மா, மலேயா, சீராலியோன், ஜமைக்கா முதலிய நாடுகளில் செலாவணிக் குழுக்கள் இருந்த இடங்களில் மைய வங்கிகள் தோன்றியுள்ளன.

[1] First Annual Report of the Central Bank of Malaya for the year ended 31st December, 1959, p. 5.

[2] Commonwealth Banking Systems, ed. W. F. Crick, p 10.

# 3. பொதுமக்களுடனும் அரசுடனும் மைய வங்கியின் தொடர்பு பற்றிய புதிய கருத்துகள்

## மைய வங்கி பொதுமக்களுடன் கொள்ளும் தொடர்பு

அரசியலாருடனும் பொதுமக்களுடனும் மைய வங்கியின் தொடர்பு பற்றிய புதுக் கருத்து இத் தொடர்பில் நிகழ்ந்துவரும் மாறுதல்களைக் காட்டுகின்றது. பழைய முறைப்படி மைய வங்கியர் மக்களுடன் கொண்டுள்ள தொடர்பு அதை (வெளிப் படையாகக் காட்டாமல்) 'பேசாப் பணியின் உறுப்பினராகவே' (members of silent service) காட்டிற்று. பாரம்பரிய மைய வங்கியர் கொள்கை பற்றிய நூலை எழுதவோ அல்லது கட்டுரை களைத் தயார் செய்யவோ அல்லது உரை நிகழ்த்தவோ மிகவும் தயங்கினர். அவர்கள் செயல்கள் மூலம் கொள்கையை விளக்கினர். இப்போக்கு சில நன்மைகளையும் சில தீமைகளையும் கொண்டிருந்தது. அமெரிக்காவில் தனி வங்கி முறையின் கீழ் (unit banking system) வங்கிகள் தனித்தனியே இயங்குகின்றன. தனித்தனியே இயங்கும் இவை மைய வங்கிக் கொள்கையைப் புரிந்துகொண்டு அத்துடன் ஒத்துழைக்கவேண்டும். ஆகையால் மைய வங்கியின் கொள்கை அவ்வப்போது விளக்கப்பட வேண்டும். ஆதலால் மைய வங்கி பின்பற்றப்போகும் கொள் கையை அவ்வப்போது பொதுமக்களுக்கு விளக்கும் மரபை அமெரிக்காவில் கடைப்பிடிக்கின்றனர். ஆங்கில நாட்டு மைய வங்கியைவிட அமெரிக்காவில் மைய வங்கியர் தம் கொள்கை யைப் பிரசுரங்கள் மூலம் வெளியிடுகின்றனர்; எடுத்து விளக்கு கின்றனர். இங்கிலாந்தின் மைய வங்கி முறை மைய அமைப்பைக் கொண்டிருப்பதால் (centralised) கொள்கை விளம்பரம் தேவை யில்லை. மைய வங்கி வாடிக்கையர் நம்பிக்கையையும், அரசு வங்கிகள், வெளிநாட்டு அரசுகள் இவைகளுடைய நம்பிக்கை யையும் கொண்டிருக்கவேண்டும். அடிக்கடி கொள்கையை விளக்காமல் தன் செயலைமட்டும் புரிந்தால் பிறர் நன்மதிப்புக்கும், நம்பிக்கைக்கும் பாத்திரமாகலாம் என்று கருதினர் போலும். இவ்வழக்கத்தைத் தீவிரமாகக் கடைப்பிடித்ததன் விளைவாக

இங்கிலாந்து வங்கியின் அறிக்கை—'மைய வங்கியின் அறிக்கை' (Central Bank Report) மற்றவைகளுடன் ஒப்பிடும்போது மிகவும் கவர்ச்சியற்றிருந்தது.[1] ஆனால், இவ்விஷயத்தில் கருத்துகள் இப்பொழுது மாறிவருகின்றன. மைய வங்கிகள் திரைமறைவாக இயங்கவேண்டுமென்ற பழைய கருத்து தற்காலத்திற்குஒவ்வாது. கடந்த 20 அல்லது 25 ஆண்டுகளாகப் பொதுமக்களுக்குத் தம் கொள்கைகளை விளக்குவதை மைய வங்கிகள் மேற்கொண்டுள்ளன. 'கொள்கைகளை விளக்குவதும், விவாதிப்பதும், முறை கூறுவதும்' பயனுள்ளவை எனக் கருதப்படுகின்றன. மக்கள் வங்கியுடன் ஒத்துழைப்பதற்கு இப்போக்கு உபயோகமாக இருக்கின்றது.[2] மேலும், மைய வங்கியும் அரசும் கொள்கை பற்றிய ஒரு விஷயத்தில் கருத்து வேற்றுமை கொண்டிருந்தால் இரு கருத்துகளையும் மக்கள் மத்தியில் வைக்க வேண்டும் என்றும் அவர்களுடைய எண்ணங்களை அறிய வேண்டும் என்றும் சிலர் கூறுகின்றனர். 1930-40ஆண்டுகளில் செய்ததைவிட இன்று இங்கிலாந்தின் மைய வங்கி தன் கொள்கையைத் தெரிவிக்கின்றது. முற்காலத்தைக் காட்டிலும் இன்று பத்திரிகைகளுடன் அதிக நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கின்றது. பல சந்தர்ப்பங்களில் இங்கிலாந்தின் வங்கி பத்திரிகைகளுக்குச் செலாவணிக் கொள்கை, வங்கிவீதம் (bank rate) முதலியவை பற்றிய செய்திகள் தருகின்றன. நடைமுறைக் கொள்கை, வளர்ச்சி முதலியவை பற்றிய விளக்கவுரையை ஆண்டில் இரண்டு மூன்று முறை வங்கியின் ஆளுநர் (Governor) நிகழ்த்துவது சாதாரணமாகி விட்டது. 'பொருளாதார நிலை' (economic survey) பற்றி அரசு கொடுக்கும் விளக்கத்துக்கு மாறான கருத்தை வங்கி கூறுவது தவறில்லை என்று கோபால்டு பிரபு (Lord Cobbold) ராட்கிளிஃப் குழுவினரிடம் சாட்சியம் அளித்தார்.[3] கோபால்டு பிரபு நெடுங்காலம் இங்கிலாந்துத் தலைமை வங்கியின் ஆளுநராகத் தொண்டாற்றி அண்மையில் ஓய்வு பெற்றார். அவர் பொது மக்களுடன் தொடர்புகொள்ளத் தயங்கவில்லை. ராட்கிளிஃப் குழுவிடம் சாட்சியம் கொடுத்தபோது பேராசிரியர் சேயர்ஸ் (Prof. Sayers) ஆளுநருடைய பொது உரை (public speeches) ஒரு நோக்கம் கொண்டிருக்கின்றது என்று குறிப்பிட்டார். அதாவது மைய வங்கி அரசியலாருக்கு அறிவுரை கொடுப்பதோடு மட்டுமல்லாமல் கொள்கை பற்றிய எண்ணம்

[1] R. S. Sayers, 'Central Banking after Bagehot', p. 44.

[2] Lord Cobbold 'Some Thoughts on Central Banking', Journal of the Institute of Bankers, February 1963.

[3] Q. 746, Radcliffe Committee (Oral Evidence).

ஒன்றையும் ஏற்படுத்தலாம்.[1] இரகசியமாகப் பிறரறியாமல் மைய வங்கி இயங்கும் பழைய பழக்கம் தற்கால மைய வங்கி பற்றிய கருத்துக்கு முரணாகும் இருக்கின்றது. தற்காலத்திய கருத்து இன்று எங்கும் பரவலாக ஏற்பட்டிருக்கின்றது. ஒரு மைய வங்கி எந்த அளவு தன் மௌனத்தை விடுக்கின்றதோ அந்த அளவு தன் கொள்கையை விளக்குகின்றது. நாட்டின் வங்கி முறையும், நிதியும், அரசு, மைய வங்கிச் சட்டத்தின் மூலமும் பழக்கவழக்கங்கள் மூலமும் அளித்திருக்கும் பொறுப்பு களும் அதன் மனப்பாங்கை நிர்ணயிக்கும். இப்போக்கை மைய வங்கியினர் வரவேற்கின்றனர். பழைய காலத்தில் மைய வங்கியின் பணிகள் ஒருவகைத் திரை மறைவுக்குட்பட்டிருந்தது. சென்ற 30 ஆண்டுகளில் இந்த 'அற்ப இரகசியத்தை' (silly air of mystery) விடுத்துத் தம் செய்முறைகளை மக்களுக்கு எடுத்து விளக்குகின்றனர். முன்னர் இருந்ததைப்போல் இன்று இங்கிலாந்து வங்கியின் அறிக்கைகள் கவர்ச்சி குறைந்திருப்ப தில்லை. ஐரோப்பிய, ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளுடன் ஒப்பிடும் போது இங்கிலாந்து வங்கியின் அறிக்கை இன்றும் 'ஒரு வரட்டுத் தாளாக' (barren document) இருக்கின்றது. எனினும், அதை விரிவாக்கவும் கொள்கை பற்றிய சிந்தனைகளை அதில் சேர்க்கவும் இன்று முனைந்திருக்கின்றனர்.[2]

திரு. எச். வி. ஆர். ஐயங்கார் (Mr. H. V. R. Iyengar) ரிசர்வ் வங்கியின் ஆளுநராக இருந்தபோது 'இரகசியப் பணியின்' (silent service) உறுப்பினராகப் பணிபுரியவில்லை. தொழிலதிபர்கள், பேராசிரியர்கள், வங்கியர் முதலியோர் முன்னிலையில் அவர் உரை நிகழ்த்தினார். 'Monetary Policy and Economic Growth' என்ற தலைப்பில் ஒரு நூலையும் எழுதினார்.[3] அவர் எழுதும்போதும் உரை நிகழ்த்தும்போதும் ரிசர்வ் வங்கியின் கொள்கையை விளக்கவும், அது அரசின் நிதிக்கொள்கையை எப்படிப் பாதிக்கும் என்று கூறவும் தயங்கியதில்லை. அவருக்குப்பின் ஆளுநர் பதவி வகித்து வருவோரும் இவ்வகையில் அவரைப் பின்பற்றுகின்றனர்.

தற்காலத்தில் பொருளாதார வளர்ச்சிக்காக அரசு பற்றுக் குறை நிதியாக்கம் (deficit financing) செய்கின்றது. இந்த நிலை யில் ஸ்திரத்தன்மையைப் (stability) பேணுவதற்கு எவ்வளவு தூரம் நிதிக் கட்டுப்பாடு (financial discipline) தேவை என்பதை மிகைப்படுத்த முடியாது. இந்த முறையில் மைய வங்கி

[1] Q. 773, Radcliffe Committee (Oral Evidence).

[2] Radcliffe Report Committee vol. 1, p. 46.

[3] Published by Vora & Company (Bombay) in 1962.

ஒரு பெரும் பொறுப்பைக் கொண்டிருக்கின்றது. மைய வங்கியர் செலாவணி நிலையை உற்று நோக்கிய வண்ணம் இருத்தல் வேண்டும்; பற்றுக்குறை நிதியாக்கம் ஒரு வரம்பை மீறும்போது அதனால் விளையும் ஆபத்தைக் காட்டி அரசியலாரை எச்சரிக்க வேண்டும். அரசுக்கு இரகசிய ஆலோசனை கூறுவதோடு மட்டுமல்லாமல் அதன் கொள்கையை விளக்கும் ஆபத்துகளை வெளிப்படையாக எடுத்துக் காட்ட வேண்டும். பாக்கிஸ்தானின் ஸ்டேட் வங்கியின் ஆளுநர் பணவீக்கத்தின் தீய விளைவுகளையும், அரசின் செலவைக் குறைக்க வேண்டிய அவசியத்தையும், பற்றுக்குறை நிதியாக்கத்தைக் குறைக்க வேண்டிய அவசியத்தையும் வெளிப்படையாகக் கூறத் தயங்கியதில்லை.[1] இப்போக்கு கோபால்டு பிரபுவின் கொள்கையை ஒத்திருக்கின்றது. அவர் ராட்கிளிஃப் குழுவிடம் சாட்சியம் அளிக்கையில் வங்கியாளுநர் அரசியல் கட்சிச் சார்பற்றிருக்க வேண்டும் என்றும், ஆனால் அரசின் கொள்கையைச் சரிவர மதிப்பிட்டு அதன் குறையை வெளிப்படையாகக் கூறுவதற்குத் தடையேதும் இருக்கக்கூடாதென்றும் கூறினார்.[2]

ஆனால், மைய வங்கியரின் சுயேச்சைப் போக்கை அளவு கடந்து வற்புறுத்தக்கூடாதென்பதை மேலும் சீரிய முறையில் விளக்குவது கடினம். இக்கொள்கை பல நன்மைகளை விளைவிக்கும். கொள்கைகளை மக்கள் அறிய வாய்ப்புகள் ஏற்படுகின்றன. செலாவணிக் கொள்கைக்கு அவர்களுடைய ஆதரவை நாடலாம். 'உயர்நிதிக் கொள்கை' (high finance) யாருக்கும் விளங்காத புதிராக இல்லாமல் எல்லோரும் அறியும் வகையில் அமைந்திருக்கலாம். ஆனால், பொருளாதாரக் கொள்கையைத் தீட்டும் பொறுப்பு அரசு ஏற்க வேண்டியதாகும் என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். ஒரு மைய வங்கியர் தம் செலாவணிச் செயல்களை ஆர்வத்துடன் விளக்கும் போது அது அரசின் கொள்கைக்கு மாறாக இருந்தால், பிரச்சினைகள் தெளிவடையா; மாறாக குழப்பம் ஏற்படலாம். மைய வங்கியரும் கருவூலமும் தம் வாதங்களையும், விவாதங்களையும் தமக்குள் நடத்தாமல் வெளிப்படையாக நடத்தினால் கருத்து வேற்றுமைகள் ஏற்படும்; அவர்களிடையே உள்ள உறவும் பாதிக்கப்படும். செலாவணிக் கொள்கை சுமுக முறையில் இயங்குவதற்குத் தடை ஏற்படும். கொள்கை பற்றிய கருத்து வேறுபாடுகளை

[1] பாக்கிஸ்தானிய ஸ்டேட் வங்கியின் ஆளுநர் நிகழ்த்திய உரை, பாக்கிஸ்தானின் வங்கி நிலையங்களின் 7ஆவது ஆண்டுக் கூட்டத்தில், Journal of the Institute of Bankers, Pakistan, January 1959. p. 62-63.

[2] Q. 761. Radcliffe Committee (Oral Evidence).

மைய வங்கியர் அடிக்கடி பேச்சு வார்த்தை மூலம் நீக்க முனையலாம். மான்டகு நார்மன் (Montagu Normon) கூறுவது போல் வெறுக்கத் தக்க அளவுக்குக் கூட அதன் கருத்தை மைய வங்கியர் அரசிடம் வற்புறுத்தலாம். ஆனால், இறுதியில் அது அரசாங்கத்தின் அதிகாரத்துக்குட்பட்டதேயாகும். இறுதி முடிவை வெளியிடும் பொறுப்பை அரசுக்கு விட்டுவிடவேண்டும். பொதுமக்களுக்கு நன்மை பயக்கும் கருத்துகளை மைய வங்கியர் கூறவேண்டி இருந்தால் அதை எப்போது கூறலாம் என்பதையும் அவரே தீர்மானம் செய்யவேண்டும். வாரந் தோறும், அல்லது மாதாமாதம் அல்லது ஆண்டுக்கொரு முறை விளக்கவுரை கொடுக்கவேண்டும் என்ற வலுக்கட்டாயம் இருக்கக்கூடாது.

மைய வங்கி—அரசு உறவு

அரசுக்கும் மைய வங்கிக்கும் இடையே நிலவும் உறவு தற்காலத்தில் மாறி வருகின்றது. இந்த மாற்றமே தற்காலத்திய மைய வங்கி வளர்ச்சியின் மிகப் புரட்சிகரமான அம்சமாகும். முதல் உலகப் போருக்கு முன்னரோ அல்லது அதை அடுத்து வந்த ஆண்டுகளுக்குப் பின்போ, மைய வங்கி சுதந்திரமாக இயங்க வேண்டும் என்ற கருத்து வலியுறுத்தப்பட்டது. தற்காலத்திய கருத்து இதற்கு மாருக இருக்கின்றது. மைய வங்கி அரசின் உடமைக்கும் கட்டுப்பாட்டிற்கும் அப்பாற்பட்டிருக்க வேண்டும் என்பதைவிடப் பிரபலமான மைய வங்கி பற்றிய கருத்தேதும் அன்று நிலவவில்லை. 1920-ல் பிரஸ்ஸல்ஸில் (Brussels) நடந்த மாநாட்டிலும் 1922-ல் ஜெனேவாவில் (Genoa) நடந்த மாநாட்டிலும் நிறைவேற்றிய தீர்மானங்கள் இக் கருத்தைத் தெளிவாக்கின. முதல் உலகப் போருக்குப்பின் தோன்றிய அல்லது புதிய முறையில் அமைக்கப்பெற்ற மைய வங்கிகள் பற்றிய சட்டங்கள் பெரும்பாலும் இக் கருத்தை அடிப்படையாகக் கொண்டன.

மைய வங்கிக்கும் அரசுக்கும் இடையே உள்ள உறவு பற்றிய வரலாறு ஒரு சுவையான விஷயமாகும். இந்த வரலாறு தலையிடாக் கொள்கையின் (laissez faire) வளர்ச்சியையும், வீழ்ச்சியையும் பிரதிபலிக்கின்றது. தலையிடாக் கொள்கையைப் பொருளாதாரத் துறையில் அமல் செய்த பிறகு மைய வங்கியின் நிருவாகத்திலும் இது செல்வாக்குப் பெற்றது. 19ஆவது நூற்ருண்டின் இடைப்பகுதிக்குள் எங்கும் பரவிவிட்டது. தலையிடாக் கொள்கையின் இன்றியமையாத கிளை முடிவு, ஒரு நாட்டில் மைய வங்கி தோன்றினல் அது அரசியல் சார்பற்றுத் தனித்து

இயங்கவேண்டும் என்பதாகும். இங்கிலாந்தின் தலைமை வங்கியின் வளர்ச்சி இக் கருத்தை நன்கு விளக்குகிறது. ஊதாரிச் செலவு செய்த அமைச்சர்கள் த்ரெட் நீடில் தெருவில் (Thread-needle Street) உள்ள மாதின் அன்பைப் பெற முனைந்தனர்; அவளும் இவ்வமைச்சர்களின் ஆதரவை வங்கியின் சாசனம் புதுப்பிக்கப்படும்போது நாடினுள் என்று கூறுவதுண்டு. செலாவணிக் கட்டுப்பாட்டைச் செயல்படுத்துவதில் அரசின் திறமையின்மையை மெய்ப்பிக்க அரசுக்கும் மைய வங்கிக்குமிடையே இருந்த உறவிலிருந்து சில நிகழ்ச்சிகளை எடுத்துக்காட்டினர். இதிலிருந்து மைய வங்கி தனித்து இயங்கவேண்டுமென்ற முடிவுக்கு வந்தனர்.[1] முதல் உலகப் போர் தொடங்கும் வரை இக் கருத்து வளர்ந்தது. போர்க்காலத்தில் அரசியலாரின் கட்டுப்பாடு மைய வங்கியைப் பாதித்தது என்ற எண்ணம் மேற்குறிப்பிட்ட கருத்துக்கு ஒரு வலிமையை அளித்தது. மைய வங்கியின் அலுவல்களில் தலையிடுவதற்கு அரசாங்கத்திற்கு அதிகாரம் கொடுக்கத் தயங்கினர். போர்ப் பிற்காலத்தில் நிறுவப்பெற்ற மைய வங்கிகள் அரசின் உடைமைக்கும் கட்டுப்பாட்டுக்கும் அப்பால் இருந்தன. பழைய காலத்திய மைய வங்கிக் கோட்பாடு மைய வங்கியின் அரசியல் சுதந்திரத்தை வலியுறுத்திற்று.[2]

அரசு செலாவணி வெளியீட்டையும் கட்டுப்பாட்டையும் திறமையுடன் செய்யமுடியும் என்பதைக் குறைத்தும் மைய வங்கியின் திறமை மிகைப்படுத்தியும் விட்டமை சமீபகாலத்தில் தெரிய வந்தது. அரசின் செலாவணி நிருவாகத்தில் ஏற்பட்ட குறைபாடுகளைச் சுட்டிக் காட்டினர். ஆனால், பணமார்க்கெட்டில் அரசியல் தலையீடு பெரும் சீர்கேட்டுக்குக் காரணமாக இருந்ததென்று கூறமுடியாது. ஒழுங்கான நிதி நிருவாகத்திற்குச் சூழ்நிலை இல்லாதபோது அரசின் தலையீடு அவசியமாயிற்று. நாட்டுப் பொருளாதாரத்தில் சாதாரண நிலை இருக்கும்போது, மற்றத் துறைகளில் அதன் குறுக்கீடு ஏற்படுத்தும் இடர்ப்பாடுகளை விடச் செலாவணித் துறையில் அதன் செயல்கள் மோசமான விளைவுகளை ஏற்படுத்தியதாகத் தெரியவில்லை.[3] செலாவணி வெளியீடு பல நாடுகளில் அரசின் வசம் இருந்தது. அரசாங்கம் இவ்வதிகாரத்தைத் தவறுகப் பயன்படுத்தவில்லை. இங்கிலாந்து

[1] K. R. Bopp. American Review Supplement, March, 1944, பக்கம் 262.

[2] Kisch and Elkin, 'Central Banks', (1932) பக்கம் 2, ப. 27.

[3] A. F. W. Plumptre 'Central Banking in the British Dominions'

வங்கியின் வரலாற்றிலிருந்து சில நிகழ்ச்சிகளை எடுத்து அரசின் திறமையின்மையையும், மைய வங்கியின் திறமையையும் நிரூபிக்கப் பலர் முயன்றிருக்கின்றனர். ஆனால், 1800 முதல் 1860 வரை 'ஒரு மைய வங்கி செய்ய வேண்டியவைகளை இங்கிலாந்து வங்கி பல சந்தர்ப்பங்களில் செய்யத் தவறியது' என்று பேராசிரியர் வைனர் குறிப்பிடுகின்றார்.[1] 1822-ல் நிகழ்ந்த மந்த காலத்தில் அரசு வங்கி வீதத்தை 5%-லிருந்து 4%-க்குக் குறைக்கவேண்டுமென்று மைய வங்கியைக் கட்டாயப்படுத்தியது. செலாவணி வெளியீட்டைப் பெருக்கவும் ஏற்பாடு செய்துள்ளது.[2]

அரசுக்கும் மைய வங்கிக்கும் இடையே அடிக்கடி நிகழ்ந்த சச்சரவுகளை மைய வங்கியின் வரலாறு தருகின்றது. பொதுவாக அரசு செலாவணிப் பெருக்கத்தை விரும்பியபோதெல்லாம் மைய வங்கி செலாவணிச் சுருக்கத்தையே விரும்பியது. சச்சரவுகள் ஏற்பட்டன. போர்க்காலத்தில் அரசாங்கங்கள் ஏராளமாகக் கடன் வாங்கின. பணவீக்கம் (inflation) ஏற்பட்டது. இத்தகைய சந்தர்ப்பங்கள் தெய்வாதீனம் அல்லது இயற்கை விதியின் விளைவுகள் என்று ஒரு காலத்தில் நம்பினர், அக்காலத்தில் மைய வங்கிகள் குறை காணுதலுக்கு இலக்காகவில்லை. ஆனால், 'எளிய பணக்கொள்கை' (easy money conditions) மந்தகாலத்திற்குகந்தது என்பது தற்காலத்திய கருத்து. இந்தச் சந்தர்ப்பங்களில் மைய வங்கியைவிட அரசே சரிவரச் செயல் புரிய முடியும் என்பதற்குச் சான்றுகள் உள. மாபெரும் மந்தத்திற்குப் (great depression) பிறகு மைய வங்கிகளை அரசின் உடைமைக்கும் கண்காணிப்பிற்கும் உட்படுத்த வேண்டுமென்ற கருத்து வலிமை பெற்றது. இது பழைய கருத்துக்கு மாறானது. மந்தத்தைத் தடுத்துப் பொருளாதார மீட்சியைத் துவக்குவதற்கு செலாவணிக் கொள்கை மட்டும் போதாது, நேர்முக நடவடிக்கைகளும் தேவை என்பது தெளிவாகி வருகின்றது. இவைகளை அரசு எடுக்கவேண்டும். மைய வங்கியர் பழைய காலப் போக்கில், குறுகிய பார்வையுடன் எடுத்த நடவடிக்கைகள் தீய விளைவுகளை ஏற்படுத்தின. பொன் திட்ட (Gold Standard) காலத்திய இலட்சியங்களை விடுத்துப் புதிய இலட்சியங்களைக் கொண்டு செலாவணிக் கொள்கையை இக்காலத்தில் வகுக்கின்றனர். செலாவணிக் கொள்கையின் அயல்நாட்டு நோக்கங்களுக்கும் உள்நாட்டு நோக்கங்களுக்கும் இடையே இருந்த முரண்பாட்டைத் தீர்த்துவிட்டனர். இன்று உள்நாட்டுச் சம

[1] J. Viner, 'Studies in the Theory of International Trade', p. 254.

[2] R. G. Hawtrey 'A Century of Bank Rate', p. 14.

நிலையே அயல்நாட்டு இலட்சியங்களைவிட முக்கியமானவை. எனவே, ஒரு நூலாசிரியர் கூறியுள்ளபடி இதன் விளைவு தனித்துச் சுதந்திரமாக இயங்குவதற்கு ஒரு முடிவு கட்டிவிட்டனர்.[1]

மந்தத்தை அடுத்து வந்த ஆண்டுகளில் மைய வங்கிகளை அரசின் உடைமைக்கும் கட்டுப்பாடுகளுக்கும் உட்படுத்த வேண்டும் என்பதற்கு ஓர் இயக்கம் தோன்றியது. நெடுங்காலமாக இயங்கி வந்த மைய வங்கிகள் மட்டுமல்லாமல் அண்மையில் தோன்றியவைகளும் சில ஆண்டுகளில் அரசுடைமையாயின. 1818-ல் இருந்து தனியார் துறையில் இயங்கிய நேஷனல் பாங்க் ஆப் கோபன்ஹேகன் (National Bank of Copenhagen) 1936-ல் அரசுடைமையாயிற்று நியூஜிலாந்தின் ரிசர்வ் பாங்கும் (Reserve Bank of New Zealand) பாங்க் ஆப் கனடாவும் (Bank of Canada) பொதுத் துறையில் சேர்ந்தன.

மைய வங்கிமீது அரசின் கட்டுப்பாடு அதிகரிக்கவே அது நாட்டுடைமையானதோடு மட்டுமல்லாமல் அதன் நிருவாகத்திலும் அரசாங்கத்தின் பங்கு பெருகியது. வங்கியின் மூலதன உடைமை தேசியமயமாகாத நாடுகளில் கூட அதன் நிருவாகத்தில் அரசியலார் நேரடியாகவும், மறைமுகமாகவும் பங்கேற்றனர். பாங்க் ஆப் க்ரீஸ் (Bank of Grece), டென்மார்க்கின் ஸ்டேட் வங்கி (State Bank of Denmark) இவ்விரு நிறுவனங்களுடைய சட்டங்களைத் திருத்தியமைக்கும்போது மேற்குறிப்பிட்ட மாறுதல்களைப் புகுத்தினர்.[2] அமெரிக்காவில் 1935ஆம் ஆண்டின் வங்கிச் சட்டப்படி (The Banking Act of 1935) அந்த ஆண்டிலிருந்து மைய ஆளுநர் குழுவின் (The Board of Governors) அதிகாரம் கூடியது. இக்குழு பெடரல் அரசின் பதிவியாகும். இதன் அங்கத்தினர்களைக் குடியரசு தலைவர் செனட் சபையின் (Senate) அனுமதி பெற்று நியமிப்பார்.

அரசின் கட்டுப்பாடும், பங்கும் கொள்கையைப் புதிய முறையில் உருவாக்கியது. வங்கி அரசுக்கு நிதியுதவியளிப்பது தக்க மாற்றம் பெற்றது. இத் தலையீட்டை மைய வங்கியர் அவசிமற்ற குறுக்கீடு, தம் சுதந்திரத்திற்குக் குந்தகம் விளைவிக்கக் கூடியது என்று வெறுக்கவில்லை. இது ஒரு குறிப்பிடத் தக்க விஷயமாகும். இதற்கு மாறாக அவை அரசின் விருப்பத்திற்கிணங்கித் தம் கொள்கைகளை அமைத்துக் கொள்ளத் தயாராக

[1] F. G. Johnson, 'The Treasury and the Monetary Policy' 1933-38, p. 6.

[2] Sec 6, The National Bank of Denmark Act, 7 April 1936; Federal Reserve Bulletin, July 1939, p 537.

இருக்கின்றன. இங்கிலாந்தின் தலைமை வங்கியைவிடத் தனித்து இயங்கிய மைய வங்கியே இல்லை. 1936-ல் விடுத்த அறிக்கையில் அதன் கவர்னர் அரசின் ஆணைக்குட்பட்டு அதன் கொள்கையை நிறைவேற்றத் தயார் என்று அமைச்சர்களிடம் கூறினர். இக்கூற்று இங்கிலாந்து வங்கியை அரசுக்குட்பட்ட ஒரு துறைபோல் காட்டியது.[1] அரசின் செலாவணிக் கொள்கையைச் செயல்படுத்தும் ஒரு கருவியாகவே அது பணிபுரிகின்றது. அவ்வப்போது தொழில்நுட்பச் செய்திகளையும் ஆலோசனைகளையும் அளிக்கின்றது. மேற் குறிப்பிட்ட வாக்குறுதி ஓராண்டுக்குப் பிறகு மீண்டும் கீழ்க்கண்டவாறு உறுதிசெய்யப்பட்டது. 'நாம் நிதியமைச்சரை நோக்கியே செயல்புரிய வேண்டும். எல்லாவற்றிலும் அவருடைய கோரிக்கைகளே நம் செயலுக்கு வழிகாட்டியாகும்'.[2]

செலாவணி, வங்கிக் கொள்கைகளை நிறைவேற்றுவதில் கருவூலம் தலைமை பெற்றதுடன் அரசுக்கு வேண்டிய நிதியையும் தரும்படி வங்கியை வற்புறுத்திற்று. மாபெரும் மந்தமும் அதையடுத்துப் பொன் திட்டத்தை (Gold Standard) நாடுகள் கைவிட்டதும் உலகில் நிதி நிலையில் பெரும் குழப்பத்தை ஏற்படுத்தியது. நாடுகளின் பெருகும் தேவைகளுக்கு வேண்டிய நிதியுதவியை மைய வங்கிகள் அளிக்க வேண்டியிருந்தன. பிரான்ஸ், போலந்து, ஜெர்மனி நாடுகளில் மைய வங்கி கருவூலத்திற்கு அளிக்கக்கூடிய நிதியுதவியின் உச்ச வரம்பை உயர்த்துவதற்காகச் சட்டத்தைத் திருத்த வேண்டியதாயிற்று.

மந்த காலத்தைப் போலவே போர்க் காலத்திலும் அரசு மைய வங்கியிடம் அதிக நிதியுதவியை நாடிற்று. போர் தொடங்கியபோது, போரில் ஈடுபட்ட நாடுகளிலும், நடுநிலை நாடுகளிலும், மைய வங்கிகள் அரசுக்கு வேண்டிய விசேஷ நிதித் தேவையைப் பூர்த்தி செய்ய வேண்டியதாயிற்று. இதன் விளைவாக மைய வங்கிச் சட்டங்களைத் திருத்தினர். பல நாடுகளில் முன்னர் அரசுக்கு அளிக்கும் நிதியுதவியின் உச்ச வரம்பை உயர்த்தினர். மேலும் கடன் தர அதிகாரம் பெற்றன. பிரான்சில் இராணுவச் செலவுகளைச் சமாளிக்க விசேஷ நிதியுதவியின் உச்ச வரம்பை (1940-ல்) 50,000 மிலியன் பிராங்குகளிலிருந்து (1944-ல்) 4,26,000 மிலியனுக உயர்த்தினர்.

[1] The Economist, 10th October 1936.

[2] World Economic Survey, 1942—4, p. 183.

### அரசைச் சார்ந்துள்ள மைய வங்கியின் நிலைமையைச் சட்டப்படி நிர்ணயித்தல்

அரசுக்கும் மைய வங்கிக்கும் இடையே இப்படி உறவு மாறி வரும்போது காணப்படும் ஒரு முக்கிய விஷயம் இந்த உறவைச் சட்ட பூர்வமாக்கும் போக்காகும். இரண்டாவது உலகப் போருக்கு முன் இப்படி ஒன்றுமே செய்யப்படவில்லை. போர்க் கால நிதி நெருக்கடி காரணமாகச் சட்டங்கள் மூலம் மைய வங்கி மீது உள்ள கருவூலத்தின் அதிகாரங்களை வரையறுத்தனர். உதாரணமாக நியூஜிலாந்தின் ரிசர்வ் வங்கி பொதுத் துறையில் இயங்கியது. அதன் ஆளுநர் குழுவினர் அரசின் கட்டளைகளைச் செயல்படுத்த வேண்டும் என்ற சட்டத் திருத்தமொன்றைக் கொணர்ந்தனர். சமீப காலத்திய மைய வங்கி பற்றிய சட்டங்கள் அல்லது திருத்தங்களனைத்தும் மைய வங்கி—அரசு உறவை வரையறுத்துள்ளன. எனவே, இவ்வுறவு நடைமுறைப் பழக்கமாக மட்டுமல்ல, இதை விளக்கும் சட்டங்களும் இன்று இருக்கின்றன. அரசு எவ்வளவு நிதி பெற முடியும் எந்த அளவு நிருவாகத்தில் தலையிட முடியும் என்பவைகளை மட்டும் விளக்கவில்லை. கருவூலத்துடன் வங்கிகளுடைய தொடர்பைத் தெளிவாக விளக்குகின்றன. அவை சிலபோது கருவூலத்திற்கு அடங்கி நடக்கும் நிலைமை உண்டாயிற்று. உதாரணமாக யுகோஸ்லேவியா, ருமேனியா நாட்டு மைய வங்கிகள் அரசுக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டுமென்று சட்டம் திட்டவட்டமாகக் கூறுகின்றது. இங்கிலாந்தின் வங்கி, இந்திய ரிசர்வ் வங்கி போன்ற நிறுவனங்களுடன் அரசு கலந்து ஆலோசித்த பின் அவைகளுக்கு அரசினர் ஆணைகள் கொடுப்பர். சூடான் நாட்டின் வங்கி (The Bank of Sudan) பற்றிய சட்டம் இங்கிலாந்து, இந்தியச் சட்டங்களை ஒத்திருக்கின்றது. அந் நாட்டின் நிதி, பொருளாதார அமைச்சகம் வங்கியுடன் கலந்து ஆலோசித்தபின் அதற்கு அவ்வப்போது ஆணைகள் கொடுக்கலாம். தேசிய நலன்கள் பற்றிய விஷயங்களில் அரசு அறிவுரை வழங்கலாம்.[1] இந்த ஆணைகளை ஆளுநர் குழு நிறைவேற்ற வேண்டும். இதற்கு மாறாக அண்மையில் சுதந்திரம் பெற்ற கானா, ரொடிசியா, நயாசாலாந்து போன்ற நாடுகள் ஆங்கில மாபில் வந்தபோதிலும் சட்டங்கள் மூலம் மைய வங்கியுடன் கொள்ளும் தொடர்பை விளக்கவில்லை. நெதர்லாந்தில் நிதியமைச்சகம் வங்கிக் குழுவுடன் கலந்தாலோசிக்க வேண்டும். இதன் பின்னர் வங்கிக்கு ஆணைகளைச் சட்டப்படி பிறப்பிக்க வேண்டும். ஆணை கொடுப்பது அரசின் அதிகாரம் மட்டுமல்ல,

[1] Art. 20, The Bank of Sudan Act, 1959.

கடமையாகும்.[1] ஆனால், அமைச்சர் பெற்றுள்ள அதிகாரத்திற்கு ஒரு வரம்புண்டு. வங்கி ஆணைக்கு மறுப்புக் கூறினால் அது மன்னருக்கு மனுக் கொடுக்கலாம். ஆஸ்திரேலிய ரிசர்வ் வங்கியும் (The Reserve Bank of Australia), சிலோன் மைய வங்கியும் (The Central Bank of Ceylon) தம் அரசுகளுடன் கருத்து வேற்றுமை கொண்டால் இவைகளுக்குத் தீர்வு காணச் சட்டங்கள் சிக்கலான வழி முறையை வகுத்துள்ளன. ஆஸ்திரேலியாவில் பேச்சு வார்த்தைகள் மூலம் இரு சாராரும் சச்சரவுகளைத் தீர்க்க முடியாவிடில் வங்கி தன் கருத்தினை அரசுக்கு எழுதிக்கொடுக்க வேண்டும். அரசு இவைகளை ஏற்க மறுக்கலாம். ஆனால், தன் முடிவுக்கு முழுப் பொறுப்பேற்க வேண்டும்.[2] ஆஸ்திரேலியாவில் சட்டம் இங்கிலாந்தைவிட உயர்ந்த இடத்தை மைய வங்கிக்குக் கொடுத்திருக்கின்றது. இங்கிலாந்தின் தலைமை வங்கி, சட்டப்படி அரசுக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டும். இங்கிலாந்தில் கருத்து வேற்றுமையைப் பார்லிமெண்டு முன்னர்க் கொணர வேண்டும். சிலோன் மைய வங்கிச் சட்டம் செலாவணிக் குழுவுக்கு (Monetary Board) செலாவணிக் கொள்கையை வகுக்கும், நிறைவேற்றும் முழு உரிமையைக் கொடுத்திருக்கின்றது. குழுவின் கொள்கை பொது மக்களுக்கு நன்மை பயக்கக் கூடியதா என்பது பற்றிக் கருத்து வேற்றுமை ஏற்பட்டால் குழுவும் நிதியமைச்சரும் கலந்தாலோசித்து ஓர் உடன்பாட்டை அடைய முயல வேண்டும். உடன்பாடு ஏற்படத் தவறினால், அரசின் கொள்கையைக் குழு செயல்படுத்த வேண்டும். அரசு இதற்கான முழுப் பொறுப்பேற்கும்.[3] இரு சாராருக்கும் கருத்து வேற்றுமை இருப்பின், அரசினர் வங்கியுடன் கலந்தாலோசிக்க வேண்டும். அதன் பின்னர் வங்கியருக்கு எழுத்து மூலம் ஆணை பிறப்பிக்க வேண்டும். இது ஒரு குறிப்பிட்ட காலத்திற்குட்பட்டது.

மைய வங்கிக்கும் அரசாங்கத்திற்கும் இடையே உள்ள உறவு பற்றிச் சட்டம் வரைய வழி செய்தல் போலப் பிற்காலத்தில் பல மைய வங்கிகள் நாட்டுடைமையானபோது காணப்பட்டது. 1931-ல் 10 மைய வங்கிகளும், 1939-ல் 15 நிறுவனங்களும், 1945-ல் 19 மைய வங்கிகளும் அரசின் உடைமையில் இருந்தன. 1948-ல் மொத்த எண்ணிக்கை 57-ல் (சுதந்திர

[1] Memorandum of Evidence submitted by the President of Netherlands Bank before the Radcliffe Committee, Evidences, Vol. I, p. 260.

[2] Hans Aufricht, 'Central Banking Legislation'; Reserve Bank of Australia Act, 1959, Part II, Sec II (1) - (7).

[3] ராட்கிளிஃப் குழுவினரிடம் சிலோன் மைய வங்கியர் (எழுத்து மூலம்) அளித்த சாட்சியம், பகுதி 1 பக்கம் 252

நாடுகளின் மைய வங்கிகள்) 36 தேசியமயமாக்கப் பெற்றன. இங்கிலாந்து இந்தியா, பிரான்சு, அர்ஜெண்டினு, ருமேனியா, யுகோஸ்லாவியா, செக்கோஸ்லாவியா, நெதர்லாந்து முதலிய நாடுகளில் இவை தேசியமயமானது குறிப்பிடத்தக்கது. பழைய வங்கிகள் அரசின் உடைமைக்குட்பட்டதோடல்லாமல், குடியேற்று நாடுகளில் நிறுவப்பெற்ற புதிய வங்கிகளும் அரசின் நிலையங்களாகவே இருந்தன. தென்கிழக்கு ஆசிய நாடுகளாகிய பர்மா, சிலோன், மலேசியா முதலியவைகளிலும், அண்மையில் விடுதலை பெற்ற ஆப்பிரிக்க நாடுகளாகிய கானு, நைஜீரியா, மொராக்கோ, ட்யூனிசியா, லிபியா, சூடான், தென் ரொடிசியா முதலியவைகளிலும் மேற்கிந்திய, ஜமைக்கா முதலிய நாடுகளிலும் மைய வங்கிகளுடைய மூலதனம் முழுவதையும் அரசே அளித்தது.

### தற்கால நடைமுறை நிலைக்கேற்றவாறு மைய வங்கிகள் அரசுடைமையாதல்

பழைய மைய வங்கிகள் அரசுடைமையானதால் அவைகளுடைய சட்டபூர்வமான நிலை மாறிவிட்டது என்று கருத முடியாது. பழக்கங்களையும் மரபுகளையும் ஒட்டி அவை முன்னர் எவ்விதம் இயங்கினவோ அதற்குச் சட்ட அதிகாரம் ஏற்பட்டது, இது வரலாற்றில் புகழ்பெற்ற இங்கிலாந்து வங்கிக்கும் பொருந்தும். பல ஆண்டுகளாகப் புழக்கத்திலிருந்த செயல்களுக்கு நாட்டுடைமைச் சட்டம் ஒப்புதல் அளித்தது. நடைமுறை நிலைமையை அரசுடைமை உறுதியாக்கிற்று என்று டாக்டர் டால்டன் அழகாகக் குறிப்பிட்டார். கருவூலத்தின் பழைய மனிதனுக்கும் (The Old Man of the Treasury), த்ரெட்நீடில் தெருவின் பழைய சீமாட்டிக்கும் (The Old Lady of the Threadneedle Street) இடையே நிலவிய நெருக்கமான உறவைச் சட்டம் ஏற்க வேண்டிய தருணம் வந்தது. இதை உணர்ந்த மாட்சிமை தங்கிய மன்னரின் அரசு அவர்களுக்குத் திருமணம் நடத்த வேண்டும்; இல்லையேல் அவர்கள் சேர்ந்து வாழ்வதை மற்றவர்கள் தவருகப் புரிந்து கொள்வர் என்று டாக்டர் டால்டன் குறிப்பிடுகின்ருர். இங்கிலாந்து வங்கியின் நிலையிலும் ஏனைய மற்ற வங்கிகளின் நிலையிலும் ஏற்பட்ட சட்டபூர்வ நிலையை அரசுடைமை என்று கூறுவது பொருத்தமாகாது. ஆனல், இவ்வாறு குறிப்பிடுவது கட்சியரசியலின் (Party Politics) மொழியாக இருக்கலாம்.[1] பொருளாதார அரசியல் சித்தாந்தங்களே சட்டங்கள் மூலம் மைய வங்கிகளின் நிதிநிலையை வரையறுக்க

[1] L. L. Minty in Journal of the Institute of Bankers, London, July 1964, p. 145.

உதவின.[1] ருமேனியா நாட்டுப் பொருளாதாரக் கொள்கையை சோவியத் நாட்டு அமைப்பை ஒட்டி வகுத்தனர். அரசுடைமை இக்கொள்கையின் ஒரு கூறு. இங்கிலாந்தில் லேபர் கட்சியினர் பதவியேற்றதும் அவர்கள் செயல்படுத்திய கொள்கையில் மைய வங்கியை நாட்டுடைமை செய்தல் ஒரு முக்கிய அம்சமாயிற்று. ஆஸ்திரேலியாவில் லேபர் கட்சி அதிகாரம் பெற்றதும் இதே முறையில் காமன்வெல்த் வங்கியை தேசியமயமாக்கினர். பின் தங்கிய வங்கி முறையிலுள்ள நாடுகளிலும் அரசுடைமையில் பொருளாதாரம் இயங்கும் நாடுகளிலும் தனிப்பங்குதார் உடைமையில் உள்ள வங்கிகள் பொருத்தமற்றவை குவாடிமாலா, பராகுவே நாடுகளில் அரசின் தலையீடு பரவலாக இருந்தது. மைய வங்கி நாட்டுடைமையானது இதன் ஒரு கூறாகும். அண்மையில் விடுதலை பெற்ற ஆப்பிரிக்க நாடுகளில் பொருளாதார முன்னேற்றத்தை விரும்பினர். இதன் விளைவாக மைய வங்கியை அரசியலாரின் ஆதிக்கத்திற்கும் உடைமைக்கும் உட்படுத்தினர். பெரும்பாலான நாடுகளில் ஆங்கில முறையான சுயேச்சையாகச் செயல்படும் வங்கி சுயேச்சைக்கு ஒவ்வாத அயல்நாட்டு அமைப்பாக இருந்தது. இம்முறை நாளடைவில் நலிவுற்றது. இங்கிலாந்து வங்கிமுறை சுதேச வங்கி முறைக்கு முரணாக இருந்தது. செலாவணி முறை அரசியலாட்சிக் குட்பட்டபோது மேற்குறிப்பிட்ட மாறுதல்கள் நிகழ்ந்தன. கனடா, நியூஜிலாந்து நாடுகளின் மைய வங்கிகள் நிறுவப்பட்ட உடனேயே நாட்டுடைமையாக்கப்பட்டன. மேற்குறிப்பிட்ட போக்கை இது தெளிவாக்குகின்றது[1]. இப்போக்கு இந்தியாவிலும் இருந்தது. 1920—30-ல் மைய வங்கி பொதுத்துறை நிறுவனமாக இருத்தல் வேண்டுமா அல்லது பங்குதார்களின் நிறுவனமாக இருத்தல் வேண்டுமா என்ற வாதம் நிகழ்ந்தது. இதன் விளைவாக 1927ஆம் ஆண்டில் நிறைவேற இருந்த ரிசர்வ் வங்கிச் சட்டத்தைக் (Reserve Bank Act) கைவிட்டனர்.

1870 முதல் 191- வரை பொன் திட்டம் (Gold Standard) அமலில் இருந்தது. பொன் திட்டம் தானாக இயங்கும் தன்மை (automatic) படைத்திருந்தது. வேலை நிறைவையும் (full employment), பொது நலப் பணிகளையும் வங்கி மேற்கொள்ள வேண்டிய கடமைகளாக அக்காலத்தில் கருதவில்லை. இந்த நிலையில் மைய வங்கி சுயேச்சையாக இயங்குவதைப் பற்றிப் பேசலாம். ஆனால், 1930-ல் பொன் திட்டத்தைக் கைவிட்டனர். மைய வங்கி செய்ய வேண்டியவைகளையும், அரசு அதனுடன் பகிர்ந்து கொள்ள வேண்டிய கடமைகளையும் புதிய முறையில்

[1] M, A. Kriz, 'Central Bank and the State To-day' in American Economic Review, September 1948, pp, 371-3.

மதிப்பிட்டனர். அரசினர் மிகுதியான பொறுப்புகளை ஏற்க வேண்டிய நிலை ஏற்பட்டது. வேலை நிறைவை ஏற்படுத்துவதும், பொருளாதார வளர்ச்சி வீதத்தைத் தூண்டுவதும் மைய வங்கிகளின் முக்கியமான கடமைகளாகி விட்டன. அரசின் பொருளாதாரக் கொள்கையுடன் தொடர்பு கொள்ளாத செலாவணிக் கொள்கைக்கு இடமே இல்லை. பொன் திட்டத்தின் கீழ் ஆளப்பட்ட வங்கி விதக் (bank rate) கருவியிலிருந்து வேறுபட்ட புதிய கருவிகள் தேவைப்பட்டன. இம்மாறுதல்களும், மற்றவையும் அரசியல் அதிகாரத்திற்கும் வங்கிக்குமிடையே உள்ள உறவுகளில் பெரிய மாறுதல்களைப் புகுத்தின. உதாரணமாக அரசினர் வேலை நிறைவுக் கொள்கையைப் பற்றுக்குறை நிதியாக்கத்தின் மூலம் நிறைவேற்றும்போது வங்கி வீதம் கட்டுப்பாட்டுக்குட்பட்டிருக்க வேண்டும். அதை உயர்த்தக்கூடாது. இந்த நிலையில் மைய வங்கி அரசாங்க இயக்கத்தின் ஒரு பகுதியாகிவிடும். இரண்டாவது உலகப் போருக்குப்பின் பெருகியுள்ள பொதுக் கடனும் (public debt) கருவூல-வங்கி உறவுக்குப் புதிய திருப்பம் கொடுத்திருக்கின்றது. பொதுக் கடன் நிருவாகம் இதற்கு முன் காணாத ஒரு பெரிய பொறுப்பைக் கருவூலத்திற்குக் கொடுத்திருக்கின்றது.

### இன்று மைய வங்கியின் பங்கு

ஐம்பது ஆண்டுகளுக்கு முன் மைய வங்கி–அரசு உறவு பற்றி இருந்த சித்தாந்தம் இன்று மாறிவிட்டது. மைய வங்கி அரசின் கருத்துகளுக்குச் செவி சாய்க்கக் கூடாது, தன் அலுவல்களைச் சுயேச்சையாகச் செய்ய வேண்டும் என்ற எண்ணம் இன்று மாறிவிட்டது. அது சொந்தக் கருத்துகளுடன் தனித்து இயங்கிய போதிலும் அரசியலாருடன் நெருங்கிய தொடர்புடன் நடந்து கொள்ள வேண்டுமென்பது தற்காலத்திய சித்தாந்தமாகும். செலாவணிக் கொள்கையும், பொது நிதிக் கொள்கையும் அரசின் பொருளாதாரக் கொள்கையின் கூறுகள். இதை வகுக்கவேண்டிய பொறுப்புப் பார்லிமென்டுடையது. ஒவ்வொரு நாட்டிலும் உள்ள சட்டங்களையும், வழக்கங்களையும் ஒட்டி நாடுகளிடையே இக்கருத்தின் கூறுகள் வேறுபடலாம். ஆனால், ஓர் ஒற்றுமை புலப்படுகின்றது. கொள்கை வகுத்தலும் செயல்படுத்துவதும் அரசின் பொறுப்பு என்பதை இன்று மைய வங்கியர் ஒத்துக்கொள்வர். எனினும், மைய வங்கியர் தம் கொள்கை வகுத்தலுக்கும், தம் நுட்ப வேலைகளுக்கும் பெருமளவு சுதந்திரம் அவசியம் வேண்டும் என்று வலியுறுத்துவர்.[1] வங்கியின் நிலையை நூலாசிரியர்களும்

[1] 'Journal of the Indian Institute of Bankers', February 1963-ல் 'Some Thoughts' on Central Banking' என்ற தலைப்பில் கோபால்ட் பிரபு (Lord Cobbold) நிகழ்த்திய உரை.

அனுபவம் கொண்ட மைய வங்கியரும் தத்ரூபமாகச் சித்திரித்துள்ளனர். 'தன் சொந்த வாழ்வையும் இன இயல்பையும் கொண்ட' அரசின் உறுப்பு என்று மைய வங்கியை அவர்கள் சித்திரித்துள்ளனர்.[1] மைய வங்கி பொதுத் துறை நிறுவனம் ஆதலின் அது தனித்துச் செயல்பட முடியாது. அதன் சுதந்திரத்தைப்பற்றிக் கூறும்போது அது அரசிடமிருந்து தனித்திருக்க வேண்டும் என்று பொருள் காணக்கூடாது. அதன் சுதந்திரம் அரசாட்சிக்குட்பட்டே இருத்தல் வேண்டும் என்பது பொருள். தென் ஆப்பிரிக்க ரிசர்வ் வங்கியின் ஆளுநர் (Governor) ராட்கிளிஃப் குழுவிடம் சாட்சியம் கூறும்போது மைய வங்கியின் சுதந்திரம் அரசின் ஆதிக்கத்திற்குட்பட்டதே என்று குறிப்பிட்டார். நாட்டின் நீண்ட வரலாற்றில் மைய வங்கியின் சுதந்திரம் பற்றிய சர்ச்சைகள் விவரிக்கப்பட்டன. ஆனால், அமெரிக்காவில்கூடப் பெடரல் ரிசர்வ் முறை (Federal Reserve System) பெற்றுள்ள சுதந்திரம் அரசின் ஆதிக்கத்திற்குட்பட்டிருக்க வேண்டும் என்பதை ஒப்புக்கொண்டனர்.[2] இதிலிருந்து மைய வங்கி தேசியப் பொருளாதாரக் கொள்கைக்கு விரோதமான நோக்கங்களைப் பின்பற்றுகின்றது அல்லது பின்பற்றவேண்டும் என்பது பொருளல்ல. மைய வங்கி தேசியப் பொருளாதாரக் கொள்கையை அறவே புறக்கணிக்க முடியாது. செலாவணிக் கொள்கையைத் தீட்டுவதில் அதன் சுதந்திரம் இக்கூற்றுக்குட்பட்டிருக்கின்றது. மைய வங்கி அரசுடைமையான நாடுகளில் கூடக் கொள்கை வகுப்பது, செயல்படுத்துவது பற்றி அரசும் மைய வங்கியும் தம் பொறுப்புகளையும் அதிகாரங்களையும் திட்ட வட்டமாகப் பகிர்ந்து கொள்ளவில்லை. சட்டங்கள் மூலம் இவ்வாறு பகிர்வு செய்து கொள்வது சாத்தியமல்ல. இந்திய ரிசர்வ் வங்கியும் அரசும் அரசியல் அமைப்புப்படி எவ்வித ஏற்பாட்டையும் செய்யவில்லை. நடைமுறையில் செலாவணிக் கருவிகளைப் பயன்படுத்தும்போது வங்கி தானாக நடவடிக்கைகள் எடுக்கின்றது. ஆனால், வங்கி வீதத்தை (bank rate) மாற்றும்போது அரசைக் கலந்த பின்னரே முடிவெடுக்கின்றது. நிதியுண்டியல்மீது விதிக்கும் முத்திரை வரிகளை அரசு தீர்மானிக்கின்றது. இந்த உண்டியல்களை மாற்றுவதன் மூலம் வங்கி வீதத்தின் விளைவுகளை அரசு மாற்றி விடலாம். அல்லது வங்கிவீதம் மாறாமல் இருக்கும்போதும் இவ் வரிகள் மூலம் கடன் வாங்கல் செலவை அரசு மாற்றி விடலாம்.

[1] R. S. Sayers 'Co-operation between Central Banks' 'Three Bank Review' Sept. 63.

[2] தென் ஆப்பிரிக்க ரிசர்வ் வங்கியின் ஆளுநர் திரு. ரெய்ஃலர் (Mr. Riefler) என்பவரும் இந்திய ரிசர்வ் வங்கியின் ஆளுநரும் ராட்கிளிஃப் குழுவினிடம் அளித்த சாட்சியம். பகுதி I பக்கங்கள் 256, 286, 295.

இது 1956-ல் நிகழ்ந்தது. இந்த ஆண்டு நிதியுண்டியல் மீது விதித்த முத்திரை வரியை உயர்த்தினர். பின்னர் அரசு இவ் வரியை மாற்றுவதற்குமுன் ரிசர்வ் வங்கியைக் கலந்தாலோசித்த பின்னரே முடிவெடுக்கும் என்ற ஒரு மரபை ஏற்படுத்தினர். முத்திரை வரியை உயர்த்தும் சக்தியை அரசினர் கொண்டிருப்ப தால் ரிசர்வ் வங்கி வீதத்தை நிர்ணயம் செய்யும் சக்தி குறைந்து விடவில்லை. செலாவணி, நிதிக் கொள்கைகளை வேறுபடுத்தி இவைகளுக்குத் தீர்வு காணும் பொறுப்பை வங்கிக்கும் அரசுக்கு மிடையே பகிர்வு செய்தால் இரு சாராருக்கும் சர்ச்சைகளும் கருத்து வேற்றுமைகளும் ஏற்படா என்று ரிசர்வ் வங்கியின் ஆளுநர் கருதுகின்றார் செலாவணியின் ஸ்திர நிலையைப் பேணுவதிலும், கடன் கொள்கையும் (credit policy) செலாவணி முறையையும் நிருவகிப்பது ரிசர்வ் வங்கியின் தனிப் பொறுப்பு, இதில் குறுக்கீடுகள் இருத்தல் கூடாது என்பதை எவரும் மறுக்க முடியாது. அரசினர் ஆணையிடும் அதிகாரம் பெற்றுள்ளனர். ஆனால், இதைப் பயன்படுத்தியதே இல்லை. நிதித் துறையில் அரசு முழு அதிகாரம் பெற்றுள்ளது. செலாவணி முறையின் சம நிலையை நிதிக் கொள்கை பொதுவாக பாதிக்கும். குறிப்பாக வளர்ந்து வரும் நாடாகிய இந்தியாவில் மிகவும் பாதிக்கும் என்பது உண்மை. இது போன்ற நிலை ஏற்படும்போது நிதிக் கொள்கையும், வரவு செலவு, வரி விதிப்புக் கொள்கைகளும் எவ்வாறு செலாவணி முறையின் ஸ்திர நிலையைப் பாதிக்கும் என்பதை ரிசர்வ் வங்கி அரசியலாருக்கு எடுத்து விளக்க வேண்டும். இக்கொள்கைகளில் எத்தகைய மாறுதல்களைப் புகுத்த வேண்டும் என்பது பற்றிய அறிவுரைகளைத் தருதல் வேண்டும். இவ்வறிவுரைகளை ரிசர்வ் வங்கி இன்று இரகசியமாக அளிக்கின்றது. வெளிப்படையாகக் குறை காணுதலை அறவே நீக்க வேண்டுமென்று வங்கியின் ஆளுநர் கூறவில்லை. ஆனால், சாதாரணமாக வங்கி கருத்து வேற்றுமைகளுள்ள பிரச்சினைகள் பற்றிய அறிவுரைகளை, வங்கி அரசுக்கு இரகசியமாக அளிக்கும். வெளிப்படையாக சர்ச்சைகளில் அரசின் சார்பிலோ அல்லது அதை எதிர்த்தோ கலக்காது.[1]

மைய வங்கிகளுக்கும் அரசுகளுக்குமிடையே சிறந்த பலனை யளிக்கும் நல்லுறவு நிலவுகின்றது. சில சமயங்களில் மைய வங்கியின் ஆளுநர்களுக்கும் அரசுகளுக்கும் முக்கியப் பிரச்சினைகளில் கருத்து வேற்றுமைகள் ஏற்படுவதுண்டு.

[1] ரிசர்வ் வங்கியின் ஆளுநர் சென்னை வர்த்தகக் குழுவின ஆண்டுக் கூட்டத்தில் நிகழ்த்திய உரை Reserve Bank of India Bulletin April 1958.

இத்தகைய கருத்து வேற்றுமைகளின் காரணமாக நிதியமைச்சகம் ஆளுநர்களை ராஜினாமா செய்யச் சொன்ன சந்தர்ப்பங்களும் உள. ஆனால், ஆளுநர்கள், ராஜினாமா செய்ய மறுத்துவிட்டனர். முடிவில் இம் முரண்பாடுகள் அரசுக்கு ஆளுநர்களைப் பதவி நீக்கம் செய்யும் அதிகாரங்களைத் தந்தன. அல்லது மைய வங்கிகள் வங்கி வீதங்களை மாற்றுவதற்கு முன் அரசினரைக் கலந்தாலோசிக்க ஒத்துக் கொண்டன. சில நாடுகளில் இரு தரப்பினரும் தம் கருத்துகளை அறிக்கைகள் மூலம் வெளியிட்டனர்.[1] ஆனால், இது அடிக்கடி நிகழவில்லை. மைய வங்கிகளுக்கும், அரசுகளுக்கும் இடையே நல்லுறவை நிலை நாட்டுவது ஒரு சிக்கலான பிரச்சினை என்பதை இது காட்டுகின்றது. இரு சாராரும் ஒருவர் மற்றவர் கடமைகளை மதிக்க வேண்டும். கொள்கை வகுப்பதில் பரஸ்பர ஒத்துழைப்பு இருக்க வேண்டும்.

மைய வங்கியர் அரசு பற்றிய உண்மை உறவு, மைய வங்கி முறையாக வகிக்கும் இடம் இது ஒரே வகையான பாங்கில் அமையாது. இது சாசனத்திலும் தீர்மானமாகாது. நாட்டுக்கு நாடு வேறுபாடுகள் உள. வரலாறு, மரபுகள், அதிகாரிகளின் தன்மை முதலியன இதைப் பெரும்பாலும் நிர்ணயிக்கும். ஒரு நிதியமைச்சர் மைய வங்கியை 'ஓர் ஆலோசகர் அல்ல', 'தான் படைத்த கருவி' என்று குறிப்பிட்டார். இரு தரப்பினருக்குமிடையே நல்லுறவு ஏற்படுவதற்கு இக்கருத்து உகந்ததன்று. ஆனால், நிதியமைச்சர்கள் இதை ஏற்கவில்லை. இது ஓர் உலக விதியாகவில்லை; இது தீவிரமான கருத்து. மைய வங்கியைக் கருவூலத்தின் தொழில்நுட்பப் பிரிவு என்றும் கூறுகின்றனர். இதன்படி மைய வங்கியின் சுதந்திரம் ஜனநாயகத்திற்கு முரணாகி விடும். ஏனெனில், நாட்டுப் பொருளாதாரத்தின் ஒவ்வொரு கூறுக்கும் அரசே பொறுப்புடையது. மற்றொரு கடைக்கோடிக் கருத்துப்படி 'செலாவணியாக்கப் பணியும்' அதைச் செலவு செய்வதும் பிரிக்கப்பட்டு வெவ்வேறு நிலையங்களிடம் இருக்க வேண்டும். இல்லையேல் செலவுப்பணி துஷ்பிரயோகத்திற்குட்படலாம். இத் தீவிரக் கருத்துகளிடையே ஒரு நடு நிலை ஏற்பட வேண்டும். இதன்படி அரசியல் சக்திகள் மாறுவதை ஒட்டி செலாவணி நிருவாகம் பாதிக்கப்படுவதைத் தடை செய்யவும்,

[1] கனடா ரிசர்வ் வங்கியின் ஆளுநரும் (மே 1961) ஸ்வீடன் ரிக்ஸ் வங்கியின் ஆளுநரும் (ஜுலை 1957) ராஜினாமா செய்ய வேண்டுமென்ற அரசின் ஆணையைப் பெற்றனர். பெடரல் ரிசர்வ் முறையின் தலைவர், திரு எக்லீஸ் (Mr Ecclees) அரசு பத்திர விலையைக் காக்க வெளி யார்க்கட்டு நடவடிக்கை மேற்கொண்டால் பணவீக்கக் கொடுமை உயரும் எனக் குறிப்பிட்டார். இந்தியாவில் அரசுடன் கருத்து வேற்றுமை ஏற்பட்டதால் ஓர் ஆளுநர் ராஜினாமா செய்தார்.

அதிகார துஷ்பிரயோகத்தைத் தடை செய்யவும் அது தக்க அதிகாரம் பெற்றிருக்கலாம். ஒரு குறிப்பிட்ட செலாவணி நடவடிக்கையை அடுத்து நிகழும் விளைவுகளுக்கு அரசு முழுப்பொறுப் பேற்றால் அதைத் தெளிவாக மக்களுக்கு விளக்கிய பிறகு இந்த நடவடிக்கை எடுப்பதை மைய வங்கி ஆட்சேபிக்கக் கூடாது. ஒரு மைய வங்கியர் எந்த அளவு மரியாதை வகிக்கின்றாரோ, எவ்வளவு திறமையும் அனுபவத்தையும் கொண்டிருக்கின்றாரோ, எவ்வளவு சீரிய முறையில் ஒரு விஷயத்தைக் கோவையாக ஆலோசிக்கின்றாரோ அந்த அளவு நாட்டுப் பொருளாதாரக் கொள்கையை வெற்றிகரமாக வகுக்கலாம் என்று நாம் முடிவாகக் கூறலாம். பொருளாதாரத்தின் சிக்கலான சக்திகளையும், நிதிப் பிரச்சினைகளையும், தெளிவாக விளக்கித் தன் கொள்கையின் அடிப்படைத் தத்துவத்தை எவ்வளவு வெற்றிகரமாக விளக்கு கின்றாரோ அந்த அளவுக்கு அவருக்கு வெற்றி கிடைக்கும்.[1]

மைய வங்கியர் வலிமை பெற்றிருப்பது ஓர் அசாதாரணமான தாகும். பொருளாதாரத் துறையில் பின் தங்கிய நாடுகளில் மைய வங்கியர் சுதந்திரமாகச் செயல் புரியவில்லை. தம் கடமையைச் செம்மையாகச் செய்வதற்கு வேண்டிய சக்தியை அவை கொள்ளவில்லை.[2] இந் நாடுகளில் அவை ஆற்ற வேண்டிய கடமைகளுக்குத் தேவையான செலாவணிக் கருவிகள் அவைகளிடம் இல்லை. இக் கருவிகள் இருந்தாலும் கையாள முடியாத நிலை உண்டு. விரைவில் முன்னேற விரும்பும் அரசுகள் எடுக்கும் நடவடிக்கைகள் அவைகளுடைய கொள்கையைப் பாதிக்கும். செலாவணிச் சுருக்க நடவடிக்கைகள் பொருளாதார வளர்ச்சியைத் தடை செய்யும் என்று தனியார் துறையினர் குறை கூறுவர். இந்த நிலையில் மைய வங்கியர் பலமற்றிருப்பர், அல்லது தம் பணியைச் செய்ய விரும்பாமலிருக்கலாம்.

[1] 'The Rcle of the Reserve Banker Today' திரு. லூயி ரஸ்மின்ஸ்கி (Loius Rasminsky) கனடிய வங்கியின் ஆளுநர் நிகழ்த்திய உரை 1966, pp. 26-28.

[2] Speech of Dr. Franz Aschinger Financial & Economic Editor, Neuezurcheye Zitung' Commneting in Governor Rasminsky's lecture, p. 46. (Per Jacobson Foundation, Nov. 1966).

# 4. மைய வங்கியின் காப்பு நிதி (Reserves) செய்யும் மாறிய பணி

பணி பற்றிய பாரம்பரியக் கருத்தும் புதிய கருத்தும்

மந்த காலத்திற்குப் பின் நிறைவேறிய மைய வங்கி பற்றிய சட்டங்களுள் மிக முக்கியமானது சட்டபூர்வமான காப்புநிதி பற்றியதாகும். முதன்மைக் காப்புநிதியின் (Primary Reserves) ஆட்சியை நெகிழ்ச்சியுடையதாக்கும் நோக்கத்துடன் அதைக் குறைத்தனர். முதல் உலகப் போரை அடுத்த ஆண்டுகளில், 1922—1932-ல் காப்புநிதிக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்தனர். சட்டபூர்வமான காப்பு நிதியை 40 சதவீதமாக உயர்த்தினர். இத்துடன் தரிசனப் பொறுப்புகளையும் (sight liabilities) அதைக் கணக்கிடும்போது சேர்த்துக் கொண்டனர்.



சட்டபூர்வமான காப்புநிதி கணிசமாகக் குறையவேண்டும் என்ற எண்ணம் மந்தகாலத்தின் தொடக்கப் பகுதியில் வளர்ச்சியடைந்தது. சீரமைக்கப்பெற்ற பொன்திட்டம் சரிவர இயங்க வேண்டுமானல் இது (காப்புநிதி குறைவது) அவசியமாகும். காப்புநிதியை 40 சதவீதத்திலிருந்து 33-க்கோ அல்லது அதற்கும் குறைவாகவோ மாற்றினுல் ஏராளமான பொன், காப்பு நிதியிலிருந்து விடுபடும். ஆளப்படும் காப்பு நிதியின் (operative reserve) கணியம் உயரும்.



பொன் பதிலிக் குழுவும் (Gold Delegation Committee), 1933-ல் கூடிய செலாவணிப் பொருளாதார மாநாடும் (Monetary and Economic Conference) வருங்காலத்தில் பொன் திட்டம் முன்னேற்றமடைவதற்காக யோசனைகள் கொடுத்தனர். காப்பு நிதியின் பொன் பகுதி (gold cover) குறைப்பது மூலம் சட்டபூர்வமான காப்பு நிதி பற்றிய ஷரத்துகள் நெகிழ்ச்சியடைய வேண்டுமென்று குறிப்பிட்டனர். நோட்டுகளையும் வங்கிக் கடனையும் அதிகரிப்பது நோக்கமல்ல, வங்கிகளின் விடுதலையான காப்பு நிதிக்கு (free reserves) வலிமையூட்டுவதே நோக்கம்.

(காப்பு நிதி பற்றிய) சட்ட விகிதத்தைக் (legal ratio) குறைக்கப் பல நாடுகள் சட்டத் திருத்தங்கள் செய்துவிட்டன.

[1] Report of the Gold Delegation, (League of Nations), p. 53.

1933-க்குப் பிறகு பல பழைய மைய வங்கிகள் காப்பு நிதியைக் குறைக்கச் சட்டத் திருத்தங்களை இயற்றின. புதியதாக நிறுவன மான மைய வங்கிகளும் தொடக்கத்திலிருந்தே குறைந்த காப்பு நிதியை ஆண்டன. டென்மார்க், செக்கோஸ்லோவாக்கியா, யுகோஸ்லோவியா, டான்சிக், பல்கேரியா, லாட்வியா, கனடா, முதலிய நாடுகளின் மைய வங்கிகள் மேற்குறிப்பிட்ட மாறுதல் களைச் செய்தன. சட்டபூர்வமான காப்பு நிதியைக் குறைத்த சில நாடுகள் கடனாளியாக இருந்தன. அவர்களுடைய அயல் நாட்டுச் செலுத்தல் நிலை மீது மந்தம் சுமத்திய பளுவைக் குறைக்கக் காப்பு நிதியைக் குறைத்து, அதிலிருந்து விடுபட்ட நிதியைக் கொண்டு ஓரளவு நிலைமையைச் சமாளித்தன. காப்பு நிதியின் அவசியம் பற்றிய கருத்துக்கு எதிர்ப்புத் தோன்றியது. மாக்மில்லன் குழுவும், ஆஸ்திரேலிய வங்கிக் குழுவும் (Australian Banking Commission, 1937) 'உயர்ந்தபட்ச வெளியீட்டு முறை' என்ற ஒரு முறையைப் பரிந்துரைத்தன. இந்த முறையைப் பிரான்சு நாடு 1928 வரை பின்பற்றியது.

பெடரல் ரிசர்வ் விதம் (Federal Reserve Ratio) எல்லோர் கவனத்தையும் அதிகம் கவர்ந்தது. 1913ஆவது ஆண்டின் பெடரல் ரிசர்வ் சட்டத்தின்படி வெளியிடும் செலாவணித் தாளில் 40 சதவீதத்தைப் பொன்னாகவும் டெப்பாசிட்டில் 35 சதவீதம் சட்டபூர்வமான பணமாகவும் வைத்திருக்கவேண் டும். காப்பு நிதியில் குறைவு (deficiency) ஏற்பட்டால் அதன் மீது வளர்வீத முறையில் (graduated) வரி செலுத்த வேண்டும். வசதிக்காக ரிசர்வ் வங்கிகள் கலப்புக் காப்பு நிதியையே வைத் திருந்தன. டெப்பாசிட்டுகளுக்கும் செலாவணித் தாள்களுக்கும் காப்பாக இயங்கிய இந்த நிதி பெரும்பாலும் பொன் பத்திரங் களாகவே (gold certificates) இருந்தன. இந்த விகிதம் (ratio) 1940 டிசம்பர் மாதம் உச்ச நிலையை அடைந்தது. அதாவது 90.8 சதவீதமாக இருந்தது. 1941 டிசம்பர் வரை இதே நிலையிலிருந்தது. அதற்குப் பின் இந்த விகிதம் தொடர்ந்து சரிந்தது என்பதைக் கீழ்க்காணும் பட்டியல் விளக்கும்.

பட்டியல்[1]

(சதவீதத்தில்)

| | | | |
|---|---|---|---|
| 1939 டிசம்பர் | 86.7 | 1944 மார்ச் | 61.6 |
| 1940 ,, | 90.8 | 1944 ஜூன் | 56.3 |
| 1941 ,, | 90.8 | 1944 செப்டம்பர் | 52.9 |
| 1942 ,, | 76.3 | 1944 டிசம்பர் | 49.0 |
| 1943 ,, | 62.6 | | |

[1] பதினான்காவது ஆண்டறிக்கை (B. I. S.—Bank of International Settlements), p. 178.

1940-ல் 90.8 என்ற நிலையில் இருந்த இக் காப்பு நிதி 1944-ல் திடீரென 49.0 என்ற நிலைக்குச் சரிந்ததால் பலருக்குக் கவலை ஏற்பட்டது. 1944-லும் சட்ட பூர்வமான குறைந்தபட்ச நிலையைவிட எச்சமாக இருந்தபோதிலும், அது நெருக்கடியான விகிதத்துக்கு வந்துவிட்டது. முன்னர் இரு முறை காப்பு நிதி குறைந்தபட்ச நிலைக்கு வந்தபோது, அதாவது 1920-லும், 1933-லும் அரசு பத்திர மார்க்கட்டில் விலை வீழ்ச்சி ஏற்பட்டது. அதுபோல் இப்போதும் நெருக்கடி ஏற்படலாம் என்று அஞ்சினர். பெரிய போருக்கு நிதியளிக்கும் பொறுப்பு, காப்பு நிதியின்மீது சுமத்தப்பட்டதே அதன் குறைவுக்குக் காரணம். இதன் விளைவாக வெளியான ஏராளமான புதிய செலாவணி, மக்களிடம் புழக்கத்திலும், வங்கி வைப்பாகவும் இருந்தது. இச் செலாவணிப் பெருக்கத்தின் தன்மையே (மொத்த அளவை விட) காப்பு நிதி குறைந்ததற்குக் காரணமாக இருந்தது.[1] இச் செலாவணிப் பெருக்கம் மிகவும் வியப்பிற்குரிய அளவில் இருந்தது. 1941-க்கு முன் வங்கிகள் தொடர்ந்து பொன்னைப் பெற்றுக்கொண்டிருந்தன; காப்பு நிதி பெருகியது; அவை பெருகி வந்த செலாவணித் தேவைகளைச் சமாளித்தன. அந்த ஆண்டு பொன் வரவு குறைந்தது. வங்கிகளின் காப்பு நிதிகள் குறைந்தன. பொன் திட்டத்தைக் கைவிட்டனர். 1942-லிருந்து மைய வங்கியின் காப்பிலிருந்து மற்ற வங்கிகளுக்கு நிதியளித்தனர்.[2] குறைந்து சென்ற காப்பு நிதிப் பிரச்சினைகளைச் சமாளிக்க அவ்வப்போது பல யோசனைகள் கூறப்பட்டன. ஆனால், அவைகளில் பெரும்பாலானவை தற்காலிகமானவை; பிரச்சினைக்குச் சரியான தீர்வளிக்க முடியாதவை. சட்டத்தை மாற்றிக் காப்பு நிதியைக் குறைப்பதே உண்மையான சிகிச்சையாகும். 1945ஆம் ஆண்டு ஜூன் 12-ல் ஒரு சட்டமியற்றினர். பெடரல் ரிசர்வின் காப்பு நிதியைச் சீராக அமைத்தனர். புழக்கத்திலிருக்கும் பெடரல் ரிசர்வ் செலாவணித் தாள்களுக்கும் டெப்பாசிட்டுகளுக்கும் காப்பாகப் பெடரல் ரிசர்வ் வங்கிகள் 25% பொன் பத்திரங்களைக் கொள்ள வேண்டும்.[3] காப்பு நிதி மாறியதும் சித்தாந்தமும் மாறியது. பொன்னையும் காப்பு நிதியில் உள்ள அயல் நாட்டுச் செலாவணியையும், அயல் நாட்டுச் செலுத்தலுக்குக் காப்பாகக் கருதினர்; உள்நாட்டில் புழக்கத்திலிருக்கும் செலாவணிக்கு வலிமையூட்டும் காப்பாகக் கருதவில்லை. பொன்னை நாட்டு ரிசர்வாக இருக்கும் மதிப்புக்கு ஒரு பெரிய கேடு உண்டானது. இங்கிலாந்தில் செலாவணித் தாள்களின் காப்பாக அற்ப அளவு

[1] Federal Reserve Bulletin, March 1945, p. 215.
[2] The Economic Art, 19 August 1944, pp. 250-51.
[3] Federal Reserve Bulletin, July, 1945.

பொன்னே இருந்தது. அமெரிக்காவில் பொன்னுக்குப் பதிலாகப் பொன் சான்றுகளே இருந்தன. ஆனால், உள்நாட்டுச் செலாவணிக்குப் பொன் சிறந்த காப்பு நிதி என்ற பொது மக்களுடைய கருத்து எளிதில் மறையாது. இத்தகைய காப்பு நிதியில் இன்றும் சிலர் நம்பிக்கை இழக்கவில்லை.

நாம் குறிப்பிடும் காலத்தில் நிகழ்ந்த காப்பு நிதி பற்றிய மாறுதல்கள் அனைத்தையும் சிறந்த செலாவணிச் சீர்திருத்தங்கள் என்று நாம் கருதலாகாது. பல நாடுகளில் போரின் நிமித்தம் எடுத்த நடவடிக்கைகளே ஆகும். ஆனால், ஒரு முக்கியமான உண்மை புலப்படுகிறது. மைய வங்கிச் சட்டம் எல்லோரும் அறிந்த ஒரு பாங்கையே பெற்றது. அதாவது பெருகிய செலாவணித் தாளுக்கு வேண்டிய முறையில் காப்பு நிதியைத் திருத்தியதே ஒழிய காப்புநிதிக்குத் தகுந்தவாறு செலாவணித் தாள் வெளியீட்டைத் திருத்தவில்லை.[1] இது பழைய சட்டம், பழக்கம் இவைகளிலிருந்து வேறுபட்டுள்ள புதிய முறை.

மைய வங்கியின் காப்பு நிதியைச் செலாவணித் தாள் வெளியீட்டிலிருந்து பிரித்த இச் சூழ்நிலையில், இந்திய ரிசர்வ் வங்கி பொன் காப்பு நிதியைக் குறைக்க நினைந்ததா என்பதைக் காண வேண்டும். 1934ஆம் ஆண்டின் ரிசர்வ் வங்கிச் சட்டத்தின் 33 (2) பிரிவுப்படி வெளியீட்டு இலாகாவின் சொத்துகளில் ஐந்தில் இரண்டு பங்கு பொன் நாணயமாகவோ, பொன் உலோகமாகவோ, ஸ்டெர்லிங் பத்திரங்களாகவோ இருத்தல் வேண்டும். பொன் நாணயம், உலோகம்–இவற்றின் மதிப்பு குறைந்தபட்சம் ரூ. 40 கோடியாக இருக்க வேண்டும். வெளியீட்டு இலாகாவின் சொத்துகள் இரு வகைப்படும். 'A' பகுதியில் பொன் நாணயம். உலோகம், ஸ்டெர்லிங் பத்திரங்கள் இருந்தன. 'B' பகுதியில் ரூபாய் நாணயமும், இந்திய அரசின் ரூபாய் பத்திரங்கள், வர்த்தக உண்டியல்கள் (bills of exchange), மற்ற வர்த்தகப் பத்திரங்கள் முதலியன இருந்தன. இது பொறுப்புகளில் 40 சதவீதம் 'A' வகை சொத்தாகிறது. சட்டபூர்வமான காப்புநிதி விகிதத்தில் நெகிழ்வை உண்டாக்க, ஸ்டெர்லிங் பத்திரங்களையும் அதில் சேர்த்தனர். ஆனால், குறைந்தபட்ச அளவு பொன் இருக்க வேண்டுமென்ற கட்டாயம் இருந்தது. 40 சதவீத விகிதத்தை மந்தத்துக்குப் பிற்பட்ட காலத்துக்குப் பொருந்தாத மிக உயர்வான விகிதம் என்று கூறலாம். இவ் விகிதத்தைக் குறைப்பதால் அல்லது செலாவணி வெளியீட்டிலிருந்து காப்பு

[1] 9th Annual Report of the Bank of International Settlement, pp. 69-70.

நிதியை விடுவிப்பதால் வெளியீட்டு முறைக்கு நெகிழ்ச்சி ஏற்படுத்துவதோடல்லாமல், பணவாட்ட (deflationary) நிலையையும் ஏற்படுத்தமுடியும். கடைசியாக 1954-ல், 1934ஆம் ஆண்டின் ரிசர்வ் வங்கிச் சட்டத்தைத் திருத்தினர். காப்புநிதி செலாவணித் தாள் வெளியீடு பற்றிய விதியைத் தளர்த்தினர். இதன் நோக்கம் இரண்டாவது திட்டத்திற்கு நிதி வசதியளிக்கத் தக்க முறையில் செலாவணி வெளியீட்டைப் பெருக்குவதாகும்.

இந்திய ரிசர்வ் வங்கியின் காப்பு நிதியில் உள்ள பொன்னின் மதிப்பைத் திருத்தியமைப்பதாலும் செலாவணிப் பெருக்கம் செய்யக்கூடும் என்பதை இங்குக் குறிப்பிடலாம். மந்த காலத்திற்குப்பின் அமலான பிரதமக் காப்பு நிதி பற்றிய சட்டத் திருத்தங்கள் இரு மாறுதல்களைக் கொணர்ந்தன. சட்டபூர்வமான காப்பு விகிதத்தைக் குறைப்பதன் மூலமும், கைவசம் உள்ள பொன்னுக்குப் புதிய மதிப்புக் கொடுப்பதன் மூலமும் பிரதமக் காப்பு நிதியைக் கையாளுவதில் நெகிழ்ச்சியை ஏற்படுத்தினர். பொன்னைப் புதிய மதிப்பீடு செய்த நாடுகளுள் அமெரிக்கா முதலிடத்தைப் பெற்றது. 1934 ஜனவரி மாதம் கைவசமுள்ள பொன்னின் மதிப்பை அந்நாடு திருத்தியமைத்தது. அமெரிக்க வழி காட்டலைப் படிப்படியாக மற்ற மைய வங்கிகள் பின்பற்றின. ஆஸ்திரேலியா, ஆஸ்திரியா, பெல்ஜியம், இத்தாலி, பிரான்சு, ஹங்கேரி, பின்லாந்து முதலிய நாடுகள் அதன் வழி நடந்தன.

உலகெங்கும் மைய வங்கிகள் பொன்னுக்கு மறு மதிப்புக் கொடுத்தபோது இங்கிலாந்து வங்கியும் (Bank of England) இதைச் செய்தது. 1939 வரை ஓர் அவுன்ஸ் பொன்னின் விலை 85 ஷில்லிங் என்றிருந்தது. 'The Currency and Bank Notes Amendment Act of 1939' என்னும் சட்டப்படி வெளியீட்டுத் துறையின் சொத்தின் பழைய மதிப்பைத் திருத்தியமைக்க ஏற்பாடு செய்தனர். சட்டத்தின் பிரிவு 2 (1)–ன்படி 'சட்டம் அமலாகும் நாளிலிருந்து வெளியீட்டுத் துறையின் சொத்துகளுக்குப் புதிய மதிப்புக் கொடுக்க வேண்டும்'.[1] 1939ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் முதல் தேதி வெளிவந்த வங்கியின் அறிக்கைப் புதிய பொன்னின் மதிப்பைக் காட்டியது.[2] மேற்குறிப்பிட்ட நாடுகளைத் தவிர அர்ஜன்டினா, லாட்வியா,

[1] Federal Reserve Bulletin, April 1939, p. 271.

[2] இங்கிலாந்தின் தலைமை வங்கி பொன்னை வாங்கும் அதிகாரபூர்வமான விலை 1939 ஆம் ஆண்டு செப்டம்பர் 68 ஷில்லிங்காக இருந்தது. இதை செப்டம்பர் 19-ந்தேதி (1949) 248 ஷிலலிங்காக உயர்த்தினர். Federat Bulletin, 1949 p. 1522.

ருமேனியா, ஜப்பான் போன்ற நாடுகளும் தம் காப்பு நிதியி லுள்ள உலோகத்திற்கு மறு மதிப்புக் கொடுத்தன. இவைகளில் சில நாடுகள், (உதாரணமாகப் பிரான்சு) இரண்டு, மூன்று முறை பொன்னின் மதிப்பை மாற்றின.

செலாவணிக் கொள்கையைச் செயல்படுத்தும் அதிகாரிகள் பரவலான அதிகாரம் பெற்றிருந்தனர். பொன் காப்பு நிதியின் மறு மதிப்புப் பற்றிய சட்டம் இவ்வதிகாரத்தை மேலும் பெருக் கியது என்று திரு. ராபர்ட்ஸன் கூறுகின்றார்.[1] மற்ற நாட்டு வங்கிகளைப்போலவே ரிசர்வ் வங்கி தன்னிடம் இருந்த பொன் காப்பு நிதிக்குப் புதிய மதிப்புக் கொடுக்கவில்லை. இதைச் செய்யத் தவறியதால் அது பணவாட்ட நடவடிக்கைக்கு உடந்தையாயுள்ளது என்று பலர் சாடினர். பல சமயங்களில் சிறு பண வீக்கம் தேவைப்பட்டது. பொன் மறு மதிப்பீட்டின் மூலம் இதைச் செய்திருக்க வேண்டும்.[2]

மேலே குறிப்பிட்ட ரிசர்வ் வங்கிச் சட்டம் 1956-ல் நிறை வேறியது. இதன் விளைவாகப் பொன் மறுமதிப்பீட்டின் மூலம் செய்த செலாவணிப் பெருக்கம் இரண்டாவது திட்டத்தின் காரணமாகச் செய்யப்பட்ட ரூ. 1,200 கோடி பெருமானமுள்ள பற்றுக்குறை நிதியாக்கத்தின் விளைவாகும்.

நூலாசிரியர்களும், மைய வங்கியரும் காப்புநிதி பற்றிக் கொண்டிருந்த பழைய கருத்துப்படி அது மைய வங்கிக்கு ரொக்கத் தன்மையைக் கொடுக்க வேண்டும். அக் காலத்திய காப்புநிதி பற்றிய சட்டங்கள் மைய வங்கி அளவுக்கு மீறிய செலாவணிப் பெருக்கம் செய்வதைத் தவிர்க்க முனைந்தன. பின்னர்ச் செலாவணித் தாள்களுக்கும் தரிசனப் பொறுப்பு களுக்கும் காப்பாக ஒரு குறைந்தபட்ச நிதியைக் கொண்டிருப்பது சரியெனக் கருதினர். முதல் உலகப் போரும் மாபெரும் மந்தமும் ஏற்படுத்திய விளைவுகளால் மைய வங்கிகளுடைய ரொக்கத் தன்மை முக்கியமென்று கருதும் நிலை ஏற்படவில்லை. செலாவணி யின் காப்புநிதி பற்றிய கருத்துகள் அடியோடு மாறின.[3]

**செலாவணிக் காப்புநிதி ஆற்ற வேண்டிய இரு பணிகள்**

பொன் திட்டம் மறைந்த பிறகு செலாவணித் தாள்களைப் பொன் நாணயமாக மாற்ற வேண்டிய அவசியமில்லை. இதற்காக

[1] D. H. Robertson, 'British Monetary Policy' in Lloyds Bank Monthly Review, May 1939.

[2] Manu Subedar, 'Financial Injustice to India', Indian Finance, Feb. 1940, p. 425

[3] R. Triffin, Gold and Dollar Crisis, ch. 2.

மைய வங்கிகள் பொன்னைக் கொள்ள வேண்டியதில்லை. நாட்டின் பன்னாட்டுச் செலுத்தல் நிலையில் (balance of payments) நடப்புக் கணக்கில் துண்டு விழுந்தால் பன்னாட்டு ரீதியில் தனியார் முதல் இடப்பெயர்ச்சியாவது இடர் தாங்கியாகச் (shock absorbers செயல்படாது. இதற்கு மாறாக இம் முதலின் இடப் பெயர்ச்சி சமநிலையை மேலும் மோசமாக்கியது. குறுகிய காலத்தில் நடப்புக் கணக்கில் விழும் துண்டை அரசுகள் அளிக்கும் உதவி மானியங்களைக் கொண்டு சரிக்கட்ட முடியாது. இந்த நிலையில் மைய வங்கியின் காப்புநிதிகள் அதன் ரொக்க நிலையைப் பேணும் என்ற கருத்து மறைந்தது: நாட்டின் அயல் நாட்டுச் செலுத்தல் நிலையில் தற்காலிகமாக விழும் துண்டைக் காப்புநிதியைக் கொண்டு நீக்கவேண்டும் என்ற புதிய சித்தாந்தம் பிரபலமாயிற்று. 19ஆம் நூற்றுண்டில் காணாத புதிய அளவு கோல் கொண்டு மைய வங்கி எவ்வளவு காப்புநிதி கொள்ள வேண்டும் என்பதைக் கணக்கிட்டனர். பேராசிரியர்களும் சட்ட இயல் வல்லுநர்களும் புதிய அளவுகோலை ஏற்றனர். இக் கருத்தை கீன்ஸ் பிரபுவே முதன் முதலில் தன் 'Treatise on Money' என்ற நூலில் வெளியிட்டார். ஒரு நாட்டு அயல் நாட்டுச் செலுத்தல் நிலையில் ஏற்படும் ஏற்றத் தாழ்வுகளைக் கொண்டு அதன் மைய வங்கி கொள்ள வேண்டிய காப்பு நிதியைத் தீர்மானிக்க வேண்டும். அதன் 'புறக்கழிவை'க் கொண்டே (external drain) அதன் காப்பு நிதியின் அளவை நிர்ணயிக்க வேண்டும் என்று அவர் கூறினார். பின்னர் ஒரு நாடு வாங்கும், அல்லது இறக்குமதியாக்கும் அயல் நாட்டுச் செலாவணியைக் கொண்டே அதன் காப்பு நிதியின் தேவையைத் தீர்மானிக்க வேண்டும் என்று அனைவரும் ஏற்றுக் கொண்டனர். இம் முறை நடைமுறையில் கையாளப்படும் ஒரு துல்லிய முறையாகும். காப்பு நிதிகள் இரு பணிகளை ஆற்ற வேண்டும். செலாவணிக்குக் காப்பு நிதியாக இருத்தல் வேண்டும், பன்னாட்டு முறையில் செலாவணி ஏற்றத்தாழ்வுகளை நீக்கும் பொறுப்பையும் ஏற்க வேண்டும் என்று எல்லோரும் ஒத்துக்கொள்கின்றனர். முதல் பணி உள் நாட்டுச் செலாவணிக்கும், வங்கிச் செலாவணிக் கடன்களுக்கும் காப்பாக அமைகின்றது. இரண்டாவது பணி பன்னாட்டுச் செலுத்தல் நிலையில் தற்காலிகமாக விழும் துண்டைச் சரிக்கட்டி இடைக்காலப் பன்னாட்டுச் செலாவணியாகவும் அமைகின்றது. சட்டப்படி ஒரு நாடு தன் செலாவணிக்குக் காப்பாகக் கொள்ள வேண்டிய பொன்னையும் அயல் நாட்டுச் செலாவணியையும் கொண்டு அயல் நாட்டுச் செலுத்தல் நிலையில் விழும் துண்டைச் சரிக்கட்ட முடியாது. சட்ட பூர்வத் தொகையின் உபரியே இதற்கு உதவும். அவசர காலத்தில் சட்ட

பூர்வக் குறைந்தபட்சக் காப்புநிதி பயன்படாது. எனவே, இத் தொகை 'காப்புப் பணியை'ச் (cover function) செய்கின்றதே தவிரப் பன்னாட்டுச் செலாவணியைச் செய்யவில்லை.[1] உயர்ந்த காப்பு நிதியை மைய வங்கி கொள்வதால் வலிமை பெறுவதில்லை. பெரும் போர் அல்லது கலகம் ஏற்பட்டாலன்றிச் செலாவணியின் காப்பைப்பற்றி மக்கள் கவலைப்படுவதில்லை. இத்தகைய சூழ்நிலை ஏற்பட்டால் 100 சதவீதக் காப்புநிதி கூடச் செலாவணித் தாளில் நம்பிக்கையைக் கொடுக்காது. மிகவும் அசாதாரண நிலைமையைத்தவிர மற்றச் சமயங்களில் சட்டபூர்வமான பொன், அயல் நாட்டுச் செலாவணிக் காப்புநிதி உள் நாட்டுச் செலாவணிக்கு ஒரு வலிமையைக் கொடுப்பதில்லை.

மேலும், ஏராளமான காப்பு நிதியைக் கொள்வதற்காக, மைய வங்கி குறைவான அன்னியச் செலாவணியைத் தன் வசம் கொள்கின்றது. சட்டப்படி கொள்ளவேண்டியதற்கு மேல் உள்ள உபரியையே செலுத்தல் நிலைக் குறைகளை நீக்கப் பயன் படுத்தலாம் என்று முன்பே குறிப்பிட்டோம். உண்மையில் இவ்வுபரி முழுவதும்கூடப் போதவில்லை என்பதை அடிக்கடி காண்கின்றோம். சட்டபூர்வ குறைந்தபட்சத்திற்கு மேல் அதிகத் தொகையை மைய வங்கிகள் வைத்திருக்கும். இவ்வுபரியே அவைகளுக்கு வலிமை கொடுக்கும். ஆனால், மந்தத்திற்கு முன் இவ்வுபரித் தொகை குறைவாக இருந்தது. சட்டபூர்வக் குறைந்தபட்ச நிதியும், உபரியும் செயலற்றிருந்தன. இக் காப்பு நிதியை ஒருவரும் காணவிடில் இது காற்றுடன் அல்லது கடல் நீருடன் கலந்து விடும் என்று ஒரு விமர்சகர் குறிப்பிடுகின்றார். (அதாவது இத் தொகை மிகக் குறைவாக இருந்தது என்பது பொருள்.) இது எவ்வளவு முரணாகத் தோன்றியபோதிலும் மைய வங்கியின் பொன் காப்பு நிதியை எவ்வளவுக்கெவ்வளவு சட்டம் வரையறுக்கின்றதோ அவ்வளவுக்கவ்வளவு அது வலிமையிழக்கும். அஃதாவது ஒரு மைய வங்கியின் வலிமையை அதன் காப்பு நிதி போற்றவில்லை. நிதியின் எப்பகுதி பன்னாட்டுச் செலாவணியாகப் பணிபுரிகின்றதோ அதே வங்கிக்கு வலிமையூட்டுகின்றது.

### வளர்ச்சியடையும் நாடுகளில் மைய வங்கிகளின் சட்டபூர்வக் காப்பு நிதி விகிதங்கள்

உள்நாட்டுச் செலாவணித் தாள்களுக்கும் தரிசனப் பொறுப்புகளுக்கும் காப்பாக உள்ள குறைந்தபட்ச நிதி பற்றிய கோட்

[1] International Currency Experience (League of Nations), p. 95.
[2] J. M. Kupes, 'A Treatise on Money', Vol. II.

பாட்டை விடுத்தனர். அயல் நாட்டுச் செலுத்தல் நிலைக்குத் தேவையாகும் குறைந்தபட்ச காப்பின் (critical level reserve) அவசியத்தை இப்போது உணர்ந்துள்ளனர். காப்பு நிதி பற்றிய கடுமையான விதிகள் நெருக்கடியான சமயங்களில் அவை பயன் படாமல் செய்துவிடும். இவ் விதிகளையும் இன்று கைவிட்டுள் ளனர். சட்டபூர்வமான காப்பு நிதியின் நோக்கம் மைய வங்கி கள் அளவுக்கு மீறிய செலாவணிப் பெருக்கம் செய்வதைத் தடை செய்வதாகும். ஆனால், நெருக்கடியான காலங்களில் செலாவணிப் பெருக்கம் தேவைப்பட்டபோது பழைய சட்டங் கள் இதற்கிடங்கொடுக்காததால் காப்பு பற்றிய விதிகளைத் தளர்த் தினர்; அல்லது அறவே கைவிட்டனர். லத்தீன் அமெரிக்க நாடு களில் உயர்ந்த காப்பு நிதிவிகிதங்கள் இருந்தன. இவை செலா வணிப் பெருக்கத்தைத் தடை செய்யவில்லை. காப்பு நிதி விதி களைத் துல்லியமாகப் பின்பற்றினால் அதன் நோக்கமே கைகூடாது. நாட்டின் அயல்நாட்டுச் செலுத்தல் நிலையில் விழும் தற்காலிகத் துண்டைச் சரிக்கட்டுவதே அதன் நோக்கமாகும். கடும்விதிகள் மைய வங்கி இறுதிக் கடன் கொடுக்கும் பணியை நிறைவேற்றுவதைத் தடை செய்யும். காப்பு விகிதத்தைத் தற் காலிகமாக ரத்துச் செய்தால் மைய வங்கியின் நற்பெயர் பாதிக் கப்படும். உண்மையில் தற்காலத்திய மைய வங்கிகளின் வரலாறு ஓர் உண்மையைப் புலப்படுத்த்யது. பல நாடுகளில் செலாவணித் தாள்களுக்கும், தரிசனப் பொறுப்புகளுக்கும் காப்பாக உள்ள நிதி சிறந்த செலாவணிக் கொள்கைக்குத் தவறான வழிகாட்டியாகும் என்பதைக் காட்டுகிறது. காப்புத் தொகை சட்டபூர்வக் குறைந்தபட்சத் தொகையைவிட மிகுதி யாக இருப்பின் மைய வங்கிகள் தாம் நல்ல நிலையில் இருப்ப தாகக் கனவு காணலாம். ஆனால், மற்றச் செலாவணி நிலை களைப் பார்க்கும்போது இப்போக்குத் தவறானது என்பது புலப் படலாம். இந்த நிலையில் மைய வங்கி அளவு மீறிச் செலாவணிப் பெருக்கம் செய்து நெருக்கடியை உண்டாக்கலாம். இதற்கு மாறாக நெருக்கடி நேரத்தில் காப்பு நிதி உரிய அல்லது குறை வான அளவிலிருந்தால் வங்கி வேண்டிய அளவு செலாவணிப் பெருக்கம் செய்யத் தவறலாம். ஏனெனில், காப்பு பற்றிய சட்டத்தை அது மீற அஞ்சலாம். காப்பு நிதி 'கட்டுண்டு' (locked up) கிடக்கலாம். மிக அவசிய நேரத்தில் அது பயன் படாமல் போகலாம். இந்த நிலையில் காப்பு நிதி அயல் நாட்டுச் செலுத்தல் நிலையுடன் நேரடித் தொடர்பு கொள்ளவேண்டும் என்ற புதிய கருத்துத் தோன்றியது. அது போதுமா என்பதை உள்நாட்டுச் செலாவணித் தாள் புழக்கம் நிர்ணயம் செய்யக் கூடாது. நாட்டின் அயல் நாட்டுச் செலுத்தல் நிலையைக்

கொண்டே அதன் அளவைத் தீர்மானிக்க வேண்டும். காப்பு விகிதம் பற்றிய பழைய கோட்பாடுகளை வளர்ச்சியடையும் நாடுகள் விடுத்துப் புதிய காப்பு விகித முறைகளை உருவாக்கியுள்ளன. முந்தைய ஆண்டில் அன்னியச் செலாவணியின் விற்பனையைக் கொண்டு அல்லது செலாவணியின் அளவைக் கொண்டு அல்லது இரண்டையும் கொண்டு காப்பு நிதியின் அளவைத் தீர்மானிக்கின்றனர். இரு வெவ்வேறு அறிகுறிகளைச் சட்டத்தில் சேர்த்துள்ளனர்: (1) காப்பு நிதியிலுள்ள அன்னியச் செலாவணி—பரிவர்த்தனைக்குத் தேவையாகும் அன்னியச் செலாவணி—இவைகளுடைய விகிதம். (2) புழங்கும் செலாவணிப் பெருக்க வீதம்.

1944-ல் நிறைவேறிய பராகுவே நாட்டின் மைய வங்கிச் சட்டம் இப் புதிய கோட்பாட்டை ஏற்று முதன் முதலாக இக் கருத்தைத் தன் சட்டத்தில் கொண்டது. சட்டத்தின் 84, 85 ஆவது பிரிவுகள் மூன்று அளவைகளை வகுத்தன. இவைகளை மைய வங்கிக்கு வழி காட்டும் அல்லது அவை கட்டாயம் பின்பற்ற வேண்டிய விதிகள் எனக் கருதுவதைவிடத் தேசீயச் செலாவணிக் கொள்கை என்று குறிப்பிடலாம். காப்புநிதியைத் தீர்மானிப்பதற்குப் பணப்புழக்க மாறுதல்கள் மட்டுமன்றி அயல் நாட்டுச் செலுத்துநிலை, செலாவணி வசதிகள், விலை மட்டம், வங்கிகளின் நிலை. நாட்டுப் பொருளாதார நிலை ஆகிய எல்லாவற்றையும் கவனிக்க வேண்டும். மக்கள் வாங்கக்கூடிய பண்டங்களின் அளவு பெருகாமல் புழக்கத்திலுள்ள பணம் மட்டும் பெருகினாலோ அல்லது வேறு வகை ஸ்திரமின்மை ஏற்பட்டாலோ இப்போக்கை நிறுத்த வேண்டும். புழக்கப் பணத்தின் அளவு ஓராண்டு 10%-க்கு மேல் உயர்ந்தால் செலாவணிக் குழு, பொருளாதார நிதி இணைப்புக் குழுவுக்கு (Council of Economic and Financial Co-ordination) இவ்வுயர்வுக்குக் காரணங்களை விளக்க வேண்டும். இரண்டாவதாகக் காப்பு நிதி தொடர்ந்து குறைந்து செல்லும்போது, இதற்கு அசாதாரணமான தற்காலிகக் காரணங்கள் இராவிடில், செலாவணிக் குழு மேலும் காப்புத் தொகையை இழக்காமல் அதை நிலைநிறுத்த ஆவன செய்தல் வேண்டும். மூன்றாவதாகச் செலாவணி ஸ்திரநிதி (Monetary Stabilisation Fund) கடந்த மூன்றாண்டுகளில் விலையான அன்னியச் செலாவணியில் 20%-க்கும் குறைந்தால் உள்நாட்டு, அயல் நாட்டுச் சந்தைகளுக்காக உற்பத்தி செய்வோருடைய திறமையை உயர்த்த வேண்டும். இவ்வாறு செய்வதன் மூலம் பன்னாட்டுச் சமநிலையை மீண்டும் நிலைநிறுத்த வேண்டும்.[1]

[1] R. Triffin, 'Monetary and Banking Reform in Paraguay'.

டாமினிக்கக் குடியரசின் (Dominican Republic) விதிகளின் படி ஓராண்டு காலத்தில் பணத்தின் அளிப்பு 15% உயர்ந்தால் மைய வங்கி அரசுக்கு ஓர் அறிக்கை அனுப்ப வேண்டும். இதில் செலாவணிப் பெருக்கத்தின் காரணங்களையும் இதற்காக எத்தகைய பொருளாதார, நிதி நடவடிக்கைகளை எடுக்கலாம் என்பதையும் விளக்க வேண்டும். மேலும் ஓராண்டு காலத்தில் வங்கி கொண்டுள்ள அன்னியச் செலாவணியின் அளவு 25%-க்கு மேல் குறைந்தால் மேலும் செலாவணிப் பெருக்கம் செய்வதை நிறுத்திக் கொள்ள வேண்டும்.[1] இதே போல் குவாடிமாலாவிலும் பண அளவு ஓராண்டில் 15% கூடினாலோ அல்லது குறைந்தாலோ செலாவணிக் குழு அரசுக்கு ஓர் அறிக்கையை அனுப்ப வேண்டும். இவ்வறிக்கை பண அளவில் ஏற்பட்ட மாறுதலுக்குக் காரணமாக உள்ள உள்நாட்டு வெளி நாட்டுச் சக்திகளை விளக்க வேண்டும். இதனால் செலாவணியின் நிலை, மாற்று வீதம், வங்கிக்கடன், வேலை வாய்ப்புகள், உற்பத்தி, பொதுவாக உள்ள நடவடிக்கைகள் முதலியவை எவ்வாறு பாதிக்கப்படும் என்பதையும் விளக்க வேண்டும். மேலும் அரசின் நிருவாகம் சட்டங்கள் மூலமும், பொருளாதார நடவடிக்கைகள் மூலமும் எத்தகைய நடவடிக்கைகள் எடுக்கலாம் என்பதையும் விளக்க வேண்டும்.[2]

குறிப்பிட்ட காலத்தில் பணத்தின் அளவையும் அன்னியச் செலாவணியின் விற்பனையையும் இவ்வாறு வரையறுத்தல் செயற்கையாகவும் அரசு தன்னிச்சைப்படி முடிவு செய்யும் வகையிலும் இருக்கின்றது. ஆனால், செலாவணி முறையின் ஸ்திரத்தன்மை மோசமாவதைக் கண்டு தக்க நடவடிக்கை எடுக்க ஏதேனும் ஓர் அறிகுறி தேவை.

உள்நாட்டுச் செலாவணிக்குக் காப்பாகச் சட்ட பூர்வமான காப்பு நிதியோ அல்லது நாட்டின் அயல் நாட்டுச் செலுத்தல் நிலை ஏற்படுத்தும் தேவைகளுக்கேற்ற புதிய காப்பு விகிதமோ உண்மையான காப்புத் தேவையைக் காட்டும் குறியாகாது; மைய வங்கியின் மதிப்பீடே சரியான வழி காட்டியாகும். இத்தகைய காப்பு விகிதங்களின் குறைபாட்டை உணர்ந்தே ஆஸ்திரேலியா, பிலிப்பைன்ஸ், சிலோன், கொரியா நாடுகள் மைய வங்கிச் சட்டங்களை இயற்றும்போது இவைகளை நீக்கி விட்டனர். உதாரணமாக சிலோன் நாட்டில் மைய வங்கி,

[1] Art. 66-68 Organic Law of the Central Bank of the Dominican Republic 1947.

[2] Art. 97, Law of the Bank of Guatemala, 1945.

அயல் நாட்டுச் செலுத்தல் நிலையில் விழும் துண்டை எதிர் பார்த்து அதற்கான பன்னாட்டு நிதியைக் (international reserve) கைவசம் கொள்ள வேண்டும். இக் காப்பு நிதியின் அளவைத் தீர்மானிப்பதற்கு, வங்கியின் செலாவணிக் குழு எதிர்காலத்தில் கிடைக்கக்கூடிய அன்னியச் செலாவணியையும், அயல் நாடுகளுக்குச் செலுத்தவேண்டிய தொகைகளையும் மைய வங்கி கொண்டுள்ள அன்னியச் செலாவணிப் பொறுப்புகளையும் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும். அவைகளுடைய முதிர்வையும் (maturity) கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும். கூடியவரை மேற்குறிப்பிட்ட மதிப்பீட்டைச் செய்தல் வேண்டும். அயல் நாட்டுக் காப்பு நிதியில் எவைகளைச் சேர்க்கலாம் என்பதைச் சட்டம் விளக்குகின்றது. சிலோன் நாட்டு மைய வங்கி தன் வசம் கொள்ளக்கூடிய அயல் நாட்டு அரசுகளின் பத்திரங்களைச் சட்டம் குறுகிய எல்லைகளுக்குட்படுத்தவில்லை. எனினும் செலாவணிக் குழு ஒரு மைய காப்பு நிதியைக் (nuclear reserve) கொள்ளவேண்டும். இது பொன்னாகவோ அல்லது நேர்முகத்தில் அல்லது மறைமுகத்தில் பொன்னாக மாற்றக்கூடிய செலாவணியாக இருத்தல்வேண்டும்.[1] 1950-ல் நிறைவேறிய சட்டம் கொரிய வங்கியை (Bank of Korea) நிறுவிற்று. செலாவணி வெளியீடு சட்டப்படி இவ் வங்கியின் முற்றுரிமை. ஆனால், இவ்வெளியீட்டுக்கும் டெப்பாசிட்டுப் பொறுப்புகளுக்கும் காப்பாக வங்கி, பொன்னையோ அல்லது அன்னியச் செலாவணியையோ கொள்ள வேண்டிய அவசியம் இல்லை.[2] பர்மாவில் ஒரு விந்தையான நிலை இருக்கின்றது. பர்மா வங்கி (Bank of Burma) கொள்ளவேண்டிய பன்னாட்டுக் காப்புநிதி அதன் பொறுப்பில் 25% வைத்திருக்க வேண்டும். இப் பொறுப்பு அயல் நாட்டுச் செலுத்தல் நிலையில் விழும் துண்டு நிர்ணயிப்பதில்லை. வங்கியின் டெப்பாசிட்டுப் பொறுப்புகளும், புழக்கத்திலுள்ள செலாவணியும் இதை நிர்ணயிக்கும்.[3]

1950-60-ல் தோன்றிய ஆப்பிரிக்க நாடுகளின் புதிய மைய வங்கிகள் சட்டபூர்வமான காப்பு விகிதத்தை அறவே கைவிட முடியவில்லை. பெரும்பாலான நாடுகளில் சட்டம் காப்பு நிதியைச் செலாவணி வெளியீட்டுடன் தொடர்பு படுத்தியது.

[1] Monetary Law Act No. 58 of 1949 as amended by Monetary Law Act No. 33 of 1954. Arts. 65-6. (Hans Aufricht, Central Banking Legislation, p. 305).

[2] 'Central Banking in South East Asia,ed G. Davies, p. 92.

[3] The Union Bank of Burma Act, 1952, Art. 35.

இரு போர்களிடையே இருந்த காப்பு பற்றிய சட்டத்தை இப் பழக்கம் ஒத்திருந்தது. நைஜீரிய மைய வங்கி தன் கேட்புத் தேவையில் 40 சதவீதத்தைச் சட்டபூர்வமான காப்பு நிதியாக வைத்துக்கொள்ள வேண்டும். சூடான் தென் ரொடிசிய நாடுகளில் இச் சதவீதம் 25 ஆகும்; மொராக்கோவில் மொத்த வெளியீட்டில் 1/7 பகுதியைக் காப்புநிதியில் கொள்ள வேண்டும். இதை 1/3 ஆக உயர்த்தலாம். கானாவில் மைய வங்கி தோன்றிய போது அதன் செலாவணியாகிய பவுன் 100% ஸ்டெர்லிங் காப்பைக் கொண்டிருந்தது. 1957ஆம் ஆண்டின் ஆணைப்படி முதன் முதலில் நம்பிக்கை வெளியீட்டுக்கு (feduciary issue) ஏற்பாடாயிற்று. இவ்வெளியீடு பருவகாலக் கணக்குப்படி 50%-க்குக் குறைவாக இருந்தபோதிலும் இவ்வேற்பாடு முக்கியத்துவம் வாய்ந்திருந்தது. இது பொருளாதார முன்னேற்றத்திற்கான நம்பிக்கை வெளியீட்டுக்கு மட்டுமல்லாமல், பண மூலதன மார்க்கட்டுகள் தோன்றுவதற்கும் வழி வகுத்தது.

லிபிய நாட்டு (Libyan) மைய வங்கியின் செயல்கள் கவர்ச்சியுடையன. அவைகளையும் இங்குப் பார்க்கலாம். முதலில் செலாவணிக் குழு 100%பணக்காப்பை வெளியீட்டுக் கீடாகக் கொள்ள வேண்டும். இது அரசின் கட்டுப்பாட்டுக் கொள்கைகளுக்கு இடையூறாக இருந்தது. இதனால் செலாவணிக் குழு சரியான மைய வங்கியாகப் பணி புரிய இயலவில்லை. இப்படி மைய வங்கியின் செலாவணிக் கட்டுப்பாட்டுக் கிடையூறாக உள்ள தடையை 1963ஆம் ஆண்டின் சட்டத் திருத்தம் நீக்கியது. இதன்படி முதன் முதலாக அரசின் கருவூல உண்டியல்களைக் காப்பு நிதியில் சேர்த்துக்கொள்ளலாம். மொத்தச் சொத்தில் 25%-ஐ ஸ்டெர்லிங் அல்லாத காப்பீடாகக் கொள்ளலாம். கானாவின் நிலையத்தைப் போல் இத்தகைய நம்பிக்கை வெளியீட்டைச் செய்யும் அதிகாரத்தைக் கொண்டு லிபிய வங்கி, நாட்டுப் பொருளாதார முன்னேற்றத்திற்கான நிதியை ஆக்க முடிந்தது.[1] சட்ட பூர்வமான காப்பீட்டை நீக்குவதே தற்காலத்திய கோட்பாடு, பழக்க வழக்கங்கள்—இவைகளுடைய நோக்கமாகும். வளர்ச்சியடைந்த அமெரிக்கா போன்ற நாடுகளிலும் கூடப் பொன் காப்பீட்டுக்கு எதிர்ப்புத் தோன்றியது. பொன் செலாவணிக் காப்பாக இயங்குவதில் ஓர் அடிப்படைத் திருத்தத்தை அமெரிக்காவில் புகுத்தினர். தனியார் வசம் அது மதிப்புள்ள சொத்தாக இருப்பதற்குத் தடை விதித்தனர். ஆனால்,

[1] S. K. Basu, Central Banking in Emerging Countries, 1967. pp. 96-7, 101-2.

காலத்திற்கேற்றவாறு செலாவணி வெளியீட்டையும், காப்பு நிதி முறையையும் பிரிக்கப் பெடரல் ரிசர்வ் தலைவர் தயங்கினர். அவர் 1965-ல் கூடக் காப்புநிதிக்கும் வெளியீட்டுக்கும் உள்ள தொடர்பை மதித்தார். காப்புச் சதவீதத்தை 15% ஆகவாவது வைக்க விரும்பினர்.[1]

அமெரிக்காவின் செலுத்தல் நிலையில் தொடர்ந்து துண்டு விழுந்தமையால், டாலரைப் பொன்னுக மாற்றப் பலர் முனைந்தனர். பொன் நெருக்கடி (gold crisis) ஏற்பட்டது. இதன் விளைவாகப் பொன் செலாவணி வெளியீட்டின் 'அடையாளத் தொடர்பை'த் (symbolic tie) துண்டித்தனர். பெடரல் ரிசர்வ் செலாவணித் தாளுக்குக் காப்பாக 25% பொன் இருத்தல் வேண்டும் என்ற விதியை நீக்கும் ஒரு சட்டத்தில் ஜனதிபதி ஜான்சன் 1968 மார்ச்சு 19-ல் கையெழுத்திட்டார். இதுகாறும் காப்பிலிருந்த பொன் முழுவதையும் கொண்டு அமெரிக்கா குறுகிய காலத்தில் செலுத்தல் நிலையில் விழும் துண்டைச் சமாளிக்கலாம். பெடரல் ரிசர்வ் முறையின் தலைவர் இப்பொழுது தன் கருத்தை மாற்றிக் கொண்டார். வெளியீட்டைப் பொன் காப்பீட்டிலிருந்து விடுவிக்கத்தக்க சட்டத்தை அவரே பரிந்துரைத்தார்.

### போதிய காப்பு பற்றிய கருத்து

செலாவணிக் கொள்கையின் நோக்கத்தைக் கொண்டே தான் வங்கி தன் வசமுள்ள காப்புத் தொகை போதுமா என்பதை முடிவு செய்யவேண்டும். இந்த லட்சியத்தில் உள்நாட்டு, வெளிநாட்டு அம்சங்கள் உள. வெளியீடு—பொன்காப்பு—இவைகளிடையே கண்டிப்பான வீதத் தொடர்பைக் கொண்டு உள்நாட்டு நோக்கத்தைச் செயல்படுத்த முடியாது இதற்குச் சரியான செலாவணிக் கட்டுப்பாடு வேண்டும். எல்லா நாடுகளிலும் உள்நாட்டுப் பணப்புழக்கம் கொண்டிருக்கும் குறைவான காப்பீடு இதைக் காட்டுகிறது. பன்னுட்டுச் செலாவணி வேலையே காப்பு நிதியின் உண்மையான அடிப்படையாகும். நாடுகளின் செலுத்து நிலையில் விழும் குறையைச் சரிக்கட்டுவதற்காகவே காப்பு நிதியைப் பயன்படுத்துகின்றனர். செலாவணியின் மாற்றுமுறை (exchange system) சரிவர இயங்குவதும் காப்பு நிதியின் நோக்கமாகும்.

[1] Federal Reserve Bulletin, 1965, pp. 225. Statement of Chairman Martin before Senate Committee on Banking and Commerce.

'போதுமான காப்பீடு' என்பதை வரையறுப்பது கடினம். இதுபற்றிய விளக்கம் நாட்டுக்கு நாடு வேறுபடுகின்றது. எல்லா நாடுகளுக்கும் பொருந்தும் 'போதுமான காப்பு' எவ்வாறிருக்க வேண்டும் என்று தீர்மானமாகக் கூறமுடியாது. எல்லாப் பருவங்களுக்கும் பொருந்தும் காப்பு நிதியின் அளவைத் தீர்மானிப்பது கடினம். ஒரு நாட்டில் உள்ள சூழ்நிலை, அதன் வரலாறு, மரபுகள், சேமிப்புப் பழக்கங்கள், பன்னாட்டு வங்கிகளுடைய நிலை முதலியவை காப்பு நிதியின் அளவை நிர்ணயிக்கும். மேலும் ஒரு குறிப்பிட்ட கொள்கையை முன்னிட்டுப் பின்பற்றும் கொள்கை மற்றவற்றுக்குப் பொருந்தாது. குறிப்பிட்ட ஒரு செலாவணி முறை ஒரு குறிப்பிட்ட காப்பு நிதிக்குப் பொருந்தும், ஆனால், வேறொரு செலாவணி முறைக்கு இந்த நிதி போதாமல் இருக்கலாம். எனவே, ஒரு நாட்டுக்குகந்த காப்பு நிதியின் அளவை நிர்ணயித்தல் கடினம்.[1] ஆனால், பொதுவான கூற்று ஒன்றைக் குறிப்பிடலாம். அயல் நாட்டு வர்த்தகத்தைப் பெரிதும் நம்பியுள்ள நாட்டிலும், செலுத்து நிலையில் பருவகால ஏற்றத் தாழ்வுகள் மிகுதியாக உள்ள நாடுகளிலும், குறுகிய காலத்தில் செலுத்தலில் பெரும் துண்டு விழும் நாட்டிலும், பொருளாதார அரசியல் சூழ்நிலைகளில் நிலையின்மை இருக்கும் நாடுகளிலும் மிகுதியான அளவு காப்பு நிதி வேண்டும். இத்தகைய நாடுகள் தொழில் முன்னேற்றம் அடைந்த நாடுகளையும் பொருளாதார உற்பத்தி பரவலாக உள்ள நாடுகளையும்விட அதிகத் தொகையைக் காப்பில் வைத்துக்கொள்ள வேண்டும். நைஜீரியா போன்ற சில ஆப்பிரிக்க நாடுகளில் எவ்வளவு காப்பீடு வேண்டும் என்பதைக் குறிப்பிடச் சில மாதங்களில் இறக்குமதியாகும் பண்டங்களின் மதிப்பைக் கொண்டு நிர்ணயம் செய்கின்றனர்.[2] ஆனால், உபரிக் காப்புத் தொகையே பயனுள்ளதாக இருக்கும். உதாரணமாகக் குறைந்தபட்சக் காப்பு நிதி நாட்டின் நான்குமாத இறக்குமதிக்குச் சமமாக இருந்தால் செலாவணித் தாளுக்குக் காப்பாக உள்ள நிதியைக் கொண்டு, செலுத்து நிலையில் தோன்றும் தற்காலிகத் துண்டைச் சரிக்கட்ட முடியாது. செலுத்து நிலையில் இரு மாதத் துண்டைச் சரிக்கட்ட வேண்டிய தொகையையே காப்பு நிதி கொண்டிருப்பதை நாம் நடைமுறையில் காணலாம். இது மிகவும் குறைவான தொகை.[3]

[1] 'International Reserves and Liquidity' (International Monetary Fund), p. 45.

[2] Annual Report of the Central Bank of Nigeria for the year 1964, p. 10.

[3] S. K. Basu 'Central Banking in Emerging Countries (1967)', p. 99.

# 5. வங்கிவீத மாற்றம் மூலம் இயங்கும் செலாவணிக் கொள்கை

செலாவணிக் கொள்கையை மீண்டும் 1956-60-ல் பின் பற்றியதையும், எத்தகைய மாறிய சூழ்நிலையில் கொள்கை செயல்பட்டது என்பதையும் இங்குக் காண்போம். செலாவணிக் கொள்கையுடன் தொடர்புள்ள மற்றப் பிரச்சினைகளையும் காண லாம். வங்கி வீதம் (Bank rate), வெளி மார்க்கட்டு நடவடிக்கை (open market operations), காப்பு விகிதத்தை மாற்றுதல் (variable reserve rate) (இக் கருவியின் பலவகைகள் உள்பட) தேர்வுச் செலாவணிக் கட்டுப்பாடுகள் (selective credit control techniques) ஆகிய பற்பல செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவி களை ஆராயவேண்டும். இவைகளுள் மிகமுக்கியமானதும் கருத்து வேற்றுமைகளுக்கும் உட்பட்டது வங்கி வீதக் கருவியாகும். வங்கி வீதம் எவ்வளவு செயல் திறன் கொண்டுள்ளது என்பதை முதன் முதலில் காணவேண்டும். பிற செலாவணிக் கொள்கைக் கருவிகளையும், தேர்வுச் செலாவணிக் கருவிகளையும் பின்வரும் அதிகாரங்களில் காணலாம்.

**வட்டி—முதலீட்டுக்கான தேவையின் நெகிழ்ச்சியின்மை**

வட்டி வீதம் மூலம் செயல்படும் பணக்கொள்கையையும் பொருளாதாரக் கொள்கையையும் இயக்க முடியும் என்ற கோட்பாட்டை 1930-ல் நிகழ்ந்த மாபெரும் மந்தம் தகர்த்தது. வட்டி வீதம் மொத்தச் செலவின் ஒரு பகுதி. எனவே, அதை மாற்றுவதன் மூலம் கடன் வாங்குவோரின் முடிவுகளை மாற்றுவது கடினம். சில முதலீடுகள் குறுகிய காலத்தியவை. தளவாடங்கள் பற்றிய முடிவுகள் மிகக் குறுகிய காலத்தியவை. வட்டிவீத மாற்றங்கள் அடக்கச் செலவை மாற்றுவதில்லை. நீண்டகால முதலீடுகளில் வட்டி மாற்றங்கள் மொத்த அடக்கச் செலவுகளைப் பாதிக்கும். ஆனால், எதிர்கால இடர்களுக்காகச் செய்ய வேண்டிய ஏற்பாடுகள் வட்டி மாற்றத்தின் விளைவுகளை நீக்கிவிடக்கூடும். ஆகையால் முதலீட்டுத் தேவை வட்டிக்கு நெகிழ்ச்சியற்றது. சில நீண்ட கால முதலீடுகள் இருக்கின்றன. பொது நலத் தொழில்கள்

(public utilities), கட்டடத் தொழில், உறுதியான துய்ப்புப் பண்டத் தொழில் முதலியவைகளில் முதலீடு நெகிழ்ச்சி கொண்டுள்ளது. அதாவது அது வட்டி வீதத்தைப் பொறுத்து மாறும் என்று எச். டி. ஹெண்டர்சன் (H. D. Henderson) குறிப்பிடுகின்ருர். வட்டிவீத மாற்றம் மூலம் மக்கள் எண்ணங்களைத் திருத்தி ஓரளவு பொருளாதார நடவடிக்கைகளை ஒழுங்கு படுத்தலாம்.[1]

நிலையற்ற பொருளாதாரத்தில் திட்ட காலம் குறுகியதாக இருந்தால் வட்டிவீத மாற்றம் தொழிலைக் கணிசமாகக் குறைக்காது என்றும் ஆனல் பொது நலத் தொழில்கள் (public utilities) இதற்கு விதிவிலக்காகலாம் என்றும் திரு. ஆர். ஏ. மஸ் கிரேவ் (Mr. Musgrave) அவர்கள் அண்மையில் வெளியிட்ட கட்டுரையில் குறிப்பிடுகின்ருர். தொழிலில் உள்ள இடர் ஏற்படுத்தும் விளைவுகளே மூலதனத்தின் அடக்கச் செலவைவிட முதலீட்டைப் பாதிக்கின்றது.[2]

செலாவணிக் கொள்கையும் கடன் நிருவாகமும்

போர்க்காலத்திலும் அதன் பின்னரும், பொதுக்கடன் (public debt) மிக அதிகமாக வளர்ந்தது. இதை வங்கிகளும் மற்ற நிதி நிலையங்களும் ஏற்றன. இச் சூழ்நிலையில் அமித ரொக்க நிலை ஏற்பட்டதால் பணக் கொள்கை பற்றிய கருத்து வேற்றுமையில் புதிய திருப்பம் ஏற்பட்டது. அமித ரொக்க நிலை இருக்கும்போது பணக் கொள்கை செயலற்றிருக்கின்றது. முதலீட்டுக்கு ஏற்படும் தேவை உயர்ந்த அளவை எட்டும்போது அதை வட்டிவீதம் மூலம் கட்டுப்படுத்த முடியாது. மார்க்கட்டு நிமிர்ந்திருக்கும்போது தொழிலதிபர்கள் நம்பிக்கையுடனிருப்பர்; பண வீக்கம் முதலீட்டை ஊக்குவிக்கும். இந்த நிலையில் பணத்தின் அளிப்பு மாருவிடினும் மக்களுடைய செலவு கூடும், குறையாது. இதற்கான ஊக்கத்தைச் செலாவணியின் புழக்க வேகம் அளிக்கும். மேலும் சிறப்பிட்ட பத்திர மார்க்கட்டில் (gilt edged market) வீழ்ச்சி விளையும் என்ற அச்சத்தினுல் வட்டி வீதங்களைக் கணிசமாக உயர்த்தத் தயங்கினர். வட்டி வீதத்தைச் சிறிது உயர்த்தினுலும் அரசு பத்திர மார்க்கட்டு பாதிக்கப்படும் என்ற அச்சம் பணக் கொள்கை செயலற்றது,

[1] H. D. Henderson, 'The Significance of the Interest Rate', Oxford Studies in Price Mechanism (ed. T. Wilson and P.W.S. Andrews).

[2] 'Credit Controls, Interest Rate and Management of Public Debt', in Essays in Honour of Prof. A. Hanson.

அபாயகரமானது என்ற எடுகோளுக்கு வழி கோலியது.[1] பொதுக் கடன் நிருவாகத்திற்காகவும், அரசு பத்திர மார்க்கட்டை நிலைப் படுத்துவதற்காகவும், வட்டி மாற்றத்தின் மூலம் செலாவணிக் கொள்கையைச் செயல்படுத்துவதைக் கைவிட நேர்ந்தது. ஆனால், பல பொருளியலார்களும், வங்கியரும் வட்டி மாற்றக் கருவிக்குச் சுதந்திர இயக்கத்தை விரும்பினர், வங்கியருள் லாயிட்ஸ் வங்கியின் பால்ஃபர் பிரபுவும் (Lord Balfour), பல்கலைக் கழகப் பேராசிரியருள் திரு. ராபர்ட்சனும் (Mr. Robertson) வட்டி வீதக் கருவியைச் சிறந்த செலாவணிக் கருவியென ஆதரித்தனர். 'வட்டி வீதம் என்ற மதிப்புக்குரிய அங்கியைத் தீயில் எறிந்து விட்டு உலக வரலாற்றின் இன்றைய நிலையில் இலவசப் பொய்ப் பற்களைத் தாராளமாகப் பயன்படுத்துவதை' திரு. ராபர்ட்சன் சாடினார்.[2] ஸ்திர நிலையை ஏற்படுத்துவதற்குப் பணக் கொள்கையை நம்பலாகாது என்ற கருத்தை அமெரிக்காவில் டக்லஸ் குழுவினர் நிராகரித்தனர். இதற்கு மாருகக் குழுவினர், ஸ்திர நிலையை ஏற்படுத்துவதற்குச் செலாவணிக் கொள் கையை, நிதிக் கொள்கைகளை மற்றக் கொள்கைகளுடனும் சேர்த்துச் செயலாற்ற வேண்டும் என்று குறிப்பிட்டனர்.[3] பேராசிரியர் சேயர்ஸ் (Prof. Sayers), 'தேவ தூதர்கள் கருத்து களைப் பரிமாற்றிக்கொள்ளும் தருணத்தில் நாம் இப் பேச்சு வார்த்தைகளுக்கு முடிவு கூறுதல் சரியல்ல' என்று பொருத்தமாகக் கூறுகின்றார். எனவே, இதுதான் முடிவு என்று பிடிவாதம் செய்வதைவிடப் பணக் கொள்கையின் பல்வேறு கூறுகளைப் பின்வரும் பத்திகளில் ஆராயலாம். கொள்கையின் குறைபாடுகளைக் குறிப்பிட்டுக் காட்டலாம்.

### செலாவணி, வங்கிக் கொள்கைகள் செயல்படும் புதிய சூழ்நிலை

இரண்டாவது போருக்கும் உலக மந்தத்திற்கும் முன், வங்கி வீதக் கருவி இயங்கிய பொருளாதாரச் சூழ்நிலை இன்று முற்றிலும் மாறிவிட்டது. 1929-க்குப் பின் கீனிசியப் பொருளாதாரம் செல்வாக்குப் பெற்றது. தொழிலைக் குறுகியகாலச் சுழலிலிருந்து விடுத்து ஸ்திர நிலைக்குக் கொண்டுவரும் பழக்கத்துக்கு மாருக நாட்டில் உயர்ந்த அளவு உற்பத்தியையும், வேலை வாய்ப்பையும் நிலைநாட்டும் கொள்கையை நாடுகள் ஏற்றன. செலாவணி

[1] Is a Rise in Interest Rates Desirable or Inevitable?', American Economic Review, December 1945.

[2] Lloyds Bank Monthly Review, April 1949, p. 13.

[3] Report of the Sub-Committee on Economic Report, 1950, p. 17, quoted in 'Money and Economic Activity,' ed. L. S. Ritter, pp. 198-9.

திருவாகிகள் பழைய கோட்பாடுகளைக் கைவிட்டனர். கொள்கையைத் தீட்டுவதில் மதிப்பீடும், புத்திசாலித்தனமும் இடம் பெற்றன. மைய வங்கியுடன் தொடர்பில்லாத புதிய அரசாங்கக் கட்டுப்பாடுகள் தோன்றின. புதிய கடன் நிலையங்கள் அரசின் நிருவாகத்தில் தோன்றின. வங்கிகள் ஏராளமான ரொக்க நிலையைப் பெற்றன. இவையனைத்தும் மைய வங்கியின் திறமையைப் பாதித்தன. செலாவணிக் கட்டுப்பாட்டைத் திறம்படச் செய்ய அனுமதிக்கவில்லை. நாட்டுடைமையான தொழில்களின் எண்ணிக்கை பெருகிவிட்டது. பல நிறுவனங்கள் அரசின் ஆதிக்கத்திற்குட்பட்டன. எனவே, மார்க்கட்டு முறையில் எடுக்கப்பட வேண்டிய முடிவுகளை அரசு நிருவாகிகள் எடுத்தனர். கடனுதவி கிடைப்பதும் அதன் அடக்கச் செலவும் பொருளாதாரத்தின் பெரும்பகுதிகளைப் பாதிக்க முடியாது. வரிவீதங்கள் உயர்ந்தமையாலும், பல தொழில்கள் சொந்த நிதி ஏற்பாடுகள் செய்ததாலும் வட்டிவீத மாற்றங்கள் வங்கிக் கடனின் தேவையைப் பாதிப்பதில்லை. இந்த நிலையில் வட்டிவீதம் சிறிது உயர்ந்தால் நீண்டகால அரசு பத்திரங்களுக்குத் தேவை பெருகுவதில்லை. உறுதித் துய்ப்புப் பண்டச் செலவும் குறைவதில்லை. விலைகள் 10 முதல் 15% உயரும் போது வட்டி வீதத்தில் சிறு உயர்வு முதலீட்டைப் பாதிப்பதில்லை.[1]

வர்த்தக வங்கிகளின் தன்மையே பெரிதும் மாற்றப்பட்டிருக்கின்றது. முன்னர் வர்த்தகத்திற்கும் தொழிலுக்கும் அவை குறுகிய காலக் கடன்களை அளித்தன. இன்று அவை பொதுக் கடனை ஏற்றிருக்கின்றன. அவைகளின் சொத்துகளில் பெரும்பகுதி பொதுக்கடன் பத்திரங்களாகவே இருக்கின்றன. இவ்வளவு அதிகமாக அரசு பத்திரங்களைக் கொண்டிருப்பதால், அவை மைய வங்கிக் கட்டுப்பாட்டிற்கப்பால் கணிசமான தொகையைக் கடனாகப் பெறலாம்[2]. வட்டி வீதங்கள் உயர்ந்தால் வங்கிகள் கொண்டுள்ள இத்தகைய சொத்துகளின் மதிப்புக் குறையும். வட்டியுயர்வை அரசாங்கமும் வெறுக்கின்றது. ஏனெனில், இத்தகைய உயர்வு அதன் வட்டிப் பளுவையும் உயர்த்துகின்றது. இந்த நிலையில் மைய வங்கியின் கொள்கைகளையும், செய்முறைகளையும் புதிய சூழ்நிலைக்கேற்றவாறு திருத்திக்கொள்ள வேண்டியதாயிற்று. பழைய எளிய

[1] S. E. Harris, 'The Controversy over Monetary Policy' Review of Economics & Statistics', August 1951.

[2] L. H. Seltzer, The Changed Environment of Monetary-Banking Policy', in American Economic Review Supplement, 1946.

செலாவணிக் கொள்கை இந்த நிலையில் பயனற்றிருக்கும். பொருளாதாரத்தில் தோன்றியுள்ள புதிய பிரச்சினைகளுக்கேற்ப மைய வங்கி, தன் கொள்கையை மறு பரிசீலனை செய்து புதிய செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவிகளையும் சேர்த்துக் கொள்கையைச் செயலாற்ற வேண்டும்.

## 1950-60-ல் செலாவணிக் கொள்கையின் மீட்சி

1950-60-ல், கொரியப் போருக்குப் பின் செலாவணிக் கொள்கை மீண்டும் தலைதூக்கியது. கடன் கொடுப்போர் செயல்களைவிட வாங்குவோரின் செயல்கள் முக்கியத்துவம் பெற்றன. கடன் கொடுப்போர், கொடுப்பதற்கு இசைவது முக்கியமாயிற்று. அவர்கள் உயர் வட்டியில்கூடக் கடன் கொடுக்க மறுக்கலாம்; வட்டியை உயர்த்துவதைவிடக் கடனளிக்க மறுக்கலாம். வட்டி சிறிதளவு உயர்ந்தபொழுதுகூட அவர்கள் தம் ரொக்க நிலையுள்ள சொத்துகளை விற்பதில் எச்சரிக்கையுடன் இருக்க விரும்பலாம். மூலதன இழப்பு ஏற்படும் என்ற அச்சத்தால் அவர்கள் தம் நீண்டகால அரசு பத்திரங்களைத் தம் கைவசம் வைத்துக்கொள்ள முடிவு செய்யலாம். இதனால் அவர்களுடைய ரொக்கத் தன்மை குறையலாம். கடன் வாங்குவோரும் கடன் வாங்குவதற்குத் தயங்கலாம். வட்டியுயர்வைவிட, நீண்டகாலப் பத்திரங்களுடைய ரொக்கத் தன்மை பற்றிய நிச்சயமின்மையே (uncertainty) இதற்குக் காரணமாக இருக்கலாம். செலாவணிக் கட்டுப்பாடு நடைபெறும்பொழுது இயங்கும் சக்திகளின் அறிகுறியே வட்டியுயர்வு. இத்தகைய எண்ணமே 'கடன் கிடைப்பு' பற்றிய (availability doctrine) கோட்பாட்டை ராபர்ட் வி. ரூசா (Robert V. Roosa) புனைவதற்கு வழிகோலியது. இக் கோட்பாடு கடனின் 'அடக்கச் செலவைவிட' (cost) அது கிடைப்பதையே (availability) வலியுறுத்துகிறது.[1]

## செலாவணிக் கொள்கை பற்றிய சமீபத் திறனாய்வு

உயரும் வட்டிவீதம் உறக்க நிலையிலுள்ள தொகைகளை வெளிப்படுத்த உதவுகின்றது என்ற கருத்தை இன்று உணர்கின்றனர். இதனால் செலாவணிக் கொள்கையின் புதிய குறைபாடு ஒன்றைப் பலர் சுட்டிக் காட்டுகின்றனர். வீக்க காலத்தில் (boom) கடனுக்குப் புதிய தேவைகள் எழுகின்றன. முதலீட்டை அரசு பத்திரத்திலிருந்து தொழிலதிபர்களுக்குத் திருப்புகின்

[1] Robert V. Roosa 'Interest Rates and the Central Bank', in Money Trade and Economic Growth. (Essays in honour of J. H. Williams).

றனர். அரசு பத்திரங்களை விற்றுத் தொழில் கடன்களைக் கொடுக்கின்றனர். வட்டி வீதங்கள் உயருவதால் ரொக்கத் தொகைகளை உயர் வட்டிக்குக் கடனாகக் கொடுக்கின்றனர். உறக்க நிலையிலிருந்த தொகைகள் இயக்கு நிலைக்கு வருகின்றன. புழக்கவேகம் கூடுகின்றது; பண அளவு ஒரே நிலையிலிருந்த போதிலும் செலவு கூடுகின்றது; பணவீக்கம் வலிமை பெறு கின்றது. செலாவணிக் கட்டுப்பாடு பாதிக்கப்படுகின்றது. உறக்க நிலைத் தொகைகள் இயக்க நிலைக்கு வந்தபின் சமுதா யத்தின் பழக்கங்கள் புதிய சூழ்நிலைக்குத் தகுந்தவாறு அமை கின்றன. ஆனால், இடைக்காலச் செலாவணிக் கொள்கை வெற்றிகரமாக இருக்கலாம். இவ்விடைக்காலத்தைத் தவிர, மற்றக் காலங்களில் செலாவணிக் கட்டுப்பாடு நலிவுற்றதாகவும் மற்றக் கருவிகளுடன் சேர்த்துக்கொள்ள வேண்டிய துணைக் கருவியாகவும் இருக்கும்.

### செலாவணிக் கொள்கையின் தாமதங்கள்

குறுகிய காலத்தில் செலாவணிக் கொள்கை பலனளிப்பதில்லை. அது நெடுங்காலத்திலேயே பலன் கொடுக்கின்றது. பேராசிரியர் டபிள்யு. எல். ஸ்மித் (Prof. W. L. Smith) மூன்று வகைத் தாமதங் களைக் குறிப்பிடுகின்றார்.[1] கொள்கையைச் செயல்படுத்துவதிலும், நிருவாகம் செய்வதிலும் இனம் காணுவதிலும் தாமதங்கள் ஏற்படு கின்றன. செலாவணிக் கொள்கையில் நடவடிக்கைகள் தேவை என்பதைக் காணுவதிலும், அவைகளைத் தொடங்குவதிலும், அவை பலனளிப்பதிலும் ஏற்படும் தாமதமே மூன்று வகைத் தாமதங்கள். மையவங்கியின் ஆய்வுத்துறை எவ்வளவு விரைவில் புள்ளி விவரங்களைச் சேகரித்து, அவைகளைக் கொண்டு நிலைமையை அறிகின்றதோ அந்த அளவு தாமதங்கள் நீங்கு கின்றன. பொருளாதார நிலையில் முன்னறிவிப்புக் கிடைத்தால் இத் தாமதத்தை அறவே நீக்கிவிடலாம். நிருவாகத் தாமதம் அரசின் திருவாக எந்திரத்தைப் பொறுத்திருக்கின்றது. செலா வணிக் கொள்கையை வட்டி வீதம் மூலம் இயக்கும்போது கவனத்துடன், எச்சரிக்கையுடன் நடந்துகொள்ளவேண்டும். நிதி மார்க்கட்டு அதைக் குலைக்கும் நிலையிலிருந்து சகஜ நிலைக்கு வரும் தன்மையைக் கொண்டிருப்பின், அரசின் கடன் நிருவாகம் பாதிக்கப்படாமல் கொள்கையைச் செயல்படுத்தவேண்டும். இறுதியாகக் கொள்கையைச் செயல்படுத்தும்போது எழும் தாமதம் கீழ்க்காணும் முறையில் தோன்றுகிறது. வட்டி வீதத்

[1] United States Monetary Policy. W. L. Smith, 'Some Unsettled Issues in Monetary Policy', pp. 14–30. Also W. L. Smith 'On the Effectiveness of Monetary Policy', in American Economic Review, September 1956.

தின் விளைவுகள் நிகழ்வதற்குத் தாமதமாகும். கடன்கிடைப்பதில் ஏற்படும் மாற்றம் தாமதமாகலாம். வருமானத்தை விளைவிக்கும் செலவுகளும் தாமதமாக மாறலாம். பல்வேறு செலவினங்களிடையே காலதாமதம் வேறுபட்டிருக்கலாம். நுகர்வோர் பெறும் கடனுதவியை எடுத்துக்கொண்டால் காலதாமதம் இரு மாதங்களாகவும், கட்டடவேலைக் கடனுதவியில் ஓராண்டாகவும். இருக்கலாம் என்று பேராசிரியர் மேயர் (Prof. Mayer) கூறுகின்றார்.[1] இத்தகைய தாமதங்களை நோக்கும்போது பொருளாதாரத்தில் ஸ்திர நிலையைப் பேணுவதற்குச் செலாவணிக் கொள்கை சிறந்ததன்று என்பது புலனாகின்றது. பணவிக்கத்தைக் கட்டுப்படுத்துவதற்காகத் தொடங்கிய கொள்கையின் விளைவுகள் வீக்ககாலம் முடிந்து. மந்தம் ஆரம்பமான பிறகும் இருக்கலாம். இத்தகைய சூழ்நிலையில் செலாவணிக்கொள்கையை ஆள்வது அபாயகரமாக இருக்கலாம். மற்றக் கட்டுப்பாட்டுக் கருவிகளையும் நம்ப வேண்டியிருக்கலாம். அண்மையில் நடத்திய ஆய்வுகள் மேற்குறிப்பிட்ட காலதாமதம் மிக அதிகமாக இராது என்பதையும் இதை இனங்காணுவது கடினமன்று என்பதையும் புலப்படுத்தியுள்ளன. ஆனால், இக் குறைகளை எளிதெனத் தள்ளிவிடவோ அல்லது புறக்கணிக்கவோ முடியாது. செலாவணி நிருவாகத்தில் எழும் இடர்ப்பாடுகளையும், காலதாமதத்தையும் கண்டு சில பொருளியலார் நிருவாகச் செலாவணி முறையை விடுத்து, ஒரு குறிப்பிட்ட விதிமுறையில் இயங்கும் செலாவணியமைப்பை ஏற்கலாம் என்று பரிந்துரைக்கின்றனர். இம்முறையில் குறிப்பிட்ட விதிப்படி செலாவணிப் பெருக்கம் ஏற்படும். இயல்பான பணத்தேவைப் (monetary demand) பெருக்கத்தை ஒத்துச்செலாவணிப் பெருக்கம் ஏற்படுகின்றது. இந்த முறை மிதக்கும் மாற்று வீதத்தை (floating exchange rate) அடிப்படையாகக் கொண்டிருப்பதால் இதற்குப் பல மறுப்புத் தெரிவிக்கலாம் என்று ஹாரி ஜான்சன் (Harry Johnson) கூறுகின்றார்.[2]

### செலாவணிக் கொள்கையின் திசை நோக்கு (Directional stant)

செலாவணிக் கொள்கை பயனற்றதாக இருக்கின்றது. மேலும் ஓரம் காட்டுகின்றது, செலாவணிக் கட்டுப்பாடு 'திசை நோக்கு' உடையதாகின்றது. கடன் வாங்குவோருள் சிலர் மீது அமிதக் கட்டுப்பாட்டை அமல் செய்கின்றது. சிறிய தொழிலதிபர், நுகர்வோர், குடியிருப்பு வீடு கட்டுவோர், மாநில அரசுகள்

[1] Thomas Mayer, 'The Inflexibility of Monetary Policy', Review of Economics and Statistics, November 1958, pp. 358–75.

[2] Harry Johnson, 'Current Issues in Monetary Policy' in Bankers' Magazine, November 1968, p. 257.

முதலியோர் மீது கட்டுப்பாடு அதிகமிருக்கின்றது. இவர்கள் உயர்வட்டி செலுத்த வேண்டும். செலாவணிக் கொள்கையைப் பொதுவாக நோக்கும்போது அதில் 'சமத்துவமின்மை' இருக்கின்றது.[1] இதற்குச் சில காரணங்களைத் திரு. ஷ்லெசிங்கர் (Mr. Schlesinger) காட்டியுள்ளார். கடன் வாங்குவோர் பல வகைப்படுவர். இவர்களுடைய கடன் தேவையின் நெகிழ்ச்சி வேறுபட்டிருக்கின்றது. இரண்டாவதாக இவர்கள் கடனை நம்புவதோடு மட்டுமல்லாமல் சில குறிப்பிட்ட கடன் வழிகளை நம்பியுள்ளனர். செலாவணிக் கொள்கை ஓரம் காட்டுகின்றது என்று கூறுவோர் பண மார்க்கட்டுச் சாதாரண முறையில் இயங்கத் தவறும் நிலையை மனத்தில் கொண்டிருக்கலாம். பணக் கட்டுப்பாட்டுக் காலத்தில் சில வகையினருக்கு எதிராக ஓரம் காட்டப்படுகின்றது என்பதை மெய்ப்பிக்கலாம். பெரும்பாலும் 'பேதம்' என்ற சொல் ஒருவகைப் பொருளில் ஆளப்படுகின்றது. பொருளாதாரத்தில் சில பகுதிகள் மற்றவைகளைவிட விரைவில் அதிகமாகப் பாதிக்கப்படும். தவணை விற்பனைக் கடன், வட்டிவீத மாற்றத்தினால் பாதிக்கப்படாது. வீக்க காலத்தில் தவணைக் கடன் தேவை மிகுதியடையும். மந்த காலத்தில் இத் தேவை மெதுவாகக் குறையும்.

### செலாவணிக் கொள்கையின் காரணமாகச் சமுதாய முதலீட்டினைக் குறைத்தல்

பணக்கொள்கைமீது மேலும் ஒரு குற்றச்சாட்டைச் சுமத்தியுள்ளனர். இது செம்மையான சமுதாயக் கொள்கைக்கு ஒவ்வாததாக இருக்கின்றது. சமுதாய முதலீட்டைச் செலாவணிக் கொள்கை மிகவும் கட்டுப்படுத்துகின்றது என்பது சிலர் வாதம். சமுதாயத்தின் லட்சியக்கிரமத்தைப் பாதிக்கின்றது என்பது இவ் வாதத்தின் அடிப்படை. சமுதாயத்திலுள்ள சீர்கேடுகளை முதலீட்டுத் திசை திருப்பல் அதிகப்படுத்துகின்றது. கல்வி, நகராட்சிப் பணிகள், ஆற்றல் உற்பத்தி (மின் ஆற்றல் போன்றவை), தொழில் தளவாடம், போக்குவரத்து ஆகியவற்றிலிருந்து மோட்டார் கார்கள், குளிர் சாதனப் பெட்டிகள் (Refrigerators), தொலைக் காட்சிப் பெட்டிகள் முதலிய துறைகளுக்கு முதலீட்டைச் செலாவணிக் கொள்கை திருப்பும். எவை சமுதாயத்திற்கு மற்றவைகளைவிட முக்கியமானவை என்பது பிரச்சினை. சமுதாய நலன்களைக் கூட்டுவன யாவை என்பதைப் பொருளியலார் கூற முடியாது. இதை மற்றவர்கள் கூற

[1] J. R. Schlesinger, 'Monetary Policy and its Critics,' in Journal of Political Economy, December 1960, pp. 601-16.

வேண்டும். ஆயினும், செலாவணிக் கொள்கையைக் கை விட்டால் மொத்தச் செலவைக் கட்டுப்படுத்த வேறு ஒரு முறையைக் கையாள வேண்டும். மொத்தச் செலவுகளைக் கட்டுப் படுத்த வேறு ஒரு பதிலி முறையைக் காணுவதற்கு முன் செலாவணி முறையைக் கைவிடுவது உசிதமன்று. நிதிக்கொள்கையும் தேர்வுச் செலாவணிக் கருவிகளும் (selective credit controls) செலாவணிக் கருவிக்குப் பதிலாகக் கையாளக் கூடிய வேறு சில கருவிகள். நிதிக்கட்டுப்பாடுகள் செலாவணிக் கொள்கையைப்போல் கடுமையாக இருக்கக்கூடும். தேர்வுக் கட்டுப்பாடுகள், நிருவாக, அரசியல், பொருளாதாரச் சம்பந்தமுள்ள குறைபாடுகள் நிறைந்தனவாக இருக்கின்றன. ஆனால், ஒருவகைக் கட்டுப்பாடுகளுடைய அனுகூலங்களையோ அல்லது மற்றவைகளுடைய தீமைகளையோ மிகைப்படுத்தக் கூடாது.

ஆங்கிலத் தொழில்களின் கூட்டமைப்பு (Federation of British Industries) அதன் உறுப்பினர்களிடையே 1955-ல் ஒரு கணக்கெடுப்பு எடுத்தது. பிரிட்டிஷ் வர்த்தகக் குழு (British Chamber of Commerce) 1958-லும், பர்மிங்காம் வர்த்தகக் குழு (Birmingham Chamber of Commerce) 1957-லும் ஆய்வு செய்தன. வினாத் தொகுப்புக்குக் (questionnaires) கிடைத்த விடைகளைக் கொண்டு, தொழிலதிபர்களுள் ஒரு சிலரே வட்டி வீதத்தை முக்கியமெனக் கருதினர் என்றும் பெரும்பான்மையோர் வட்டியைக் கவனிக்கவில்லை என்றும் முடிவு கண்டனர். நிறுவனங்களுள் எவ்வளவு சதவீதம் ஒரு கருத்தைத் தெரிவித்தன என்பதைக் கொண்டு சரியான முடிவுக்கு வர முடியாது. வட்டி வீதத்தை முக்கியமெனக் கருதிய சில நிறுவனங்கள் கணிசமான தொகையைக் கடன் வாங்கி முதலீடு செய்தவையாக இருக்கலாம். மேலும், நாட்டிலுள்ள பொருளாதாரநிலை, செலாவணிக் கொள்கையை ஒட்டி நிறுவனங்கள் எடுக்கும் முடிவுகளைப் பாதிக்கலாம். வீக்ககாலத்துக்கேற்ற முடிவுகள் மந்த காலத்திற்குப் பொருந்தா. மேலும், தொழில் அதிபர்கள் தம் முடிவை எவை பாதிக்கின்றன என்று கூறுவது கடினம். விற்பனைபோன்ற நேர்வழித் தூண்டுதல்களே, எதிர்மறையான வட்டிவீதங்கள் போன்றவைகளைவிடச் சக்தி வாய்ந்தவை என்று ஒருவர் குறிப்பிடுகின்றார்.[1]

பிரிட்டிஷ் தொழில்களின் கூட்டமைப்பு எடுத்த கணக்கை ராட்கிளிப் குழுவினர் பரிசீலனை செய்து செலாவணிக் கொள்கை

[1] J. R. Schlesinger. 'Monetary Policy and its Critics', in Journal of Political Economy,' December 1960.

யின் பலன் குறைவாக இருக்கின்றது என்று முடிவு செய்தனர். ஆனால், சாட்சிக் குறிப்பில் (Minutes of Evidence) இதுபற்றி ஒன்றும் குறிப்பிடவில்லை. 1955ஆம் ஆண்டு ஜனவரி—பிப்ரவரி மாதம் வட்டி வீதம் 3% லிருந்து 4½% உயர்ந்ததன் விளைவாகத் தொழிலதிபர்கள் எடுத்த முடிவுகள் பாதிக்கப்பட்டனவா என்பது ஒரு முக்கியமான வினா. இதற்கு 1526 நிறுவனங்கள் பதிலளித்தன. இவைகளுள் 179 நிறுவனங்கள் அல்லது 12 சதவீதத்தினர் வட்டியுயர்வு தொழில் முடிவுகளைப் பாதித்தன என்று பதிலளித்தனர். இவைகளுள் 40% பொறியியல், கப்பல்கட்டுதல், மின்சாரம் முதலிய துறைகளிலிருந்தன. முதலீட்டுத் திட்டங்கள் அல்லது பண்டங்கள் வாங்குதல் முதலியவைகளை அவை குறைத்தன, அல்லது வட்டியுயர்வின் காரணமாகத் தள்ளி வைத்தன. கூட்டமைப்பின் பிரதிநிதிகள் ராட்கிளிப் குழுவினரிடம் சாட்சியம் அளிக்கையில் கொடுத்த புள்ளி விவரங்கள் முற்றிலும் சரியானவை என்று சொல்வதற்கில்லை என்றனர். ஒரு பொது உண்மையைப் புலப்படுத்தக் கூடியது என்றும் நம்ப முடியாதென்றனர். வட்டிவீத உயர்வு அதிகம் என்று கருதியவர்கள் கூட ராட்கிளிப் குழுவின் வாதப் பிரதிவாதங்களைக் கேட்டபின் தம் கருத்துகளைச் சற்று திருத்திக் கொண்டனர். 'நிச்சயமின்மை' (uncertainty) வட்டி வீதத்தின் முக்கியத்துவத்தைக் குறைக்கின்றது. பணவீக்கம் ஏற்படும் என்ற நம்பிக்கை மிகுந்த செல்வாக்கைப் பெற்றிருந்தது.[1] மற்றக் கணக்கெடுப்புகளைக் கொண்டும் குழுவினருடைய முடிவுகள், 1950-60-ல் உள்ள நிலையில் வட்டிக் குறைப்பு தேவைப்பெருக்கத்தைத் தூண்டாது என்று முடிவு கண்டனர்.[2] இக் கூற்றைச் சாட்சியங்கள் புலப்படுத்துவதாகத் தெரியவில்லை. பர்மிங்காம் ஆய்வு முடிவுப்படி முதலீட்டை அல்லது செலவைத் தள்ளி வைத்தவர்கள், அல்லது ரத்துச் செய்தவர்களில் 40 சதவீதத்தினர் வட்டி வீதயுயர்வினால் இவ்வாறு செய்தனர் என்பது தெளிவாயிற்று. இதை பிரிட்டிஷ் வர்த்தகக் குழு உயர்ந்த விகிதம் என்று கருதியது. ஆனால், ராட்கிளிப் குழுவினர் இதைப் புறக்கணித்தனர், பிரிட்டிஷ் பொறியாளர் கழகம், 'உயர்வட்டி வீதம் அவர்களது அடக்கச் செலவை உயர்த்தியது; தொழிலைப் பாதித்தது' என்று கூறியது. முதலீட்டு டிரஸ்ட்டும் (Investment Trust) ஸ்காட்லாந்து வர்த்தகக் கழகமும் (Scottish Chamber of Commerce) இதே கருத்தைத் தெரிவித்தன. அவர்களுடைய தொழிற் செலவையும்,

[1] Radcliffe Committee Report, paras 452-3. Minutes of Evidence, II, pp, 118-22, J. G. Gurley, American Economic Review, September 1960,

[2] Minutes of Evidence (Oral), Qs. 7568, 8918, 11360-2, 11414, 11605 and 11618-28.

பண்ட இருப்பையும், வாங்கும் கடனையும் உயர்வட்டி வீதம் பாதித்தது என்பதைத் தெளிவாக்கச் சான்றுகளைக் கொணர்ந்தனர்.[1] லண்டன் செக்குத் தீர்வக வங்கிகள் (London Clearing Banks) 1957-க்குப்பின் உயர்வட்டி வீதம் வங்கிக் கடன் குறைவதற்குக் காரணமாக இருந்தது என்றன. சில பொருளியலார் வட்டிவீத மாற்றம் நாட்டில் நடைபெறும் செலவினங்கள் முழுவதையும் பாதிக்கும் என்று குறிப்பிட்டனர். இக் கருத்தை இங்கிலாந்தின் தலைமை வங்கி ஆமோதித்தது.[2]

இதற்கு மாறான கருத்துக்கு ஆதாரவான சாட்சியங்களும் இருந்தன. இவைகளைச் சீர்தூக்கிப் பார்க்கும்போது குழுவின் தீவிரமான முடிவுக்குச் சாட்சியங்கள் இல்லை என்று கூறலாம்.

தொகுப்பு அணுகு முறை (Package deal)

20 ஆண்டுக்காலமாகப் பயன்படுத்தாமலிருந்த வங்கி வீதக் கருவி மீண்டும் ஆட்சிக்கு வந்தது ஒரு குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும். 'கட்டுப்பாட்டுத் தொகுப்பில்' வங்கிவீதம் இடம் பெற்றது. இது வட்டிவீதக் கருவியின் முக்கியத்துவத்தை உணர்த்துகிறது. இத் தொகுப்பில் வங்கி வீதம் மட்டுமல்லாமல் (இது மிகமுக்கியமானதாக இருந்த போதிலும்) வெளி மார்க்கட்டு நடவடிக்கை (open market operations), கடன் கொடுத்தலைக் கட்டுப்படுத்தச் சிறப்பான வேண்டுகோள், ரொக்கத்தையும், ரொக்க இருப்பு நிலையையும் (cash and liquidity reserve) மாற்றுதல், பொதுத் துறைச் செலவைக் கட்டுப்படுத்துதல், தவணைமுறை விற்பனைக் கடனைக் கட்டுப்படுத்துதல் முதலியனவும் இடம்பெற்றன. இத் தொகுப்பில் வட்டி வீதம் இடம் பெற்றது முக்கியத்துவம் வாய்ந்தது. தொகுப்பிலிருந்து வட்டி வீதத்தை நீக்கியிருந்தால் தொகுப்பு தன் முக்கியத்துவத்தை இழந்திருக்கும். புனரமைக்கப்பட்ட செலாவணிக் கொள்கையின் இரு முக்கியமான இயல்புகள் அதன் நிகழ்ச்சியும், தேர்வு முறையுமாகும். மலிவுச் செலாவணிக் கொள்கையைப் (cheap money policy) பிடிவாதமாகப் பின்பற்றும் காலம் போய்விட்டது. நெகிழ்ச்சியுடைய செலாவணிக் கொள்கையைக் கையாள வேண்டும் என்பதுபற்றி எல்லோரும் ஒரு மனதான முடிவுக்கு வந்தனர். பொருளாதாரம் 'அளவு மீறிய கொதிப்படையும்' போது தாராளச் செலாவணிக் கொள்கையை விடுத்துக் கட்டுப்

[1] சாட்சியத் தொகுப்பு (வாய்மொழி) 178-82, 182-8, 95; Memoranda, vol. I, 35-8.

[2] J. G. Gurley 'The Radcliffe Report and Evidence', in American Economic Review, September, 1960.

பாட்டு முறைகளைக் கையாள வேண்டு மென்பதை ஒத்துக் கொண்டனர். இதேமுறையில் பொருளாதாரம் 'குளிர்ச்சியடையும்போது' கட்டுப்பாட்டுக் கொள்கையை, விடுத்து மலிவுக் கொள்கையைக் கையாள வேண்டுமென்பதையும் ஒத்துக் கொண்டனர். அமெரிக்காவில் செலாவணிக் கொள்கையில் பல கூறுகளை நாம் காணலாம். குறைந்த கட்டுப்பாட்டிலிருந்த கொள்கை தீவிரக் கட்டுப்பாட்டை நோக்கி மாறுவதையும், எளிய கொள்கையைக் கையாண்ட நிறுவனம் நடு நிலைக் கொள்கையையும் அதன்பின்னர் சற்றுக் குறை கட்டுப்பாட்டையும் கையாண்டதையும் காணலாம்.

நெகிழ்ச்சியுடைய வட்டிவீதக் கொள்கை ஒருவித ஸ்திரமின்மையை (instability) ஆண்டு மற்றொன்றை. அதாவது மேலும் மோசமானதை நீக்குகின்றது. பண்டங்களின் விலையிலும். வேலை நிலையிலும் (employment) உள்ள ஸ்திரமின்மையைக் கடன் கொடுக்கும் தொகையின் விலையிலும், மூலதன மதிப்பிலும் உள்ள ஸ்திரமின்மையை எதிர்த்துப் போராடலாம் என்று ஒரு விமர்சகர் குறிப்பிடுகின்றார். பழைய கருவிகளை விடுக்க வேண்டும், தற்கால நிலைக்கு அவை பொருந்தா, தேர்வுமுறைக் கருவிகள் மூலமே தீர்வு காண வேண்டும் என்று அவர் கூறுகின்றார்.[1] இதற்குப் பதில் கூறும் வகையில் நெகிழ்ச்சியுள்ள கொள்கையை ஆதரிப்போர், தேர்வுக் கட்டுப்பாட்டைத் தம் தொகுப்பில் சேர்த்துள்ளதைச் சுட்டிக்காட்டுகின்றனர். தேர்வு முறையை அவர்கள் அறவே நீக்கவேண்டும் என்று கூறவில்லை. பொதுக்கட்டுப்பாட்டுக் கருவிகளையும், தேர்வுக் கருவிகளையும் சேர்த்துப் பயன்படுத்துவதே சிறந்த கொள்கையாகும்.

**செலாவணிக் கொள்கையைத் தேர்வுமுறையில் கையாளுதல்**
(Selective use of monetary policy)

செலாவணிக் கொள்கையைத் தேர்ந்தாளல் அதற்கு ஒரு புதிய பரிமாணத்தைக் கொடுக்கின்றது. வளரும் நாடுகளில் தள்ளுபடி வீதக் கொள்கையைப் பேதமுறையில் செயல்படுத்துகின்றனர் என்பதைப் பின்னர் பார்க்கலாம். வெவ்வேறு தாள்களுக்கு வெவ்வேறு தள்ளுபடி வீதங்களை ஆளலாம். இச்சைப்படி, சில நடவடிக்கைகளுக்குத் தள்ளுபடி வீதச் சலுகையும், மற்றவைக்கு உயர் வீதத்தையும் ஆளலாம்.

குறைபாடுகள் இருப்பினும் செலாவணிக் கொள்கை பரவலான செல்வாக்கைக் கொண்டிருக்கின்றது. இச்செல்வாக்கு

[1] Ervlne Miller, 'Monetary Po i-y in a Changing World', in Quarterly Journal of Economics, February 1956.

படிப்படியாகவும் செயல்படுகின்றது. செலாவணிக் கட்டுப்பாடு படிப்படியாக இறுகுவதால் கடன்தேவை குன்றும் என்று நம்பு வதற்கு இடமிருக்கின்றது. இக் கட்டுப்பாடு இல்லையெனில் வங்கிக்கடன் அதிகமாகக் கொடுக்கப்பட்டிருக்கும். பணவீக்கம் கட்டுக்கடங்காத நிலைக்குச் செல்லலாம். அண்மைக் காலத்தில் இங்கிலாந்து வங்கியின் ஆளுநர் செலாவணிக் கொள்கைபற்றி அனுபவவாயிலாகக் கண்ட படிப்பினை எல்லோருக்கும் பயனுள்ள தாக இருக்கும். இது மற்ற நாடுகளுக்கும் பொருந்தும். கருவிகள் செய்யக்கூடிய அலுவல்களைவிட அதிகமான பளுவை அவைகள் மீது சுமத்துவது உசிதமல்ல. இஃதேபோல் இக் கருவிகளுக்கு, அவை செய்யக்கூடிய வேலையைவிடக் குறைவாகவும் கொடுப் பது உசிதமல்ல.[1]

முடிவாகக் கூறும்போது செலாவணிக் கொள்கை நிதிக் கொள்கை வாய்ந்தது என்பதை மேலே விளக்கியுள்ளோம். நிதிக் கொள்கையை நிருவாகம் செய்வதில் காலதாமதம் ஏற் படும் என்பது எல்லோரும் அறிந்ததே. ஆனால், செலாவணிக் கொள்கையைச் செயல்படுத்துவதில் தாமதம் ஏற்படும். இக்கருவி களுள் ஒன்றின் வல்லமையை மிகைப்படுத்துவதும் மற்றொன் றின் பயனைக் குறைத்துக் கூறுவதும் தவறாகும். செலாவணிக் கொள்கையில் நாம் கொண்டிருக்கும் ஆர்வம், தேர்வுக் கட்டுப் பாடுகளின், நிதிக் கொள்கையின் முக்கியத்துவத்தை நம் பார்வையிலிருந்து மறைக்க முடியாது. நிதிக் கொள்கையின் சக்தியைக் கண்டு நம் கவனத்தைச் செலாவணிக் கொள்கையி லிருந்து திசை திருப்பி வர்த்தக வங்கிகளின் கடனைக் கண் காணிக்கும் வாய்ப்பினை இழக்கக்கூடாது. செலாவணிக் கொள் கையையே முழுதும் நம்பியுள்ள அதன் ஆதரவாளர்களாக இருத்தல் கூடாது. தேர்வுக் கட்டுப்பாடுகளை அறவே புறக் கணிக்கக்கூடாது. நிதிக் கொள்கையையும் ஒதுக்கிவிடக் கூடாது. செலாவணிக் கொள்கையையும் நிதிக் கொள்கை யையும் இரண்டையும் சேர்த்துப் பயன்படுத்துவதே சிறந்த தாகும்.

வங்கிவீதக் கருவியைக் கையாளும்போது இச்சைப்படி வீதத்தை மாற்றும் பழைய வழக்கத்தைக் கைவிடவேண்டும். அவைகளுடைய விளைவுகள் தெளிவற்றிருக்கின்றன. முன்கூட்டி அறிய முடியாதவை. பழைய பழக்கத்திற்குப் பதிலாகக் கனடிய (Canadian) முறையைப் பின்பற்றலாம். இம்முறைப்படி வங்கி

[1] Lord Cobbold நிகழ்த்திய உரை Bankers' Dinner Mansion House என்ற இடத்தில் அக்டோபர் 4, 1955, Banker, Nov. 1955 pp. 29ം-8.

வீதத்திற்கும், குறுகியகால வெளிச் சந்தை வீதத்திற்கும் இடையே ஒரு தொடர்பை ஏற்படுத்தியுள்ளனர். இத் தொடர்பு பயனுள்ளதாக இருக்கும். 1956-ல் கனடிய வங்கி வீதத்தை வாரந்தோறும் திருத்தியமைத்தனர். ஒவ்வொரு வாரமும் அதன் முந்திய வாரம், 91 நாள் கருவூல உண்டியல்களின் சராசரி டெண்டர் வீதத்தின்மேல் ¼ சதவீதத்தைக் கூட்டிப் புதிய வீதத்தை நிர்ணயிக்கின்றனர்.[1] இதே முறையை மற்றைய வங்கி களும் கையாளலாம். வங்கி வீதத்திற்கும், கருவூல உண்டியலின் வீதத்திற்கும் இடையே உள்ள வேறுபாடு ஒவ்வொரு நாட்டின் நிலைமைக்கேற்றவாறு உயர்வாகவோ அல்லது குறைவாகவோ இருக்கலாம். இந்த முறை பழைய முறையைவிடச் சிறந்தது. ஏனெனில், மைய வங்கி, கட்டுப்பாட்டுக் கொள்கையைப் பின் பற்றும்போது மற்ற வங்கிகள் அதனிடம் தாராளமாகக் கடன் வாங்கும் பழக்கத்தை இது கண்டிக்கும். பழைய முறையில் இத் தடை இல்லை. வங்கிகள் தம் வசமுள்ள சாதனங்களைப் பெருக்கிக் கொள்ள விரும்பும்போது அவை மைய வங்கிகளிடம் கடனுதவி பெறலாம், அல்லது தம்மிடமுள்ள சொத்துகளை ரொக்கமாகக் கொள்ளலாம். இந்த நிலையில் எந்தச் சொத்துகளை விற்பனை செய்து ரொக்கமாகத் திரட்ட வங்கிகள் முனையுமோ அவை அளிக்கக்கூடிய வருமானத்திற்கும் (return) வங்கி வீதத்திற்கும் இடையே உள்ள வேறுபாடே வங்கிகளுடைய முடிவை நிர்ணயம் செய்கின்றது. வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளின் வீதத்தை ஒத்து வங்கிவீதத்தை நிர்ணயிப்பதால் வங்கிவீதக் கொள்கை வல்லமை பெறும்.[2] கனடிய நாட்டின் அடிச்சுவட்டில் பெடரல் ரிசர்வ் முறை நடக்க வேண்டும் என்றும் இச்சைப்படி பழைய முறையில் வங்கிவீதத்தை நிர்ணயம் செய்வதை விடுக்க வேண்டும் என்றும் பெடரல் மார்க்கட்டு வீதத்திற்கும் அபராத வீதத்திற்கும் (penalty rate) இடையே ஒரு வேறுபாட்டை ஏற் படுத்த வேண்டும் என்றும் சிலர் வாதித்தனர். 'மாற்றக்கூடிய

[1] பழைய முறைப்படி கருவூல உண்டியல் வீதம் பழைய வங்கி வீதத்தை விட உயரும்போது அல்லது அந்த நிலைக்கு வந்தபோது மைய வங்கி வீதத்தை உயர்த் தினர். இந்த முறையை விடுத்து ஒரு புதிய முறையைக் கையாண்டனர். இது இரு நோக்கங்கள் கொண்டிருந்தது. வங்கி வீதம் கருவூல உண்டி வீதத்தைவிட உயர் வாக இருக்கும் என்பது இதன் ஓர் எடுகோள். இரண்டாவதாக, எதிர்பாராத, எதிர் நோக்க முடியாத எப்போதாவது நிகழும் மாறுதல்கள் (மைய வங்கி வீதத்தில்) நாட்டுத் தொழிலைப் பொதுவாகப் பாதிக்காமலிருக்க இம்முறை வழி வகுக்கும். புதிய முதலீடு செய்ய உத்தேசிப்பவர்கள் முடிவுகளையும இது பாதிக்காது. (Annual Bank Report of Canada, 1956 pp 45-6). 1962-ல் தோன்றிய பெரிய அன்னியச் செலாவணி நெருக்கடியின் விளைவாக கனடா நாடு இம்முறையைக் கைவிட்டுப் பழைய ஒரே வீத முறையைப் பின்பற்றியது. (Prof. R. Craig Melvon in 'Commonwealth Banking Systems, p. 424).

[2] W. L. Smith, 'The Discount Rate as a Credit Control Weapon' in the Journal of Political Economy', April 1958.

அபராதவித' முறை (variable penalty rate) நிலையான வீத முறையைவிடச் (fixed rate) சில நன்மைகளைக் கொண்டிருக்கின்றது.[1] ஏனென்றால், புதிய விதத்தை அறிக்கை மூலம் தெரிவிப்பதால் விளையும் தீமைகள் இந்த முறையில் ஏற்படா.

**செலாவணிக் கொள்கையை விருப்பப்படி செயல்படுத்த வேண்டுமா அல்லது ஒரு விதிப்படி செயல்படுத்துவதா? ஒரு சர்ச்சை**

முடிவாகச் செலாவணிக் கொள்கையை இச்சைப்படி இயக்கலாமா அல்லது ஒரு விதிப்படி நடத்தவேண்டுமா என்பதை நாம் இறுதியில் விவாதிக்கலாம். பேராசிரியர் எச். சி. சைமன்ஸ் (H. C Simon ) 'Journal of Political Economy' என்ற சஞ்சிகையில் எழுதிய ஒரு கட்டுரையில் 1936ஆம் ஆண்டு 'விதிமுறையின்' நன்மைகளை விளக்கினார். பேராசிரியர் ஃபிரீட்மான் (Professor Friedman) சைமன் அவர்கள் கருத்தை ஏற்றுச் செலாவணி முறையில் அரசியலார் பங்கை வலியுறுத்தினார். ஆனால், இதற்கு நேர்மாறாகப் பேராசிரியர் சேயர்ஸ் (Professor S yers) 'விருப்பப்படி கண்காணிக்கும் செலாவணி முறையே மைய வங்கி முறையின் மிகச் சிறப்பான இயல்பு' என்று குறிப்பிட்டார். கருத்து வேற்றுமை எந்த அளவு அரசியலாரின் கண்காணிப்பு இருக்கவேண்டும் என்பது மட்டுமன்று. இரு கருத்துகளை ஒருங்கிணைத்தல், அல்லது இதற்குத் தீர்வு காணல் கடினம். விதிகளைப் பின்பற்றுவதில் எந்த அளவு சுதந்திரமாக நடந்து கொள்ளலாம் என்பதுபற்றிக் கருத்து ஒற்றுமை இல்லை. இச் சுதந்திரத்தை மைய வங்கி எவ்வளவுதூரம் பயன்படுத்திக் கொள்ளலாம் என்பது பற்றியும் கருத்து ஒற்றுமை இல்லை. 'விதிமுறை' 'விருப்பப்படி நடக்கும் முறை'-இவையிடையே உள்ள தேர்வு, 'தலையீடு', 'தலையிடாமை' இரண்டுக்கும் இடையே செய்யும் தேர்வாகாது. 'விதிமுறையில் ஓரளவு விருப்பப்படி நடக்க இடமுள்ளது. இதேபோல் 'தலையீடு' அல்லது 'தீவிரத் தலையீடு' இருக்கும்போதுகூட விதிகள் இயங்குகின்றன. எப்போதும் ஒரேமாதிரி இயங்கும் நெகிழ்வற்ற விதிகள் வேண்டுமா அல்லது இச்சைப்படி தாறுமாறாக நடந்து கொள்ளச் சுதந்திரம் வேண்டுமா என்பதுதான் பிரச்சினை. விதிகள் கடினமாக இருக்கின்றன என்பதையும் 'விருப்பமுறை'யைக் கொண்டே நெகிழ்ச்சியைப் புகுத்த வேண்டும் என்பதையும் அனுபவம் புலப்படுத்தியுள்ளது.[2]

[1] J. Aschheim, Techniques of Monetary Policy, p. 93.

[2] C. R Whittlesey, 'Rules, Discretion and Central Bankers' in Essays in Monetary and Banking in honour of R. S. Sayers (1968).

# 6. செலாவணிக் கொள்கை பற்றிய கோட்பாட்டில் புதுமை: 'செலாவணியின் ரொக்கத் தன்மை பற்றிய கோட்பாடு'

செலாவணிக் கொள்கையைப் பற்றிப் பேசும்போது இதற்கு அடிப்படையாக உள்ள செலாவணியின் ரொக்கத் தன்மை பற்றிய கோட்பாட்டைக் குறிப்பிட்டனர். அண்மைக் காலத்தில் ராட்கிளிப்பும், கர்லி, ஷா அவர்களும் (Radcliffe, Gurley & Shaw) இது பற்றிய ஆய்வு செய்தனர். பணம் அல்லது செலாவணியின் ரொக்க இயல்பு பற்றிய கோட்பாடு ஒன்று உருவாகிக் கொண்டிருக்கின்றது. செலாவணிப் பொருளியலைப் (monetary economics) பயிலும் ஐரோப்பிய நூலாசிரியர்களின் முயற்சியே இக் கோட்பாட்டுக்குக் காரணமாகும். பண அளவுக் கோட்பாடோ (Quantity Theory) அல்லது வருமானக் கோட்பாடோ (Income Theory) நாட்டிலுள்ள பண அளவுக்கும் தொழில் நிலைக்கும் அல்லது பொது விலைக்கும் இடையே உள்ள தொடர்பை விளக்க முடியாது. வருமானமோ அல்லது பணத்தின் அளவோ முக்கியமானதல்ல. பணத்தின் ரொக்கத் தன்மையே அதன் பண நிலைக்கும் நாட்டுத் தொழில் நிலைக்கும் இடையே உள்ள தொடர்பைக் காட்டுகிறது.

ரொக்கத் தன்மை என்பது வங்கிகள் கொண்டுள்ள பண ரொக்கத்தைக் குறிப்பிடவில்லை. இதைவிடப் பரந்த பொருளைக் கொண்டிருக்கிறது. ஜெர்மனியில் ஆட்டோ வெயிட் (Otto Veit) என்பவர் விளக்கியுள்ள ரொக்கத் தன்மைக் கருத்து வந்து சேர வேண்டிய தொகைகள், கிடைக்கக் கூடிய கடன் தொகைகள், கை இருப்புச் சரக்குகள் (stock in trade), மற்ற எளிதில் விற்பனை செய்யக்கூடிய சொத்துகள் முதலியவைகளைக் குறிக்கின்றது. மொத்த ரொக்க நிலை மக்களுடைய செலவு, முதலீடு முதலியவைகளுடன் தொடர்பு கொண்டிருக்கிறது. ரொக்கத்தில், கையிருப்பு ரொக்கமும் கை இருப்புச் சரக்குகளும் மட்டுமல்லாமல் வங்கிகளிடமிருந்தும், மற்ற நிதி

நிலையங்களிடமிருந்தும் பெறக்கூடிய கடன் தொகைகளும் அடங்கியுள்ளன. மொத்தத் தேவையை நிர்ணயம் செய்யும் சக்தி பண அளவாகக் கருதப்பட்டது. இதை விடுத்து ரொக்கத் தன்மையையே முக்கியமெனக் கருதுவது புதிய கோட்பாட்டின் மைய உட்கருத்தாகும்.

இக் கோட்பாட்டை ஆதரிப்போர் இதற்குச் செலாவணிக் கொள்கையில் பல அனுகூலங்கள் இருப்பதாகக் கூறுகின்றனர். பணக் கொள்கையின் நோக்கம் அதன் அளவைக் கண்காணிப்பதன்று; தொழில் வங்கிகள் முதலியவைகளுடைய ரொக்க நிலையைக் கண்காணிப்பதேயாகும். விலைக் குறியீட்டெண்ணோ (price index) அல்லது முன்னர் நிகழ்ந்த நிகழ்ச்சிக்குப்பின் சேகரித்த புள்ளி விவரங்களோ, பணக் கொள்கைக்குப் பயன்படா. பொதுவாக உள்ள ரொக்க நிலையை மதிப்பிட வேண்டும், தொழில் நம்பிக்கையும், எதிர்பார்க்கப்படும் லாப மதிப்பீடும், மக்கள் மன நிலையும் எவ்வாறு இருக்கின்றன என்பதை அறிதல் வேண்டும்.[1]

இங்கிலாந்தில் செலாவணியின் ரொக்கத் தன்மைக் கோட்பாட்டின் விளக்கம், ராட்கிளிப் குழுவின் அறிக்கையில் இடம் பெற்றுள்ளது. நுகர்வுச் செலவும், முதலீட்டுச் செலவும் வட்டி வீதத்தைச் சார்ந்திருக்கவில்லை என்பது ராட்கிளிப்பின் கருத்து. வட்டி வீத மாற்றம் ஏற்படுத்தும் நேர்முக விளைவு குறைவாக இருப்பினும், அது 'மதிப்பீட்டு விளைவை' (valuation effect) ஏற்படுத்தலாம். வட்டி வீத மாற்றம், நிதி நிலையங்களின் முதல்களின் மதிப்பை மாற்றும். எனவே, அவைகளுடைய இருப்பு நிலைக் குறிப்பும் (balance sheet)-கடன் கொடுக்கும் திறமையும் மாறும். இந்த விளைவைக் கொண்டே ராட்கிளிப் தன் கோட்பாட்டைப் புனைந்தார். 'வட்டி வீதங்கள் உயரும்போது சிலர் குறைவாகக் கடன் கொடுக்க விருப்புகின்றனர். ஏனெனில், அவர்களுடைய முதல்களின் மதிப்புக் குறைகின்றது, மற்றவர்கள் பெறும் வட்டி வருமானம் அதிகம் உயராததால் அவர்களும் கடனளிக்க முன் வரமாட்டார்கள். வட்டி வீதம் குறைவதால் இருப்புநிலைக் குறிப்பு வல்லமை பெறுகின்றது. அவர்கள் அதிகத் தொகையைக் கடனாகக் கொடுக்க முன் வருகின்றனர்.'

எனவே, வட்டி விளைவிக்கும் சக்தி பல்வகை நிதி நிலையங்களின் ரொக்க நிலையையும் அவை மூலம் மற்ற நிலையங்களுடைய ரொக்க நிலையையும் பாதிக்கும். செலவை நிர்ணயம்

[1] G. Schmolders, Kyklos, vol. 13, 1960.

செய்வது உடனடியாகக் கிடைக்கக்கூடிய ரொக்கமல்ல. நாம் மேலே விளக்கியுள்ள பரந்த பொருள்கொண்ட ரொக்க நிலை யாகும். நாட்டிலுள்ள மொத்தப் பணம் செலவைப் பாதிக்க வில்லை. மக்கள் எவ்வளவு தொகையைக் கடனாக அடைய முடியும் என்று கருதுகின்றனரோ அது, அல்லது முதலை விலை யாக்கி எவ்வளவு தொகை திரட்ட முடியுமோ அது மொத்தச் செலவை முடிவு செய்கிறது. மொத்தத் தேவையைப் பண அளவு நிர்ணயிக்க முடியாது. ரொக்க நிலையின் அமைப்பே அதை முடிவு செய்கிறது. பண அளவை விடப் பொருளாதாரத்தின் ரொக்க நிலையின் அமைப்பே அல்லது வட்டி வீதங்களின் அமைப்பே முக்கியமான சக்தி என்பது இக் கோட்பாட்டின் உட் கருத்தாகும்.[1] குழுவினர் மார்க்கட்டிலுள்ள வட்டி வீதங்களை மட்டும் கருதாமல் அதன் முழு அமைப்பையும் குறிப்பிடுகின்றனர். அதாவது குறுகியகால, இடைக்கால, நெடுங்காலக் கடன்களின் வட்டி வீதங்களைக் குழுவின் மனத்தில் கொண்டனர். வட்டி வீதங்களின் அமைப்பைப் பொதுக்கடன் நிருவாகத்தின் மூலம் நிர்ணயிக்க வேண்டும்.

### ராட்கிளிப் முறை

ராட்கிளிப் முறை இயங்கும் விதத்தைக் கீழ் வரும் பத்தியில் விளக்கலாம். பழைய முறைப்படி சட்டம் விதித்த குறைந்த பட்ச ரொக்க விகிதத்துடன் செயல் புரியும் வங்கிகள் தாம் கொடுக்கும் கடன் தொகைகளை அதிகரிக்க விரும்பினால் அவை அதற்காகத் தம்மிடமிருக்கும் அரசு பத்திரங்களை விற்கலாம். ஆனால், அப் பத்திரங்களின் விலை மார்க்கட்டில் குறையும்போது பத்திர விற்பனையால் இழப்பு ஏற்படும். அதிகார பீடம் வட்டி வீதத்தை உயர்த்தினால் பத்திர மார்க்கட்டில் விலை வீழ்ச்சி ஏற்படும். வங்கிகளும், இதர நிதிநிலையங்களும் தம் பத்திரங்களை விற்பனை செய்யத் தயங்கும். சிறந்த திட்டங்களுக்குக்கூட வங்கியர் கடனுதவியளிக்கத் தயங்குவர். எனவே, வங்கியரும், நிதிநிலையங்களும் சிறப்பீட்டுப் பத்திரங்களை நஷ்டத்தில் விற்கத் தயங்குவதே ரொக்க நிலைக்கும், பொருளாதாரத்திற்கும் தடை போடுகின்றது. அரசு பத்திரங்களுக்கடுத்த சொத்தினமாகிய கடன்களை (வங்கிகள் கொடுத்தவை) தீர்க்கவும் தயங்குகின்றன. ஏனெனில், முதலிழப்பு (capital loss) ஏற்படலாம். முதலிழப்பு ஏற்படும் என்று அஞ்சி அவர்கள் கடன் கொடுக்கத் தயங்குவர் என்று குறிப்பிட்டோம். ஆனால், இதற்கு ஒரு நிபந்தனை உண்டு.

[1] Radcliffe Committee Report, pp. 134-5.

இழப்பை ஈடு செய்யும் வகையில் அவர்கள் கொடுக்கும் கடனுக்குப் பிறரிடம் உயர் வட்டி இயலாமலிருந்தால்தான் இவ்விழப்பு ஏற்படும்.

வட்டியுயர்வைத் தொடர்ந்து வங்கியர் தாம் வசூல் செய்யும் வட்டியை உயர்த்தலாம். பத்திரங்கள் முதிர்வு பெறுவதற்கு முன் அவைகளை விற்பதால் ஏற்படும் இழப்பை இவ்வாறு ஈடு செய்யலாம் என்பதை ராட்கிளிப் குழுவினர் ஒத்துக்கொள்கின்றனர். பத்திரங்கள் முதிர்வு பெறப்பெற கைவரும் தொகையைக் கொண்டு, கடன் பெருக்கம் செய்ய முடியுமானால் இழப்பை ஈடு செய்யலாம். எனவே, குறைந்த செலாவணிப் பெருக்கம் செய்வதற்கு வட்டி வீதத் தடை சக்தியற்றது. கடன் பெருக்கம் தொடர்ந்திருந்தால்தான் இத்தடை நன்கு செயல்படும்.

வங்கி வீதத்திற்கும் கடன் வீதத்திற்கும் நெருங்கிய தொடர்பு இருக்கும் வரை அதாவது பிரிட்டிஷ் வழக்கப்படி கடன் வீதம் வங்கி வீதத்தைவிடச் சற்று உயர்வாக இருந்தால் வங்கிகள் முதலிழப்பை ஈடு செய்வதற்குத் தக்க அளவில் வட்டி வீதங்களை உயர்த்த முடியாது. எனவே, வட்டி வீதங்களைக் கணிசமாக மாற்ற முடியாமை வங்கிகளுடைய தொழில் பெருக்கத்திற்குத் தடையாக இருக்கின்றது. ராட்கிளிப் கருத்தின் அடிப்படை ஆதாரம் வட்டி வீதத்தை மாற்ற முடியாமையானல், இக் கருத்து சர்ச்சைக்குரியதாகின்றது. வட்டி வீதத்தை மாற்ற முடியாமை பழக்க வழக்கத்தையும் மரபையும் ஒட்டியது. இலாப நஷ்ட அல்லது பொருளாதார நோக்கங்களுக்கப்பாற்பட்டது. வங்கிகள் பின்பற்றிய பழக்க வழக்கங்கள் ஒரு குறிப்பிட்ட பொருளாதார நிலையில் உருவாயிற்று. இந்த நிலையில் சிறப்பீட்டுப் பத்திரங்களின் வீதங்கள் நெடுங்காலத்தில் ஒரே நிலையில் இருந்ததாகும். பேராசிரியர் ஹிக்ஸ் (Prof. Hicks) கூறியுள்ளபடி நீண்டகாலத்தில் அரசு பத்திரங்களின் வீதம் 3% ஆகவே இருந்தது. இதுவே வட்டி வீதங்களின் ஆதாரமாக இருந்து வந்தது. குழுவின் சிபார்சுகளில் தொனிக்கும் நீண்ட கால வீதங்களின் அதிகமான ஏற்றத் தாழ்வுகள் நிகழ்ந்தால் பழைய மரபுகள் தகர்ந்துவிடும். ராட்கிளிப் முறையின் அடிப்படை அம்சமும் மறைந்துவிடும். மேலும் தவணை விற்பனை நிதி நிலையங்கள், கட்டடச் சங்கங்கள் ஆகிய நிலையங்களும் உள. இவைகளுடைய வட்டி வீதங்கள் தடையின்றி மாறலாம். இவைகளுடைய சொத்தினங்களை அரசு பத்திர வீதங்கள் பாதிப்பதில்லை.

பெரிய நெருக்கடி இல்லாத சாதாரண சமயத்தில் இருப்பது போல் நெருக்கடி காலத்திலும், பொருளாதார வீக்க காலத்

திலும் ராட்கிளிப் முறைப்படி பண அளவைக் கட்டுப்படுத்தாமல் செலவு செய்வோரின் ரொக்க நிலையைக் கண்காணித்தல் வேண்டும். இந்த நிலையில் வங்கியர் கொடுக்கும் கடனையும், நுகர்வோர் கடனையும் முதலீட்டையும் கட்டுப்படுத்த வேண்டும் என்று ராட்கிளிப் முறை குறிப்பிடுகின்றது.

நெருக்கடி காலத்தில் இம் மூன்றையும் கட்டுப்படுத்த வேண்டும். ஏனெனில், இவை மூன்றும்தான் மிக முக்கிய தோற்றுவாய்களாகும். சாதாரண காலத்தில் இவைகளைக் கட்டுப் படுத்துவதால் சிறந்த பலன் ஏற்படத் தவறலாம். மேலும், இக் கட்டுப்பாடுகளுக்கு ஆட்சேபங்கள் தோன்றலாம். ஆனால், நெருக்கடி காலத்தில் தற்காலிக நோக்கங்களை விடுத்து இக் கட்டுப்பாடுகளை மேற்கொள்ள நேரிடும். இவை மூன்றும் சேர்ந்து இயங்கும்போது கணிசமான விளைவுகள் உடனடியாக ஏற்படும்.[1]

பணக் கொள்கையைச் செயல்படுத்தும்போது பணத்தின் அளவைக் கண்காணிக்காமல் பொருளாதாரத்தின் ரொக்க நிலையைக் கட்டுப்படுத்த வேண்டும் என்ற ராட்கிளிப் குழுவின் கருத்து பெரியதொரு சர்ச்சையைத் தூண்டிவிட்டது. டாக்டர் பலோக் (Dr. Balogh) அவர்கள் ராட்கிளிப் கருவி சுருக்கமாகவும் ஒழுங்கற்றதாகவும் இருப்பதாகக் கூறுகின்றார். இதற்குக் காரணம் குழு பேராசிரியர்களுடைய பகுத்தாய்வைச் சரிவரப் புரிந்து கொள்ளாமல் மேற்கொண்டதென்கிறார். 'குழுவினர் ரொக்கத் தன்மையை எங்குமே சரிவர விளக்கவில்லை. அது எவ்வாறு செலவு செய்யும் நோக்கத்தைப் பாதிக்கும் என்பதையும் குறிப்பிடவில்லை. இப் புதிய படாடோபக் கோட்பாட்டைக் கொண்டு பழைய அளவு கோட்பாட்டைக் கைவிட்டனர்' என்றார். சர் ஆஸ்கார் ஹாப்சன் (Sir Oscar Hobson) பணத்தை முக்கிய காரணி என்று கருதுகின்றார். 'எதிர்காலத்தில். எவ்வளவு பணம் கிடைக்கும் என்பதை இன்று கிடைக்கும் அளவு தீர்மானிக்கின்றது'. ரொக்க அமைப்பு பற்றிய கருத்தை விடாப்பிடியாகக் கொண்டிருந்த குழுவினர் பணக் கட்டுப்பாடு பற்றிய நடைமுறைப் பிரச்சினைகளைச் சரிவர கவனிக்கவில்லை.[2] குழுவின் அறிக்கையைத் திரு ஜேசே (Mr. Jasay) ஒரே குழப்பம் என்று கூறியுள்ளார். சரக்குகள் வெளி வருவது பற்றியும், ரொக்கத் தன்மை பற்றியும் வட்டிவீதம் பற்றியும் குழுவின் கருத்துகளில்

[1] Radcliffe Committee Report, paras 524-5.
[2] The Banker, October 1959,

குழப்பம் மலிந்துள்ளது என்றும் கூறுகின்றார்.[1] திரு. ஜே. ஜி. குர்லே எங்கும் குழப்பத்தையே காண்கின்றார். பண அளவு, ரொக்க நிலை, வங்கிகளல்லாத இடைநிலை நிதிநிலையங்கள், வட்டிவீதங்கள் நிர்ணயம் ஆதல் முதலியன பற்றிய குழுவின் கருத்துகளில் அவர் தெளிவின்மையைக் காண்கின்றார்.[2]

பண அளவுக் கருத்துக்குப் பதிலாக, ரொக்கநிலைக் கருத்தைப் பயன்படுத்துவது ஒரு புரட்சிகரமான மாறுதல் என்று கூற முடியாது. உண்மையில் அண்மைக் காலத்தில் செலாவணிக் கொள்கை சரியான வழியில் செயல்பட்டு வருகின்றது. 19ஆவது நூற்றாண்டில் செலாவணி வெளியீட்டைக் கட்டுப்படுத்த முனைந்தனர். 1920—30-ல் இவ் வங்கிகள் கொண்டிருக்கும் டெப்பாசிட்டுகளைக் கண்காணிக்க முயன்றனர். பண அளவின் கூறுகள் இன்று வேறுபட்டிருக்கின்றன. இதை அளக்கும் முறையும் வேறுபட்டிருக்கின்றது. ஆனால், அளவு பற்றிய கருத்து இன்னும் உயர்ந்த இடம் பெற்றிருக்கின்றது. ஆனால், சில மாறுதல்கள் நிகழ்ந்துள்ளன. கீன்ஸ் அவர்களின் ரொக்கம் பற்றிய ஆய்வு புதிய முறைகளுக்கு வழிவகுத்தது. இம்முறையை ராட்கிளிப் குழுவினர் மேலும் வளர்த்தனர். ராட்கிளிப் கருத்தின் சாரத்தைப் பேராசிரியர் ஹிக்ஸ் (Prof. Hicks) 1935-ல் ஒரு கட்டுரையில் விளக்கினார். இதில் கீன்ஸ் அவர்களுடைய ரொக்க விருப்பக் கருத்தையும் விளக்கினார். 'வங்கிக் கடன் ஏற்படுவதால் நிகழும் விளைவுகள் மற்றப் பொருளாதார நடவடிக்கைகளுடைய விளைவுகளிலிருந்து வேறுபட்டிருக்கவில்லை' என்று அவர் குறிப்பிட்டார்;[3] தேவையை நிர்ணயிப்பது அதன் அளிப்பன்று, பொருளாதாரத்தில் கிடைக்கும் கடனே அதை நிர்ணயிக்கின்றது. அதாவது ரொக்க நிலையின் கட்டமைப்பே முக்கியப் பங்கேற்கின்றது என்ற குழுவின் கருத்தை ஏற்பதில் தடையேதும் இல்லை. குழு வட்டி வீத அமைப்பை அல்லது ரொக்க நிலையின் அமைப்பை மையமெனக் கருதுகின்றது. இதிலிருந்து பண அளவு முக்கியமன்று எனக் கருத முடியாது. அளவுக் கட்டுப்பாடு வட்டி வீதக் கொள்கையின் துணை நிகழ்ச்சி என்பதே பொருள். ரொக்கத்தை நிர்ணயிக்கும் பல சக்திகளுள் பண அளவு ஒன்றாகும். இந்த விஷயத்தில் எதிர்காலச்

[1] 'Working of the Radcliffe Monetary System', in Oxford Economic Paper, June 1960.

[2] 'The Radcliffe Report and Evidence' in American Economic Review, September, 1960, p. 700.

[3] 'Simplifying the Theory of Money' in Economica, 1935, Quoted by Alan Day, Banker, June 1960.

செலாவணிக் கொள்கையைப் புரிந்து கொள்வதிலும், உருவாக்கு வதிலும் குழுவினர் முக்கியப் பங்கேற்கின்றனர் என்பது நம் கருத்தாகும்.

பழைய கருத்துப்படி வங்கிகள் கடன் கொடுத்தலுக்குரிய தொகைகளை சிருஷ்டி செய்கின்றனர், வங்கிகளல்லாத இடைநிலை நிலையங்களும் நிதித் தரகர்களாக இயங்குகின்றன. ராட்கிளிப் முறை இக் கருத்திலிருந்து விலகியது. வங்கிகளல்லாத இடைநிலை நிதி நிலையங்களின் வளர்ச்சியையும், அதனால் தோன்றிய பிரச்சினைகளையும் குழுவினர் கண்டனர்.

இடைநிலை நிதி நிலையங்கள் இயங்குவதால் செலாவணி முறையின் ஸ்திரத்தன்மைக்கு ஆபத்துகள் உள என்பதைக் குழு உணர்ந்தது. ஆனால், வங்கி கட்டுப்பாடுகளை இவைமீது சுமத்துவது தவறு என்று கூறியது. இதில் நிருவாகச் சிக்கல்கள் இருப்பதோடு மட்டுமல்லாமல் மேலும் புது இடைநிலை நிறுவனங்கள் தோன்றுவதற்கும் கட்டுப்பாடுகள் காரணமாகலாம். இவை அதிகாரிகளின் பிடியிலிருந்து தொடர்ந்து நழுவ முனையும். குழுவினர் கட்டுப்பாடுகளைச் சீர்திருத்த முயன்று ஆனால் பொறுப்பைக் கண்டு 'நடுங்கினர்' என்று பேராசிரியர் சேயர்ஸ் பின்னர் எழுதிய கட்டுரையில் கூறுகின்றார்.[1]

செலாவணிக் கொள்கை பற்றிய தம் முடிவான கருத்துகளைக் குழுவினர் தெரிவித்தனர். கொள்கை ஏராளமான பலனைக் கொடுக்கவல்லது. ஒரு துணைக் கருவியாக அல்லது நெருக்கடி காலத்தில் பயன்படுவதாகக் கருதலாம். செலாவணிக் கொள்கைக்கு ஒரே ஒரு வழி இருக்கின்றது—அதைச் சாதாரண காலத்தில் நிதிக்கொள்கைக்குக் கீழ்ப்படுத்துதல். நெருக்கடி காலத்தில் மட்டும் அதை ஆளுவது நல்லது.[2]

### கர்லே-ஷா கருத்து

வங்கிகளல்லாத இடைநிலை நிதி நிலையங்களின் செயல்களை நெடுங்காலமாகப் புறக்கணித்தனர். கர்லே-ஷா (Gur ey and Shaw) என்ற அமெரிக்கப் பேராசிரியர்கள் இவைகளுடைய செயல்களை ஆய்ந்து வங்கி முறையிலும் பொருளாதாரத்திலும் இவைகளுடைய பணிகளை விளக்கினர். ராட்கிளிப் குழுவினர் வங்கிகளுக்கும் இத்தகைய நிலையங்களுக்குமிடையே உள்ள வேறுபாடுகளைக் குறிப்பிட்டனர். குழுவினர் பின்னர் வெளியிட்ட

[1] Economic Journal, December, 196?, p. 722.

[2] R a dciffe Committee Report, paras 487-529.

கருத்துகளை கார்லேயும், ஷாவும் முன் கூட்டியே அறிவித்தனர். வங்கிகளும் இந்த நிலையங்களும் நிதிப்பொறுப்புகளை உண்டாக்கு கின்றன. இருவகையினரும் பன்மடங்கு பெருகும் பொறுப்பு களை உற்பத்தி செய்கின்றனர். ஒருவகைச் சொத்துகளை இவை கட்டுக் காப்பாகக் கொள்கின்றனர்.[1]

ஆனால், கடன் சிருஷ்டியில் வங்கிகளுக்கும் இந்த நிலையங் களுக்கும் முக்கியமான வேறுபாடுகள் உள. வங்கிகளுடைய கடன் பெருக்கிகளைப் போலவே (credit multiplier) இந்நிலையங் களுடைய பெருக்கிகளை ஆக்கியபோதிலும் இவைகளுடைய பெருக்கி ஒன்றுக்குச் (unit) சமமாக இருக்கும். அதாவது இந்த நிலையங்களுடைய டெப்பாசிட்டுக்குச் சமமான தொகையைக் கடனாகக் கொடுக்கும். வங்கிகளிலிருந்து எவ்வகை டெப் பாசிட்டுகள் இடைநிலை நிதியகங்களுக்குத் திருப்பப்படுகின்றன என்பது கேட்பு டெப்பாசிட்டா தவணை டெப்பாசிட்டா என்பது பெருக்கியின் அளவை நிர்ணயிக்கும். கேட்பு டெப்பாசிட்டு களுக்கும் (demand dep sits), தவணை டெப்பாசிட்டுகளுக்கும் (time deposits) வெவ்வேறு காப்புத் தொகைகளைக் கொண் டிருக்கின்றனர். வங்கிகளிலிருந்து நிதிநிலையங்களுக்குத் திரும்பும் டெப்பாசிட்டுகள் தவணை டெப்பாசிட்டுகளாக இருந்தால் நிதிநிலையங்கள் கொடுக்கக் கூடிய கடன் தொகைக்குச் சமமான அளவு வங்கிக்கடன் பெருக்கி குறையும். ஏனெனில் இப்பெயர்ச்சி யினால் வங்கிகள் அதிகமான கேட்பு டெப்பாசிட்டுகளையும் குறைவான தவணை டெபாசிட்டுகளையும் (time depos ts) கொள்ள வேண்டும். இதனால் வங்கிகள் அதிகமான காப்புத் தொகையை வைத்துக் கொள்ள வேண்டும். இதே விகிதத்தில் மிகுதியான கேட்பு டெபாசிட்டுகள் வங்கிகளைவிட்டு நிதி நிலையங் களுக்குச் சென்றால், கொடுக்கக்கூடிய உபரிக் கடன் தொகை மிகுதியடையும்; வங்கிகள் கொள்ள வேண்டிய காப்பு நிதி குறை வான அளவே தாழ்வடையும்;[2] கடன் பெருக்கி ஏற்படுவதற்கு வங்கித் துறையில் அதிக காலதாமதம் ஏற்படாது. நிதி நிலை யங்கள் ஆக்கும் கடன் பெருக்கி சற்று அதிகக் காலம் தாழ்த்தி நிகழ்கின்றது. வங்கித் துறையில் கால தாமதத்திற்கு மொத்த விற்பனையும் நிதி நிலையத் துறையில் அதன் மொத்த வருமானமும் காரணங்களாக இருக்கின்றன. மேலும் இடை நிலை நிதி நிலை யங்கள் கொடுக்கும் கடன் தொகை வேறு திசையில் திரும்பும் வாய்ப்புகள் பல உள. ஆனால், வங்கிக் கடன்கள் இவ்வாறு திசை திரும்புவதற்கு ஒரு சில காரணங்களே உள. ஆயினும்

[1] Money in a Theory of Finance, p. 202.

[2] Richard, Thorn, IMF Staff Papers, Nov. 1958, pp. 271-3.

இரு துறைகளுக்கு மிடையே பற்பல ஒற்றுமைகள் இருக்கின்றன இரு துறைகளிலும் கடன் பெருக்கிகள் இயங்குகின்றன. இதனால் பொருளாதாரத்தின் ஸ்திரத்தன்மை பாதிக்கப்படும். இடைநிலை நிதி நிலையங்கள் சம்பந்தப்பட்டவரை இரு முறைகளில் ஸ்திரத் தன்மை பாதிக்கப்படும். (1) கேட்பு டெபாசிட்டுகளிடையே திருப்பம் ஏற்படுவது, மற்ற இடைநிலைப் பொறுப்புகளிடையே யும் திருப்பம் ஏற்பட்டு ஸ்திரத்தன்மை பாதிக்கப்படலாம். (2) நிலையங்களின் சொத்து இனங்களில் மாறுதல் ஏற்படுவது.

**இடைநிலை நிதி நிலையங்கள் செலாவணிக் கொள்கைக்கு எதிராக விளைவிக்கும் ஆபத்துகள் — அவை மீது மைய வங்கியின் கட்டுப்பாடு**

ராட்கிளிப்-சேயர்ஸ் ஆய்வு முறையைப் போலவே, கர்லே-ஷா முறையும் வங்கிகள் அல்லாத இடைநிலை நிதிநிலையங்கள் செலாவணிக் கொள்கைக்கு எதிராக விளைவிக்கும் ஆபத்துகள் இருக்கின்றன என்பதை ஒத்துக்கொள்கின்றது. இடைநிலை நிதி நிலையங்கள் கொண்டிருக்கும் சொத்துகள் பணத்திற்கு நெருங் கிய பதிலிப் பண்டமாக (close substitute) இருக்கின்றன. இதனால் வட்டி மாற்றத்தின் வழியாகப் பணத்திற்கு ஏற்படும் தேவை அதிக நெகிழ்ச்சி கொண்டிருக்கின்றது. ஆகையால் பணக் கொள்கையின் வலிமை பாதிக்கப்படுகின்றது. ராட்கிளிப் முறைப்படி பணக் கொள்கை நெருக்கடி காலத்தில் செயல்படுத் தப்படவேண்டிய அவசரகாலக் கருவியாகும். ஆனால், ராட்கிளிப் இத்தகைய ஒரு சிறிய பணியை செலாவணிக் கொள்கைக்கு அளிக்கவில்லை. இடைநிலை நிதிநிலையங்கள் செலாவணிக் கொள்கைக்கு எதிராக விளைவிக்கும் போக்கைச் சரிக்கட்டி விட லாம் என்பது ராட்கிளிப் கருத்தாகும். வங்கிகள்மீது உள்ள கட்டுப்பாடுகளை இந்த நிலையங்கள் மீதும் ஏற்படுத்தினால் இவை களுடைய செயல்களை ரத்துச் செய்துவிடலாம். மைய வங்கியின் செலாவணிக் கட்டுப்பாடுகள் வர்த்தக வங்கிகளுக்கெதிராக ஓரம் காட்டும் வகையில் அமைந்துள்ளன என்று அவர்கள் குறிப் பிட்டனர். செலாவணிப் பகுதி (வர்த்தக வங்கிகள் உள்ளிட்டது) சிறப்பான முறையில் நடந்துகொண்டிருக்கும்போது மற்ற நிதி நிலையங்கள் விரைவில் தொழிற் பெருக்கம் செய்து கொண்டிருக்க லாம். ஆனால், அந்த நிலையிலும்கூட மைய வங்கிகள் செலா வணிப் பகுதியைக் கட்டுப்படுத்த முயலுகின்றன. 'கெட்ட பைய னுடைய' செயல்களுக்காக 'நல்லவனை'த் தண்டிக்கின்றனர்.[1]

[1] E. S. Shaw and J. G. Gurley. Financial Growth and Monetary Controls (Southern Economic Association, Nov. 1955).

இந்த நிலையில் கர்லே-ஷா ஆய்வு ஒரு முக்கியமான இடத்திற்கு வருகின்றது. புராதன முறையில் வங்கி முறையைச் செலாவணிக் கொள்கையின் 'சின்ரல்லா'வாக நடத்தினர் என்பது அவர்கள் கருத்து.*[1] வங்கி முறை செலாவணிக் கட்டுப்பாடுகளுக்குட் படுகின்றது; அதன் வழி வரும் பிரதிகூலங்களை ஏற்கின்றது. கட்டுப்பாடுகளால் விளையும் பிரதிகூலங்களை நியாயமான முறையில் பகிர்வு செய்யலாம். நிதிசொத்துகளை (அதாவது கடன்களை) வழங்குவோர் எல்லோரையும் (இடை நிலை நிதியகங்கள் உட்பட) குறிப்பிட்ட காப்பு நிதியைக் கொள்ளவேண்டும் என்று கட்டாயப்படுத்த வேண்டும். அல்லது அவைகளை மைய வங்கியின் கட்டுப்பாடுகளுக்குட்படுத்த வேண்டும். காப்பு நிதியை உயர்த்துவதால் ஏற்படும் கட்டுப்பாடுகள் வங்கிகளைவிட நிதியகங்களைக் குறைவாகவே பாதிக்கும். ஏனெனில், காப்பு நிதியை உயர்த்தினால் நிதியகங்கள் தம்மிடம் உள்ள இடைநிலைக் காப்புத் தொகைகளைப் பெருக்கிக் கொள்ளலாம். ஆனால், வங்கிகள் மைய வங்கிகளிடமிருந்து கடனுதவி பெறாமல் தம் காப்பு நிதிகளைப் பெருக்கிக்கொள்ள முடியாது. மைய வங்கிகள் அளிக்கும் கடன்கள் கட்டுப்பாடுகளுக்குட்பட்டிருக்கின்றன. மேலும் காப்பு நிதிகளை உயர்த்தும்போது வங்கிகளும் நிதியகங்களும் தம் வசம் இருக்கும் சொத்துகளை விற்றுத் தம் காப்பு நிதியை அதிகரித்துக் கொள்ள வேண்டும். ஆனால், வங்கிகளுடைய காப்பு நிதிகளை உயர்த்தும்போது அவை தம் பொறுப்புகளையும் (liabilities), சொத்துகளையும் (assets), உயரும் காப்பு விகிதத்திற்குச் சமமான மடங்குகள் குறைக்க வேண்டும். ஆனால், நிதியகங்களின் சொத்து இவைகளில் மட்டும் மாறுதல்கள் நிகழ்ந்தால் போதும்; அவைகளுடைய பொறுப்புகள் மாற வேண்டியதில்லை. எனவே, இவை கொடுத்துள்ள கடன்கள் காப்புத்தொகை உயரும் அளவு குறைதல் வேண்டும். அவை உயரும் அளவு இத் தொகை மடங்குகளில் குறைய வேண்டாம். இடைநிலை நிதியகங்கள் கொடுக்கும் கடன்கள் உயரும் காப்புத் தொகைக்கு நிகரான அளவும். வங்கிகளின் கடன்கள் இத் தொகையைப்போலச் சில மடங்குகளும் குறைகின்றன. காப்பு நிதியுயர்வையடுத்து இவை நிகழும். இரு பக்கங்களிலும் சமமான அளவு கடன் குறைப்பு ஏற்படவேண்டுமானால் நிதியகங்கள் வர்த்தக வங்கிகளைவிட மிகுதியான தொகைகளைக் காப்பாகக் கொள்ளவேண்டும்.[2]

* 'சின்ரல்லா'வாக நடத்தினர் என்பது ஒரு குழந்தையை மாற்றாந்தாய் நடத்துவதைக் குறிக்கின்றது. (இக்குறிப்பு தமிழாக்கம் செய்தவருடையது)

[1] Don Patinkin, 'Financial Intermediaries and the Logical Structure of Monetary Theory', American Economic Review, March 1961-ல் வந்த கட்டுரை.

[2] D. A. Alhadeff, 'Credit Controls and Financial Intermediaries, American Economic Review, Sept. 1960, p. 660.

இடைநிலை நிதியகங்களுடைய காப்புத் தொகையை, அவை மைய வங்கிகளில் டெப்பாசிட்டாகக் கொள்ள வேண்டுமா அல்லது வர்த்தக வங்கிகளில் வைத்துக்கொள்ளலாமா என்பதைப் பொறுத்து அவை ஏற்படுத்தும் விளைவுகள் அமையும். காப்பு நிதியை அவை மைய வங்கிகளில் டெப்பாசிட்டாகக் கொள்ள வேண்டியிருந்தால் கடன் செலாவணிச் சுருக்கம் (credit contraction) வங்கிமுறை செய்யவேண்டிய பொறுப்பாகும். வர்த்தக வங்கிகளிடம் அவை காப்பு நிதியை டெப்பாசிட்டாகக் கொள்ள வேண்டுமென்ற விதி இருந்தால், அவைகளுடைய கடனளிக்கும் திறமையும், வங்கிகளுடைய திறமையும் வேறுபட்டிருக்காது. ஆனால், மறைமுக விளைவுகள் பெரிதும் வேறுபட்டிருக்கும். மைய வங்கி காப்பு நிதியைச் செலாவணிப் பெருக்கத்திற்குப் பயன்படுத்துகின்றதா என்பதும் இவ் விளைவுகளைப் பாதிக்கும். மைய வங்கி இறுதி நிலையில் கடன் கொடுக்கும் நிலையமாகப் (lender of the last resort) பணிபுரிந்தால், செலாவணிப் பெருக்கத்தை விளைவிக்கக்கூடிய மேலும் ஒரு காரணி ஏற்படுகின்றது. இடைநிலை நிதியகங்களுடைய ரொக்கத் தன்மையும் மேலும் வலுவடைகிறது. இதனால் நிதியகங்கள் குறைவான உபரிக் காப்புத் தொகையுடன் இயங்குவதோடல்லாமல், அவைகளுடைய பொறுப்புகளை மக்கள் பணத்தின் நெருங்கிய பதிலியாகப் (close substitute) பயன்படுத்துவர். எனவே, வங்கிகளிடமிருந்து தம் டெப்பாசிட்டுகளை மேலும் மிகுதியாக நிதியகங்களுக்குத் திருப்புவர்.[1]

வங்கிகளைப் போன்ற இடைநிலை நிதியகங்கள் வங்கிகளுடன் போட்டியிடும்போது இரு அனுகூலங்களைக் கொண்டிருக்கின்றன. அவை (1) வருமானம் ஈட்டாத பொறுப்புகளை மைய வங்கிகளிடம் காப்பாக வைக்க வேண்டும். (2) வட்டி வீத உச்சவரம்பு, வங்கிகளைப்போல இந்த நிதியகங்களைக் கட்டுப்படுத்தா. பண நிலை கடுமையாக (tight money conditions) இருக்கும்போது வங்கிகளும் நிதியகங்களைப்போல உயர் வட்டி வீதம் கொடுக்க அதிகாரம் பெற்றால் அவை நிதியகங்களுடன் போட்டியிடும் வல்லமை பெறும். வங்கிகளிடமிருந்து நிதியகங்களுக்கு டெப்பாசிட்டுகளைத் திருப்புவதால்தான் ஸ்திரத் தன்மை நலிவுறுகின்றது என்று சிலர் கருதுகின்றனர். இரு வகை நிலையங்களுக்குமிடையே வட்டிவீதத்தில் உள்ள வேறுபாடே இதற்குக் காரணமாகும். இரு சாராருக்குமிடையே (போட்டியிடுவதில்) உள்ள சமத்துவமின்மையை நீக்குவதற்

[1] Richard S. Thorn, I. M. F. Staff Papers, Nov. 1958, p. 380.

காக. நிதியகங்களுடைய டெப்பாசிட்டுகளையும் வட்டிவீதக் கட்டுப்பாடுகளுக்குட்படுத்த வேண்டும் என்ற கருத்தைச் சிலர் வெளியிட்டனர்.

### ஆங்கில விலைகள் வருமானங்கள் பற்றிய குழுவின் (Prices and Incomes Board) யோசனைகள்

விலைகள், வருமானங்கள் பற்றிய தேசியக் குழுவினர் 'Report on Bank Charges' (1967) என்ற அறிக்கையில் செய்துள்ள சிபாரிசுகளை இங்குக் காண்போம். வங்கிகளுக்கும் அவைகளுக்குச் சமமான நிலையங்களுக்குமிடையே ஏற்படும் சமத்துவமில்லாத போட்டியை எவ்வாறு தவிர்க்கலாம் என்பது பற்றியவை இந்தச் சிபாரிசுகள்.[1] ஆங்கிலேய வங்கிகள் ஈர்த்த டெப்பாசிட்டுத் தொகைகளை இடைநிலை நிதியகங்களுடைய தொகைகளுடன் ஒப்பிடும்போது வங்கிகளுடைய டெப்பாசிட்டுகள் குறைவாகவே பெருகியுள்ளன. வங்கிகளுடைய நிலை நலிவுறுவதற்குக் காரணமுண்டு என்று குழுவினர் குறிப்பிட்டனர். அவைகளின் வட்டிவீதங்கள் பற்றிய பழக்கங்கள் அவற்றில் போட்டியிடும் ஆற்றலை நீக்கிவிட்டன. நிதியகங்களுடன் அவை நல்ல முறையில் போட்டியிடவேண்டுமானால் அவை தம்மிடையே அமைத்துக் கொண்ட 'சான்றோர் உடன்பாட்டைக் (gentlemens agreements) கைவிடவேண்டும். நிதியகங்களுடன் கடுமையாகப் போட்டியிட்டுத் தம் வட்டி வீதங்களை உயர்த்தி அதிகத் தொகைகளை டெப்பாசிட்டாகப் பெற வேண்டும். ரொக்கக் காப்புபற்றிய விதிகளையும், ரொக்க நிலை விகித (liquidity ratio) விதிகளையும் நிதியகங்கள் மீதும் சுமத்த வேண்டுமென்றும் குழுவினர் குறிப்பிட்டனர்.

இடைநிலை நிதியகங்கள் உயர் வட்டி கொடுத்து டெபாசிட்டுகளை ஈர்க்க முடிகின்றது. ஏனெனில், இவ்வட்டியுயர்வை அவைகளிடம் நிதிவசதி பெறுவோர் மீது அவை சுமத்த முடியும். இரு வீதங்களிடையே தக்க வேறுபாட்டையும் அமைக்க முடியும். தவணை முறையில் பண்டங்களை வாங்குவோர் பெறும் கடனுக்கு எழும் தேவை மிகக் குறைவான நெகிழ்ச்சி (elasticity) கொண்டிருக்கின்றது. இந்த நிதியகங்கள் அரசு பத்திர மார்க்கட்டில் நிதியீடு நடப்பதைத் தவிர்க்கவும் வட்டி வீதங்களை உயர்த்த வேண்டும். இவைகளுடைய போட்டியைச் சமாளிக்க அரசு பத்திர வீதங்களை உயர்த்த வேண்டும். சாதாரணமாக

[1] National Board for Prices and Incomes, Report No. 34, Bank Charges (London: H. M. S, 03292, 1967).

இவ்வுயர்வு தேவைப்படுவதில்லை. இதனால் பொது கடனின் நிருவாகச் செலவுகள் அனுவசியமாகக் கூடுகின்றன. டெப்பாசிட்டுகளை ஈர்ப்பதற்காக ஏற்படும் இப் போட்டி பணமார்க்கட்டின் ஒழுங்கைக் கெடுக்கும் என்ற உண்மையைப் பல நாடுகளின் அனுபவம் புலப்படுத்தியுள்ளது. கட்டுப்பாடுகள் விளைவிக்கும் பிரதிகூலங்களை (disadvantages) வங்கிகளைப் போலவே மற்ற நிதியகங்களும் ஏற்க வேண்டும் என்ற ஏற்பாடு நாட்டில் சாதனப் பகிர்வு மூலம் விளையும் நன்மைகளைப் பெருக்கும் என்று பேராசிரியர் ஹாரி ஜான்சன் குறிப்பிட்டுள்ளார்.[1] ரொக்க நிலை பற்றிய விதிகளை நிதியகங்கள் மீறும் வல்லமை கொண்டிருக்கின்றன என்பது யாவரும் அறிந்ததே. இவ் விதிகளை மீறுவதற்கு வங்கிகள் கொண்டிருக்கும் ஆற்றலைவிட நிதியகங்கள் அதிகமாகக் கொண்டிருக்கின்றன. ஆகையால் இத்தகைய விதிகள் இரு சாராருக்குமிடையே நியாயம் ஏற்படுத்துவது கடினம். இந்த நிதியகங்களைச் செலாவணிக் கட்டுப்பாடுகளுக்குட்படுத்துவதை ராட்கிளிப் குழுவினர் ஆதரிக்கவில்லை. ஏனெனில், இவ்வாறு செய்தால் கட்டுப்பாடுகளுக்கப்பால் புதிய நிலையங்கள் தோன்றலாம்.

இடைநிலை நிதியகங்கள் விரைவில் தோன்றியதால் மைய வங்கியின் செலாவணிக் கட்டுப்பாட்டுத் திறன் பாதிக்கப்படவில்லை என்பது சிலர் கருத்து.[2] சிலர் இத்தகைய நிலையங்கள் செலாவணிக் கட்டுப்பாட்டுத் திறனைப் பெருக்கியுள்ளன என்றுகூடக் கருதுகின்றனர். உதாரணமாக திரு. அஸ்சிஹிம் (Mr. Aschheim) அரசின் கடன் பெருகியமையால் வெளி மார்க்கட்டு நடவடிக்கையின் பலன்கள் கூடிவிட்டன. வங்கிகளும் மற்ற நிலையங்களும் இதற்குட்பட்டுவிட்டன என்று குறிப்பிடுகின்றார்.[3] அமெரிக்காவில் பெடரல் ரிசர்வ் முறை நிறுவப்பெற்ற காலத்திலிருந்தே, வங்கிகளும் மற்ற நிலையங்களும் மேன்மேலும் அதிக அளவில் அரசு பத்திரங்களைக் கொண்டிருக்கின்றன. நிதியகங்கள் நீண்டகால அரசு பத்திரங்களைக் கொண்டிருப்பதால் வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளுக் குட்படுகின்றன, தாம் கொடுக்கும் கடன் தொகைகளைப் பெருக்க நிதியகங்கள் தம்மிடமிருக்கும் அரசு பத்திரங்களை விற்பனை செய்யலாம். இவ்வாறு செய்தால் வட்டி

[1] Harry Johnson 'Symposium on the Report on Bank Charges, Bankers' Magazine, Aug. 1967 p. 67.

[2] Donald Shelbey, Some Implications of the Growth of Financial Intermediaries' Journal of Finance, December 1958.

[3] J. Aschheim, Techniques of Monetary Control, p. 131.

விதங்களை உயர்த்தலாம். இதன் விளைவாக நீண்டகால அரசு பத்திரங்களின் முகமதிப்புக் குறையும். நிதியகங்களும் அவைகளை விற்பனை செய்யத் தயங்கும். அவை கொண்டிருக்கும் அரசு பத்திரங்கள் எவ்வளவுக்கெவ்வளவு நீண்ட கால முதிர்வைக் கொண்டிருக்கின்றனவோ அவ்வளவுக்கவ்வளவு வட்டியுயர்வால் அவைகளுடைய மதிப்புக் குறையும். இந்த நிலையில் அரசு பத்திரங்களை விற்றுத் தாம் கொடுக்கும் கடன் தொகையைப் பெருக்கும் திறனை நிதியகங்கள் இழக்கும் என்று திரு. பர்ன்பாம் (Mr. Birnbaum) குறிப்பிடுகின்றார். இந்த அளவுக்கு வெளி மார்க்கட்டு நடவடிக்கை வெற்றிகரமாக இருக்கும்;[1] அரசு, பொதுக் கடனை (Public debt) பெருக்காமலும் விரிவாக்காமலும் இருப்பின், மைய வங்கி, வங்கிவீதம், காப்புவீத மாற்று முறை (variable reserve ratio) முதலிய பழைய கருவிகளையே பயன்படுத்த நேரிடும். இக் கருவிகளை வர்த்தக வங்கிகள் மீது மட்டுமே செலுத்தமுடியும். அரசு பத்திர மார்க்கட்டு வளர்ச்சியடையவே, வங்கிகளும் மற்ற நிதியகங்களும் இப் பத்திரங்களில் முதலீடுசெய்யும்பழக்கம் வளர்ந்துள்ளது. இதன் விளைவாக வெளி மார்க்கட்டு நடவடிக்கை எல்லா நிதி நிலையங்களுடைய முதலீட்டுக் கொள்கையையும் நேரிடையாகப் பாதிக்கின்றது. மேற் குறிப்பிட்ட நூலாசிரியர்கள் வெளிமார்க்கட்டு நடவடிக்கைக்கு உயர்ந்த இடத்தைத் தந்துள்ளனர். ஆனால், மற்ற ஆசிரியர்கள் இதற்கு ஆட்சேபம் தெரிவிக்கின்றனர். இது பற்றி ஒரு முடிவுக்கு வருவதற்கு முன், நடைமுறையில் நிதியகங்கள் நடந்துகொள்வதை நோக்கி உண்மையை அறிதல் வேண்டும் என்பது அவர்கள் கருத்து.[2]

வங்கிகளுக்குப் பொருந்தும் கட்டுப்பாடுகளை இதர நிதியகங்கள் மீதும் அமல் செய்து இரு தரப்பினருக்குமிடையேயுள்ள போட்டியிடும் திறமையைச் சமன்படுத்துவதைச் சிலர் சரியெனக் கருதத் தவறலாம். இவர்கள் வளர்ச்சிபற்றிய கோட்பாடுகளைப் பேணுவோராவர். இவர்கள் நிதியகங்களின் வளர்ச்சியையும், தொழில் நுட்ப முன்னேற்றத்தையும், பொருளாதார வளர்ச்சியைத் தூண்டும் காரணிகள் என்று கருதுகின்றனர்.[3]

[1] E. A. Birnbaum', Growth of Financial Intermediaries as a Factor in the Effectiveness of Monetary Policy' in I.M.F. Staff Papers No. 1958 p. 397.

[2] David C. Rowan 'Banca Nazionale del Lavoro Quarterly Review June 1963.

[3] Harry Johnson, 'Current Issues in Monetary Policy' in Bankers Magazine, Nov. 19.8 p. 252.

முடிவாகக் கூறும்போது கர்லே–ஷா, ராட்கிளிப் அறிக்கை இவைகளின் கருத்து வேற்றுமைக்கு இங்கிலாந்து, அமெரிக்காவி லுள்ள நிலையங்களுடைய வேறுபாடுகளே காரணம் என்று கூறலாம். கர்லே–ஷா ஆய்வின் வழி வந்த கோட்பாட்டு மாறு தல்கள் புரட்சிகரமானவை. அதை ஏற்கவேண்டுமானால் வங்கிக் கோட்பாட்டையும், கடன் நிருவாகக் கோட்பாட்டையும், பொருளாதாரத்தில் ஸ்திரத்தன்மையை நிறுவுதல் பற்றிய கருத்து களையும்கூடத் திருத்தியமைக்க வேண்டும்.

# 7. மைய வங்கியின் வெளிமார்க்கட்டு நடவடிக்கைகள்

## (Open Market Operations)

மைய வங்கிகள் தாராளமாக வெளிமார்க்கட்டு நடவடிக்கைகளில் ஈடுபட அனுமதி பெற்றுள்ளன. இது தற்காலத்தில் குறிப்பிடத்தக்க போக்காகும். முதல் உலகப் போருக்குமுன் வெளிமார்க்கட்டு நடவடிக்கை என்று சொல்லக்கூடிய செயல்களில் இங்கிலாந்து வங்கி அதிகம் ஈடுபடவில்லை. தற்காலத்திய பொருளில் வெளி மார்க்கட்டு நடவடிக்கைகள் அக் காலத்தில் இல்லை. 'கான்சல் பத்திரங்களை கணபேர முறையில் விற்பதும் கணக்கெழுதி வாங்குவதும்' (selling consols spot and buying for the account) அக்காலத்தில் அடிக்கடி மேற்கொள்ளப்படவில்லை. இக் காலத்திய வெளி மார்க்கட்டு நடவடிக்கை போன்ற செயல்களில் ஜெர்மனிய ரீச் வங்கி மட்டுமே (Reich Bank of Germany) ஈடுபட்டது. 1913ஆம் ஆண்டின் பெடரல் ரிசர்வ் சட்டப்படி வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளை அமெரிக்க நாட்டில் மேற்கொள்ளலாம். ஆயினும். இச் செயல்களை 1923-க்குப் பின்னரே முறையாகப் பின்பற்றினர். முதல் உலகப் போருக்குப் பின்னரே வெளி மார்க்கட்டு நடவடிக்கைகள் முக்கியத்துவம் பெற்றன. இதன் பின் இங்கிலாந்து வங்கியும். பெடரல் ரிசர்வ் முறையும் இச் செலாவணிக் கட்டுப்பாட்டு முறையை அதிகம் ஆண்டன. ஐரோப்பாக் கண்டத்தில் முதல் போர்க்காலத்தில்கூட வெளிமார்க்கட்டு நடவடிக்கைகளுக்கு அதிகம் வாய்ப்பில்லை. பிரெஞ்சுக்காரர்கள் இந்த முறையை 'ஆங்கில நாட்டுத் தீயப் பழக்கம்' (Anglo-Saxo vice) என்று வருணித்தனர்.[1] பல பழைய மைய வங்கிகள், அரசு பத்திரங்களையும். கருவூல உண்டியல்களையும் (Treasury bills) இது போன்ற மற்றப் பத்திரங்களையும் வாங்குவதற்கும், விற்பதற்கும் தடைகள் இருந்தன. ஹாலந்து, நார்வே. பெல்ஜியம், பிரான்சு, ஜெர்மனி ஆகிய நாடுகளின் மைய வங்கிகளை உதாரணமாகக் காட்டலாம். போர் பிற்காலத்தில்

[1] Parker Willis. The Theory and Practice of Central Banking with special reference to the Federal Reserve System, p. 178.

பல மைய வங்கிகளின் சட்டங்களைத் திருத்தினர். இதன் பலனாகப் பல மைய வங்கிகள் வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளில் ஈடுபடலாம். புதிய மைய வங்கிகளுடைய சட்டங்கள் இந்த நடவடிக்கைகளை மேற்கொள்ளுவதற்கு வேண்டிய அதிகாரத்தை மைய வங்கிகளுக்கு அளித்தன.

1930–40 ஆண்டுகளிலேயே இங்கிலாந்தையும் அமெரிக்காவையும் தவிர மற்ற நாடுகளில் வெளி மார்க்கட்டு நடவடிக்கைகள் முக்கியமான செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவியாகக் கருதப்பட்டன. வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளை மேற்கொண்ட பழைய வங்கிகளுள் ஜெர்மானிய ரிசர்வ் வங்கியே முதலிடம் பெற்றுள்ளது. 1933ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் அது சில குறிப்பிட்ட பத்திரங்களை வாங்கவும் விற்கவும் அனுமதி பெற்றது. வங்கிகளின் ஏற்புகளை (bank acceptance) வாங்குவதையும் விற்பதையும் அனுமதித்திருந்தனர். இது வங்கிகளின் தள்ளுபடித் தொழிலில் சேர்ந்திருந்தது. ஆனால் அரசு பத்திரங்களை வாங்குவதும் விற்பதும் 1924ஆம் ஆண்டுச் சட்டப்படி தடைசெய்யப்பட்டிருந்தன.[1] வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளை மேற்கொள்ள முடியாத நிலையில் இருந்த ரிசர்வ் வங்கி வட்டிவீதக் கருவியை மட்டும் கையாண்டது; ஆனால் அது கூர்மையற்ற ஒரு கட்டுப்பாட்டுக் கருவியாகச் செயல்பட்டது.[2] 1939ஆம் ஆண்டு ஜூன் 15ஆம் தேதி வந்த புதிய சட்டம் ரீச் வங்கிக்கு வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளை ஆள அதிகாரம் கொடுத்தது. இதன் நோக்கம் பண மார்க்கட்டைக் கட்டுப்படுத்துவது. குறிப்பிட்ட வட்டிவீதப் பத்திரங்களையும், பங்கு மாற்று நிலையங்களில் (Stock Exchanges) பரிவர்த்தனையாகும் பத்திரங்கள்—ஆறு மாதத்திற்குள் முதிர்வு பெறும் கருவூல உண்டியல்களையும் கொண்டு வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளில் ஈடுபடலாம். பண மார்க்கட்டை ஒழுங்குபடுத்துவதற்காக இந்தச் செயல்களைச் செய்யலாம்.[3] போலந்து வங்கி (Bank of Poland), நார்ஜஸ் வங்கி (Bank of Norges) நெதர்லாந்து வங்கி (Nederlandsche Bank), ஸ்வீடன் நாட்டு ரிக்ஸ் வங்கி (Riks Bank), பெல்ஜியன் நேஷனல் வங்கி (Belgian National Bank), நாஷனல் பாங்க் ஆப் ஹங்கேரி (National Bank

[1] M. B. Northrop, Control Policies of the Reichs Bank, p. 35

[2] M. B. Northrop, Control Policies of the Reichs Bank, pp. 268-69.

[3] Sec 13 (1) Reichs Bank Law of June 15, 1939, Federal Reserve Bulletin, Sep. 1939, p. 738.

of Hungary) ஆகிய வங்கிகள் ஜெர்மானிய வங்கியைப் பின் பற்றின.[3]

பாங்க் ஆப் பிரான்ஸ் (Bank of France) எல்லாவற்றையும் விட மிகவும் குறிப்பிடத்தக்க நிலையமாகும். ஏனெனில், பிரான்ஸ் நாட்டினர் வெளிமார்க்கட்டு நடவடிக்கையை 'ஆங்கில நாட்டுத் தீய பழக்கம்' (Anglo-Saxon vice) என்று குறிப்பிடுவது வழக்கம். 1938ஆம் ஆண்டு ஜூன் 17-ந் தேதி ஓர் ஆணை பிறப்பித்தது. இதன்படி வெளிமார்க்கட்டு நடவடிக்கைகளுக்கு அதிகாரம் தந்தது. வங்கிக் கடனையும், பணமார்க்கட்டையும் ஒழுங்கு படுத்த வெளிமார்க்கட்டு நடவடிக்கையை மேற்கொள்ளலாம். 1936ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 31ஆம் தேதி வெளிவந்த சட்டத்தில் 106 பிரிவுப்படி சில சொத்துகளைக் கொண்டு மைய வங்கி இத் தொழிலைச் செய்யலாம். புதிய சட்டப்படி இச் சொத்துகளைத் தவிர மேலும் சிலவற்றையும் வாங்கவோ, விற்கவோ செய்யலாம். ஆனால், இந்த நடவடிக்கை குறிப்பிட்ட எல்லைகளுக்குட்பட்டிருக்கவேண்டும்; சில நிபந்தனைகளுக்குட் பட்டிருக்கவேண்டும். பொதுக் குழு (General Council) விதித் துள்ள நிபந்தனைகளுக்குட்பட்டு வங்கிச் செலாவணித் தன்மை யைக் கொண்ட குறுகிய கால அரசு பத்திரங்களையும், தகுதி யுள்ள தனியார்ப் பத்திரங்களையும் வாங்கலாம்; முன்னர் வாங்கிய பத்திரங்களைப் புறக்குறிப்புச் (endorsement) செய்யாமல் விற்கலாம்.[4] நடவடிக்கைகளை ஒருபோதும் கருவூல நன்மைக் காகவோ, அல்லது பத்திரங்களை வெளியிடுவோர் நன்மைக் காகவோ மேற்கொள்ளக் கூடாது.

முன்னர் வெளிமார்க்கட்டு நடவடிக்கைகளை மேற்கொள்ள முடியாத பழைய மைய வங்கிகள் இவ்வதிகாரத்தைப் பெற்றதோடல்லாமல் புதிய நிறுவனங்களுடைய சட்டங்களில் இதற்கான ஷரத்துகளைச் சேர்த்தனர். நியூஜிலாந்து, கனடா, இந்தியா, பர்மா, சிலோன் முதலிய நாடுகளில் சட்டமியற்றும் போது இவ்வதிகாரத்தை மைய வங்கிகளுக்குக் கொடுத்தனர்.

மத்திய அமெரிக்க நாடுகளிலுள்ள மைய வங்கிகள் பெரும் பாலும் புதியவை. அவை வசமுள்ள வங்கிச் செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவிகளுள் வெளிமார்க்கட்டு நடவடிக்கை ஒன்றாகும். கானா, நைஜீரியா, ரொடிசியா, நயாசாலாந்து,

[4] Sixth and 9th Annual Reports of the B. I. S. Also Money and Banking (League of Nations), 1937-38, Vol I p. 86.

[1] Federal Reserve Bulletin, August 1938, pp. 650-55.

மலேயா முதலிய நாடுகளில் மைய வங்கிகள் 1950—60 ஆண்டுகளில் தோன்றியவை. இவை கருவூல உண்டியல்களை யும் அரசு பத்திரங்களையும் வாங்கலாம், விற்கலாம்.

## வெளிமார்க்கட்டு நடவடிக்கைகள் செம்மையாக நடைபெறு வதற்கு வேண்டிய சட்டபூர்வ நிலையங்கள்

வெளிமார்க்கட்டு நடவடிக்கைகள் சரிவர நடைபெறு வதற்குச் சில சட்டபூர்வ நிலையங்கள் வேண்டும். ஆனால், சில நாடுகளில் சட்டங்களும், நிலையங்களும் வெளி மார்க்கட்டுக் கொள்கை செம்மையாக வளர்வதற்கு உகந்தவையாக இல்லை. சில நாடுகள் மைய வங்கிகள் வைத்துக்கொள்ளக்கூடிய அரசு பத்திரங்களுக்கு உச்சவரம்பு கட்டியுள்ளன, அல்லது மைய வங் கியின் முதலுக்கும் அது கொண்டுள்ள பத்திரங்களுக்கும் விகிதத் தொடர்பு ஏற்படுத்தியுள்ளன. மற்ற நாடுகள் பத்திர முதிர்வுக் கட்டுப்பாடுகளை ஏற்படுத்தியுள்ளன. இத்தகைய சட்டத் தடைகள் வெளிமார்க்கட்டு நடவடிக்கை அதிகாரத்தை ஒடுக்கி விட்டன. ஆனால், அரசியலார் அளவுக்குமீறி மைய வங்கியிடம் கடனுதவி பெறுவதைத் தடைசெய்வதே சட்டத்தின் நோக்க மாகும். வெளி மார்க்கட்டு நடவடிக்கை ஒரு புதிய கருவி யாகும். அதன் நோக்கத்தை விடுத்து மற்றக் காரணங்களுக்கு அதைப் பயன்படுத்துவதைத் தடைசெய்யவேண்டும். பாக்கிஸ் தானில் மைய வங்கி கொண்டிருக்கும் அரசு பத்திரங்களின் மதிப்பு, வங்கியின் பங்குத் தொகைக்கும், காப்பு நிதிக்கும், வங்கித் துறையின் டெப்பாசிட்டுப் பொறுப்பில் 1/5 பங்குக்கும் அதிகமானதாக இருக்கக்கூடாது.[1] கானாவில் மைய வங்கி வச முள்ள அரசு பத்திரங்களின் மதிப்பு அதன் பங்குத் தொகையைப் போல் 6 மடங்குகளுக்கு மேற்படக்கூடாது. நைஜீரியாவில் கேட்புத் தேவைகளில் 20%க்கு மேலாக இருக்கக்கூடாது.[2] கானாவில் 1963-ல் இத்தடையை நீக்கினர். நாஷனல் பாங்க் ஆப் லிபியாவின் (National Bank of Libya) வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளுக்கு வரம்பிருந்தது. மைய வங்கி வைத்துக் கொள்ளும் அரசு பத்திரத்தின் மதிப்பு அதன் செலுத்திய மூல தனம், காப்புநிதி—இவைகளைப்போல் 4 மடங்குகளுக்கு மேற்படக் கூடாது. 1963-ல் சட்டத்தைத் திருத்தினர். இவ்வுச்சவரம் பையும் நீக்கினர்.[3] ஹொண்டுராஸ் நாட்டின் மைய வங்கி

[1] Cl. 17 (10) (c) (i). State Bank of Pakistan Act, 1956.

[2] Sec 31 (h), The Bank of Ghana Ordinance 1957 and Sec. 29 (g) The Central Bank of Nigeria Act, 1958.

[3] Art 14 (4) Banking Law of Libya 5 February, 1963.

(Central Bank of Honduras) அரசு பத்திரங்களையோ அல்லது அரசு உறுதியளித்தவைகளையோ வைத்துக் கொள்ளலாம். இவை கடந்த 3 ஆண்டுகளில் நாட்டின் வருவாயில் 15 சத விதத்திற்கு உயர்வாக இருத்தல் கூடாது.[1]

சில மைய வங்கிச் சட்டங்கள் வங்கிகள் வசமுள்ள பத்திர முதிர்வ காலத்திற்கு வரம்புகள் வகுத்துள்ளன.[2] ஸ்விட்ஜர்லாந்து, மெக்சிகோ, குவாடிமாலா முதலிய நாடுகளிலும் சில ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளிலும் இத்தகைய வரம்புகள் பற்றிய விதிகள் உள்ளன. லண்டன் அமெரிக்கப் பண மார்க்கட்டுகளில் வெளி மார்க்கட்டு நடவடிக்கைகள் சரிவர இயங்குவதற்கு அமைப்புகள் உள்ளன. இத்தகைய நிலையங்கள் இல்லாமையால் வெளி மார்க்கட்டு நடவடிக்கைகள் செம்மையாக இயங்குவதற்கு இடர்ப்பாடுகள் தோன்றுகின்றன. வெளி மார்க்கட்டு நடவடிக்கைகள் சரிவர இயங்கவேண்டுமானுல் முதன்முதலில் நல்ல அமைப்புக் கொண்ட, பரவலான பண மார்க்கட்டு இருக்க வேண்டும். இரண்டாவதாக வர்த்தக வங்கிகள் நிலையான ரொக்க விகிதத்தைக் கொண்டிருக்க வேண்டும். நன்கமைந்த பண மூலதன மார்க்கட்டுகள் இல்லாமையாலும் வர்த்தக வங்கிகள் வைத்திருக்கும் ரொக்க விகிதம் மாறுவதாலும் சில நாடுகளில் வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளின் முக்கியத்துவம் குறைந்துவிட்டது. ஜப்பானில் பண மார்க்கட்டு நல்ல வளர்ச்சி பெறவில்லை. அங்கு அரசு பத்திர விற்பனையும் சரிவர வளர்ச்சியடையவில்லை.[3] ஆஸ்திரேலியாவில் காமன்வெல்த் வங்கியும் நியூஜிலாந்தில் ரிசர்வ் வங்கியும் (Commonwealth Bank of Australia and the Reserve Bank of New Zeland) முதன்முதலில் வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளைச் செம்மையாகச் செய்ய முடியவில்லை. ஏனெனில், அரசு பத்திர மார்க்கட்டு குறுகியதாக இருக்கின்றது. வர்த்தக வங்கிகள் கொண்டிருந்த ரொக்க விகிதம் அதிக மாறுதல்கள் அடைந்தன. ஆரம்ப காலத்தில் இதே நிலை இந்தியாவில் இருந்ததால், ரிசர்வ் வங்கி வெளிமார்க்கட்டுக் கொள்கையைச் சரிவரச் செயல்படுத்த இயலவில்லை. அரசு பத்திரங்களுக்கு ஒரு மார்க்கட்டு வளர்ந்தால்தான் மைய வங்கி வலிமை பெறும்; செலாவணிக் கட்டுப்பாட்டையும் சரிவரச் செய்யலாம், ஆஸ்திரேலியாவில் அரசு பத்திர மார்க்-

[1] Art (40). The Law of the Central Bank of Honduras, 1950.

[2] The Central Bank of Malaya Ordinance, 1958, Sec. 30 (h).

[3] R. Takagi, 'Central Banking in Japan'. Central Banking in South and East Asia ed. Davies, pp. 79-80.

கட்டு சரிவர வளரவேண்டும் என்று ஆஸ்திரேலிய வங்கிமுறைக் கமிஷன் (Royal Commission and Australian Banking) பரிந்துரைத்தது.[1] மேற்குறிப்பிட்டவைகளைத் தவிர மைய வங்கியின் வெளிமார்க்கட்டுக் கொள்கைக்கு மேலும் ஓர் அமைப்பு வேண்டும். மைய வங்கியின் சொத்தினங்களில் போதுமான அளவு 'போர்த் தளவாடங்கள்' இருக்கவேண்டும், அதாவது மற்றவகைப் பத்திரங்களையும் மைய வங்கி கொள்ளவேண்டும். வேண்டிய அளவு வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளை மைய வங்கிகள் செய்வதற்கு அவைகளிடம் 'போர்த் தளவாடங்கள்' இல்லாமை தடையாக இருக்கின்றது. இங்கிலாந்து, அமெரிக்கா, கனடா போன்ற நாடுகளில் வெளிமார்க்கட்டுக் கொள்கையை வெற்றிகரமாகச் செயல்படுத்துவதற்குத் தக்க அமைப்புகள் இருக்கின்றன. ஐரோப்பாக் கண்டத்திலும், ஆப்பிரிக்க, ஆசிய நாடுகளிலும், லத்தீன் அமெரிக்க நாடுகளிலும் இந்த நடவடிக்கைகள் மிகக் குறைவாகவும், முக்கியமற்றவையாகவும் இருக்கின்றன. பண மார்க்கட்டு ஒழுங்கற்ற அமைப்புள்ள நாடுகளில் அல்லது வளர்ச்சியடையாத நாடுகளில் அல்லது போதிய அளவு 'போர்த் தளவாடங்கள்' (பத்திரங்கள்) மைய வங்கிகளிடம் இல்லாத நாடுகளில் பழைய கட்டுப்பாட்டுக் கருவிகளைக் கையாளுவதை விடப் புதிய முறைகளைச் செயல்படுத்த முயற்சி செய்யலாம்.

### வெளிமார்க்கட்டு நடவடிக்கைகளின் நோக்கங்கள்

வெளிமார்க்கட்டு நடவடிக்கைகளின் நோக்கங்களை இரு பெரிய தலைப்புகளில் தொகுக்கலாம். இவை செலாவணி (Monetary), நிதி (Fiscal) பற்றியவை. வங்கி முறையின் காப்புத் தளத்தைக் (Reserve base) கட்டுப்படுத்துவதும், அரசு பத்திரங்களுக்குக் குறிப்பிட்ட வட்டி வீத முறையை நிலைநாட்டுவதும், சாதாரண வங்கிகளுக்குப் பருவகால நிதியளிப்பதும் முதல் வகை நோக்கமாகும். பொதுக் கடன் திரட்டலும் நிருவாகமும், இரண்டாவது வகை நோக்கமாகும். இந்த நோக்கங்களில் ஒன்றிலிருந்து மற்றொன்றைப் பிரித்துக் காண்பது தவறாகும். நடைமுறையில் இந்த நோக்கங்கள் பிணைந்திருக்க இடமிருக்கின்றது. சாதாரண வங்கிகளின் ரொக்கத் தளத்தைத் திருத்துவதும், அரசின் கடன் நிலையைச் சரிவர அமைப்பதும், வட்டிவீத முறையை விருப்பப்படி அமைப்பதும் ஒரே வகை நடவடிக்கை மூலம் — அதாவது மைய அரசின் பத்திரங்கள் அல்லது விற்பனை

[1] Report of the Royal Commission on Australian Monetary and Banking System, 1937, p. 234.

மூலம் செய்யக் கூடியவை. ஆனால், குறிப்பிட்ட சில நாடுகளில் நிதிநோக்கம் செலாவணி நோக்கத்தைவிட முக்கியமானதாக இருக்கலாம். இங்கிலாந்தில், பண மார்க்கட்டைக் கட்டுப் படுத்தும் வகையில் கருவூல உண்டியல்களை (Treasury bills) வாங்குவதும், விற்பனை செய்வதும், அரசு பத்திர மார்க்கட்டைக் கட்டுப்படுத்துவதற்காக இப் பத்திரங்களை வர்த்தகம் செய்வதும் வெளிமார்க்கட்டு நடவடிக்கைகளாகின்றன. இங்கிலாந்தின் தலைமை வங்கி மார்க்கட்டில் உள்ள அன்றாட உபரிகளையும், பற்றாக் குறையையும் ஒழுங்குபடுத்திப் பண மார்க்கட்டு நிலையைச் சரியாக்குவதற்காகக் கருவூல உண்டியல்களை வர்த்தகம் செய்கிறது. பண மார்க்கட்டில் மிகப் பெரிய கடன் வாங்கும் நிலையம் அரசேயாகும். எனவே, அரசு பண மார்க் கட்டில் ஒழுங்கு நிலையைப் பெரிதும் விரும்புகிறது. குறுகிய கால வட்டி விதங்களில் அதிக ஏற்றத் தாழ்வுகள் தவிர்க்கப்பட வேண்டும். எவ்வித நடவடிக்கையும் எடுக்காமல் மார்க்கட்டை அப்படியே விட்டால் கருவூலம் செலுத்தும் தொகைகளும், அதற்கு மற்றவர்கள் கொடுக்கும் தொகைகளும், மார்க்கட்டு நிலை ஏற்றத் தாழ்வுகளையும் குறுகிய கால வட்டி விதத்தில் மாறுதல்களையும் விளைவிக்கும். ஒரு பலமான வட்டி விதக் கொள் கையைச் செயல்படுத்துவதற்காகவும் வங்கி வெளி மார்க்கட்டுக் கொள்கையைப் பின்பற்றலாம். மார்க்கட்டு விதங்கள் வங்கி விதத்தைவிடக் குறைய வேண்டுமென்றோ அல்லது உயர வேண்டுமென்றோ மைய வங்கி கருதினால் அது பத்திரங்களை மிகுதியாக வாங்குகின்றது அல்லது விற்கின்றது.[1]

வெளி மார்க்கட்டு கொள்கையைப் பின்பற்றும்போது கனடா வின் தலைமை வங்கி, குறுகிய, நீண்ட, இடைக்காலப் பத்திரங்களை வர்த்தகம் செய்கின்றது. முதன் முதலில் மார்க்கட்டிலுள்ள ஏற்றத் தாழ்வுகளை நீக்கி அதன் தற்காலிக ரொக்க நிலையின் மாறுதல்களைச் சமப்படுத்துகின்றது. இரண்டாவதாகச் செலா வணிக் கட்டுப்பாட்டை உத்தேசித்து வங்கிகளுடைய காப்பு நிதியைக் கட்டுப்படுத்துவதற்காகவும் இக் கொள்கையை மேற் கொண்டிருக்கின்றனர். மூன்றாவதாக அரசு பத்திர மார்க்கட்டை விரிவுபடுத்தி ஒழுங்காக அமைக்கவும் இப்பணியை மைய வங்கி செய்கின்றது.[2]

தென்னாப்பிரிக்காவில் இன்றும் வெளி மார்க்கட்டுக் கொள்கை ஒரு சிறந்த செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவியாக

[1] Radcliffe Committee Report pp. 115-116.

[2] Annual Report of the Bank of Canada, 1956, Also P. G. Fousek, 'Foreign Central Banking' p. 37.

இயங்க முடியாது. அந்நாட்டின் ரிசர்வ் வங்கி மலிவுப் பணக் கொள்கையை (cheap money policy) அமல் செய்வதற்கோ அல்லது பண வீக்கத்திற்கு எதிர் நடவடிக்கையாகவோ வெளி மார்க்கட்டுக் கொள்கையைச் செயல்படுத்தவில்லை. ஆனால், இதன் மூலம் மார்க்கட்டை ஒழுங்குபடுத்தவும். வட்டி வீதங்களில் ஸ்திர நிலை ஏற்படுத்துவதற்கும் முயற்சி செய்கின்றனர்.[1]

சிலோனில் இதன் மூலம் மார்க்கட்டின் ரொக்க நிலையையும் ஸ்திர நிலையையும் ஏற்படுத்த முனைகின்றனர். தேசீயச் செலாவணிக் கொள்கையை ஒட்டிப் பணத்தின் அளிப்பைப் பெருக்கவோ குறைக்கவோ முயற்சிக்கின்றனர்.[2]

முதல் உலகப் போர்க்காலத்தில் போரில் ஈடுபட்டிருந்த நாடுகள் இருநோக்கங்களுடன் வெளி மார்க்கட்டுக் கொள்கையைச் செயல்படுத்தின. அவை: (1) வட்டி வீத அமைப்புகளைப் பேணுதல். (2) அரசுபத்திரங்களின் விலைகளை அமல் செய்வது. வங்கி முறை வளர்ச்சியடைந்த நாடுகளில் வர்த்தக வங்கிகளுடைய காப்பு நிதிகளை அதிகப்படுத்தி, அவைகளை அரசு பத்திரங்களை வாங்கும்படி செய்தனர். அவை அதிகமாக அரசுபத்திரங்களை வாங்குவதால் அவைகளுடைய டெபாசிட்டுகள் உயரும். இருந்தபோதிலும் அவை வழக்கப்படி வைத்துக்கொள்ள வேண்டிய டெபாசிட்டுகளைக் கொள்ள வேண்டும். பெடரல் ரிசர்வ் வங்கிகள் ஏராளமான அரசு பத்திரங்களை வாங்கின. இவைகளை வர்த்தக வங்கிகளுக்கு விற்பனை செய்யவும். மார்க்கட்டின் ஸ்திர நிலையைப் பேணுவதற்கும் இவைகளை வாங்கின.[3] இங்கிலாந்தில் வங்கிகள் மூலம் நிகழ்ந்த பற்றுக்குறை நிதியாக்கத்திற்கு (deficit financing) ஒரு ஆதாரம் வேண்டியிருந்தது. இதற்குத் தேவையான ரொக்கத்தையளிக்கும் வகையில் இங்கிலாந்தின் தலைமை வங்கி வெளி மார்க்கட்டுக் கொள்கையைச் செயல்படுத்தியது. அரசின் நிதித் தேவைகளைப் பூர்த்தி செய்வதைவிட, வர்த்தக வங்கிகளின் ரொக்கத்தைக் கூட்டி அதன் மூலம் பெருகும் வங்கிச் செலாவணித் (bank credit) தேவையைப் பூர்த்தி செய்ய முயற்சி செய்தனர். இதற்காகவே இங்கிலாந்தின் மைய வங்கி அரசு பத்திரங்களை வாங்கியது. எனவே, ஆங்கில வர்த்தக வங்கிகள்

[1] Memorandum of Evidence of the Governor of the Reserve Bank of South Africa Radcliffe Committee Evidences vol I. p 287.

[2] Memorandum of Evidence of the Governor of the Central Bank of Ceylon, Radcliffe Committee. Evidences Vol. I, p. 253.

[3] World Economic Survey, 1941-2 p. 121.

பத்திரங்களை வாங்கியதால் அவைகளுடைய டெபாசிட்டுகள் பெருகின. ஆனால், அவைகளுடைய காப்பு விதம் வழக்கப்படி 10 சதவீத அளவிலேயே நீடித்தது.[1] மற்றப் பல நாடுகளில் வெளி மார்க்கட்டு நடவடிக்கைகள் மூலம் பண மூலதன மார்க்கட்டுகளில் உள்ள உபரித் தொகைகளை ஈர்த்தனர். உதாரணமாக ஸ்விடன் நாட்டு ரிசர்வ் வங்கியும், அர்ஜன்டினாவின் மைய வங்கியும் இவ்வாறு செய்தன.

மைய வங்கிகளுடைய சொத்து இனங்களுள் அரசு பத்திரங்களும், இவை போன்ற மற்றவையும் எத்தகைய இடத்தைப் போர்க் காலத்தில் பெற்றன என்பதைப் பின் வரும் பட்டியலில் காணலாம் :

பட்டியல்[2]

மைய வங்கிகளின் சொத்து இனங்களில் அரசு பத்திரங்களும், நேரிடையாக அரசிடமிருந்து பெறக்கூடிய மற்றச் சொத்துகளும்—மைய வங்கிகளின் மொத்தச் சொத்துகளில் சதவிதமாக.

| | 1938-ன் முடிவில் | 1944 |
|---|---|---|
| கனடா | 46 | 89 |
| பிரான்சு | 26 | 81 |
| பின்லாந்து | 10 | 86 |
| ஜெர்மனி | 81 | 96 |
| இங்கிலாந்து | 45 | 99 |
| அமெரிக்கா | 17 | 49 |

**ஆங்கில நாட்டு வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளில் மாறுதல்**

போர்க் காலத்திய வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளைப் பற்றிப் பேசும்போது, போர் மூண்டபிறகு ஆங்கில நாட்டுப் பாணியில் நிகழ்ந்த மிகப் பெரிய மாறுதலைக் குறிப்பிடவேண்டும். ஏராளமாகப்பற்றுக்குறை நிதியாக்கம் செய்தமையால் வெளிமார்க்கட்டு நடவடிக்கைகளுக்கு வாய்ப்புகள் பெருகின. போருக்கு

[1] ஆங்கில வர்த்தக வங்கிகளின் ரொக்கம் 'புறச்சோடனை' மூலம் (window dressing) மாறுபட்டது என்பதை இங்குக் குறிப்பிட வேண்டும். 'புறச்சோடனை' திருத்தப்பட்டு விட்டது. ரொக்க விகிதம் 8 சதவீதத்தில் நிலைநாட்டப்பட்டுவிட்டது என்று கூறலாம்.

[2] World Economic Survey, 1942-4, p. 185

முன் கையாளப்பட்ட முறைகளின் குறைகள் தெளிவாயின.[1] ஆங்கிலேயப் பழக்கப்படி தள்ளுபடி மார்க்கட்டு (discount market) மைய வங்கிக்கும் செக்குத் தீர்வகங்களுக்கும் (Clearing of banks) இடையிலுள்ள நிலையமாக இயங்கியது. வங்கிகள் ஆங்கில நாட்டு நீண்ட காலப் பழக்கப்படி மைய வங்கியை நேரிடையாக அணுக முடியாது. இரு சாராருக்குமிடையே உள்ள இத்தடை போர்க் காலத்தில் நீங்கியது. தள்ளுபடி மார்க்கட்டு மைய வங்கிக்கும், செக்குத் தீர்வகங்களுக்கும் இடை நிலை நிலையமாக இயங்கும் வழக்கம் மாறி, இவ்வங்கிகள் மூலம் தள்ளுபடி நிலையங்கள் மைய வங்கியின் உதவியைப் பெற்றன. முந்தைய வாரத்தில் விற்பனையான கருவூல உண்டியல்களைத் தள்ளுபடி நிலையங்கள் ஏலம் கேட்டு வாங்க முடியவில்லை. மைய வங்கி மற்ற வங்கிகளிடமிருந்து குறுகிய காலத் தவணைப் பத்திரங்களை வாங்கியது. இதற்கு ஈடாக அவை தள்ளுபடி நிலையங்களிலிருந்து நீண்ட காலத் தவணைப் பத்திரங்களை வாங்கின. பழைய முறைச் செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவி முக்கியமான முறையில் தலைகீழாக மாறிவிட்டது என்று 'எக்கானமிஸ்ட்' (Economist) குறிப்பிட்டது.[2]

### வளரும் நாடுகளில் வெளிமார்க்கட்டு நடவடிக்கைகள்

வளர்ச்சியடைந்த நாடுகளில் வெளிமார்க்கட்டு நடவடிக்கைகள் சிறந்த செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவியாக இருந்த போதிலும், வளர்ச்சி குன்றிய நாடுகள் இக் கருவியை உடனடியாகக் கையாள முடியாது. இந்த நாடுகளில் அரசு பத்திர மார்க்கட்டு சுறுசுறுப்பாக இயங்கவில்லை; இதன் இயக்கத்தைத் திருத்தக் கூடிய நிலையிலுமில்லை. எனவே, மைய வங்கிப் பத்திரங்களைக் கணிசமான அளவில் விற்பனை செய்தாலோ அல்லது வாங்கினாலோ அவைகளுடைய விலைகளில் அதிக ஏற்றத் தாழ்வுகள் ஏற்படலாம். இதற்குக் காரணம் இந்த நாடுகள் சிறியவையாகவும், முதலீட்டை நாடும் சேமிப்புத் தொகை குறைவாகவும் இருப்பதேயாகும். மார்க்கட்டு குறுகியதாக இருக்கின்றது; மேலும் மக்களுக்குக் கிடைக்கும் அரசு பத்திரங்கள் பூரணமாக இல்லை; மார்க்கட்டின் ரொக்கநிலை, ஸ்திரத்தன்மை பற்றிய அச்சங்களும் முதலீடு செய்வோரிடையே ஏற்படுகின்றன. வெளிமார்க்கட்டு நடவடிக்கைகளின் பலன் குறைவாக இருந்தபோதிலும், வளர்ச்சி குன்றிய நாடுகளில்

[1] The Economist, 25th July, 1942 ('War time Changes in the Technique of Open Market Operations').

[2] The Economist, 1 August, 1942 ('By passing the Market)

மைய வங்கிகள் இக் கருவியைக் கையாள அனுமதி பெற்றிருக்கின்றன. கூடிய அளவு பலன் கொடுக்கக்கூடிய முறையில் அதை உபயோகிக்கலாம். இந்த நிலையில் மைய வங்கியின் முதல் கடமை மார்க்கட்டை விரிவுபடுத்தி, ஸ்திர நிலையை ஏற்படுத்துவதாகும். இதற்குப் பத்திர விலைகளில் ஏற்படும் ஏற்றத் தாழ்வுகளை நீக்கவேண்டும் அல்லது குறைக்கவேண்டும். புதிய வெளியீடுகளின் முதிர்வுக் காலம் எப்படி இருக்கவேண்டும் என்பதைப் பற்றி அரசுக்கு அறிவுரை வழங்கவேண்டும். புதிய மைய வங்கிச் சட்டங்களை இயற்றுவோர் இந்தப் பிரச்சினைகளை நன்கு உணர்ந்துள்ளனர். வெளி மார்க்கட்டுக் கொள்கை வெற்றி பெறுவதற்குத் தக்க உபாயங்களைச் சட்டங்களில் சேர்த்துள்ளனர்.

வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளின் முக்கிய நோக்கங்களை மைய வங்கிச் சட்டங்களில் விளக்கியுள்ளனர். சிலோன் நாட்டு மைய வங்கி பண மார்க்கட்டின் ரொக்க நிலையைப் பேணுதற்கும், பத்திரங்களின் ஸ்திர நிலையைக் காப்பதற்கும் இந்த நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். பணத்தின் அளிப்பு அல்லது வங்கிகளின் காப்புத் தொகைகள் பெருகும்போது உள்நாட்டு அல்லது பன்னாட்டுச் செலாவணிக் கொள்கைக்கு ஆபத்து நிகழலாம். இத்தகைய சந்தர்ப்பங்களில் மைய வங்கி பத்திரங்களை வாங்குவதை நிறுத்தும்.[1] குவாடிமாலாவில் பண மார்க்கட்டில் உபரித்தொகை இருக்கும்போது அதை ஈர்த்துப் பண வீக்க நிலையைக் கட்டுப்படுத்துவதும், மார்க்கட்டில் குறைவான பணம் உள்ளபோது அதற்குப் பணத்தை அளித்துப் பண வாட்ட (deflationary) நிலையைக் கட்டுப்படுத்துவதும் மைய வங்கியின் நோக்கம் என்று சட்டம் விளக்குகிறது.[2] தேசியச் செலாவணிக் கொள்கையின் நோக்கங்களைச் செயல்படுத்துவதே வெளிமார்க்கட்டுக் கொள்கையின் ஒரே நோக்கமென்று பிலிப்பைன் நாட்டு மைய வங்கிச் சட்டம் விளக்குகிறது. பண வீக்க காலத்தில் பத்திர வாங்கல் நிறுத்தப்படும். சொத்தினத்திலுள்ள பத்திரங்கள் குறைக்கப்படும் என்று சட்டம் திட்டவட்டமாகக் கூறுகிறது. பத்திர மார்க்கட்டை ஒழுங்குபடுத்துவதே இந்த நடவடிக்கைகளின் நோக்கம் என்று டாமினிகன் குடியரசு (Dominican Republic) மைய வங்கிச் சட்டம் குறிப்பிடுகிறது. பத்திர மார்க்கட்டை ஒழுங்குபடுத்துவதற்கு வங்கி ஒரு நிதியை ஏற்படுத்தலாம். அது வெளியிடும் ஒவ்வொரு பத்திர வெளி

[1] Sec. 89, Monetary Law Act of Ceylon, No. 58 of 1949.

[2] Art. 108, Organic Law of the Bank of Guatemala, 1945-59.

வீட்டிலும் 10 சதவீதத்திற்குச் சமமான தொகையை வங்கி நிதியில் சேர்க்கலாம். பத்திரங்களின் விலைகளை நிலைநாட்டுதல் இந்த நிதியின் நோக்கமல்ல. முகமதிப்புக்குக் குறைவாக அவைகளுடைய விலைகள் சரிவதால் இழப்பு ஏற்படும். அவைகளுடைய விலைகள் முகமதிப்பைவிட உயரக்கூடும். இவ்வுயர்வு மேற்குறிப்பிட்ட இழப்பைச் சரிக்கட்டும் என்ற நம்பிக்கை முதலீடுசெய்வோர் மனத்தில் ஏற்படவேண்டும் என்பதே நோக்கமாகும். தனி முதலீடு செய்வோருக்கு வங்கி உறுதியளிக்க வேண்டும். பத்திரங்களுக்குத் தேவை இருக்கும் என்று அவர்கள் நம்பவேண்டும். விலைகளில் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகளைக் குறைக்க வேண்டும். ஆனால், மார்க்கட்டின் அடிப்படைப் போக்கை பாதிக்காமல் இதைச் செய்யவேண்டும். தன் வசமுள்ள ரொக்கத்தைத் தீர்த்துவிடவும் கூடாது.[1]

மைய வங்கிகள் தம் உடைகளையும் அரசு பத்திரங்களையும் கொண்டே பொதுவாக வெளிமார்க்கட்டு நடவடிக்கைகளைச் செய்கின்றன. சில நாடுகளில் பொருளாதாரம் சில மாறுதல்களுக்கேற்பத் திருத்திக் கொண்டிருந்தபோது, நிதி, பொருளாதார நிலைகள் தெளிவற்றிருந்தபோது மைய வங்கியின் வெளிமார்க்கட்டுக் கொள்கைக்கு வரம்பு கட்டுவதை விரும்பினர். ஆரம்பகாலத்தில் பத்திர வாங்கலுக்கு உச்சவரம்பு கட்டினர். இது அரசின் வரி வருவாயில் ஒரு சதவீதமாக இருக்கலாம். பொருளாதார நிதி நிலைகள் தெளிவுற்ற பிறகு இக் கட்டுப்பாடுகளைப் படிப்படியாக நீக்கினர்.

வளர்ச்சி குன்றிய நாடுகளில் மைய வங்கிகள் கொண்டுள்ள அரசு பத்திரங்கள் குறைவாக இருக்கலாம். மேலும் மார்க்கட்டு விரும்பும் முதிர்வுத் தவணைகளை இப் பத்திரங்கள் கொள்ளாமலிருக்கலாம். இந்த நிலையில் வளர்ச்சியடைந்த நாடுகளிலுள்ள வங்கிகள் கொண்டுள்ள கருவியை இந்த நாடுகள் கொள்ளவில்லை. மைய வங்கிகள் தம் பத்திரங்களை வெளியிடும் அதிகாரம் பெற்றுள்ளன. ஆகையால் 'தளவாடங்கள்' (பத்திரங்கள்) போதிய அளவில் இல்லாத சமயங்களில் அவை வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளை மேற்கொள்ளலாம். தடையற்ற முறையில் செலாவணியாகும் பத்திரங்களை சிலோன் நாட்டு மைய வங்கி வெளியிடலாம், வாங்கலாம், விற்பனையும் செய்யலாம். இத்தகைய பத்திரங்களின் இயல்புகளைச் செலாவணிக் குழு (Monetary Board) தன் விருப்பப்படி விளக்கலாம். உதாரணமாக

[1] Art 47, Organio Law of the Central Bank of the Dominican Republic 1947-59.

இப் பத்திரங்களைக் குறிப்பிட்ட சொத்துகளைக் காப்பாகக் கொண்டு வெளியிடலாம். இதனால், இவை முதலீடு செய்வோருக் குக் கவர்ச்சிகரமாக இருக்கும்.[1] 1956ஆம் ஆண்டு பிப்ரவரி மாதமும் 1957-லும் அதே மாதம் நாட்டுப் பொருளாதாரத்தில் ரொக்க நிலை மிகுதியாக இருந்தபோது, மைய வங்கியிடம் இருந்த பத்திரங்கள் கிட்டத்தட்ட காலியாகிவிட்டன. இந்த நிலையில் சிலோன் மைய வங்கி உபரி ரொக்க நிலையை நீக்குவதற்காகத் தன் பத்திரங்களை வெளியிட்டது. சிறிய பத்திர மார்க்கட்டை விரிவு படுத்துவதும் வங்கித்துறைக்கப்பாலுள்ளவர்களுக்கு மைய வங்கிப் பத்திரங்களைச் சிறப்பான சொத்துகளாக்குவதற் காகவும் இந்த நடவடிக்கையை மேற்கொண்டனர்.[2] பிலிப்பைன் நாட்டு மைய வங்கியும் இத்தகைய செலாவணித் தன்மையற்ற பத்திரங்களை வெளியிடலாம், விற்பனை செய்யலாம். இவ்வாறு வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளை அவை செய்யலாம்.[3] இந்த நாடுகள் வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளைச் செலாவணி நிரு வாகக் கருவியாகக் கருதுகின்றன என்பது தெளிவு. வெளி மார்க் கட்டு நடவடிக்கைகள் தேவையானால் இந்த நாட்டு மைய வங்கி கள் தம்மிடம் பத்திரங்கள் இல்லை என்று வருந்தாமல் புதிய பத்திரங்களை வெளியிடலாம். பண மூலதன மார்க்கட்டுகள் விரிவடையும்போது அவை இந்த மார்க்கட்டுகளை மேலும் அதிக அளவில் பயன்படுத்தும் என்று எதிர்பார்க்கின்றனர்.

வளர்ச்சியடைந்த நாடுகளில் வெளி மார்க்கட்டு நடவடிக் கைகள், விரிவான பண, மூலதன மார்க்கட்டுகளுடன் செய்யும் பணியை வளர்ச்சி குறைந்த நாடுகளில் வேறு முறையில் செய் வதற்கு ஏற்பாடு செய்கின்றனர். அதாவது முதிர்வு பெற்றுத் தீர்வாகும் பத்திரங்களையும், 'ஸ்திர நிலை ஏற்படுத்தும் பத்திரங்களை யும்' மைய வங்கிகள் வெளியிடுவதற்குச் சட்டம் இடம் கொடுக் கின்றது. தீவிரமான பண வீக்க காலத்தில் மற்ற நடவடிக் கைகள் தக்க பலன் கொடுக்கத் தவறும்பொழுது அதை எதிர்த்துப் போராடுவதே இதன் நோக்கமாகும். குவாடிமாலாவின் செலா வணிக் குழு, ஸ்திரச் செலாவணி நிலையை ஏற்படுத்துவதற்காக மைய வங்கியை (Bank of Guatemala) சொந்தப் பத்திரங்களை (ஸ்திர நிலைப் பத்திரங்கள் எனப்படுபவை) வெளியிடுமாறு ஆணையிடலாம். வங்கி இப் பத்திரங்களை முகமதிப்புக்குக் குறை

[1] Secs. 90-1, Monetary Law Act of Ceylon, 1949.

[2] Annual Report of the Monetary Board, Central Bank of Ceylon for the year 1958, p. 4. Also Memorandum of Evidence of the Governor, Radcliffe Committee Vol I, p. 253.

[3] Sec. 98, The Philippines Central Bank Act, 1948.

யாத நிலையில் திருப்பி வாங்கலாம், முதிர்வாகும்பொழுது திரும்பிப் பெறலாம் அல்லது ஏலம் விடலாம்.[1] மார்க்கட்டி லிருந்து உபரிப் பணத்தை மீட்பதே நோக்கமாகும். டாமினிக்கக் குடியரசின் 59ஆவது வயது மைய வங்கிச் சட்டப்படி மைய வங்கி ஸ்திர நிலைப் பத்திரங்களையும் (stabilisation bonds), அதன் சான்றிதழ்களையும் (certificates) வெளியிடலாம். வாங்கலாம், முதிர்வாகும் பத்திரங்களை அவ்வப்போது மீட்கலாம். இவை யனைத்தும் செலாவணிக் கட்டுப்பாட்டையே நோக்கமாகக் கொண்டுள்ளன. பராகுவே நாட்டு 80, 81, 82 எண் மைய வங்கிச் சட்டங்கள் ஸ்திர நிலைப் பத்திர வெளியீட்டுக்கு வேண் டிய அதிகாரங்களைப் பணவீக்கக் கட்டுப்பாட்டுக்காக, மைய வங்கிக்குக் கொடுக்கின்றன. பணவீக்கத்தை விளைவிக்கும் வகையில் அன்னியச் செலாவணி நாட்டுக்கு வரும்போது செலுத்தவேண்டிய தொகைகளை ஸ்திர நிலைப் பத்திரங்கள் மூலம் ஓரளவு செலுத்தலாம். கொரிய நாட்டு வங்கி (Bank of Korea), தேவை ஏற்படும் காலங்களில் செலாவணித் தன்மை யுள்ள 'கொரிய ஸ்திர நிலைப் பத்திரங்கள்' (Korea Stabilisation Bonds) எனப்படும் சிறப்புப் பத்திரங்களை மார்க்கட்டில் விற்க லாம், வாங்கவும் வாங்கலாம். ஆனால் எச்ச (உபரி) விற்பனையை யும், வாங்கலையும் பணவீக்க, பணவாட்ட காலங்களிலேயே செய்யலாம். செலாவணிக் குழு விரும்பும்போது இதைச் செய் யலாம்.[2]

இத்தகைய பத்திரங்களை தொடக்க காலத்தில் வெறுக் காமல் விரும்பும்படி செய்வதற்காக அவைகளை மக்களுக்குக் கவர்ச்சிகரமான முறையில் அளித்தனர் குறுகிய தவணையுள்ளவை யாகவும், பொன்னிலும் அன்னியச் செலாவணியிலும் மீட்கக் கூடியவையாகவும் வெளியிட்டனர். ஆனால், இப்பத்திரங்கள் வேண்டும்பொழுது முகமதிப்பில் மீட்கக்கூடியவையாக இருக்கக் கூடாது, ஏனெனில் வெளியிடும்போது அவைகளுடைய மதிப்பி லிருந்து மீட்புக் கால மதிப்பு வேறுபட்டிருக்காது. இந்த நிலையில் இக்கருவி பணவீக்கத்தை எதிர்த்துச் செயல்படாது. ஆப்பிரிக்கக் கண்டத்தில் அண்மையில் விடுதலை பெற்ற பல நாடுகளில் ~~மைய~~ வங்கிகள் இவ்வதிகாரத்தைப் பெறவில்லை என்பது குறிப் பிடத்தக்கது. கானாவின் மைய வங்கியையும் (The Central Bank of Ghana), தென் ரொடிஷிய ரிசர்வ் வங்கியையும் [Reserve Bank (Southern) Rhodesia] உதாரணமாகக் காட்டலாம்.[3]

[1] Art. 105, Organic Law of the Bank of Guatemala.

[2] Art. 92, and 90 of the Bank of Korea Act.

[3] The Bank of Ghana Art, 1963, Art 35 (3); The Reserve Bank of Rhodesia Art, 1964 Art 9 (1) (iv).

மைய வங்கிகள் குறுகிய காலத் தவணைப் பத்திரங்களை மட்டும் கொண்டு வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளைச் செய்ய வேண்டுமா? உண்டியல்களை மட்டும் பயன்படுத்தல் பற்றிய கோட்பாடு

மைய வங்கிகள் குறுகியகாலப் பத்திரங்களைக் கொண்டு மட்டுமே வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளைச் செய்ய வேண்டுமா அல்லது குறுகிய, இடை, நீண்டகாலச் சிறப்பீட்டுப் பத்திரங்களைக் கொண்டு இந்நடவடிக்கைகளைச் செய்யலாமா என்பது பற்றிப் பலர் ஆய்வு செய்துள்ளனர். அமெரிக்காவில் இது பற்றிய தர்க்கம் கடுமையாக நடைபெற்றது. 'வாஷிங்டன் கருத்து', 'நியூயார்க் கருத்து' என்ற இரு வகைக் கருத்துகளைக் கொடுத்துள்ளார்.[1] 1953-ல் வெளி மார்க்கட்டுக் குழுவினர் (Federal Open Market Committee) குறுகியகால வெளியீடுகளைக் கொண்ட இத்தொழில் செய்ய வேண்டும் என்ற முடிவு செய்த பின்பும் சர்ச்சை முடிவடையவில்லை.

வெளி மார்க்கட்டு நடவடிக்கையின் நடைமுறைப் பழக்கம் எல்லா நாடுகளிலும் ஒரே மாதிரியாக அமையவில்லை. சில முக்கியமான நாடுகளில் இது எவ்வாறு நடைபெறுகிறது என்பதையும், இதன் அடிப்படைத் தத்துவங்களையும் காண்பது பலனுள்ளதாகும். இங்கிலாந்தில் நடைபெறும் வெளி மார்க்கட்டு நடவடிக்கையின் தன்மையை மைய வங்கியின் ஆளுநர், ராட்கிளிப் குழுவின் முன் அளித்த சாட்சியத்தின் மூலம் அறியலாம். இங்கிலாந்தின் தலைமை வங்கி கருவூல உண்டியல்களையும் மற்றக் குறுகிய கால, இடைக்கால, நீண்ட காலச் சிறப்பீட்டுப் பத்திரங்களையும் வர்த்தகம் செய்யலாம் என்ற ஏற்பாடு இருந்தபோதிலும், குழுவினரிடம் சாட்சியமளித்த வங்கியின் அதிகாரிகள், வெளியீட்டுத் துறை (issue department) குறுகிய காலப் பத்திரங்களை மட்டுமே பயன்படுத்தலாம் என்று கூறினர். தற்காலிகப் பாதக நிலையைச் சரிக்கட்டுவதற்கு மட்டுமே நீண்டகாலப் பத்திரங்களை வர்த்தகம் செய்யலாம். பொதுவாகக் குறுகிய காலப் பத்திரங்களைக் கொண்டே வெளிமார்க்கட்டுத் தொழில் செய்ய வேண்டும். நீண்டகாலப் பத்திரங்களின் வீதங்களை, அரசு பத்திரங்களின் வீதங்கள் மூலம் மாற்றலாம். இதற்காக மைய வங்கி சிறப்பீட்டுப் பத்திர மார்க்கட்டில் வர்த்தகம் செய்ய வேண்டும். இது உசிதமான செயல் அன்று என்று இங்கிலாந்தின் தலைமை வங்கி கருதியது.[2]

[1] R. S. Sayers, Central Banking after Bagchot, pp. 142-3.

[2] Memorandum of Evidence, submitted by the Bank of England Paper 12, Radcliffe Committee, vol. 1.

குறுகியகால வீதங்களைச் சரிவர அமைத்து அவைகள் மூலமே நீண்டகால விகிதங்களை உருவாக்க முடியுமென்று இங்கிலாந்தின் தலைமை வங்கியின் அதிகாரிகள் சாட்சியமளிக்கையில் குறிப்பிட்டனர். எனவே, மைய வங்கி சிறப்பீட்டுப் பத்திர மார்க்கட்டில் வர்த்தகம் செய்து இப் பத்திர விலைகளைக் கட்டுப்படுத்தவில்லை. இப் பத்திர மார்க்கட்டு சரியும்போது விற்பனையையும் வங்கி மேற்கொள்ளவில்லை. இப் பத்திரங்களின் விலைகளைக் குறைக்க இவைகளை வாங்கி விற்பனை செய்தால் அரசின் நன்மதிப்பு பாதிக்கப்படும். நிதி திரட்டல் வங்கிக்குக் கடினமாகிவிடும். நீண்டகால வீதத்தை நிலைநாட்டுவதற்கு ஒரு கருவியை வங்கி கொண்டிருக்கின்றது. இதைக் கொண்டு பணவிக்கத்தைச் சமாளிப்பது உகந்தது என்பதை வங்கி உணருகின்றது. 'வங்கி அரசு பத்திரங்களைக் கடுமையாக அடிக்கலாம்'.[1] ஆனால், இக்கருவியை இவ்வாறு பயன்படுத்துவதை அது விரும்பவில்லை. வங்கி நீண்டகாலப் பத்திர மார்க்கட்டில் அடிக்கடி நேரிடையாகப் பங்கெடுத்தால், மக்கள், சிறப்பீட்டுப் பத்திரங்களை நேர்த்தியான முதலீடுகள் என்று நம்பத் தவறலாம். குறுகியகாலப் பத்திரங்களை வர்த்தகம் செய்வதில் இப்பத்திரங்களைக் கொண்டிருப்பவருக்கு இழப்பு ஏற்படும். ஆனால், இவ் வேற்பாடு பணவிக்கத்தைத் தவிர்க்கவே நடைபெறுகிறது என்ற மன நிறைவு ஏற்படும். வங்கி நீண்டகாலப் பத்திர மார்க்கட்டில் பங்கேற்பதும் பணவீக்கத்தைக் கட்டுப்படுத்துவதற்காகவே இருந்தபோதிலும் மக்கள் இதை ஏற்கமாட்டார்கள். இதனால் பத்திரங்களில் அவர்கள் கொண்டுள்ள நம்பிக்கை குறையும். இதை வெறுப்பர். மிகக் குறுகியகாலப் பத்திரங்களைக் கொண்டு வர்த்தகம் செய்வோர் இதைத் தொழிலாகக் கொண்டிருப்போரும், செலாவணி நிருவாகம் செய்வோரும் ஆவர். இவர்களுடைய செயல்கள் வேறுபட்டிருக்கின்றன. நீண்டகால முதலீடு இவைகளிலிருந்து மாறுபட்டிருக்கின்றது.[2]

சிறப்பீட்டுப் பத்திர மார்க்கட்டில் தாறுமாறான நிலை இருந்தாலன்றி அமெரிக்காவில் குறுகிய காலப் பத்திரங்களையும் (கூடிய அளவு குறுகியதாக இருக்கவேண்டும்), வங்கியர்களுடைய ஏற்புகளையும்' (Bankers, acceptances) கருவூல உண்டில்களையும் கொண்டே வெளி மார்க்கட்டுத் தொழில் நடத்துகின்றனர். குறுகிய காலப் பத்திரங்களைப் பயன்படுத்துவதால் நீண்ட காலப்

[1] Q. 1885-6, Radcliffe Committee, (Oral Evidences).

[2] Radcliffe Committee, Oral Evidences of Lord Cobbold (Governor), Mr. Mynors (Deputy Governor), Mr. O'Brien (Chief Cashier), Mr. Allen (Adviser) vol. IV, pp. 131-2, 142-3, 168.

பத்திர மார்க்கட்டில் நல்ல விளைவுகள் ஏற்படுகின்றன என்று பெடரல் ரிசர்வ் முறை கருதுகிறது. இப்பழக்கத்தை ஆதரிப்போர் 'உண்டியல்கள் மட்டும்' என்ற கோட்பாட்டை உருவாக்கியுள்ளனர். வெவ்வேறு மார்க்கட்டுகளிடையே தொடர்புகள் இருப்பதால், குறுகால உண்டியல்களின் விதம் நீண்ட கால விதங்களை விருப்பப்படி திருத்தும் என்றும் கருதுகின்றனர். குறுகிய காலப் பத்திரங்களை மட்டும் கொண்டு வெளி மார்க்கட்டுத் தொழில் செய்வதால் அரசு பத்திர மார்க்கட்டு நெகிழ்ச்சி பெறுகின்றது; மீண்டும் தன் சுயநிலைக்கு வரும் இயல்பைப் பெறுகின்றது. செலாவணி முறை சிறப்பாக அமையவும் உதவுகின்றது. 'Federal Reserve Bulletin' என்ற சஞ்சிகையில் திரு. ரைஃப்பர் (Mr Riefier ஒரு கட்டுரை எழுதினர். வெளி மார்க்கட்டு நடவடிக்கைகள் நீண்ட காலப்பத்திர மார்க்கட்டைக் கணிசமாகத் திருத்தவில்லை; மார்க்கட்டின் தாறுமாருன நிலையைச் சரிப்படுத்துவதற்கே இதில் பெடரல் ரிசர்வ் முறை பங்கேற்றது என்று அனுபவ அறிவைக்கொண்டு குறிப்பிட்டார். சில சந்தர்ப்பங்களில் இத்தகைய நடவடிக்கைகள் ஆபத்து நிறைந்தவையாக இருக்கின்றன. மார்க்கட்டின் ஒழுங்கான நடவடிக்கைகூட பாதிக்கப்படலாம்.[1] இங்கிலாந்தின் தலைமை வங்கியின் ஆளுநர் ராட்கிளிப் குழுவினரிடம் சாட்சியம் அளிக்கையில் குறிப்பிட்ட ஒரு கருத்தும் திரு. ரைஃப்ளர் கருத்தும் ஒரு விதத்தில் ஒன்ருக இருக்கின்றன. ஆளுநர் குறுகிய காலப் பத்திரங்களைக் கொண்டே வெளிமார்க்கட்டு நடவடிக்கைகளைச் செய்ய வேண்டுமென்று வாதாடியபோது தன் கருத்தை வெளியிட்டார். அரசு பத்திர மார்க்கட்டில் வெளி மார்க்கட்டு நடவடிக்கை, அங்குத் தொழில் புரிவோர் செயல்களைப் பாதிக்கின்றது; மற்ற முதலீடு செய்வோர் செயல்களையும், மார்க்கட்டின் போக்கையும் பாதிக்கின்றது என்று ரைஃப்ளர் குறிப்பிடுகிருர். மார்க்கட்டில் எதிர்பார்ப்பவை நிகழத் தவறலாம். குறுகியகால மார்க்கட்டு நடவடிக்கைகளைவிட நீண்டகால நடவடிக்கைகளைச் சரியாகப் புரிந்துகொள்ளத் தொழில் செய்வோர் தவறலாம். உண்டியல் மார்க்கட்டிலும் தவருன முறையில் போக்குகளை எதிர்ப்பார்க்கலாம்; ஆனுல் இதன் சாத்தியக் கூறுகள் குறைவாக உள்ளன. உண்டியல் வர்த்தகம் செலாவணிக் கொள்கை பற்றிய போக்குகளை எதிர்நோக்கக் காரணமாக இருக்கின்றது. ஆனுல், நீண்டகாலப் பத்திர வர்த்தகம் செலாவணிக் கொள்கை பற்றிய போக்குகளை மட்டுமல்லாமல், நீண்டகாலப் பத்திரங்கள் அளிக்கும் வருவாய் (Return) அவை

[1] 'Open Market Operations in Long-term Securities', Federal Reserve Bulletin, November 1958.

களுடைய விலைகள் முதலியவற்றையும் எதிர்நோக்கத் தூண்டு கின்றன. எனவே, இருவகைத் தவறுகள் ஏற்பட இடமிருக் கின்றது. இப்போது மார்க்கட்டின் உண்டியல் பகுதி மற்றப் பகுதியைவிட விரிவாக இருக்கின்றது. பெடரல் ரிசர்வ் முறையின் செயல்களால் விளையும் இடையூறுகள், அது உண்டியல் வர்த்தகம் மட்டும் செய்தால் குறைவாக இருக்கும். அது நீண்ட காலப் பத்திரங்களையும் வர்த்தகம் செய்தால் இதைவிட அதிக மாக இருக்கும். உண்டியல்களை மட்டும் வர்த்தகம் செய்தால் மார்க்கட்டின் திறன் அதிகமாக இருக்கும், குறையாது என்று ரைஃப்ளர் கூறுகின்றார். இங்கிலாந்தின் தலைமை வங்கியின் அதிகாரிகள் கூறுவதுபோலவே பெடரல் ரிசர்வ் அதிகாரி களும் குறுகிய கால வீதங்கள் மாறுவதால் நீண்டகால வீதங் களும் மாறுதலடையும் என்று கூறுகின்றனர். இருவகைப் பத்திரங்களும் ஒன்றுக்கொன்று பதிலியாக இயங்கத் தொடங்கு வதால், அளிப்பு, தேவை நிலைகள், பண, மூலதன மார்க்கட்டு களில் மாறும். இதன் பலனாக நீண்டகால வீதங்களும் மாறும். ஒரு மார்க்கட்டில் எளிமை அல்லது கடின நிலை இருப்பின் இது மற்ற மார்க்கட்டுக்கும் பரவும்.[1]

இங்கிலாந்தின் தலைமை வங்கியின் பழக்கத்திற்கும் பெடரல் ரிசர்வ் முறையின் பழக்கத்திற்கும் மாறாக இந்திய ரிசர்வ் வங்கி, பத்திர மார்க்கட்டில் தொழில் செய்கின்றது, கருவூல உண்டியல் மார்க்கட்டில் செய்யவில்லை. இதற்குக் காரணம் இந்தியாவில் நன்கமைந்த கருவூல உண்டியல் மார்க்கட்டு இல்லை. வர்த்தக வங்கிகளின் ரொக்கத்தைக் கட்டுப்படுத்திச் செலாவணிக் கொள்கையைச் செயல் படுத்துவதற்கு மட்டுமல்லாமல், பத்திரங் களின் வீதங்களைக் கட்டுப்படுத்தவும் இந்தியாவில் வெளிமார்க் கட்டுக் கொள்கை செயல்படுத்தப்படுகின்றது.

குறுகியகாலப் பத்திரங்களை மட்டும் கொண்டே வெளி மார்க் கட்டுத் தொழில் செய்யவேண்டுமென்ற கருத்தையும் குறை கண்டிருக்கின்றனர். குறுகியகால வீதத்தைத் திருத்துவதின் மூலம் எப்போதும் நீண்டகால வீதத்தை விருப்பம்போல மாற்ற முடியுமென்று கூறமுடியாது. குறுகியகால வீதத்தின்மூலம் நீண்ட கால வீதத்தை வேண்டியபடி மாற்றலாமென்று கீன்ஸ் (Keynes) கூறியபோதிலும்கூடச் சில சந்தர்ப்பங்களில் மைய வங்கி இதில் வெற்றி காணமுடியாது என்றும் குறிப்பிட்டு இருக்கின்றார்.[2]

[1] Oral Evidence of Mr. W. Riefler before the Radcliffe Committee, vol. IV, p. 619. Also Memorandum of Evidence by Mr. Riefler, vol. I, p. 299. Federal Reserve Bulletin, November 1958.

[2] J. M. Keynes, A Treatise on Money, vol. II, pp. 356—62.

குறிப்பாக மந்தகாலத்தில் இலாபங்கள் குறையும்போது. விலைகள் சரியும்போது, எதிர்காலம் மங்கலாக இருக்கும்போது மைய வங்கிகள் குறுகியகால விதங்கள்மூலம் நீண்டகால வீதத்தைத் திருத்துவது கடினம். குறுகியகால மார்க்கட்டுப் பகுதியிலிருந்து நீண்டகாலப் பகுதிக்குப் பணம் தடையற்ற முறையில் செல்லாது. 1932-ல் செலாவணி நிருவாகிகள் இங்கிலாந்தில் ஏராளமான அளவில் குறுகியகாலப் பத்திரங்களை வாங்கி அவைகளுடைய விதங்களைக் குறைத்தனர். ஆனால், நீண்டகால விதம் உயர்வாகவே இருந்தது. இது ஒரு பிரபல எடுத்துக்காட்டாகும். வங்கிமுறைக் கப்பாலுள்ள கார்ப்பரேஷன்களும் நிறுவனங்களும் மற்ற முதலீட்டு நிறுவனங்களும் ஏராளமான பத்திரங்களைக் கொண்டிருக்கின்றன. இப் பத்திரங்களின் விலைகள் மாறுவதை ஒட்டி இவை செயல்படுவதில்லை. இவை ரொக்கத்திற்குப் பதிலாக இப்பத்திரங்களைக் கொண்டிருக்கின்றன; ஆபத்தில்லாத முதலீடாக இவைகளைக் கருதுகின்றன. முதிர்வடைவதற்குமுன் விற்பனை செய்வதால் கிடைக்கக்கூடிய குறைவான இலாபத்தை எண்ணித் தம் பத்திரங்களை விற்க முன்வருவதில்லை.[1] இத்தகைய பத்திரங்களைக் கொண்டிருப்போர் அவைகளை விற்க முன் வரவேண்டுமானால் மைய வங்கி மிக அதிகமான விலை கொடுத்து அவைகளை வாங்க வேண்டும். மைய வங்கி நீண்டகாலப் பத்திர மார்க்கட்டுப் பகுதியைக் கண்காணித்தாலன்றி நீண்டகால வீதத்தைத் துல்லியமாகத் திருத்தியமைப்பது கடினம். சில சந்தர்ப்பங்களில் தன் செலாவணிக் கொள்கையை வெற்றிகரமாகச் செயலாற்ற, மைய வங்கி, சிறப்பீட்டுப் பத்திர மார்க்கட்டில் தொழில் செய்யவேண்டியிருக்கும். இதன் காரணமாக அரசு பத்திர மார்க்கட்டின் ஆழம், நிலை, மாறுதல்களுக்குப்பின் பழைய நிலைக்கு வரும் தன்மை முதலியவை பாதிக்கப்படும். ஆனால், சிறப்பான செலாவணிக் கட்டுப்பாட்டுக்காக இச் சிறு தியாகம் செய்யவேண்டும். மைய வங்கி செலாவணிக் கட்டுப்பாட்டைச் செய்யும்போது மற்ற வங்கிகள் தம் முதலீடுகளை விற்பனை செய்து செலாவணிப் பெருக்கம் செய்யலாம். இது மைய வங்கியின் கட்டுப்பாட்டுக் கொள்கைக்கு எதிர்ச் செயலாகும். இவ்வாறு முதலீடுகளை விற்பனை செய்து கடன் கொடுத்தலைப் பெருக்கும்போது, கடன் வாங்குவோர் அதிகத் தொகையைச் செலவு செய்ய வேண்டிய நிலையை ஏற்படுத்தவேண்டும். கடன் வாங்கலை இழப்பைக் கொடுக்கவல்லதாகவும் செய்ய வேண்டும். இதற்காக மைய வங்கி பல்வகை முதிர்வுகொண்ட பல்வேறு பத்திரங்களை வாங்கவேண்டும். இக் காரணங்களால்

[1] D. Carson 'Recent Open Market Committee Policy and Technique,' in Quarterly Journal of Economics, Aug. 1955.

'உண்டியல்களை மட்டும்' கொண்டு வர்த்தகம் செய்யும் கொள்கையைப் பின்பற்றும் மைய வங்கி தன் கொள்கையைச் சிறப்புறச் செயல்படுத்த முடியாது.

பழைய காலம்போல் வர்த்தக வங்கிகளின் ரொக்கத்தை வெளி மார்க்கட்டுக் கொள்கை மூலம் குறைப்பது மட்டும் போதாது. உண்டியல் மார்க்கட்டுக்கும் மேலாக வட்டிவீத மாறுதல் செய்யவேண்டும். இவ்வாறு செய்தால்தான் செலா வணிக் கட்டுப்பாடு இக்காலத்தில் சரிவர நடைபெறும். இந்த நிலையில் வெளி மார்க்கட்டுத் தொழிலைக் குறுகியகாலப் பத்திரங் கள் மூலம் மட்டும் செய்யாமல் இடைநிலைக் கொள்கையைப் பின்பற்றுவது சிறந்ததாகும். இப் பிரச்சினையை இறுதியாக ஆய்வு செய்து பார்க்கும்போது மைய வங்கி குறுகிய தவணைப் பத்திரங்களை மட்டும் கொண்டு வெளி மார்க்கட்டுத் தொழிலைச் செய்யவேண்டுமா, அல்லது நீண்டகாலப் பத்திரங்களையும் கொண்டு தொழில்புரிய வேண்டுமா என்பதை மார்க்கட்டுத் தொழில்நுட்ப நிலையைக் கொண்டே தீர்மானம் செய்ய வேண்டும். இத் தொழில்நுட்ப நிலை இங்கிலாந்திலும், அமெரிக் காவிலும் செம்மையாக அமைந்திருக்கலாம். ஆனால், இந்தியா விலும், மற்ற நாடுகளிலும் இத்தகைய நிலை இருக்கவில்லை. உதாரணமாக இந்தியாவில் கருவூல உண்டியல் மார்க்கட்டு இல்லை.

# 8. மாறும் ரொக்கக் காப்பு விகிதம்
## (Variable Cash Reserve Ratio)

முன்னர், பண, மூலதன மார்க்கட்டுகள் குறுகலாக இருக்கும் நாடுகளில் அல்லது இந்த மார்க்கட்டுகளே இல்லாத நாடுகளில் வெளி மார்க்கட்டுக் கொள்கை எவ்வாறு செயல்பட வேண்டும் என்பதைப் பற்றிப் பேசும்போது, இதுவரை ஒரு நாடும் கையாளாத, புதிய கட்டுப்பாட்டுக் கருவிகளைப் பயன்படுத்த முனைய வேண்டுமென்று ஒரு யோசனை கூறப்பட்டது. வளர்ச்சியடைந்த நாடுகளிலும், வளர்ச்சி குன்றிய நாடுகளிலும் மைய வங்கிகள், தம் படைக்கலன்களிலுள்ள பழைய கருவிகளைக் கணக்கெடுத்து அவை, நோக்கங்களை நிறைவேற்றுவதற்குப் போதுமா அல்லது புதிய கருவிகள் தேவையாகின்றனவா என்பதை முடிவு செய்ய வேண்டும். அண்மைக்காலத்தில் மைய வங்கிச் சட்டங்களில் 'மாறும் காப்பு விகிதம்' என்ற ஒரு புதிய, இதுவரை கையாளாத கருவியைச் சேர்த்துள்ளனர். 1916-ல் பெடரல் ரிசர்வ் குழுவினர், நெருக்கடி காலத்தில் பெடரல் ரிசர்வ் முறை காப்பு நிதி விகிதத்தை உயர்த்தும் அதிகாரம் பெற வேண்டும் என்று ஆண்டறிக்கையில் குறிப்பிட்டனர்.[1] அதிலிருந்து இக் கருவி பொருளியலார், வங்கியர் கவனத்தை ஈர்த்துள்ளது. ஆனால் திரு. எச். ஏ. எஸ். சாண்டலர் 1926-ல் இக் கருத்து புரட்சிகரமானது என்றும் இக் கருவியைக் கையாள முடியாதென்றும் குறிப்பிட்டார்.[2] 'Treasure on Money' என்ற நூலில் கீன்ஸ் பிரபுவும், மற்றப் பொருளியலாரும் இக் கருவி ஒரு சிறந்த கருவியென்று இதைப் பிரபலப்படுத்தினர். எதிர்காலத்தில் வங்கியர் கையாள வேண்டியதென்றும் குறிப்பிட்டார். இது புரட்சிகரமாக இருந்தபோதிலும் இத்தகைய அதிகாரத்தை மைய வங்கிகள் பெறவேண்டுமென்று கூறினர். இங்கிலாந்து வங்கி கேட்பு டெப்பாசிட்டுகளில் 10 முதல் 20 சதவீதம் வரை காப்புத் தொகையை உயர்த்தவும், தவணை டெப்பாசிட்டுகளில் 0 முதல் 6 சதவீதம் வரை உயர்த்தவும் அதிகாரம் பெறவேண்டுமென்று

[1] Annual Report of the Federal Reserve Board for 1916, p. 28.

[2] American Economic Review Supplement, March 1926, p. 319.

அவர் குறிப்பிட்டார்.[1] மாக்மில்லன் குழுவினரும் இவ்வதிகாரத்தை இங்கிலாந்து வங்கிக்குக் கொடுக்கப் பரிந்துரைத்தனர். குறைந்தபட்சக் காப்பு விகிதம் தேவையில்லை என்றும் குறிப்பிட்டனர்.[2] வர்த்தக வங்கிகள் அவ்வப்போது வைத்திருக்க வேண்டிய ரொக்கக் காப்புத் தொகையை மைய வங்கி தெரிவிக்க வேண்டும். அவை மைய வங்கியின் ஆணைப்படி நடக்கவேண்டும்.

### வர்த்தக வங்கிகளின் காப்பு இருப்புபற்றிய பழைய கோட்பாட்டுக்கு அமெரிக்காவில் சவால்

வர்த்தக வங்கிகள் தம் ரொக்க நிலையைக் காக்கும் பொருட்டு காப்புத் தொகையை மைய வங்கிகளில் வைத்துக் கொள்கின்றன என்பது பழைய கோட்பாடாகும். பெடரல் ரிசர்வ் முறையின் காப்புநிதி பற்றிய குழு 1931-ல் இக் கோட்பாட்டை முதன் முறையாகத் தாக்கியது. வர்த்தக வங்கிகளுடைய ரொக்க நிலையைப் பேணுவது காப்புநிதியின் பிரதான நோக்கம் அல்ல என்று குழுவில் குறிப்பிட்டனர். காப்புத் தொகைகள் ரொக்க நிலையைப் பெரும்பாலும் காப்பதில்லை. அதன் பிரதான நோக்கம் மைய வங்கிக்குப் பணம் அளிப்பதேயாகும். இரண்டாவதாகக் கடன் கொடுத்தலைக் கட்டுப்படுத்துவதாகும். புதிய கருத்துப் படி ரொக்க நிலையைக் காப்பது அதன் நோக்கமல்ல, அது செலாவணி, கடன் பெருக்கத்தையோ அல்லது சுருக்கத்தையோ ஏற்படுத்தும் ஒரு வழியாகும். இக் கருத்தைப் பொதுவாக அமெரிக்காவில் ஏற்றுக்கொண்டிருக்கின்றனர். காமன்வெல்த் நாடுகளிலும் வங்கிகளின் ரொக்க நிலையை ஏற்படுத்துவது சட்ட பூர்வக் காப்புநிதியின் பணி என்று கருதவில்லை. இந்தியாவில் வர்த்தக வங்கிகள் கொள்ள வேண்டிய காப்பின் நோக்கத்தைச் சட்டமியற்றிய. சட்ட மன்றமோ அல்லது அதைப் புனைந்தவரோ தெளிவாக்கவில்லை. சட்டம் நிறைவேறியபோது மன்றத்தின் விவாதங்கள் நோக்கங்களைத் தெளிவாக விளக்கவில்லை. ஆனால், ரிசர்வ் வங்கி தன் பிரசுரங்கள்மூலம் செலாவணிக் கட்டுப்பாடே காப்பு நிதியின் நோக்கம், ரொக்க நிலையைக் காப்பதல்ல என்று விளக்கியது.[3]

காப்பு விகிதத்தை மாற்றும் அதிகாரம் ஓர் அளவுக் கட்டுப்பாடாகும் (Quantitative Credit Control). அது கட்டுப்பாட்டுக்

[1] J. M. Keynes, A Treasure on Money, Vol. II. pp. 76-7. Also pp 206-61.

[2] Report of the Macmillan Committee, para 360.

[3] Functions and Working of the Reserve Bank of India (Reserve Bank of India, 1943), p. 40.

கப்பாலுள்ள காப்பு நிதிகளைப் பாதிக்கின்றது. வங்கி வீதம், வெளிமார்க்கட்டுக் கொள்கை போன்ற பழைய கருவிகளிலிருந்து இதைப் பிரித்துப் பார்க்க வேண்டும். இவையனைத்தும் ஒரே வகையைச் சேர்ந்தவை. வெளிமார்க்கட்டுக் கொள்கையும் வங்கி வீதமும் காப்புநிதியை மறைமுகமாக மாற்றுகின்றன. ஆனால் இக் கருவி காப்புநிதியை நேரடியாக மாற்றுகின்றன. 'மற்ற இரு முறைகளும் காப்புநிதியை மாற்றி அதன் மூலம் வெளிக் காப்புத் தொகையைத் (free reserves) திருத்த முனைகின்றன. ஆனால், இம்முறை வெளிக்காப்பை ஒரே எழுத்து மூலம் மாற்ற முடியும்.'

## அமெரிக்காவில் மாறும் காப்பு விகிதம் இயங்குதல்

இச் செலாவணிக் கட்டுப்பாட்டை முதன் முதலில் அமெரிக்கா பின்பற்றியது. 1933, மே 12-ல் நிறைவேறிய சட்டத்திற்குத் தாமஸ் திருத்தம் (Thomas Amendment) என்ற திருத்தத்தைக் கொணர்ந்தனர். இதன்படி பெடரல் ரிசர்வ் குழு வங்கிகளின் சட்டபூர்வக் காப்புத் தொகையைத் திருத்த அதிகாரம் பெற்றது. 1935ஆம் ஆண்டின் வங்கிச் சட்டம் இத் திருத்தம் கொண்டிருந்த தற்காலிகத் தன்மையை மாற்றி இதை நிரந்தரமாக்கியது. வெளி மார்க்கட்டுக் கொள்கையின் விளைவாகத் தொடர்ந்து இறக்குமதியான பொன் வங்கிகளுடைய காப்புத் தொகையை அதுவரை காணாத அளவுக்குப் பெருக்கிவிட்டது. கைவசமுள்ள உபரிக் காப்புத் தொகையைக் கொண்டு 50 பிலியன் டாலர் பெறுமானமுள்ளகடன் கொடுக்கலாம் என்று கணக்கிட்டனர். பொன் இறக்குமதியையும், ரிசர்வ் வங்கியும் கருவூலமும் வைத்திருந்த காப்புத் தொகைகளையும் கணக்கிட்டால், கடன்—செலாவணிப் பெருக்கம் கட்டுக்கடங்காத நிலையை அடைந்துவிடும். 1935ஆம் ஆண்டுச் சட்டப்படி பெடரல் ரிசர்வில் 4 பேருக்குக் குறையாத அங்கத்தினர்கள் இணங்கினால் செலாவணிப் பெருக்கம் அல்லது சுருக்கத்தின் தீய விளைவுகளைத் தடுக்க, காப்பு நிதிகளை ஒழுங்குபடுத்தலாம். அதாவது கேட்பு டெப்பாசிட்டுகளுக்கும், தவணை டெப்பாசிட்டுகளுக்கும் அல்லது இரண்டிற்கும் காப்பாகக் கொள்ளவேண்டிய தொகைகளைக் கூட்டலாம் அல்லது குறைக்கலாம். ஆனால், காப்புத் தொகை 1935ஆம் ஆண்டின் வங்கிச் சட்டம் இயற்றப்படும்போது தேவையான அளவைவிடக் குறையக் கூடாது; இவ்வளவைப் போல் இரு மடங்கிற்கு மேலும் உயரக் கூடாது.[1] பெடரல் ரிசர்வ்

[1] H. H. Preston, 'The Banking Act of 1935', Journal of Political Economy, Dec. 1935.

முறை காப்புத் தொகையை மாற்ற அதிகாரம் பெற்றதிலிருந்து வளர்ச்சியடைந்த நாடுகளும் வளர்ச்சி குறைந்த நாடுகளும் தம் மைய வங்கிச் சட்டங்களைத் திருத்தி அவைகளுக்கு இவ்வதி காரம் கொடுத்தன. அண்மைக் காலத்தில், குறிப்பாக இரண்டாவது உலகப் போருக்குப் பின் காப்பு நிதியை மாற்றும் அதிகாரத்தை மைய வங்கிகளுக்குக் கொடுப்பது எங்கும் காணும் இயல்பாகிவிட்டது. லெபனுன், ஜமைக்கா, சோமாலியா, சைப்பரஸ், யுகாண்டா, காங்கோ போன்ற நாடுகளில் மைய வங்கி புதிதாக நிறுவப்பெற்றன. இவை காப்புத் தொகைகளை மாற்றும் அதிகாரம் பெற்றன.

காப்புத் தொகையை மாற்றும் மைய வங்கிகளுடைய புதிய அதிகாரத்தைப் பார்க்கும்போது, மாறுதலின் எல்லைகள் ஒரே மாதிரி எல்லா நாடுகளிலும் இல்லை. அவைகளிடையே வேறு பாடுகள் இருக்கின்றன. நியூஜிலாந்து, வெனிசூலா போன்ற நாடுகள் வரையற்ற அதிகாரம் பெற்றுள்ளன. ஆனால், பெரும்பாலான நாடுகளில் மேல் வரம்பும், கீழ் வரம்பும் உள. முதன் முதலில் இக் கருவியைக் கையாண்ட அமெரிக்காவில், நாம் முன்னர் குறிப்பிட்டபடி கீழ் வரம்பு, சட்டம் வந்த ஆண்டில் இருந்த நிலையிலும் மேல் வரம்பு இரு மடங்கு அளவிலும் நிர்ணயிக்கப்பட்டன. இந்தியாவில் முதலில் கேட்பு டெப்பாசிட்டு களுக்கு 5 முதல் 20% க்குள்ளும், தவணை டெப்பாசிட்டுகளுக்கு 2 முதல் 8% வரையிலும் காப்பின் வரம்புகளை அமைத்தனர். அண்மையில் நிறைவேறிய திருத்தத்திற்கு முன் இந்தியாவிலும், அமெரிக்காவிலும் கேட்புத் தவணை டெப்பாசிட்டுகளை வேறு படுத்தி, வெவ்வேறு காப்புத் தொகைகளை அமைத்தனர். ஆனால், மற்ற நாட்டுச் சட்டங்களில் இவ் வேறுபாடு இல்லை, ஒரே தொகையை இரு வகை டெப்பாசிட்டுகளுக்கும் அமைத்தனர். மண்டல வாரியாகக் காப்புத் தொகைகளை அமைக்கும் முறையைப் பெடரல் ரிசர்வ் முறையும், மேற்கு ஜெர்மனியும், அண்மைக் காலத்திலிருந்து ஜப்பான் நாடும் பின்பற்றுகின்றன. மற்றப் பல வங்கிகளுக்கு, அவைகளுடைய அளவுக்கேற்ற முறையில் காப்பு நிதியை நிர்ணயிக்கும் பழக்கம், மேற்கு ஜெர்மனி, நார்வே, ஸ்விட்ஜர்லாந்து, நெதர்லாந்து முதலிய நாடுகளில் காணப்படு கிறது. பொலிவியா, பெரு, கொலம்பியா, பராகுவே, தென் ஆப்பிரிக்கா முதலிய நாடுகள் துணைக்காப்புத் தொகைகள் அல்லது சிறு நிலைக்காப்புத் தொகைகளை (supplementary or marginal reserves) நிர்ணயித்துள்ளன.[1]

[1] P. G. Fousek, Foreign Central Banking, pp. 45-8.

பொதுவாகக் காப்புநிதியை மாற்றும் அதிகாரத்தை மைய வங்கிகளே பெற்றிருக்கின்றன. ஆனால், கொலம்பியா போன்ற சில நாடுகளில் அரசியலாரின் பிரதிநிதி மைய வங்கியின் ஆணையை மறுதளிப்பு (veto) செய்யும் அதிகாரம் பெற்றிருக்கின்றார். இந்த முறையைப் பயன்படுத்த வேண்டிய அவசியம் பல சந்தர்ப்பங்களில் பல்வேறு நாடுகளில் எழுந்தது. பொன்னும், அயல் நாட்டுச் செலாவணியும் அளவு மீறி நாடு கடந்து செல்லும் போது—குறிப்பாக உலக வாணிகத்தின் காரணமாக மூலதனம் நாடு கடக்கும்போது இக் கருவியைக் கையாளலாம் என்பதைப் பலர் ஏற்கின்றனர். மூலதனம் ஏராளமாக நாடு கடப்பதால் நிகழும் விளைவுகளை, மற்றச் செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவிகளைவிடக் காப்பு விகித மாற்றத்தால் வெற்றிகரமாகத் தடை செய்யலாம். ஆனால், போர் அல்லது பெரும் வர்த்தகச் சுழல் காரணமாக ஏற்படும் கடன் தேவைப் பெருக்கத்தை அல்லது கடன் அளிப்பை இக் கருவி மூலம் திருத்தியமைக்கலாம் என்பதைப் பலர் ஏற்கவில்லை. வரவு செலவுத் திட்டத்தின் உபரி அல்லது குறைபாடு, சிறு வர்த்தகச் சுழல் அல்லது சாதாரணப் பருவகால ஏற்றத் தாழ்வுகள் ஆகியவை ஏற்படுத்தும் விளைவுகளைச் சமாளிக்க இக் கருவியைப் பயன்படுத்தலாம் என்பதை மேலும் சிலரே ஏற்கின்றனர். ஆனால், நாடுகளுடைய நடைமுறைப் பழக்கங்களில் பல வேறுபாடுகள் உள. காப்புத் தொகையை மாற்றும் கருவியை ஆண்டு பெரும் சுழல்களையும், சிறு சுழல்களையும், அயல் நாட்டுச் செலுத்துநிலை விளைவிக்கும் மாறுதல்களையும் சரிக்கட்ட முயல்கின்றனர். நியூஜிலாந்து, ஈக்வடார், க்ரீஸ் (Greece), எகிப்து முதலிய நாடுகள் பருவகாலக் கடன் தேவைகளைச் சமாளிக்க இக் கருவியைப் பயன்படுத்துகின்றன. அன்னியச் செலாவணியைப் பெறுவதால் ஏற்படும் இரண்டாம் படிவ விளைவுகள், அரசின் பற்றுக்குறை நிதியாக்கம் (deficit financing) முதலியவைகளைச் சரிக்கட்டவும், வர்த்தக வங்கிகளுடைய முதலீடுகள் விரைவில் பெருகும்போது அவை கொடுக்கும் கடனைக் கட்டுப்படுத்தவும் பெரு நாடு (Peru) இதனைக் கையாளுகின்றது.[1] அயல் நாட்டுச் செலுத்து நிலையின் விளைவுகளைச் சமாளிக்க ஆஸ்திரேலியா, நியூஜிலாந்து, நெதர்லாந்து ஆகிய நாடுகள் இதைப் பயன்படுத்துகின்றன. பெடரல் ரிசர்வ் முறை பருவகாலச் செலாவணி நிலைகளைச் சரிவர அமைக்க இதை ஆளவில்லை. ஆனால், தீவிர அல்லது அற்பத் தொழில் சுழல்களைச் சரிக்கட்டுவதற்குப் பெடரல் ரிசர்வ் முறை இதைக் கையாளுகின்றது.[2]

[1] International Financial News (I.M.F.) 13 May 1960, p. 355.

[2] R. Goode and R. S. Thorn, 'Variable Reserve Requirements against Commercial Bank Deposits, 'I.M.F. Staff Papers, April, 1959, pp. 24–5.

காப்பு விகிதத்தை மாற்றும் முறையை அமெரிக்காவில் தாராளமாகக் கையாண்டு பார்த்திருக்கின்றனர். மைய வங்கிகளின் படைக்கலத்தில் சேர்க்கக்கூடிய 'மிகச் சீர்பெற்ற கருவி' (battery of the much improved type) என்று சிலர் இதைக் கருதுகின்றனர்.[1] இது ஒரு நுட்பமான உடனடி பலன் கொடுக்கக் கூடிய செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவியாக இன்னமும் வளரவில்லை என்று இதன் வரலாறு விளக்குகின்றது. தொடக்கத்தில் எதிர்பார்த்தவைகள் கைகூடவில்லை. எனவே, பல வங்கியர் இதைக் கசப்பு உணர்ச்சியுடன் நோக்குகின்றனர். இக் கருவி நேர்த்தியற்றது; ஓரம் காட்டவல்லது; நெகிழ்ச்சியற்றது.[2] வெளி மார்க்கட்டு நடவடிக்கையுடன் இதை ஒப்பிடும்போது இது துல்லியமாக இல்லை. காப்புத்தொகை எந்த அளவில் இருக்கவேண்டும், எந்த இடத்தில் எவ்வாறு மாறவேண்டும் என்பதுபற்றித் திட்டவட்டமான கருத்தில்லை. மாறும் காப்புத் தொகையின் அளவு வெளி மார்க்கட்டு நடவடிக்கைக்குட்படும் தொகையைவிட ஏற்றமாக இருக்கின்றது. வெளி மார்க்கட்டுக் கொள்கையைக் குறுகிய எல்லைகளுக்குட்பட்ட பகுதிக்கு மட்டும் ஆளவேண்டும். மேலும் இதனுல் பல்வேறு வங்கியர் பலவாறு பாதிக்கப்படுவர். உபரிக் காப்பு நிதியைக் கொண்டிருப்போர் அதிகம் பாதிக்கப்படமாட்டார்கள். குறைவான காப்பைக் கொண்டிருப்போர் அதிகம் பாதிக்கப்படுவார்கள். மூன்ருவதாக இக் கருவியில் நெகிழ்ச்சி இல்லை. காப்புத்தொகை மாறுதல்கள் மூலம் சில குறிப்பிட்ட பகுதிகளிலுள்ள செலாவணி அமித நிலையையோ அல்லது பற்ருக்குறையையோ துல்லியமாகச் சமாளிக்க முடியாது. 1942-ல் போருக்கு நிதியளித்த காரணத்தால் நியூயார்க்கிலும், சிகாகோவிலும் ஏற்பட்ட பற்ருக்குறை நிலையை மட்டும் இக் கருவிமூலம் ஆள முடிந்தது. இக் கருவியின் பலன் எவ்வளவு குறைவு என்பதை இது புலப்படுத்துகிறது.

### மாறும் காப்பு விகிதம், வெளிமார்க்கட்டு நடவடிக்கைகள்; இவைகளிடையே தேர்வு

குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் வெளிமார்க்கட்டு நடவடிக்கை நல்ல பலனளிக்குமா அல்லது காப்பு விகித மாற்றம் பலனளிக்குமா என்பது பற்றிப் பொருளியலார், மைய. வர்த்தக வங்கியர்—இவர்களிடையே அமெரிக்காவிலும் மற்ற நாடுகளிலும் கருத்து வேற்றுமைகள் இருக்கின்றன. செலாவணிக் கட்டுப்பாடு வெளிமார்க்

[1] J. E. Goodbar, Managing People's Money, p. 442.

[2] C. Whittlesey, 'Reserve Requirements and Integration of Credit Policies', Quarterly Journal of Economics, August 1944, p. 555-6.

கட்டுக்கொள்கைமூலம் நடைபெற்றாலும் காப்புத்தொகை மாற்ற மூலம் நடைபெற்றாலும் வெற்றிகரமாக நடைபெற வேண்டு மென்றால்.அதற்குச் சில நிபந்தனைகள் உள. வர்த்தக வங்கிகள் தம் காப்பு நிதியை ஸ்திரமாக ஒரே விகிதத்தில் கொள்ளவேண்டும். அவை பெருமளவு மாறும் காப்புத் தொகையைக் கொண்டால், செலாவணி நிருவாகிகள் கட்டுப்பாட்டுக் கருவிகள் மூலம் அவை களைக் கூட்டவோ அல்லது குறைக்கவோ முடியாது. ஆஸ் திரேலிய வர்த்தக வங்கிகளும் இந்திய ஷெடியூல் வங்கிகளும் (அண்மைக்காலம் வரை) நெகிழ்ச்சியுள்ள காப்புத் தொகையைக் கொண்டிருந்தன. இத் தொகை ஆஸ்திரேலியாவில் 10 முதல் 21·24% வரையிலும். இந்தியாவில் 9·50 முதல் 17·36% வரை யிலும் மாறக் கூடியவை. இது செலாவணிக் கட்டுப்பாட்டுக்குப் பெரிய தடையாகும். வங்கிகள் எவ்வளவுக் கெவ்வளவு காப்புத் தொகைகளை நிலையாகவும், குறுகிய எல்லைகளுக்குள்ளும் வைத் துக்கொள்கின்றனவோ அவ்வளவுக்கவ்வளவு காப்புநிதி மாற்றம் வெற்றிகரமாக இருக்கும். ஆனால், நன்கமைந்த அரசு பத்திர மார்க்கட்டு சுறுசுறுப்பாக இயங்காத நாடுகளில் வெளிமார்க் கட்டுக் கொள்கை சாத்தியமல்ல. இத்தகைய நாடுகளில் குறிப் பாக மைய வங்கியின் விதத்தில் வர்த்தக வங்கிகள் மீள்தள்ளுபடி செய்யாத நாடுகளில் காப்புத்தொகை மாற்றமே முக்கியமான கட்டுப்பாட்டுக் கருவியாகும். மைய வங்கிகள் போதிய அளவு 'தளவாடங்களை'க் கொள்ளாவிடில் வெளிமார்க்கட்டு விற்பனை பாதிக்கப்படும். வர்த்தக வங்கிகளிடம் உள்ள உபரிக்காப்புத் தொகை பணவீக்கத்திற்குக் காரணமாக இருக்கலாம். இவ் வுபரியை வெளிமார்க்கட்டு விற்பனை மூலம் ஈர்க்கவேண்டும். ஆனால், இதைச் செய்வதற்குள் மைய வங்கியிடம் உள்ள பத்திரங்கள் தீர்ந்துவிடலாம். இந்நிலை 1940-ல் பெடரல் ரிசர்வ் முறைக்கு நேர்ந்தது. வெளிமார்க்கட்டுக் கொள்கை மைய வங்கியின் வருமானம் ஈட்டும் சொத்தைக் கூட்டும் அல்லது குறைக்கும் இதற்கு மாறாகக் காப்புத்தொகை மாற்றம் இவ்விளைவு களை ஏற்படுத்தாது இது மைய வங்கிக் கொள்கைக்கும் கருவூல நிதிமுறைக்கும் முக்கியமானதாகும். 'தளவாடங்கள்' இல்லாமலே காப்புத் தொகை மாற்றம் நடைபெறும். தம்மிடமுள்ள வருமானம் ஈட்டும் சொத்துகளை மைய வங்கிகள் விற்க வேண்டிய கட்டாயமில்லை; கைவசமுள்ள தளவாடங்கள் தீர்ந்துவிடும் என்ற அச்சமில்லை. செலாவணிச் சுருக்கம் செய்யும் போது மைய வங்கி மார்க்கட்டில் பத்திரங்களை விற்பனை செய் கின்றது. வர்த்தக வங்கியரின் உபரிக்காப்புத் தொகையை ஈர்ப்பது இதன் நோக்கம். ஆனால், அரசு பத்திர மார்க்கட்டில் விலைகள் இதன் விளைவாகச் சரியும்.

ஆனால், காப்பு வீத மாற்றம் பத்திர விலைகளை அறவே குறைக்காது என்று கூறுவதற்கில்லை. வர்த்தக வங்கிகள் காப்பு நிதியை உயர்த்த வேண்டிய நிலை ஏற்படும்போது அவை தம்மிட முள்ள முதலீடுகளை (investments) விற்க வேண்டிய அவசியம் ஏற்படலாம். அவை காப்புத் தொகையை உயர்த்துவதற்குத் தேவையாகும் அளவில் மட்டும் பத்திர விற்பனை செய்யும் என்று கூறுவதற்கில்லை. மேலும் பல வங்கிகள் அவைகளை விற்கும் போது பத்திர விலைகள் சரியும்.

வெளி மார்க்கட்டு நடவடிக்கை, மாறும் காப்பு விகிதம்—இவைகளில் எது சிறந்தது என்பது பற்றி திரு. ஜே. அஸ்கீம் சிறப்பான ஆய்வு செய்துள்ளார்.[1] காப்பத் தொகை உயர் வையும் வெளி மார்க்கட்டு நடவடிக்கைகள் மூலம் செய்யும் கட்டுப்பாட்டையும் ஒப்பிடுவதற்கும், காப்பு நிதியைக் குறைப் பதை வெளி மார்க்கட்டுக் கொள்கை வாயிலாக நிறைவேற்றும் தாராளக் கொள்கையுடன் ஒப்பிடுவதற்கும் அவர் மூன்று நிலை களைக் கருதுகின்றார். இவ்வொப்பீடு இரு முறைகளில் சமத்துவ மின்மையைக் காட்டுகின்றது. வெளி மார்க்கட்டு நடவடிக்கை களோ காப்புவிகித மாற்றலைவிடச் சிறந்ததென்பதைக் காட்டு கின்றது. வர்த்தக வங்கிகள் உபரி ரொக்கக் காப்பை வைத்துக் கொள்ளாத சமயத்தில் கட்டுப்பாட்டுக் கொள்கையை அமல் செய்ய வேண்டியிருக்கலாம். இச் சூழ்நிலையில் காப்புநிதியை உயர்த்தினால் வங்கிகள் அரசு பத்திரங்களை விற்று மேலும் அதிக அளவில் கடன் கொடுக்க முயலும். ஆனால். வெளி மார்க்கட்டுக் கொள்கை இத்தகைய சூழ்நிலையை ஏற்படுத்தாது. உயர்காப்பு விகிதம் நிர்ணயமாவதால் 'வருமான விளைவும், ரொக்க விளைவும்' (Income effect and liquidity effect) நிகழும். இவை கட்டுப்பாட்டின் பலனை நீக்கிவிடும். வங்கிகள் பத்திரங்களை விற்பனை செய்து அத்தொகையைக் கொண்டு அதிக அளவு கடன் கொடுக்கும். இத் தீய விளைவுகளை வெளி மார்க்கட்டுக் கொள்கை இந்த அளவு ஏற்படுத்தாது. வெளி மார்க்கட்டுக் கொள்கைக்கு மாறாகக் காப்புத்தொகை உயர்வு வங்கிகளின் சொத்துகளுள் வருமானம் ஈட்டும் சொத்துகளைக் குறைக்கும். இதனால் வங்கிக ளுடைய வருமானத்தின் இறுதிநிலைப் பயன் அதிகரிக்கும். அதே சமயத்தில் காப்புத்தொகை கூடுவதால் வங்கிகளின் ரொக்கநிலை முன்னேறும். ரொக்க நிலைச் சொத்துகளின் முக்கியத்துவம்

[1] J. Aschheim, 'Reconsideration of the Theoretical and Practical Grounds of the Techniques between Variable Reserve Ratio & Open Market Operations.' 'Economic Journal, Dec. 1959. Also Techniques of Monetary Control' ch. II.

குறையும்; இத்தகைய சொத்துகளைக் குறைத்து வருமானம் கொடுக்கும் சொத்துகளைப் பெற முயற்சி செய்யும். அதாவது அரசு பத்திரங்களை விற்றுக் கடன் கொடுப்பதைப் பெருக்கும். காப்பு விகித உயர்வை வெளி மார்க்கட்டு நடவடிக்கையுடன் ஒப்பிடும்போது அது அரசு பத்திரங்களின் வட்டி வீதத்தை அதிகம் உயர்த்தும்.

இரண்டாவதாக வங்கிகள் ஏராளமான காப்பைக் கொண்டிருக்கும்போது வங்கிக் கடன் தேவை பெருகினாலும் மேற்குறிப்பிட்ட 'வருமான, ரொக்க விளைவுகள்' ஏற்படா. ஆகையால் வங்கிகள் தம் வசமுள்ள அரசு பத்திரங்களைக் குறைத்துத் தனியாருக்குக் கொடுக்கும் கடனை அதிகரிக்கா. அரசு பத்திர வட்டி வீதம் உயராது.

மூன்றாவது நிலையில் வங்கிகள் கணிசமான அளவு உபரிக் காப்புத் தொகையை வைத்திருக்கா. தனியார் கடன் தேவையும் அதிகம் இருக்காத நிலை. இந்நிலையில் காப்பு விகிதத்தை உயர்த்தினால் வங்கிகள் அரசு பத்திரங்களை விற்று மேலும் அதிக அளவில் கடன் கொடுக்க முன்வரும். வெளி மார்க்கட்டுக் கொள்கையைவிடக் காப்பு விகித உயர்வு இவ்விளைவைத் தீவிரமாக ஏற்படுத்தும். ஆனால், இது முன்னர் விளக்கியுள்ள நிலையில் அதிகமாக ஏற்படும்.

பெருக்கத்துக்கான வெளி மார்க்கட்டு நிலையும் (expansionary open market operations , காப்பு விகிதக் குறைப்பும் எதிர்மறை விளைவுகளை இதே முறையில் ஏற்படுத்தும். மைய வங்கி வெளி மார்க்கட்டில் பத்திரங்களை வாங்கும்போது வர்த்தக வங்கிகளிடமுள்ள வருமானம் ஈட்டும் சொத்துகள் குறைகின்றன. ஆகையால் அவைகளுடைய இறுதிநிலைப் பயன் மாறுகின்றது. எனவே, வட்டி ஈட்டும் சொத்துகளை அவை பழைய நிலைக்குக் கொண்டுவர முனையும். அதாவது அதிக அளவில் கடன் கொடுக்க அவை முன்வரும் அல்லது முதலீட்டைப் பெருக்க முயற்சி செய்யும். காப்புத்தொகை குறைவதால் வங்கிகள் கொடுக்கும் கடன் பெருகும், அல்லது அவைளுடைய முதலீடு அதிகரிக்கும். ஆனால், சில குறிப்பிட்ட வங்கிகளுக்கு மட்டும் சிறப்பான ஊக்கம் கிடைப்பதில்லை.

வெளிமார்க்கட்டு முறைக் கட்டுப்பாட்டுக்கும், காப்புநிதிக் குறைப்புக்கும் இடையே உள்ள பொருத்தமின்மையையும், பெருக்கத்துக்கான வெளிமார்க்கட்டு நிலைக்கும் காப்பு விகிதக்

குறைப்புக்கும் இடையே உள்ள பொருத்தமின்மையையும் திரு.அஸ்கீம் விளக்கியுள்ளார்.

காப்பு விகிதத்தை மாற்றுவதன் மூலம் செலாவணிக் கொள்கையைக் காலதாமதமின்றி உடனடியாக எங்கும் செயல் படுத்தலாம் என்றும், வெளி மார்க்கட்டுக் கொள்கை இவ்வாறு பலன் கொடுக்காது என்றும் குறிப்பிட்டுள்ளனர். ஆனால், செலா வணிக் கட்டுப்பாட்டின் முக்கிய நோக்கத்தை, அதாவது தனியார் பெறும் வங்கிக் கடனை அடக்குவதில் காப்பு விகித மாற்றம் வெளி மார்க்கட்டுக் கொள்கையைவிட ஏமாறும் என்பதையும் இங்குக் குறிப்பிட வேண்டும்.

காப்பு விகித மாற்றத்தை ஒரு செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவியாக ஆள முடியாது என்று நாம் முடிவு செய்துவிடக் கூடாது. வளர்ச்சி குறைந்த பண மார்க்கட்டுகள் உள்ள நாடு களில் மைய வங்கிகள் அரசு பத்திரங்களை ஏராளமாகக் கொண்டிருக்கும். வெளி மார்க்கட்டு நடவடிக்கையை மட்டும் நம்ப முடியாது. இந்த நிலையில் காப்புத் தொகையை மாற்ற வேண்டிய அவசியம் இருக்கும். ஆனால். இந்த நாடுகளில் கூட அரசின் பற்றுக்குறை நிதியாக்கத்தின் விளைவாக வெளி மார்க் கட்டுக் கொள்கை, காப்பு விகித மாற்றத்தைவிடச் செம்மையான முறையில் வளர்ச்சியடையும். வளர்ச்சியடைந்த நாடுகளில் அரசு பத்திர மார்க்கட்டு நன்கமைந்துள்ளது. மைய வங்கிகள் இப் பத்திரங்களை ஏராளமாகக் கொண்டுள்ளன. இங்குக் கூட மைய வங்கிகள் இரு வகைக் கட்டுப்பாட்டுக் கருவிகளையும் கையாள அதிகாரம் பெறலாம்.[1] அமெரிக்காவில் 1930—40-ல் அரசு பத்திர வட்டி வீதத்தை உயர்த்தி வர்த்தக வங்கிகளிட முள்ள உபரி ரொக்கத்தை ஈர்க்க முடியவில்லை. எனவே, காப்பு விகிதமாற்றக் கருவியையும் கையாள வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது.

இரு கருவிகளுள் ஏதேனும் ஒன்றை மட்டும் தனித்துக் கையாளுவதைவிட இரண்டையும் சேர்த்து ஆளுவது சிறந்த தாகும்.[2] இவ்வாறு செய்வதால் ஒன்றின் குறைகளை மற்றது நீக்கும். உதாரணமாகக் காப்புக் கொள்கையை உயர்த்தும்போது, வெளிமார்க்கட்டுப் பத்திரங்களை மைய வங்கி வாங்கலாம். இத் துடன் கருவூல உண்டியல்களையும் வாங்கலாம். இரு கருவிகளையும் சேர்த்து ஆளுவதால் முரண்பாடுகள் ஏற்படா என்று பெடரல்

[1] J. Aschheim, Techniques of Monetary Control, p. 42.
[2] Quarterly Journal of Economics, August 1944, p. 568.

வெளி மார்க்கட்டுக் குழு (Federal Open Market Committee) 1937-ல் குறிப்பிட்டது. ஒன்றுக்கொன்று துணையாகவும் செயல் படலாம் என்றும் குறிப்பிட்டது. வெளி மார்க்கட்டு நடவடிக்கை மூலம் பத்திர விலையைப் பாதுகாக்கலாம்.[1] வர்த்தக வங்கிகளுக்கு அவ்வப்போது ஏற்படும் ரொக்கப் பற்ருக்குறையை நீக்கலாம். பொதுவாக அவைகளுடைய ரொக்கத்தைப் பெருக்குவதைவிட அவ்வப்போது ஏற்படும் பற்ருக்குறையை இக் கொள்கை மூலம் தீர்க்கலாம்.

அமெரிக்காவைத் தவிர மற்றப் பல நாடுகளிலும் மைய வங்கிகள் காப்புத் தொகையை மாற்றும் அதிகாரம் பெற்றுள்ளன. ஆனால், இவ்வதிகாரத்தைச் செலுத்துவதற்கு எதிர்ப்புகள் எழுந்தன. சில நாடுகள் காப்புநிதியை மாற்றவே முடியவில்லை. சில நாடுகள் ஒரு சில முறைகளே அதை மாற்ற முடிந்தது. 56 நாடுகள் இவ்வதிகாரத்தைப் பெற்றிருந்தபோதிலும் 23 நாடுகளே 1958 ஏப்ரல் வரை இதை ஆண்டன.

இக் கருவியை மைய வங்கிகள் வர்த்தக வங்கிகள் மீது மட்டுமே செலுத்த முடியும். இடைநிலை நிதிநிலையங்கள் (non banking financial intermediaries) இதற்குப் புறம்பானவை. வர்த்தக வங்கிகளுக்கெதிராக ஓரம் காட்டும் போக்கு என்று குறை கூறப்பட்டுள்ளது. வளர்ச்சி வங்கிகளும், தவணைமுறை வாங்கல் நிலையங்களும், கட்டடச் சங்கங்களும், சேமிப்பு வங்கி களும் மைய வங்கியின் இவ்வதிகாரத்திற்குப் புறம்பானவை. இவை வர்த்தக வங்கிகளுடன் போட்டி யிடுவதால் இவைகளை யும் வங்கிகள்போல் நடத்தும் நிலை இல்லை. இவைகளுள் சில தனிவகைக் கடன்களை வழங்குகின்றன. ஆனால், இவை இயங்கு வதால் வர்த்தக வங்கிகளுடைய கடன்கள் இரண்டாம் நிலைப் பெருக்கம் (secondary expansion) அடைகின்றன. எனவே, மைய வங்கியின் கட்டுப்பாட்டுக் கொள்கைக்கு இவைகளுடைய வேலை எதிர்ப்பாக இருக்கின்றது. மைய வங்கியின் செலாவணிக் கொள்கை இத்தகைய நிதிநிலையங்களால் எந்த அளவில் பாதிக்கப்படுகின்றது என்பதை முந்தைய அதிகாரத்தில் பார்த்தோம். ஆனால், இங்கு மாறும் காப்புநிதிக் கருவிமூலம் சுமத்தப்படும் குற்றங்களின் இயல்பை ஆராயும் வகையில் இதைக் குறிப்பிட்டோம். இங்குக் குறிப்பிட்டுள்ள நிலையை ராட்கிளிப் குழுவினர் சுட்டிக் காட்டினர். சாதாரண நிலையில் பொதுக் கட்டுப்பாடுகளை இடைநிலை நிதியகங்கள்மீதும் சுமத்தினு

[1] Twenty-fourth Annual Report of the Board of Governors (Washington, 1938) p. 6.

லன்றி வங்கிகளுடைய வர்க்கத்தையோ அல்லது ரொக்க விகிதத்தையோ (liquidity ratio) மாற்றக்கூடாதென்று குழுவினர் குறிப்பிட்டனர். வழக்கமான மட்டத்தைக் கடக்கும்வரை பாரபட்ச மில்லாமல் இருக்கலாம். ஆனால் இதற்கு மேற்பட்ட உயர்நிலைக் கட்டுப்பாடுகளை அமுல் செய்யும்போது இடைநிலை நிதியகங்களையும் அவைகளுக்குட்படுத்த வேண்டும்.[1]

இக் கருவி 'அரசுக்கு நேர்முகக் கடனுதவியளிக்க வழி வகுக்கும்' என்று இங்கிலாந்து வங்கியின் ஆளுநர் (Governor of the Bank of England) இதைப் பற்றி ராட்கிளிப் குழுவினரிடம் கூறியுள்ளார். இக் கருவியும் இதன் வகைகளும் இத்தகைய குறைகாணலுக்கு இலக்காகியுள்ளன. தனியார் துறைச் செலவுகளை வங்கிமுறை கட்டுப்படுத்தும்போது அரசின் செலவு பெருகுவதற்கு மட்டும் அது இடம் கொடுக்கின்றது. வர்த்தக வங்கிகள் அரசு பத்திரங்களை வைத்துக்கொள்ள வேண்டும் என்ற கட்டுப்பாடு (அதிக காப்புக் கொள்ளவேண்டும் என்ற காரணத்தால்) வரும்போது மேற்குறிப்பிட்ட விளைவு ஏற்படும். ஆனால், விரைவான பொருளாதார வளர்ச்சிக்கும், வேலை நிறைவுக்கும் (full employment) உகந்த கொள்கையை அரசு பின்பற்றும்போது தனியார் செலவைக் கட்டுப்படுத்தி அரசியலார் செலவை பெருக்க வேண்டிய நிலை ஏற்படும். ஏனெனில், இவ்வாறு செய்வதால்தான் பொதுத்துறைக்கு உபரி உற்பத்திச் சாதனங்கள் கிடைக்கும். மேலும் அரசு தன் செலவைப் பெருக்க இதை மட்டும் நம்பியிருக்கவில்லை. காப்புத் தொகையைக் கூட்டுவதன் மூலம் நிதி திரட்ட இடம் இல்லாவிடில் அரசியலார் பணவீக்கம் செய்து மைய வங்கியிடம் கடன் பெற்றுத் தன் செலவைப் பெருக்கிக் கொள்ளலாம்.

### வளர்ச்சி குறைந்த நாடுகளில் மாறும் காப்பு விகிதம் பற்றிய சட்டம்

அண்மைக் காலத்தில் மைய வங்கிச் சட்டங்களைப் புனைந்தவர்கள், மைய வங்கி வசம் உள்ள மற்றச் செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவிகளுடன் இக் கருவியையும் சேர்த்துள்ளனர். பெடரல் ரிசர்வ் முறை பெற்ற அனுபவத்தைக் கொண்டு இச் சட்டங்களைப் புனைந்தனர். அவர்கள் சட்டங்களை மிக அதிக நெகிழ்வுடன் அமைத்துப் பழைய முறையில் கையாளும்போது ஏற்படும் குறைகளையும் களைந்தனர். பெரும்பாலான வளர்ச்சி குன்றிய நாடுகளில் சட்டப்படி வர்த்தக வங்கிகள் தம் டெப்பா

[1] Radcliffe Committee Report, p. 181.

சிட்டுகளில் ஒரு விகிதத்தை மைய வங்கிகளில் கேட்பு டெப்பாசிட்டாக (Demand deposits) வைத்துக்கொள்ள வேண்டும். இந்த டெப்பாசிட்டுகளை விரிவான எல்லைகளுக்குள் மைய வங்கி அமைக்கலாம். பணவீக்கப் பணச்சுருக்க விளைவுகளைத் தவிர்ப்பதே இதன் நோக்கமாகும். கேட்பு டெப்பாசிட்டுகளுக்கும், தவணை டெப்பாசிட்டுகளுக்கும், மற்ற டெப்பாசிட்டுகளுக்கும், வெவ்வேறு காப்புத் தொகைகளை வைத்துக்கொள்ள சட்டம் வழிவகுக்கின்றது. உதாரணமாக பிலிப்பைன் நாட்டு மைய வங்கியின் செலாவணிக் குழு பணவீக்க காலத்தில் உயர் காப்பு விகிதத்தை நிர்ணயம் செய்யலாம். ஆனால், இக் கட்டுப்பாட்டை அறிவிக்கும் நாளில் வர்த்தக வங்கியின் டெப்பாசிட்டு பொறுப்பு இருந்ததைவிட எவ்வளவு அதிகரிக்கின்றதோ அதற்கு நிர்ணயமாகும் காப்புத்தொகை 100%க்கும் உயர்வாக இருக்கக் கூடாது. பராகுவே (Paraguay) நாட்டின் 1944ஆம் ஆண்டின் மைய வங்கிச் சட்டப்படி காப்புவிகிதத்தை 10 முதல் 50 சதவீதம்வரை உயர்த்தலாம். குவாடிமாலாவின் மைய வங்கி வர்த்தக வங்கிகளின் டெப்பாசிட்டுப் பொறுப்புகளுக்குக் காப்புத் தொகையை நிர்ணயம் செய்யலாம். இக் காப்புப் பல்வகை டெப்பாசிட்டுகளின் 10 முதல் 50%க்குட்பட்டிருக்க வேண்டும். கட்டுப்பாடு அமலில் வரும் நாளுக்குப் பிறகு வங்கிகள் பெறும் கூடுதல் டெப்பாசிட்டு தொகைகளுக்கே இது பொருந்தும். டாமினிக்கக் குடியரசின் செலாவணிக் குழுவும் இத்தகைய அதிகாரம் பெற்றுள்ளது. வர்த்தக வங்கிகளின் காப்புத்தொகையை நிர்ணயம் செய்யலாம், சில சந்தர்ப்பங்களில் மாற்றலாம். ஆனால், இம் மாற்றம் 10 முதல் 50%க்குட்பட்டிருத்தல் வேண்டும். கட்டுப்பாடு அமலாகும் நாளுக்குப் பிறகு வங்கிகள் பெறும் டெப்பாசிட்டுகளில் 50%க்கு மேற்பட்ட தொகையைக் காப்பாக நிர்ணயிக்கத் தேவை ஏற்படலாம். க்யூபா நாட்டின் 'நாஷனல் பாங்கு' (National Bank of Cuba) 40%க்கு மேற்படாமலும் 12½%க்குக் குறையாமலும் காப்புத் தொகையைச் சாதாரணமாக மாற்றலாம். ஆனால், ஓர் ஆணை மூலம் உச்சவரம்பை 100% வரை உயர்த்தலாம். ஆணையின் நாளுக்குப் பிறகு பெறும் டெப்பாசிட்டுக்கே இவ்வதிகாரம் பொருந்தும்.[1] அண்மையில் சுதந்திரம் பெற்ற ஆப்பிரிக்க நாடுகளில் சில, ரொக்கக் காப்புத் தொகையையும், மற்றவை ரொக்க விகிதத்தையும் (liqudity ratio) மாற்றும் அதிகாரம் பெற்றுள்ளன. 'சூடான் பாங்கு' டெப்பாசிட்டுக்குப் பின்னணியான ரொக்கத்தை மாற்றலாம். நைஜீரியா, கானு,

[1] **Arts. 61-2. The Central Banking Law of Cuba, 1948 (Superseded by a ne l ov of February 23, 1961).**

லியா நாட்டு வங்கிகள் குறைந்தபட்ச ரொக்கநிலைச் சொத்து களின் விகிதத்தை அவ்வப்போது நிர்ணயம் செய்யலாம். மொராக்கோ, ட்யூனிசிய மைய வங்கிகள் பிரெஞ்சு முறையை ஒத்திருக்கின்றன. இவைகளுக்குச் சட்டபூர்வமான அதிகாரம் கிடையாது.[1]

பெடரல் ரிசர்வ் முறையின் அனுபவம் இக் கருவியின் (காப்புத் தொகை மாற்றுக் கருவி) ஓரவஞ்சம் காட்டும் தன்மையை எடுத்துக் காட்டியது. குறைவான உபரிக் காப்பு நிதி கொண் டுள்ள வங்கிகள் இதனால் பெரிதும் பாதிக்கப்படும். அதிக அளவில் இத் தொகையைக் கொண்டிருக்கும் வங்கிகளுக்குத் தொல்லைகள் ஏற்படா. பல வங்கிகள் வெவ்வேறு காப்புத் தொகையைக் கொண்டிருக்கும்போது, எல்லா வங்கிகளுக்கும் ஒரே உயர் காப்பு விகிதத்தை நிர்ணயம் செய்வதால் எழும் தொல்லைகளை மைய வங்கி தவிர்க்க விரும்பலாம். இதற்காக எதிர்காலத்தில் கிடைக்கும் டெப்பாசிட்டுகளுக்கு மட்டும் புதிய ஆணை பொருந்தும் என்று கட்டளையிடலாம். மேலும் மாற்றும் போது, முன்னறிவித்துப் படிப்படியாக உயர்த்தலாம். குறை வான உபரிக் காப்புத்தொகைகளை வைத்திருக்கும் வங்கிகள் கவனமாகச் செயல்பட வேண்டும். தாம் கொடுக்கும் கடனுதவி யைப் படிப்படியாகக் குறைத்துக் காப்பு நிதியைத் திரட்டலாம். அமெரிக்க நாட்டுச் சட்டத்தில் முன்னர் இருந்த முறையைப் பிறகு ஒரு திருத்தம் மூலம் நீக்கினர். இதன்படி கூடுதல் காப்பு விகிதம் எதிர் காலத்தில் கிடைக்கும் உபரி டெப்பாசிட்டுகளுக்கே பொருந்தும். காப்பு விகித மாற்றக் கருவியைக் கையாளுவதால் ஓர் அதிர்ச்சியும் அதன் மூலம் வங்கி கடன் வாங்குவதில் ஒரு பீதியும் (panic) ஏற்படலாம். இதைத் தவிர்க்கக் கீன்ஸ் (Keynes) அவர்கள் விகித மாற்றத்திற்கு முன்னறிவிப்புக் கொடுக்க வேண்டு மென்றும், அதைப் படிப்படியாக மாற்றுதல் வேண்டுமென்றும் குறிப்பிட்டுள்ளார். அறிக்கைகள் மூலம் படிப்படியாக மாற்றங் களை அறிவிக்கலாம். வளர்ச்சி குறைந்த நாடுகள் கீன்ஸ் அவர் களுடைய கருத்தை ஏற்றுச் சட்டங்கள் இயற்றியுள்ளன. உதாரணமாகப் பிலிப்பைன் நாட்டு மைய வங்கிச் சட்டத்தின் 104 ஆவது பிரிவு கீழ்க்கண்ட ஏற்பாட்டுக்கு வழி வகுத்துள்ளது. செலாவணிக்குழு வங்கிகளின் பொறுப்புகளுக்குப் பின்னணியாக உள்ள காப்பை உயர்த்த வேண்டிய அவசியம் ஏற்பட்டால் அதைப் படிப்படியாக உயர்த்த வேண்டும். உயர்வு 30 நாட் களில் 4%ஐ விட அதிகம் இருக்கக் கூடாது. கூடுதல் காப்பு

[1] S. K. Basu, Central Banking in Emerging Countries, pp. 113-4.

பற்றிய ஆணை அமலாவதுபற்றிய முன்னறிவிப்பை வங்கிகளுக்குக் கொடுக்க வேண்டும். இதேபோல் 'குவாடிமாலா பாங்கு'க்கும் உயர்த்த வேண்டிய நிலை ஏற்பட்டால், செலாவணிக் குழு இதைப் படிப்படியாக உயர்த்த வேண்டும் என்று அமலில் வரும் என்பது பற்றியும் முன்னறிவிப்புத் தரவேண்டும்.[1] சிலோன் நாட்டு மைய வங்கியின் செலாவணிக் குழுவும் காப்புத் தொகையைப் படிப்படியாக, 30 நாட்களில் 4%-க்கு மேற்படாதவாறு உயர்த்த வேண்டும். அரிய சூழ்நிலையிலன்றி, மற்றச் சமயங்களில் ஆணைக்கு 14 நாட்கள் முன்னறிவிப்பு வேண்டும்.[2] பணவீக்க காலத்தில் 100 சதவீதத்திற்கு மேற்படாத காப்புத் தொகை தேவையாகலாம். முன்னறிவிப்பு நாளிலிருந்து வங்கிகள் பெறும் டெப்பாசிட்டுகளுக்குக் காப்பு தேவைப்படலாம்.[3] மலேயா நாட்டின் மைய வங்கி, குறைந்தபட்ச ரொக்க விகிதத்தை[4] நிர்ணயம் செய்யும்போது ஒரு வார அளவு கருணைக் காலத்தை வர்த்தக வங்கிகளுக்குக் கொடுக்கவேண்டும். கியூபா நாட்டின் 'நாஷனல் பாங்கு', படிப்படியாக முன்னறிவிப்புடன் உயர்த்த வேண்டும். அறிவிப்புக் காலம் 30 நாட்களுக்குக் குறைவாக இருத்தல் கூடாது.[5] கொரியா நாட்டின் மைய வங்கியும் காப்புத் தொகையைப் படிப்படியாகவும் ஒழுங்காகவும் உயர்த்த வேண்டும், தக்க முன்னறிவிப்பும் கொடுக்கவேண்டும். பல நாடுகளில் முன்னறிவிப்புக் குறைந்தபட்ச நாட்களை நிர்ணயம் செய்யவில்லை.[6] 'காமன்வெல்த் பாங்காக' (Commonwealth Bank) இருந்ததை 'ஆஸ்திரேலிய ரிசர்வ் பாங்கு' (Reserve Bank of Australia) என்ற பேரில் மாற்றியமைத்தனர். இது காப்புத் தொகையை ஓரெல்லைக்குட்பட்டவாறு உயர்த்தினால், உயர்வு பற்றிய முன்னறிவிப்புக் கொடுக்க வேண்டாம். ஆனால், உயர்வு இவ்வெல்லைக்கு மேற்பட்டால் உயர்வு அமலாவதற்கு முன் 48 நாட்கள் அவகாசம் வேண்டும்.[7] நைஜீரியா, சூடான், ரொடிஷியா, லிபியா நாடுகளில் உரிய முன்னறிவிப்பு அல்லது சில குறிப்பிட்ட நாட்களுக்கு முன் காப்பு நிதி மாற்றம்பற்றிய செய்தி கொடுத்தல் வேண்டும். கானு நாட்டின் மைய வங்கியும்,

[1] Art. 66, Organic Law of the Bank of Guatemala, 1959.

[2] Sec. 93 (2) Monetary Law Act of Ceylon of 1949 as amended in 1954.

[3] Sec. 94 (1) Monetary Law Act of Ceylon of 1949 as amended In 1954.

[4] The Central Bank of Malaya Ordinance, 1958, Sec. 36 (1) and (3).

[5] Law of the Central Bank of Cuba of 23 December 1948.

[6] Art. 62. The Bank of Korea Act 1950.

[7] Sec. Hans Aufricht Central Banking Legislation. p. 48.

இந்திய ரிசர்வ் வங்கியும் இத்தகைய முன்னறிவிப்புக் கொடுக்கத் தேவையில்லை.

இந்திய ரிசர்வ் வங்கிச் சட்டம் 1956-ல் திருத்தப்பட்டது. இதன்படி வர்த்தக வங்கிகளின் காப்புத் தொகையை 100% வரை அது உயர்த்த அதிகாரம் பெற்றது. குறிப்பிட்ட நாளுக்குப் பிறகு அவை பெறும் உபரி டெப்பாசிட்டுகளுக்கு இவ்வாணை பொருந்தும். ஆனால், ரிசர்வ் வங்கி இது பற்றிய முன்னறிவிப்பு கொடுக்கவும், காப்பு விகித உயர்வைப் படிப்படியாக்கவும் நிபந்தனைகள் இல்லை. 1960 ஆம் ஆண்டு மே மாதம் 5 ஆம் தேதி ரிசர்வ் வங்கி வர்த்தக வங்கிகளுக்கு அனுப்பிய சுற்றறிக்கைப்படி, அவை மே மாதம் 6 தேதிக்குப் பிறகு பெறும் டெப்பாசிட்டுத் தொகையில் தினசரி சராசரி 50 சதவீதத்தைக் காப்பாக ரிசர்வ் வங்கியில் வைத்துக்கொள்ளவேண்டும். இது வழக்குக்கு முரணானதாகும். இக் கருவியை கவனத்துடனும் எச்சரிக்கையுடனும், தீய விளைவுகள் நிகழாவண்ணமும் கையாள வேண்டும் என்னும் உண்மையை மைய வங்கியர் உணரத் தவறிவிட்டனர்.

காப்புநிதி மாற்றங்கள் பற்றிய சட்டங்களின் ஒரு முக்கியமான அம்சம் குறிப்பிட்ட சதவீதத்திற்கு மேற்பட்ட (பொதுவாக 50 சதவீதத்திற்கு மேற்பட்ட) உபரிக் காப்புத் தொகைக்கு வர்த்தக வங்கிகள் வட்டி வீதம் பெறும். பராகுவே, சிலோன், பிலிப்பைன், டாமினிக்கக் குடியரசு நாடுகளில் இவ் வட்டிவீதம் மைய வங்கியின் குறைந்தபட்சத் தள்ளுபடி வீதத்தைவிட (rate of discount) அதிகமாக இருக்கக் கூடாது. குவாடிமாலாவில் வட்டி வீதம் 3 சதவீதத்திற்கு உயர்வாக இருக்கக் கூடாது. 1956 ஆம் ஆண்டுச் சட்டப்படி இந்திய ரிசர்வ் வங்கியும் உபரிக் காப்புத் தொகைக்கு வட்டிகொடுக்கவேண்டும். இவ்வட்டி அவை டெப்பாசிட்டர்களுக்குக் கொடுக்கும் வீதத்திற்குச் சமமாக இருக்கவேண்டும். சட்டப்படி காப்புத் தொகையை எவ்வளவு உச்சநிலைக்கு உயர்த்த முடியுமோ அந்த அளவுக்கு உயர்த்த வேண்டிய அவசியம் சில அசாதாரணமான சூழ்நிலையில் ஏற்படலாம் என்ற கருத்தை இச் சட்டங்கள் அடிப்படையாகக் கொண்டுள்ளன. அசாதாரண சூழ்நிலையில் டெப்பாசிட்டுகளிலும் காப்புத் தொகைகளிலும் அதிக ஏற்றத் தாழ்வுகள் ஏற்படலாம். இவ்வளவு அதிகக் காப்புத் தொகையை வைத்துக் கொள்ள வேண்டியதால் வர்த்தக வங்கிகளுடைய வருமானம் ஈட்டும் சக்தி பாதிக்கப்படும். ஆகவே மைய வங்கி வர்த்தக வங்கிகளின் உபரிக் காப்பு நிதிக்கு வட்டி செலுத்த வேண்டும்.

**மாறும் காப்புநிதிக் கருவியின் வகைகள் : தென் ஆப்பிரிக்க நாட்டின் துணைக் காப்பு நிதி (Supplementary reserve)**

துணைக் காப்பு நிதியையும், ஆஸ்திரேலிய சிறப்புக் கணக்கு முறையைப் பற்றியும் (Special Accounts System) முன்னரே குறிப்பிட்டோம். இரு முறைகளும் எவ்வாறு இயங்குகின்றன என்பதுபற்றிப் பார்ப்பது பயனுள்ளதாகும். துணைக் காப்பு நிதி முறைப்படி வர்த்தக வங்கிகள் தம் டெப்பாசிட்டுத் தொகையில் ஒரு சதவீதத்தை மைய வங்கியிடம் காப்பாகக் கொள்ள வேண்டும். நாட்டின் நலனைக் கருதி மைய வங்கி ஒரு குறிப்பிட்ட நாள் முதல் வர்த்தக வங்கிகளின் உபரி டெப்பாசிட்டுகளில் ஒரு சதவீதத்தைக் கூடுதல் காப்பாக வைத்துக்கொள்ள வேண்டும் என்று ஆணையிடலாம். 1956-ல் தென் ஆப்பிரிக்க ரிசர்வ் வங்கி ஒரு குறிப்பிட்ட நாளிலிருந்து வர்த்தக வங்கிகள் பெறும் கூடுதல் டெப்பாசிட்டுகளில் 90% வரை காப்புத் தொகையைக் கொள்ள வேண்டுமென்று உத்தரவிட அதிகாரம் பெற்றது. துணைக் காப்புத் தொகையைக் கருவூல உண்டியல்களாகவும் குறுகிய தவணை அரசு பத்திரங்களாகவும் வைத்துக் கொள்ளலாம். சில புதிய போக்குகளின் விளைவாக 1958, ஏப்ரல் மாதம் தென் ஆப்பிரிக்க ரிசர்வ் வங்கி ஓர் ஆணை மூலம் இக் கருவியைக் கையாண்டது. 1957, ஏப்ரலில் ரிசர்வ் வங்கியிடம் இருந்த பொன், அன்னியச் செலாவணியின் மதிப்பு £128 மிலியன். அயல் நாட்டுச் செலுத்துநிலை மோசமானதால் இது 1958, ஏப்ரலில் £79 மிலியனாகக் குறைந்தது. தென் ஆப்பிரிக்க ஏற்றுமதிப் பண்டங்களின் விலைகள் மிகவும் குறைந்தன. இறக்குமதிக் கட்டுப்பாடு தளர்ந்ததால் மோட்டார் வண்டிகளும் மற்றப் பண்டங்களும் மிகுதியாக இறக்குமதியாக்கப்பட்டன. வங்கிக் கடன் பெருகியதால் இறக்குமதிக்குப் போதிய நிதி கிடைத்தது. ரிசர்வ் வங்கியின் சுற்றறிக்கை பலனளிக்கவில்லை. ஆதலின் துணைக் காப்பு நிதியை வைத்துக் கொள்ளுமாறு வர்த்தக வங்கிகளுக்கு ஆணையிட வேண்டிய நிலை ஏற்பட்டது.[1] மாறும் காப்பு விகிதக் கருவிபோல் இதையும் எல்லா நாடுகளும் பின்பற்றலாம். இதற்கு நல்ல வளர்ச்சியடைந்த பண, மூலதன மார்க்கட்டுகள் இருத்தல் வேண்டுமென்ற கட்டாயமில்லை. மாறும் காப்புக் கருவியைப் போல் இதுவும் வர்த்தக வங்கிகளின் கடன் கொடுக்கும் சக்தியை உடனடியாகவும் நேரடியாகவும் பாதிக்கின்றது. மைய வங்கிகள் வெளி மார்க்கட்டில் பத்திரங்கள் வாங்கியதன் விளைவையும் அயல் நாட்டு மூலதனம் அதிக அளவில் வருவதையும் சரிக்கட்டு

[1] Memorandum of Evidence of the Governor of the Reserve Bank of South Africa—Radcliffe Committee, Vol. I.

வதற்கு இக் கருவியைப் பயன்படுத்தலாம். மாறும் காப்புக் கருவியில் காணும் குறையை இக் கருவியிலும் காண்கின்றனர். அதாவது இதன் மூலம் அரசு மலிவான முறையில் கடன் நிதி திரட்ட முடியும். மைய வங்கியிடம் கடனுதவி பெறுவதற்குப் பதிலாக, வர்த்தக வங்கிகள் அரசு பத்திரங்களைக் கொள்ள வேண்டுமென்ற உத்தரவின் மூலம் அவைகளிடமிருந்து நிதி பெறுகின்றனர். அரசு தனக்கு வேண்டிய நிதியை மைய வங்கியிடமிருந்து வாங்குவதா அல்லது வர்த்தக வங்கியிடமிருந்து வாங்குவதா என்பதை முடிவு செய்யும்.

இங்கிலாந்தில் சிறப்பு டெபாசிட்டு திட்டம் (Special Deposit System)

வங்கிக் கடனைக் குறைக்கும் சிறப்பு வேண்டுகோள் (special requests) முறையை முதல் உலகப் போர்க் காலத்தில் திரு. பட்லர் (Butler) துவக்கினார். ஆனால், இதை லண்டன் செக்குத் தீர்வக வங்கிகள் (Clearing Banks) வெறுத்தன. இது ஒரு வெறுக்கத்தக்க திறமையற்ற முறை என்று அவை கருதின. வர்த்தக வங்கிகள் கொடுக்கக்கூடிய கடன் தொகையைக் கட்டுப்படுத்துவதன் விளைவுகளை மற்றக் கடன் நிலையங்களின் செயல்கள் நீக்கிவிடும் என்று ராட்கிளிப் குழுவினரிடம் முறையிட்டனர். வங்கிகளல்லாத மற்ற நிலையங்களைக் கடன் வாங்குவோர் அணுக வேண்டும். அவை வங்கிகள் என்றுமே வசூல் செய்யாத உயர் வட்டியை வசூல் செய்யும். ‘உயர் வட்டி வாங்குவோர் நன்கு தொழில் செய்ய இடம் ஏற்பட்டது. அவர்கள் மீது சுமத்தப்பட்ட கட்டுப்பாடுகளைவிட அதிகமான கட்டுப்பாடுகளை வங்கிகள் மீது சுமத்தினர்’.[1] இம்முறை வங்கிகளிடையே உள்ள போட்டியையும் குறைத்தது. அதேபோது மற்ற நிலையங்களுடைய போட்டியையும் வங்கிகள் சமாளிக்க வேண்டும். நீண்டகாலப் போக்கில் இக் கருவி திருப்திகரமாக இயங்காது என்று இங்கிலாந்து வங்கியும் கருதியது.[2]

வங்கிகள் கொடுக்கும் கடனைக் கட்டுப்படுத்துவதற்கு, வெளி மார்க்கட்டு நடவடிக்கையையும், வங்கிவீதத்தையும் தவிர மேலும் சில கருவிகளை அதிகாரிகள் கையாள விரும்பினர். 1958ஆம் ஆண்டு ஜூலை மாதம் கடன் கட்டுப்பாட்டைத் தளர்த்தியபோது நிதியமைச்சர் செலாவணிக் கட்டுப்பாட்டுக்குப்

[1] Evidence (Oral) of Mr. Roberts and Mr. Tuke, Radcliffe Committee, vol, IV, Qs. 3578, 3587 & 3596.

[2] Memorandum of Evidence of the Bank of England. Radcliffe Committee, vol. I, p. 41.

'புதிய நடவடிக்கை' எடுக்கப்படும் என்று அதன்படி தேவை ஏற்பட்டால் இங்கிலாந்தின் தலைமை வங்கி விசேஷ டெப்பா சிட்டுகளை வர்த்தக வங்கிகள் வைக்க வேண்டுமென்று உத்தர விடலாம் என்றும் கூறினர்.[1] இந்த டெப்பாசிட்டுகளுக்கு நடப் புக் கருவூல உண்டியல் வீதத்தில் வட்டி கொடுக்கப்படும். இவைகளை வங்கிகளின் ரொக்கநிலைச் சொத்துகள் என்று கணக்கிடமாட்டாது. சிறப்பான காரணங்கள் இருந்தால் விசேஷ டெப்பாசிட்டில் ஒரு பகுதியை மைய வங்கி விடுவிக்க லாம். சிறப்பு டெப்பாசிட்டுகளின் உடனடி விளைவாக அதற்குச் சமமான அளவு வர்த்தக வங்கிகளின் ரொக்கநிலை குறையும். வங்கிகள் குறைந்தபட்சக் காப்பு விகிதத்தையும் சிறப்பு டெப்பா சிட்டுகளையும் கொள்வதால் அவைகளுடைய கடன் பெருக்கும் திறமை குறையும், அல்லது நீங்கும். தற்சமயம் வழக்கில் உள்ள செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவிகளுக்கு இம்முறை ஒரு வலிமை கொடுக்கும். வங்கி வீதத்தைப் போல் இதையும் ஒரு பொதுக் கடன் கட்டுப்பாட்டுக் கருவியாகப் பயன்படுத்தலாம். தொழில்நுட்பக் கோணத்திலிருந்து பார்க்கும்போது வங்கிகள் தாமதமாகச் செய்துகொண்ட உடன்பாடு என்று இக் கருவியைக் கூறலாம். 1944ஆம் ஆண்டின் வங்கிச் சட்டத்திற்குப் பிறகு ஒரு பெரிய மாற்றம் ஏற்படுவதற்கு இவ்வுடன்படிக்கையே காரணமாகும்.

வங்கி வீதத்தை மாற்றும் வழக்கத்தில் புதிய திட்டம் ஒரு மாறுதலைப் புகுத்தியது. வங்கிவீத மாற்றம் ஒரு ரகசியமெனப் பாவிக்கப்பட்டது. ஆனால், புதிய திட்டப்படி மைய வங்கி இது பற்றி வர்த்தக வங்கிகளுடன் முன்கூட்டிய பேச்சு வார்த்தைகள் நடத்தும். செலாவணியதிகாரிகளுடைய மனப்போக்கை அறிய வங்கிகளுக்குச் சந்தர்ப்பம் கிடைக்கின்றது. அவர்கள் தம் செல் வாக்கைப் பயன்படுத்த இடம் ஏற்படுகின்றது. சிறப்பு டெப்பா சிட்டு முறை அமலில் வந்த காலத்தில் அதைப் பலர் குறை கூறினர். மைய வங்கி, வர்த்தக வங்கிகளிடம் ஏராளமான தொகைகளை அரசுக்குக் கடனாகப் பெற வழி செய்யும் என்றனர். அமிதத் தொகையைக் கடனாகப் பெறும் பழக்கம் ஊக்கம் பெறும்; பொதுக் கடனுக்கு (public debt) மைய வங்கி நிதி யளிக்க வேண்டிய பொறுப்பைத் தட்டிக் கழிக்கும் என்றும் கூறினர். 'மார்க்கட்டின் கட்டுப்பாட்டைத் தவிர்க்க இது ஒரு வழி; இது உயர் வட்டிவீதத் தொல்லைகளையும் நீக்கும் கருவி. குறுகியகால அரசு கடனுக்கு (மைய வங்கி) நிதியளிப்பது சரி

[1] The Economist, 12 July, 1958, pp. 141-3.

யான பழக்கம். அளவுக்கு மீறிக் கடன் திரட்டும் அரசின் போக்கைச் சரிக்கட்டும் இம் முறையையும் இக் கருவி நீக்கும்' என்று ஒரு விமர்சகர் குறிப்பிட்டுள்ளார். எனவே, பணச் சுருக்கத்தை விளைவிக்காமல் பணவீக்கத்திற்குக் காரணமாக இருக்கலாம். வங்கிகள் இக் கருவிக்கு ஒப்புதல் அளித்ததன் மூலம் அவைகளுடைய கடன் மீதிருந்த தற்காலிகக் கட்டுப்பாட்டுக்குப் பதிலாக ஒரு திட்டவட்டமான கட்டுப்பாட்டுக்கு இடம் கொடுத்தன. ஆனால், அவைகளுடைய சுதந்திரம் பெரிதும் பாதிக்கப்படுகின்றது. ரொக்கப் பெயர்ச்சிகளுக்கு வழிவகுப்பதன் மூலம் இக் கருவிக்கு மேலும் ஓர் அதிகாரம் கொடுத்தனர். செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவியாக மட்டுமன்றி குறுகியகால வீதங்களைக் குறைக்க ஒரு வழியாகவும் இதைப் பயன்படுத்தலாம்.[1] நிதி தொகுப்புக்குச் (funding) சுற்றி வளைத்துச் செய்யும் ஒரு முறை என்று இக் கருவியை சர் ரால்ப் ஹாட்ரே (Sir Ralph Hawtrey) குறிப்பிட்டுள்ளார். இதன்படி அரசு ஏற்கவேண்டிய இழப்புகளை வங்கிகள் ஏற்கவேண்டுமென்று கட்டாயப்படுத்துகின்றனர்.[2]

சிறப்பு வேண்டுகோள் முறையையும் 'டெப்பாசிட்டில் கடன் கொடுக்கும் விகிதத்தைக் குறைப்பது' போன்ற வேறு முறைகளையும் போலச் சிறப்பு டெப்பாசிட்டு முறையை வங்கியர் வெறுக்கவில்லை. இதை ராட்கிளிப் குழுவினரிடம் எடுத்துரைத்தனர். சிறப்பு டெப்பாசிட்டு முறை பொதுவாகச் செயல்படுகின்றது, தனித்து இயங்கவில்லை என்ற காரணத்தால் திரு. ராபர்ட்ஸ் (Mr. Roberts) அதைச் சிறந்ததென்றூர். 'அது கடன் முறையைப் பொதுவாக இயக்குகின்றது. இந்த வகையினருக்குக் கடனுதவி யளிக்காதே, இவர்களுக்கு உதவி கொடு என்று கூறவில்லை'.[3] இந்த முறையின் கட்டுப்பாட்டுக்குட்பட்டே வங்கியர் தம் தொழிலை நடத்தலாம். செலாவணி நெருக்கம் (credit squeeze) கொள்ளாத மேற்குறிப்பிட்ட நன்மையை இது கொண்டிருக்கின்றது.[4]

இங்கிலாந்து வங்கியும் விசேஷ டெப்பாசிட்டு முறையையே விரும்புகின்றது. ஏனெனில், மற்ற முறைகளை விட இது செலாவணிக் கொள்கையின் நோக்கங்களை நிறைவேற்றுகின்றது

[1] The Economist, 12 July 1958, pp. 141-2 Also The Banker August 1958, pp 496-506.

[2] Sir R. Hawtrey, The Banker's Magazine, August 1958, pp. 90-1.

[3] 13045, Radcliffe Committee, Vol. IV (Oral Evidences).

[4] 3055, Radcliffe Committee, Vol IV (Oral Evidences).

பிறவற்றுக்குள்ள குறைபாடுகளைத் தவிர்க்கின்றது. மற்ற முறைகள் அனைத்தும் கடினமாக உள. பன்னாட்டுத் தொழில் செய்யும் வங்கிகள் மீது கட்டாய முறையில் கட்டுப்பாடுகளைச் சுமத்துகின்றன. செலாவணி நிருவாகிகளுக்கும் வங்கிகளுக்கு மிடையே உள்ள சுமூக உறவைப் பாதிக்கின்றன.[1] இக் கருவியை அரசு நிதி திரட்டும் வழியாகப் பயன்படுத்தக் கூடாதென்று இங்கிலாந்து வங்கி வலியுறுத்தியுள்ளது.

ராட்கிளிப் குழுவினர் ரொக்க நிலை விகிதத்தை (liquidity ratio) நேரடியாக மாற்றும் வழியை ஒரு துணை முறையாக ஆதரித்த போதிலும் செலாவணி நிருவாகிகள் விசேஷ டெப்பாசிட்டு முறையையே விரும்பினர். ஏனெனில், இங்கிலாந்து வங்கியும், லண்டன் செக்குத் தீர்வக வங்கிகளும் மற்ற முறைகளை விட இதையே மிகக் குறைவாக வெறுத்தன.[2] வங்கிகளுள் கொடுக்கும் கடனைக் கட்டுப்படுத்துவதற்காக 1960ஆம் ஆண்டு ஏப்ரல்மீ 28ஆம் தேதி லண்டன் செக்குத் தீர்வ வங்கிகள் தம் டெப்பாசிட்டில் ஒரு சதவீதம் சிறப்பு டெப்பாசிட்டாகக் கொள்ள வேண்டும் என்று ஆணையிட்டனர். 1960ஜுன்23–ல் வங்கிவீதம் 5%-லிருந்து 6% ஆக உயர்ந்தபோது சிறப்பு டெப்பாசிட்டை 2% ஆக உயர்த்தினர். ராட்கிளிப் குழுவின் சிபாரிசுகள் வெளிவருவதற்கு முன் இக் கருவியைத் தற்காலிகமாகக் கையாளுவதாக அறிவித்தனர். ஆனால், குழுவினர் வேறு ஒரு முறையைப் பரிந்துரைத்த போதிலும், குழுவின் அறிக்கை வெளிவந்த பிறகு ஓராண்டுக்குள் இக் கருவியை எவ்வித முன்னறிவிப்புமின்றிப் பின்பற்றினர். மீண்டும் 1966, 67ஆம் ஆண்டுகளில் சிறப்பு டெப்பாசிட்டுக் கருவியைச் செலாவணிக் கட்டுப்பாட்டுக்காகப் பயன்படுத்தினர். ஒரு முறை சிறப்பு டெப்பாசிட்டு வீதம் 3% வரை உயர்ந்துவிட்டது. முதன் முதலில் இக் கருவியை அமல் செய்யும்போது வேறு வகை ஆணைக்குப் பதிலாக இதை அமல் செய்வதாகக் கூறியபோதிலும், பின்னர் அவ்வகை ஆணைகளையும் பிறப்பித்தனர். ஏனெனில், கடன் கொடுப்பதைக் குறைப்பதற்குப் பதிலாக அரசின் ஆணைகளை எதிர்த்து வங்கிகள் வழக்காடின.

**ஆஸ்திரேலிய சிறப்புக் கணக்கு முறை (Special Accounts System)**

ஆஸ்திரேலியச் சிறப்புக் கணக்கு முறை மாறும் காப்பு நிதியின் மற்றோர் வகையாகும். இம்முறைப்படி வர்த்தக வங்கி

[1] Memorandum of Evidence of the Bank of England. Radcliffe Committee, Vol. I, p. 41.

[2] Bank of England Bulletin, December 1962, p. 255.

களுடைய கூடுதல் டெப்பாசிட்டை மைய வங்கி கட்டுப்படுத்த லாம். டெப்பாசிட்டில் ஒரு சதவீதம் கட்டுப்பாட்டுக்குட்பட வேண்டும் என்று தீர்மானிக்கவில்லை. இரண்டாவது உலகப் போர்க் காலத்தில் நெருக்கடியான நேரத்தில் அமல் செய்த கட்டுப்பாடுகளுள் இது ஒன்றாகும். ஆனால், போர்க்கால நிலை யைச் சமாளிக்கப் பயன்படுத்தப்பட்ட கருவியானாலும் இதைச் சாதாரண நேரங்களிலும் பயன்படுத்தலாம். ஆஸ்திரேலிய மைய வங்கி, வர்த்தக வங்கிகள் வசமுள்ள நிதியில் ஒரு பகுதியைத் தன்னிடம் முடக்கி வைக்குமாறு பணிக்கலாம். இதனால் வர்த்தக வங்கிகள் கொடுக்கும் வங்கிக் கடன் தொகை குறையும். ஒவ் வொரு வர்த்தக வங்கியும் மைய வங்கியிடம் ஒரு சிறப்புக் கணக்கை வைத்துக்கொள்ள வேண்டும். ஆஸ்திரேலிய வங்கிச் சட்டம் (1945—53) வகுத்துள்ள எல்லைகளுக்குட்பட்டு எவ்வளவு தொகையைச் சிறப்புக் கணக்கில் வைத்துக்கொள்ள வேண்டும் என்பதை மைய வங்கி நிர்ணயம் செய்யலாம். இவ்வாறு மைய வங்கி நிர்ணயம் செய்யும் தொகை வர்த்தக வங்கிகளின் டெப்பாசிட்டுடன் தொடர்பு கொண்டிருந்தது. பொதுவாகப் பார்க்கும்போது வங்கிகளுடைய டெப்பாசிட்டுகள் கூடினாலோ. குறைந்தாலோ அதற்குத் தகுந்தவாறு 75% வரை சிறப்பு டெப்பாசிட்டுத் தொகையை மாற்றலாம். மைய வங்கி தன் அதிகாரம் முழுவதையும் பயன்படுத்திச் சிறப்புத் தொகை முழு வதையும் அழைக்காமல், 'அழையாப் பொறுப்பை' (uncalled liability) வைத்துக் கொள்ளலாம். ஏராளமாக அழையாப் பகுதி இருப்பதை ஆஸ்திரேலிய வர்த்தக வங்கிகள் தம்மை எதிர் நோக்கியுள்ள ஆபத்தெனக் கருதின. இக் கருவி மூலம் மைய வங்கி வர்த்தக வங்கிகளை நிலைகுலைத்துவிடலாம் என்று அவை கருதின. 1953ஆம் ஆண்டு நிறைவேறிய சட்டப்படி, 'அழை யாப் பொறுப்பினை' அழைக்கும் அதிகாரத்திற்கு ஒரு வரம்பு ஏற் பட்டது. ஆண்டுதோறும் பெருகும் 'இவ்வழையாப் பொறுப்பு' வங்கிகளின் மொத்த டெப்பாசிட்டில் 10%-க்கு மேற்படக் கூடாது. விசேஷக் கணக்கிலுள்ள தொகைக்கு வட்டியுண்டு. இந்த வீதம் எல்லா வங்கிகளுக்கும் ஒன்றாகவே இருக்கும். இதை மைய வங்கி அவ்வப்போது அரசுடன் கலந்தாலோசித்து நிர்ணயம் செய்யும்.

சிறப்புக் கணக்கு முறையை ஆளுவதில் பல படிவங்கள் ஏற் பட்டன. ஒவ்வொரு படிவத்திலும் இருந்த விசேஷ நிலைக்கேற்ற வாறு இக் கருவியை அமைத்தனர். இக் கருவியை ஏராளமான நெகிழ்வுடன் அமைத்தனர்.

அண்மைக் காலம் வரை ஆஸ்திரேலிய வர்த்தக வங்கிகள் ஆங்கில வங்கிகள்போல் ரொக்க விகிதம் (liquidity) கொள்வதை ஒரு வழக்கமாகப் பின்பற்றவில்லை. 1956-ல் இவை ஒரு பொதுவான ரொக்க விகிதத்தை வைத்துக்கொள்ள ஒப்புக் கொண்டன. இந்த ரொக்க விகிதமும் அவை கொண்டுள்ள அரசு பத்திரங்களும் அவைகளுடைய டெப்பாசிட்டுகளில் ஒரு சதவீதமாக இருந்தன. ஒவ்வொரு வங்கியும் கொண்டுள்ள ரொக்க விகிதமும் அரசு பத்திரமும் ஒரு குறைந்தபட்ச நிலையை மீறுமல் பார்த்துக் கொள்ள அவை ஒப்புக்கொண்டன. குறைந்தபட்ச ரொக்க விகிதம் பற்றிய ஒப்பந்தம் ஏற்படுவதற்குமுன் சிறப்புக் கணக்குத் தொகையை நிருவாகம் செய்வதில் ஒரு நிச்சயமற்ற நிலை இருந்தது. போர்ப் பிற்கால ஆண்டுகளில் வங்கி முறையின் ரொக்கநிலை மிகுதியாக இருந்தது. வங்கிக் கடனுக்கு ஏராளமான தேவை இருந்தது. இந் நிலையில் வர்த்தக வங்கிகள் தாம் கொள்ளவேண்டிய அரசு பத்திர அளவைக் குறைக்கலாம். ரொக்க நிலை பாதிக்கப்படாமல் இதைச் செய்யலாம். இவ்வாறு சிறப்புக் கணக்கு முறையின் விளைவுகளை வர்த்தக வங்கிகள் தவிர்க்சலாம். இந்த நிலையில் சிறப்புக் கணக்கு முறையில் வங்கிகளின் இயக்கம் நிச்சயமற்றிருந்தது. இந்நிலையில் வர்த்தக வங்கிகளுடைய ரொக்க நிலையைத் தாழ்த்தும் வகையில் சிறப்புக் கணக்கு முறையை அமல் செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டது. ரொக்க நிலையில் ஏற்படும் பருவகால மாற்றங்களையும் சுழற்சியின் காரணமாக விளையும் மாற்றங்களையும் சரிக்கட்டுவதற்குச் சிறப்புக் கணக்கு முறையைப் பின்பற்றினர். அயல் நாட்டுச் செலுத்து நிலையின் விளைவாக நிகழும் அடிப்படை ரொக்கநிலை மாறுதல்களை ஒழுங்கு படுத்துவதற்காக விசேஷக் கணக்கு முறையைக் கையாளவேண்டும் என்று காமன்வெல்த் வங்கி (Commonwealth Bank) தன் அறிக்கைகளில் எடுத்துரைத்தது. வர்த்தக வங்கிகளுடன் நடத்திய பேச்சு வார்த்தைகளிலும் இதே கருத்து வெளியிடப்பட்டது. குறைந்தபட்ச ரொக்கநிலை பற்றிய ஒப்பந்தம் ஏற்பட்ட பிறகு வங்கி முறை அரசு பத்திரங்களுக்குப் பதிலாகத் தனியாருக்குக் கடன் கொடுக்க முடியாது. ஆனால், சிறப்புக் கணக்கு முறையும் குறைந்தபட்ச அரசு பத்திரங்களுடன் கூடிய ரொக்க நிலையும் பிரச்சினைகளை முழுமையாகத் தீர்க்கவில்லை. பருவகாலப் பெயர்ச்சியின் (seasonal movements) விளைவுகளைத் தனிவங்கிகள் தரமாகச் சீர்தூக்கிப் பார்க்கவேண்டும். பருவகால மாற்றங்கள் கணிசமாகவும் நிச்சயமற்றும் இருந்தன. ஆகையால் அவை பொருளாதாரத்தின் அடிப்படைப் போக்குகளை மறைத்தன. மேலும் ஆஸ்திரேலியாவில் மைய வங்கியின் கட்டுப்பாடுகளின் விளைவாக

வங்கிக் கடன் தாமதித்துச் சிறிதளவே குறைந்தது. இதற்குக் காரணம் கட்டுப்பாடுகள் தாமதித்து அமலில் வந்தன. வர்த்தக வங்கிகளின்மீது கட்டுப்பாடுகள் செயல்பட்டன. மேலும் கடன் கொடுக்கும் சக்தி ஓரளவு உபரியாகவும், பயன்படுத்தப்படாமலும் இருந்தது.[1]

சிறப்புக் கணக்குமுறைக்கும், மாறும் காப்புத் தொகைக்கும் இடையே உள்ள வேறுபாடு உண்மையானது என்பதைவிடத் தோற்றமளித்தவையே என்றே கூறலாம். 'அழையாப் பொறுப்பை' மைய வங்கி அழைக்கும் அதிகாரத்தைப் பெடரல் ரிசர்வ் முறையின் அதிகாரத்துடன் ஒப்பிடுவதைவிட, நியூ ஜிலாந்து ரிசர்வ் வங்கியின் வரம்பற்ற அதிகாரத்துடன் ஒப்பிடலாம். வர்த்தக வங்கிகளுடைய ரொக்கநிலை மாற்றங்களைக் கணிசமான அளவு ஒழுங்குபடுத்துவதற்கு இக் கருவியை ஆளலாம். இம் மாற்றங்களை முழுதும் சரிக்கட்ட முடியாவிடினும் பெருமளவு முன்னறிவிப்பின்றி, 'அழையாப் பொறுப்புகளை' அழைப்பதன் மூலம் இதைச் செய்யலாம். சிறப்புக் கணக்கு முறைக்கும், மாறும் காப்பு விகிதத்திற்கும் இடையே ஒரு முக்கியமான வேறுபாடு இருக்கின்றது. சிறப்புக் கணக்கு முறைப்படி மைய வங்கி உபரிக் கணக்குகளைக் கொள்ளுமாறு சில வங்கிகளைப் பணிக்கலாம். மற்றவைகளை இக் கட்டுப்பாட்டிலிருந்து விடுவிக்கலாம். ஆனால், மாறும் காப்பு விகிதம் ஒரு பொதுவான கட்டுப்பாட்டுக் கருவி. எல்லா வங்கிகளுக்கும் ஒரே விதத்தில் பொருந்தும். ஆஸ்திரேலியாவில் அண்மைக் காலம் வரை ஒரே ரொக்க விகிதத்தை எல்லா வங்கிகளும் வைத்துக் கொள்ளவில்லை. இந்த நிலையில் வெவ்வேறு வங்கிகளுக்கு வெவ்வேறு காப்பு விகிதத்தை நிர்ணயம் செய்வது நல்லதெனக் கருதினர். ஆனால், நடைமுறையில் மைய வங்கி வர்த்தக வங்கிகளைச் சிறப்புக் கணக்கில் டெப்பாசிட்டுகள் வைத்துக்கொள்ள அழைக்கும்போது, ஒரே தொகையை எல்லாவற்றிற்கும் நிர்ணயம் செய்ய வேண்டியதாயிற்று. 1953-க்கு முன் ரொக்கச் சொத்துகளையும், சிறப்புக் கணக்குகளையும் சேர்த்த கூட்டுத்தொகை, எல்லா வங்கிகளுக்கும் சரிசமமாக இருக்க ஏற்பாடு செய்தது. 1953-க்குப் பிறகு சிறப்புக் கணக்குத் தொகை எல்லா வங்கிகளுக்கும் சமமாக இருக்குமாறு செய்ய முயன்றது. காப்பு நிதி சமமாக இருத்தல் வேண்டும் என்ற விதிக்கு இது நிகரானது.

வர்த்தக வங்கிகளின் ஒத்துழைப்பு இல்லையேல் சிறப்புக் கணக்கு முறை ஒரு செம்மையான செலாவணிக் கட்டுப்பாட்டுக்

[1] H. W. Arndt, The Australian Trading Banks, pp. 166-72.

கருவியாக இயங்காது என்பதைக் காமன்வெல்த் வங்கியின் அனுபவம் புலப்படுத்தியது. ஒரு நிலையில் காமன்வெல்த் வங்கி இக் கருவியைக் கையாள அதிகாரத்தைப் பயன்படுத்தாமல், வர்த்தக வங்கிகளின் ஒத்துழைப்பை நாடியது. ஆனால், ஒத்துழைப்பின் வாயிலாக மைய வங்கி முறையை வளர்க்கச் செய்த முயற்சி பலனளிக்கவில்லை. வர்த்தக வங்கிகள் மைய வங்கிக் கட்டுப்பாட்டை ஏற்கவில்லை. சில சிறந்த செலாவணிக் கொள்கை பற்றிய தம் கருத்துகளே மைய வங்கியின் கருத்துகளை விடச் சிறந்தவை என்று கருதின. அவை மைய வங்கியின் சிறப்புக் கணக்கு முறையைக் குறை கூறின. இம்முறை ஒரு நிச்சய மற்ற நிலையை உருவாக்கியது; திடீரென 'சிறப்புத் தொகை அழைப்புகள்' வந்தன. இவை கடுமையாகவும் இருந்தன, தீய விளைவுகளை ஏற்படுத்தின என்று குறை கூறின.[1]

சிறப்புக் கணக்கு முறை வங்கிகளின் ரொக்க நிலையை நேரடியாகக் கட்டுப்படுத்தும் கருவியாகப் பயன்படுகின்றது என்று முடிவாகக் கூறலாம். பணச் சுருக்கத்தை முறியடிக்கும் கருவியாக இது செயல்பட்டது என்பதையும், பணவீக்கத்தைக் கட்டுப்படுத்தும் கருவியாக இது சரிவரச் செயல்படவில்லை என்பதையும் காமன்வெல்த் வங்கியின் அனுபவம் புலப்படுத்தியது.

1959ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் காமன்வெல்த் பார்லிமென்ட் ஒரு வங்கிச் சட்டத்தை (Banking legislation) இயற்றியது. இதன்படி சிறப்புக் கணக்கு முறை நீங்கி அதன் இடத்தில் புதிய சட்டபூர்வக் காப்பு முறை அமலில் வந்தது. காமன்வெல்த் வங்கி நிலையங்களிலிருந்து மைய வங்கியைப் பிரித்து அதைக் கிராமப்புறக் கடன் துறைகளுடன் (rural credit departments) இணைத்து ஆஸ்திரேலியாவின் ரிசர்வ் வங்கியாக நிறுவினர்.[2] சிறப்புக் கணக்கு முறையை விடுத்து அவ்வப்போது ரிசர்வ் வங்கி நிர்ணயம் செய்யும் சட்டபூர்வ டெப்பாசிட்டு முறையைப் பின்பற்றியது, பெயரளவு மாற்றமேயாகும், ஒரு முக்கிய மாறுதலன்று.

### மாறும் ரொக்கநிலைச் சொத்து விகிதம் (Variable Reserve Ratio)

காப்பு நிலையில் நிகழும் மாறுதல்கள் மைய வங்கியில் வர்த்தக வங்கிகள் கொண்டுள்ள ரொக்கக் காப்புக்கு மட்டுமே உரியதாக

[1] Bank of New South Wales Review, May 1957.

[2] Report and Balance Sheet of the Commonwealth Bank of Australia, 30 June, 1959. See also Hans Aufricht, Central Banking Legislation (Australia), p. 48.

இருக்க வேண்டுமா அல்லது ரொக்கநிலைச் சொத்துகளுக்கும் உரியதாக இருக்க வேண்டுமா என்பது பற்றிய கருத்து வேற்றுமைகள் உள. இது பற்றிய குறிப்பொன்றை இங்குக் கொடுக்காமல் நமது கருத்துகளை முற்றுப்பெறச் செய்ய முடியாது. அதாவது, மாறும் ரொக்கச் சொத்து விகிதம் நேர்த்தியானதா, அல்லது மாறும் ரொக்க விகிதம் நேர்த்தியானதா—இரண்டனுள் எது மற்றதைவிடச் சிறந்த கருவி என்பது பிரச்சினை. வளர்ச்சியடையும் ஆப்பிரிக்க நாடுகளில் சில, முன்னர்க் குறிப்பிட்டுள்ளபடி வர்த்தக வங்கிகள் கொள்ள வேண்டிய ரொக்கநிலைச் சொத்துகளை வரையறுக்கலாம். குறிப்பிட்ட தொகை மதிப்புள்ள சில குறிப்பிட்ட ரொக்கநிலைச் சொத்துகளைத் தம் டெப்பாசிட்டுகளில் ஒரு விகிதமாக அவை கொள்ளவேண்டுமென்று மைய வங்கி ஆணையிடலாம். சில நாடுகளில் மைய வங்கி நிர்ணயம் செய்யும் இத்தகைய காப்பு நிதிக்கு எல்லைகள் உள. உதாரணமாக நைஜீரியா, கானா, லிபியா நாடுகளின் மைய வங்கிகள் எத்தகைய சொத்துகளை எந்த விகிதங்களில் வைத்துக்கொள்ள வேண்டும் என்பதை முடிவு செய்யலாம். தென் ரொடிசிய நாட்டில் மாற்றத்திற்குரிய 3 வகை டெப்பாசிட்டுகள் உள. பொதுமக்களின் பற்பல டெப்பாசிட்டுத் தொகைகளில் குறிப்பிட்ட விகிதங்களை வர்த்தக வங்கிகள் மைய வங்கியில் காப்பாகக் கொள்ள வேண்டும். இவற்றை மைய வங்கி அவ்வப்போது நிர்ணயம் செய்யலாம், மாற்றலாம். இரண்டாவதாக வர்த்தக வங்கிகளின் கடன் தொகைகளிலும் அவை தள்ளுபடி செய்த உண்டியல்களிலும் ஒரு விகிதத்திற்கு நிகரான தொகையைக் கூடுதல் காப்பாக வைத்துக்கொள்ள உத்தரவிடலாம். மூன்றாவதாக மைய வங்கிகள் குறைந்தபட்ச ரொக்கநிலைச் சொத்துகளை மாற்றலாம். ஆனால், இவை 25%-க்குக் குறைவாக இருக்கக் கூடாது.[1]

மாறும் ரொக்கநிலைச் சொத்து ஒரு செம்மையான செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவியாக இயங்குவதற்குச் சில இடையூறுகள் உள. ரொக்கநிலைச் சொத்துகளைக் கவனமாகத் தேர்ந்தெடுக்க வேண்டும். உதாரணமாக மற்ற வங்கிகளிலும், தலைமை அலுவலகத்திலும் கொண்டிருக்கும் டெப்பாசிட்டுகளை 'நிகர' ரொக்கநிலைச் சொத்துகளாகக் கணக்கிடவேண்டும் என்ற கட்டாயம் இல்லையெனில் வங்கிகள் கணக்குகளை வைத்துக்

[1] The Central Bank of Nigeria Act, 1962. Art. 40 (1) & (3). The Central Bank of Ghana Act, 1963. Art. 29 (1): Banking Law of Libya, Feb. 5, 1963. Art. 36; and The Reserve Bank of Rhodesia Act, 1964. Art. 22 (1) – (7). See also S. K. Basu, 'Central Banking in the Emerging Countries, pp. 114–15.

கொள்ளும் வகையில் காப்புத் தொகையைக் கூட்டிக் காட்டலாம். இதனால் இக் கருவியில் குறைபாடு நிறைந்திருக்கின்றது. இக் குறையை நீக்குவதற்காகச் சில ஆப்பிரிக்க நாடுகளில் சட்டத் திருத்தங்களைச் செய்தனர். இக் குறை நீங்கிய பிறகும் வேறு சில பிரச்சினைகள் எழுந்தன. உதாரணமாக, அரசினர் ரொக்கநிலைச் சொத்து விகிதத்தை உயர்த்துமாறு கேட்டுக்கொள்ளலாம். இவ்வாறு செய்தால் அதிக அளவில் கருவூல உண்டியல்களை வைத்துக்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும்.

இக் குறைபாடுகளுக்குக் காரணம் சட்டம் சரிவர அமைய வில்லை. எனினும், மாறும் ரொக்க விகிதத்தைவிட இக் கருவி சில நன்மைகளைக் கொண்டிருக்கின்றது. ரொக்க விகிதக் கருவியைப் போல் இக் கருவியும் (ரொக்கநிலைச் சொத்து விகிதம்) சாதாரண வங்கிகளின் இலாபம் ஈட்டும் சக்தியைப் பாதிக்கவில்லை. மைய வங்கியில் கொண்டுள்ள ரொக்கக் காப்பு வருமானம் ஈட்டாத சொத்து; அவைகளுக்கு வட்டி கொடுப்பதில்லை. கைவசமுள்ள ரொக்கமும் வருமானம் ஈட்டாத சொத்தாகும். ரொக்கநிலைச் சொத்து விகித முறையிலும், கைவசமுள்ள ரொக்கமும், செக்குத் தீர்வக வழிவரும் தொகைகளும் வருமானம் ஈட்டா. இதிலுள்ள பிற ரொக்கநிலைச் சொத்துகள் வருமானம் கொடுக்கும்.

அயல் நாட்டுப் பண மார்க்கட்டைச் சார்ந்துள்ள வங்கி முறைக்கு ரொக்க விகிதத்தைவிட, ரொக்கநிலைச் சொத்து விகிதமே உகந்ததென்று திரு. நியூலின் அண்மையில் ஒரு கட்டுரையில் தெரிவித்தார்.[1] அன்னியச் செலாவணிக் கட்டுப்பாடு (exchange control) இல்லாவிடில் தம் தாயகத்திலுள்ள தலைமை யலுவலகம் மூலம் அங்குள்ள பண மார்க்கட்டை அணுகலாம். இவ்வாறு செய்து ரொக்க விகிதக் கட்டுப்பாட்டை முறியடிக்கலாம். இந்த ரொக்கநிலைச் சொத்துக் கருவியும் அதிகப் பலனைக் கொடுக்காது. ஏனெனில், ரொக்க விகிதத்தின்கீழ், அயல் நாட்டிலிருந்து வரும் தொகையில் ஒரு பகுதி மைய வங்கியில் வருமானம் ஈட்டாத பகுதியில் சேரும். ஆனால், ரொக்கநிலைச் சொத்து முறையின்கீழ் வெளி நாட்டிலிருந்து வரும் தொகை முழுவதும் வருமானம் ஈட்டாத பகுதியில் முடங்காது. அவை ஓரளவு வருமானம் ஈட்டும். மேலும் ஏற்கவல்ல உண்டியல்கள் (eligible bills) ரொக்கநிலைச் சொத்தில் இடம் பெற்றால் (இது சாதாரண வழக்கம்) நேரடிக் கடன் கொடுப்பதைக் காட்டிலும் உண்டியல் தள்ளுபடியை வங்கிகள் நாடலாம். இதன்மூலம் மைய வங்கித்

[1] W. T. Newlyn, 'Monetary Developments in Eastern Africa III, Bankers' Magazine, May 1967, p. 311.

கட்டுப்பாட்டிலிருந்து நழுவலாம். திரு. ப்ரௌன் (Brown) கூறியுள்ளபடி மைய வங்கி ரொக்கநிலைச் சொத்து விகிதத்தை உயர்த்தும்போது, வங்கிகள் வெளிநாட்டிலுள்ள தம் தலைமையலுவலகங்களிலிருந்து நிதி திரட்டுவது தடையாக வேண்டும்.[1] ரொக்கநிலைச் சொத்துகளின் உச்ச வரம்பு தாழ்ந்திருக்கும்போது மட்டுமே இக் கருவி திறமையற்றிருக்கும்.

முடிவாகக் கூறும்போது விகிதங்கள் முன்னர்க் கொண்டிருந்த முக்கியத்துவம் இப்பொழுது குறைந்துவிட்டது என்றும், அது முன்போல் செலாவணி-வங்கி முறையின் நிலையைக் காட்டுவதில்லை என்றும் குறிப்பிடலாம். இன்று வேண்டிய அளவு செலாவணியளிப்பதும் வங்கி முறையின் பாதுகாப்பும் பெரிய பிரச்சினைகளல்ல. வங்கிகளை ஒத்த மற்ற நிலையங்கள் (near banks) இருப்பதால், சூழ்நிலை மாறிக்கொண்டே வருகின்றது. இப்போது புதிய விகிதங்களை-மொத்த நாட்டு உற்பத்தியில் (G. N. P.) டெப்பாசிட்டின் பகுதி, வங்கிக் கடன் பகுதி போன்றவைகளை நாம் கவனிக்க வேண்டும். பொருளாதார நடவடிக்கைகளில் வங்கிகளின் பங்கையும் கவனிக்க வேண்டும்.[2]

[1] C. V. Brown in 'Fffective Monetary Control in Developing Countries—African Experience,' Bankers, Magazine, October 1968, p. 214.

[2] J. E. Wadworth, 'Banking Ratios Past and Present' in Essays in honour of R. S. Sayers, p. 251.

# 9. தேர்வுச் செலாவணிக் கட்டுப் பாட்டுக் கருவிகள்

## (Instruments of Selective Credit Control)

இரு உலகப் போருக்கிடையே உள்ள காலத்தில் மைய வங்கிகள் செலாவணி நிருவாகத்திற்குக் கடன் தொகையின் அளிப்பையும் அதற்கான அடக்கச் செலவையும் கட்டுப்படுத்தும் கருவியையே பெரும்பாலும் நம்பின. இதுகாறும் குறுகியகால வட்டி வீதத்தை மாற்றிக் கட்டுப்பாட்டைச் செயல்படுத்தின ஆனால். இப்பொழுது தற்காலச் செலாவணிக் கோட்பாட்டுக் கேற்ப நீண்டகால வீதங்களைக் கண்காணிக்க முயற்சி செய்கின்றனர். இவ்வாறு குறுகியகால வீதக் கட்டுப்பாட்டி லிருந்து நீண்டகால வீதக் கட்டுப்பாட்டுக்குக் கவனத்தைத் திருப்பினர். மந்தத்தின்போது நீண்டகால வீதத்தைக் கண் காணித்தல் மைய வங்கியின் தலையாய பொறுப்பாயிற்று. குறை வான நீண்டகால வீதத்தை நிலைநாட்டுவது அதன் பொறுப் பாயிற்று. நீண்டகால வீதம் தாழ்ந்திருந்தால் மூலதனப் பெருக்கத் திற்கு ஊக்கம் ஏற்படுகின்றது. ஆனால், பொருளாதாரத்தின் சில பகுதிகளில் இதனால் தீய விளைவுகள் ஏற்படும் என்பதை உணர்ந் தனர். இவ்வாறு சில பகுதிகளில் வெறுக்கத்தக்க விளைவுகள் ஏற்படுவதைத் தடுக்கவே மைய வங்கி அப் பகுதிகளைக் கண் காணிக்க விரும்பின. எனவே, பொதுக் கட்டுப்பாடுகளை விடுத்துத் தேர்வுக் கட்டுப்பாடுகளைக் கையாள விரும்பினர். தாழ்வான நீண்டகால வீதத்திற்கு இது ஒரு துணையக் கருவியாகச் செயல்பட்டது.[1]

வங்கி வீதம், வெளி மார்க்கட்டுக் கொள்கை, மாறும் காப்பு விகிதம் முதலிய பொதுக் கட்டுப்பாடுகள், பொருளாதாரத்தி லியங்கும் கடன் தொகை முழுவதையும் கட்டுப்படுத்துகின்றன. தேர்வுக் கட்டுப்பாடுகள் குறிப்பிட்ட பொருளாதாரப் பகுதியையே கண்காணிக்கின்றன. இவை இதனால் பொதுக் கட்டுப்பாடுகளி லிருந்து வேறுபட்டுள்ளன. இப் பகுதியோ அல்லது இதற்காக

[1] R. S. Sayers, 'Central Banking in the light of recent British and American experience, in Quarterly Journal of economics, May 1949.

செலவாகும் கடன் தொகையோ முக்கியத்துவம் கொண்டிருக்கின்றது. இக் கடனைக் கட்டுப்படுத்தவோ இதன் மீதுள்ள கட்டுப்பாட்டைத் தளர்த்தவோ அவசியம் ஏற்படுகின்றது. எல்லாப் பகுதிகளுக்கும் இத்தகைய கட்டுப்பாடுகள் அவசியமில்லை. தேர்வுச் செலாவணிக் கட்டுப்பாட்டின் மற்ருேர் இயல்பும் இருக்கின்றது. இது கடன் கொடுப்போரை நேரடியாகக் கண்காணித்தபோதிலும் கடன் வாங்குவோரும் கட்டுப்பாட்டுக்குட்பட்டனர். கடன் வாங்குவோர் அளிக்கும் துணையீட்டுப் பொருளின் (collateral) தன்மையும் மதிப்பும் கடன் அளவை நிர்ணயம் செய்யும்.[1] இவ்விதத்தில் தேர்வுக் கட்டுப்பாடுகள் மற்ற தரக் கட்டுப்பாடுகளிலிருந்து (qualitative controls) அறிவுரை (moral suasion), எச்சரிக்கை, கட்டளை, நேரடி நடவடிக்கை, புள்ளி விவரப் பிரசுரம், சில பத்திரங்களைத் தள்ளுபடி செய்ய மறுத்தல் — போன்றவைகளிலிருந்து வேறுபட்டிருக்கின்றன. இவை கடன் கொடுத்தலைக் கட்டுப்படுத்தும்; அதன் தேவைகளை எவ்வகையிலும் பாதியா. கடன் கொடுத்தலில் ஆங்காங்கே உள்ள ஸ்திரமின்மையைக் கட்டுப்படுத்த வேண்டுமென்ற தற்காலக் கருத்தைத் தேர்வுக் கட்டுப்பாடு அடிப்படையாகக் கொண்டிருக்கின்றது. 'கடன் கொடுப்பதிலுள்ள சர்வாதீனம் (monopoly) பாகுபாட்டுச் சர்வாதீனமாக இருத்தல் வேண்டும்.'[2]

தேர்வுமுறைக்கப்பாற்பட்ட பழைய முறையில் கொண்டிருந்த நம்பிக்கையைப் பல நிகழ்ச்சிகள் பாதித்தன. மந்தத்தில் பொதுக் கட்டுப்பாடுகளை மட்டும் கையாண்டால் செலாவணிக் கொள்கை பெரிதும் பாதிக்கப்படும் என்பதை உணர்ந்தனர். மக்கள் மனநிலையின் காரணமாக அவை அதிக வலிமை பெறக்கூடும். சிறிதளவு ஆண்டாலும் அவை பொருளாதார வீழ்ச்சியை விளைவிக்கலாம். போர்க் காலத்திலும் அதை அடுத்து வந்த ஆண்டுகளிலும் பழைய கருவிகளைக் கையாளுவதில் மேலும் சிக்கல்கள் நிகழ்ந்தன. போரில் ஈடுபட்ட எல்லா நாடுகளிலும் பொதுக் கடன் பெருகிற்று. வங்கியரும் மற்ற நிலையங்களும் இதன் விளைவாக ஏற்பட்ட பத்திரங்களை ஏராளமாகக் கொண்டிருந்தனர். வட்டிவீதங்கள் மிக அதிகமாக வேறுபட்டால் பல்வகைத் தவணைப் பத்திரங்கள் பெரிதும் பாதிக்கப்படும். மேலும், வட்டி வீத வேறுபாடுகள் அரசு பத்திர விலைகளையும் பொதுக் கடன் நிருவாகச் செலவுகளையும், வங்கியரும் மற்றவரும் கொண்டிருக்

[1] 'Federal Reserve Policy' by the Board of Governors of the Federal Reserve System (C. E. Parry, 'Selective Instruments of National Credit Policy', p. 65, p. 70).

[2] J. S. Fforde, 'The Federal Reserve System', 1945-49, p. 109.

கும் சொத்துகளின் மூல மதிப்பையும் (capital value) பாதிக்கும்; ஆகையால் இவை தவிர்க்கப்பட வேண்டும். மைய வங்கியர் ஒரு வகை வட்டிவீதங்களை நிலைநாட்ட வேண்டும் சிறப்பீட்டுப் பத்திர (gilt edged) விலையைப் பாதுகாக்க வேண்டும். ஏராளமான அரசுப் பத்திரங்களை மைய வங்கிகளும் வர்த்தக வங்கிகளும் வாங்கின. சிறப்பீட்டுப் பத்திர மார்க்கட்டுக்குப் பாதுகாப்புக் கொடுத்தனர்; வட்டிவீத அமைப்புகளை நிர்ணயம் செய்தனர். இக் காரணங்களால் வங்கிவீதம், வெளி மார்க்கட்டு நடவடிக்கை, மாறும் காப்பு விகிதம் மூலமாக அளவுக் கட்டுப்பாடுகளை அமல் செய்ய இயலாத நிலை ஏற்பட்டது. மைய வங்கி கடனை ஆக்க வேண்டுமா அல்லது அழிக்க வேண்டுமா என்பதை இதுகாறும் மைய வங்கியே நிர்ணயம் செய்தது. இப் பொறுப்பு இப்பொழுது வர்த்தக வங்கிளிடம் சென்றுவிட்டது. வர்த்தக வங்கிகள் உபரித் தொகையைக் கொண்டிருக்கும்போது, குறிப்பிட்ட பத்திரத்தை முதலீட்டுக்காக நாடலாம். இது மார்க்கட்டில் கிடைக்காவிடில் மைய வங்கியே இதை இறுதியில் விற்பனை செய்யவேண்டி வரும். மாக்கட்டில் நிலவும் விலையில் வர்த்தக வங்கிகள் தம்மிடமுள்ள பத்திரங்களை விற்பனை செய்ய முடியாவிட்டால், அவைகளை மைய வங்கியே வாங்க வேண்டும்.[1] அளவுக் கட்டுப்பாடுகள் (quantitative controls) சாத்தியமற்றவையாகிவிட்டன. கடன் செலாவணியாக்கம், அதன் சுருக்கம் போன்ற செயல்களைத் தொடங்குவது மைய வங்கியரிடமிருந்து வர்த்தக வங்கிகளுக்கு மாறிவிட்டன. இந்த நிலையில் தேர்வுக் கட்டுப்பாடுகளில் ஓர் 'அக்கறையும்' 'பரிவும்' ஏற்பட்டன.

அண்மைக் காலத்தில் மைய வங்கியின் கட்டுப்பாட்டுத் திறன், கைவசமுள்ள கருவிகளைச் சேர்த்துக் கையாளுவதாலும் இதுகாறும் தெரியாத புதிய கருவிகளையும் பழைய கருவிகளுடன் இணைத்துப் பயன்படுத்துவதாலும் கூடியுள்ளது. 1920-30-ல் வங்கி வீதத்தை வெளி மார்க்கட்டுக் கொள்கையுடன் சேர்த்துக் கையாண்டனர். 1930-40-ல் மாறும் காப்பு விகிதம் ஒரு புதிய கருவியாக உருவாயிற்று. வெளி மார்க்கட்டு நடவடிக்கையையும், மாறும் காப்பு விகிதத்தையும் எதிர்காலத்தில் இணைத்துக் கையாளவேண்டுமென்று சிலர் பரிந்துரைத்தனர். இப் புதிய முறை (தேர்வுக் கட்டுப்பாடு) அளவுக் கட்டுப்பாடாகாது (quantitative control); தரக் கட்டுப்பாடும் (qualitative control) ஆகாது; இதைத் தேர்வுக் கட்டுப்பாடு என்றழைத்தனர். பற்பல

[1] Allan Sproul, 'Monetary Management and Credit Control', in 'American Economic Review', June 1947, pp. 344–5.

கட்டுப்பாட்டு முறைகளைச் சோதனை செய்யும் ஆய்வுக் கூடமாக இயங்கும் பெடரல் ரிசர்வ் முறை மட்டுமல்லாமல் மற்ற நாடுகளிலும் இம் முறை வளர்ந்துவந்தது. அமெரிக்கப் பத்திர மார்க்கட்டில் 1920-30-ல் உருவான நிகழ்ச்சிகளின் விளைவாக இத் தேர்வு முறை வளர்ச்சியடைந்தது. மந்த காலத்தில் பெடரல் ரிசர்வ் முறை துவக்கிய மலிவுச் செலாவணிக் கொள்கை (cheap money policy) மீட்சியைத் தூண்டும் நோக்கங் கொண்டிருந்தது. ஆனால், இது பலனளிக்கவில்லை. இதன் விளைவாக வர்த்தக வங்கிகள் உபரிக் காப்புத் தொகைகளைக் கொண்டிருந்தன. இந்த நிலையில் தேர்வுக் கட்டுப்பாடு முறை அமெரிக்காவில் ஊக்கம் பெற்றது. மார்க்கட்டின் சில பகுதிகளில் உபரித் தொகை இருப்பதையும், அரசு பத்திர மார்க்கட்டில் பற்றுக் குறை இருப்பதையும் நீக்குவதே போர்க்காலப் பிரச்சினையின் முக்கிய அம்சமாகும். அரசு பத்திர விலை மிகவும் சரிவதையும் பணவீக்கம் ஊக்கம் பெறுவதையும் தவிர்க்க வேண்டும். குறிப்பிட்ட பகுதிகளில் வெவ்வேறு அளவு பலனைக் கொடுக்கும் ஒரு முறையை உருவாக்க வேண்டியிருந்தது. அரசு பத்திர மார்க்கட்டு நீங்கலாக மற்றப் பகுதிகளில் உள்ள தொகைகளை ஈர்க்க வேண்டும் அல்லது ஊக வாணிகத்தை (speculation) நீக்க வேண்டும். ஆனால், கடன் செலாவணியின் அளவையும், அடக்கச் செலவையும் உயர்த்தாமலிருக்க வேண்டும். தக்க தேர்வுக் கட்டுப்பாடுகளே தேவைப்பட்டன.

இக் கருவியை முதன் முதலில் பங்கு மாற்று நிலையங்களுக்கு அளிக்கப்படும் கடனைக் கண்காணிக்கப் பயன்படுத்தினர். பங்கு மாற்று நிலையங்களின் ஊக வாணிகத்தைக் கட்டுப்படுத்த இதை முதன் முதலில் ஆண்டனர். வீக்ககாலம் முடிந்து 1929-31-ல் முரிவு (crash) ஏற்பட்ட பிறகு, 'ஒதுக்கும் பகுதியை'க் (margin requirements) கட்டுப்படுத்தி இக் கருவியைக் கையாண்டனர். போர்க்காலத்தில் நுகர்வோர் கடனை (consumer credit) இதன்மூலம் கட்டுப்படுத்தினர். அவசியமற்ற பண்டங்களுக்காகச் செய்யும் செலவை இதன்மூலம் கட்டுப்படுத்தினர். நுகர்வோர் பண்டங்களுள் நிலையானவற்றை (durable consumer goods) வாங்குவதற்காகப் பெறும் கடனைக் குறைத்தனர். கடன்களின் கால அளவும் குறைக்கப்பட்டது. பணத்தின் ரொக்கநிலைக் குறைவால் தேர்வுச் செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவியை உருவாக்க முடிந்தது என்றும், இதன்மூலம் குறிப்பிட்ட பகுதிகளில் கட்டுப்பாட்டை அமல் செய்ய முடியும் என்றும், எங்கும் ஒரே முறையில் இயங்கும் பொதுக் கட்டுப்பாடுகள் இதிலிருந்து வேறுபட்டிருக்கின்றன

என்றும் ஒரு நூலாசிரியர் குறிப்பிட்டுள்ளார்.[1] மைய வங்கியின் கட்டுப்பாட்டுக் கருவிகள் வலிமை கொள்ளவில்லை என்றும் பலர் குறிப்பிட்டுள்ளனர். சில சந்தர்ப்பங்களில் இவை மிக அதிக வலிமை பெறுவதால் இவைகளைத் தனியாகக் கையாள முடிவதில்லை. ஆகையால் மைய வங்கியின் கருவிகளைச் சரிவர இணைத்து ஆளவேண்டிய அவசியம் தெளிவாகின்றது.

## அமெரிக்கப் பெடரல் ரிசர்வ் முறையின் தேர்வுச் செலாவணிக் கட்டுப்பாட்டு வகைகள்

அமெரிக்காவில் தேர்வுச் செலாவணிக் கட்டுப்பாடு மூன்று முறைகளில் ஆளப்பட்டது. (1) பங்கு மாற்று நிலையத்திற்குக் கொடுக்கும் கடனின் ஒதுக்கும் பகுதியைக் (margin requirements) கண்காணித்தல். (2) நுகர்வோர் தவணைமுறைக் கடனின் ஒழுங்கு முறை. (3) அசையாச் சொத்துக் கடன் (real estate credit) ஒழுங்கு முறை. 1928-29-ல் பங்கு மாற்று நிலையத்தில் நடந்த ஊக வாணிகத்திற்கு வங்கிக் கடன் உதவியது. இதனால் பயங்கரமான விளைவுகள் நிகழ்ந்தன. இதை அடுத்துத் தேர்வுக் கட்டுப்பாட்டை அமல் செய்தனர். ஊக வாணிகத்திற்கு இத்தகைய முறையில் கடனளிக்கும் பழக்கத்தைத் தடைசெய்ய வேண்டும். பங்கு மாற்று நிலையங்களை ஒழுங்குபடுத்த ஒரு புதுக் கருவி தேவையாயிற்று. 1934-ல் பங்கு மாற்றுச் சட்டத்தை (Securities Exchange Act) இயற்றினர். பத்திரங்கள் வாங்கக் கொடுக்கும் இக் கடனைச் சட்டம் கட்டுப்படுத்தியது. 1934 அக்டோபரில் இதை அமல் செய்தனர். இதன்படி பத்திரம் வாங்கும் தரகர்களும் வியாபாரிகளும் வாங்கும் பத்திர மதிப்பில் ஒரு பகுதிக்கான தொகையைத் தம் சொந்த நிதியிலிருந்து அளிக்க வேண்டும். 1936-ல் பத்திரங்களுக்காக வங்கிகள் கொடுக்கும் கடன் தொகைகள் இச் சட்டத்திற்குட்பட்டன.[2] இது ஒரு தேர்வுக் கட்டுப்பாடாக இயங்கியது. ஏனெனில், வர்த்தகம், விவசாயம், தொழில் முதலியவைகளின் கடனுதவி பாதிக்கப்படாமல் ஊக வாணிகத்தை மட்டும் இதன் மூலம் கட்டுப்படுத்தினர்.

இதிலிருந்து அவ்வப்போது வேண்டிய அளவு பங்கு மாற்று நிலையக் கடன்களின் ஒதுக்கும் பகுதியை வேண்டிய அளவு கட்டுப்படுத்தினர்.[3]

[1] 'American Economic Review', March, 1944, pp. 274–5.

[2] 'Money and Banking' (League of Nations), Vol. I, 1937–8, pp. 40-1.

[3] 'Use of Monetary Instruments since mid - 1952', in 'Federal Reserve Bulletin', December 1954, pp. 1237–44.

அண்மையில் பெடரல் ரிசர்வ் குழு இக் கருவி மூலம் வரம்பற்ற ஊகவாணிகத்தைக் கட்டுப்படுத்தியது. முன்னர் அமெரிக்கப் பங்கு மாற்று நிலையங்களில் நடைபெற்ற ஊகவாணிகம் கட்டுப் படுத்தப்பட்டது. இந் நிலையத்தின் கடனைக் குறைப்பதால் கட்டுப் பாடு அமலாகின்றது. இரண்டாவது உலகப்போருக்குப் பின் இக் கடன் ஒரு பிலியன் டாலராகவும், அதற்கு முன் 1937-ல் உச்ச நிலையில் மூன்று பிலியன் டாலராகவும், 1929ஆம் ஆண் டின் உச்ச நிலையில் 12 பிலியன் டாலராகவும் இருந்தது. 'குழு வினர் அறிவித்த ஒதுக்கும் பகுதியின் குறிப்பிடத்தக்க விளைவா கப் பங்கு மாற்று நிலையக் கடன் தொடர்ந்து சென்ற ஆண்டின் இடைப் பகுதியிலிருந்து குறைந்தது. மார்க்கட்டு நடவடிக்கை கள் பெருகியபோதும் இக் குறைவு தொடர்ந்தது. இப்படி இது காறும் நிகழ்ந்ததில்லை' என்று இயக்குநர் அவைத்தலைவர் (Chairman of the Board of Governors) திரு. எக்ளீஸ் (Mr. Eccles) 1946-ல் (அக்டோபர் மீ) குறிப்பிட்டார்.[1]

அமெரிக்காவிலும் மற்ற நாடுகளிலும் நுகர்வோர் தவணைக் கடன் ஒழுங்கு முறை.

நுகர்வோர் தவணைக் கடனைக் கட்டுப்படுத்துவதற்கு அமெரிக் காவில் தேர்வுக் கட்டுப்பாட்டுக் கருவியை ஆண்டனர். தவணை முறையில் பொருள் வாங்குவதால் விளையும் வர்த்தகச் சுழலின் தீய விளைவுகள் பற்றிய விவாதங்கள் 1920-40-ல் அமெரிக்கா வில் சாதாரணமாக நடைபெற்றன. எனினும், நுகர்வோர் கடன் கட்டுப்பாடு விரும்பத்தக்கது என்பதை இரண்டாம் போர்க் காலத் திலேயே உணர்ந்தனர். போர்க்காலத்தில் இக் கட்டுப்பாட்டுக் குகந்த சூழ்நிலை உருவாயிற்று. 1949 ஆகஸ்டு 9-ல் பெடரல் ரிசர்வ் குழு விடுத்த ஆணை இக் கட்டுப்பாட்டுக்கு அதிகாரம் கொடுத்தது. நுகர்வோர் நிலையான பொருளின் தேவையைக் குறைப்பதே கட்டுப்பாட்டின் நோக்கம். இதன் பலனாக விடுபட்ட சாதனங்களைக்கொண்டு நாட்டுக்குத் தேவையான போர்க்கருவி களையும், தற்காப்புப் பண்டங்களையும் உற்பத்தி செய்ய வேண்டும். தற்காப்புப் பண்ட உற்பத்திக்கு மட்டுமல்லாமல் மற்றக் காரணங்களுக்காகவும் இக் கருவியை ஆண்டனர். இவை (1) சில பண்டங்களின் அளிப்புக் குறையும்போது, தேவை குறையாததால் ஏற்படும் அவசியமற்ற விலையுயர்வைத் தடுப்பது, (2) பண வீக்கத்தைப் பொதுவாகத் தடை செய்வது; விலையுயர்

[1] Address before the Sixteenth New England Bank Management Conference of the New England Council in Boston, 25 October 1946, 'Federal Reserve Bulletin', November 1946.

வைத் தடை செய்யும் வரிக்கொள்கை சேமிப்பை ஊக்குவிக்கும். இதனால் தற்காப்புத் திட்டம் வலுப்பெறும். இக்கருவி இக் கொள்கைக்குத் துணையாக இருக்கும். (3) நுகர்வோரின் நிலையான பொருளுக்கு வேண்டிய தேவை ஏற்படுத்துவது. (4) நுகர்வோர் போர்ப் பிற்காலத்தில் கடன் பளுவில் சிக்குவதால் பண்டங்களின் தேவை குறையும். இதைத் தவிர்த்தல்.

மே 1942-க்குப் பின், போர் உற்பத்திக் குழு (War Production Board) முக்கியமான பெரிய நுகர்வோருடைய நிலையான பண்ட உற்பத்தியைத் தடை செய்தது. இதற்குப் பிறகு போர்க் கருவி உற்பத்திக்காக இக் கருவி அமலாக வேண்டும் என்ற வாதம் பொருத்தமற்றுவிட்டது. ஆனால், மற்றக் காரணங்களால் இக் கருவியைப் பரவலாகவும் தீவிரமாகவும் கையாளவேண்டியிருந்தது. 1946-ல் பணவீக்கத்தின் கொடுமை நீடித்த போதிலும் இக் கட்டுப்பாட்டைத் தளர்த்தினர். இதற்குப் பிறகு இக் கட்டுப்பாட்டை நிரந்தரமாக அமலில் கொள்ளவேண்டுமென்று சிலர் வாதாடியபோதிலும், காங்கிரஸ் சபை நுகர்வோர் தவணை முறை வாங்கல் விலையுயர்வைத் தூண்டுகின்றது என்ற நிலை ஏற்படும்போது மட்டும் இக் கட்டுபாட்டைத் தற்காலிகமாக அமல் செய்து, பிறகு அவசியம் நீங்கியதும் நீக்கியது.

நல்ல வளர்ச்சிபெற்ற மேற்கு ஐரோப்பிய நாடுகளிலும் வளர்ச்சியடைந்துவரும் ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளிலும் நுகர்வோர் கடனைக் குறிப்பாகத் தவணைமுறை வாங்கல் கடனைக் கட்டுப்படுத்தியுள்ளனர். இக் கட்டுப்பாடு அமெரிக்காவிலுள்ள முறைக்கு மாறாக மற்ற நாடுகளில் அரசியலாரின் நேர்முக அதிகாரத்தின் கீழ் இருக்கின்றது. ஆனால், இது நிருவாக முறையிலுள்ள சிறிய வேறுபாடேயன்றிக் கட்டுப்பாட்டின் அடிப்படைத் தத்துவ வேறுபாடன்று. உதாரணமாகத் தவணை முறை வாங்கலின் தவணைக்காலம், முதலில் செலுத்தவேண்டிய ரொக்கம்பற்றிய வைகளை, இங்கிலாந்தில் அரசின் ஒரு நிருவாக யந்திரமாகிய வர்த்தகச் சபை (Board of Trade) அமல் செய்கின்றது. டென்மார்க், பிரான்ஸ், நியூஜிலாந்து, தென் ஆப்பிரிக்கா, பெல்ஜியம் போன்ற நாடுகளிலும் இத்தகைய நுகர்வோர் கடன் கட்டுப்பாடுகள் உள. உயர்ந்தபட்சம் தவணைக்காலம், குறைந்தபட்ச ரொக்கம் செலுத்தல் முதலிய கட்டுப்பாடுகளை ஸ்வீடன், ஆஸ்திரியா நாடுகளில் சட்டங்கள் மூலம் செயல்படுத்தவில்லை. இவை பற்றிய ஒப்பந்தங்களைக் கடன் கொடுப்போரும் நிருவாக அதிகாரிகளும் செய்துகொள்கின்றனர். ஆஸ்திரேலியாவில் தவணைக்காலம், குறைந்தபட்சத் தொகை செலுத்தல் பற்றிய

அரசாங்கக் கட்டுப்பாடுகள் கிடையா. தவணை முறையில் விற்பனை செய்யும் நிறுவனங்கள் 1955-ல் அரசியலாருடன் பேச்சுவார்த்தை நடத்தி ஒரு முடிவுக்கு வந்தன. இதன்படி குறைந்தபட்ச ரொக்கம் செலுத்தல், தவணைக்காலம் முதலியவை பற்றிய முடிவெடுத்தனர்.[1] பெரும்பாலான நாடுகளில் நுகர்வோர் கடன் நாட்டு வருமானத்தில் 2 அல்லது 3 சதவீதமாகவே இருக்கின்றது. அமெரிக்காவில் மட்டும் 8 சதவீதமாக இருக்கின்றது. ஆனல், இக் கடனின் அளவு பெருகிக்கொண்டே செல்வதால் நாட்டின் பொருளாதாரத்தின் ஸ்திரத்தன்மையைக் காக்க இக் கடனைக் கட்டுப்படுத்தவேண்டியதாயிற்று. 'வணிக வீதக் கட்டுப்பாடு' (terms of trade control) என்றழைக்கப்படும் இக் கட்டுப்பாடு இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் தவணை முறை வாங்கல் குறைவதற்குக் காரணமாக இருந்தது.

பொருளாதார வீக்கங்களையும் (booms) மந்தங்களையும் (slumps) கட்டுப்படுத்தும் நிரந்தரமான நுகர்வோர் கடன் கட்டுப்பாடுகள் இருக்கவேண்டும் என்று சிலர் கூறுகின்றனர். பொதுக் கடன் கட்டுப்பாடுகள் நுகர்வோர் கடனைக் கட்டுப்படுத்துவதில்லை என்பதை அண்மைக்கால அனுபவம் மெய்ப்பிக்கின்றது. இவை பலனளித்தபோதிலும்கூடக் காலதாமதத்துடனேதான் பலன் கொடுக்கின்றன. வட்டிவீத மாற்றம் நுகர்வோர் கடனின் தேவையைப் பாதிப்பதில்லை. எனவே, வட்டி வீதம் உயர்வதால் இக் கடனின் மொத்தத் தேவை குறைவதில்லை. பொதுக் கடன் கட்டுப்பாடுகள் நுகர்வோர் கடனைச் சரிவர, துரிதமாகக் கட்டுப்படுத்தாததால் தேர்வுச் செலாவணிக் கட்டுப்பாடுகளுக்குத் தேவை ஏற்படுகின்றது. இவை செலாவணிக் கொள்கைக்குத் தேவைப்படுகின்றன.

உறுதியான நுகர்வோர் பண்ட விற்பனைத் துறையில் தவணை முறை வாங்கலைத் தேர்வுக் கட்டுப்பாடுகள் இவ்வழியே கட்டுப்படுத்துகின்றன. தவணைக் காலத்தையும் முதலில் செலுத்த வேண்டிய ரொக்கத் தொகையையும் கண்காணிக்கின்றனர். நுகர்வோர் கடன் கட்டுப்பாடு பொருளாதார ஸ்திர நிலையைப் பேணும் நோக்கம் கொண்டது. இக் கட்டுப்பாடு பொருளாதார ஸ்திரத்தன்மையை நிலைநாட்ட இரு வழிகள் இருக்கின்றன. நுகர்வோர், உற்பத்தியாளர்களின் உறுதியான பண்டங்களின் உற்பத்தியே மற்றப் பண்ட உற்பத்தியைவிட ஏற்றத்தாழ்வுகளுக்குட்படுகின்றன. நுகர்வோர் கடன் பெருக்கம் அவர்களுடைய பண்டத்தில் செலவாகும் தொகையையும் அதிகப்படுத்தும்.

[1] P. G. Fousek, 'Foreign Central Banking', pp. 74-5.

நுகர்வோரின் உறுதிப் பண்ட உற்பத்தியில் ஏற்படும் ஏற்றத் தாழ்வுகள் இரண்டாம்நிலை விளைவுகளை (secondary effects) அதாவது பெருக்கி விளைவுகளை (multiplier effects) உண்டாக்கும். ஏற்றத்தாழ்வுகள் ரொக்கத்திற்கு ஏற்படும் தேவையை மாற்றும் போதுதான் பெருக்கி விளைவுகள் (multiplier effects) ஏற்படும். நுகர்வோர் கடன் கட்டுப்பாடுகள் மூலம் குறிபிட்ட, நிலையான பண்ட உற்பத்தியில் ஏற்படும் ஏற்றத் தாழ்வுகளைத் தவிர்க்கலாம். இவை பொருளாதாரத்தின் மற்றப் பகுதிகளில் விளைவிக்கும் இரண்டாம் படிவ விளைவுகளைத் தவிர்க்கலாம். இரண்டாவதாக நுகர்வோரும் நிதிநிலையங்களும் செய்யும் தவறுகள் அவைகளுடைய செம்மையான ஸ்திர நிலையைப் பாதிக்கா வண்ணம் இக் கட்டுப்பாடுகள் பாதுகாக்கின்றன. பொருளாதாரத்தின் ஸ்திர நிலையைப் பாதுகாக்கப் பயன்படுத்தும் கருவிகளுடன் நுகர்வோர் கடன் கட்டுப்பாட்டையும் சேர்த்துக் கொள்ளலாம்.

ஸ்திர நிலையைப் பாதுகாக்கும் கருவியாகப் பார்க்கும்போது நுகர்வோர் கடன் கட்டுப்பாட்டுக் கருவி குறைபாடுள்ளதாகவும் இருக்கின்றது. இது குறுகிய அடித்தளத்தைக் கொண்டிருக்கின்றது. சிக்கலாகவும் தொடர்பற்றதாகவும் இருக்கின்றது. காலப்போக்கில் கட்டுப்பாடுகளிலிருந்து நழுவும் முறைகள் கண்டு பிடிக்கப்படும். இதன் திறமை காலப்போக்கில் குன்றும். தனி நபர்களுக்கும் பற்பல பகுதியினருக்குமிடையே பாரபட்சம் காட்டும் தன்மையைக் கொண்டிருக்கிறது. குறைவான வருமானமுடையவர்கள்மீது இதன் பிரதான பலன் செயல்படுகிறது. குறிப்பிட்ட பகுதியினர் மற்றவர்களுடன் தொழிலில் போட்டியிடும்போது தவணை முறைக் கடன் வசதியைப் பெற்றுச் சில தளவாடங்களை வாங்குகின்றனர். இவர்கள்மீதும் இக் கட்டுப்பாட்டின் விளைவு பாரபட்சமாக இயங்குகின்றது. மூன்றாவதாகத் தொழில்களிடையே சாதாரணமாக ஏற்படும் சாதனப் பங்கீட்டை இக் கட்டுப்பாடு கலைக்கிறது. கட்டுப்பாட்டால் பாதிக்கப்படும் தொழிலிலிருந்து விடுபட்ட சாதனங்கள் மற்றத் தொழில்களை நோக்கிச் செல்கின்றன. இதுவும் பணவீக்கத்திற்குக் காரணமாக இருக்கின்றது. இந்த நிலையில் குறிப்பிட்ட நுகர்வோர் பண்டங்கள்மீது வரிகளை விதிக்கலாம். வரி வீதத்தை அவ்வப்போது தேவைக்கேற்றபடி அரசு உயர்த்தலாம் அல்லது குறைக்கலாம். இந்த முறை, தேர்வுச் செலாவணிக் கட்டுப்பாட்டைவிட நேர்த்தியானது.[1]

[1] Milton Friedman 'Consumer Credit Control as an Instrument of Stabilisation Policy', in 'Consumer Instalment Credit', Part II, Vol. 2 (Conference on Regulation).

தேர்வுச் செலாவணிக் கட்டுப்பாட்டின் மூலம் நுகர்வோர் கடனைக் கட்டுப்படுத்துவதை மட்டுமல்லாமல் பொதுவாகத் தேர்வுக் கட்டுப்பாட்டையே இவர்கள் குறை கூறுகின்றனர். தேர்வுக் கட்டுப்பாடு டெப்பாசிட்டுப் பெருக்கத்தைச் சிக்கலான முறையில் கட்டுப்படுத்துகின்றது என்று திரு. சிம்மன்ஸ் (Mr. Simmons) குறிப்பிடுகின்றார். வர்த்தக வங்கிகள் மட்டுமே நுகர்வோர் கடன் கொடுப்பதில்லை. மைய வங்கியிடம் கடன் வசதி பெருத மற்ற வங்கிகளும் இத்தகைய கடனைக் கொடுக்கின்றன. இவைகளையும் இக் கட்டுப்பாட்டுக்குட்படுத்தவேண்டும். இந்த நிலையில் மைய வங்கி கடன் தொகையை நியாயமான முறையில் பங்கீடு செய்கின்றது. இது செலாவணி நிருவாகத்துடன் நேரடித் தொடர்பு கொள்வதில்லை. மாறும் காப்பு விகிதத்தைப்போலப் பணத்தின் அளவை இக் கருவி துல்லியமாகக் கட்டுப்படுத்துவதில்லை என்று திரு. சிம்மன்ஸ் குறிப்பிடுகின்றார்.[1]

நுகர்வோர் தவணைமுறை வாங்கல் கடனின் வெற்றி இரு பிரச்சினைகளைப் பொறுத்துள்ளது. முதலில் இக் கடன் வர்த்தகச் சுழலின் காலம், ஆழம், நிகழும் நேரம் முதலியவற்றைப் பாதிக்குமா என்பது முக்கியமான பிரச்சினை. இரண்டாவதாகப் பொதுக் கட்டுப்பாடுகள் நுகர்வோர் தவணை வாங்கலைக் கட்டுப்படுத்தாதா? என்பது அடுத்த பிரச்சினை. கடன் நிதியை ஏதேனும் ஒரு முறையில் கட்டுப்படுத்தாவிடில் வர்த்தகச் சுழலின் இரு வழிகளில் சலனத்தை அதிகரிக்கும். கடன் நிதி பொருள்களின் தேவையை மறைமுகமாகப் பாதிக்கும்; மொத்தச் சேமிப்பை நேரடியாகப் பாதிக்கும்; இவை மூலம் வர்த்தகச் சுழலைப் பாதிக்கும். நிலையில்லாத நுகர்வோர் பொருள்களின் தேவை பெருகும். நிலையான பண்ட உற்பத்திக்கு மிகுதியான முதலீடு தேவை. மற்றப் பண்டங்களைவிட இவைகளை உற்பத்தி செய்வதற்குக் காலதாமதமாகிறது. இவ்விருவகைச் சந்தர்ப்பங்களிலும் எயின்சிக் (Einzig) குறிப்பிடும் வேக வளர்ப்பான்களினால் (accelerator), குழாய்த்தடைகளினால் (pipe line lag) விளையும் விளைவுகள் பிற பொருள்களில் அதிகத் தீமை பயக்கும். இருவழிகளிலும் வர்த்தகச் சுழல் தீவிரமாகும். ஆனால், வர்த்தகச் சுழல் தானாகவே மும்முரமாகின்றது. இது அதன் இயல்பு, பொருள் விற்பனை முறை காரணமன்று என்பதைக் குறிப்பிட வேண்டும்.

நுகர்வோர் கடனைக் கட்டுப்படுத்துவதற்கு வர்த்தகச் சுழல் பற்றிய காரணமட்டுமல்லாமல் வேறு காரணங்களும் இருக்

[1] E. C. Simmons 'The Role of Selective Control in Monetary Management', in 'American Economic Review', September 1947, p. 639.

கின்றன. தேவைப்பெருக்கத்தின் காரணமாகக் குறிப்பிட்ட நுகர்வோர் பொருள் போதிய அளவில் கிடைக்காதபோது (நுகர்வோர் விருப்பங்களில் நிகழும் மாற்றங்கள் இதற்குக் காரணமாகலாம்) இப் பண்டத்தை இறக்குமதி செய்யவேண்டும். இதனால் அயல் நாட்டுச் செலுத்தல் நிலை பாதிக்கப்படலாம், அல்லது சாதாரண கால நிலையைவிட மிகுதியான அளவில் நுகர்வோர் பண்டங்களுக்குத் தேவை பெருகும்போதும் இத்தகைய கட்டுப்பாடு அவசியமாகிறது. கட்டுப்பாடுகளைத் தக்க நேரத்தில் அமல் செய்யவேண்டும். உரிய நேரத்தில் அவைகளைத் தளர்த்த வேண்டும். தேவைப் பெருக்கம் உற்பத்தியைக் கடக்கும்போது கட்டுப்பாடுகள் தேவையாகும். வீக்கம் மறைந்தவுடன் இவைகளைத் தளர்த்தவேண்டும்.[1]

மற்றக் கட்டுப்பாடுகளுடன் ஒப்பிடும்போது இக் கருவி வீக்கத்தைக் கட்டுப்படுத்துவதில் அதிக வெற்றியளிப்பதில்லை. இதற்குக் கீழ்க்காணும் காரணங்களைக் கூறலாம். தவணை வாங்கல் முறைக் கடன் நிலையங்களின் அமைப்பு, மற்றக் கடன்களைவிட இது அதிக இலாபம் அளிப்பது; நுகர்வோர் கடனளிக்கும் பிற நிலையங்கள் (non-banking institutions) உயர் இலாபம் பெறுவதால், வங்கிகளுடன் வெற்றிகரமாகப் போட்டியிட்டுத் தொழிலுக்கு வேண்டிய நிதியைப் பெறுவது முதலியன. கடனளிப்புக்கான வட்டிபற்றிய நிபந்தனைகளையும், மற்ற நிபந்தனைகளையும், மற்ற நிலையங்களைவிட இவை நன்கு ஏற்கின்றன. மேலும், இத்தகைய கடன்களும் ஒரு காரணம் ஆகும்.[2] தவணை வாங்கல் கடன்களின் வட்டி வீதங்கள் மற்ற வீதங்களைவிட உயர்வாக இருந்தபோதிலும் இவ் வீதங்களை எளிய மாதத் தவணைகளில் செலுத்தலாம். ஆண்டு வீதத்தைக் கணிசமாக உயர்த்தினாலும் மாதத் தவணைக் கட்டணம் மிகக் குறைவாகவே மாறும். மேலும் தவணை முறையில் பண்டங்களை வாங்குவோரின் வரவு செலவுத் திட்டத்திற்கேற்பத் தவணைக்காலத்தை நீடிக்கலாம். எனவே, உயர் வீதத்தால் இக் கடன் பாதிக்கப்படுவதில்லை; இது நெகிழ்ச்சியற்றதாக இருக்கின்றது. பொதுக் கடன் கட்டுப்பாடுகள் தவணை வாங்கல் கடனைக் கட்டுப்படுத்தினாலும், காலதாமதமான பிறகே பயன் ஏற்படும்.[3]

[1] F. R. Oliver, 'The Control of Hire Purchase', Chapters VI, IX and X.

[2] G. Haberler, 'Consumer Instalment Credit and Economic Fluctuations' (NBER), pp. 161-2.

[3] Allan Sproul, 'Reflections of a Central Banker', in 'Journal of Finance', March 1956, p. 12.

**பொது அளவுக் கட்டுப்பாடுகளுக்குத் துணையாகத் தேர்வுக் கட்டுப்பாடுகள்**

தேர்வுக் கட்டுப்பாடுகளைப் பரிந்துரைக்கும்போது பொதுக் கட்டுப்பாடுகளை அறவே நீக்கிவிடலாம் என்று நாம் குறிப்பிடவில்லை. தேர்வுக் கட்டுப்பாடுகள், பொதுக் கட்டுப்பாடுகளுக்குப் பதிலாக இயங்கா; அவைகளுக்குத் துணையாகவே செயல்படக்கூடும் என்று நாம் குறிப்பிட்டோம். செலாவணிப் பிரச்சினைகளுக்குத் தேர்வுக் கட்டுப்பாடுகள் எளிய தீர்வாகா. குறிப்பிட்ட பகுதிகளில் பொதுக் கட்டுப்பாடுகள் பலனளிக்காதபோது, தேர்வுக் கட்டுப்பாடுகளை ஆளலாம். இது ஓரம் காட்டக்கூடிய கருவியாகலாம் என்ற குறையை மிகைப்படுத்திக் கூறுகின்றனர். இதே குறையை மாறும் காப்பு நிதிக்கும் எதிராகக் கூறலாம். அளவுக் கட்டுப்பாட்டுக் கருவிகளும் இவ்வாறு பட்சபாதச் சார்பு கொண்டிருக்கின்றன, அதைத் தவிர்க்க முடியாது. செலாவணி நெருக்கம் (credit squeeze) பெரிய நிறுவனங்களைவிடச் சிறியவற்றையே பெரிதும் பாதித்தன என்று பலர் ராட்கிளிப் குழுவினரிடம் சாட்சியம் கூறினர். இக் கருத்தை ஆங்கிலேயத் தொழில் கூட்டமைப்பும் (Federation of British Industries), ஆங்கிலேய வர்த்தகக் குழுக்களின் சங்கமும் சேகரித்த விவரங்கள் புலப்படுத்துகின்றன.[1] தேர்வுக் கட்டுப்பாடுகள் இருப்பதால் கடன் வாங்குவதற்கு வாய்ப்பே இல்லை என்று நினைக்கக் கூடாது. கடன் நிதிக்கு வரம்புகள் கட்டப்படுகின்றன. இவ் வரம்புகளுக்குள் கடன் கொடுப்போர் இயங்கலாம். கடன் கொடுத்தலும், வாங்கலும் வரம்புகளுக்குட்படாமல் இருந்ததே இல்லை. தேர்வுக் கட்டுப்பாட்டைப் பொதுக் கட்டுப்பாட்டின் கூட்டாளி என்றும் இளைய கூட்டாளி என்றும் குறிப்பிடலாம். வழக்கமாகக் கையாளும் செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவிகளுக்குத் துணையாக இக் கருவியைப் பயன்படுத்தலாம். 'பொருளாதார வளர்ச்சியின் ஸ்திரத்தன்மை பாதிக்கப்படுவதைத் தீவிரமாகத் தடைசெய்ய' இதை ஆளலாம்.[2] குறிப்பிட்ட வரிகள் மூலம் நிலைமையைக் கட்டுப்படுத்துவதும் தேர்வுக் கட்டுப்பாடுகளுக்கு நிகரான அல்லது அதைவிடப் பலனளிக்கும் பதிலியாக இயங்கலாம். ஆனால், இவ்வாறு செய்வதற்குச் சாத்தியக் கூறுகள் அதிகமில்லை. ஏனெனில், ஒரு நாட்டிலும் வேண்டும்போது மோட்டார் வண்டிகள் போன்ற பண்டங்களின் சுங்க வரியை வேண்டிய அளவு மாற்றும் அதிகாரத்தை அரசுக்குக் கொடுக்காது. பொதுக்

[1] Radcliffe Report, p. 162.

[2] R. P. Shay, 'Consumer Credit as an Instrument of Monetary Policy for Economic Stability', in 'Consumer Instalment Credit', Part II, Vol. 2, p. 45.

கட்டுப்பாடு சிறந்ததா அல்லது தேர்வுக் கட்டுப்பாடு சிறந்ததா, இவைகளுடைய நிறைகுறைகள் யாவை என்பன பிரச்சினையல்ல; இவ்விரண்டையும் எவ்வாறு இணைக்கலாம் என்பதுதான் பிரச்சினை. இரண்டையும் தனித்தனியாகக் கையாளுவதால் கிட்டும் பலனைவிடச் சேர்த்துப் பயன்படுத்துவதால் அதிகப் பலன் கிடைக்கும்.

### தேர்வுக் கட்டுப்பாடுகளின் வரம்புகளும் குறைபாடுகளும்

பொதுக் கட்டுப்பாடுகள் இவைகளுக்குத் துணைசெய்யும் போதுங்கூட, இவைகளைப் பரிந்துரைப்போர் இவற்றின் வரம்புகளையும் குறைபாடுகளையும் புறக்கணிப்பதில்லை. குறிப்பிட்ட கருவிகளை எங்கு கையாளவேண்டும் என்று முடிவு செய்வது கடினம். இதுவே தேர்வுக் கட்டுப்பாட்டின் பெரிய இடர்ப்பாடாகும். நடவடிக்கைகளை இனங்காணுவதற்கு மூன்று சோதனைகள் உள. இவை முறையே துணையீட்டுச் சோதனை (collateral test), அறிக்கைச் சோதனை (declaration test), கடன் நிதியின் பயன்சோதனை (proceeds test) ஆகும்.[1] இவற்றுள் முதல் இரு முறைகளும் போதா என்பதை இந்திய ரிசர்வ் வங்கியின் செயல்கள் மெய்ப்பித்துள்ளன. இவ் வங்கி உணவுப் பண்டக் கடன்களைத் தேர்வுக் கட்டுப்பாடுகளுக்குட்படுத்தியபோது மேற்கண்ட உண்மை புலனாயிற்று. அரசு பத்திரங்களை ஈடாகக் காட்டிக் கடன் வாங்கி உணவு தானியத்தில் ஊகவாணிகம் செய்தனர். உணவுப் பண்டங்களைப் பதுக்கினர். மூன்றாவது முறை முதல் இரு முறைகளைவிட நேர்த்தியானதாகும், ஏனெனில், கடன் தொகையை எவ்வாறு பயன்படுத்தப் போகின்றார் என்பதைக் கடன் வாங்குவோர் தெரிவிக்கவேண்டும். ஆனால், கடன் தொகையை எவ்வாறு முடிவில் பயன்படுத்துவர் என்பதைக் கண்காணிக்கும் பொறுப்பு நிருவாகப் பிரச்சினைகளை எழுப்புகின்றது. குறிப்பிட்ட காரணங்களுக்காகக் கடன் வாங்குவோர், தம் சொந்த நிதிகளைக்கொண்டு தடைகளுக்குட்பட்ட வழிகளில் முதலீடு செய்யலாம். ஆகையால் இது மேலும் சிக்கல்களை ஏற்படுத்துகின்றது. குறிப்பிட்ட விரும்பத்தக்க வழிகளில் மட்டுமே வங்கிக் கடன்கள் பயன்படும் என்று திட்டவட்டமாகக் கூற முடியாது. எவை முக்கியமான பகுதிகள், எவை முக்கியமற்றவை, எவை உற்பத்திப் பகுதிகள் என்பவைகளைத் தொடர்ந்து நிர்ணயம் செய்வது செலாவணி நிருவாகிகளுக்குக் கடினமான செயல்.[2]

[1] C. E. Parry, 'Selective Instruments of National Credit', in 'Federal Reserve Policy'.

[2] P. G. Fousek, 'Foreign Central Banking', p. 77.

இருந்தபோதிலும் பொதுக் கட்டுப்பாடுகளுக்குத் துணையாகத் தேர்வுக் கட்டுப்பாடுகளையும் கையாளுவதற்குத் தக்க காரணங்கள் உள. நெகிழ்ச்சியுடன் அளவுக் கட்டுப்பாட்டுக் கருவிகளைக் கையாளுவதற்கு இடமில்லாத வளர்ச்சி குன்றிய நாடுகளில் மட்டுமல்லாமல், முதிர்வுபெற்ற, வளர்ச்சியடைந்த நாடுகளில்கூடச் சில பகுதிகளில் இக் கருவியைப் பயன்படுத்த இடம் இருக்கின்றது. பங்கு மார்க்கட்டு, நுகர்வோர் துறைகளில் இக் கருவி வெற்றிகரமாகச் செயல்படக்கூடும் என்பதை அமெரிக்கத் தேர்வுக் கட்டுப்பாட்டு வரலாறு காண்பித்துள்ளது, மைய வங்கியின் கட்டுப்பாட்டுக் கருவிகளுள் இவை நிரந்தரமான இடம் பெறத் தகுந்தவை என்றும் காட்டுகின்றன. கட்டுப்பாடுகள் நன்கு கவனமாகச் செயல்படுத்தப்பட்டால் வர்த்தகச் சுழல்களின் ஏற்றத்தாழ்வுகளைத் தணிக்க உதவலாம். இவைகளை அறவே நீக்க முடியாவிடினும் பெருமளவு தணிக்க முடியும். பண வீக்கத்தையும் வர்த்தகச் சுழல்களையும் இவை தடை செய்வதால் இவைகளை ஆதரிக்கின்றனர். இக் கட்டுப்பாடுகள் தீவிரமாகச் செயல்பட்டால், ஏராளமான அளவு அரசு பத்திரங்களைக் கொண்டுள்ள நிதிநிலையங்கள் தனியாருக்குக் கடன் கொடுப்பது குறையும். சிறு தொகை சேமிப்போருடைய தொகைகள் சேமிப்புப் பத்திரங்களிலும், தொழிலகச் சேமிப்புகள் அரசு பத்திரங்களிலும் முதலீடு செய்யப்படும். இத்தகைய கடன் கட்டுப்பாடுகள் தனியார் துறையில் இரண்டாம் நிலைக் கடன் சுருக்கத்திற்குக் (secondary credit contraction) காரணமாகி, அரசுக்கு மேலும் அதிக அளவு கடன் தொகை கிடைக்கச்[1] செய்யும்.

### வளர்ச்சி குறைந்த நாடுகளில் தேர்வுக் கட்டுப்பாடுகள்: அமெரிக்கக் கருத்திலிருந்து வேறுபாடு

அமெரிக்காமட்டிலுமல்லாமல் தொழில் வளர்ச்சிபெற்ற இதர நாடுகளிலும் தேர்வுச் செலாவணிக் கட்டுப்பாடுகள் கையாளப் படுகின்றன. பொதுக் கட்டுப்பாடுகளையும் தனிக் கட்டுப்பாடுகளையும் இணைத்துப் பயன்படுத்துவதால் செலாவணித் துறைக்கு நல்ல பயன் கிட்டும் என்று பொருளியலாரும் வங்கியரும் கூறியுள்ளனர். சிறந்த பரவலான அமைப்புள்ள பண, மூலதன மார்க்கட்டுகள் இல்லாத நாடுகளில் பழைய வங்கிவீதம், வெளி மார்க்கட்டுக் கொள்கை, மாறும் காப்புவிகிதம் போன்ற கருவிகள் அதிகப் பலன் கொடா. இதுபோன்ற நிலையுள்ள நாடுகளில் தேர்வுக் கட்டுப்பாடுகளை அமல் செய்ய தக்க காரணங்கள் உள.

[1] Ervine Miller, 'Monetary Policy in a Changing World', in 'Quarterly Journal of Economics', February, 1956, p. 35.

வளர்ச்சி குன்றிய நாடுகளில் அண்மைக்கால மைய வங்கிச் சட்டங்கள் தேர்வுக் கட்டுப்பாடுகளைக் கையாளும் அதிகாரங்களை மைய வங்கிகளுக்குக் கொடுத்துள்ளன. இந்த நாடுகளில் அமெரிக்காபோல் தேர்வுக் கட்டுப்பாடுகளை மூன்று வகைகளில் மட்டும் ஆளவில்லை. அதிக வழிகளில் தாராளமாகப் பயன் படுத்தின. சில நாடுகளில் தேர்வுக் கட்டுப்பாடுகளை, வங்கி நடவடிக்கைகள்மீது எவ்வாறு ஆளலாம் என்பதைச் சட்டங்கள் வரையறுத்துள்ளன. கொரியா, ஹோண்டுராஸ் நாடுகளை இதற்கு எடுத்துக்காட்டாகக் குறிப்பிடலாம். பிலிப்பைன்ஸ், சிலி, அர்ஜன்டைனா, உருகுவே, பாக்கிஸ்தான் முதலிய ஆசிய, லத்தீன் அமெரிக்க நாடுகளில் ஒருவகைக் கட்டுப்பாடு இருக்கின்றது. இது 'இறக்குமதி முன் டெப்பாசிட்டுத் தேவை' (import predeposit requirement) என்பது. செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவியாக இம்முறை பயன்படும் நாட்டுக்குச் சான்றுக கானாவைக் (Ghana) கூறலாம். இதன்படி இறக்குமதி உரிமத்தையோ (licence) அன்னியச் செலாவணியையோ கோருவோர் ஒரு தொகையை அதற்காக டெப்பாசிட்டாகச் செலுத்தவேண்டும். இறக்குமதிக்குச் செலுத்தவேண்டிய ஒரு பகுதியை இவ்வாறு டெப்பாசிட்டாகச் செலுத்தவேண்டும். இறக்குமதியின் மதிப்பில் 5 முதல் 500% வரை முன் பணமாகச் செலுத்தவேண்டும். இவ்வாறு முன்பண நிபந்தனை இல்லாவிடில் இறக்குமதியாளர்களுடைய பணம் இவ்வளவு நீண்ட காலம் கட்டுப்படாது. இறக்குமதிக் கடனுக்குச் செலுத்தவேண்டிய வட்டிவீதம் உயர்ந்திருப்பதால் இறக்குமதிப் பண்டத்திற்குள்ள தேவை உள்நாட்டுப் பண்டங்கள் பக்கம் திரும்பலாம். இந்த டெப்பாசிட்டுகள் சாதாரண வங்கிகளில் வைக்கப்பட்டிருந்தால், அவைகளுடைய கடன் கொடுக்கும் திறனும் பாதிக்கப்படாமலிருந்தால் தேர்வுக் கருவி செலாவணிக் கொள்கையை இயக்கும் கருவியாகப் பயன்படாது. முன்பணம் செலுத்துவதற்குத் தேவையான தொகையை வங்கிகள் கடனாகக் கொடுப்பது தடை செய்யப்பட வேண்டும். இல்லையேல் இக் கருவியின் கட்டுப்பாட்டுத் திறன் குறையும். ஆகையால் அர்ஜன்டைனாவில் இத்தகைய முன்பணம் செலுத்துவதற்கு வங்கிகள் கடன் கொடுக்கமுடியாது. ஏற்றுமதியை அடிப்படையாகக் கொண்டுள்ள, வளர்ச்சி குன்றிய நாடுகளில் இறக்குமதி முன்பண முறையைக் கையாளுவதற்குத் தக்க காரணம் இருக்கிறது. இத்தகைய நாடுகளில் அயல் நாட்டுச் செலுத்தல் நிலை (balance of payments) பொருளாதாரத்தின் பண வருமானத்தையும் (money income) ரொக்க நிலையையும் பாதிக்கும். வர்த்தக வங்கிகளின் ரொக்க நிலை விகிதத்தை மாற்றுவதால் செலாவணிக் கொள்கைக்குக் குறிப்பிடத்தக்க

பலன் கிடைக்காது. ஏனெனில், வளர்ச்சியடைந்த நாடுகள் போலவே இங்கும் வங்கிக் கடனுக்கு மிகுதியான தேவை இருக்கின்றது. ஆனால், இக் கட்டுப்பாடு அமலாகும்போது வங்கிகள் எவ்வளவு உபரி நிதியைக் கொண்டிருந்தன என்பது இக் கருவியின் வெற்றி தோல்வியை நிர்ணயிக்கும். மேலும், இக் கருவி தாற்காலிக ஏற்பாடாகும்; நிரந்தரமாக நீண்டகாலத்தில் கையாளக்கூடியதன்று. இந்தோனேசியா, பராகுவே, நிகார்குவா போன்ற நாடுகள் இக் கருவியை மிக வெற்றிகரமாகக் கையாள முடியவில்லை. இறக்குமதி முன்பணம் செலுத்தவேண்டுமென்ற நிபந்தனை இருக்கும்போது, இறக்குமதி வரிகள், அவைமீது விதிக்கப்படும் உபரிக் கட்டணம் (sur charges) போன்றவை முக்கியமான மூலதனப் பண்ட இறக்குமதியைத் தடைசெய்து பொருளாதார வளர்ச்சியைத் தடைசெய்யும்.[1] வியாபாரிகள் இவைகளை எதிர்த்து அரசை இவைகளைக் கைவிடுமாறு வற்புறுத்தலாம். அவர்கள் இந்தியாவில் இவ்வாறு செய்தனர். இந்தியாவில் இறக்குமதி வரிகள் உயர்ந்திருந்தன. உபரிக் கட்டணங்களும் விதிக்கப்பட்டன. இந்த நிலையில் 25 சதவீத முன்பணக் கட்டணம் தாங்கமுடியாத பளுவாக இருந்தது என்று இறக்குமதியாளர்கள் போராடி அதை நீக்குவதற்கு ஏற்பாடு செய்தனர்.

பொதுக் கட்டுப்பாடுகளைத் தேர்வு முறையில் கையாளுவது பல நாடுகளில் நடைபெறுகின்றது. சலுகை முறைத் தள்ளுபடி வீதங்களையும் (preferential discount rate), பாகுபாட்டு முறைத் தகுதித் தேவைகளையும் (discriminatory eligibility requirements) வளர்ச்சி குன்றிய நாடுகளும் வளர்ச்சி யடைந்த நாடுகளும் அமல் செய்கின்றன. பெரு, கோஸ்டாரீகா, கொலம்பியா, ஹோண்டுராஸ், குவாடிமாலா நாடுகள் சலுகை முறைத் தள்ளுபடி வீதங்களை அமல் செய்கின்றன. குறிப்பிட்ட கடன் வாங்கலைத் தடை செய்யவோ ஆதரிக்கவோ இக் கருவியைப் பயன் படுத்துகின்றன. கொரிய வங்கி (Bank of Korea) வங்கி வீதக் கருவியைப் பாகுபாட்டு முறையில் அமல் செய்ய அதிகாரம் பெற்றுள்ளது. கொரிய வங்கிச் சட்டத்தின் 72ஆவது பகுதியின்படி செலாவணிக் குழு வங்கி வீதத்தைப் பரவலான எல்லைகளுக்குள் நிர்ணயிக்கலாம். பொருளாதார வளர்ச்சிக்குகந்த அல்லது நாட்டின் நலனுக்கு முக்கியமான கடன்களை ஆதரிப்பதற்காகச் சில இடங்களில் சலுகை தள்ளுபடி வீதங்களைப் பின்பற்றலாம். ஏற்றுமதி, இறக்குமதி நிதிகளுக்கும் உதவிப் பண்டங்களை வாங்கு

[1] 'I. M. F. Staff Papers', April 1958. J. Marshall, 'Advance Deposits on Imports'. Also 'I. M. F. Staff Papers', Vol. 8. 1960, E. A. Birnbaum and M. Querishi, 'Advance Deposit Requirements for Imports'.

வதற்கும் சலுகை விதங்களை—அதாவது பொது வீதத்தைவிடச் சற்றுக் குறைவான வீதங்களைப் பின்பற்றினர்.[1] 1963ஆம் ஆண்டுச் சட்டப்படி லிபிய வங்கி (Bank of Libya) எந்த நோக்கங்களுக்குக் கடன் கொடுக்கலாம், எவைகளுக்குக் கடன் கொடுக்கக் கூடாது என்பதை வரையறுத்துள்ளது. பல்வேறு நடவடிக்கைகளுக்கும் பல்வேறு தவணைகளுக்கும் வெவ்வேறு வட்டி வீதங்களை நிர்ணயம் செய்ய சூடான் நாட்டு வங்கி (The Bank of Sudan) அதிகாரம் பெற்றுள்ளது. பெல்ஜியம், பிரான்ஸ், மேற்கு ஜெர்மனி நாடுகளின் மைய வங்கிகள் ஏதேனும் ஒரு வழியில் பாகுபாடு செய்து வட்டி வீதங்களை அமைக்க அதிகாரம் பெற்றுள்ளன.

குறைந்த முன்னுரிமை (lower priority) கொண்டுள்ள இறக்குமதி, சில்லறை வர்த்தகம், தனிக் கடன் போன்ற துறைகளுக்கு வழங்கப்படும் தேர்வுக் கட்டுப்பாடுகளை அண்மையில் சுதந்திரம் பெற்ற சில ஆப்பிரிக்க நாடுகள் கையாளுகின்றன. சில சந்தர்ப்பங்களில் வங்கிக் கடனுக்குப் பொது உச்ச வரம்பு கட்டியுள்ளனர். சில சந்தர்ப்பங்களில் மைய வங்கியின் உத்தரவு பெருமல் குறிப்பிட்ட அளவுக்குமேல் கடன் கொடுக்க முடியாது. ஒரு வர்த்தக வங்கி கோரும் மீள்தள்ளுபடி (rediscount) மொராக்கோ நாட்டில் கட்டுப்பாடுகளுக்குட்பட்டிருக்கின்றது. ட்யூனீசியாவில் 75,000 டினருக்கு (dinars) உயர்வான தொகையைக் கடன் கொடுக்க விரும்பும் வங்கிகள் மைய வங்கியிடம் முன் கூட்டியே அனுமதி பெறவேண்டும்.

இதே முறையில் அனுமதிக்கப்பட்ட காரணங்களுக்காகக் கொடுக்கும் கடன்களை ஆதரிக்கும் நோக்கத்துடன் காப்பு நிதிகளைக் கட்டுப்பாடுகளுக் குட்படுத்தியுள்ளனர். இஸ்ரேல் நாட்டில் அனுமதிக்கப்பட்ட காரணங்களுக்குக் கொடுக்கும் கடனுக்குப் பின்னணியாகக் காப்பு நிதி கொள்ள வேண்டாம். மெக்சிகோ போன்ற நாடுகளில் சில வகைக் கடன்களுக்கு ஆதரவு கொடுக்கின்றனர். இக் கடன் பத்திரங்களை ஏற்கத் தகுந்த சொத்துகளாகக் (eligible assets) கருதுகின்றனர்.

இத்தகைய சில நாடுகளில் கடன் தொகையின் அளிப்பும், அதற்கான அடக்கச் செலவும் நாட்டுப் பொருளாதாரத்தின் தேவைகளுக்கேற்ப இருக்குமாறு அமைக்க மைய வங்கிகள் அதிகாரம் பெற்றுள்ளன. இவை ஊக வாணிகத்திற்குக்

[1] 'Central Banking in South-East Asia', p. 99.

(speculation) கொடுக்கப்படும் கடனைத் தடை செய்யலாம். இதற்காகச் செலாவணிக் குழுக்கள் வட்டிவீதங்களையும், தள்ளுபடி வீதங்களையும் கட்டுப்படுத்தலாம். உதாரணமாக பிலிப்பைன்ஸ், பராகுவே, ஹோண்டுராஸ், கொரியா நாடுகளில் செலாவணிக் குழுக்கள் பற்பல கடன்களுக்கு வசூல் செய்யும் வட்டி வீதங்களை நிர்ணயம் செய்யலாம்; மைய வங்கியின் வட்டி வீதம், அல்லது தள்ளுபடி வீதத்திற்கும் வர்த்தக வங்கிகள் தம் கடன்களுக்கு வசூல் செய்யும் வட்டி வீதங்களுக்கும் இடையே இருக்கவேண்டிய வேறுபாட்டையும் நிர்ணயம் செய்யலாம்.[1] இத்தகைய அதிகாரம் குவாடிமாலா நாட்டின் வங்கிச் சட்டத்திலும் இருக்கின்றது.

ஒதுக்கும் பகுதி முறையை (margin requirements) அமெரிக்கப் பெடரல் ரிசர்வ் முறையில் தாராளமாகக் கையாள இருக்கின்றனர். பத்திர வர்த்தகம் அமெரிக்காவில் இத்தகைய கட்டுப்பாட்டுக்குட்படுத்தப்பட்ட போதிலும் நல்ல அமைப்புள்ள பங்கு மாற்று நிலையங்கள் இல்லாத நாடுகளில் இவ்வாறு செய்வது கடினம். ஆயினும் இந்நாடுகள் ஏதேனும் ஒரு வகையில் இக் கட்டுப்பாட்டு முறையைப் பின்பற்றி யுள்ளன. பற்றுத் திருமுகம் (letters of credit) அளிப்பதற்கு இக் கருவியைக் கையாளுவதற்குப் பிலிப்பைன்ஸ் நாட்டுச் சட்டம் இடம் கொடுக்கின்றது.[2] நாட்டின் நன்மையைப் பாதிக்கும் கடன்களைத் தடை செய்யும் வகையில் செலாவணிக் குழு பற்றுத் திருமுகம் அளிப்பதற்கு முன் இவ்வளவு தொகை முன்பணம் செலுத்த வேண்டுமென்று வற்புறுத்தலாம். எந்தத் தொழிலுக்காகக் கடன் தேவையாகின்றதோ அதன் அளவிற்கேற்ப ஒதுக்கும் பகுதியை நிர்ணயம் செய்யலாம். போகப் பண்டங்களை (luxury goods) இறக்குமதி செய்வதற்காகக் கடன் கோரப்பட்டால் பற்றுத் திருமுகம் அளிப்பதற்கு அதிகமான அளவு ஒதுக்கும் பகுதியை நிர்ணயம் செய்யலாம். தேசியப் பொருளாதாரத்திற்குத் தேவையற்ற வேறு பண்ட இறக்குமதியையும் இவ்வாறு கட்டுப்படுத்தலாம். குறிப்பிட்ட தேவைகளுக்கான கடனைக் கட்டுப்படுத்துவதற்காக வங்கிகள் உயர்ந்த பட்சக் கடன் தவணைக்காலங்களை நிர்ணயிக்கலாம். இக் கடன்களுக்கான அடைமானங்களின் தன்மையையும், அளவையும் நிர்ணயம் செய்யலாம். வங்கிக் கடன் செலாவணி பெருகுவதைச் செலாவணிக் குழு குறைக்க விரும்பினால் அது கடன் கொடுத்தலுக்கும், முதலீட்டுக்கும், குறிப்பிட்ட காலத்திற்கு உச்ச வரம்பு

[1] Law of the Central Bank of Honduras, 1950, Art. 48. Also law for Banking Institutions, 1955, Art 39, The Bank of Korea Act, 1950, Arts 64-3

[2] See 10.

கட்டலாம். ஒவ்வொரு வங்கியின் கடனுக்கும், முதலீட்டுக்கும் உச்ச வரம்பு அமைக்கலாம், அல்லது குறிப்பிட்ட சில வகைக் கடன்களுக்கும், முதலீடுகளுக்கும் வரம்பு அமைக்கப்படலாம். கடன் கொடுத்தலையும், முதலீடுகளையும் பொதுக் கட்டுப்பாடுகளுக்குட்படுத்தனர். இதைத் தீவிரமாக்கும் வகையில் குறிப்பிட்ட கடன்களையும் முதலீடுகளையும்கூடக் கட்டுப்படுத்தனர். 1949ஆம் ஆண்டின் வங்கிக் கம்பெனிச் சட்டத்தின் (Banking Companies Act) 21(2) பிரிவின்படி, வர்த்தக வங்கிகள் குறிப்பிட்ட அடைமானக் கடனுக்கு இவ்வளவு ஒதுக்கும் பகுதியைக் (margin requirements) கொள்ளவேண்டும் என்று ரிசர்வ் வங்கி ஆணையிடலாம். சாதாரணப் பங்குகளை (equity shares) அடைமானமாகக் கொண்டு அளிக்கும் கடன்களுக்கு ஒதுக்கும் பகுதி 50% என்று ரிசர்வ் வங்கி 1960-ல் கட்டளையிட்டது, பங்கு மாற்று நிலையத்தில் (stock market) நிகழ்ந்த வீக்கத்தைத் தணிப்பதே இதன் நோக்கமாகும்.

பொருளாதார வளர்ச்சி குன்றிய நாடுகளில் தேர்வுக் கட்டுப்பாடுகள் வேறுபட்டிருப்பதோடு மட்டுமல்லாமல் அதைவிடப் பரவலாகவும் ஆளப்பட்டுள்ளன. போர் அல்லது பொருளாதார வீக்க காலங்களில் நிகழும் ஊக வாணிகத்தையும், பணவீக்க சக்திகளையும் தடைசெய்ய அமெரிக்காவில் தேர்வுக் கட்டுப்பாடுகளைக் கையாண்டனர். லத்தீன் அமெரிக்க நாடுகளில் சில வகைக் கடன்களைத் தடைசெய்வதற்கு மட்டுமல்லாமல் சில வற்றை ஊக்குவிக்கவும் இக்கட்டுப்பாடுகளைப் பயன்படுத்துகின்றனர். அயல் நாட்டுச் செலுத்தல் நிலையிலுள்ள சமநிலையின்மையை நீக்குவதற்கும் நீண்டகாலப் பொருளாதார நிலையைச் சீரமைப்பதற்கும் கட்டுப்பாடுகளைக் கையாளுகின்றனர். மேலும் அமெரிக்காவில் தேர்வுக் கட்டுப்பாடுகள் பொதுக்கட்டுப்பாடுகளுக்குத் துணையாகச் செயல்படுகின்றன. ஆனல், பெரும்பாலான வளர்ச்சி குன்றிய நாடுகளில் இவை பொதுக் கட்டுப்பாடுகளுக்குப் பதிலியாகச் செயல்படுகின்றன. உதாரணமாக இந்நாடுகளில் நல்ல அமைப்புள்ள மார்க்கட்டுகளில்லாமையால் வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளை மேற்கொள்ள முடியாது. இந்த நிலையில் தேர்வுக் கட்டுப்பாடுகள் ஆக்க வழியிலும் (positive ways) எதிர்மறை வழியிலும் செயல்படும் பொதுக் கட்டுப்பாடுகளுக்குத் துணையாக மட்டும் இயங்கா.[1]

உலகின் மாறிவரும் சூழ்நிலையில் தேர்வுக் கட்டுப்பாடுகள் முக்கியத்துவம் வாய்ந்துள்ளன என்று முடிவாகக் கூறலாம்.

[1] D. D. Grove, 'Selective Credit Controls', in H. V. Prochnow, The Federal Reserve System, ch. 8.

வர்த்தக வங்கிகள் கடன் கொடுக்கும் நிலையங்களாகமட்டும் இன்று செயல்படவில்லை. வங்கிகளல்லாத கடன் கொடுக்கும் நிலையங்களும் இன்று பிரபலமாகிவிட்டன. செலாவணிக் கட்டுப் பாடுகளை இவைமீதும் அமல் செய்யவேண்டும். மேலே குறிப் பிட்டுள்ளபடி தற்கால மைய வங்கிக் கட்டுப்பாடுகளில் குறைகள் இருக்கின்றன என்று திரு. மில்லர் குறிப்பிட்டுள்ளார்.[1] இரண் டாவது போருக்குப் பிறகு அநேகமாக எல்லா நாடுகளிலும் பொதுக்கடன் (Public debt) பெருகிவிட்டது; நிலையான நுகர் வோர் பண்டத் தொழில்களும், அசையாச் சொத்துக் கடனும் (real estate credit) பெருகிவிட்டன. இந்த நிலையில் பொதுக் கட்டுப்பாடுகளுக்குத் துணையாகத் தேர்வுக் கட்டுப்பாடுகளை அமல் செய்தல் வேண்டும். பொருளாதாரத்தில் புதிய நுட்ப மான பகுதிகள் தோன்றியுள்ளன. இவைகளுக்கு நுட்பமான கட்டுப்பாட்டுக் கருவிகள் தேவை. பொதுக் கட்டுப்பாடுகள், தேவையான சில மோசமான பகுதிகளை அடக்கத் தவறலாம், தேவையில்லாத பகுதிகளில் அவை தீய விளைவுகளை ஏற்படுத்த லாம். பொருளாதார உடலுக்குப் (body economic) பொது சிகிச்சை செய்வதற்குமுன் நோய்வாய்ப்பட்ட பகுதிகளுக்குத் தனி சிகிச்சை (local therapy) அவசியமென்று குறிப்பிட்டுள்ளார்.

தேர்வுக் கட்டுப்பாடுகள் இயங்கும் பரப்புக்கேற்றவாறு அதன் பலன் இருக்கும். இப் பரப்பு அதிகமாக இருப்பின் பலனும் மிகுதியாக இருக்கும். இவை நுகர்வோர் பங்குமாற்றுக் கடன் பகுதிகளுக்கப்பால் இயங்கவேண்டும்; பொதுவாக எல்லாப் பொருளாதாரப் பகுதிகளும் இவைகளுக்குட்படவேண்டும்; அப் பொழுதுதான் பலனளிப்பதாக இருக்கும். வர்த்தகச் சூழலையும் எதிர்த்து இயங்கும். ஆனால், இக்கட்டுப்பாடுகளைப் பொருளா தாரத்தின் பல்வேறு பகுதிகளில் அமல் செய்தால், நிருவாகிகள் தம்இச்சையாக அதிகாரத்தைப் பயன்படுத்த வகை உண்டாகும். தனியார் தொழில் முறையை (private enterprise) கடைப் பிடிக்கும் நாடுகள் இத்தலையீட்டைப் பொறுக்கா. தேர்வுக் கட்டுப்பாடுகள் பரவலாக அமலாக்கப்படவேண்டுமானால் தனியார் துறைப் பொருளாதாரத்தை விடுத்துக் கட்டுப்பாடுகள் நிறைந்த சோஷலிச முறையைப் பின்பற்றவேண்டும்.[2]

[1] Quarterly Journal of Economics, February 1956, p. 38.
[2] Allan Sproul, in American Economic Review, July 1947, p. 345.

# 10. வளரும் பொருளாதார அமைப்பு களில் செலாவணிக் கொள்கை

பல்வேறு நாடுகளின் பொருளாதாரக் கொள்கை வெவ்வேறு நோக்கங்களைக் கொண்டிருக்கலாமென்றும், ஒரே நாடுகூடப் பல சந்தர்ப்பங்களில் வேறுபட்ட நோக்கங்களைக் கொள்ளலாம் என்றும், வளரும் நாடுகளுடைய நோக்கங்கள் வளர்ச்சி நிறைந்த நாடுகளின் நோக்கங்களிலிருந்து மாறுபட்டிருக்கலாம் என்றும் முன்னர்க் குறிப்பிட்டோம். வெவ்வேறு நோக்கங்கள் ஒன்றுக் கொன்று முரண்பாடுகளைக் கொள்ளல் கூடாது; முரண்பாடுகளைத் தவிர்ப்பது கடினம். ஆகையால் பல்வேறு நோக்கங்களிடையே தேர்வு இருத்தல் வேண்டும். ஒரு நாடு பல நோக்கங்களிடையே தேர்வு செய்து தனக்குகந்த தொகுதியைத் தயார் செய்ய வேண்டும். ஒவ்வொரு நாடும் தன் பொருளாதார வளர்ச்சியின் வேகம், தன்மை—இவைகளுக்கேற்ற தொகுதியைக் கொள்ள வேண்டும்.

செலாவணிக் கொள்கை நாட்டுப் பொருளாதாரக் கொள் கையின் ஒரு கூறு. இவைகளுக் கிடையே முரண்பாடு இருத்தல் கூடாது. பொதுப் பொருளாதாரக் கொள்கை மைய வங்கி முறை அமைத்துள்ள செலாவணிக் கொள்கையை ஒத்திருக்க வேண்டும்.

**செலாவணிக் கொள்கையும் பொருளாதார வளர்ச்சியும்**

சரியான செலாவணிக் கொள்கையை வகுப்பதற்குமுன் பொருளாதார வளர்ச்சியின் தன்மையைப் புரிந்துகொள்ள வேண்டும். வளர்ச்சி குன்றிய நாடு ஒவ்வொன்றிலும் வருமானமும் முதலீடும் குறைவாக இருக்கின்றன. இதுவே அவைகளுடைய அடிப்படைப் பிரச்சினையாகும். இத் தீய சுழலைத் (vicious circle) தகர்ப்பதற்கு உள்நாட்டுச் சேமிப்பையும், முதலீட்டையும் கணிசமாக உயர்த்தவேண்டும். வளர்ச்சியடையும் நாட்டின் முதலீட்டைப் பற்றிப் பேசும்பொழுது, அதன் மொத்த முத லீட்டைவிட அதன் தன்மையும் பாணியுமே முக்கியமானவை என்பதைக் குறிப்பிடவேண்டும். மேலும் தொழில்நுட்ப வளர்ச்சியில் பின்தங்கிய நிலையில் இருப்பதால் முதலீட்டுத்

திட்டங்கள் நிறைவுபெறக் காலதாமதமாகிறது. சேமிப்பைப் பொறுத்தவரை உயர் சேமிப்பு வீதத்திற்கு இடர்ப்பாடுகள் உள. சேமிப்பு வீதம் வளர்ச்சி அடைய, நாட்டின் துணை நிறுவனமாக உள்ள மைய வங்கி தகுந்த ஏற்பாடுகளைச் செய்யவேண்டும். முதலீட்டுத் தொகுதியின் கூறுகளைப் போலவே சேமிப்புப் பாணியையும் நன்கு கவனிக்கவேண்டும். சரியான கொள்கை நோக்கத் தொகுப்பைத் தேர்ந்தெடுத்து. அதைச் செலாவணி, நிதி, இதரக் கட்டுப்பாடுகள் மூலம் செயல்படுத்தவேண்டும். சேமிப்பு, முதலீட்டுப்பாணி அனுமதிபெற்ற வழிகளில் நடைபெற வேண்டும். பொருளாதாரப் பகுதிகளில் சமநிலையின்மை காணப்படும். இதை நீக்கப் பொருளாதார அமைப்பைத் திருத்தியமைக்கும் அவசியம் ஏற்படும். நுகர்வுப் பண்ட உற்பத்தியிலிருந்து சாதனங்களை முதலீட்டுப் பண்ட உற்பத்திக்குத் திசை திருப்பச் சில கொள்கை ஏற்பாடுகளைச் செய்யவேண்டும். புதிய முதலீடுகளில் சாதனங்களை ஈர்க்க, விலைகள் மூலம் தூண்டுதல்கள் கொடுக்கவேண்டும். இவ்வாறு செய்யும்போது ஏற்படும் பணவீக்க விளைவுகளைத் தடை செய்யவேண்டும்; இந் நடவடிக்கைகள் வழியாக விளையும் உபரி வருமானம், தொழிலாளர்கள் பயன்படுத்தும் பண்டங்களின் விலைகளையும், உணவுத் தானிய விலைகளையும் உயர்த்தாமலிருக்க நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும். இறுதியில் அயல் நாட்டுச் செலுத்தல் நிலைப் பிரச்சினைகளைக் கவனிக்க, ஏற்றுமதிகளை ஊக்குவிக்க வேண்டும், இறக்குமதிக்குப் பதிலியான மற்றப் பண்டங்களைப் பயன்படுத்த வழிவகுக்கவேண்டும். சரியான செலாவணிக் கொள்கையை வகுக்கும் நிருவாகிகள், வளர்ச்சி விளைவிக்கும் பிரச்சினைகள் அனைத்தையும் கவனிக்கவேண்டும். வளர்ச்சியடையும் நாடுகள் இரு நோக்கங்களுடன் செலாவணிக் கொள்கையை வகுத்தல் வேண்டும். முதன் முதலில் பண ஆக்கம் செய்யவேண்டும், பின்னர் சேமிப்பு, முதலீடுகளுக்கு நிலையங்கள் ஏற்படுத்த வேண்டும். முதலில் பொருளாதாரத்தின் பணப் பரிவர்த்தனைக்காக அதை ஆக்கவேண்டும். இரண்டாவதாக உபரி வருமானம் நல்கும் வாங்கும் சக்திக்கேற்ப உற்பத்தி பெருகவேண்டும். விரைவில் வளர்ச்சியடையும் நாடுகளில் உற்பத்தியைவிடப் பண அளவு விரைவில் பெருகும். பண ஆக்கம் இவ்வாறு நடைபெறும்போது முதலில் குறைவான அளவு விலைகள் உயரும். இதனால் சேமிப்பும் கூடும். ஆனால். விலைகள் விரைவில் அதிவேகமாக உயரும். இந்த நிலையில் பண ஆக்கம் ஓர் எல்லைக்குட்பட்டிருக்க வேண்டும்; தக்க பாதுகாப்பும் இருக்கவேண்டும். இரண்டாவதாகப் பல்வகைத் தவணைகளையும், வீதங்களையும் கொண்டுள்ள நிதிச் சொத்துகள் (financial assets) வேண்டும்.

பல்வேறு வருமானங்களைப் பெறுவோர் சேமிப்பதற்கு இவை உதவும். இந்த நிலையில் அதிக சேமிப்பு ஏற்படும். வளர்ச்சியடையும் பொருளாதாரத்திற்கு வேண்டிய அளவு முதலீடும் நடைபெறும்.[1] இதற்காக நிதிநிலையங்களை அமைத்து அவை மூலம் செம்மையான முறையில் முதலீட்டு நிதி ஒதுக்கீடு செய்ய வேண்டும். வளரும் நாடுகளில் மைய வங்கிகள் பொருளாதார வளர்ச்சிக்கான நிதிநிலையங்களையும், இடைநிலை நிலையங்களையும் நிறுவுவது மைய வங்கி முறையின் முக்கியமான இயல்பாகி விட்டது. இப்பொறுப்புகள் மைய வங்கி முறை பற்றிய பழைய கருத்துகளுக்கும், வழக்கங்களுக்கும் ஒவ்வாதவை. 19ஆவது நூற்றுண்டின் இறுதியிலும் 20ஆவது நூற்றுண்டின் தொடக்கத்திலும் மைய வங்கியர் இப்பழக்கங்களைக் கண்டு அதிர்ச்சி அடைந்திருப்பர்.

## வளரும் நாட்டுப் பொருளாதாரக் கொள்கையின் நோக்கங்கள்

வளரும் நாடுகளில் அடிப்படைப் பொருளாதாரக் கொள்கை, நிதிநிலை ஸ்திரத் தன்மையுடன்கூடிய வளர்ச்சியைத் தூண்டும் நோக்கம் கொண்டிருக்கவேண்டும். பொருளியலாரும், நாட்டுப் பொருளாதார நிருவாகிகளும் இதுபற்றிய கருத்து ஒற்றுமை கொண்டிருக்கின்றனர். விரைவான பொருளாதார வளர்ச்சி வீதத்தை விலைவாசி ஸ்திரத்தன்மையுடன், பண வீக்கத்தைக் களைந்து நிலைநாட்டவேண்டிய இன்றியமையாத அவசியத்தைப் போர்ப் பிற்கால அனுபவம் புலப்படுத்தியது. விலைவாசிகள் உயர்வதும், அதனால் பணத்தின் மாற்றுவீதம் குறைவதும் இவைகளின் விளைவாகப் பொருளாதாரத் திட்டங்கள் பாதிக்கப்படுவதும், முதலீடு தொடர்ந்து நடைபெறுவதற்கும், வளர்ச்சிக்கும் உகந்தவையல்ல. எனவே, திட்டமிட்ட வளர்ச்சி வீதத்திற்குத் தேவையான அளவு பண அளவு பெருக வேண்டும்; நாட்டின் உற்பத்திச் சாதனங்கள் முழுமையாகப் பயன்பட வேண்டிய அளவு பெருகவேண்டும். ஆனல், வளர்ச்சியைப் பாதிக்கக்கூடிய பண வீக்கத்தைத் தவிர்க்கவேண்டும். இதுவே செலாவணிக் கொள்கையின் முக்கியமான கூறும். ஆனல், உற்பத்திப் பெருக்கத்தைவிடப் பண அளவின் பெருக்கம் குறையாமல் பார்த்துக்கொள்ளவேண்டும். இல்லையேல் பணச் சுருக்கம் ஏற்படும். செலாவணியின் அளவில் சமநிலையின்மை இருந்தால், பணவீக்கம் அல்லது பணச் சுருக்கம் ஏற்படும். இவ்விரண்டுமே எல்லாத் துறைகளும் சமமாகப் பெருகுவதற்கு இடையூறுக

[1] Lecture delivered by Dr. C. D. Deshmukh under the auspices of the Per Jacobson Foundation, 1st October, 1965.

இருக்கும். பணப்பெருக்கம் போதுமா, பற்றுதா அல்லது மிகுதியாக இருக்கின்றதா என்பதைக் காணத் தற்காலத்தில் 'காப்பு' (safe) விதம் என்பதைப் புனைந்திருக்கின்றனர். குறிப்பிட்ட நேரத்தில் விலைவாசியை அடிப்படையாகக்கொண்டு நாட்டு வருமானத்தைக் கணக்கிட்டு அதைப் பண அளவால் வகுத்தால் கிடைக்கும் ஈவைக் 'காப்பு' (safety) என்று கூறுகின்றனர். இவ்வாறு மதிப்பிடும் 'காப்பைக்' கொண்டு பார்க்கும்போது 1960 முதல் 1965 வரை ஆப்பிரிக்காவில் சூடான், கானா, லிபியா, தென்னமெரிக்காவில் மெக்சிகோ, நிகார்குவா, பாரகுவே முதலிய நாடுகளிலும் இந்தோனேசியாவிலும் மைய வங்கிகள் காப்பு வரம்பை மீறி மையவங்கிக் கடன் செலாவணியை உற்பத்தி செய்தன.[1] இந்த நாடுகளிலெல்லாம் பண அளவு உற்பத்தியை விடப் பெருகியதால் விலைகள் உயர்ந்தன. இந்த நிலையில் வங்கிகள் கொடுத்த மிகுதியான கடன்கள் விலையுயர்வுக்குக் காரணமாக இருந்தனவா என்பதைக் காணவேண்டும். ஒரு பகுதிக்கு அளித்த கடன் விளைவிக்கும் பணவீக்க விளைவை, மற்றொரு பகுதியில் அமல் செய்யும் கட்டுப்பாடு நீக்கிவிடும்.

பணத்தின் புழக்க வேகத்தைக் (velocity) கணக்கிடாமல் அதன் அளவை மட்டும் கொண்டு செலாவணிக் கொள்கையை வகுப்பது கோட்பாட்டளவில் தவறானது; நடைமுறையிலும் வெற்றிகரமாக இருக்காது என்று சிலர் கூறுகின்றனர். குறுகிய காலத்தில் பணத்தின் புழக்கவேகம் மாறலாம். அதன் அளவில் புகுத்தப்படும் மாற்றம் தடைப்படலாம். அதாவது அதன் விளைவு தடைப்படலாம். இதிலிருந்து செலாவணிக் கட்டுப்பாட்டுக் கொள்கைக்கு இடமே இல்லை என்று கூறமுடியாது. வருமானத்தின் புழக்க வேகம் பற்றிய கருத்து நீண்டகாலத்தில் பயனுள்ளதாக இருக்கின்றது. எனவே, அடுத்து வரும் ஆண்டுகளில் எவ்வளவு பணம் சமுதாயத்திற்குத் தேவையாகும் என்பதைக் கணக்கிடவேண்டும். பணத்தின் புழக்க வேகத்தைக் கணக்கிடுவது கடினம். புழக்கவேக மாறுதல்கள் எல்லையற்று இருக்கின்றன என்ற கருத்து வளர்ச்சியடைந்த நாடுகளுக்குப் பொருந்துவதுபோல வளர்ச்சி குன்றிய நாடுகளுக்குப் பொருந்தாது. பண அளவு மாறுவதால் ஏற்படும் விளைவுகளைப் புழக்க வேகம் தடை செய்யலாம். இத்தடையை நாட்டின் பழக்க வழக்கங்கள், மாபுகள் செலாவணி முறையின் அமைப்பில் உள்ள குறைகள், நிதிச் சொத்துகளின் (financial assets) திறமை

[1] S. K. Basu, 'Central Banking in the Emerging Countries', pp. 178-9.

[2] J. Ahrensdroff, 'Central Banking Policies and Inflation', I.M.F. Staff Papers, October 1959.

யின்மை முதலியவை குறைக்கலாம். இந்த நிலையில் வளரும் நாடுகளில் மைய வங்கிகள் பண அளவைக் கண்காணிப்பது சரியானதாகும். சதா மாறிக்கொண்டிருக்கும் பொருளாதாரத்தின் தேவைகளுக்கேற்ப மைய வங்கி பண அளவைச் சரிக்கட்டுவதே அவைகளுடைய தலையாய பொறுப்பு என்பதை ஆய்வு புலப்படுத்தும். செலாவணி முறையின் மாறுதல்களால் பணத்தின் அளவுத்தன்மை மாறும். வருமான வளர்ச்சியில் தொடர்பு இல்லாமலிருக்கலாம்; உண்மைப்பண்டங்கள் (real goods) கிடைப்பதிலும் தொடர்பின்மை ஏற்படலாம். இவைகள் அனைத்தும் சமநிலையின்மையை விளைவிக்கலாம். நீண்டகாலத்தில் பண அளவுப் பெருக்கம் கவனத்திற்குட்பட்டிருக்க வேண்டும். நீண்ட காலச் செலாவணிப் பெருக்கம் ஏற்படவேண்டும். குறுகிய காலத்தில் அதன் பெருக்கவீதம் கண்காணிக்கப்பட்டிருக்க வேண்டும்.[1]

வளரும் நாடுகளில் உள்ள செலாவணிக் கொள்கையின் அமைப்பை விளக்கிய பிறகு, அரசின் வசமுள்ள கட்டுப்பாட்டுக் கருவிகளின் செலாவணிக் கருவிகளின் இடத்தை மதிப்பிட வேண்டும். நிதிக் கருவிகளின் உதவியில்லாமல் செலாவணிக் கருவிகளைக் கொண்டே பண்டங்களின் மொத்தத் தேவையை வளர்ச்சியடைந்த நாடுகள்கூட வெற்றிகாமாகக் கட்டுப்படுத்த முடியாது. மக்கள் நெருக்கம் உள்ள வளர்ச்சி குன்றிய நாட்டில் செலாவணிக் கொள்கையின் பலன் குறைந்திருக்கின்றது. இத்தகைய நாடுகளில் செலாவணிக் கட்டுப்பாடுகளுடன் பங்கீடு (rationing), விலைக்கட்டுப்பாடு, சாதன ஒதுக்கீடு போன்ற சாதாரணக் கட்டுப்பாடுகளையும் அமல் செய்யவேண்டும். நிதிக்கட்டுப்பாடுகளைச் செலாவணிக் கட்டுப்பாடுகளுடன் ஒப்பிடும்போது வளர்ச்சியடைந்த நாடுகளில் நிதிக் கட்டுப்பாடுகளே உயர்வான இடம் பெற்றுள்ளன. செலாவணிக் கட்டுப்பாடுகள் துணைக் கருவிகளாகப் பயன்படுகின்றன. வளர்ச்சி குன்றிய நாட்டில் பொதுவாகச் செலாவணிக் கட்டுப்பாடுகளின் நிலை (நிதிக் கட்டுப்பாடுகளுடன் ஒப்பிடும்போது) மிகவும் வேறுபட்டிருக்கவில்லை. இத்தகைய நாட்டில் செலாவணிக் கட்டுப்பாடுகள் கடன் கிடைப்பதையும் அதற்காகச் செய்யவேண்டிய அடக்கச் செலவையும் பாதிக்கின்றன. ஆனால், நிதிக் கட்டுப்பாடுகள் மக்கள் பெறக்கூடிய நிதியையும், அவர்களுடைய வாங்கும் சக்தியையும் கட்டுப்படுத்துகின்றன. வளர்ச்சி யடைந்த நாடுகளில் இவ்வேறுபாடு மேலும் தீவிரமாக இருக்கின்றது; நாட்டு வருமானத்

[1] See Dr. Pendharkar and Mr. Narasimhan, 'Evolution of Monetary Policy in India'' Reserve Bank of India Bulletin, April 1966, p 3.

துடன் இவைகளைத் தொடர்புபடுத்தி அமல் செய்வதற்கு ஏராள மாக இடம் இருக்கிறது. தேசீய வருமானத்தில் வரிகளுக்குட் படுத்தக் கூடிய பகுதி இந்த நாடுகளில் அதிகமாக இருக்கின்றது. எனவே, நிதிக் கட்டுப்பாடுகளின் திறன் வளர்ச்சி குன்றிய நாடு களில் குறைவாக இருக்கின்றது என்பது புலனாகிறது.[1] தேசீய வருமானம் பெருகப் பெருக நிதிக்கட்டுப்பாடுகளை மேலும் அதிக அளவில் கையாளலாம்.

### வளரும் நாடுகளில் செலாவணிக் கொள்கையின் குறுகிய பணி

வளர்ச்சி குன்றிய நாடுகளில் பண மூலதன மார்க்கட்டுகள் முதிர்ச்சியடையவில்லை; வங்கி முறை முழுமையாக வளர வில்லை. எனவே, செலாவணிக் கொள்கை குறுகலாகவே இயங்க முடியும். பணப் பரிவர்த்தனைக் கப்பாற்பட்ட பகுதி விரிவாக இருக்கின்றது; சில நாடுகளில் பொருளாதாரத்தில் 1/3 பங்கு இப் பகுதியாக இருக்கிறது. இதனால் செலாவணிக் கொள்கையின் பணி குறைவாக இருக்கிறது. பணத்தின் அளிப்பில் பெரும் பகுதி மக்கள் வசமுள்ள ரொக்கமாக இருப்பதாலும் செலாவணிக் கருவியின் பணி குறைந்திருக்கின்றது. இத்தகைய வளர்ச்சி குன்றிய நாடுகளில் வங்கிப் பணம் மொத்தப் பண அளிப்பில் மிகக் குறைவாக இருக்கிறது. மைய வங்கியின் நடவடிக்கைகள் வங்கிக்கடனை மாற்றும், ஆனால், மக்களிடம் உள்ள ரொக்கத்தை மாற்ற முடியாது. இதை மக்கள் எவ்வளவு ரொக்கம் வைத்துக் கொள்ள வேண்டும் என்று முடிவு செய்கின்றனரோ அதுவே நிர்ணயம் செய்யும். இந்தச் சந்தர்ப்பத்தில் மைய வங்கியின் கட்டுப்பாடு, பண அளிப்பில் ஒரு பகுதியையே பாதிக்கும். ஆகை யால் இது வளர்ச்சியடைந்த, தொழில் முன்னேற்றமடைந்த நாடுகளில் அளிக்கக்கூடிய அளவு பலன் மற்ற நாடுகளில் அளிக் காது. ஆனால், வளரும் நாடுகளில் நிலையங்களின் அமைப்பு, பொருளாதார வளர்ச்சியை ஒட்டி விரைவில் மாறும். வங்கி முறை வளர்வதை அடுத்து வங்கிப் பழக்கங்களும் வளரும். மொத்தப் பண அளவில் வங்கிப் பணம் அதிக இடத்தையும் பெறும். சில வளரும் நாடுகளில் மக்கள் வசமுள்ள ரொக்கத்தை விட அவர்களுடைய வங்கி டெப்பாசிட்டுகள் விரைவில் பெருகி விட்டன. இந்தியாவில் 1965ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் முடிவடைந்த 4 ஆண்டுகளில் ரொக்கப்பெருக்கம் 32% ஆக இருந்தது; ஆனால், வங்கி டெப்பாசிட்டுப் பெருக்கம் 62% ஆக

[1] Lecture delivered by Dr. B. K. Madan: 'Role of Monetary Policy in Developing Economy', Reserve Bank of India Bulletin, April 1961.

இருந்தது.[1] இவ்வாறு வங்கிக் கடன் பொருளாதார நடவடிக்கைகளில் பிரதான இடம் பெறுவதால். செலாவணிக் கட்டுப்பாடுகளுக்குட்படும் பகுதி பெருகும்; வளர்ச்சியடைந்த நாடுகளுக்கு நிகராகக் கூட வளரும். ரொக்கத்தைத் தவிர மற்ற ரொக்கநிலைச் சொத்துகள் முக்கியமற்றிருக்கின்றன; ஏனெனில், வங்கிகளல்லாத மற்ற நிதி நிலையங்கள் சரிவர வளர்ச்சியடையவில்லை. இந்த நிலையில் செலாவணிக் கொள்கை நன்கு செயல்பட வழி இருக்கின்றது. ஆனால். மற்ற நிதி நிலையங்கள், தவணைக் கடன் முறை வங்கிகளுக்கு நிதியளிக்கும் நிலையங்கள். கட்டடச் சங்கங்கள், நிதியசங்கள் முதலியவை வளர்ச்சியடைவதால் செலாவணிக் கட்டுப்பாட்டுக்கு இடர்ப்பாடுகள் ஏற்படும். இந்தியாவில் அண்மையில் வங்கி டெப்பாசிட்டுகளில் உள்ள நிதி தவணைக் கடன் நிலையங்களுக்குத் திரும்பிவிட்டன.

வளர்ச்சியடையும் நாட்டில் பணவீக்கத்தை எதிர்த்து எடுக்கும் நடவடிக்கைகள் செலாவணிக் கட்டுப்பாடாக மட்டும் இருக்கலாம் என்று கருதுவது உசிதம் அல்ல. இத்தகைய நாடுகளில் பண வீக்கத்தை உருவாக்கும் சக்திகள் சிக்கலாக இருக்கின்றன. பெரும்பாலும் அளிப்பிலிருந்து எழும் இவை நிதிப் பற்றுக்குறையாகவும், தேவை குறைவதற்குக் காரணமாகவும் இருக்கின்றன. செலாவணிக் கொள்கை மொத்தத் தேவையைத் திருத்தவேண்டும். ஆகையால் செலாவணிக் கொள்கை மூலம் தொடர்ந்து நீடிக்கும் பண வீக்கத்தைத் தணிப்பதற்கு இந்த நாடுகளில் அதிக இடமில்லை. தேவையளிப்பில் உள்ள சமநிலையின்மை ஓரளவு சட்டுக்கடங்கும். ஆனால் அறவே நீங்காது. இதை விளைவிக்கும் சக்திகள் அளிப்புடன் தொடர்பு கொண்டிருக்கின்றன. சாதாரணக் கட்டுப்பாடுகள் அல்லது நிதி நடவடிக்கைகள் மூலம் தக்க நடவடிக்கைகள் எடுக்கவேண்டும். வளர்ச்சியடையும் நாடுகளில் செலாவணிக் கொள்கைக்கு அதிக வாய்ப்பில்லை, அதை மற்றக் கருவிகளுடன் இணைத்துச் செயல்படுத்த வேண்டுமென்று குறிப்பிட்டபோதிலும், தேவை மூலம் பண வீக்கம் ஏற்பட்டால் இக்கருவியைத் தாராளமாகப் பயன்படுத்தலாம். இந்த நிலை 1960-ல் லிபியாவில் ஏற்பட்டது.[2]

### வளரும் நாடுகளின் செலாவணிக் கொள்கைக் கருவிகள்

மைய வங்கிகள் பின்பற்றும் செலாவணிக் கொள்கை பற்றிய சிறு திறனாய்வை இங்குச் செய்வது சுவையாக இருக்கும். சில

[1] Recent Evolution of Monetary Policy in India in Reserve Bank of India Bulletin, April 1966.

[2] Sixth Annual Report, National Bank of Libya, 1962. pp. 31-35.

வளரும் நாடுகள் கையாளும் கருவிகளையும் பார்க்கலாம். இந்தியா பற்றிய விவரங்களைப் பின்னர் ஓர் அதிகாரத்தில் விரிவாகக் காணலாம். இதைத் தவிர விரைவில் வளரும் நாடாகிய ஆஸ்திரேலியாவிலும் அண்மையில் விடுதலை பெற்ற சில ஆப்பிரிக்க, ஆசிய நாடுகளிலும் உள்ள பழக்கங்களை இங்குக் காணலாம். பெரும்பாலான நாடுகளில் மைய வங்கிகள் பழைய கட்டுப்பாட்டுக் கருவிகளையும், புதிய கருவிகளையும் கையாள அதிகாரம் பெற்றுள்ளன என்பதைக் காணலாம். இக் கருவிகள் சிலவற்றைக் கையாளுவதற்கு இந்நாடுகளின் நிலைய அமைப்புகள் உகந்தவையாக இல்லை. பண, மூலதன மார்க்கட்டுகள் வளர்ந்தபின் சமுதாயப் பொருளாதார உள்ளமைப்பும் (infra structure) வளர்ந்தபின், இவைகளைப் பயன்படுத்தலாம் என்று கருதினர். குறிப்பிட்ட வங்கிக் கடன் நிலையைச் சமாளிப்பதற்காகப் பழைய கருவிகளைக் கையாள இந்நாடுகள் தயங்கவில்லை. இக் கருவிகளை அறவே புறக்கணிப்பதைவிடப் புதிய முறையில் கையாளுவதையே இவை விரும்பின. ஏற்றுமதியை அடிப்படையாகக்கொண்ட இந்நாடுகள் சில சிறப்பான சிக்கல்களைத் தீர்க்கப் புதிய கருவிகளை உருவாக்குவதிலும் தம் திறனைப் புலப்படுத்தின. வளரும் நாடுகள் கையாளக்கூடிய செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவிகள் இருவகைப்படும் என்று நாம் குறிப்பிட்டோம். இவை (1) அளவுக் கருவிகள், (2) தேர்வுக் கருவிகள். வங்கி வீதம் (அல்லது தள்ளுபடி வீதக் கொள்கை), வெளி மார்க்கட்டு நடவடிக்கைகள், மாறும் காப்பு விகிதம் (அதன் வெவ்வேறு முறைகள் உள்ளிட்டது) முதலியவை முதல் வகையைச் சார்ந்தவை. இரண்டாவது வகையில் வளரும் நாடுகள் கையாளும் பலவகைத் தேர்வுக் கட்டுப்பாட்டுக் கருவிகளைக் குறிப்பிடலாம். ஆணைகள், அறிவுரை, வேண்டுகோள்கள், கடன் கொடுத்தலுக்கு உச்சவரம்பு கட்டுதல், குறிப்பிட்ட அளவுக்குமேல் அனுமதியின்றிக் கடன் கொடுத்தலைத் தடை செய்தல், பலவகைக் கடன்களின் வட்டிவீதங்களைக் கண்காணித்தல் முதலியவை மூலம் கடன் கொடுத்தலைக் கட்டுப்பாடு செய்யலாம் என்பது குறிப்பிடத்தக்கது.

வளரும் நாடுகளில் நிதி நிலையங்கள் நன்கு வளரா நாளாகும்; நியாயமான வட்டிவீதத்தை ஏற்றுப் பலர் கடன் வாங்க முனைவர். கடன் தேவை எல்லையற்றிருக்கும் இவ்வளவு உயர்வான தேவை இருக்கும் நிலையில் வங்கிகள் தாம் கடன் கொடுக்கும் கடன்களின் அடக்கச் செலவு (cost), வருமானம் (yield), ஆபத்து (risk) முதலியவைகளை மனத்தில் கொண்டு அவைகளைக் கூடியவரையில் உயர்த்த முனையும். இந்த நிலையில் வர்த்தக

வங்கிகள் டெப்பாசிட்டர்கள் தொகைகளைக் கடன் கொடுப்பதை மையவங்கி கட்டுப்படுத்தலாம். அது வர்த்தக வங்கிகளுடைய ரொக்கக் காப்பைக் (cash reserves) கடன் கொடுத்தல் மூலம் அதிகரிக்கலாம். இக்கடனுக்கு அது வசூல் செய்யும் வட்டி—அதாவது கடனின் அடக்கச் செலவு—முக்கியமானது. இதைக் கண்காணிப்பதன் மூலம் மைய வங்கி, கடனளவைக் கட்டுப்படுத்தலாம். மைய வங்கியின் கட்டுப்பாடுகள் தளர்த்தப்படும் போது, வர்த்தக வங்கிகள் தக்க முறையில் நிலையைப் பயன்படுத்திக்கொள்ளும் என்பது எடுகோள். வேண்டும்போதெல்லாம் மைய வங்கி கட்டுப்பாடுகளை அமல் செய்யும். மைய வங்கியின் கடன்கள், உண்டியல்களின், பத்திரங்களின் மீள்தள்ளுபடி (rediscount) மூலமும், துணையீட்டுப் பத்திரங்களை வெளியிடல் மூலமும் கொடுக்கப்படுகின்றன. பழைய கருவியாகிய வங்கி வீதம், மற்றொரு கருவியாகிய வெளி மார்க்கட்டுக் கொள்கையிலிருந்து வேறுபட்டிருக்கவில்லை. அண்மையில் விடுதலை பெற்ற ஆசிய ஆப்பிரிக்க நாடுகளில் மைய வங்கிகள் வங்கி வீதக் கருவியைக் கையாளும் அதிகாரம் பெற்றிருக்கின்றன. வங்கி வீதத்தைப் பயன்படுத்துவதற்கு நன்கு வளர்ந்த குறுகிய காலப் பண மார்க்கட்டுவேண்டுமென்றபோதிலும். வளர்ச்சி குன்றிய நாடுகளில் இக்கருவியை எளிய முறையில் கடன் கட்டுப்பாட்டுக்காகக் கையாளும் வழிகளைக் கற்றுக்கொண்டனர். குறுகிய காலக் கடன் மார்க்கட்டுகள் வளராதபோதிலும் இந்த நாடுகளில் வர்த்தக உண்டியல்களும் (trade bills). பரிவர்த்தனை உண்டியல்களும் (bills of exchange) இல்லாமலில்லை.

ஏற்றுமதியாளர்களுடைய வர்த்தக உண்டியல்களையும், கடன் பத்திரங்களையும் சூடான் வங்கி (Bank of Sudan) தள்ளுபடி செய்யும் ஒரு முறையைக் கண்டுபிடித்தனர். இதே தள்ளுபடி வசதிகளை 1961-ல் வாடிக்கைக்காரர்கள் சார்பில் வர்த்தக வங்கிகள் கொண்டுள்ள ஏற்புகளுக்கும் (acceptances) அளித்தது. தொழில், விவசாயத் துறைகளில் உள்ளவர்களுக்குக் கச்சாப் பொருள்களையும், ஓரளவு உற்பத்தி முற்றுப்பெற்ற பண்டங்களையும் (semi manufactured) வாங்குவதற்குக் கடன் கொடுக்கின்றது.[1]

சில சந்தர்ப்பங்களில் வர்த்தக வங்கிகளுடைய ரொக்க நிலை வங்கி வீதக் கருவியின் திறமையைத் தீர்மானிக்கிறது. உதாரணமாக லிபிய நாட்டு வங்கிகள் அமித ரொக்க நிலையைக் கொண்டிருந்தமையால் மைய வங்கியின் உதவியை நாடவில்லை. லிபியத்

[1] 'Central Banking in Emerging Countries' pp. 130-1.

தேசிய வங்கி (The National Bank of Libya) மீள்தள்ளுபடியை மாற்றுவதால் வர்த்தக வங்கிகளின் கடன் கொள்கையில் எவ்வித மாறுதலும் இல்லை. வங்கிக் கடனின் அளவும் உற்பத்தியும் வங்கி வீதத்துடன் எவ்விதத் தொடர்பும் கொள்ளவில்லை. மீள் தள்ளுபடி வீதம் உயர்ந்தபோது வங்கிக் கடன் பெருகியது. இவ் வீதம் 1961-ல் கணிசமாகக் குறைந்தபோது வர்த்தக வங்கி களுடைய கடன் கொடுக்கும் வீதம் கணிசமாகக் குறையவில்லை.[1] ஆனால், வேண்டாத சில வகைக் கடன்களைத் தேர்வுக் கருவிகள் மூலம் கட்டுப்படுத்தினர். இவ்வாறு உபரி ரொக்க நிலையைக் கட்டுப்படுத்தினர். மைய வங்கியின் மீள்தள்ளுபடிக் கொள்கை யுடன் தேர்வுக் கருவிகளையும் பயன்படுத்தினர். பல்வகைப் பத்திரங்களைக்கொண்டு வாங்கும் கடன்களுக்கு அல்லது மைய வங்கியிடம் மீள்தள்ளுபடி செய்யும் பல்வேறு துணையீட்டுப் பத்திரங்களுக்குப் பற்பல வட்டி வீதங்களை அது வசூல் செய்தது. நாட்டின் வளர்ச்சித் திட்டங்களில் சில முன்னுரிமைகளைப் (priorities) புகுத்தினர். இவைகளை யொட்டிப் பல்வேறு கடன் களுக்குப் பலவகை உரிமைகளை வழங்கினர். இவ்விதமாகச் சூடான், ட்யுனிசியா, வெனிசூலா, கோஸ்டாரிகா, ஈக்வடார், பராகுவே, பிலிப்பைன்ஸ் முதலிய நாடுகளில் பற்பல வட்டி வீதங்களைப் பாகுபாட்டு முறையில் வசூல் செய்தனர்.[2] இத் தகைய சலுகை முறை வட்டி வீதங்களுக்கு நிகராக அளவுக்கு மீறிய கடன் வாங்கலுக்கு அபராத வட்டி முறையை அமைத் துள்ளனர். படிவமுறைத் தள்ளுபடி (slab system of discount) வீதங்களை இந்தியா, பாகிஸ்தான், ட்யூனிசியா நாடுகள் கையாண்டன. சலுகை முறை வீதங்கள் (preferencial rates) மூலம் வேண்டிய வழிகளில் கடன் கொடுத்தலை ஊக்குவிக்கலாம்; வேண்டாதவைகளிலிருந்து அதைத் திருப்பிவிடலாம். இவ்வாறு வங்கி வீதக் கருவியைக் கடன் பங்கீட்டுக்குக் குறிப்பிட்ட காரணங் களுக்குக் கடனளிப்பை ஊக்குவிக்கவும், மற்றவைக்குக் கடனளிப் பைக் கட்டுப்படுத்தவும் பயன்படுத்துகின்றனர். பொதுவாகக் கடன் கட்டுப்பாட்டுக்கு இதைப் பயன்படுத்தவில்லை.

இங்கிலாந்தில் வங்கி வீதத்தைக் கையாளுவதைப் போல் வளரும் நாடுகளில் மைய வங்கிகள் தள்ளுபடி வீதக் கொள்கை யைக் கையாளவில்லை என்பதைக் குறிப்பிடவேண்டும். இந் நாடு களில் சிழ்க்காணும் வேறுபாடுகள் உள. பல வீதங்களை மைய வங்கி வசூல் செய்கின்றது. வர்த்தகவங்கிகள் கடன்பெறக்கூடிய

[1] Sixth Annual Report of the Board of Directors. National Bank of Libya. 1962, p. 39.

[2] Jaramillo, 'Central Bank Discount, Rates,' I.M.F. Staff Papers, Mar. 1966.

அளவுகள் நிர்ணயம் செய்யப்பட்டுள்ளன. அளவுக்குமீறிக் கடன் வாங்கும் வங்கிகள் அபராதம் செலுத்தவேண்டும். பிரெஞ்சு முறையைப் பின்பற்றும் மொராக்கோ.[1] ட்யூனிசியா நாட்டு மீள் தள்ளுபடி முறை ஒரு புதுமையைக்கொண்டிருக்கின்றது. உயர்ந்த பட்சம் 5 ஆண்டுகள் தவணைக் காலம் கொண்ட இடைக்கால வர்த்தக உண்டியல்களை—கட்டடவேலை, போக்குவரத்து, தளவாடங்கள் வாங்குதல் முதலியவைகளுக்காகக் கொடுக்கப்பட்ட கடன்கள் மூலம் பிறந்த உண்டியல்களை—தள்ளுபடி செய்யச் சட்டம் இடமளிக்கின்றது.

1963-ல் கானுவில் தீவிர பணவீக்கம் ஏற்பட்டது. இதை எதிர்த்துக் கானு வங்கி (Bank of Ghana) பல நடவடிக்கைகளை எடுத்தது. நைஜீரியாவின் மைய வங்கியும் இத்தகைய 'நடவடிக்கைத் தொகுதி' முறையைக் (package deal approach) கையாண்டது. இதிலிருந்து இதுகாறும் பயன்படுத்தாத புதிய நடவடிக்கைகளைக் கையாள மைய வங்கிகள் தயங்கியதில்லை என்பது புலனாகின்றது. நைஜீரியாவில் பற்றுக்குறை நிதியாக்கத்தாலும் மற்ற நடவடிக்கைகளாலும் பண அளவு ஏராளமாகப் பெருகியது. 1961–64-ல் பண அளவு 30% பெருகியது. கடுமையான பண வீக்கத்தை எதிர்த்து மைய வங்கி பல நடவடிக்கைகளை எடுத்தது. இவைகளுள் வங்கிவீதம் செல்வாக்கைப் பயன்படுத்தல் (moral suasion), பாகுபாட்டுக் கட்டுப்பாடுகள் முதலியவை இடம் பெற்றன. 1965–ல் பண அளவு 3.1% கூடியது. ஆனால் 1964-ல் 16% உயர்ந்தது.[2] 1962ஆம் ஆண்டின் இறுதியில் ரொக்க விகிதம் 46·3% ஆக இருந்தது. 1963ஆம் ஆண்டின் இறுதியில் இது 26.5% ஆகக் குறைந்தது. இதிலிருந்து கடன் பெருக்கம் மிகுதியாக இருந்தது என்பது தெளிவாகின்றது. கானுவின் வர்த்தக வங்கிகள் குறைந்தபட்ச ரொக்கத்தையோ அல்லது ரொக்க விகிதத்தையோ கொள்ள வேண்டும் என்ற சட்டம் இல்லாமையால் நிலைமை சிக்கலாக இருந்தது. கானுவின் மைய வங்கி கடன் செலாவணியை ஸ்திர நிலையில் வைத்துக்கொள்வதோடு விருப்பப்படி அந்நாட்டின் பொருளாதாரம் வளரவேண்டும் என்றும் நிருவாகிகள் விரும்பினர்.

1964ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் முதல் தேதியிலிருந்து புதிய கட்டுப்பாட்டு முறையின் கீழ் பல நடவடிக்கைகள் எடுத்தனர். வங்கிகள் கண்ட முறையில் காப்புநிதிகளை வைத்துக்கொள்ள

[1] Art 21, Statute of the Bank of Moracco.
[2] S. K. Basu, Central Banking in the Emerging Countries, p. 138.

வேண்டும். (1) குறைந்தபட்ச 8% ரொக்கம் (2) குறைந்தபட்ச காப்பு விகிதம் 48.5% (3) டெப்பாசிட்டில் கொள்ளவேண்டிய மற்ற ரொக்கநிலைச் சொத்துகள் 40–46% (4) குறைந்தபட்ச சிறப்பு டெப்பாசிட்டு 5% (5) குறைந்தபட்ச அரசினர் பத்திரக் காப்பு 8% 5000 டாலருக்கு மேற்பட்ட கடனை விவசாயத்திற்கோ அல்லது தொழிலுக்கோ கொடுக்கும் முன் காரு வங்கியின் அனுமதி பெறவேண்டும். பற்றுத் திருமுகம் அளிக்கப்படுவதற்கு முன் 15 சதவீதம் முன் பணம் கட்டவேண்டும்.[1] இக்கட்டுப்பாடுகளின் பலன் தற்காலிகமாகவே இருக்கும் என்பதை வளர்ச்சி குன்றிய நாடுகளின் அனுபவம் மெய்ப்பிக்கின்றது. பராகுவே, நிகார்குவா இந்தோனேசியா நாடுகளை உதாரணமாகக் காட்டலாம்.

ரொடீசியா – நயாசாலாந்தின் ரிசர்வ் வங்கி ஒரு தேசியச் செலாவணிக் கொள்கையைத் தொடக்க காலத்திலிருந்தே பின்பற்ற முனைந்தது. வங்கிவீதக் கொள்கை பொருளாதாரத்தில் தொடக்கத்திலிருந்தே செல்வாக்கைப் பெற்றது. நிதிமுறையில் கடன்தொகையையும் விருப்பத்திற்கேற்ப மாற்ற முடிந்தது. பண மார்க்கட்டு குறுகியதாக இருந்தது என்பதில் ஐயமேதுமில்லை. ஆனால், அது விறுவிறுப்பாக இயங்கியது. பண அளிப்பில் அடிக்கடி மாறுதல்கள் ஏற்பட்டன. உண்டியல்களின் தேவையும் மாறிக்கொண்டிருந்தமையால் மையவங்கியின் தலையீடு அவ்வப்போது தேவையாயிற்று. இத்தலையீடு வெளிமார்க்கட்டுநடவடிக்கைகளை ஒத்திருந்தது. திருப்திகரமான பலனையும் கொடுத்தது. மிகத்தீவிரமான முறையில் வங்கி வீதத்தையும், மாறும் காப்பு விகிதத்தையும் அமல் செய்தால் சாதாரண வங்கிகள் பாதிக்கப்படும் என்று கூடக் கருதினர். வர்த்தக வங்கிகளுடன் நல்லுறவு கொள்ள விரும்பிய மைய வங்கி அவைகளிடம் தம் செல்வாக்கையே பயன்படுத்த விரும்பியது. மைய வங்கியின் ஆளுநர் (Governor) கூறியதைப் போல் கடன் நெருக்கத்தையும் (credit squeze) பயன்படுத்தினர். தீவிரமான நிலை ஏற்பட்டால் நிதியமைச்சகத்தின் அனுமதி பெற்று வர்த்தக வங்கிகளுக்கு ஆணை கொடுக்கலாம்.[2]

வளரும் நாடுகளில் வெளிமார்க்கட்டு நடிவடிக்கைகளுக்குகந்த வசதிகள் இல்லாதபோதிலும், மைய வங்கிகள் இந்த நடவடிக்கைகளை மேற்கொள்ள அதிகாரம் பெற்றுள்ளன. பெருக்க சக்திகளை எதிர்த்து வெளி மார்க்கட்டில் அரசு பத்திரங்களை விற்பனை செய்தால் இப்பத்திர மார்க்கட்டு பாதிக்கப்படும். அரசு

[1] Annual Report of the Bank of Ghana for the year 1964. p. 70, pp. 89-90.

[2] Annual Report of the Bank of Rhodesia and Nyasaland, 1962-64.

பத்திரங்களின் விலைகள் அதிக ஏற்றத் தாழ்வுகளுக்குட்படும். ஆனால், இவை சாதாரண வர்த்தக வங்கிகளுடைய ரொக்கத்தைப் பாதிக்காது. சமுதாயம் அரசு பத்திரங்களைப் பரவலாக வாங்கு வதற்குகந்த சூழ்நிலையை உருவாக்குவதில் அரசினர் அக்கறை காட்டுவர். இதனால் வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளை மைய வங்கி, செலாவணிக் கருவியாகப் பயன்படுத்துவது கடினமாகின்றது. வெளி மார்க்கட்டுக் கொள்கையின் பயன் இதனால் குறைந்துவிடுகின்றது. ஆனால், நவீன முறையில் இதை ஆளுவதற்குத் தடையேதுமில்லை. மைய வங்கி வரையற்ற முறையின் அரசு பத்திரங்களை வாங்குவதற்கும் விற்பதற்கும் நிர்ணயிக்கும் விலையை மாற்றுவதின் வாயிலாக வெளிமார்க்கட்டு நடவடிக்கைகளைப் பயனுள்ள முறையில் ஆளலாம். இவ்வாறு பாக்கிஸ்தானிய மைய வங்கிமுறையை விமர்சனம் செய்யும் ஓர் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். விற்பனை, வாங்கலுக்குட்படும் பத்திர அளவை மட்டும் மாற்றுவதற்குப் பதிலாக இவ்வாறு செய்யலாம், வர்த்தக வங்கிகள் மைய வங்கியின் விருப்பத்திற் கிணங்கிப் பத்திரங்களை அது விரும்பும் அளவிலும் முதிர்வுப் பணிகளுடன் வைத்துக்கொள்ளத் தூண்டுதல் பெறும். குறைந்தபட்ச ரொக்க வீதத்திற்காகக் கொள்ளவேண்டிய அளவைவிட வங்கிகள் அதிக அளவில் அரசு பத்திரங்களைக் கொள்ளும்.[1]

நவீன முறை வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளை மேற்கொள்வதில் ஏற்படும் இடர்ப்பாடு மைய வங்கி ஏற்கவேண்டிய வட்டித் தொகையாகும். மிக அதிக அளவில் பத்திர வாங்கலைத் தவிர்க்கவும், மிகக் குறைவான அளவில் அவைகளை விற்பதைத் தவிர்க்கவும், மைய வங்கிகள் பத்திரங்களுக்கு உயர் வீதங்களை நிர்ணயம் செய்தல் வேண்டும். ஆனால், இந்த நிலையில் பத்திரங்களின் விலைகள் நிச்சயமற்ற நிலையிலிருந்தபோதிலும் அவைகளுடைய மார்க்கட்டு கணிசமாக விரிவடைகின்றது. இத்தகைய பத்திரங்களை வங்கிகள் மட்டுமன்றி மற்ற நிலையங்களும் வாங்க முனையும். ஆகையால் வட்டி வீதங்கள் விரைவில் உயரா. வட்டி வீத உயர்வு பூச்சிய நிலையிலிருக்க வழியில்லை. பொதுக் கடனை நிருவாகம் செய்ய அதிகச் செலவாகும். ஆனால், செலாவணிக் கொள்கை வாயிலாகக் கிடைக்கும் இறுதிநிலை வருமானத்தைப் பார்க்கும்போது இது அதிகமெனக் கூறமுடியாது.

[1] R. C. Porter. 'Narrow Markets and Monetary Policy', in Economic Development and Cultural change, October 1965.

**மைய வங்கியர் சக்தியற்றிருக்கின்றனர் அல்லது விறுவிறுப்பான செலாவணிக் கொள்கையைச் செயல்படுத்துவதற்கு விருப்ப மற்றிருக்கின்றனர்**

இறுதியாக வளரும் நாடுகளில் மைய வங்கியர் ஒன்று சக்தி யற்றிருக்கின்றனர். அல்லது விறுவிறுப்பான செலாவணிக் கட்டுப்பாட்டுக் கொள்கையைப் பின்பற்றுவதற்கு விருப்பமற் றிருக்கின்றனர் என்று குறிப்பிடலாம். வளர்ச்சி நிறைந்த நாடு களில் உள்ள கட்டுப்பாட்டுக் கருவிகள் அனைத்தையும் அவர்கள் கொண்டிருக்கலாம். தம் சொல் கேளாத வங்கிகளை தண்டிக்கும் அதிகாரங்களையும் அவை பெற்றிருக்கலாம். எனினும், அதிகா ரத்தைப் பயன்படுத்துவதற்கு வேண்டிய நுட்பமான சூழ்நிலை நிலவாமலிருக்கலாம். இரண்டாவதாகக் கடன் பெருக்கத்தைக் கட்டுப்படுத்த அவை போதிய அதிகாரம் பெற்றிருந்தபோதிலும் இவைகளைச் செலுத்தத் தயங்கலாம், ஏனெனில், இவ்வாறு செய்தால், தொழிலதிபர்கள் அவர்களைச் சாடுவர். தனி வங்கியரும் அரசியலாரும் அவர்களை வெறுப்பர். மைய வங்கியர் உலகெங்கும் 'பெருக்கத்தை விளைவிக்கும் கருவியாக' (Engines of growth) இயங்குகின்றனர். கட்டுப்பாடுகள் உற்பத்தியையும், வளர்ச்சியையும் பாதிக்கும் என்று அஞ்சுகின்றனர், அவர்க ளுடைய முதிர்வு, இடம், கவுரவம் முதலியவை அவர்கள் மார்க்கட்டின் போக்கைக் கட்டுப்படுத்த முடியும் என்ற நம்பிக்கை ஏற்படுவதற்குகந்ததாக இல்லை.[1]

[1] J. Ahrensdroff in I. M. F. Staff Papers, October, 1959.

# 11. ஆஸ்திரேலியாவில் செலாவணிக் கொள்கை : ஓராராய்ச்சி

1945ஆம் ஆண்டின் வங்கிச்சட்டம் (Banking Law) கடுமையான அம்சங்களைக் கொண்டிருந்தது; இவை செலாவணி முறை, தடையின்றி இயங்குவதற்குத் தடையாக இருந்தன. லேபர் கட்சியின் முன்யோசனையற்ற நாட்டுடைமைக் கொள்கைக்கு வர்த்தக வங்கிகள் இலக்கானதாலும் செலாவணிக் கொள்கை பாதிக்கப்பட்டது. இவைகளனைத்தும் வர்த்தக வங்கிகளுடைய எதிர்ப்பைத் (காமன்வெல்த் வங்கிக்கு எதிர்ப்பு) தூண்டின. அண்மை நாடுகளில் மைய வங்கி தன் கொள்கையைக் கடுமையாக வர்த்தக வங்கிகள் மீது திணிப்பதற்குப் பதிலாக அவைகளுடைய ஒத்துழைப்பைச் சமாதான முறையில் கோரியது. மைய வங்கியின் இப்போக்கு நல்ல பயனளித்தது.

ஆஸ்திரேலிய ரிசர்வ் வங்கியின் செலாவணிக் கொள்கையைப் பரிசீலனை செய்யும்போது அதன் செலாவணிக் கொள்கையின் நோக்கங்களையும், கொள்கையைச் செயல்படுத்தக் கையாளும் கருவிகளையும் கவனிக்கவேண்டும். மற்ற வளரும் நாடுகளைப் போலவே பொருளாதார நடவடிக்கைகள் பெருகி வேலை நிறைவு ஏற்படுவதற்கும் போதிய அளவு வங்கிக் கடன் கொடுக்கப்படவேண்டும். இதுவே செலாவணிக் கொள்கையின் பிரதான நோக்கமாகும். போதிய அளவு வங்கிக் கடன் கொடுப்பதும் கடன் தரத்தைக் கட்டுப்படுத்துவதும் முக்கிய நோக்கமாகும். வளரும் நாடுகள் பழைய கருவிகளை மட்டும் பயன்படுத்துவதில்லை. பழைய கருவிகள் அறவே புறக்கணிக்கப்படுவதில்லை. அவைகளைத் திருத்தியமைக்கின்றனர். புதிய விநோதமான பொருளாதார நிதிச் சூழ்நிலைக்கேற்றவாறு புதிய கருவிகளைக் கையாளுகின்றனர்.

வங்கி வீதம் பழைய கட்டுப்பாட்டுக் கருவிகளுள் ஒன்றாகும். ஆனால், இது ஆஸ்திரேலியக் கட்டுப்பாட்டுப் படைக்கலனுள் இடம் பெறவில்லை என்பது குறிப்பிடத் தக்கது. சட்டபூர்வ டெப்பாசிட்டு முறை, மாறும் காப்பு விகிதத்தின் ஒரு திருத்தமேயாகும். பழைய 'சிறப்புக் கணக்கு முறை'க்குப் பதிலாக இதைப்

பின்பற்றினர். இதுவே ஆஸ்திரேலியா நாட்டின் முதன்மையான செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவியாகும். சிறப்புக் கணக்கு முறை 1841-ல் தேசீயக் கட்டுப்பாட்டு முறையின் கீழ் (National Security Regulation Banking) அமலாயிற்று. வெளிமார்க் கட்டுக் கொள்கை, வங்கிவீதக் கட்டுப்பாடு, வங்கிகள் கடன் கொடுப்பதை ஒழுங்குபடுத்துவது முதலியவை ரிசர்வ் வங்கியின் மற்றக் கருவிகள்.

தற்போது அமலில் உள்ள சட்டபூர்வமான டெப்பாசிட்டு முறை சிறப்புக் கணக்கு முறைக்குப்பின் கையாளப்பட்டது. சிறப்புக் கணக்கு முறையின் முக்கிய அலுவல் உபரி ரொக்கத் தன்மையை வர்த்தக வங்கிகளிடமிருந்து நீக்குவதாகும். மரபுப் படி உள்ள அல்லது சட்டபூர்வமான குறைந்தபட்ச ரொக்கம் அல்லது ரொக்க விகிதம் கிடையாது. இதற்குக் காரணம் பொருளாதாரத்தில் பருவகால வர்த்தகச் சூழல், ஏற்றத்தாழ்வுகள் பெருமளவில் நிகழ்வதுதான். வங்கிகள் கடன் கொடுக்கும் தொகையில் ஒரு ஸ்திர நிலையையும், நெகிழ்வையும் கொள்வதற்காக அவ்வப்போது நிலைமைக் கேற்ப நெகிழும் காப்பு விகிதத்தைக் கொண்டன.

அளவுக் கட்டுப்பாடு : சட்டபூர்வக் காப்பு விகித முறை

1941-லிருந்து 1959 வரை 'சிறப்புக் கணக்கு முறை' இயங்கியது. அதன்பின் அமலில் வந்த சட்டபூர்வக் காப்பு விகித முறையின் நோக்கம், பருவகாலக் கடன் தேவைகளைப் பூர்த்தி செய்வதும், உற்பத்திச் சாதனங்கள் முழு அளவு பயன்படுவதற்கு வேண்டிய அளவு நிதி உதவியளித்தலும் ஆகும்.

காமன்வெல்த் வங்கி, ஆஸ்திரேலிய ரிசர்வ் வங்கியாவதற்கு முன்னர் ரொக்கநிலை பற்றிய மரபொன்றை வர்த்தக வங்கிகளிடம் ஏற்படுத்த முடிந்தது. 1952-ல் இதுபற்றிச் செய்த முயற்சிகள் தோல்வியடைந்தன. ரொக்கநிலை பற்றிய மரபை ஏற்படுத்துவதில் 1956-லேயே வெற்றி கிடைத்தது. இந்த ஆண்டிலிருந்து ரொக்க விகிதக் காப்பொன்றை நிலைநாட்ட வர்த்தக வங்கிகள் தாமாகவே முன்வந்தன.[1] இவ் விகிதத்தில் அரசு பத்திரங்கள் இடம்பெற்றன. அதை ரொக்கநிலை அரசு பத்திர விகிதம் — ரொ.அ.வி. (L.G.S. Ratio) என்றனர். இவ் விகிதம் ஒரு குறிப்பிட்ட மட்டத்திற்குக் கீழ் குறையாது, சட்டமில்லாமல் இம்முறை இயங்கும். ஒரு வங்கியின் ரொ.அ.வி.

[1] நாணயங்கள், பொன், செலாவணித்தாள்கள், மைய வங்கியில் உள்ள டெப்பாசிட்டுகள், கருவூல உண்டியல்கள், உண்டியல் தாள்கள் — இவை ரொக்கக் காப்பில் இடம்பெற்றன. பண மார்க்கட்டுக் கணிக்கப்பட்ட கடன்கள் இதில் சேரா.

குறைந்தால் இதைச் சரிக்கட்டுவதற்கு அவ்வங்கி மைய வங்கியிடம் கடன் வாங்கும். நடப்புச் செலாவணிக் கொள்கைக் கேற்ற வட்டி வீதத்தில் மைய வங்கி கடன் கொடுக்கும். குறைந்த பட்ச ரொ.அ.வி.க்கும் வங்கிகள் கொண்டிருக்கும் ரொ.அ.வி.க்கும் இடையே உள்ள வேறுபாட்டைத் 'தனி ரொக்க நிலை' (free liquidity) என்றழைப்பர். இந்தத் 'தனி ரொக்க நிலை'யை மாற்றுவதன் மூலம் மைய வங்கி வங்கிக் கடனின் அளவைக் கட்டுப்படுத்தலாம். செலாவணிப் பெருக்கத்தை விளைவிக்க விரும்பும்போது மைய வங்கி, சட்டபூர்வக் காப்பு விகிதத்தைக் குறைக்கும். இதனால் தனி ரொக்கநிலைப் பகுதி கூடுதலடையும். இதற்கு மாறாகச் செலாவணிச் சுருக்கத்தை விரும்பும்போது காப்பு விகிதத்தை உயர்த்தும்; தனி ரொக்கநிலைப் பகுதி குறையும். முன்னர் 'சிறப்புக் கணக்கு முறை' பலனற்றுவிட்டது. மரபை ஒட்டிய அல்லது சட்டபூர்வக் காப்பு இராமையால், முன்னர் வங்கிகள் தம் வசமுள்ள அரசு பத்திரங்களை விடுத்து, தனியாருக்குக் கடன் கொடுத்தலை மேற்கொள்ளலாம். தனியார் கடன் இலாபகரமாக இருப்பின் இவ்வாறு செய்யலாம். முதன்முதலில் பின்பற்றிய ரொக்கநிலை விகிதம் 14%, பின்னர் 1960–ல் இதை 16% ஆகவும், 1962–ல் 18% ஆகவும் உயர்த்தினர். ரொ.அ.வி. மரபு வெற்றிகரமாக இயங்குகின்றது என்று ஆஸ்திரேலிய ரிசர்வ் வங்கி கருதுகின்றது. வர்த்தக வங்கிகள் இதன் விளைவாக நிலையான காப்பு விகிதத்தைக் கொண்டிருக்கின்றன. இவ்வாறு காப்பு விகிதம் வைத்துக்கொள்வது மாறும் காப்பு விகிதத்திற்கு இன்றியமையாதது. இதனால் வருமானம் அளிக்காத சட்டபூர்வமான காப்பு விகிதத்தை மிகுதியாகக் கொள்ளத் தேவையில்லை. 1959ஆம் ஆண்டின் வங்கிச் சட்டப்படி (Banking Act) வர்த்தக வங்கிகள் முந்தைய மாதத்தில் கொண்டிருந்த டெப்பாசிட்டில் 25% ரிசர்வ் வங்கியிடம் டெப்பாசிட்டாகக் கொள்ள வேண்டுமென்று கட்டளையிடலாம். 45 நாள் முன்னறிவிப்பின்மேல் இதை மேலும் உயர்த்தலாம். முதன் முதலில் நிர்ணயமான காப்பு 16.5% ஆகும். 1960 முதல் 1969 வரை ரொ.அ.வி.ஐப் பலமுறை மாற்றியுள்ளனர். இவ் விகிதம் 8.5%–லிருந்து 17.5% வரை மாறியது.[1] முன்னறிவிப் பில்லாமல் 25% வரை இதை உயர்த்தலாம். ஆனால், இந்த அளவு கூட உயர்த்தாததால் முன்னறிவிப்புக்கே இடமில்லை.

1960–ல் வீக்கநிலை நிலவியது. இதைத் தடுக்க ரிசர்வ் வங்கி நடவடிக்கை எடுக்கவேண்டும். ரிசர்வ் வங்கிப் பணச்

[1] Reserve Bank of Australia, Statistical Bulletin, June 1969, p. 328, Also Financial Supplement', Sept. 1969; p. 1.

சுருக்க நடவடிக்கைகளை எடுத்தபோது இக்கருவிக்கே ஒரு சோதனை ஏற்பட்டது. பல மாதங்களாக வர்த்தக வங்கிகள் ரிசர்வ் வங்கியில் கடன் வாங்கி ரொ.அ.வி.-ல் விழும் துண்டைச் சரிக்கட்டவேண்டியிருந்தது. இக் கடன்களுக்கு ரிசர்வ் வங்கி வசூல் செய்த வட்டி வீதங்களை அது வெளிப்படுத்த வில்லை. கடன் வாங்கும் வங்கிக்கும் ரிசர்வ் வங்கிக்குமே இவ் வீதம் தெரியும். இந்த விதமாக ஆஸ்திரேலியாவில் வங்கிவீதக் கொள்கை பின்பற்றப்படவில்லை.[1]

வர்த்தக வங்கிகளுக்கு அறிவுரைகள் கொடுப்பது, வட்டி வீதங்களை மாற்றுவது—இவ்விரண்டு கருவிகளையும் நன்கு கையாளுவதற்கு ரொ. அ. வி. உதவியாக இருக்கின்றது. இதனால் இரு கருவிகளும் வலிமை பெறுகின்றன.

தரக்கட்டுப்பாடு (Qualitative Control): வங்கிகள் கடன் கொடுப்பது பற்றிய அறிவுரை

பணவீக்கத்தைத் தடைசெய்ய ரொ.அ.வி. முறையை மட்டும் ஆஸ்திரேலியா நம்பவில்லை. அதிகப் பற்றுக் கடன் முறையில் (over draft) கடன் வாங்கப் பயன்படுத்தாத பகுதியைப் பயன் படுத்துவதை இம்முறை கட்டுப்படுத்தவில்லை. இரண்டாவது போர்க் காலத்திலும், போருக்குப் பின்னரும் கடன் தரத்தைக் கட்டுப்படுத்த பெருமுயற்சி செய்தனர். முதன் முதலில் அவசிய மற்ற துறைகள் யாவை, முக்கியமானவை யாவை, அவைகளுக்கு எவ்வாறு கடனுதவி அளிக்கவேண்டும் என்பதுபற்றி மையவங்கி ஆணையிட்டது. பின்னர் ஏற்றுமதிக்கும் மற்ற முக்கிய துறைகளுக் கும் கடன் கொடுப்பதில் முதலிடம் கொடுக்கவேண்டுமென்று ரிசர்வ் வங்கி கட்டளையிட்டது. ஊகவாணிகத்திற்கும், தவணை முறை வாங்கலுக்கும் கடன் கொடுப்பதைத் தடைசெய்தது. பற் பல கடன்களுக்கு உச்சவரம்பு கட்டப்பட்டது. ஆனால் இத்தகைய கட்டுப்பாட்டை வங்கியின் ஆளுநர் (Governor) விரும்பவில்லை. இது உறுதியான பலனை அளிக்கவில்லை; வர்த்தக வங்கிகளுக்கும் மைய வங்கிக்குமிடையே மனக்கசப்பை ஏற்படுத்தியது; வங்கி யருக்கும், வாடிக்கையருக்குமிடையே எரிச்சலை உண்டாக்கு கின்றது; இறுதியாக மைய வங்கிக்கும் பொதுமக்களுக்குமிடையே உள்ள நல்லுறவைப்பாதித்தது.[2] இத்தகைய தரக்கட்டுப்பாட்டை அறவே கைவிடாதபோதிலும் மைய வங்கியும் வர்த்தக வங்கி

[1] Commonwealth Banking Systems, ed. W.A. Crick, p. 92.

[2] H. C. Coombs (Governor), The Development of Monetary Policy in Australia, 1955, p. 19. R.F. Holder in Commonwealth Banking Systems, p. 93.

களும் அவ்வப்போது தொடர்ந்து ஆலோசனைகள் நடத்தும் முறையை வளர்த்தனர். மைய வங்கி அமைக்கும் அளவுக்கட்டுப் பாடுகளுக்குட்பட்டு வர்த்தக வங்கிகள் இயங்கவேண்டும். கடனுதவி வேண்டும்போது, வங்கிகள் பொதுவான முறையில் மனுக் கொடுக்கும். பணக்கொள்கையின் அளவுக் கட்டுப்பாட்டை மனத்தில் கொண்டு இக்கோரிக்கைகளைப் பரிசீலனை செய்ய வேண்டும். அவ்வப்போது உள்ள செலாவணி நிலைகளுக்கேற்றவாறு தரக்கட்டுப்பாடுகள் பற்றிய கோரிக்கைகளையும் அறிவுரைகளையும் மைய வங்கி விடுக்கும்.

தவணைமுறை வாங்கல் கடன் அதிகத் தடைக்குட்பட்டது. இறக்குமதிக் கடனும், ஊகவாணிகக் கடனும் இவ்வாறு தடைக்குட்பட்டன. ஏற்றுமதியின் தேவைகளை மனத்தில் கொண்டு கடன் கொள்கைகளை வகுக்கவேண்டுமென்று வங்கிகளுக்கு உத்தரவிட்டனர். வரட்சியால் பாதிக்கப்பட்ட கிராமப்புறப் பகுதிகளுக்கும், வீட்டு வசதிகளுக்கும் ஆதரவு கொடுக்க வேண்டுமென்று பணித்தனர். இத் தரக்கட்டுப்பாட்டின் விளைவாக அண்மையில் நாட்டு வளர்ச்சிக்கு முக்கியமாக உள்ள துறைகளுக்குக் கடனுதவி அதிக அளவில் கொடுத்தனர்; பண வீக்கத்தைத் தடை செய்தனர்; அயல்நாட்டுச் செலுத்தல் நிலையில் உள்ள சிக்கல்களையும் தீர்த்தனர்.

**வட்டி வீதம் டெப்பாசிட்டுகள், வங்கிக் கடன்கள் முதலியவைகளைக் கண்காணித்தல்**

வர்த்தக வங்கிகளுடைய, சேமிப்பு வங்கிகளுடைய (Savings Bank) வட்டி வீதங்களையும், டெப்பாசிட்டுகளையும் கட்டுப்படுத்துவது ஆஸ்திரேலியாவின் மற்ரொரு கடன் கட்டுப்பாட்டு முறையாகும். 1962-க்கு முன் அதிகப் பற்றுக் கடன் ஒரெல்லையைக் கடக்கக்கூடாது. வங்கிக் கடன்களுடைய சராசரி வீதம் ஒரு குறிப்பிட்ட அளவுக்குமேல் உயரக்கூடாது. வங்கிகள் மைய வங்கியின் அறவுரையை ஒட்டி வட்டிவீத முன்னுரிமைப் பட்டியல் ஒன்றைத் தயார் செய்துகொள்ளலாம். ஏற்றுமதிக்கும், கிராமப்புற உற்பத்திக்கும் கொடுக்கும் கடன்களுக்குக் குறைவான வட்டி வசூல் செய்யலாம். தனிக் கடன்களுக்கும் முன்னுரிமைப் பட்டியலில் பின் தங்கிய கடன்களுக்கும் உயர்வான வட்டி வசூல் செய்யலாம். ஆனல், சராசரி வீதத்தை வங்கிகள் பாரபட்சம் காட்டும் கட்டுப்பாடாகக் கருதின. அதை நீக்குமாறு கேட்டுக்கொண்டன. வர்த்தக வங்கிகள் வட்டி வீதத் துறையில் அதிக அளவு சுதந்திரத்தை வேண்டின. அவை ரிசர்வ் வங்கியுடனும், அரசுடனும் 1962-ல் நடத்திய பேச்சுவார்த்தை

களின் விளைவாக ஒரு புதிய கட்டுப்பாட்டை அமல் செய்தனர். தற்போது உள்ள முறைப்படி ஓர் உயர்ந்தபட்ச அதிகப்பற்று வீதத்தை நிர்ணயம் செய்கின்றனர். பல்வேறு வகைக் கடன் வாங்குவோருக்கு வங்கிகள் இக்கட்டுப்பாட்டுக்குட்பட்டு வெவ்வேறு வீதங்களை நிர்ணயம் செய்யலாம். இவ்வுயர்ந்த பட்ச வீதத்தை ரிசர்வ் வங்கி உயர்த்திலோ அல்லது குறைத்தாலோ வர்த்தக வங்கிகள் தம் வீதங்களையும் அதே அளவு அதே திசையில் மாற்றும். முன்னுரிமைகளும், சலுகை வீதங்களும் இன்னும் அமலில் இருக்கின்றன. ஏற்றுமதியாளருக்கும், கிராமப்புற உற்பத்திக்கும் சலுகை வீதங்களில் கடனுதவி வழங்க வேண்டும் என்று ரிசர்வ் வங்கி கேட்டுக்கொள்ளலாம். கடன் வீதங்கள் மாறும்போது டெப்பாசிட்டு வீதங்களும் உடனடியாக மாறும். ஆனால், இவ்வீதங்கள் அதே அளவு மாறவேண்டுமென்ற கட்டாயமில்லை.[1] 'இறுதியில் கடனுதவியளிக்கும் (lender of the last resort) வீதமும், ரிசர்வ் வங்கி கருவூல உண்டியல்களையும் மற்றப் பத்திரங்களையும் தள்ளுபடி செய்யும் வீதமும் ரொ. அ.வி.ஐச் சரிக்கட்டுவதற்காகக் கொடுக்கும் கடன் வீதமும் முக்கியமானவை அல்ல. செலாவணிக் கட்டுப்பாட்டுக்கு வங்கிக் கடன் வீதமும் தவணை டெப்பாசிட்டு வீதமும் நிர்ணயமாவது முக்கியமாகும். கடன் வீதத்தையும் (lending rate) டெப்பாசிட்டு வீதத்தையும் நிர்ணயம் செய்யும் அதிகாரத்தைப் பல வர்த்தக வங்கிகள் இன்று பெற்றுள்ளன. ஆனால், வங்கி வீதம் வெளிப்படையாக அறிவிக்கப்படாமையால் ஆஸ்திரேலியாவில் இம்முறை ஒரு விசேஷ முக்கியத்துவம் வாய்ந்திருக்கின்றது.

### வெளி மார்க்கட்டு நடவடிக்கைகள்

அரசு பத்திர மார்க்கட்டுக் குறுகியதாக இருப்பதால் ஆஸ்திரேலியாவில் இதுகாறும் வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளுக்கு அதிக வாய்ப்பில்லை. இந்நிலை இப்போது சற்று முன்னேறியுள்ளது. 1953-ல் பங்கு வெளியீட்டுக் கட்டுப்பாட்டை அமல் செய்தனர். இதன் பின்னர் நிலைமை மைய வங்கி கட்டுப்பாட்டுக்குகந்ததாக அமைந்திருக்கின்றது. நிறுவனங்கள் குறுகியகால டெப்பாசிட்டுகளை ஏற்றன. தம் நிதியைப் பெருக்கிக்கொள்ள குறுகியகாலப் பத்திரங்களை வெளியிட்டன. இதற்கு நிகராக, அரசு பத்திரங்களில் முதலீடு செய்ய குறுகியகாலத் தொகைகளும் ஏற்றுக்கொள்ளப்பட்டன. சில நிபந்தனைகளை ஏற்ற தள்ளுபடி நிலையங்களும் வியாபாரிகளும் மைய வங்கியிடமிருந்து 'இறுதிநிலைக் கடன்' பெறக்கூடும் என்று அறிவிக்கப்பட்ட

[1] D. G. Borker, 'Techniques of Monetary Policy in Australia' Reserve Bank of India Bulletin Oct. 1966, p. 192.

வுடன் ஒரு குறுகியகாலப் பண மார்க்கட்டு அதிகாரபூர்வ அங்கீகாரம் பெற்று இயங்கத் தொடங்கியது.[1] குறுகியகாலப் பண மார்க்கட்டு வளர்ந்ததன் விளைவாகக் குறுகியகால முதலீட்டின் வாய்ப்புகள் பெருகின. முதலீட்டுக்குரிய ரொக்கம் கொண்டுள்ள சிறிய நிறுவனங்களும். பல பெரிய நிறுவனங்களும் இலாபம் ஈட்டும் வாய்ப்புகள் பெற்றன. சிறிய முதலீட்டாளர்களுக்காகச் சிறப்புப் பத்திரங்களை 1958-லிருந்து வெளியிடுகின்றனர். வட்டி வீதம் கவர்ச்சிகரமாக இருக்கின்றது. இவைகளைக் குறிப்பிட்ட நாளுக்குப்பின் ரொக்கமாக மாற்றமுடியும். மேலும் 1960-லிருந்து நெகிழ்வுள்ள வட்டிவீதக் கொள்கையைப் பின்பற்றியதால், வெளி மார்க்கட்டுக் கொள்கைமூலம் பொது மக்களிடம் உள்ள ரொக்கநிலையைக் கண்காணிக்கலாம். அரசு பத்திரங்களின் எண்ணிக்கையும், தவணைக் காலங்களும் பெருகிவிட்டதால் ரிசர்வ் வங்கி பயனுள்ள முறையில் வெளி மார்க்கட்டுக் கொள்கையை மேற்கொள்ளலாம். தனியார் துறையில் ரொக்கநிலை மிகுந்துள்ளபோது. வெளி மார்க்கட்டுக் கொள்கை மூலம் உபரி ரொக்கநிலையை நீக்கிவிடலாம். 1968-69-ல் பத்திரங்களின் கவர்ச்சியைக் குறைத்து மைய வங்கி அவைகளின் அளவையும் குறைத்தது.[2] ஆனால், பொதுக் கடன் நிருவாக முறையாலும் அதை இயக்கும் கருவியாலும் வெளி மார்க்கட்டுக் கொள்கையின் வாய்ப்புகள் குன்றிவிட்டன. அரசியலாரின் சில திட்டங்களை நிறைவேற்றுவதற்காகவே நிதி திரட்டலை மேற்கொண்டனர். பொருளாதாரத்தில் உள்ள ரொக்க நிலையை ஒழுங்குபடுத்துவதற்காக இதைப் பயன்படுத்தவில்லை.[3]

ரிசர்வ் வங்கி வர்த்தக வங்கிகளுடன் அடிக்கடி பேச்சுவார்த்தை நடத்திக் கொள்கை விளக்கம் செய்வது வழக்கம். ரிசர்வ் வங்கி குறைந்தபட்சம் 3 மாதத்திற்கொருமுறையாவது வர்த்தக வங்கிகளை அழைத்து மக்களுடைய வங்கிப்பழக்கங்களில் நிகழ்ந்த மாற்றங்கள், ரொக்கநிலை முதலியவை பற்றி விளக்கம் செய்யவேண்டும்.

மூலதன மார்க்கட்டு வளர்ச்சியால் மைய வங்கி பத்திர மார்க்கட்டின் மீது கொண்டுள்ள கண்காணிப்பு முன்னேறியது.

[1] R. F. Holder (Economist of the Bank of New South Wales), in Commonwealth Banking Systems, pp. 98.9.

[2] The Reserve Bank of Australia, Report and Financial Statement, 1968-69. p 5.

[3] J. G. Philips, Recent Developments in Monetary Policy in Australia, E. S. and A. Research Section, 1964.

ஆனால் பெருமளவு புதிய நிலையங்கள் வளர்ந்தமையால் செலாவணிக் கொள்கையை நிறைவேற்றுவதில் இடர்ப்பாடுகள் தோன்றின. வங்கிகளல்லாத பல நிலையங்கள், குறிப்பாகத் தவணை விற்பனைக் கடன் நிலையங்கள் தோன்றியதால் மைய வங்கியின் செலாவணிக் கட்டுப்பாட்டுக்கு இடையூறுகள் ஏற்பட்டன. தவணை விற்பனை நிலையங்கள் பெருமளவு வளர்ந்து விட்டன. இவைகளை 1400 மிலியன் பெருமானமுள்ளவை என்று மதிப்பிட்டனர். ஆஸ்திரேலியாவில் இது ஒரு சிக்கலான பிரச்சினையாகும். ஏனெனில், வர்த்தக வங்கிகள் இந் நிலையங்களுடைய பங்குகளைக் கொண்டிருக்கின்றன; இவைகளுடைய முன்னேற்றத்தில் அக்கறை காட்டுகின்றன. வங்கிகளல்லாத இடைநிலை நிதிநிலையங்களைக் (nonbanking financial intermediaries) கட்டுப்படுத்த வங்கிச் சட்டம் இடம் கொடுக்கவில்லை. இவைகளைக் கட்டுப்படுத்த முனைந்தால் மேலும் கட்டுப்பாட்டுக்கப்பாற்பட்ட புதிய நிலையங்கள் தோன்றலாம். இக்கூற்று ராட்கிளிப் குழுவின் கருத்தை ஒத்திருக்கின்றது. ரிசர்வ் வங்கி இப்பிரச்சினையை நன்கு உணர்ந்திருக்கின்றது. தவணைக் கடன்முறை நிறுவனங்களுடைய நிருவாக இயக்குநர்களுடன் பொருளாதாரத்தின் நடப்பு, எதிர்கால நிலைகளை ரிசர்வ் வங்கி பரிசீலனை செய்து வருகின்றது. வர்த்தக வங்கிகள் இடைநிலை நிதிநிலையங்களுடன் வெற்றிகரமாகப் போட்டியிடும் வகையில் டெப்பாசிட்டுகளைத் திரட்ட அனுமதி பெற்றன. ஓராண்டு டெப்பாசிட்டு வீதம் $2\frac{3}{4}\%$ லிருந்து $4\frac{1}{2}\%$க்கு உயர்ந்தது. மூன்று, ஆறு மாதங்களின் டெப்பாசிட்டுகள் 4% வரை உயர்ந்தன. இதனால் வர்த்தக வங்கிகளுடைய வீதங்கள் மார்க்கட்டு வீதங்களுக்குச் சமமாயின. இடைநிலை நிதி நிறுவனங்கள் பணவீக்கத்தை விளைவித்தன. இவை ஈர்த்த டெப்பாசிட்டுகளை வர்த்தக வங்கிகள் ஈர்த்தன. பணவீக்கம் தடைபடும்.[1]

பழைய காலத்தைப் போலவே ஆஸ்திரேலிய ரிசர்வ் வங்கியின் செலாவணிக் கொள்கை தற்காலத்திலும் நெருக்கடி காலத்தில் கட்டுப்பாடுகளை அமல் செய்யக் கூடியவையாகவும் நெருக்கடி தளரும்போது அவைகளைத் தளர்த்துவதாயும் இருக்கின்றது. உற்பத்திக் கடனை ஆதரிக்க வேண்டுமென்றும் ஊகவாணிகத்திற்குக் கடனுதவியளிக்கக் கூடாதென்றும், நுகர்வுக் கடனைக் குறைக்கவேண்டுமென்றும் ரிசர்வ் வங்கி வேண்டுகோள் விடுத்தது. 1965–66–ல் அமலில் இருந்த இக்கட்டுப்பாட்டை 1966–67–ல் நீக்கினர். வறட்சி நிவாரணம், வீட்டுவசதி—இவ்

[1] Reserve Bank of Australia, Report and Financial Statements, 1962 p. 22.

விரண்டுக்கு மட்டும் உதவி நல்கவேண்டுமென்ற கோரிக்கை மட்டும் இன்றும் அமலில் இருக்கின்றது. அதிகப் பற்றின் பயன் படுத்தப்படாத பகுதி மீண்டும் வளரக்கூடாதென்பதற்காக அதிக பற்றுகளை அதிக அளவில் நீக்கவேண்டுமென்றும், அதிகப் பற்றுப் பகுதியைக் குறைக்கவேண்டுமென்றும் கோரிக்கை விடுத்தது.[1]

1968-1969-ல் மீண்டும் வளர்ச்சியைத் தடை செய்யாதவாறு கட்டுப்பாட்டை அமல் செய்யவேண்டுமென்ற நோக்கத்துடன் செலாவணிக் கொள்கையை வகுத்தனர். 1968-1969-ன் முன் பகுதியில், ஆஸ்திரேலிய நாட்டு உற்பத்தி பெருகியது. ஆயினும் மூலதன இறக்குமதி உயர்ந்திருந்தது; இவ்வாண்டின் பின் பகுதியில் வங்கிகளும் மற்ற நிலையங்களும் கொடுத்த கடன்கள் பெருகின. இவைகளும் உழைப்பு மார்க்கட்டு (labour market) நிலையும் உள்நாட்டு நிதித் தேவையைப் பெருக்கின. இந்த நிலையில் ரிசர்வ் வங்கி சட்டபூர்வ ரொக்கக் காப்பை 8.0% இலிருந்து 9.0%-க்கு இரு சம தவணைகளில் உயர்த்தியது. புதிய கடன் வீதங்களைக் குறைத்தல் தேவைப்படுகின்றது என்று ரிசர்வ் வங்கி வர்த்தக வங்கிகளுக்குக் கூறியது. அதிகப் பற்று எல்லைகளைக் குறைப்பதிலும் நீக்குவதிலும் கவனம் செலுத்துமாறு வர்த்தக வங்கிகளைக் கேட்டுக்கொண்டனர். உபரி ரொக்கத் தன்மையை மார்க்கட்டிலிருந்து நீக்கும் நோக்கத்துடன் ரிசர்வ் வங்கி மார்க்கட்டில் பத்திரங்களை வாங்குவதைவிட விற்பனை செய்ய முன்வந்தது. உள்நாட்டில் நிதித் தேவை உயர்ந்தது, தனியார் துறை ரொக்க நிலையும் மிதமாக இருந்தது. இந்த நிலையில் ரிசர்வ் வங்கி பத்திரங்களை விற்பனை செய்தது. அதனிடம் உள்ள பத்திரங்களின் மதிப்பு 78 மிலியனுக்குக் குறைந்தது.[2]

[1] Reserve Bank of Australia, Report & Financial Statements, 1967, pp. 7–8.

[2] Reserve Bank of Australia, Report of Financial Statements 1968-69, pp. 27–30.

# 12. இந்தியாவில் செலாவணிக் கொள்கை: வளர்ச்சியின் படிவங்கள்

**ரிசர்வ் வங்கியின் இரட்டைப் பணிகள்**

செலாவணிக் கட்டுப்பாட்டுக் கொள்கையைக் கொண்டு மட்டும் ரிசர்வ் வங்கியின் பணிகளை மதிப்பிடக்கூடாது. கடன் கட்டுப்பாடு, மைய வங்கியின் முக்கியமான பொறுப்பாகும். ஆனால், இந்திய ரிசர்வ் வங்கியின் தனிச் சிறப்பு இதுவல்ல. பொருளாதார வளர்ச்சிக்குத் தேவையான நிதிநிலைய உள்ளமைப்பை (infra structure) நிறுவுவதும் தொழிலுக்கும் விவசாயத்துக்கும், நிதியுதவி நல்கும் நிலையங்களை அமைப்பதும் அதன் முக்கிய கடமையாகும்.[1]

முதிர்வடைந்த தொழில் அமைப்புக் கொண்ட நாடுகளில் மைய வங்கி கட்டுப்பாட்டுப் பொறுப்பையே பெரும்பாலும் ஏற்க வேண்டும். ஆனால், வளர்ச்சி குறைந்த நாடுகளில் வளர்ச்சியைத் தூண்டுவது அதன் பொறுப்பாகும். வளர்ச்சி, கட்டுப்பாடு என்ற இரு பணிகளையும் சேர்த்துச் செய்யவேண்டும். இரு பணிகளும் சம முக்கியத்துவம் வாய்ந்தவை. இவ்விரு பணிகளையும் செய்ய வேண்டிய கடமை ரிசர்வ் வங்கியின் கட்டுப்பாட்டுக் கொள்கைக்கு ஒரு புதிய சிறப்பைக் கொடுத்துள்ளது. அதன் செலாவணிக் கொள்கையை மதிப்பிடும்போது இரு பணிகளையும் கவனிக்க வேண்டும்.

வளர்ச்சி குன்றிய நாடுகளில் இருப்பதைப் போல் இந்தியாவில் நிதி நிலையங்களின் அமைப்பு செலாவணிக் கொள்கை செயல்படுவதற்கு அவ்வளவு இடையூருக இல்லை. நம் நாட்டிலுள்ள வங்கி, செலாவணியமைப்புகளுடைய இணைப்பும் (integration) அமைப்பும் ஐரோப்பிய, வட அமெரிக்க நாடுகளை ஒத்து முன்னேற்றமடையவில்லை. ஆனல் தென் கிழக்கு ஆசியா, ஆப்பிரிக்கா நாடுகளிலுள்ள நிலையங்களைப் போல் பின் தங்கிய

[1] Speech of the Governor, Reserve Bank of India, at Delhi Bankers' Meeting on 28 February 1967. See Reserve Bank of India Bulletin, March 1967, p. 340.

நிலையில் இல்லை. பொருளாதாரத்தில் இன்றும் அமைப்பற்ற, பணப்பரிவர்த்தனைக்கப்பாற்பட்ட பகுதியொன்றிருக்கின்றது. ஆனால், அமைப்புள்ள பகுதி விரைவில் வளர்ந்துகொண்டிருக்கின்றது. வங்கி முன்னேற்றமடைந்தும் பரவலாகவும் அமைந்திருக்கின்றது; மூலதன மார்க்கட்டு பின்தங்கிய நாடுகளை விட வளர்ச்சியடைந்தும் பரவலாகவும் அமைந்திருக்கின்றது. நாட்டுப் பொருளாதாரத்தின் இயல்புகள் வங்கிக் கொள்கை வெற்றிகரமாக இயங்குவதற்கு இடையூறாக இருக்கலாம். ஆனால், மைய வங்கியின் கட்டுப்பாட்டுக் கருவிகளுடைய திறமையை அவை குறிப்பிடத்தக்க அளவு பாதிக்கவில்லை.

திட்டகாலத்தில் கடன், செலாவணிக் கொள்கைகளை வகுப்பதில் முரண்பாடுகள் உள்ள ரொக்கங்களைச் சமாளிக்க வேண்டியதாயிற்று. வளர்ச்சியடையும் பொருளாதாரத்திற்கு வேண்டிய அளவு செலாவணியையும் கடன் நிதியையும் வளர்ச்சித் திட்டங்களுக் கேற்ப மைய வங்கி அளிக்க வேண்டும். ஆனால் வளர்ச்சிக்கு ஸ்திரத்தன்மை இன்றியமையாதது. கட்டுக் கடங்காத செலாவணிப் பெருக்கம் ஆபத்தை ஏற்படுத்தும் என்பதை மைய வங்கி உணரவேண்டும். கணிசமான வளர்ச்சி நிதியைத் 'தாமதித்துப் பலனளிக்கும்' (fruition lag) துறைகளில் முதலீடு செய்துள்ளனர். இதன் விளைவாக நுகர்வோர் பண்ட விலை உயர்ந்துகொண்டிருக்கின்றன. இந்த நிலையில் ரிசர்வ் வங்கி கடன் அளிப்பைக் கட்டுப்படுத்தவேண்டும். இதன் மூலம் பொருளாதார வேகத்தைக் குறைக்க வேண்டும், இவ்வாறு வளரும் பொருளாதாரத்தின் தேவைகளைப் பூர்த்தி செய்வதும், செலாவணிக் கட்டுப்பாடு செய்வதும் ரிசர்வ் வங்கியின் இரு நோக்கங்கள். எனவே வங்கியின் கொள்கை 'கட்டுப்பாடுகளுக் குட்பட்ட பெருக்கமாகும்' (controlled expansion). குறிப்பிட்ட துறைகளில் முதலீடு ஏற்படுவதற்குச் சாதகமாக அதன் கொள்கை அமையும்.[1] இக் கொள்கையில் பெருக்கமும் கட்டுப் பாடும் சம முக்கியத்துவம் கொண்டுள்ளன. பொருளாதாரத்தில் கடன் தேவைகள் தொடர்ந்து பெருகிக்கொண்டிருக்கின்றன. முதலீடு திட்டப்படி நடக்கவேண்டும். இந்த நிலையில் செலாவணிப் பெருக்கத்தைக் 'குறிப்பிட்ட துறைகளில்' செலுத்த வேண்டும். பொதுவான திட்டத்திற்குகந்த முறையில் இதைச் செய்யவேண்டும். செலாவணிக் கொள்கை வளர்ச்சிக்குகந்த தாகவும் கண்காணிக்கும் தன்மையுடையதாகவும் அமைந்திருக்க வேண்டும்.

[1] 'Annual Reports on Currency and Finance, Reserve Bank of India' 1956-57, pp. 30-32; 1957-58, pp. 30-?, 1959-60 pp. 35-36. Also reports of Central Board of Directors, Reserve Bank of India, 1956-66.

ரிசர்வ் வங்கிச் சட்டத் திருத்தம்

நாட்டின் வளர்ச்சித் திட்டங்களில் ரிசர்வ் வங்கி தன் பணியைச் செம்மையாகச் செய்யவேண்டும். தீவிரமடையும் பணவீக்கத்தைக் கட்டுப்படுத்த போதிய அதிகாரம் பெற்றிருக்க வேண்டும். அதே சமயம் வளர்ச்சிக்கு வேண்டிய அளவு செலாவணியை வெளியிடுவதில் தடை இருக்கக் கூடாது. இது பற்றிய சட்டமைப்பு நெகிழ்வுள்ளதாக இருக்கவேண்டும். இந் நோக்கங்களுடன் ரிசர்வ் வங்கிச் சட்டத்தை இரண்டாவது திட்டகாலத்தில் திருத்தினர். இதன்படி வங்கி புதிய கட்டுப் பாட்டுக் கருவிகளை ஆளலாம். செலாவணிப் பெருக்கம் செய்ய அது அதிகாரம் பெற்றது, திட்டச் செயல்பாட்டுக்குத் தடை யாக உள்ள கட்டுப்பாடுகளை நீக்கினர். 1949ஆம் ஆண்டின் வங்கிக் கம்பெனிச் சட்டப்படி உள்ள அதிகாரங்களை ரிசர்வ் வங்கி மீண்டும் தன் நினைவுக்குக் கொணர்ந்தது. அவைகளைப் பயன் படுத்தித் தேர்வுச் செலாவணிக் கட்டுப்பாடுகளை ஆண்டது.

செலாவணிப் பெருக்கம் விரைவில் ஏற்பட்டது. மக்கள் கைவச முள்ள பணப்பகுதி குறிப்பிடத்தக்க அளவு பெருகியது. இதன் விளைவாக 1954-55-ல் 56.50% ஆக இருந்த காப்பு விகிதம் 1955-56-ல் 51.35%ஆகக் குறைந்தது. 1956 மார்ச்சு 2ஆம் தேதி இது 50.52%ஆகக் குறைந்தது. தொடர்ந்து குறைந்து வரும் இவ்விகிதம் அம்மாத இறுதியில் 47.11% ஆகக் குன்றியது. இரண்டாவது திட்டத்திற்குரிய அளவு பணப்பெருக்கம் ஏற் பட்டதால் விளைந்த காப்புவிகித வீழ்ச்சி நிருவாகிகளுக்குக் கவலை ஏற்படுத்தியது. இரண்டாவது போரின் காரணமாக அமெரிக்கா விலும் செலாவணிப் பெருக்கமும் காப்புவிகித வீழ்ச்சியும் ஏற்பட்டது. அவர்கள் விகிதத்தை 40%-லிருந்து 25% ஆகக் குறைத்தனர். ஆனால். இந்தியாவில் நோட்டு வெளியீட்டுக்கும் காப்பு விகிதத்திற்குமிடையே இருந்த விகிதத்தொடர்பை நீடிக்க விரும்பவில்லை. அப்போதிருந்த விதிப்படி நோட்டு வெளியீட்டில் 40%-ஐப் பொன்னாகவும் அன்னியச்செலாவணியாகவும் காப்பாக வைத்திருக்கவேண்டும். இவ்விதியை மாற்றி ரூ. 400 கோடி மதிப்புள்ள அன்னியப் பத்திரங்களையும் ரூ. 115 கோடி பெருமானமுள்ள பொன்னையும் வைத்திருக்கவேண்டும் என்ற ஏற்பாட்டைச் செய்தனர். நோட்டு வெளியீடு, பொன்-அயல் நாட்டுச் செலாவணிக் காப்பிலிருந்து விடுபட்டது.

காப்புநிதிக்கும் செலாவணி வெளியீட்டுக்கும் இடையேயுள்ள கடுமையான விகிதத் தொடர்பு நீங்கிவிட்டதால் இத்திருத்தம் வரவேற்கத் தக்கதாயிற்று. ஆனால், அயல்நாட்டுக் கொடுப்பல்

நிலை தேவைகளைக்கொண்டு இதை முடிவு செய்யவேண்டும். பழைய காப்பு விகிதமுறையைப் பல நாடுகள் கைவிட்டன. பண அளிப்பு, குறிப்பிட்ட காலத்தில் பிற நாடுகளுக்குச் செலுத்த வேண்டிய தொகை ஆகியவைகளைக்கொண்டு காப்புவிகிதத்தைத் தற்காலத்தில் நிர்ணயம் செய்கின்றனர். ஆண்டுதோறும் பரிவர்த்தனையாகும் அன்னியச் செலாவணியின் அளவைக்கொண்டு ஆண்டுதோறும் ஏற்பட வேண்டிய பணப்பெருக்கத்தை நிர்ணயம் செய்கின்றனர் என்றும் இதை நிருவாகிகளுக்கு அடிக்கடி தெரிவிக்க ஏற்பாடு இருக்கின்றது என்றும் முன்னர்க் குறிப்பிட்டோம்.

பிலிப்பைன்ஸ், பராகுவே, டாமினிக்கக் குடியரசு முதலிய நாடுகள் காப்பு நிதிபற்றிய முன்னறிவிப்பும் எச்சரிக்கையும் கொடுக்க வழி வகுத்துள்ளன. ஆனால், இந்திய ரிசர்வ் வங்கிச் சட்டத்தில் இதற்கு இடம் இல்லை. எனவே, பண்ட உற்பத்தி போதிய அளவு பெருகாமல் செலாவணிப் பெருக்கம் மட்டும் நடைபெறும்போது முன்னெச்சரிக்கை கொடுக்க இந்தியாவில் வழியேதும் இல்லை. திட்டகாலத்தில் ஏராளமான அளவு முதலீடு பெருகும்போது விலைகளின் ஸ்திரத்தன்மை பாதிக்கப்படும். இச் சூழ்நிலையில் பணப் பெருக்கத்தைக் கவனமாக உற்று நோக்கி ஆபத்துகளைத் தடை செய்யவேண்டும் என்பதை மிகைப் படுத்த முடியாது.

இரண்டாவது திட்டம் தொடங்கியதும் அயல்நாட்டுச் செலாவணி இருப்பில் ஒரு நெருக்கடி ஏற்பட்டது. குடியரசு தலைவரின் அவசரச் சட்டம் மூலம் ரிசர்வ் வங்கிச் சட்டத்தை 1957-ல் மீண்டும் திருத்தவேண்டியதாயிற்று. அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் தீவிர நெருக்கடி ஏற்பட்டமையால் அன்னியச் செலாவணியின் கையிருப்பு பெருமளவு குறைந்தது. 1956ஆம் ஆண்டுச் சட்டப்படி இருக்கவேண்டிய குறைந்த பட்சத் தொகை ரூ. 400 கோடி. இதை ரூ. 300 கோடியாகக் குறைத்தனர். மீண்டும் திருத்தியதன் விளைவாக இதை ரூ. 200 கோடி என்றும் பொன் காப்பை ரூ. 115 கோடி என்றும் முடிவு செய்தனர். அயல்நாட்டுப் பத்திரங்கள் குறைந்த பட்சம் ரூ. 85 கோடியாக வேண்டும் என்பது தெளிவாகின்றது.

**'நோட்டுக்காப்பை நீக்குக' என்ற வாதம்**

அயல்நாட்டுச் செலாவணி நெருக்கடியைத் தீர்ப்பதற்குப் பல வழிமுறைகளைப் பரிந்துரைத்தனர். செலாவணிக் காப்பை நீக்கவேண்டும் என்பது அவைகளுள் ஒன்றாகும். இக்கருத்து

மிகவும் பிரபலமாயிற்று. இவ்வாதத்திற்கு ஆதரவாகப் பல நாடுகளில் செலாவணிக் காப்பு முறையே கிடையாது என்று சான்றுகள் தரப்பட்டன. இக்கருத்தினர் எதை விரும்பினர் என்பதை நாம் அறிய இயலவில்லை. நம் நாட்டுச் செலாவணித்தாள் வெளியீட்டிலிருந்து, செலாவணிக் காப்பு முறையைப் பிரிக்க வேண்டுமென்பது அவர்களுடைய வாதமாயின், 1956ஆம் ஆண்டுச் சட்டமும், அடுத்துவந்த திருத்தமும் இதை நிறைவேற்றிவிட்டன என்று கூறலாம். எவ்வளவு செலாவணித்தாள் வெளியீடு செய்தபோதிலும் ஒரு குறிப்பிட்ட அளவு பொன்னும் அன்னியச் செலாவணியும் இருந்தால் போதும் என்று சட்டம் ஏற்பாடு செய்தது. செலாவணித் தாளுக்குப் பின்னணியாகக் காப்பு நிதியொன்றும் தேவையில்லை. ஆனால், பொன்னும் அயல் நாட்டுப் பத்திரங்களும் சேர்ந்த பன்னாட்டுக் காப்பு நிதி (international reserves) தேவையில்லை என்று கூறமுடியாது. செலாவணிக் காப்பையும் அதன் நிருவாகத்தையும் ஒழிக்க வேண்டுமென்று விரும்புவோர் மனத்தில் ஒரு குழப்பம் தென்படுகிறது. சாதாரணச் செலாவணிக் காப்பு நிதிக்கும் பன்னாட்டுக் காப்பு நிதிக்கும் இடையே உள்ள வேறுபாட்டை இரு சாராரும் உணரத் தவறிவிட்டனர். செலாவணிக்காப்பையும் அதில் இடம் பெறும் பொன்னையும் கணிசமாகக் குறைக்கலாம் அல்லது அறவே நீக்கிவிடலாம். ஆனால், போதிய காப்பு நிதியில்லாமல் ஒரு நாடும் இருக்க முடியாது. இக்காப்பு நிதி எவ்வளவு இருத்தல் வேண்டும் என்பதை அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை நிர்ணயம் செய்தல் வேண்டும். சிலோன், பிலிப்பைன்ஸ் போன்ற நாடுகளில் எவ்வளவு காப்பு நிதி வேண்டும் என்பதைச் செலாவணிக் குழுக்கள் நிர்ணயம் செய்யும். ஆனால், இந்த நாடுகளில் கூட எவ்வளவு தொகை காப்பிலிருக்க வேண்டும் என்பதை நிர்ணயம் செய்யச் சில வழிமுறைகளை வகுத்துள்ளனர். அயல் நாடுகளில் செய்வதைப் போல் செலாவணிக் காப்பை நீக்கவேண்டுமென்ற ஆர்வத்தில், அந்நாடுகளில் காப்புநிதி குறையும்போது அதை ஈடு செய்ய வகுத்துள்ள வழி முறைகளை மறக்க முடியாது. இந்நாடுகள் ஒரு 'குறைந்தபட்சக் காப்பு நிதியை' (critical reserves) நிறுவ முயற்சி செய்தன. 1956-ல் நிறுவிய காப்புத் தொகை உண்மையில் பன்னாட்டுக் காப்பு அளவாகவே இருந்தது. அயல் நாடுகளில் நம் நாட்டுப் பாதகநிலை ஏற்படுத்தும் அளவு 1956ஆம் ஆண்டின் சட்டம் காப்பு நிதியைத் திருத்தியமைத்தது.

காப்பு நிதியை மேலும் நெகிழ்வாக அமைக்கவும் சட்டப்படி பொன்னின் மதிப்பை மாற்றுவதற்கும் வழி வகுத்தனர். வங்கியின்

வசம் இருந்த பொன்னின் மதிப்பு, சுத்தப் பொன் 2.88 குன்றி மணி = ஒரு ரூபாய் என்றிருந்ததை (அதாவது ரூ. 62.8 ஒரு தோலா) 8.47512 குன்றி மணி = 1 ரூபாய் அல்லது ரூ. 62.8 என்று மாற்றினர்.

ரிசர்வ் வங்கியின் செலாவணிக் கொள்கையை ஆய்வு செய்யும்போது அதன் வளர்ச்சிப் பகுதிகளைப் பரிசீலனை செய்ய வேண்டும்; அது ஆண்ட கருவிகளையும், எந்த அமைப்பில் அது இயங்குகின்றது என்பதையும் பார்க்க வேண்டும்.

பருவகாலக் கடன் தேவைகள் பெருகும்போது விறுவிறுப்பான பருவத்தில் (busy season) அறுவடைக்கும் விற்பனைக்கும் அதிக அளவுக் கடன் தேவைப்படுகின்றது. இந்தியாவில் பெரும்பாலான தொழில்கள் விவசாயப் பண்டங்களைக் கச்சாப்பொருள்களாகப் பயன்படுத்துகின்றன. இவை சணல், கரும்பு, எண்ணெய் வித்துகள் போன்றவை. இப்பண்டங்களைப் பருவகாலத்தில் அறுவடை செய்து, ஆலைகளுக்குக் கடத்தி, கிடங்குகளில் வைப்பதற்குக் கடன் தேவைப்படுகின்றது. வங்கிகள் இக்கடன்கள் கொடுக்கும் பழக்கம் அண்மை ஆண்டுகளில் மாறி, தொழிற்கடன் கொடுப்பது பிரபலமாகிக்கொண்டிருக்கின்றது. ஆயினும், வங்கிக் கடனின் பருவகாலத் தேவை இயல்பு மாறவில்லை. 1963-64, 1964-65 ஆண்டுகளில் விறுவிறுப்பான பருவத்தில் (நவம்பர் முதல் ஏப்ரல் வரை) வங்கிக் கடன் தேவை 23 முதல் 26% வரை பெருகிற்று.

பருவகாலக் கடன் தொகை சாதாரண காலத்தில் மீண்டும் வங்கிகளுக்குத் திரும்புவது வழக்கம். ஆனால், அண்மைக் காலத்தில் இவ்வாறு திரும்பும் தொகை குறைந்து வருகின்றது. சாதாரண பணி மாறி வருகின்றது என்பதை இது காட்டுகின்றது. சாதாரண காலத்தில் (slack season) கடன்நிதி குறைவது மாறி வருகின்றது. நம் பொருளாதாரம் விரிவடைவதே இதற்குக் காரணமாகும். விவசாயத்தைச் சாராத தொழில்கள் வளர்வது இதற்குக் காரணமாகும். விறுவிறுப்பான காலத்தில் கடன் தேவைப் பெருக்கம் குறைவதற்கு நிகராக மற்றக் காலக்கடன் தேவை கூடுகின்றது. இதனால் விறுவிறுப்பான காலக்கடன் தேவையின் வீச்சு (amplitude) அதிகரிக்கின்றது; சாதாரண காலத் தேவையின் வீச்சு குறைகின்றது. ஆனால், பொதுவாகப் பார்க்கும்போது பருவகால ஏற்றத்தாழ்வுகள் செலாவணிக் கொள்கையின் பின்னணியாக இருக்கின்றன.

பண அளவில் கைவசமுள்ள ரொக்கம் அதிகமாக இருக்கின்றது. இது இந்தியாவின் இரண்டாவது இயல்பாகும். வங்கிகளின் காப்பிலும் அவைகளுடைய கடன்கள் இத்துடன் கொண்டுள்ள தொடர்பிலும் ஏற்படும் மாற்றங்களை ஒட்டி அதிக அளவில் கடன் பெருக்கம் ஏற்பட இடம் இருக்கின்றது. மக்கள் வசமிருக்கும் செலாவணிப் பகுதி பெரியதாக இருப்பதால் இப்பெருக்கத்திற்கு இடம் குறைவாக இருக்கின்றது; டெப்பாசிட்டுப் பெருக்க வீதம் குறைவாகவும், கடன் பெருக்கம் மிகுதியாகவும் இருக்கின்றது. இதன் விளைவாக இப்பகுதியில் நிதிப்பற்ருக்குறையும், ரொக்க நிலைக்குறைவும் ஏற்படுகின்றன. விறுவிறுப்பான பருவத்தில் வங்கி முறையின் ரொக்கநிலைக்குச் சோதனை ஏற்படுகின்றது. வங்கிகளுடைய நிதிகளை அதிகரித்து நிலைமையைச் சமாளிக்கத்தக்க வகையில் கொள்கை வகுக்கின்றனர். வர்த்தக வங்கிகள் தம் நிதிகளைப் பெருக்கிக்கொள்ள கையாளும் முறைகளுள் மைய வங்கியிடம் கடன் வாங்குவது ஒன்ருகும். எனவே விறுவிறுப்பான பருவங்களில் ரொக்கத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காக வாங்கிய கடனைப் பெருக்குகின்றனர். 'அளவு முறைகளையும் குறிப்பிட்ட முதலீட்டுத் துறைகளையும்' கொண்டு பார்க்கும்போது இக்கடன் பெருக்கம் நியாயமானதாக இருக்கவேண்டும். பொருளாதாரத்தின் கடன் தேவைகளை மதிப்பிடுவதும் எத்துறைகளுக்குக் கடன் மிக அவசியம் என்பதைப் புள்ளி விவரங்களுடன் கணக்கிடுவதும் முதன் முதலில் செய்யவேண்டிய பணியாகும். இக்கணக்கு மைய வங்கியின் மதிப்பீட்டையே பெருமளவு பொறுத்திருக்கும். சாதாரண காலத்தில் வங்கிகளின் ரொக்கத்தை ஈர்க்க வேண்டும். 'கட்டுப்பாட்டுக்குட்பட்ட முறையில் ரொக்க நிலையைத் தளர்த்தலும், குறைத்தலும்' என்று இக்கொள்கையை வருணிக்கலாம்.

**வங்கிக் கடன் கோருவதைக் கண்காணித்தல் : பங்கீட்டுப் படிவ முறை வட்டி வீதம் (Quota-cum-slab interest rate system)**

'கட்டுப்பாடான முறையில் ரொக்கநிலையைத் தளர்த்தலும், சுருக்கும்' கொள்கையை அமல்செய்வதற்கு ரிசர்வ் வங்கி அண்மையில் கடனளிப்பைக் கண்காணிக்க முனைந்தது. முன்னர் ஆண்ட சிறப்பு டெப்பாசிட்டு முறை மொத்த வங்கிக் கடனைக் கட்டுப்படுத்துவதில் தோல்வியுற்றது.[1] ஏனெனில், வங்கிகள் ரிசர்வ் வங்கியிடம் பெறும் கடனைக் குறைக்க முடியவில்லை. இதற்கிடையில் பணப்பெருக்க வழிவந்த தேவை பெருகிற்று. வங்கி

[1] Dr. V. G. Pendharkar and M. Narasimham, 'Recent Evolution of Monetary Policy in India', in the Reserve Bank of India Bulletin, April 1956, p. 12.

முறை விரிவடைந்தது. இந்நிலையில் மைய வங்கிக் கடனுக்கு உயர் வட்டி விதிக்கும் முறையை விடுத்து அதன் கடனைக் கட்டுப் படுத்தும் புதிய கருவியை ரிசர்வ் வங்கி நாடியது. பல்வகைச் சொத்துகள் சட்டப்படி ஏற்கத் தகுந்தவையாக இருப்பினும் வங்கிகள் சாதாரணமாக அரசு பத்திரங்களையே கடன் வாங்க லுக்குப் பயன்படுத்தின, அவை பருவத் தேவைகளைச் சமாளிக்க நிதியுதவி கோருகின்றன. அரசு பத்திரங்களை விற்று நஷ்ட மடைவதை விட அவைகளை மைய வங்கிகளில் அடைமானமாக வைத்துக் கடனுதவி பெறுவதையே அவை விரும்பின. எனவே, இக்கொள்கையின் இரு அம்சங்கள் (1) வட்டியுயர்வு மூலம் கடன் வாங்கலின் அடக்கச் செலவை உயர்த்துவது (அரசு பத்திரங்களை அடைமானமாக வாங்கும் கடன்); (2) இத்தகைய கடன் வாங்கலைக் குறைப்பது. இக்கருவிகளை ஆளுவதில் இரு படிவங்களைக் காணலாம். முதன் முதலில் இக் கருவியை ரிசர்வ் வங்கி ஆண்டபோது இதில் இரு இயல்புகள் இருந்தன. முதலில் மைய வங்கியிடம் செய்யும் மீள் தள்ளுபடிக்கு (rediscount) உச்சவரம்பு இருந்தது. இரண்டாவதாக அடிப் படைப் பகுதியை (bas'c quota) மீறி ஒரு வங்கி கடன் வாங்கும் போது உபரிக் கடனுக்கு ஏறுவீத வட்டி உண்டு. இம்முறை 1960-ல் அக்டோபர் மாதம் முதன் முதலில் அமல் செய்யப்பட்டபோது வட்டியில் மூன்று படிவங்கள் இருந்தன. ஒவ்வொரு வங்கிக்கும் ஓர் அடிப்படைப் பகுதியுண்டு. இது அதன் சட்டபூர்வக் காப்புத் தொகையில் ஒரு குறிப்பிட்ட சதவீதமாக (50%) இருக்கும். இப்பகுதிவரை வங்கி வீதத்தில் கடனுதவி பெறலாம். இரண்டாவதாக அடிப்படைப் பகுதியில் 200% ஐ வங்கி வீதத்திற்குமேல் ஒரு சதவீதம் உயர் வட்டியில் பெறலாம். மூன்ருவதாக 200%க்கும் உயர்ந்த தொகையைச் 'சிறப்புக் கடன்' (special accommodation) என்றழைத்தனர். வங்கி வீதத்திற்குமேல் 2% உயர்ந்த வீதத்தில் இதைப் பெறலாம். 1960 ஜுன் 30உ நிலவிய வட்டியை வசூல் செய்ய வர்த்தக வங்கிகள் அனுமதி பெற்றன.

1951-ல் வர்த்தக வங்கிகள் ரிசர்வ் வங்கியிடம் பெற்ற கடன் தொகை ரூ. 5.7 கோடியாக இருந்தது. இது 1961-ல் ரூ. 61.5 ஆக உயர்ந்தது. பத்தாண்டுகளில் கடன் தொகை 980% உயர்ந்துவிட்டது. வர்த்தக வங்கிகள் மைய வங்கியைச் சார்ந்திருப்பதைப் பயன்படுத்திச் செலாவணிக் கட்டுப்பாட்டைச் செயல்படுத்தலாம். கடனளவைக் கட்டுப்படுத்தாமல் வங்கி வீதத்தை நேரடியாக உயர்த்துவதும் இதே பலனைக் கொடுத், திருக்கும். மேற் குறிப்பிட்ட நடவடிக்கையை ரிசர்வ் வங்கி

எடுத்ததற்குக் காரணமுண்டு. மிகுதியான தொகையைக் கடனாக வாங்கும்போது உயர் வட்டி செலுத்துவதும், குறைவான தொகையை வாங்கும்போது அபராத வட்டி செலுத்தாமையும் நாட்டு நிலைமைக்குகந்தவை என்று கருதினர். கடன் தொகையின் அளவு குறைந்திருந்தது; குறிப்பிட்ட அளவுக்குயர்ந்த தொகைக்கு அபராத வட்டி வசூல் செய்வதும், சற்றுக் குறைவான தொகைகளுக்குக் குறைவான வட்டி வசூல் செய்வதும், அடிப்படைப் பகுதிக்கு அபராத மின்மையும், இன்றியமையாதிருந்தன. கடன் தொகையின் அளிப்புக் குறைந்திருந்தால் கடன் வாங்கலின் அடக்கச் செலவை உயர்த்த வேண்டியிருந்தது, சிறப்பீட்டுப் பத்திர மார்க்கட்டில் நிகழும் விரும்பத் தகாத விளைவுகளும் தவிர்க்கப்பட்டன. இக்காலத்தில் வங்கிவீதத்தை உயர்த்தாததால் கடன் வாங்கலின் செலவு மாறவில்லை. தனியார் துறையினருடைய செலவு மட்டும் உயர்ந்தது. 1962ஆம் ஆண்டின் மந்த பருவத்தில் (slack season) செலாவணிச் சுருக்கம் தாமதித்து நடைபெற்றது. விலைகளும் உயரத் தொடங்கின. இதனால் 1962–ல் மூன்று படிவ முறையை நான்கு படிவமாக மாற்றினர். 50 சதவீதமாக இருந்த அடிப்படைப் பகுதியை 25 சதவீதமாக மாற்றினர். இதற்கு அபராத வட்டி கிடையாது. இதற்கு மேல் 200 சதவீதம் வரை வாங்கும் கடனுக்கு வங்கி வீதத்திற்கு மேல் 1 சதவீதம் அதிக வட்டி செலுத்த வேண்டும். இதற்கு மேல் 400% வரை 2% உயர்வட்டி கொடுக்கவேண்டும். இதற்கு மேல் வாங்கும் தொகைக்கு 2.5% உயர் வட்டி கொடுக்க வேண்டும். பாதுகாப்புச் செலவு உயர்ந்தமையால் பணவீக்கச் சக்தி தோன்றியது. 1962ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் நான்கு படிவ முறையை இரு படிவமுறையாகத் திருத்தினர். முதல் இரு படிவங்களை இணைத்துச் சட்டபூர்வக் காப்புத் தொகையில் 50 சதவீதத்தை அபராதத்திற்குட்படாத, வங்கி வீதத்தில் கடன் பெறக் கூடியதாக அமைத்தனர். வங்கி வீதத்தை 4–லிருந்து 4·5 ஆக உயர்த்தினர். அடுத்த படிவத்தின் வட்டிவீதம் 6%. இதற்கும் மீறிய அளவு கடன் வாங்கலுக்கு வட்டிவீதம் 6.5%. அன்று பண, மூலதன மார்க்கட்டுகளில் நிலவிய வீதங்களை ஒட்டி வங்கி வீதத்தை உயர்த்தினர். பங்கீட்டுப் படிவ முறை வட்டி வீதம் கடன் அளிப்பையும் அதன் அடக்கச் செலவையும் கட்டுப்படுத்தும் நோக்கம் கொண்டிருந்தது. ரிசர்வ் வங்கி கையாண்ட வேறுபட்ட மீள் தள்ளுபடி வீதங்கள் இதுபோன்ற ஜப்பான் வங்கியின் (Bank of Japan) கொள்கையை நினைவூட்டுகின்றது. ஜப்பானில் ஓர் அடிப்படை வீதத்தையும், ஓர் அளவுக்கு மீறிய பகுதிக்கு மைய வங்கி சரியான

தென்று கருதிய உயர் வீதத்தையும் வசூல் செய்தனர்.[1] இந்தியாவில் ஒவ்வொரு வங்கிக்கும் அதன் காப்பு வீதத்தில் ஒரு பகுதிக்குச் சமமான அடிப்படைப் பகுதியுண்டு. இதற்குயர்வான தொகைகளுக்கு அபராத வீதம் வசூல் செய்ய ஒரு சூத்திரத்தை (formula) வகுத்தனர். இதற்கு ஓர் உச்சவரம்பும் உண்டு.

பங்கீட்டு, அபராத வட்டி முறை மைய வங்கியிடம் கடன் வாங்கலைக் குறைக்க முடியாது என்பதை அனுபவம் புலப்படுத்தியது. மற்றப் பருவ காலத்தில் இந்திய வங்கிகளின் ரொக்க நிலை விகிதம் மிகுதியாக இருக்கும்போது, அவை தேதியுள்ள பத்திரங்களை வாங்காமல் கருவூல உண்டியல்களையே பெறுகின்றன. இவைகளை விறுவிறுப்பான காலத்தில் விற்பனை செய்வதால் வங்கிகள் தம் பகுதிகளை விட (quotas) அதிகமான அளவு கடன் வாங்க முடியும். தேதியிட்ட பத்திரங்களை விற்று இழப்படைய வேண்டியதில்லை. வட்டியின் வளர்வீத முறை மிகக் குறைவாக இருந்ததால் அவைகளைப் பொருட்படுத்தாமல் வங்கிகள் மிகுதியான அளவு கடன் பெற்றன. விற்பனையாளர் மார்க்கட்டில் (Seller's market) உயர் வட்டிகளை வங்கிகள் வாடிக்கைகாரர்களிடம் திருப்புவதற்கு இடர்ப்பாடுகள் கிடையா.

### எச்ச ரொக்கநிலை அமைப்பு

நிலைமையைச் சமாளிக்க வேறுவிதக் கட்டுப்பாட்டைக் கையாளவேண்டியிருந்தது. 1964ஆம் ஆண்டு 'எச்ச ரொக்க நிலை விகிதத்தை' (net liquidity ratio) உருவாக்கினர். ரிசர்வ் வங்கியிடம் கடன் பெறுவதற்கு வர்த்தக வங்கிகள் குறைந்த பட்ச 'எச்ச ரொக்கநிலை' விகிதத்தைக் கொள்ளவேண்டும். முன்னர் இருந்ததைப்போலச் சட்டபூர்வ விகிதம் இதற்குப் பயன்படவில்லை. 'ஒரு வங்கி ரிசர்வ் வங்கியிடமும், மற்றக் குறிப்பிட்ட வங்கிகளிடமும் கொண்டுள்ள டெப்பாசிட்டுகளும், ரிசர்வ் வங்கி, அதன் நிறுவனங்கள், மற்ற வங்கிகள், ஸ்டேட் வங்கி, தொழில் வளர்ச்சி வங்கி முதலியவைகளிடம் பெற்ற கடன் தொகை நீங்கலாக, அதன் அரசு பத்திர முதலீடும் சேர்ந்து அளிக்கும் கூட்டுந் தொகையை, அதன் கேட்பு. தவணை டெப்பாசிட்டுப் பொறுப்புகளின் விகிதமாக'[2] உள்ளதையே எச்ச ரொக்க நிலை விகிதம் என்று விளக்கினர். எச்ச ரொக்கநிலை விகிதம் முன்னர் உள்ளவைகளைவிட வங்கிகளின் ரொக்க நிலையைக் காட்டும்; எனெனில் ஏற்கப்பட்ட பத்திரங்களை அடைமானமாகக்

[1] H. T. Patrick : Monetary Policy and Cenrtral Banking in Contemporary Japan, 1962 ch. VII.

[2] Reserve Bank of India Bulletin, September 1964, pp. 1162-3.

காட்டி வாங்கும் கடனை மட்டும் இம்முறை கணக்கில் எடுத்துக் கொள்வதில்லை. மற்றச் சொத்துகளைக் கொண்டு வாங்கும் கடன் களையும், தொழில் வளர்ச்சி வங்கிகளிடம் வாங்கும் கடன்களையும் இது கணக்கில் எடுத்துக் கொள்கிறது. எச்ச ரொக்கநிலை விகிதம் ஒரு குறிப்பிட்ட அளவு இருக்கும்வரை (இதை முதலில் 28% என்றமைத்தனர்) வங்கி வீதத்தில் கடன் வாங்கலாம். ஆனல். ரொக்கநிலை விகிதத்தில் ஏற்படும் ஒவ்வொரு சதவீதக் குறைவுக்கும் கடன் வீதம் ½% உயரும். எச்ச ரொக்கநிலை விகிதத்தைக் கொண்டு மைய வங்கிக் கடனை 1964-ல் நிர்ணயம் செய்தபோது வங்கி வீதத்தை 4½%-லிருந்து 5½% ஆக உயர்த்தினர். வர்த்தக வங்கிகள் கொடுக்கும் கடன்களுக்கு வசூல் செய்யும் வட்டி வீதத்திற்கு ஓர் உச்சவரம்பு கட்டினர். இது புதிய முறையின் மூன்ருவது அம்சமாகும். முதலில் இது 9% ஆக இருந்தது. 1965ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் இதனை 10 ஆக உயர்த்தினர். இம்முறைப்படி வர்த்தக வங்கிகள் தம் வாடிக்கைக் காரர்களுக்குக் கடன் கொடுக்க அதிக அளவு ரிசர்வ் வங்கி யிடம் கடன் வாங்கினல் அது டெப்பாசிட்டர்களுக்கு உயர் வட்டி யைக் கொடுக்கவேண்டும். எனவே, புதிய முறை மாறும் அளவு கோலாகவும் (sliding scale) பல்வகை வட்டி வீதமுறை (multiple rate) செயல்பட்டது. பல வங்கிகள் ஒரே சமயம் தத்தம் எச்ச ரொக்கநிலை விகிதத்திற்கேற்ப பல வட்டி வீதங்களை ரிசர்வ் வங்கிக்குச் செலுத்தும். எனவே, எல்லா வங்கிகளுக்கும் பொருந்தும் ஒரே மீள் தள்ளுபடி வீதம் கிடையாது. எல்லா வங்கிகளும் குறைந்தபட்ச ரொக்கநிலை விகிதத்தைவிட அதிக மான ரொக்க நிலையுடன் இருந்தாலன்றி ஒரே மீள் தள்ளுபடி வீதத்திற்கு இடமில்லை. இம் முறை ஆங்கில நாட்டு ஒரே வங்கி வீத முறைக்கு மாருக இருக்கிறது. ஆனல், வளரும் நாடுகளின் பழக்கத்தையும் ஒட்டி இருக்கின்றது.

புதிய முறை இயங்குவதில் உள்ள இரு இயல்புகளை இங்குக் குறிப்பிடவேண்டும். நடைமுறையில் இது நெகிழ்வுள்ள தாகவும். தேர்வுப் பாணியில் அமைந்தும் இருக்கின்றது. ரிசர்வ் வங்கியின் கடனுக்கு ஒரு பொது அளவுக் கட்டுப்பாடு தேவை இல்லை. வங்கி வீதத்தில் கடன் வாங்கத் தகுதியுள்ள பகுதியை எச்ச ரொக்கநிலை விகிதத்தை மாற்றுவதன் மூலம் கண்காணிக்க லாம். இத்தகைய நடவடிக்கை எதிர்பார்த்த பலனைக் கொடுக்கும். ரொக்கநிலை விகிதமும் முதலில் 28% ஆக இருந்தது. இதை 1965ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 30% ஆகவும், 1973-ல் 37% ஆகவும் உயர்த்தினர். கடன் வாங்கலின் அடக்கச் செலவையும் மாற்றலாம். எச்ச ரொக்கநிலை விகிதத்தில் ஏற்படும்

ஒரு சதவீதக் குறைவுக்கு வட்டியுயர்வு ½% என 1965-ல் அமைத்திருந்தனர். பிறகு இதை 1% ஆக உயர்த்தினர். எச்சரொக்க விகிதமும் 1965-ல் 30% ஆயிற்று. எனவே, ரிசர்வ் வங்கிக் கடன் கிடைப்பதை மட்டுமல்லாமல் அதற்குரிய செலவையும் வரையறுத்தனர். தன்னிச்சைபோல் ஒரு வங்கிக்குக் கடன் கொடுக்கும் வழக்கத்திற்குப் பதிலாகப் புதிய வட்டிக் கட்டுப்பாட்டு முறையைப் புகுத்தினர்.[1]

## ரிசர்வ் வங்கியும் வெளி மார்க்கட்டு நடவடிக்கையும்

ரிசர்வ் வங்கியின் வெளி மார்க்கட்டுக் கொள்கையில் பல நிலைகளைக் காணலாம். இவைகளில் கொள்கையின் பரப்பு, நோக்கங்கள், இயங்கும் பாணி முதலியவை பெரும் மாறுதல்கள் அடைந்தன. பண, மூலதன மார்க்கட்டுகளின் வளர்ச்சியையும், மாறும் பொருளாதார நிலைகளையும் ஒட்டி இம்மாறுதல்கள் நிகழ்ந்தன.

போருக்கு முந்தைய காலத்தில் ஒரேவகை நோக்குடன் ரிசர்வ் வங்கி வெளி மார்க்கட்டுக் கொள்கைகளை மேற்கொள்ள வில்லை. தொடக்க காலத்திலிருந்து திட்டகாலம் வரை வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளின் நடவடிக்கைகள் பலதரப்பட்டவையாகவும் சிக்கல்கள் நிறைந்தவையாகவும் இருந்தமையால் அவைகளைப் பாகுபாடு செய்வது கடினம். ஆரம்ப காலத்தில் இந்த நடவடிக்கைகள் முக்கியமற்றவைகளாக இருந்தன. ஏனெனில் வங்கி முறையின் உள்ளமைப்பு முதிர்வு பெறவில்லை. இந்த நிலையில் பருவகாலங்களில் உண்டாகும் நிதிப் பற்றுக்குறையைத் தீர்ப்பதற்கே இந்த நடவடிக்கைகளை மேற்கொண்டனர். மார்க்கட்டின் பற்றுக்குறை நீங்கியவுடன் ரிசர்வ் வங்கி பின்வாங்கியது. எனவே, சிறப்பீட்டுப் பத்திர (gilt edged securities) விலைகளை நிலைநாட்டுவது ரிசர்வ் வங்கியின் அக்கால நோக்கமல்ல. ஆனால் 1935-39-ல் பல சந்தர்ப்பங்களில் சிறப்பீட்டுப் பத்திர விலைகளை நிலைநாட்டுவதற்கும், புதிய அரசு பத்திர வெளியீடுகளைக் கொணரவும் இந்த நடவடிக்கைகளை, வங்கி நடத்தியது. சில நேரங்களில் இவ்விரு காரணங்களுள் ஒன்றையும், பண அளவைப் பெருக்கும் நோக்கத்தையும் மனத்தில் கொண்டு வெளி மார்க்கட்டுக் கொள்கையைப் பின்பற்றியது. போருக்குமுன் இக்கருவி

[1] See 'Recent Evolution in Monetary Policy of the Reserve Bank of India' in the Reserve Bank of India, Bulletin April, 1966, pp. 17–18.

யைக் கையாள எக்காரணங்கள் இருந்தபோதிலும், குறைந்த அளவிலேயே வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளை மேற்கொண் டனர். வங்கி முதலீட்டின் மாறுதல்கள் குறுகிய எல்லைகளுக்குட் பட்டிருந்தன என்பதைக் கீழ்க்காணும் பட்டியல் புலப்படுத்தும்.[1]

முதலீடுகள் (வங்கித் துறையில்)

வெள்ளிக்கிழமை தோறும்
சராசரி விவரங்கள்
(கோடி ரூபாயில்).

| | |
|---|---|
| 1935-6 | 5·47 |
| 1936-7 | 6·04 |
| 1937-8 | 7·12 |
| 1938-9 | 6·36 |
| 1939-40 | 7·26 |

1937ஆம் ஆண்டு ஜூலை மாதம் மொத்த முதலீடுகளின் மதிப்பு ரூ. 8.3 கோடியாயிற்று. அதன் பிறகு இது குறைந்து விட்டது. 1939, ஜூலை மாதம் ரூ. 7·5 கோடியாகக் குறைந்து விட்டது. எனவே, போருக்கு முந்தைய ஆண்டுகளில் ரிசர்வ் வங்கியின் வெளி மார்க்கட்டு நடவடிக்கைகள் முக்கியமற் றிருந்தன. மார்க்கட்டின் தேவைகளைத் தீர்ப்பதற்காக அவ் வப்போது பருவகாலங்களில் எடுக்கப்படும் நடவடிக்கை களாகவே இருந்தன. நடவடிக்கைகளின் அளவு குறைந் திருந்தன.

வங்கியின் முதலீடுகள் போர்க்காலத்தில், அதாவது 1940-41 முதல் 1943-44 வரை ஒரே நிலையில் இருந்தன. 1944-45க்குப் பின்னர் தீவிரமாக உயர்ந்தன. 1943-44-ல் முதலீடு ரூ. 7.61 கோடியாக இருந்தது. இது 1944-45-ல் ரூ. 13.13 கோடியாகவும், பின்னர் 1947-48-ல் ரூ. 81·53 கோடியாகவும் உயர்ந்தது. 1948-49 ல் இது ரூ. 75·65 கோடியாகக் குறைந்தது.

1944-45 முதல் 1948-49 வரை நடைபெற்ற வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளின் புள்ளி விவரங்கள் இவை எவ்வாறு பெருகின என்பதைப் புலப்படுத்துகின்றன.[2]

[1] Reserve Baak of India, Annual Reports on Currency and Finance.

[2] 'Open Market Operations of the Reserve Bank of India', Reserve Bank of India Bulletin, June, 1960, p. 799.

கோடி ரூபாயில்

| ஆண்டு | வாங்கல் | விற்பனை | (—) வாங்கல் (+) விற்பனையின் எச்ச நிலை |
|---|---|---|---|
| 1944–45 | 34.97 | 10.24 | — 24.73 |
| 1945–46 | 45.77 | 70.30 | + 24.53 |
| 1946–47 | 95.35 | 33.06 | — 62.69 |
| 1947–48 | 75.76 | 23.42 | — 52.34 |
| 1948–49 | 121.84 | 30.42 | — 91.42 |

வாராந்தரப் புள்ளி விவரங்களைக் கொண்டு கவனமாக ஓர் ஆராய்ச்சி செய்தால் முதலீடு பெருகியதுடன், அதன் அளவில் நிகழ்ந்த மாறுதல்கள் அதிகமாகவும், முக்கியமானதாகவும் இருந்தன என்பதைக் காணலாம். வெளி மார்க்கட்டு நடவடிக்கைகள் மிகுதியான அளவில் மட்டும் நடைபெறுமல். இந்த அளவு பெருகிக்கொண்டே சென்றது என்பது தெளிவாகின்றது.

போர்க்காலத்திலும், போர்ப் பிற்காலத்திலும் வெளி மார்க்கட்டு நடவடிக்கையை முதலில் மலிவுப் பணக் கொள்கையாகவும் (cheap money policy) இரண்டாவதாக அரசு பத்திர விலைகளை நிலைநாட்டுவதற்காகவும் கையாண்டனர். மார்க்கட்டைக் குறைந்த வட்டி வீதங்களில் அரசு பத்திரங்களின் விற்பனைக்குத் தயார் செய்யும் வகையில் அமைத்தனர்.

அரசு.பத்திரங்களுக்கும் இத்தகைய பக்க பலம் பொதுக் கடனின் பெரும் பகுதியை நோட்டு வெளியீட்டின் மூலம் நிறுவ வேண்டியதாயிற்று. இதனால் பண வீக்கத்தை விளைவிக்கும் சக்தி வளர்ந்தது. மற்ற நாடுகளைப் போலவே ரிசர்வ் வங்கியின் வெளி மார்க்கட்டுக் கொள்கையும் மலிவுப் பண நிலையை ஏற்படுத்துவதற்காக அமல் செய்யப்பட்டது. போருக்குப் பணம் திரட்டுவதற்காகவும் இதை அமல் செய்தனர். அரசு பத்திரங்களை விரைவில் விற்பனை செய்து நிதி திரட்டுவதற்காக இந்த நடவடிக்கைகளை மேற்கொண்டனர்.

போர்ப் பிற்கால முன்பகுதியில் ரிசர்வ் வங்கி அரசியலாரின் மலிவுப் பணக் கொள்கையை ஆதரித்து வர்த்தக வங்கிகள் தம் தனிக் கடன்களைப் பெருக்க விரும்பின. இக்காலத்தில் வெளி மார்க்கட்டு நடவடிக்கைகள் கணிசமான அளவு நடைபெற்றன. பொதுக் கடனை நிதியாக்கம் மூலம் நடத்தியதால் அரசின் பண வீக்க எதிர் நடவடிக்கைகளுடைய (anti inflationary measures) பலன்கள் குறைந்தன. 1951–ல் கொரியப் போரின் காரண

மாக விளைந்த வீக்கத்தைக் (boom) கட்டுப்படுத்த வங்கி வீதத்தை உயர்த்தினர். இதற்கு ஆதரவாக வெளி மார்க்கட்டுக் கொள்கையில் ஒரு மாறுதலைப் புகுத்தினர். ரிசர்வ் வங்கி வர்த்தக வங்கிகள் கொண்டிருந்த அரசு பத்திரங்களை வாங்க வில்லை. அவை இப்பத்திரங்களை அடைமானமாக வைத்துத் தம் பருவகாலத் தேவைகளுக்கான கடனைப் பெறவேண்டும். வெளி மார்க்கட்டு நடவடிக்கை தேர்வு முறையிலும், பாகுபாடு செய்யும் வகையிலும் அமைந்தது. முதன் முதலில் வெளி மார்க் கட்டுக் கொள்கை நெகிழ்ச்சியுள்ள கருவியாக ஆளப்பட்டது. பருவகால நிதியைக் கொடுப்பதற்குப் பதிலாக இவ்வாறு இக் கருவியை முதலில் ஆண்டனர்.

திட்ட காலத்தில் அரசு பத்திர மார்க்கட்டில் ஒழுங்கான நிலையை அமைப்பதற்கு மட்டுமல்லாமல் பத்திரங்களின் வீதங் களைக் கட்டுப்படுத்துவதற்கும், பருவகால ரொக்கத் தேவை, அளிப்புகளை ஒழுங்குபடுத்துவதற்கும் இதைக் கையாளு கின்றனர். வர்த்தக வங்கிகளின் ரொக்கக் காப்பையும் இதன் மூலம் கண்காணிக்கின்றனர். வங்கித் துறையின் ரொக்க நிலையைக் கட்டுப்படுத்துவதற்காக ரிசர்வ் வங்கி 1959—60-ல் இக்கருவியை வெற்றிகரமாகச் செயல்படுத்தியது. ரூ. 90 கோடி மதிப்புள்ள வங்கிப் பத்திரங்களை நிகரமாக அந்த ஆண்டு விற்பனை செய்தது.[1]

தொடக்க காலத்தில் எவ்வாறிருந்தபோதிலும் வெளி மார்க் கட்டுக் கொள்கை இந்தியாவில் மற்ற வளர்ச்சி குன்றிய நாடுகளை விடப் பயனுள்ளதாகவும் வெற்றிகரமாகவும் இருக்கின்றது. மற்ற நாடுகளைவிட நம் நாட்டில் இக்கொள்கைக் கேற்ற சட்டப் பின்னணி இருக்கின்றது. ரிசர்வ் வங்கி வாங்கக்கூடிய பத்திரங் களின் முதிர்வுக் காலமும், அளவும் சட்டக் கட்டுப்பாடுகளுக் குட்படவில்லை, இவைகளை வங்கியே முடிவு செய்யலாம். 1934 ஆம் ஆண்டுச் சட்டப்படி ரிசர்வ் வங்கி வைத்துக் கொள்ளக்கூடிய ரூபாய்ப் பத்திரங்களின் (rupee securities) அளவும், முதிர்வுக் காலமும் சட்டக் கட்டுப்பாட்டுக் குட்பட் டிருந்தது. ஆனால், பின்னர் இக்கட்டுப்பாடுகளை நீக்கினர்.[2]

[1] Memorandum of Evidence of the Governor of the Reserve Bank, Radcliffe Committee, Vol. I, p. 257. Also Annual Report on Currency and Finance, Reserve Bank of India. 1959-60, p. 30.

[2] ரிசர்வ் வங்கி வைத்துக்கொள்ளக் கூடிய ரூபாய்ப் பத்திரங்கள் ஓரெல்லைக்குட் பட்டிருக்கவேண்டும். வங்கியின் மூலதனம், காப்புநிதி, வங்கித்துறையின் டெப்பா சிட்டுப் பொறுப்பில் 3/5 பகுதி — இவைகளின் கூட்டுத்தொகையே உச்ச எல்லை யாகும்; ஓராண்டுக்கும், பத்தாண்டுகளுக்கு மப்பால் முதிர்வடையும் பத்திரங்களை வாங்கி ஓரளவுக்குமேல் வைத்துக்கொள்ளக்கூடாது.

சட்டத்தின் 17(8) ஆம் பகுதியைத் திருத்தினர். வங்கி மையய, மாநில அரசு பத்திரங்களையும், மையய அரசின் உத்திரவாதம் பெற்ற பத்திரங்களையும், ஸ்தல ஸ்தாபனங்களின் பத்திரங்களையும், எத்தகைய தவணை கொண்டிருப்பினும் வாங்கலாம். நிதி வசதிகளைப் பொறுத்தவரை பண, மூலதன மார்க்கட்டுகள் இங்கிலாந்து, அமெரிக்காவைப்போல் வளர்ச்சியடையவில்லை. அவைகளுடைய பல பகுதிகளும் சரிவர இணையவில்லை. ஆயினும், பம்பாய், கல்கத்தா, சென்னை நகரங்களிலுள்ள கேந்திரங்கள் வெளி மார்க்கட்டு நடவடிக்கைகள், வெற்றிகரமாகவும், பரவலாகவும் செயல்படத் தகுந்தவாறு அமைந்துள்ளன. அரசு பத்திர விலைகளில் ஏற்றத்தாழ்வுகள் ஏற்படா வண்ணம் செயல்பட இக் கேந்திரங்கள் உதவுகின்றன. முன்னர் வர்த்தக வங்கிகளுடைய ரொக்கக் காப்பு விகிதத்தில் அதிக வேறுபாடு காணப்பட்டது. இவை 1935-36 முதல் 1948-49 வரை 9.50 சதவீதத்திலிருந்து 17.36% வரை மாறின. 1951-52 முதல் 1959-60 வரை இது 6.63%-லிருந்து 9.59% வரை மாறியது. 1960-61-ல் மாற்றம் 6.21-6.83%க் குட்பட்டிருந்தது.[1] அண்மைக் காலத்தில் வங்கிகள் குறைவான ரொக்கக் காப்புடன் இயங்குகின்றன. ஏனெனில் வங்கி கடனுக்கு ஏராளமான தேவை ஏற்படுகின்றது. மேலும் அவை வேண்டும்போது ரிசர்வ் வங்கியிடமிருந்து கடனுதவி பெறலாம்.[2] ரொக்கக் காப்பு மாரு நிலையில் இல்லை, ஆனால் குறுகியகால ஏற்றத்தாழ்வுகள் அதிகமாக இல்லை. பரவலாகவுமில்லை. ஆகையால் வெளி மார்க்கட்டு நடவடிக்கைக்குத் தடையேது மில்லை, மேலும் இக் காலத்தில் ரிசர்வ் வங்கிக்குக் கட்டுப்பாட்டுக் கருவிகளுக்குப் பஞ்சமே இல்லை. இக்கருவிகள் தீர்ந்துவிடும் என்ற அச்சமில்லை. போருக்குப்பின், பொதுக்கடன் பெருமளவு பெருகிவிட்டது. இதனால் வங்கிகள் முதலீட்டுக்காக வாங்கக்கூடிய பத்திரங்கள் பலதரப்பட்டவையாகவும், அதிக அளவில் கிடைக்கக்கூடியவையாகவும் இருக்கின்றன. அண்மையில் ஐந்தாண்டுத் திட்டங்களுக்காகக் கடன் வாங்கும் முறை இந்த நிலையை மேலும் வளர்த்துள்ளது.

**வாங்கல், விற்றலின் இருமுகப் பரிவர்த்தனை**

மேற்குறிப்பிட்ட 'நிகர விற்பனை' முறை (net sales) வெளி மார்க்கட்டு நடவடிக்கையின் வளர்ச்சியில் ஒரு புதிய கட்டத்தைப் புகுத்தியது. 1952 வரை 'நிகர வாங்கல்' (net purchases)

[1] Rescrve Bank af India Bulletin, September, 1964, table IV, p. 1181.

[2] Report on Trends and Progress of Banking in India during 1962. p. 21.

இருந்தது. அப்பொழுது இருந்த சிறப்பீட்டுப் பத்திரமார்க்கட்டின் குறுகிய எல்லை இதைக் காட்டுகிறது. பருவகாலத் தேவைகளைப் பூர்த்தி செய்யும் பழக்கமும் மலிவுப் பணக் கொள்கையைச் செயல் படுத்தும் பழக்கமும் இதை மேலும் விளக்குகின்றன. 1945 முதல் 1963 வரை உள்ள காலத்தில் 'எச்ச வாங்கலே' நடை பெற்றது என்னும் முன்னர் குறைந்த ஒருமுக வாங்கல் மட்டும் நடைபெறவில்லை. இருமுகப் பரிவர்த்தனை திட்டவட்டமாக நடைபெற ஆரம்பித்துவிட்டது,

| ஆண்டு | கோடி ரூபாயில் எச்ச வாங்கல் (+) எச்ச விற்பனை (−) |
|---|---|
| 1945-51 | — 281.1 |
| 1952-56 | + 55.2 |
| 1957-61 | + 82.8 |
| 1962 | — 56.4 |

அண்மைக் காலத்தில் வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளில் ஒரு குறிப்பிடத்தக்க மாறுதல் நிகழ்ந்துள்ளது. வங்கி, இன்சூரன்ஸ் நிறுவனங்களைத் தவிர இதர நிதி நிலையங்களும் பொதுக் கடனில் பங்கேற்றன. இவைகளுடைய பங்கு அண்மையில் மொத்தத்தில் நான்கில் மூன்று பங்காக இருந்தது. வங்கி முறைப் பகுதியில் மட்டும் வெளி மார்க்கட்டு நடவடிக்கைகள் நடைபெறவில்லை. இவை அரசு பத்திர மார்க்கட்டு முழுவதும் பரவியுள்ளது. இதைவிடச் சமமான பங்கீடு பற்றிய விவரங்களை (பத்திரங்களை வைத்திருப்பது பற்றிய பங்கீடு) Reserve Bank of India Bulletin, மார்ச்சு 1963-ல் காணலாம்.[1] பத்திர இருப்பில் பருவகால மாறுதல்களை இன்னும் காணலாம். விறுவிறுப்பான பருவத்தில் வங்கி அதிகமான பத்திரங்களைக் கொண்டிருக்கின்றது. மந்த காலத்தில் பத்திர இருப்புக் குறைகின்றது. வர்த்தக வங்கிகள் இவைகளை வாங்கிவிடுகின்றன.

மாற்று நடவடிக்கைகள் (Switch operations)

இருமுகப் பரிவர்த்தனையைத் தவிர அண்மைக் காலத்தில் ரிசர்வ் வங்கியின் நடவடிக்கைகளில் புதியதொரு திருப்பத்தையும் காணலாம். அதாவது மாற்று நடவடிக்கைகளை — ஒன்றுக்குப் பதிலாக மற்றொன்றை மாற்றும் முறையையும் கையாளுகின்றனர். ஒரு தவணைக்காலமுள்ள பத்திரங்களுக்குப்

[1] A. G. Chandavarkar, 'Ownership Pattern of Funded Govt. Debt.'

பதிலாக மற்றொன்றை அளிக்கும் வழக்கம் பின்பற்றப் படுகின்றது. 1950ஆம் ஆண்டிலிருந்து ரிசர்வ் வங்கி கையாளும் இக்கருவியை வளர்ச்சி யடையும் மற்ற நாடுகளின் மைய வங்கிகள் கையாளுவதில்லை. குறுகிய தவணை கொண்டுள்ள பத்திரங்களுக்குப் பதிலாக நீண்ட தவணையுள்ளவைகளை மாற்றுவது வழக்கம். இதனால் பொருளாதாரத்திலுள்ள பத்திரங்களின் சராசரித் தவணைக் காலம் நீங்குகின்றது. ரிசர்வ் வங்கி இப் பழக்கத்தைக் கையாண்டு கடன் நிருவாகத்தைச் செய்யலாம். இந்த நடவடிக்கைகள் பத்திரங்களின் முதிர்வை மட்டுமே மாற்றும். கடன் அளவை இவை மாற்றமாட்டா. முதலீட்டின் அமைப்பு விரும்பத்தக்க முறையில் மாறியபின் மாற்று நடவடிக்கைகள் குறைந்த அளவில் நடைபெறும். 1951ஆம் ஆண்டின் நவம்பர் மாதத்திற்குப் பிறகு வங்கி வீதம் உயர்ந்த பின் மாற்று நடவடிக்கைகள் குறைந்தமைக்கு இது காரணமாக இருக்கலாம். 1951-ல் ரூ. 62.2 கோடியாக இருந்த இந் நடவடிக்கைகளின் பெறுமானம் 1962-ல் ரூ. 72 கோடியாகக் குறைந்தது. 1963-ல் இது ரூ. 3.3 கோடியாகக் குறைந்தது.[1]

ரிசர்வ் வங்கி செய்யும் வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளின் எல்லை (ஒரு செலாவணிக் கருவியாகப் பயன்படும்போது) ஓரளவு குறுகியுள்ளது; அரசின் செலவுக்கு வங்கி நிதியளிப்பது இதற்குக் காரணம் என்றும் நாம் முடிவாகக் கூறலாம். திட்டகாலத்தில் அரசு தன் வளர்ச்சிக்கான செலவுகளைச் சமாளிப்பதற்கும் பொது மக்களிடமிருந்து பெருமளவு கடன் வாங்கலை நம்ப வேண்டியிருக்கின்றது, அரசு பத்திரங்களை விலையாக்கச் சிறந்த சூழ்நிலையை உருவாக்குவது ரிசர்வ் வங்கியின் பொறுப்பாகும். இந்த நிலையில் கடன் கண்காணிப்புக்குத் துணையாகக் கடன் நிருவாகத்தை வெளி மார்க்கட்டு நடவடிக்கையின் நோக்கமாகக் கொண்டிருக்கின்றனர்.[2] தொழில் வளர்ச்சி முதிர்வடைந்துள்ள நாடுகளில் பண மூலதன மார்க்கட்டுகள் வளர்ந்துள்ளன. இந்த நாடுகளில் நடைபெறும் வெளி மார்க்கட்டு நடவடிக்கையிலிருந்து நம் நாட்டு முறை மாறுபட்டிருக்கின்றது.

**மாறும் காப்பு விகிதம் இந்தியாவில் செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவியாக இயங்குதல்**

இரண்டாவது திட்டகாலத்திலும், அடுத்துவந்த திட்ட காலங்களிலும் பெருமளவு பற்றுக்குறை நிதியாக்கம் நடை

[1] See Table V in A. G. Chandavarkar, 'Some Special Aspects of the Open Market Operations of the Reserve Bank of India, Reserve Bank of India. Bulletin, December 1964. .p 1502.

[2] Dr. B. K. Madan, in Commonwealth Banking Systems, p. 230.

பெற்றது. இதன் விளைவாக ரிசர்வ் வங்கி பணவீக்கத்தைக் கட்டுப்படுத்த, புதிய அதிகாரங்களைப் பெற்றது. முன்னர் வர்த்தக வங்கிகள் தவணை டெப்பாசிட்டுகளுக்குக் காப்பாக 5% ரொக்கத்தையும், கேட்பு டெப்பாசிட்டுகளுக்குக் காப்பாக 2% ரொக்கத்தையும் கொள்ளவேண்டும். ஒரு சட்டத் திருத்தத்தின் மூலம் இதை 5% முதல் 20% வரையிலும் (தவணை டெப்பா சிட்டுக்கு) 2% முதல் 8% வரை (கேட்பு டெப்பாசிட்டுக்கு) உயர்த்த ரிசர்வ் வங்கி அதிகாரம் பெற்றது. இதற்குப்பின் ஒரு திருத்தம் தவணை, கேட்பு டெப்பாசிட்டுகளுக்கிடையே உள்ள வேறுபாட்டை நீக்கின. புதிய காப்பு விகிதத்தை 3% முதல் 15% வரை உயர்த்த ரிசர்வ் வங்கி அனுமதி பெற்றது. ஒரு குறிப் பிட்ட நாளுக்குப் பின் டெப்பாசிட்டின் அளவு கூடினால் இதில் 100%க்கு சமமான உபரிக் காப்பு நிதியையும் வைத்துக்கொள்ளு மாறு வர்த்தக வங்கிகளை ரிசர்வ் வங்கி பணிக்கலாம்.

மாறும் காப்பு நிதி, வளர்ச்சி நிறைந்த நாடுகளிலுக், வளர்ச்சி குன்றிய நாடுகளிலும் நல்கும் நன்மை தீமைகளை முன்பே பார்த்தோம். வளர்ச்சி குன்றிய நாடுகளில் இக்கருவி சில தீமைகளை விளைவிக்கும். இவைகளைத் தவிர்க்கச் சில பாது காப்புகளை அமைத்துள்ளனர். இக் கருவியின் பலனைப் பெருக்கும் நோக்கத்துடனும் பாதுகாப்புகளை ஏற்படுத்தி யுள்ளனர். நம் மதிப்பீட்டின்படி இந்திய சட்டம் சில நாடுகளி லுள்ள சட்டத்தை (சில இயல்புகளைப் பொறுத்தவரை) ஒத்திருக் கின்றது. வேறு சில இயல்புகளை நோக்கும்போது மற்ற நாடு களில் மாறும் காப்புநிதி இயங்கும் விதத்திலிருந்து நாம் வேண்டிய பாடங்களைக் கற்றுக்கொள்ளவில்லை. காப்புத் தொகையுயர்வு எதிர்காலத்தில் கூடும் டெப்பாசிட்டுகளுக்கே பொருந்தும். குறிப்பிட்ட அளவுக்கு மேற்பட்ட காப்புத் தொகையை வர்த்தக வங்கிகள் மைய வங்கியிடம் டெப்பாசிட்டாகக் கொள்ளும்போது இப்பரிசு தொகைக்கு ரிசர்வ் வங்கி வட்டி கொடுக்க வேண்டும். இது மற்ற வளர்ச்சி குன்றிய நாடுகளின் சட்டத்தை ஒத்திருக் கின்றது. காப்பு விகிதத்தைத் திடீரென்றுயர்த்துவதால் செலாவணி முறைக்கும் மக்களுடைய நம்பிக்கைக்கும் அதிர்ச்சி யுண்டாகலாம் என்பதை இந்திய நிருவாகிகள் உணரவில்லை. காப்புத் தொகையின் உயர்வு பற்றிய அறிக்கையை கெஜட்டில் பிரசுரம் செய்கின்றனர். இதைத் தவிர இவ் வுயர்வு பற்றிய முன்னெச்சரிக்கை கொடுக்க சட்டத் திருத்தம் எவ்வித வழியும் வகுக்கவில்லை. காப்புத் தொகையுயர்வு படிப்படியாக ஏற்பட வேண்டும் என்பதற்கும் சட்டம் வழி வகுக்கவில்லை. பிலிப்பைன்ஸ், சிலோன், குவாடிமாலா முதலிய நாடுகளிலும்

லிபியா போன்ற அண்மையில் விடுதலையடைந்த நாடுகளிலும் சட்டங்கள், காப்பு நிதியுயர்வு பற்றிய முன்னறிவிப்புக் கொடுக்க வேண்டும் என்றும், இவ்வுயர்வு படிப்படியாக இருக்கவேண்டு மென்றும் திட்டவட்டமாகக் குறிப்பிடுகின்றன. விகிதம் படிப் படியாக உயரவேண்டும் என்ற கட்டாயம் இல்லாத நாடுகளிலும் கூட—உதாரணமாக நைஜீரியா. ரொடிசியா, சூடான் நாடு களில்—காப்புயர்வு பற்றிய முன்னறிவிப்புக் கொடுக்கவேண்டும்.[1] 1960-ல் ரிசர்வ் வங்கி முதன் முதலில் இக் கருவியைக் கையாண்டபோது உபரி டெப்பாசிட்டை உடனடியாக வைத்துக் கொள்ள இடமளிக்கவில்லை.

பெடரல் ரிசர்வ் முறை இக் கருவியைக் கையாண்டபோது இதன் நெகிழ்வற்ற தன்மை வெளியாயிற்று. இதை ரிசர்வ் வங்கி உணர்ந்ததாகத் தெரியவில்லை, ஒரு சில வங்கிகள் மட்டும் சிக்குண்ட ரொக்க உபரி அல்லது பற்றுக்குறை நிலையை நீக்க ரொக்கக் காப்பு மாற்று முறையைக் கையாள முடியாது என்பதை அமெரிக்க அனுபவம் புலப்படுத்தியது. பற்பல பணமார்க்கட்டுப் பகுதிகளில் பல்வேறு அளவு காப்பு விகிதத்தை மாற்றுவதற்குரிய வகையில் சட்டம் அமைந்தால் இப்பிரச்சினையைத் தீர்க்கலாம். கல்கத்தா, பம்பாய், சென்னை முதலிய மார்க்கட்டுப் பகுதி களுக்குப் பற்பல காப்பு விகிதங்களை நிர்ணயம் செய்ய ரிசர்வ் வங்கிக்கு அனுமதி வழங்கவில்லை. மேற்குறிப்பிட்ட பாதுகாப்பு களையும், நெகிழ்வுத் தன்மையையும் அளிக்காததால் மாறும் காப்பு விகிதக் கருவி அதன் முக்கியத்துவத்தில் பெரும்பகுதியை இழந்துவிட்டது.

மாறும் காப்பு விகிதம் ரிசர்வ் வங்கியிடமுள்ள வலிமை பொருந்திய கட்டுப்பாட்டுக் கருவியாகும் என்பதில் ஐயமில்லை. ஆனால் இதன் திறன் வர்த்தக வங்கிகளின் காப்பு நிதி வைத்துக் கொள்ளும் பழக்கத்தைப் பெருமளவு சார்ந்திருக்கின்றது. மாறும் காப்பு விகிதம் ஒரு நுட்பமான கடன் கட்டுப்பாட்டுக் கருவியாக இயங்குவதற்கு, வர்த்தக வங்கிகள் கொண்டிருக்கும் காப்பு நிதியில் ஏற்றத் தாழ்வுகள் ஏற்படுவது தடையாக இருக்கின்றது. அண்மைக் காலம் வரை இந்திய ஷெடியூல் வங்கிகள் கொண் டிருந்த காப்புத் தொகையில் அதிக ஏற்றத் தாழ்வுகள் ஏற்பட்டன.

1935-36 முதல் 1948-49 வரை சராசரி விகிதங்கள் (மொத்தப் பொறுப்புகளில் ரிசர்வ் வங்கியிடம் கொண்டிருந்த

[1] See Sec. 104 of the Philippines Central Bnnk Act and Sec.66 of the Law of the Central Bank of Guatemala. Also Central Banking in the Emerging Counties by S. K. Basu, p. 115.

ரொக்கத் தொகை சதவீதமாக) 9.50 சதவீதத்திலிருந்து 17.36 சதவீதம் வரை மாறியது. அண்மை ஆண்டுகளில் காப்பு விகிதப் பழக்கங்கள் ஒருசீராக மாறிவிட்டன. 1961–62 முதல் 1967–68 வரை சராசரி காப்பு விகிதம் 5.8% முதல் 7.0% வரை மாறின என்பதைக் கீழ்க்காணும் பட்டியல் விளக்கும்.[1]

| | |
|---|---|
| 1961–62 | 7.0% |
| 1962–63 | 6.6% |
| 1963–64 | 6.3% |
| 1964–65 | 6.3% |
| 1966–67 | 6.3% |
| 1967–68 | 5.8% |

அமெரிக்காவில் கையாளும் பழைய முறையில் ரிசர்வ் வங்கி மாறும் காப்பு விகிதக் கருவியைக் கையாளவில்லை என்பதை கவனிக்கவேண்டும். 1960–ல் இங்கிலாந்தின் தலைமை வங்கி பின்பற்றிய 'சிறப்பு டெப்பாசிட்டு முறையையும்' (special deposit system), தென் ஆப்பிரிக்க நாடுகளிலும் மற்ற நாடுகளிலும் கையாண்ட சிறப்புக் காப்பு முறையையும் (special reserve system) ரிசர்வ் வங்கியின் முறை ஒத்திருந்தது. இந்த முறைகளில் காணும் குறைகள் மாறும் காப்பு விகித முறைக்கும் பொருந்தும்.

செலாவணிக் கட்டுப்பாட்டைத் தீவிரமாக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டதால் சிறப்புக் காப்புத் தொகை முறைக்குப் புதிய வலிமை கொடுக்கவேண்டியதாயிற்று, உபரிக் காப்புத் தொகையை நிர்ணயம் செய்யவேண்டியதாயிற்று. 1960ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் வங்கிகளின் காப்புத் தொகை (free reserves) 4.9%விருந்து 2.9% ஆகக் குறைந்தது. ரொக்க நிலைக்கு ஏற்பட்ட நெருக்கடியை இது காட்டுகின்றது. ஆனல் இந்த நெருக்கடி வங்கிக் கடனை எவ்விதத்திலும் பாதிக்கவில்லை. மந்தகாலத்திலும் இக்கடன் உயர்வாகவே இருந்தது. ரிசர்வ் வங்கியை எளிதில் அணுக முடிந்தாலும் கடனின் அடக்கச் செலவு குறைந்திருந்தாலும் வங்கிக் கடன் தொகை மிகுதியாக இருந்தது. 1960ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் ஷெடியூல் வங்கிகளின் கடன் ரூ. 33 கோடியாக இருந்தது. முந்தைய ஆண்டைவிட இது ரூ. 3 கோடி அதிகம். இந்தியச் சூழ்நிலையில்

[1] Reports on Currency and Finance, Reserve Bank of India, 1963-64, 1964-65, 1967-68 Statements 17, 20, 29.

[2] Reports of the Central Board of Directors for the year 1961, p. 19.

விறுவிறுப்பான காலத்தில் இக்கருவியை வெற்றிகரமாகப் பயன் படுத்த முடியாது. இதை மந்தகாலத்தில்கூடப் பயன் படுத்தலாம். ஆனால், விறுவிறுப்பான காலத்தில் இதன் பயன் குறைந்திருக்கின்றது.

பொதுவாகப் பார்க்கும்போது ரிசர்வ் வங்கியின் குறைந்த அனுபவம் இக்கருவியின் பயனை மெய்ப்பிக்கவில்லை. வங்கிகள் காப்பு விகித மாற்றத்தின் விளைவுகளை நீக்க, ரிசர்வ் வங்கியில் தம் பத்திரங்களை விற்பனை செய்ததோடு மட்டுமல்லாமல், புதிய டெப்பாசிட்டுகளைத் திரட்டுவதில் ஆர்வம் காட்டவில்லை, ஏனெனில் புதிய டெப்பாசிட்டில் பெருந் தொகையைத் தேக்கி விடுவர்.

**தேர்வுச் செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவியில் பரிசோதனைகள்**

1956-லிருந்து தேர்வுக் கட்டுப்பாடுகளை ரிசர்வ் வங்கி பயன்படுத்தியது. இது தற்காலத்திய கட்டுப்பாட்டுக் கொள்கையின் முக்கிய அம்சமாகும். வளர்ச்சி குன்றிய நாடுகளில் அண்மையில் அமலான மைய வங்கிச் சட்டங்கள் அளித்த அதிகாரத்தை 1956ஆம் ஆண்டின் சட்டம் ரிசர்வ் வங்கிக்கு அளிக்கவில்லை. ஆனால் 1949ஆம் ஆண்டின் இந்திய வங்கிக் கம்பெனிச் சட்டத்தின் சில கூறுகள் வங்கிக் கடன்கள் மீது சில கட்டுப்பாடுகளைச் சுமத்த ரிசர்வ் வங்கிக்கு அனுமதி கொடுத்தன. சட்டத்தின் 21(2) பகுதிப்படி ஒரு குறிப்பிட்ட வங்கிக்கோ, சில வங்கிகளுக்கோ, அறிவுரை வழங்கலாம். இவை எக்காரணங் களுக்காகக் கடன் கொடுக்கலாம், ஒதுக்கும் பகுதி எவ்வளவு இருக்கவேண்டும் என்பவை பற்றிய அறிவுரைகளாக இருக்கும். இவ் வதிகாரத்தை இதுவரை பெரும்பாலும் மறந்துவிட்டனர்; பயன்படுத்தவில்லை. இப்பொழுது திடீரென்று இதை நினைவு படுத்திக்கொண்டு பயன்படுத்த முனைந்தனர். தேர்வுக் கட்டுப் பாட்டை, ஒதுக்கும் பகுதியைக் கண்காணிப்பதன் மூலமும், உணவுத் தானியங்கள், எண்ணெய் வித்துகள், சர்க்கரை, துணி முதலியவை மீது கொடுக்கும் கடனைக் கட்டுப்படுத்துவதன் மூலமும் ரிசர்வ் வங்கி செயல்படுத்தியது. பின்னர் பங்கு மார்க் கட்டுப் பத்திரக் கடன் மீதும் இதை அமல்படுத்தினர். பொருளாதாரத்திலுள்ள ஊக வாணிகத்தையும், பதுக்கலையும் கட்டுப்படுத்துவது இதன் நோக்கமாகும். இதனால் உபரித் தேவை கட்டுப்படும்.

[1] See B. K. Madan's article in Commonwealth Banking Systems, p. 234.

தேர்வுக் கட்டுப்பாடுகளை அமல் செய்வதற்கு முதல் நடவடிக்கையை 1956-ல் ரிசர்வ் வங்கி எடுத்தது. அரிசி, நெல் மீது கொடுத்த கடனின் ஒதுக்கும் பகுதியை இப்பண்டங்களுடைய மதிப்பில் 10%-க்குக் குறையாமல் உயர்த்தவேண்டும் என்று ரிசர்வ் வங்கி ஆணையிட்டது. மேலும் இப்பண்டங்கள் மீது கொடுக்கும் கடன் ரூ. 50,000-க்கு மேற்படக்கூடாது. இப்பண்டங்கள் மீது கொடுத்த கடன் முந்தைய ஆண்டு இருந்த நிலையில் 25%-க்கு மேற்படக்கூடாது என்றும் உத்தரவிட்டனர்.[1]

பங்கு மாற்று நிலையப் பத்திரங்களைக் கொண்டு வாங்கும் துணையீட்டுக் கடன்களை வளர்ச்சி குன்றிய நாடுகள் அமெரிக்காவைப்போல் கட்டுப்படுத்துவதில்லை. ஏனெனில் இந்த நாடுகளில் மூலதன மார்க்கட்டு ஒழுங்கு முறையற்றிருக்கின்றது. ஆனால் இந்தியாவில் இந்த மார்க்கட்டுகள் ஓரளவு வளர்ந்துள்ளன. சாதாரண பங்குகளில் (equity shares) ஊக வாணிகம் நடப்பதைத் தடை செய்ய விரும்பியபோது ரிசர்வ் வங்கி இக்கருவியைக் கையாண்டது. கூட்டுப் பங்குக் கம்பெனிகளுடைய (joint stock companies) பங்குகள் மீது கொடுக்கப்பட்ட கடன் தொகைகள் 1959-லிருந்து அதிகரித்தது. ரூ. 68.77 கோடியிலிருந்து ரூ. 77.90 கோடியாக உயர்ந்தது. 1960ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 11ஆம் தேதி இத்தொகை ரூ. 81·3 கோடியாக உயர்ந்தது.[2] இந்த நாள் பங்கு மாற்று நிலையத்தில் ஏற்பட்ட வீக்க நிலையை மாற்றுவதற்காக ஒரு 'புதிய உத்தரவை அளித்தனர். இதன்படி வங்கிக் கடனின் (சாதாரணப் பங்குகள் மீது கொடுக்கப்பட்ட கடன்) ஒதுக்கும் பகுதி குறைந்தபட்சம் 50 சதவீதமாக இருக்க வேண்டும். ரூ. 5,000 வரை உள்ள கடன்களுக்கு விதிவிலக்களித்தனர். குறைவான தொகையை முதலீடு செய்யும் சிறிய முதலாளிகள் பாதிக்கப்படக்கூடாதென்பது நோக்கம்.[3] பங்குகள் மீது கொடுக்கப்பட்ட கடன் தொகைகள் ஸ்திர நிலையில் இருந்தமையால் 1962ஆம் ஆண்டு குறைந்தபட்ச ஒதுக்கும் பகுதியை 40%ஆகக் குறைத்தனர்.[4]

[1] Report of the Central Board of Directors, Reserve Bank of India, for the year ended June 30, 1956, pp. 10-11.

[2] Annual Report on Trend of Progress of Banking, 1959, p. 69. Statement 16.

[3] Annual Report on Currency and Finance, Reserve Bank of India, 1959-60, p 35.

[4] Report of the Central Board of Directors. Reserve Bank of India, for the year 1962, p 22.

ரிசர்வ் வங்கி தேர்வுக் கட்டுப்பாட்டுக் கருவியை நெகிழ்வுடன் பயன்படுத்தியுள்ளது. இக்கட்டுப்பாட்டை சில நேரங்களில் கடுமையாக்கினர், தளர்த்தினர். புதிய துறைகளுக்கு நீடித்தனர், கைவிட்டனர்—அதாவது பண்டங்களின் தேவை அளிப்புக்குத் தகுந்தவாறும், பொருளாதார நிலைக்கேற்றவாறும் இதை மாற்றிக் கையாண்டனர். இக்கருவி பல படிவங்கள் வழியாக வளர்ந்த போது இதன் குறைகளை நீக்க நிறைவு கொடுத்தனர். முதலில் ஆணைகள் மூலம் ஒதுக்கும் பகுதியை நிர்ணயம் செய்தனர், அதை மாற்றவும் செய்தனர். 1957ஆம் ஆண்டு ஜூன் மாதம் தேர்வுக்கட்டுப்பாட்டு முறை ஒரு முக்கிய நிலையை அடைந்தது. ஒதுக்கும் பகுதிக்குப் பதிலாக மொத்த கடனளிப்பைக் கண் காணித்தனர். உணவு தானியத்தின் மீது கொடுக்கும் சராசரிக் கடனை மீண்டும் நிர்ணயித்தபோது இக்கருவியின் பயன்பாட்டில் மூன்றாவது நிலையை அடைந்தனர். (1) பெரிய மாநிலங்களுக்கு ஓர் அடிப்படையில் நிர்ணயித்தனர். (2) வெவ்வேறு உணவுத் தானியங்களுக்கு வெவ்வேறு அடிப்படையில் நிர்ணயம் செய்தனர். (3) வங்கி அலுவலகங்களைப் புதிய முறையில் வகைப்படுத்தினர். புதிய அலுவலகங்களுக்கு இக்கட்டுப்பாட்டி லிருந்து விதிவிலக்களித்தனர். பல்வேறு மாநில அரசுகளின் பதிலியாக வாங்கும் வியாபாரிகளுக்கும், மற்றவர்களுக்காக தானியத்தை இருப்பில் கொண்டிருப்போருக்கும் வெவ்வேறு ஒதுக்கும் பகுதிகளை நிர்ணயம் செய்தனர்.[1] இவ்வாறு வெவ்வேறு பகுதிகளுக்கிடையே, பல வங்கிகளுக்கிடையே ஒரு வங்கியின் பல அலுவல்களுக்கிடையே வேறுபாடு காட்டும் முறையில் தேர்வுக் கட்டுப்பாட்டை அமல் செய்தனர். சில குறிப்பிட்ட துறை களுக்குச் சலுகைகளும் விதிவிலக்கும் அளித்தனர். சலுகை பெற்ற நிறுவனங்கள் உற்பத்திப் பண்டங்களை இடப்பெயர்ச்சி செய்யும் தொழிலில் ஈடுபடுத்தின. இறுதியாகத் தேர்வுக் கட்டுப்பாடுகளைப் பொதுக் கட்டுப்பாடுகளுடன் இணைத்து ஆண்டனர். இதைக் கீழே விளக்கியுள்ளோம்.

ரிசர்வ் வங்கி தேர்வுக் கட்டுப்பாட்டை எவ்வாறு ஆண்டது என்பதைப் பரிசீலனை செய்யும்போது இக்கட்டுப்பாட்டின் குறைகளைக் காணவேண்டும். துணையீட்டுப் பண்டங்களையும், கடன் வாங்குவோரின் வாக்குறுதியையும் கொண்டு தேர்வுக் கட்டுப்பாடுகளைச் சரிவர செய்ய முடியாது. ரிசர்வ் வங்கியின் கட்டளைகளைக் கடன் வாங்குவோர் மீறலாம். கட்டுப்பாட்டுக் குட்பட்ட பண்டங்களைத் தவிர வேறு பண்டங்களை அடைமான

[1] Report of the Central Board of Directors, Reserve Bank of India, June 1960, p. 15.

மாகக் காட்டிக் கடன் வாங்கி, அத்தொகையை ஊக வாணிகத் திற்கும் பதுக்கலுக்கும் பயன்படுத்தலாம். அரிசி, நெல் மீது கொடுக்கப்படும் கடனின் ஒதுக்கும் பகுதியை உயர்த்தியதால் இவ்வகைக் கடன்கள் குறைந்தன. ஆனால் பங்குகள் டிபெஞ் சர்கள் முதலியவை மீது வாங்கும் ஈட்டுக் கடன் தொகை உயர்ந்தது. அரிசி, நெல் கடன்கள் குறைந்ததைவிட இதரக் கடன்களின் பெருக்கம் மிகுதியாக இருந்தது. முந்தைய ஆண்டு இருந்ததைவிட இவ்விதக் கடன்கள் மிகவும் அதிகரித்தன. இக் கடன் தொகைகளைக் கொண்டு கட்டுப்பாடுகளை மீறினர். ரிசர்வ் வங்கியின் கட்டளைகளை வேண்டுமென்றே வர்த்தக வங்கிகள் மீறின என்று கூற முடியாது. எனினும் அதன் உத்தரவுகளை வங்கிகள் முழுமையாக நிறைவேற்றின என்று கூற முடியாது. இவைகளைப் பின்பற்றுவதில் காலதாமதம் ஏற்பட்டது. இந்தியா ஒரு பெரிய நாடு; இதில் மைய வங்கியின் கட்டளைகளை நிறைவேற்றுவதில் காலதாமதம் ஏற்படுவதைத் தடுக்க முடியாது. இக்கட்டளைகளை முதலில் ரிசர்வ் வங்கி, வர்த்தக வங்கிகளின் தலைமை அலுவலகங்களுக்கு அனுப்புகின்றது. பிறகு அவை மண்டல அலுவலகங்களுக்கும் (regional offices) அதன் பின் அவை கிளை அலுவலகங்களுக்கும் அனுப்புகின்றன. எனவே இவை கிளை அலுவலகங்களை அடைய குறைந்தபட்சம் ஒரு மாதம் ஆகின்றது. தேர்வுக் கட்டுப்பாடுகளுக்குட்படும் பண்டங்களின் விலைகளைக் கட்டுப்பாடுகள் எந்த அளவு உயராமல் தடுக்கின்றன என்பது இப்பண்டங்களின் தேவை–அளிப்பையும், நாட்டிலுள்ள பொதுவான ரொக்க நிலையையும் பொறுத்திருக்கும். இக்கால முழுவதும் அளிப்பு பெருகிய போதிலும் உள்நாட்டு, வெளி நாட்டுத் தேவைகள் பெருகின. இந்த நிலையில் தேர்வுக் கட்டுப் பாடுகள் விலைகளைக் கணிசமாகக் குறைக்க இயலவில்லை. வங்கிக் கடன் மூலம் பெருகும் தேவையை ஓரளவே இக்கட்டுப்பாடு குறைக்க முடிந்தது. நாட்டின் பண வீக்கத்தைப் பொது முறையில் தணிப்பது இக்கட்டுப்பாடுகளின் நோக்கமல்ல. அரசின் நிதி, தற்காப்பு, திட்டக் கொள்கைகள் தற்போதுள்ள விலை யுயர்வுக்குக் காரணம். பொதுவாக நாடெங்கும் பணப்பெருக்கம் இருக்கும்போது ஒதுக்கும் பகுதியை நிர்ணயித்துத் தேர்வுக் கட்டுப்பாடுகள் செய்து வங்கிக் கடன் கட்டுப்பாட்டையும் அதன் மூலம் விலைக்கட்டுப்பாட்டையும் செய்வது கடினம். மேலும் ஷெடியூல் வங்கிகளின் வாடிக்கைக்காரர்கள் நாட்டு வங்கியர் (indigenous bankers), ஷெடியூலில் வராத வங்கிகள் (non scheduled banks), வங்கிகள் அல்லாத இடைநிலை நிதி நிறுவனங்கள் முதலியவைகளிடமிருந்து கடனுதவி பெறலாம். இத்தகைய சந்தர்ப்பங்களில் பொதுக்கட்டுப்பாடுகளே அமல்

செய்து தேர்வுக் கட்டுப்பாடுகளின் திறனைக் கூட்டலாம். பொதுவாகக் கடனுதவியைக் கட்டுப்படுத்தாமல், குறிப்பிட்ட கடன்களை மட்டும் கட்டுப்படுத்துவதால், (பொதுக்கடன் கட்டுப்பாடுகளில்லாத போது) பலன்கள் கிடைக்கா. பொதுக்கடன் கட்டுப்பாட்டுக் கருவிகளின் உதவியில்லாதபோது தேர்வுக் கட்டுப்பாட்டுக் கருவிகள் பயனளிக்கா என்பதை மற்ற நாடுகளின் (இக் கருவிகள் பற்றிய) வரலாறு புலப்படுத்தியுள்ளது. பல நாடுகள் தேர்வுக் கட்டுப்பாடுகளைக் கைவிட வேண்டியதாயிற்று; அல்லது வங்கி வீதம் அல்லது மற்றப் பொதுக்கருவிகளை அவைகளுக்குதவியாகக் கையாள வேண்டியிருந்தது.

தேர்வுக் கட்டுப்பாடுகளின் குறைகளை இந்திய அரசு உணரத் தவறவில்லை. பணப்பெருக்கத்தின் விளைவாகத் தேவை பெருகும், பணவீக்கம் உண்டாகும் என்பதையும் காணத் தவறவில்லை. தேர்வுக் கட்டுப்பாடுகள் வெற்றியடைய வேண்டுமாயின் ஓரளவு பொதுக் கட்டுப்பாடுகள் தேவை என்பதைக் காலப்போக்கில் உணர்ந்தனர்.[1] தேர்வுக் கட்டுப்பாடுகளுக்கு வலிமையளிக்க, பின்னர் ரிசர்வ் வங்கி மேற்கூறியபடி வேறு நடவடிக்கைகளை எடுத்தது. அதாவது 'சிறப்பு டெப்பாசிட்டு முறை'யையும் (special deposit), 'படிவ வட்டிவீதத்தையும்' (slab rate lending) அமல் செய்தது. தேர்வுக் கட்டுப்பாட்டின் பலன்கள் குறைவாக இருந்தன, ஓரளவு கிடைத்த வெற்றி இதற்குத் துணையாக எடுத்த பொதுக் கட்டுப்பாடுகளால் விளைந்தது.[2]

எப்பொழுது இக்கட்டுப்பாடுகளுக்குத் தேவை இருந்ததோ அப்பொழுது இவை அமலாக்கப்படவில்லை. தேவை நீங்கியவுடன் கைவிடப்படவுமில்லை. இதுவே இதன் குறையாகக் காட்டப்பட்டிருக்கின்றது. மிகக் காலதாமதமாக அமல் செய்யப்பட்டது. அதே முறையில் கைவிடப்பட்டது. இக்கட்டுப்பாட்டின் தேவை நீங்கியபின் அமல் செய்யப்பட்டது, சில சமயங்களில் அதிக விரைவாக வாபஸ் வாங்கப்பட்டது. சில சமயங்களில் வங்கிக் கடன் பெருக்கம் நீண்ட நாட்களாக விலையுயர்வை விளைவித்த பிறகே இக்கட்டுப்பாடுகள் அமலான மாதிரி தோன்றியது. எதிர்கால ஆபத்துகளைத் தடைசெய்ய நடவடிக்கை எடுப்பதற்குப் பதிலாக ஆபத்துகள் நிகழ்ந்தபின்

[1] Shri H.V.R. Iyengar, (Governor of the Reserve Bank of India), at the Joint Informal Discussion on Current Problems of Credit and Fiscal Policy.

[2] **Dr. B. K. Madan, 'Role of Monetary Policy in a Developing Economy', Reserve Bank of India Bulletin, April 1961.**

ரிசர்வ் வங்கி செயல் புரிந்தது. 1956ஆம் ஆண்டு ஜூன் மாதத்திற்குள் கோதுமை மீது கொடுத்த கடன் முந்தைய ஆண்டைவிட 79% உயர்ந்துவிட்டது. மந்த காலத்தில் இக் கடன் முந்தைய ஆண்டு நிலையைவிட 45% உயர்வாக இருந் தது. ஆயினும் கோதுமையை இக்கட்டுப்பாட்டுக்குட்படுத்த 4 மாத காலம் ஆயிற்று. தேர்வுக் கட்டுப்பாடுகள் சரியான தருணத்தில் நடைபெறவில்லை என்பதை ரிசர்வ் வங்கியின் கவர்னரே ஒப்புக்கொண்டார்.

### செல்வாக்கைப் பயன்படுத்தல் (Moral Suasion)

பொதுத் தேர்வுக் கட்டுப்பாடுகளைத் தவிர ரிசர்வ் வங்கி தன் செல்வாக்கை 1956–லிருந்து பயன்படுத்தியது. அவ்வப்போது ஷெடியூல் வங்கிகளுக்குச் சுற்றறிக்கைகளை அனுப்பியது. என்றும் காணாத அளவு கடன் பெருகிவிட்டதென்பதையும் அதைக் கட்டுப்படுத்த தேவை இருக்கின்றதென்பதையும் சுற்றறிக்கைகளில் எடுத்துக்காட்டியது. ரிசர்வ் வங்கியின் ஆளுநர்கள் அவ்வப்போது வர்த்தக வங்கியரை அழைத்து மைய வங்கிக் கொள்கையின் தத்துவத்தை விளக்கி அவை களுடைய ஒத்துழைப்பைக் கோரினர். வங்கியர்களுடைய சங்கத் தில் அவர்கள் பேசினர்; கடன் நிலையை விளக்கினர், பிரச்சினை களைத் தெளிவுபடுத்தினர். தொழிலுக்கல்லாத, நிதித் தேவை களுக்கான உண்டியல்களை (clean hundies) மீள் தள்ளுபடி செய்வதை ஆளுநர்கள் கண்டித்தனர். ரிசர்வ் வங்கியின் அறிவுரைகள் பழப் பண்டங்கள் மீது கொடுக்கும் கடன்களை அமைக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டனர்.[1]

### கட்டுப்பாட்டுக் கருவிகளின் தொகுப்பில் வங்கி வீதம் இடம் பெறாமை

அண்மை ஆண்டுகளில் இங்கிலாந்தின் தலைமை வங்கியைப் போல் ரிசர்வ் வங்கி 'தொகுப்பு முறையைக்' (package deal) கையாண்டு வருகின்றது. ஆனால் இத்தொகுப்பில் வங்கி வீதத் திற்கு இடம் கொடுக்கவில்லை, இது இங்கிலாந்தின் வழக்கத் திற்கு மாறாக உள்ளது. வங்கி வீதம் இத்தொகுப்பில் ஒரு முக்கியமான கருவியாகும். இது தொகுப்பில் இல்லாததால் கட்டுப்பாடு முறை முழு வெற்றியளிக்கவில்லை. மேலை நாடுகளைப் போல வங்கி வீதம் இந்தியாவில் உள்நாட்டு, அயல் நாட்டு நிலைகளைப் பாதிக்காது. ஐந்தாண்டுத் திட்டங்களை நிறை

[1] Annual Report on Currency and Finance, Reserve Bank of India, 1959-60. p. 36.

வேற்றும் வகையில் பொதுச் செலவைப் பெருக்கினர். வட்டி வீதத்தை அடக்கச் செலவின் ஒரு கூறுகப் பாவிக்கப்படுவதை விடுத்துப் பொருளாதார வளர்ச்சியிலும், திட்டத்தைச் செயல் படுத்துவதிலும் கவனம் செலுத்தினர், இந்தியப் பொருளாதாரம் வளர்ச்சி யடைந்தால், பணப் பரிவர்த்தனைக்குட்படும் பகுதி விரிவடையும்; வங்கி வீதக் கருவியைக் கையாளுவதற்குகந்த சூழ்நிலை உருவாகும்.[1] 30 ஆண்டுகளுக்கு முன் உள்நாட்டு வர்த்தகத்தில் 90%க்குப் பண மார்க்கட்டின் அமைப்பற்ற பகுதி நிதியளித்தது. இன்று இப்பகுதி 50% என்று முன்னுள் ரிசர்வ் வங்கியின் ஆளுநர் திரு ஐயங்கார் அவர்கள் குறிப்பிட்டார். இந்த நிலையில் வங்கி வீதக் கொள்கை இந்தியாவுக்குப் பொருந் தாது என்று கூறுவது பொருத்தமற்றது. வங்கி வீத மாற்றம் ஒரு முக்கியமான குறியாகும். இது கட்டுப்பாட்டுத் தொகுப்பில் இடம் பெறுதல் மிக அவசியமாகும். வர்த்தக வங்கிகள் கொடுக்கும் வீதங்களையும், அவை கொடுக்கும் கடன்களுக்கு வசூல் செய்யும் வீதங்களையும் ரிசர்வ் வங்கி உயர்த்தியபோது கட்டுப்பாட்டுத் தொகுதியில் வங்கி வீதத்தின் முக்கியத்துவத்தை இறுதியில் உணர்ந்தது. இது வங்கி வீதக் கருவியைப் பின் புறத்தின் வழியாக அனுமதித்த செயலாகும். வங்கி வீதம் மற்ற வீதங்களுக்கு வழிகாட்டியாக இருப்பதற்குப் பதிலாக மற்றவை களைப் பின்பற்றும் துரதிர்ஷ்ட நிலைக்குத் தள்ளப்பட்டது.

இந்தியாவில் செலாவணி நிருவாகிகள் குறைந்த வட்டி வீதக் கொள்கையைப் பின்பற்ற விரும்பினர். புதிய 'படிவ வட்டி வீதம்' (slab rate system) வட்டியுயர்வை விளைவித்தபோது கூட இவ்வுயர்வும் 'கிராக்கிப் பணக் கொள்கையும்' (dearer money policy) தொழிலுற்பத்தியை மிகக் குறைவாகப் பாதிக்கும்; வாழ்க் கைச் செலவும் (cost of living) புறக்கணிக்கத்தக்க அளவு குறை வாகவே உயரும் என்று குறிப்பிட்டனர். வங்கி வீதத்தை உயர்த்துவதற்கு ரிசர்வ் வங்கி தயங்கியது. அவ்வாறு உயர்த்தி ஞலும் அதிர்ச்சியளிக்கக் கூடிய அளவு உயர்த்தவில்லை. இதற்குக் காரணம் இவ்வுயர்வு அரசு பத்திரங்களின் விலைகளை பாதிக்கும்; இதன் விளைவாகப் பொதுக்கடனின் அடக்கச் செலவைப் பாதிக்கும்.

வட்டிவீத உயர்வுக் கொள்கை பொதுக்கடனின் அடக்கச் செலவை உயர்த்தும் என்று அஞ்சுவதற்கு ஆதாரம் கிடையாது

[1] Speech of H.V.R. Iyengar, Governor of the Reserve Bank of India at the Indian Institute of Bankers, Reserve Bank of India Bulletin, August 1960, pp. 1104-5.

பொது மக்களிடம் இருந்த அரசு பத்திரங்கள் (வர்த்தக வங்கிகள், கூட்டுறவு வங்கிகள், மற்றவர்கள் கொண்டிருந்தவை) மொத்தத்தில் 50% ஆக இருந்தது. மீதியை ரிசர்வ் வங்கியும், மற்ற அரசு துறைகளும் கொண்டிருந்தன. எனவே கடனின் அடக்கச் செலவு உயர்ந்தபோது அது சாதாரணப் புத்தகக் கணக்காகவே (book debt) இருந்தது. இரண்டாவதாக நிலையான வட்டி வீதம் கொடுக்கும் அரசு பத்திரங்களை முதலீட்டு நிலையங்களான, வங்கிகள், இன்சூரன்ஸ் நிறுவனங்கள் முதலியவை பெருமளவில் கொண்டிருக்கின்றன. வங்கி வீத உயர்வு இவைகளைப் பாதிக்கும். ஆனால் இப்பத்திரங்களை முதிர்வு வரை வைத்திருப்பதால் இழப் பேதும் ஏற்படாது. மேலும் இச்சொத்துகளின் முதல் மதிப்புக்குக் (capital value) குறைந்தால் சாதாரணப் பங்குகளின் மதிப்புக் கூடுவதால் இவ்விழப்பு ஈடாகிவிடும்.

மூலதனப் பற்றுக்குறை இருக்கும் ஒரு நாட்டில் வட்டி வீதங்களைத் தாழ்ந்த நிலையில் வைத்துக் கொள்வதால் முதல் உருவாதலும் பொருளாதார வளர்ச்சியும் தடையாகும், ஊக்குவிக்கப்படாது. மூலதனத்தின் பற்றுக்குறைக்கும் வட்டி வீதத்திற்கும் பொருத்தமில்லாத நிலை உண்டாகிறது. வட்டி வீதங்கள் உயர்ந்திருந்தால் மூலதனப் பயன்பாட்டில் சிக்கனத்தை ஏற்படுத்தும்; உற்பத்திச் சாதனைப் பங்கீட்டில் விரும்பத்தக்க திருப்பம் ஏற்படும். வட்டி வீதம் உயர்வதால் இறுதிநிலையிலுள்ள, குறைவான லாபம் ஈட்டும் நிறுவனங்களில் முதலீடு நடைபெறுதல் தடைப்படும். செம்மையான திட்டங்களில் அதிக முதலீடு நடைபெறும். இந்த நிலையில் உழைப்புக்குப் (labour) பதிலாக முதலைப் பயன்படுத்த முனைவர். குறைவாக இருக்கும் முதல் சிக்கனமாகப் பயன்படாமல் விரையமாக இடம் ஏற்படும். சாதாரணப் பங்குகள் மூலம் நிதி திரட்டுவதற்குப் பதிலாக, இந்த நிலையில் கடன் நிதியை உற்பத்தியாளர்கள் நாடும் தீய பழக்கம் வளரும். இந்தியாவிலுள்ள செலாவணி நூலாசிரியர்கள் (monetary theorists), வட்டி வீதங்கள் உயர்வாக இருந்தால் பொருளாதார வளர்ச்சியும், மூலதனப் பெருக்கமும் தடைப்படும் என்று குறிப்பிட்டுள்ளனர். ஆனால் போர்ப் பிற்காலத்தில் ஜப்பான் உயர் வட்டி வீதங்களைக் கொண்டிருந்தது. பொருளாதார வளர்ச்சியும் மூலதனப் பெருக்கமும் விரைவில் நடைபெற்றன.[1] ஜப்பானிய எடுத்துக்காட்டு இந்தியாவுக்குப் பொருந்தாது என்று சிலர் கூறுகின்றனர். ஏனெனில் ஜப்பானில்

[1] H. T. Patrick 'Monetary Policy and Central Banking in Contemporary Japan, Ch. VII.

செலாவணிக்கொள்கையைக் கடன் நிருவாகக்கொள்கை பாதிக்க வில்லை.[1] இக்கருத்து தவறானது, ஏனெனில் மைய வங்கி பத்திரங்களை வெளியிடாமையாலும், பத்திர மார்க்கட்டு குறுகியிருப்பதாலும் அந்நாட்டில் வெளி மார்க்கட்டு நடவடிக்கைகள் நடைபெறா.[2] ஆனால் முன்னர் நாம் குறிப்பிட்டதைப் போல் இந்தியாவில் பொதுக் கடனின் பெரும் பகுதியை ரிசர்வ் வங்கியும் அரசு துறைகளும் கொண்டிருக்கின்றன. வட்டி வீதம் உயருவதால் பொதுக் கடனின் செலவு பெருகினால், கடன் நிருவாகச் செலவு கூடுவதற்கு வழியில்லை. உயர் வட்டி வீதம் சிறு தொழில்களுக்கு இடையூறாக இருக்கும் என்று குறிப்பிட்டுள்ளனர்.[3] ஆனால் இந்த வாதத்திற்கு வலிமை கிடையாது, ஏனெனில் சிறு தொழில்களுக்குச் சிறப்பான சலுகைகள் கொடுக்கலாம். இவைகளுக்கும், சமுதாயத்தில் விரும்பத்தக்க திட்டங்களுக்கும் வரிச் சலுகையும் மற்ற முறைகளில் ஊக்கமும் அளிக்கலாம்.

நம் நாட்டில் பொருளாதாரம் பணவீக்கத் தன்மை கொண்டிருக்கின்றது. இந்த நிலையில் வட்டி வீதம் குறைவாக இருந்தால் விலைக் குறியீட்டெண் (price index) உயர உயர அரசு பத்திரங்களின் மதிப்பு வீழ்ச்சியடையும். மக்கள் அரசு பத்திர முதலீட்டை நாடமாட்டார்கள். பணவீக்க விளைவுகளிலிருந்து சேமிப்பைக் காக்கும் நோக்கத்துடன் மக்கள் அரசு பத்திரங்களிலிருந்து சாதாரணப் பங்குகளில் தம் முதலீட்டைத் திருப்புவர். மாறுதல்களை நாடாத முதலீட்டு நிலையங்களான பல்கலைக் கழகங்கள் கூட, பணவீக்கத்திலிருந்து தப்பும் எண்ணத்துடன் அரசு பத்திரங்களை விடுத்துப் பங்குகளை வாங்குகின்றன. குறியீட்டெண்ணுடன் தொடர்புள்ள பத்திரங்களை அரசினர் வெளியிடாதவரை. பங்குகள், அசையாச் சொத்துகள், பொன், பண்டங்கள் முதலியவற்றில் மக்கள் முதலீடு செய்வதைத் தடுத்து அரசு பத்திரங்களைப் பிரபலமாக்குவதற்கு உயர்வட்டி வீதம் பணத்தை விரும்பத்தக்க வழிகளில் திரட்டுவதோடு மட்டுமல்லாமல் இடைநிலை நிதி நிலையங்களிலிருந்து நிதிகளைத் திட்டமிட்ட வழிகளுக்குத் திருப்பும்.

உயர் விலைகள் பொருளாதாரத்தைத் தாழ்ந்த நிலையிலிருந்து மீட்டு வளர்ச்சியை ஊக்குவிக்கும் என்பதை யாரும் மறுக்கவில்லை.

[1] D. R. Gadgil, 'Regulation of Credit by the Reserve Bank of India, Artha Vijnana, March 1963.

[2] Joachim Ahrensdroff, Japanese Bank Loans for Private Fixed Investment.' I.M.F. Staff Papers, March 1965.

[3] D. R. Gadgal, op cit.

ஆனால் பண வீக்கமும் விலையுயர்வும் மிகுதியடைவதால் வளர்ச்சியின் பாணி பாதிக்கப்படும்; வளர்ச்சி வீதம் குறையும். 1954 முதல் 1962 வரை விலையுயர்வு 6 சதவீதத்திற்குட்பட்டிருந்தது. பீதியடையக் காரணமில்லை. ஆனால் 1963 ஜூலை முதல் 1964 ஜூன் வரை விலையுயர்வு 9%ஆக உயர்ந்தது. முந்தைய ஆண்டை விட இது இரு மடங்கானது. கவலைக்கிடமாக இருந்தது.[1] நுகர்வோர் விலைக்குறியீட்டெண் அந்த ஆண்டில் 11.9% க்குக் கூடி விட்டது. அதற்கு முன் ஆண்டில் இவ்வுயர்வு 3.1% ஆகவே இருந்தது. 1966—67 விலைகள் 14.9% உயர்ந்தன. இவை எல்லாம் நிலைமை எவ்வளவு மோசமாக இருந்தது என்பதைப் புலப்படுத்துகின்றன.[2] தேவைப் பெருக்கம் தொடர்ந்தது; பண்டங்களின் தேவையும் உற்பத்திக் காரணிகளின் தேவையும் கடந்த 4 ஆண்டுகளாகப் பெருகின. இந்த நிலையில் ரிசர்வ் வங்கி ஓரிரண்டு தேர்வுக் கட்டுப்பாடுகளை மட்டும் அல்லது பொதுக் கருவிகளை மட்டும் கொண்டு பிரச்சினையைத் தீர்க்க முடியாது. திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சியைக் குலைக்கும் செலாவணி ஸ்திரமின்மையைத் தடை செய்ய எல்லாக் கட்டுப்பாட்டுக் கருவிகளையும் கையாள வேண்டும். வங்கி வீதம் உயர்ந்த நிலையில் இருக்க வேண்டும்; குறுகிய, நீண்ட, நடுத்தர வீதங்களும் உயர வேண்டும். இதுவே ரிசர்வ் வங்கியின் நடவடிக்கைகளில் முதன்மை இடம் பெற வேண்டும்.

இன்று உள்ள நாட்டுப் பொருளாதார நிலையில் உயர் வட்டி வீத அமைப்பு மிகவும் அவசியம் என்பதை இந்நூலின் ஆசிரியர், 1963ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் பொருளாதார மாநாட்டின் தலைமையுரை யாற்றும்பொழுது வலியுறுத்தினார். நீண்ட கால தாமதம் ஆன பிறகு இறுதியில் செப்டம்பர் 1964-ல் வங்கி வீதத்தை 4½%-லிருந்து 5% ஆக உயர்த்தினர் என்பதும் மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும். வங்கி வீத மாற்றத்தை ஒட்டி நிதியமைச்சரும், ரிசர்வ் வங்கியின் ஆளுநரும் விடுத்த அறிக்கை இரு விஷயங்களைத் தெளிவுபடுத்துகின்றது. செலாவணிப் பெருக்கத்திற்கும், உற்பத்திப் பெருக்கத்திற்கும் இடையே உள்ள வேறுபாடு விளைவிக்கும் பணவீக்கத்தைக் கட்டுப்படுத்த வேண்டும். இரண்டாவதாக டெப்பாசிட்டுத் தொகையை அதிக அளவில் திரட்டவேண்டும். அரைகுறையான, ஐயப்பாட்டுடன், குறைந்த அளவு வங்கி வீதத்தை உயர்த்தும் ரிசர்வ் வங்கியின் வழக்கம் எதிர்பார்த்த பலனைக் கொடுக்கத் தவறலாம்.

[1] Report of the Central Board of Directors, Reserve Bank of India, for the year ended June 30, 1964, p. 1.

[2] Annual Report on Currency and Finance, Reserve Bank of India, 1967-68, p. 8.

வங்கியின் கொள்கையில் ஒரு திருப்பத்தைக் காட்டியது; எதிர்காலத்தில் வரப்போகும் பெரிய வட்டியுயர்வுக்கு முன்னோடியாக இருக்கலாம். இப்போக்கை ஒட்டி 1965ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் வட்டி வீதத்தை 6% ஆக உயர்த்தினர். பொருளாதார மீட்சிக்கு உகந்த நிலையை உருவாக்குவதற்காகக் கடன் நிதியைத் தடையற்ற முறையில் அளிக்க ஏற்பாடு செய்ய வேண்டி செலாவணி நிருவாகிகள் வங்கி வீதத்தை 6% இலிருந்து 5% ஆக 1968, மார்ச்சு 2-ந் தேதி குறைத்தனர். 1973ஆம் ஆண்டு ஜனவரி 9ஆம் தேதி வங்கி வீதத்தை மீண்டும் 6%க்கு உயர்த்தினர். பண அளவின் பெருக்கத்தை அடுத்து இதைச் செய்தனர். 1973ஆம் ஆண்டு மே மாதம் இதை 7% ஆக உயர்த்தினர். வங்கி வீதத்தைக் குறைப்பது பழைய அனுபவத்தை ஒட்டி யிருந்தது. குறைவான வட்டி வீதமும் குறைவான வட்டிவீதம் தொடர்பு கொண்டிருந்தன என்பதைப் பழைய அனுபவம் காட்டியது. ஆனால் முன்னர் குறிப்பிட்டுள்ளபடி உயர் வட்டி வீதம் முதலின் கிடைப்பருமை மதிப்பைக் (scarcity value) காட்டுகின்றது. மூலதனத்தின் கிடைப்பருமைக் கேற்ப அதன் விலை இருக்கவேண்டும். அப்பொழுதுதான் உற்பத்திச் சாதனங்கள் மிகச் சிறந்த முறையில் பங்கீடாகும். பணவீக்கத்தைக் கட்டுப்படுத்தி, பொருளாதார ஸ்திரத் தன்மையை நிலைநாட்டினாலன்றி வட்டி வீதத்தைக் குறைக்கக் கூடாது. பொருளாதார ஸ்திரத்தன்மைக்கு. ரிசர்வ் வங்கியின் ஆளுநர் முன்னர் குறிப்பிட்டபடி, முன்னிலும் சமநிலையுள்ள வரவு செலவுத் திட்டமும், சாதகமான தட்ப வெப்ப நிலையும்; விரைவான தொழில், விவசாய முன்னேற்றமும் அவசியமாகும். கிராக்கிப் பணக்கொள்கையின் தத்துவம் முதலின் சுவாந்தாருக்கு அவர் கொண்டிருக்கும் முதலுக்குத் தக்க ஊதியம் கிடைக்கும்படி செய்வதாகும் என்பது ஆளுநரின் கருத்து. உயர் வட்டி வீதம் திட்டத்திற்கப்பாற்பட்ட, ஊகவாணிக முதலீட்டைத் தடை செய்யும். இவை பொருளாதார ஸ்திரத்தன்மையை பாதிக்கும், தவிரவும் இது சேமிப்பையும் பெருக்கும்.

ரிசர்வ் வங்கி பொருளாதார ஸ்திர நிலைக்கு ஏற்றவை எனக் கருதிய நிலை ஏற்படுவதற்கு முன்பே வட்டி வீதக் கொள்கையை மாற்றியது வியப்பாக இருக்கின்றது. 1967—68-ல் இந்திய அரசின் வரவு செலவில் இருந்த துண்டு (deposit) ரூ. 300 கோடி.[1] 1968—69-ல் மேலும் ரூ. 259.67 கோடி துண்டு விழ்ந்தது. இரு ஆண்டுகள் அறுவடை திருப்திகரமாக இல்லை. இந்த

[1] Economic Survey, 1968-69, Government of India, p. 15.

நிலையை ஓர் ஆண்டின் அறுவடையைக் கொண்டு சமாளிக்க முனைந்தனர். மேலும் தொழில் விவசாயத் துறைகளின் நிலை ஸ்திரத் தன்மையடையவில்லை. இந்த நிலையில் மலிவுப் பணக் கொள்கையைப் பின்பற்றுவதற்குத் தகுந்த சூழ்நிலை இல்லை.

1965-ல் வங்கி வீதத்தை 5%-லிருந்து 6%-க்கு உயர்த்திய போது விலையுயர்வு ரிசர்வ் வங்கிக்குக் கவலையளித்தது என்பது தெளிவாயிற்று. விவசாய உற்பத்தி கணிசமாக உயரும் என்று எதிர்பார்த்தபோதிலும்கூட மொத்த விலைகள் முந்தைய ஆண்டை விட 16% கூடின. விவசாய உற்பத்தி பெருமளவு பெருகிய போதிலும், 1967ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் முடிவடைந்த நான்காண்டு காலத்தில் விலைகள் 60% உயர்ந்தன. 1966, 1967ஆம் ஆண்டுகளில் அவை 13.8%; 15.4% உயர்ந்தன. 1967ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்திலிருந்து விலைகள் குறைந்தன. ஆனால் 1968ஆம் ஆண்டின் பொருளாதாரக் கணக்கெடுப்புப்படி (Economic Survey) ஆண்டின் சராசரி விலைக் குறியீட்டெண் 209.5 ஆக இருந்தது. முந்தைய ஆண்டை விட இது ஒரு சதவீதம் குறைந்தது.[1] விலைகள் மீண்டும் உயர்ந்துகொண்டிருக்கின்றன.

மூலதன மார்க்கட்டில் உள்ள மந்த நிலைக்கு உயர் வட்டி வீதம் காரணம் என்று கூற முடியாது. இதற்கு வேறு காரணங்கள் உள. இறக்குமதியாகும் கச்சாப் பண்டங்களின் பற்றுக்குறை, முதலீட்டுப் பாணியைக் கெடுக்கும் பணவீக்கம், இந்திய அரசின் யோசனையற்ற நிதிக்கொள்கை முதலியவை மூலதன மார்க்கட்டின் குறைகளுக்குக் காரணமாகும். பணவீக்கத்தைத் தடை செய்ய இரு முனைகளில் நடவடிக்கைகள் எடுக்க வேண்டிய நேரத்தில் வட்டி வீதத்தைத் தாழ்த்துவது சரியானதன்று; அதற்குகந்த நேரம் வருவதற்கு முன் எடுத்த நடவடிக்கையாகும்.

ஆனால் ரிசர்வ் வங்கி இது பற்றிய மறு ஆய்வு நடத்தியது. வேறு கருத்தைக் கொண்டிருக்கின்றது என்று நம்ப இடம் இருக்கின்றது. நிதியமைச்சரின் அறிக்கையை இங்குக் குறிப்பிடலாம். 'இந்தியா போன்ற நாட்டில் மூலதனப் பற்றுக்குறை இருக்கின்றது. இதை வெளிப்படுத்தும் இயல்பான வட்டி வீதத்தை நிலை நாட்டும் செலாவணிக் கொள்கையைப் பின்பற்ற வேண்டும்.' இவ்வறிக்கை செலாவணிக் கொள்கையின் திருப்பத்தைக் காட்டுகின்றது என்று கூறலாம்.

ரிசர்வ் வங்கியும் வங்கியல்லாத இடைநிலை நிதிநிலையங்களும் (வ. இ. நி. நி.)

நிதிக் கொள்கையில் புதிய சிக்கலைப் புகுத்தும் ஒரு பிரச்சினையை முன்னர்க் குறிப்பிட்டோம். பெரிய வர்த்தக, தொழில் நிலையங்களும், இடைநிலை நிதி நிலையங்களும் வங்கிகள் பெறும் டெப்பாசிட்டுகளை ஈர்க்கின்றன. தவணைக் கடன் நிலையங்களும் இதைச் செய்கின்றன. இதற்கு வட்டி வீத வேறு பாடுகள் காரணமாகும். இந்த நிலையங்கள் வரவர அதிக அளவில் பொது மக்களின் டெப்பாசிட்டுகளைப் பெரிய சிறிய அளவுகளில் பெறுகின்றன. குறுகியகால, இடைக்கால, நீண்ட காலத் தவணை டெப்பாசிட்டுகளைக் கவர்ச்சிகரமான வட்டிகள் மூலம் ஈர்க்கின்றன. இவை கொடுக்கும் வட்டி வீதங்கள் 6% இலிருந்து 12% வரை இருக்கின்றன. ரிசர்வ் வங்கியின் கணக்குப்படி நிதி நிலையங்களும், மற்றவையும் 1962–ல் கொண்டிருந்த டெப்பாசிட்டுத் தொகை ரூ. 135.5 கோடியாக இருந்தது. பின்னர் இத்தொகையுடன் ரூ. 65.71கோடி கூடிய தால் 1966ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் மொத்தம் ரூ. 283.4 கோடியாயிற்று; மார்ச்சு 1969–ல் இது ரூ.598 கோடியாயிற்று.[1] அண்மையில் கடன் கட்டுப்பாடுகள் நிறைவேற்றப்பட்டதால், வர்த்தக நிலையங்கள் தமக்கு வேண்டிய நிதியை வேறு வழிகளில் திரட்ட முனைந்தன. வங்கிகள் கடனுதவி நல்கவில்லை. பொது மக்களுக்கு உயர் வட்டி கொடுத்து டெப்பாசிட்டுகளைத் திரட்டின.

அமெரிக்கா, இங்கிலாந்து, தென் ஆப்பிரிக்கா போன்ற, நாடுகளில் இடைநிலை நிதிநிலையங்கள் டெப்பாசிட்டுகளைத் திரட்டுவதால் எழுந்த பிரச்சினைகளைப் போன்றவை இந்தியா விலும் எழுந்தன. வங்கிமுறை கட்டுப்பாட்டுக் கொள்கைக்குட் படும்போது, வங்கிகளிடமிருந்து ஏராளமான தொகைகளை அவைகளுக்கு அப்பாலுள்ள நிலையங்கள் திரட்டும். இவை மைய வங்கியின் கண்காணிப்புக்குட்படாத இந்த நிலையில் செலாவணி நிருவாகிகள் விரும்பாத வழிகளில் பணம் முதலீடு செய்வதைத் தடை செய்யமுடியாது. வங்கித்துறையில் மட்டும் அமலாகும் கடன் கட்டுப்பாட்டுக் கொள்கைகள் செலாவணியின் ஸ்திரத் தன்மையை நிலைநாட்டுவதில் வெற்றி காணத் தவறலாம். அண் மையில் மொத்த விலைக் குறியீட்டெண் உயர்ந்தது. கிடைப் பருமை (scarcity) மட்டும் இதற்குக் காரணமல்ல. வங்கிகளுக் கப்பாற்பட்ட இடங்களிலிருந்து கடனுதவி கிடைத்ததும், இவ் வுதவி நல்கியவை மீது செலாவணிக் கட்டுப்பாடு அமலாகாததும் இதற்குக் காரணங்கள்.

வங்கி முறையிலிருந்து பணம் இதர வழிகளுக்குத் திரும்பு வதை எவ்வாறு தடை செய்யலாம் என்பதை கவனிக்கும்போது நாம் குர்லே ஷா (Gurley-Shaw) ஆய்வையும், இங்கிலாந்தில் அண்மையில் விலை, வருமானக் குழு (Prices and Incomes Board) சிபாரிசு செய்தவைகளை நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும். அதாவது மற்ற நிலையங்களைப் போலவே வங்கிகளும் வட்டி வீதங்கள் உயர்த்தி அவைகளுடன் போட்டியிட அனுமதி பெற வேண்டும். வங்கிகள் உயர் வட்டி வீதம் அளிப்பதால் அரசு பத்திர விற்பனை பாதிக்கப்படாது, ஏனெனில் இப்பத்திரங்களைப் பெரும்பாலும் நிதிநிலையங்களே கொண்டிருக்கின்றன. கடன் வாங்கலின் அடக்கச் செலவு உயர்வதால் வங்கிகள் பெறும் கடனுதவி குறையும். ஆனால் மற்ற வட்டிகளின் அமைப்பை மாற்றினால் அதாவது ஓராண்டு, அதற்கும் உயர்ந்த தவணை டெப்பாசிட்டு வீதங்களை உயர்த்த வேண்டும். மிகக் குறுகிய கால டெப்பாசிட்டுகளைக் குறைக்க வேண்டும் அல்லது நீக்க வேண்டும் —இவ்வாறு செய்தால் மற்ற நிலையங்களின் போட்டி ஓரளவு குறையும். இந்த நிலையங்கள் ஏற்கும் டெப்பாசிட்டுகளுக்கு ஓர் உச்ச வரம்பு கட்ட வேண்டும்; குறுகிய கால டெப்பாசிட்டுகளை இவை ஏற்கக்கூடாது என்று கட்டளையிட வேண்டும். வர்த்தக நிலையங்கள், தவணைக் கடன் நிலையங்கள், இடைநிலை நிதி நிலையங்கள் முதலியவை பெறும் டெப்பாசிட்டுகளைக் கட்டுப்படுத்து வதைப்பற்றி ரிசர்வ் வங்கியும் அரசும் யோசனை செய்கின்றன. வங்கிச் சட்டங்களின் சில அம்சங்கள், (பலதரப்பட்டவை) 1963-ல் டிசம்பர் மாதம் பாராளுமன்றம் இயற்றியவை. இவை இதர நிலையங்களின் செயல்களுக்காக அமைந்துள்ளன. இச் சட்டப்படி ரிசர்வ் வங்கி வங்கிகளல்லாத நிலையங்களுக்குக் கட்டளைகள் இடலாம். டெப்பாசிட்டுகள் பெறுவது பற்றியும், இவை எவ்வளவு தவணை கொண்டிருக்கலாம் என்பது பற்றியும், கொடுக்க வேண்டிய வட்டி வீதம் பற்றியும் கட்டளை இடலாம். இவைகளுக்குட்படாவிடில் டெப்பாசிட்டுகளை ஏற்கக்கூடாது என்று உத்தரவு இடலாம். 1966-ல் ரிசர்வ் வங்கி இரு ஆணை கள் பிறப்பித்தது. இவை வங்கிகளுக்கு மட்டுமல்லாமல் டெப்பா சிட்டுகளைப் பெறும் இதர நிதிநிலையங்களுக்கும் பொருந்தும். இவை செலுத்திய மூலதனம், காப்பு நிதியில் 25%-க்கு உயர்வான தொகையை டெப்பாசிட்டாக ஏற்கலாகாது. முதிர்வுக்கு முன் திரும்பப்பெறும் தொகைகளுக்கு இவை வட்டி கொடுக்கக்கூடாது. இதை 1967-ல் திருத்தினர். முதிர்வுக்கு முன் திரும்பப்பெறும் தொகைகளுக்கு ஓரளவு வட்டி கொடுக்கலாம்.[1] 1967 ஜனவரி

[1] Annual Report on Currency and Finance, Reserve Bank of India, 1967-68, p. 82.

முதல் தேதியிலிருந்து இவை ஏற்கும் டெப்பாசிட்டுகளுக்கு உச்ச வரம்பு கட்டினர். டெப்பாசிட்டுகளை வேண்டி விளம்பரம் செய்யும் செயலுக்கும் கட்டுப்பாடுகளைக் கொணர்ந்தனர். இக் கட்டுப்பாடுகள் எவ்வளவு தூரம் பலனளிக்கும் என்பதைப்பற்றிக் கூற மேலும் காலம் செல்லவேண்டும். வங்கிகள் அல்லாத இடைநிலை நிதிநிலையங்களுடைய டெப்பாசிட்டுகளின் பெருக்கு வீதம் குறையும் என்ற ரிசர்வ் வங்கியின் நம்பிக்கை கைகூடவில்லை. இப்பெருக்குவீதம் 1967ஆம் ஆண்டு மார்ச்சு 31-ந்தேதி முடியும் காலம் வரை தொடர்ந்தது என்பதை ரிசர்வ் வங்கியின் கணக்கு காட்டுகிறது.[1] தீவிரக் கட்டுப்பாடுகள் புதிய நிதி முறைகளைக் கண்டுபிடிப்பதன் மூலம் ஏய்ப்புகளை ஊக்குவிக்கும் என்பதை இங்குக் குறிப்பிட வேண்டும். இம்முயற்சி 'காற்றின் மீது எச்சில் துப்புவதை ஒத்திருக்கும்' என்று பேராசிரியர் சேயர்ஸ் குறிப்பிடுகின்றார்.

வங்கிகளல்லாத இடைநிலை நிதிநிலையங்களுடைய பிரச்சினையும் அவை செலாவணிக் கொள்கைக்கு விளைவிக்கும் இடையூறுகளையும் இந்நூலாசிரியர் திட்டக்குழுவின் பொருளியலார் அவை முன் விளக்கினர். ஆனால் ரிசர்வ் வங்கியின் உறுப்பினர் செலாவணிக் கொள்கைக்கு இவை எவ்வித இடையூறும் ஏற்படுத்தாதென்று உறுதியாகக் கூறினர். ரிசர்வ் வங்கி இதைக் கட்டுப்படுத்த ஏராளமான அதிகாரத்தைக் கொண்டிருந்தது என்று அவர் குறிப்பிட்டார். ஆனால் ரிசர்வ் வங்கியே பின்னர் இடைநிலை நிதிநிலையங்களைக் கட்டுப்படுத்த அதிகாரம் வேண்டுமென அரசினரைக் கேட்டுக்கொண்டது. செலாவணிக் கொள்கை வெற்றி பெற இது அவசியமென்றது.

தேர்வுக் கட்டுப்பாடுகளை ஆதரித்துப் பேசும்போது லத்தீன் அமெரிக்க நாடுகளிலும் பல ஆசிய நாடுகளிலும் இவைகளைப் பரவலாகப் பயன்படுத்துவதற்கென அமைத்திருக்கின்றனர். இவைகளைப் பல வழிகளில் பயன்படுத்துகின்றனர். சில வகைக் கடன்கள் கொடுப்பதைக் கண்டிப்பதோடு மட்டுமல்லாமல் வேறு சில கடன்கள் கொடுப்பதை ஆதரிக்கின்றனர். பொதுக் கட்டுப்பாட்டுக் கருவியாகிய வங்கி வீதத்தைக் கையாளவேண்டுமென்று நாம் பரிந்துரைக்கின்றோம். இத்துடன் தள்ளுபடி வீதத்தைத் தேர்வு முறையில் கையாளலாம். இதைச் செலாவணி நிருவாகிகள் சோதனை செய்து பார்க்கவேண்டும். ஏற்றுமதி உண்டியல்கள், தொழில் கடன் பத்திரங்கள் முதலியவைகளைத் தள்ளுபடி செய்யும்போது சலுகை முறையில் தள்ளுபடி செய்ய

[1] Reserve Bank of India Bulletin, June 1967.

லாம். இவ்வாறு செய்வதால் விரும்பத்தக்க வழிகளில் நிதி செலவு செய்யப்படும். பல ஐரோப்பிய நாடுகளில் வேறுப்பட்ட வட்டி வீத முறையைக் (differential interest rates) கையாளுகின்றனர். இதன் மூலம் குறிப்பிட்ட கடன்களைக் குறைக்கின்றனர்; அல்லது ஊக்குவிக்கின்றனர். இந்தியாவில் படிவப் பங்கீட்டு முறையையும் (tier system of quotas) காப்புத் தொகையில் ஒரு பகுதிக்கு மேற்பட்ட கடனுக்கு உயர் வட்டி வாங்கும் பழக்கமும் ஒரு விதத்தில் சலுகை முறைத் தள்ளுபடிக் கொள்கையாகும்.[1] 1964ஆம் ஆண்டு செப்டம்பர் முதல் பங்கீட்டு முறையை விடுத்தனர். வங்கிகள் வாங்கும் கடனின் அடக்கச் செலவை (வட்டியை) அவை கொண்டிருக்கும் சொத்தினங்களின் அளவுக் கேற்ப நிர்ணயம் செய்தனர். ஆனால், அபராத வட்டியை அவை கொண்டிருக்கும் சொத்தினங்களின் அளவைவிட அவை கொடுக்கும் துணைகளைக் கொண்டு நிர்ணயம் செய்வது நல்லது. இறக்குமதி முன்பணக் கருவி (import predeposit) முறையை மற்ற நாடுகள் பின்பற்றுகின்றன. இதை நம் நாட்டில் அமல் செய்வதைப் பற்றி சிந்திக்கலாம். இதை 1965 ரிசர்வ் வங்கி அமல் செய்யும் நோக்கத்துடன் ஓர் அறிக்கை விடுத்தது. இதன்படி இறக்குமதியாளர்கள் முன் பணம் செலுத்தவேண்டும். ஆனால், பின்னர் இவ் வறிக்கையைக் கைவிட்டனர்; வாபஸ் செய்தனர். இக்கட்டுப்பாடு தேர்வு முறை விளைவுகளை மட்டுமல்லாமல் அளவு முறை விளைவுகளையும் ஏற்படுத்தும்.

### வளர்ச்சியூட்டும் பணிகள்

மற்ற நாடுகளிலுள்ள மைய வங்கிகளைப் போலவே ரிசர்வ் வங்கியும் வளர்ச்சியைத் தொடங்கும் பணியை மேற்கொண்டுள்ளது. அரசுடன் சேர்ந்து அது பல சிறப்பான நிதி நிலையங்களை — இந்தியாவின் தொழில் நிதிக் கார்ப்பரேஷன், மாநில

[1] ரிசர்வ் வங்கி ஏற்றுமதி உண்டியல் முறையை 1963, மார்ச்சில் அமல் செய்தது. இதன்படி வங்கிகள் அயல் நாட்டுக் கடன பத்திரங்கள் மீது ஸ்டாம்ப் வரி 0.27 இல்லாமல் வங்கிகள் கடன் வாங்கலாம். ரூபாய் ஏற்றுமதி உண்டியல் மீது வங்கிகளுக்கு ஒதுக்கப்பட்டிருக்கும் தொகையைவிட அதிகத் தொகையை வாங்குதல் சாத்தியமாகும். இம்முறைப்படி ஏற்றுமதி உண்டியல் கடனின் வட்டி குறைந்தது. ஆயினும் இந் நிலையிலும் அது உயர்வாகவே இருந்தது. சிறிய, இடைநிலை நிறுவனங்கள் இச் சலுகையைப் பெற இயலவில்லை. வெளி நாடுகளிலிருந்து பண்டங்கள் வாங்குவோர் 6 மாதத்திற்கும் மேற்பட்ட கடனை வேண்டினர். ஆனால் இம்முறைப்படி இடைக்காலக் கடன்களை வாங்க இயலாது. ஏற்றுமதி உண்டியல்களைத் தேர்வு முறையில் மீள் தள்ளுபடி செய்ய வேண்டும் என்று நாம் கூறுகின்றோம். வெவ்வேறு ஏற்றுமதி, ஏற்றுமதி நிதிக்கேற்பக் கடனுதவியை வங்கி வீதத்திற்கும் குறைவாக் கூட வட்டி வீதங்களில் கொடுக்கலாம். இவ்வாறு செய்வதால் கடனின அடக்கச் செலவு குறையும், நம் நாட்டு ஏற்றுமதியாளர்கள் அயல் நாட்டவர்களுடன் ஒப்பிடுகையில் பாதக நிலையில் இருக்கமாட்டார். 1967-ல் வங்கி அமல் செய்த மாறுதல்களின் விளைவாக ஏற்றுமதி கடன் வீதங்கள் கணிசமாகக் குறைந்தன.

நிதிக் கார்ப்பரேஷன் போன்றவைகளை அது துவக்கியுள்ளது. பின்னர் இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கியை அது நிறுவியது; அதன் தொழிற் கடனைப் பொது நிருவாகக் குழுமூலம் அது நிருவகித்து வருகின்றது. கூட்டுறவுக் கடன் நிலையங்களை அது புதிய முறையில் சீரமைத்தது. ரிசர்வ் வங்கி, தொழில் நிதித் துறையையும், விவசாயக் கடன் துறையையும் கொண்டிருக் கின்றது. இவை மாநில நிதிக் கார்ப்பரேஷன்களுக்கும், கூட்டுறவு வங்கிகளுக்கும், பத்திர வெளியீடு பற்றிய அறிவுரை வழங்குகின்றன. 1949ஆம் ஆண்டு நிறைவேறிய வங்கிக் கம் பெனிச் சட்டமும் பின்னர் நிறைவேறிய திருத்தங்களும் ரிசர்வ் வங்கிக்கு ஏராளமான அதிகாரம் அளித்தன. இதைப் பயன்படுத்தி அது வங்கிகளின் சம வளர்ச்சியைத் தூண்டியது. இந்த நிதி நிலையங்கள் வளர்ச்சி யடைந்ததால், அமைப்புள்ள மூலதன மார்க்கட்டின் பெரும் பகுதி ரிசர்வ் வங்கியின் கண்காணிப்புக்குட் பட்டது. இதனால் அதன் கட்டுப்பாட்டுப் பணி முன்னிலும் செம்மையாக நடைபெறுகின்றது. கடனளிப்பில் இருக்கும் குறைகளை நீக்க முனைந்துள்ளது. அரசு துறையில் வர்த்தக வங்கித் தொழிலை நிறுவியது. இவையும் அதன் வளர்ச்சித் தொடக்கப் பணியாகும். பொதுத் துறையில் வங்கித் தொழிலை ஏற்படுத்துவதை இம்பீரியல் வங்கியைத் தேசீயமயமாக்கிய போது 1955-ல் செய்தனர். இம்முயற்சி 1969-ல் உச்ச நிலையை அடைந்தது, 14 பெரிய வங்கிகளை நாட்டுடைமை செய்தனர். இது வங்கித் தொழிலமைப்பில் ஒரு பெரிய மாறுதலைப் புகுத்தியது. இதனால் வங்கித் தொழிலைப் பிராந்திய முறையில் விஸ்தரிக்கவும், அதன் தொழிலைப் பெருக்கவும் எளிதில் முடியும். வளர்ச்சி குன்றிய நாடுகளில் மைய வங்கி செய்யவேண்டிய பணிகளின் அளவும் தன்மையும் வளர்ச்சி நிறைந்த நாடுகளி லிருந்து வேறுபட்டிருக்கின்றன என்று நாம் நம்புகிறோம். ஆனால், ரிசர்வ் வங்கியின் பல்வேறு துறைப் பணிகள் அதன் மைய வங்கிப் பொறுப்பைத் தளர்த்திவிடக் கூடும் என்றும் நாம் அஞ்சுகிறோம்.

# 13. மைய வங்கி முறையின் நோக்கங்கள்

## பழைய நோக்கங்கள்

மந்தத்திற்குப் பின் நடைபெற்ற மைய வங்கி முறையின் வளர்ச்சி பழைய முறையிலிருந்து வேறுபட்டிருக்கின்றது. புதிய சட்டங்கள் வகுத்துள்ள நோக்கங்கள் பழைய நோக்கங்களிலிருந்து மாறுபட்டிருக்கின்றன. முதல் உலகப் போருக்கு முன் மைய வங்கிச் சட்டங்கள் நோக்கங்களை விளக்கவில்லை; மைய வங்கியின் முதன்மையான பணிகளை விளக்கவில்லை. வங்கி செய்யக்கூடிய அல்லது செய்ய முடியாத பணிகளைப் பட்டியலில் குறிப்பிட்டனர். முதல் உலகப் போருக்குப்பின் தோன்றிய மைய வங்கிச் சட்டங்களில் நோக்கங்களின் விளக்கங்களைக் காணலாம். ஆனால். இவை குறுகியவையாக இருந்தன. செலாவணி–பொன்னின் வீத மதிப்பை ஸ்திர நிலையில் வைப்பதற்காகச் செலாவணியின் அளவைக் கண்காணிப்பது மட்டும் நோக்கமாக இருந்தது. பல்கேரியா, கிரீஸ் நாடுகளின் சட்டங்களை எடுத்துக் காட்டாகக் கூறலாம். இந்நாடுகளில் செலாவணி–பொன் மதிப்பை நிலைநாட்டுவதே முதன்மையான கடமை என்று சட்டத்தின் முதல் வரியே குறிப்பிடுகின்றது. இதற்காக அது செலாவணிக் கடன் அளவைக் கட்டுப்படுத்த வேண்டுமென்றும் குறிப்பிடுகின்றது. முதல் உலகப்போர், போர் பிற்கால வங்கிச் சட்டங்கள் இதுபோன்று அமைந்துள்ளன. ருமேனிய நாட்டு வங்கியும். போலந்து நாட்டு வங்கியும் சுவையான எடுத்துக் காட்டுகள்.[1]

## மைய வங்கியின் நோக்கங்களைப் பரவலாக்குதல்

உலகப் பெரும் மந்தத்திற்குப் பின் மைய வங்கிகளின் நோக்கங்களைப் பரவலாக்கி அமைத்துள்ளனர். நோக்கங்களை விரிவுபடுத்துவதற்கு மந்தத்தின் விளைவுகள் காரணமாக இருந்தன. பண மார்க்கட்டைக் கண்காணித்தல், நாட்டின் பொருளாதார வாழ்வைச் சீரமைப்பது, செலாவணிக் கொள்கை

[1] Money and Banking (League of Nations), 1937-8, vol. I, note, p. 79.

முழு வேலைவாய்ப்பை (full employment) நிறுவுவது, பொருளாதார ஸ்திரத்தன்மையைப் பேணுதல் முதலியவை நோக்கங்களுள் இடம் பெறுகின்றன. கனடிய வங்கிச் (Bank of Canada) சட்டத்தின் முன்னோடிப் பகுதியில் (1934) தன் நோக்கங்களை விளக்கியது. 'நாட்டுப் பொருளாதார வாழ்வின் நன்மையை மனத்தில் கொண்டு, செலாவணியையும், கடனையும் கண்காணித்தல், செலாவணியின் புறமதிப்பைக் கண்காணித்துப் பாதுகாத்தல், உற்பத்தி வர்த்தகம், விலைகள், வேலை முதலியவைகளில் ஏற்படும் ஏற்றத் தாழ்வுகளைத் தன் செல்வாக்கின் மூலம் குறைத்தல், பொதுவாகக் குடியரசின் (dominion) பொருளாதார நிதி நன்மைகளைப் பேணுதல்' முதலியவை சட்டத்தில் இடம் பெற்றன.[1]

பொருளாதார நிலையில் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகளைக் குறைப்பது காமன்வெல்த் வங்கியின் முக்கியமான நோக்கமாக இருக்க வேண்டும் என்று ஆஸ்திரேலியச் செலாவணி முறை, வங்கி முறை பற்றிய ராயல் குழுவினர் (Royal Commission on Australian Monetary and Banking System) பரிந்துரைத்தனர். செலாவணியின் மாற்று வீதத்தை (exchange rate) நிறுவி, பொருளாதாரத்தைச் சாதாரண காலத்தில் அதற்கேற்ற முறையில் அமைப்பதைவிடப் பொருளாதாரத்தை ஸ்திர நிலையில் வைத்து அது செலாவணியின் மாற்று வீதத்திற்கேற்றவாறு அமையுமாறு ஏற்படுத்த வேண்டும்.[2] 1945—53 ஆண்டுகளின் காமன்வெல்த் வங்கிச் சட்டப்படி காமன்வெல்த் வங்கி கீழ்க் கண்ட நோக்கங்களுடன் இயங்க வேண்டும். (a) ஆஸ்திரேலிய நாட்டுச் செலாவணியின் ஸ்திரத் தன்மையைப் பேணுதல். (b) நாட்டில் முழு வேலைவாய்ப்பை நிறுவுதல். (c) மக்களுடைய பொருளாதார வளத்தையும், நன்மைகளையும் பேணுதல். 1959-ல் காமன்வெல்த் வங்கியை ரிசர்வ் வங்கியாக மாற்றியமைத்தபோது இதே நோக்கங்களை மீண்டும் வலியுறுத்தினர்.[3] 1936ஆம் ஆண்டின் திருத்தம் நியூஜிலாந்து நாட்டு ரிசர்வ் வங்கியின் நோக்கத்தைக் கீழ்க் காணும் முறையில் விளக்கியது. 'நிதியமைச்சர் அவ்வப்போது வெளிப்படுத்தும் அரசின் செலாவணிக் கொள்கையைத் தன் அதிகாரத்திற்குட்படும் முறையில் செயல்படுத்துவது அதன் கடமையாகும். இதைச் செய்வதற்

[1] The Bank of Canada Act, 1934 as amended in 1936, 38 through 1953-54.

[2] Report of the Commission, Australian Monetary and Banking Systems, August 1937, p. 234.

[3] Commonwealth Bank Act, 1945-53, Ars. 8, Also the Reserve Bank Act, 1959, Art. 10.

காகவும், நியூஜிலாந்தின் நன்மையைப் பேணும் முறையிலும் அதன் மைய வங்கி நாட்டின் கடனையும், செலாவணியையும் கட்டுப்படுத்தும். நாட்டிலிருந்து வெளி நாடுகளுக்குச் செலுத்தப் படும் தொகைகளையும், வெளி நாடுகள் செலுத்துவதையும், அதன் வசம் வரும் அன்னியச் செலாவணியைப் பயன்படுத்துவதையும் மைய வங்கி கண்காணிக்கும்'.[1] 1934ஆம் ஆண்டு நிறைவேறிய ரிசர்வ் வங்கிச் சட்டம் மற்ற நாடுகளில் நடைபெற்ற நிகழ்ச்சி களையும், கருத்துகளையும் கவனிக்காமல், செலாவணியின் ஸ்திரத் தன்மையை மட்டும் நோக்கமாகக் குறிப்பிட்டுள்ளது. பொருளா தார வீக்கங்களையும், மந்தங்களையும் தணிப்பதோ அல்லது முழு வேலை நிலையை ஏற்படுத்துவதோ, மந்தத்திற்குப்பின் நிறை வேறிய மைய வங்கிச் சட்டங்கள் அமைந்திருப்பது போல் முக்கிய நோக்கங்களாகக் குறிப்பிடப்படவில்லை.

நன்கமைந்த பழைய மைய வங்கிகள்கூட வளர்ச்சி நிறைந்த நாடுகளில், விலைவாசி, நாணய மாற்று வீத ஸ்திர நிலையை மட்டும் நிலைநாட்டுவது போதாது என்று கருதுகின்றன. விலை, மாற்றுவீத ஸ்திர நிலை குறுகிய நோக்கமாகும். இதைவிட நாட்டின் சாதனங்களை முழுமையாகப் பயன்படுத்திப் பொருளாதார ஸ்திர நிலையை ஏற்படுத்தும் பரந்த நோக்கம் அரசின் கொள்கையாகி விட்டது. பெடரல் ரிசர்வ் வங்கியின் இயக்குநர் குழுவினர் 1937, ஆகஸ்ட் மாதம் விடுத்த அறிக்கையை விட இதைத் தெளிவு படுத்த வேறு சான்று வேண்டாம்.[2] அண்மையில் விடுதலை பெற்ற வளர்ச்சியடையும் நாடுகள் நிறைவேற்றியுள்ள மைய வங்கிச் சட்டங்கள் எவ்வளவு தூரம் மைய வங்கிகளின் நோக்கங் கள் விரிவடைந்துள்ளன என்பதைப் புலப்படுத்துகின்றன. மைய வங்கிக் கருத்தில் நிகழும் மாறுதலை ஒட்டித் தொன்மையான நோக்கங்களுடன் புதியவைகளையும் சேர்த்துள்ளனர்.

செலாவணித் தாள் வெளியீட்டைக் கட்டுப்படுத்துவது, செம்மையான செலாவணிக் கொள்கையைப் பின்பற்றுவது, அரசுக்கு நிதிமுறை பற்றிய அறிவுரை வழங்குவது முதலிய பழைய பணிகள் சட்டங்களில் இடம் பெறுகின்றன. இவைக ளுடன் ஒழுங்கான சமநிலையுள்ள பொருளாதார வளர்ச்சியை ஏற்படுத்துவது, முழு வேலை வாய்ப்பை ஏற்படுத்துவது, நாட்டு வருமானத்தைப் பெருக்குவது முதலிய புதிய பணிகளும் சட்டத்தில் இடம் பெறுகின்றன. சூடான், மொராக்கோ. ட்யூனிசியா, கானு, நைஜீரியா முதலிய நாடுகளின் சாசனங்களை

[1] Federal Reserve Bulletin, June 1936, p. 413.
[2] Federal Reserve Bulletin, September 1937, p. 828.

உதாரணமாகக் காட்டலாம்.[1] லிபியாவில் முதலில் இயற்றிய 1955ஆம் ஆண்டின் சட்டம் தற்காலத்திய நோக்கங்களான தேசீயப் பொருளாதாரத்தைப் பேணுதல், பொருளாதார, நிதிக் கோளாறுகளை நீக்குதல் முதலியவை பற்றி எதையுமே கூறாதது விந்தையாக இருக்கின்றது. பழைய முறையில் நோக்கங்களை வெளிப்படுத்தியுள்ளனர். 1963ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 5ஆம் நாள் ஒரு புதிய மைய வங்கிச் சட்டத்தை இயற்றினர். இதன்படி பழைய நோக்கங்களைமட்டும் வங்கி கொண்டிருக்க வில்லை. செலாவணியை வெளியிடுவது, கண்காணிப்பது, நாட்டின் பொன், அன்னியச் செலாவணியை நிருவகிப்பது, செலாவணியின் புற, அக மதிப்புகளை நிலைநாட்டுவது முதலியவை பழைய நோக்கங்கள். இதை விரிவுபடுத்தித் தேசியப் பொருளாதாரத்தைப் பேணும் பணியைச் சேர்த்தனர்.[2] அண்மையில் விடுதலை பெற்ற ஆப்பிரிக்க நாடுகள் மட்டுமல்லாமல் ஆசிய நாடுகளிலும் இதே போக்கை நாம் காணலாம். மலேயா நாட்டின் மைய வங்கி முதன்முதலில் செலாவணி வெளியீடு, செலாவணியின் புற மதிப்பைக் காக்கவேண்டிய அளவு காப்பு நிதியை வைத்துக்கொள்ளுதல், செம்மையான நிதிமுறையை நிறுவுதல், பேணுதல், கடன் நிலையை நாட்டு நன்மையைக் காக்கும் வகையில் நிலைநாட்டுவது முதலிய நோக்கங்களைச் சட்டத்தில் சேர்த்தனர்.[3] பர்மா யூனிய வங்கி கீழ்க்காணும் நோக்கங்களை நிறைவேற்றும் வகையில் செயல்பட வேண்டு மென்று அதன் சாசனம் கூறுகின்றது. (1) பர்மா நாட்டுச் செலாவணியின் ஸ்திர நிலையைப் பேணுவது. (2) அன்னியச் செலாவணிகளுடன் ஒப்பிடும்போது உள்நாட்டுப் பணத்தின் ஸ்திரத் தன்மையை நிலைநாட்டுவது. (3) நாட்டின் உற்பத்திச் சாதனங்களை வளர்ப்பது, உண்மை வருமானத்தைப் பெருக்குவது.[4] மந்தத்திற்குப் பின் தொடங்கப்பெற்ற இந்திய ரிசர்வ் வங்கியின் சட்டம் எளிய முறையில் பழைய குறிக் கோள்களையே கொண்டிருக்கின்றது. இந்திய ரிசர்வ் வங்கியைப் போலவே பாக்கிஸ்தானின் ஸ்டேட் வங்கியும் செலாவணித் தாள் வெளியீட்டையும், காப்பு நிதியையும் கண்காணித்துச் செலாவணியின் ஸ்திர நிலையைப் பேணவேண்டும். ஆனால்,

[1] Art. 5. The Bank of Sudan Act, 1958; Art. 5, Strucures of the Bank of Morocco. 1959 as amended December 1962; Art. 3. (c) and (e) The Bank of Ghana Act. 1963; Art. 34 (4) Statutes of the Central Bank of Tunisia; Sec. 4 The Central Bank of Nigeria Ordinance 1958.

[2] Ch. II, Art. 13, Banking Law No. 4 February 1963.

[3] The Central Bank of Malaya Ordinance, 1958. Sec 4.

[4] Art. 4, The Union Bank of Burma Act.

1956-ல் சட்டத்தைத் திருத்தினர். இதன்படி மைய வங்கி செலாவணியின் ஸ்திர நிலையை நிலைநாட்டுவதோடு செலாவணி, கடன் முறையைச் செம்மையாக வளர்க்கவேண்டும். நாட்டின் நலனைக் கருதி உற்பத்திச் சாதனங்களை முழுமையாகப் பயன் படுத்தும் வகையில் இதைச் செய்யவேண்டும்.'[1]

சில மைய அமெரிக்க நாடுகளும், தென் அமெரிக்க நாடுகளும் நோக்கங்களைக் கவனமாக விளக்கியுள்ளன. பழைய கருத்துகளையும், புதிய கருத்துகளையும் தம் விளக்கங்களில் சேர்த்துள்ளன. அவை பன்னாட்டு, உள்நாட்டு நோக்கங்களை வேறுபடுத்திக் காட்டியுள்ளன. குவாடிமாலா, பராகுவே, டாமினிக்கக் குடியரசு நாடுகளை உதாரணமாகக் காட்டலாம். பிலிப்பைன்ஸ், சிலோன், ஹோண்டுராஸ் போன்ற நாடுகளில் இவை வேறுபடுத்திக் காட்டப்படவில்லை. ஆனால், உற்பத்திச் சாதனங்களை முழுமையாகப் பயன்படுத்துவதையும், உண்மை வருமானத்தைப் பெருக்குவதையும், வேலைவாய்ப்புகளைப் பெருக்குவதையும் தம் விளக்கங்களில் சேர்த்துள்ளன.[2] பழைய நோக்கங்களைப் பல நாட்டுச் சட்டங்கள் வெளிப்படையாக விளக்கிய போதிலும், மைய வங்கியின் வளர்ச்சி பற்றிய தற்காலக் கருத்துகளை வெளிப்படையாகக் காட்டாமல் கொள்கைகளில் உள்ளடக்கிக் கொண்டிருக்கின்றன. இதற்கு ரிசர்வ் வங்கியைவிட வேறு சிறந்த எடுத்துக்காட்டைக் குறிப்பிட இயலாது. அதன் பணிகள் தொடர்ந்து பெருகிக் கொண்டிருக் கின்றன. செலாவணியின் ஸ்திரத் தன்மையைப் பேணும் பணியை மட்டும் செய்யாமல் நாட்டின் வளர்ச்சிக்காகச் செயல் களையும் செய்கின்றது.

கீன்ஸ் காலத்திலிருந்து வளர்ச்சியடைந்த பொருளாதாரக் கோட்பாடுகளையும், அரசாங்கத்தின் பொருளாதார, சமூகப் பணிகள் பெருகுவதையும் அடுத்துச் செலாவணிக் கொள்கையின் நோக்கங்கள் விரிவடைந்தன. பொன் திட்டத்தைக் (gold standard) கைவிட்டனர், நிருவகிக்கப்பட்ட செலாவணி முறை (managed currency) அமலில் வந்தன; வேலை வாய்ப்பு நிலையை உயர் மட்டத்திலும் ஸ்திர நிலையிலும் வைக்க முனைந்தனர், பொருளாதார வளர்ச்சியைப் பல நாடுகள், குறிப்பாக வளர்ச்சி

[1] State Bank of Pakistan Act 1956.

[2] Monetary and Banking Reform in Paraguay p. 81, Monetary and Banking Legislation of the Dominican Republic p. 43, The Central Bank of Philippines 1948, Monetary and Banking Law of Ceylon 1949, Law of the Central Bank of Hondnras, February 3. 1950.

குன்றிய நாடுகள் விரைவுபடுத்த முனைந்தன. இவையனைத்தும் செலாவணிக் கொள்கையின் நோக்கங்களைப் பெருக்கின, அவை களைப் பரவலாகவும் அமைத்தன.

இந்த நோக்கங்களுள் இருக்கும் முரண்பாடுகளை எவ்வாறு தீர்க்கலாம் என்ற பிரச்சினை எழுந்துள்ளது. செலாவணியின் உள்நாட்டு ஸ்திர நிலை, முழு வேலை (full employment) நிலையை யேற்படுத்தும் பணியுடனும், உற்பத்திச் சாதனங்களை முழுமை யாகப் பயன்படுத்தும் பணியுடனும் முரண்பாடு கொண்டிருக் கின்றது. 1930—40-ல் மாக்மில்லன் குழுவினர் நோக்கங் களிடையே தொடர்பு இருப்பதைக் கண்ட போதிலும், 1950—60-ல் ராட்கிளிப் குழுவினர் இவைகளிடையே முரண் பாடுகளிருப்பதைக் கண்டனர். சிலர் இப்பிரச்சினையை நழுவ விடுகின்றனர். ஆனால் இதற்கு ஒரு முடிவு காண வேண்டும். முரண்பாடுள்ள நோக்கங்களிடையே ஒரு சமநிலை காணுவதே இதற்குச் சரியான தீர்வாகும்.

### பொருளாதார வளர்ச்சி மைய வங்கியின் ஒரு நோக்கமாக இருத்தல்

இரண்டாவது உலகப்போருக்கு முன் முழுவேலை மைய வங்கியின் முக்கிய நோக்கமெனக் கருதப்பட்டது. இதேபோலப் போர்ப் பிற்கால ஆண்டுகளில் பொருளாதார வளர்ச்சிக்குப் பல நோக்கங்களுள் முன்னுரிமை (priority) கொடுத்தனர். விலை வாசியின் ஸ்திர நிலையும், முழு வேலையும் இத்துடன் முரண்பாடு கொண்டிருப்பினும் இதுவே (பொருளாதார வளர்ச்சி) மற்ற நோக்கங்களைவிட முக்கியமானது. போருக்கு முன் நிறைவேறிய மைய வங்கிச் சட்டங்களுக்கு மாறாக, வளர்ச்சி குன்றிய நாடுகள் அண்மையில் தோன்றியுள்ள மைய வங்கிகள் தம் சட்டங்களில் பொருளாதார வளர்ச்சியை முக்கியக் குறிக்கோளாகப் பல இடங்களில் குறிப்பிடுகின்றன. 'ஒழுங்கான பொருளாதார வளர்ச்சி', 'நாட்டின் சாதனங்களைச் சீராக வளர்ப்பது', 'நாட்டின் வளர்ச்சி' என்ற சொற்களைப் பெடரல் குழுவின் வெளி யீடான 'The Federal Reserve System, its Purposes and Functions' 1954 என்ற நூலில் காணலாம். போருக்கு முன் நிறைவேறிய சட்டங்களில் இத்தகைய சொற்களைக் காண முடியாது. முன்னர் வெளியான வெளியீடுகளிலும் இவைகளைக் காண முடியாது. போருக்கு முன் முழு வேலை மைய வங்கியின் நோக்கங்களுள் எவ்வளவு முக்கியமாக இருந்ததோ அதே இடத்தைப் பொருளாதார வளர்ச்சி இன்று கொண்டிருக்கின்றது என்பதை டாக்டர் சார்லஸ் விட்டல்சே குறிப்பிட்டுள்ளார்.

இது பற்றிய இரு கருத்துகளைக் கவனிக்க வேண்டும். புதிய கருத்தாகிய முழு வேலையும் பழைய ஸ்திர நிலைக் கருத்தும் பொருளாதார வளர்ச்சிக் கொள்கையுடன் எவ்வாறு ஒத்திருக்கின்றது என்பதைக் காண வேண்டும். இரண்டாவதாகப் பொருளாதார வளர்ச்சிக் கொள்கை முழு வேலைக் கொள்கையுடன் எவ்வாறு பொருந்தியிருக்கின்றது என்பதைக் காண வேண்டும்.

பொருளாதார ஸ்திரத் தன்மையைப் பேணுதலும், முழு வேலைக் கொள்கையும் பொருளாதார வளர்ச்சியுடன் இணைந்தவை என்று கருத முடியாது. ஸ்திர நிலை என்பது எந்த மட்டத்திலும் செய்யக் கூடியதாக இருந்தால், அதாவது வெவ்வேறு கால நிலையில் நாட்டிலுள்ள சாதனங்களுடன் தொடர்பு கொள்ளாமல் அது இருந்தால் உயர்ந்து வரும் மக்கள் தொகையும், பயனுக்கப்பால் உள்ள மூலதனப் பெருக்கமும், அரசு கொள்கையின் விளைவாக வேலையின்மையும் (unemployment) பயன்படுத்தப்படாத மூலதனத்தையும் விளைவிக்கும்.

முழு வேலைக் குறிக்கோளை மட்டும் நம்பினால் விரும்பத்தக்க பொருளாதார வளர்ச்சி ஏற்படாது. வேலை நிறைவுக் கொள்கை செம்மையான வளர்ச்சிக்குகந்ததாக இருக்கத் தவறலாம். இத்துடன் துணைக் கொள்கைகளையும் செயல்படுத்த வேண்டிய அவசியம் ஏற்படும்.

பொருளாதார வளர்ச்சி நோக்கம் முழுவேலை நோக்கத்துடன் முரண்பாடு கொண்டிருக்கலாம். பெருமளவு வேலையின்மையும், சாதனப் பயன்பாடு மிகக் குறைவாகவும் உள்ளபோது இரு நோக்கங்களிடையே இருக்கும் முரண்பாடு தெளிவாகத் தெரியாமலிருக்கலாம். ஆனால் முழு அளவு உற்பத்தி பெருகிய பின்னரும் செலவுகள் அதிகரித்தால் முரண்பாடு தெளிவாகத் தெரியும்.

முழு வேலை என்பது குறுகிய காலக் கருத்து; பொருளாதார வளர்ச்சி நீண்ட காலத்தில் நடைபெற வேண்டியது. எனவே இரண்டும் ஒன்றுக்கொன்று ஒவ்வாததாகச் சில தருணங்களில் இருக்கலாம். பொருளாதார வளர்ச்சிக்கு உகந்த கொள்கைகள் வேலை நிறைவுக் கொள்கையுடன் பொருத்தமற்றிருக்கலாம். 'தற்போது உள்ள தொழில்நுட்ப முறையைக் கொண்டு சாதனங்களை முழுமையாகப் பயன்படுத்தி உச்சநிலை உற்பத்தியையும் வேலை நிறைவையும் ஏற்படுத்த வேண்டும். பொருளாதார வளர்ச்சி நோக்கப்படி தொழில்நுட்ப முறை வளரும். இந்த நிலையில் சாதனங்கள் முழுமையாகப் பயன்பட வேண்டும்.

மிகவும் விரும்பத்தக்க முறையில் உற்பத்திப் பெருக்கம் நடைபெற வேண்டும்.' என்று விட்டல்சே கூறுகின்றார்.[1]

வளர்ச்சி நோக்கத்தை நிருவாகம் செய்வதில் இடையூறுகள் ஏற்படுகின்றன. வளர்ச்சியை எவ்வாறு கணக்கிடவேண்டும்? மாற்று வீதத்தின் ஸ்திர நிலை, விலைகளின் ஸ்திர நிலை, வேலை நிறைவு முதலியவைகளை ஓரளவு வளர்ச்சியின் குறியாகப் பாவிக்கலாம். தொழில்நுட்ப முன்னேற்றம், சமுதாய, பொருளாதார, அரசியல் அமைப்புகள் முதலியவை மாறுவதால் வளர்ச்சி இலக்குகள் மாறலாம். மைய வங்கி செலாவணி யாக்கம் செய்வதால்மட்டும் பொருளாதாரப் பெருக்கம் தொடங்கி விடாது. இது வளர்ச்சிக்குத் தேவையாக இருக்கலாம். ஆனால் போதுமானது என்று கூறமுடியாது, பொருளாதாரப் பெருக்கம் அல்லது சுருக்கம் பல உண்மைக் காரணிகளைப் பொறுத்திருக் கின்றது. ஆனால், மைய வங்கி சரியான செலாவணிக் கொள்கையைத் தூண்டலாம். விலைவாசியின் ஸ்திரநிலையையும் வேலை நிறைவையும் பேணும் செலாவணிக் கொள்கை வளர்ச்சிக் குகந்த சூழ்நிலையை உருவாக்குகின்றது. நடைமுறையில் பொருளாதார ஸ்திரநிலைக்கும், வளர்ச்சிக்கும், அதாவது குறுகிய கால நோக்கத்திற்கும் நீண்டகால நோக்கத்திற்கும் இடையே முரண்பாடு ஏற்படவேண்டியதில்லை.

ஒன்றுக்கொன்று முரணல்லாத துணைசெய்யும் நோக்கங்கள் இருக்கின்றன. இவற்றுக்கிடையே ஒரு சம நிலையை ஏற்படுத்த வேண்டும். பழைய கோட்பாடுகளிலும் செய்முறைகளிலும் பயிற்சிபெற்ற மைய வங்கியருக்குப் பொருளாதார வளர்ச்சிக் கொள்கை விநோதமாகவும், பழக்கங்களுக்கப்பாற்பட்டதாகவும் தோன்றும், முன்னர் குறிப்பிட்டதுபோல் வளர்ச்சி, தொன்மை நோக்கங்களைப் போலவே திசை காட்டும் ஒளியாக இருக் கின்றது; குறிக்கோளன்று. வளர்ச்சி குன்றிய நாடுகளில் பண வீக்கம் என்றுமுள்ள தொல்லை. இந்த நிலையில் பொருளாதார வளர்ச்சியை மைய வங்கியின் இலக்காகப் பரிந்துரைப்போர் கவனத்துடன் இதைச் செய்யவேண்டும். மைய வங்கியின் செயல்கள் பெருகுவதால் ஆபத்துகள் ஏற்படலாம். ஏனெனில் அவை அரசியல் திருவாகச் செல்வாக்கினால் உருவாகலாம். வளர்ச்சியடையும் நாடுகள் வளர்ச்சித் திட்டங்களை அமல் செய்ய விரும்புகின்றன. இவைகளை நிறைவேற்றுவதில் மைய வங்கிகள் பங்கேற்காமல் வாளாவிருப்பதும் சரியல்ல. அவை வளர்ச்சியில் பங்கு பெறவேண்டும்.

[1] C. R. Whittlesey, 'The Monetary Growth in Balanced Economic Growth', in American Economic Review, May 1956 (Papers & Proceedings).

# 14. மைய வங்கிகளிடையே கூட்டுறவு

**மைய வங்கிகளின் கூட்டுறவு தொடங்குதல்**

இன்று மைய வங்கிகளிடையே காணும் கூட்டுறவு முதல் உலகப் போருக்குப் பின் தொடங்கிற்று. போருக்கு முன் இத்தகைய கூட்டுறவே இல்லை. 1920–30-க்கு முன் இது இருந்ததாகவும் தோன்றவில்லை. செலாவணி பற்றிய கூட்டுறவை நாடும் விருப்பமும் இல்லை. கடந்த 30 ஆண்டுகளில்தான் ஒத்துழைப்பின் முக்கியத்துவத்தை உணர்ந்தனர். இதைப் பரவலான அளவில் நாடினர், பன்னாட்டுச் செலாவணி பற்றிய ஒத்துழைப்பு இன்று 'எல்லோரும் ஏற்றுக்கொண்ட சாதாரண விஷயமாகிவிட்டது.'[1]

1920–30-ல் மைய வங்கிகளின் ஒத்துழைப்பைப் பிரபலப் படுத்திய இரு பெரிய வங்கியர் திரு. மாண்டேகு நார்மனும் (Mr. Montagu Norman — இங்கிலாந்தின் தலைமை வங்கியின் ஆளுநர்), பெஞ்சமின் ஸ்ட்ராங்கும் (Benjamin Strong—நியூயார்க் பெடரல் ரிசர்வ் வங்கியின் ஆளுநர்) ஆவர். இவ்விருவரும் மைய வங்கிகளின் ஒத்துழைப்பில் நம்பிக்கை கொண்டிருந்தனர். ஆனால், இவ் வொத்துழைப்பை அரசுகளின் முயற்சியாலோ அல்லது பன்னாட்டு மாநாடுகள் மூலமோ ஏற்படுத்துவதற்குப் பதிலாக அதிகாரபூர்வமற்ற, நட்பு முறையில் நடக்கும் கூட்டங்கள் மூலம் ஏற்படுத்த வேண்டுமென்று இருவரும் கருதினர். அதிகாரபூர்வமான கூட்டத்தை அல்லது மைய வங்கியரின் சந்திப்பை, ஆளுநர் ஸ்ட்ராங் வெறுத்தார் என்று அவருடைய தனிச் செயலாளர் கூறினார். அதிகார பூர்வமான கூட்டங்களில் அரசாங்கங்களுடைய விருப்பங்களை ஒட்டி பேச்சுவார்த்தை நடைபெறும்; செலாவணிக்குகந்த முறையில் நடைபெறு.'[2] மாக்மில்லன் குழுவினரிடம் சாட்சியம் கூறும்

[1] Speech entitled 'Some thoughts on Central Banking' by Lord Cobbard, printed in the journal of the Indian Institute of Banker's, London. February 1963.

[2] L. V. Chandler, Benjamin Strong, Central Banker. (1958) p. 280.

போது திரு. மாண்டேகு நார்மன், பன்னாட்டு மாநாடுகளில் பங்கேற்கும் ஆளுநர்கள் அவரவர் நாடுகளிலுள்ள நிதி, பொருளாதார நிலைகளுக்கேற்ற அரசுகளின் கருத்துகளை ஒட்டி நடப்பர், தம் சொந்தக் கருத்துகளை வெளியிட மாட்டார் என்று குறிப்பிட்டார்.[1] இருவரும் பரஸ்பர ஒத்துழைப்பையும், பன்னாட்டுக் கணக்குத் தீர்க்கும் வங்கியின் (Bank of International Settlement) பார்வைக் கப்பாற்பட்ட கூட்டங்களையும் விரும்பினர்.

முதல் உலகப்போரை அடுத்து வந்த முதல் பத்தாண்டுகளுள் மைய வங்கிகளின் ஒத்துழைப்பு முதன் முறையில் உருவாயிற்று. உலக நாடுகளின் சபை (League of Nations) செய்த ஏற்பாட்டை ஒட்டி ஆளுநர் ஸ்ட்ராங் அவர்கள் ஆணைப்படி பெடரல் ரிசர்வ் வங்கி இங்கிலாந்தின் தலைமை வங்கியின் ஒத்துழைப்பையும் மற்ற மைய வங்கிகளின் ஒத்துழைப்பையும் நாடிற்று. அனைத்துலகச் செலாவணி முறையைச் சீராக்க, அது ஸ்திரக்கடனை (stabilisation credit) நிறுவிற்று. செலாவணிகளின் மாற்று முறைக்கும் (convertibility) உதவியது. செக்கோஸ்லோவாக்கியா, இங்கிலாந்து, போலந்து முதலிய நாடுகளுடன் 1924—25-ல் ஸ்திர நிலை ஒப்பந்தம் (stabilisation agreement) செய்துகொண்டது. இதனால் ஏற்படும் செலவுகள் முழுவதையும் பெடரல் ரிசர்வ் வங்கி ஏற்றது. பெல்ஜியம், போலந்து, இத்தாலி, ருமேனியா முதலிய நாடுகளுடன் 1925—29-ல் பெடரல் ரிசர்வ் வங்கியும், இங்கிலாந்தின் தலைமை வங்கியும் சேர்ந்து ஒப்பந்தம் செய்து கொண்டன. இவ்வொப்பந்தங்களுள் இங்கிலாந்துடன் செய்து கொண்ட சுழல் கடன் பற்றியது (revolving credit), மிக முக்கியமானது. இதன்படி பெடரல் ரிசர்வ் வங்கி இங்கிலாந்தின் தலைமை வங்கிக்கு மூன்று நடவடிக்கைகளில் கைவசக் கடனைக் (stand by credit) கொடுக்க வேண்டும். மூன்று ஆண்டுகளில் இங்கிலாந்தின் தலைமை வங்கிக்குப் பெடரல் ரிசர்வ் வங்கி பொன்னை விற்க வேண்டும். ஒவ்வொரு முறையும் 200 மில்லியன் டாலர் பெறுமானமுள்ள பொன்னை விற்பனை செய்யலாம். இதற்கு ஈடான தொகையைப் பவுண்டில் இங்கிலாந்தின் தலைமை வங்கி பெடரல் ரிசர்வ் வங்கியில் டெப்பாசிட்டாகச் செலுத்தும். இந்த டெப்பாசிட்டுத் தொகையை ரிசர்வ் வங்கி அவ்வப்போது இங்கிலாந்தின் தலைமை வங்கி உறுதியளித்த ஸ்டெர்லிங் உண்டியல்களை வாங்கப் பயன்படுத்தும். இவ்வொப்பந்த நடவடிக்கைகளுக்கு ஆங்கில அரசு உத்தரவாதமளித்தது. இங்கிலாந்து

[1] Committee on Finance and Industry, Minutes of Evidence, Vol. I, 298-99.

பொன் திட்டத்துக்கு மீண்டும் 1925-ல் வருவதற்கு இவ்வொப்பந்தம் உதவியது.

உலக நாடுகளின் மைய வங்கிகளின் ஒத்துழைப்புக்கு மாக்மில்லன் குழுவினர் 1931-ல் அங்கீகாரம் கொடுத்தனர். மைய வங்கிகளின் கூட்டுறவு பன்னாட்டு முறையில் பொன் திட்டம் இயங்குவதற்குதவும். இதன் நோக்கம் பன்னாட்டு விலைகளின் ஸ்திர நிலை, நீண்ட, குறுகிய காலங்களில் நிலைநாட்டப்பட வேண்டியதே ஆகும். இதற்காக உள்நாட்டு, வெளி நாட்டுச் செயல்களில் மைய வங்கிகள் சுதந்திரமாக இயங்க வேண்டுமென்று அவர்கள் கூறினர். இக்கூட்டுறவின் விளைவாகப் பன்னாட்டுக் கணக்குத் தீர்ப்பு வங்கி (Bank of International Settlements) தோன்றியது. இது அனைத்துலக மைய வங்கிகளுக்குச் செய்தி கொடுக்கும் நிலையமாகவும், அறிவுரை நல்கும் நிலையமாகவும் செயல்பட்டது.

## மைய வங்கிகளின் ஒத்துழைப்புக்கு இன்றியமையாதவை

இரு துறைகளில் மைய வங்கிகள் ஒத்துழைக்க முனைந்தன : (1) பொன் மாற்றுத் திட்டத்தை (gold exchange standard) இயக்குதல். (2) குறைவான அல்லது அதிக அளவில் அவை சேர்ந்து செயல்படுதல். முதல் திட்டத்தின் கீழ் மைய வங்கிகள் பொன் வாங்குதலை ஒருங்கிணைக்க வேண்டும்; பொன்னுக்குள்ள அமிதத் தேவையைக் கட்டுப்படுத்துவது நோக்கம். 1927ஆம் ஆண்டு மைய வங்கிகள் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டன. இதன்படி அவை மற்ற மைய வங்கிகளின் பொன் காப்பு நிதியில் அவைகளுடைய அனுமதியின்றித் தலையிடக்கூடாது. இதை மாண்டேகு நார்மன் என்ற நூலில் டாக்டர் என்சிக் (Dr. Einzig) குறிப்பிடுகிறார். மேலும் லண்டன் நகரப் பொன் மார்க்கட்டில் பெரும்பாலான மைய வங்கிகள் இ. த. வங்கியின் அனுமதியின்றிப் பொன் வாங்குவதற்குத் தடை விதித்தனர். ஆனால் அவர்கள் சார்பாக இங்கிலாந்தின் தலைமை வங்கி வாங்கும் என்றும் டாக்டர் என்சிக் குறிப்பிடுகிறார். பொன்னுக்குப் பதிலாக 'முக்கியமான' செலாவணியைப் பயன்படுத்தினர். மேலும் மைய வங்கிகள் அயல் நாட்டு வர்த்தக வங்கிகளுடன் நேரடித் தொடர்பு கொள்ளக்கூடாது. அந்தந்த நாட்டு மைய வங்கிகள் மூலமே தொடர்பு கொள்ளலாம். தாமே தம் மீது அமல் செய்த இக்கட்டுப்பாடு ஒவ்வொரு நாட்டிலும் உள்ள அன்னியச் செலாவணியின் அளவையும் தன்மையையும் பற்றிய விவரங்களைச் சேகரிக்க உதவும்.

இரண்டாவது ஒத்துழைப்பு ஒவ்வொரு மைய வங்கியும் கையாளும் முறைகள், அவைகளுடைய செலாவணிக் கடன் கொள்கைகள், அவைகளுடைய தள்ளுபடி வீத மாற்றங்களை முன்னறிவித்தல் முதலியவை பற்றியவை.[1]

மந்தத்திற்குப் பிந்திய ஆண்டுகள் மைய வங்கிகளின் கூட்டுறவுக்கு உகந்ததாக இல்லை. 1930–40-ல் செலாவணி நிருவாகம் மைய வங்கிகளிலிருந்து அரசுக்குத் திரும்பியது. மைய வங்கிகளின் பன்னாட்டு ரீதிக் கூட்டுறவு தன் முக்கியத்துவத்தை இழந்தது. உள்நாட்டிலும் பன்னாட்டு முறையிலும் அரசுகளின் செல்வாக்கு உயர்ந்தது. இரண்டாவது உலகப் போர் முடிந்தபொழுது உருவான பன்னாட்டு நாணய நிதி (International Monetary Fund) இதை எடுத்துக் காட்டியது. கொள்கைகளைச் செயல்படுத்தும் பணி மட்டுமே மைய வங்கிகளுக்குப் புதிய அமைப்பில் கிடைத்தது. ப்ரெட்டன் உட்சில் பன்னாட்டுக் கணக்குத் தீர்க்கும் வங்கியைக் கலைக்கும் தீர்மானத்தை நிறைவேற்றினர். இத் தீர்மானம் மைய வங்கியின் முக்கியத்துவம் குறைந்ததை எடுத்துக் காட்டுகிறது. ஆனால், ஐரோப்பிய செலுத்தும் சங்கத்தின் (European Payments Union) பணிகளை மைய வங்கிகள் மேற்கொண்டமையால் மேற்குறிப்பிட்ட தீர்மானம் நடைமுறையில் செயல்படவில்லை. 1950–60-ல் மைய வங்கிகளின் பழைய தொடக்கப் பணிகள் மீண்டும் தோன்றின. சூழ்நிலையின் காரணமாகப் பன்னாட்டு நாணய நிதியின் தொடக்ககால அமைப்பு மாறியது. 'அரசுகளின் உள்நாட்டுப் பொருளாதாரக் கொள்கைகளுடன் அவைகளுடைய பன்னாட்டுச் செலுத்தல் முறை சரிவர இயங்குவதற்கு ஒரு கருவியாக'ப் பன்னாட்டு நாணய நிதி பயன்படவேண்டும். இதுவே அதன் தொடக்ககால நோக்கமாகும்.[2] ப.நா. நிதிக்கும் மைய வங்கிகளுக்கும் இடையே ஒரே தன்மையான நோக்கங்கள் இருக்கின்றன. ஆகையால் அவையிடையே ஒத்துழைப்பு அதிகரித்திருக்கின்றது.

ப. நா நிதியும் மைய வங்கிகளும்

செலாவணிக் கொள்கைகளை நிறைவேற்றுவதில் மைய வங்கிகளின் ஒத்துழைப்பு வேண்டும் என்று பலர் இன்று உணர்ந்

[1] Art. entitled 'Current Problems of Co-operation between Central Banks' by Albert Ferrari, in the Banca Nazionale del Lavoro, March, 1961, pp. 78-79.

[2] R. S. Savers. 'Co-operation between Central Banks' in Three Banks Review, Sept. 1963.

திருக்கின்றனர். பன்னாட்டுக் கணக்குத் தீர்க்கும் வங்கியின் மாதாந்திரக் கூட்டங்களில் செலாவணிக் கொள்கைகள் பற்றிய விவாதம் செய்கின்றனர். மைய வங்கிகளின் ஆளுநர்கள் அல்லது தலைவர்களும், அலுவலர்களும், சில சந்தர்ப்பங்களில் பார்வையாளராகப் பணிபுரியும் அரசின் பிரதிநிதிகளும் இக் கூட்டங்களில் கலந்துகொள்கின்றனர். பெடரல் ரிசர்வ் முறை முன்னர் ஆண்டுக் கூட்டத்தில் மட்டும் கலந்துகொண்டது. ஆனால் இப்பொழுது மாதக்கூட்டங்களில் கலந்துகொள்கின்றது. இக் கூட்டங்கள் செய்திப் பரிவர்த்தனைக்கும், பரஸ்பர அக்கறையுள்ள கொள்கைகளை உருவாக்குவதற்கும், பரஸ்பர ஒத்துழைப்புக்கும் உதவுகின்றன. 1961ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 'நாணய மாற்று மார்க்கட்டில்' நெருங்கிய முறையில் மைய வங்கிகள் ஒத்துழைத்தன. இதற்கு மேற்கூறிய கூட்டங்கள் உதவின. அவை மற்ற நாடுகளில் பரஸ்பர முறையில் டெப்பாசிட்டுத் தொகைகளைச் செலாவணிகளுக்குத் தாங்குதலாக (support) வைத்துக் கொண்டன. ஐரோப்பிய நாடுகளின் பொருளாதார ஒத்துழைப்பு-வளர்ச்சிக் கழகம் (ஐ.நா.பொ.ஒ.வ.க) (Organisation of Economic Co-operation and Development) அரசுகளிடையே கூட்டுறவையும், பேச்சு வார்த்தைகளையும் ஏற்படுத்துவதற்கு ஒரு கருவியாக இயங்குகின்றது. இதில் அங்கம் வகிக்கும் அரசுகள் பங்கு பெறலாம். ஐ. நா. பொ. ஒ. வ. கழகமும் பன்னாட்டுக் கணக்குத் தீர்ப்பு வங்கியும் நடத்தும் பேச்சு வார்த்தைகளும், கூட்டங்களும் பன்னாட்டு நாணய நிதியின் வரம்புகளுக்கும் நோக்கங்களுக்கும் உட்பட்டவை. நிதி பற்றிய உறவுக் கொள்கையின் அடிப்படையாக நடைமுறைப் பிரச்சினைகளும், தத்துவ நோக்கங்களும் இருக்கின்றன என்றும் பன்னாட்டு நாணய நிதி, ஐரோப்பிய நாடுகள், வட அமெரிக்க நாடுகள் முதலியவைகளிடையே ஒருங்கிணைந்த செயல்களுக்கு இக் கொள்கை ஆதாரமாகலாம் என்றும், ப. நா. நிதி பரவலாகவும், நெகிழ்வுள்ளதாகவும் அமைய இது வழி வகுக்கும் என்றும் ஒருவர் குறிப்பிட்டுள்ளார்.[1]

**மைய வங்கிகளிடையே அண்மைக் காலத்திய கூட்டுறவு**

பன்னாட்டுச் செலாவணி முறையமைப்பில் மைய வங்கிகள் பன்னாட்டு நாணய நிதியுடன் ஒத்துழைக்கவேண்டுமென்பதற்கு அண்மைக் காலத்திய நிகழ்ச்சிகள் தூண்டுதல்கள் அளித்துள்ளன. 1960-ல் பேசல் என்ற இடத்தில் ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. தனியார் நிதியும், குறுகிய கால ஊக வாணிக

[1] F. M. Tamagna, 'Central Banks and International Monetary Arrangements' in Banca Nazionale del Lavoro, Quarterly Review, June 1961.

நிதியும் நாடுகளைக் கடந்து செல்வதால் ஏற்படும் விளைவுகளைச் சரிக்கட்டுவதற்கு இவ்வொப்பந்தம் வழி வகுக்கின்றது. பன்னாட்டு அளவில் குறுகிய கால நிதி நாடு கடந்து செல்வதால் ஸ்திர நிலை கெடும். மைய வங்கிகளின் ஒத்துழைப்பு இதைச் சரிக்கட்டும். மற்ற நாடுகளின் செலாவணிகளை ஈட்டும் நாடுகள் அவைகளை உடனடியாகப் பொன்னாக மாற்றாமல் அப்படியே வைத்துக் கொள்ளவேண்டுமென்பது இவ்வொப்பந்தத்தின் முக்கியக் கூறாகும். 1960-ல் ஜெர்மானிய 'மார்க்கு' மதிப்பில் உயர்ந்த பிறகு பேசல் ஒப்பந்தம் அமலில் வந்தது. ப. நா. நிதியின் உதவியை நாடவேண்டிய நிலையிலிருந்த இங்கிலாந்து இவ்வொப்பந்தத்தின் விளைவாக இவ்வுதவியில்லாமலே தற்காலிகமாகத்தான் நிலையைச் சமாளித்தது. ஒரு சில மாதங்கள் சென்ற பின்னர் நிதியின் உதவியைக் கோரும் நிலை ஏற்பட்டது. இவ்வொத்துழைப்பு பயனுள்ளதாக இருக்கின்றது. ஆனால் மைய வங்கிகள் தம் நாட்டு அரசாங்கங்களுக்கே முதற்கண் கடமைப் பட்டிருக்கவேண்டும். மைய வங்கிகளின் கூட்டுறவுக்கு மேலும் ஒரு வரம்பு இருக்கின்றது. இரண்டாவதாகப் பேச்சு வார்த்தைகளை அரசாங்கங்கள் நடத்தவேண்டும். சுதந்திர அரசுகள் நடப்புநிலை பற்றிய தம் சொந்தக் கருத்துகளைக் கொண்டிருக்கலாம். இவை மற்ற அரசுகளின் கருத்துகளுடன் முரண்பாடு கொண்டிருக்கலாம். இரு போர்களுக்கும் இடையில் இருந்த காலத்தில் பன்னாட்டுப் பொன் திட்டத்தை இயக்குவது பற்றிய ஒற்றுமையை மாண்டேகு நார்மனும், பெஞ்சமின் ஸ்ட்ராங்கும் ஏற்படுத்த முடியவில்லை. இதேபோலத் தீவிரமான நெருக்கடிகாலத்தில் இத்தகைய ஒப்பந்தங்கள் தக்க பயன் தரத் தவறலாம்.

தீமை விளைவிக்கும் ஊகவாணிகத்திற்கு எதிராகப் பரஸ்பரச் செலாவணி ஒப்பந்த முறை அல்லது செலாவணிப் பரிவர்த்தனை முறை எல்லோருக்கும் கவர்ச்சிகரமாக இருந்தது. இவ்வொப்பந்தம் மைய வங்கிகளுடையே குறுகியகால பரஸ்பரக் கடன் கொடுக்கலுக்கு ஏற்பாடு செய்தது. பேச்சு வார்த்தைகளுக்குப்பின் ஒவ்வொரு நாடும் தன் செலாவணியைக் கொடுத்துப் பிறர் செலாவணியை உயர்ந்தபட்ச அளவில் வாங்கிக் கொள்கின்றது. அவை குறிப்பிட்ட காலத்திற்குப்பின், பொதுவாக 3 மாதத்திற்குள் ஒப்பந்த நடவடிக்கையை எதிர் நடவடிக்கை மூலம் தீர்த்துக் கொள்கின்றன, இவைகளுக்கு ஒரே மாற்று வீதம் இருக்கும். இவ்வொப்பந்தங்களாலேயே பன்னாட்டு நிதிநிலையில் ஸ்திர நிலை ஏற்படலாம், மைய வங்கிகள் ஏராளமான குறுகிய கால நிதிகளைக் கொள்கின்றன. இவை

யில்லாவிடில் ஊக வணிகர் (speculator) மைய வங்கிகளின் நிதிகள் தீர்ந்து போகும் அளவுக்குத் தொழிற் பெருக்கம் செய்வர் இதை ஒப்பந்தம் தடை செய்கிறது. இவ்வொப்பந்தங்கள் மைய வங்கிகள் நெருங்கி, இணைந்து செயல்பட உதவுகின்றன. இரு பெரிய நெருக்கடிகள்—1962-ல் க்யூபா நெருக்கடியும், 1963-ல் ஜனாதிபதி கென்னடியின் கொலையும் ஏற்படுத்திய காலங்களில் மாற்று வீதங்கள் ஸ்திர நிலையில் இருப்பதற்கு ஒப்பந்தங்களே காரணம். அயல் நாட்டுச் செலாவணி மார்க்கட்டில் நிலவிய அமைதி குலையாமலிருந்ததற்கு மைய வங்கிகள் ஒப்பந்தங்கள் மூலம் செலாவணிப் பரிவர்த்தனை செய்தமையே காரணம். அண்மையில் நிகழ்ந்த மாற்று வீத நெருக்கடிகளில் பரஸ்பர ஒப்பந்த முறை மிகவும் பயனுள்ளதாக இருந்தது என்பதைக் குறிப்பிடலாம். 1964, 1965, 1966 ஆண்டுகளில் ஸ்டெர்லிங் நெருக்கடிகள் ஏற்பட்டன. பெடரல் ரிசர்வ் வங்கியும் மற்ற வங்கி களும் ஒப்பந்த முறையில் அளித்த தொகையைக் கொண்டே இங்கிலாந்தின் தலைமை வங்கி நிலைமையைச் சமாளித்தது. 1962-64-ல் இத்தகைய நெருக்கடிகளைக் கனடிய, இத்தாலிய, ஜப்பானிய நாடுகள் சமாளித்தன. ஒப்பந்தங்கள் மூலம் பெற்ற தொகைகளையும், பன்னாட்டு நாணய நிதியின் கடனையும் கொண்டே மைய வங்கிகள் நெருக்கடிகளைச் சமாளித்தன. அமெரிக்கப் பெடரல் ரிசர்வ் முறை 14 மைய வங்கிகளிடமும், பன்னாட்டுக் கணக்குத் தீர்வக வங்கியிடமும், 4830 மிலியன் டாலர் தொகைகளைப் பரிவர்த்தனை ஒப்பந்த முறையில் பெற்றது. ஸ்டெர்லிங் பவுனை விட்டு விலகும் முறையில் ஊக வாணிகம் நடைபெறும்போது ஐரோப்பாவில் டாலரின் மாற்று வீதம் (ஐரோப்பியச் செலாவணிகளுடன்) சரிந்தது. இங்கிலாந்து தன் காப்பு நிதியை இழந்தபோது ஒப்பந்தங்களைக் கொண்டு காப்பு நிதியைப் புனரமைத்தது; அதாவது பெடரல் ரிசர்விடமிருந்து தொகை பெற்றது. பெடரல் ரிசர்வ் முறை ஐரோப்பிய மைய வங்கிகளிடமும் பன்னாட்டுக் கணக்குத் தீர்வக வங்கியிடமிருந்தும் நிதி வசதி பெற்றது.[1]

சில விதிகளைக் கடைப்பிடித்தால் இவ்வொப்பந்தங்கள் பயனுள்ள முறையில் இயங்கும். முதன் முதலில் இவை அரசியல் உறவாக இல்லாமல் தொழில்நுட்ப வங்கி முறை உறவாக இருத்தல் வேண்டும். இரண்டாவதாக இவ்வேற்பாடுகள் குறுகிய காலக் கடன்களுக்கு ஏற்பாடு செய்ய வேண்டும், தற்காலிக இடர்ப்பாடுகளையும், ஊக வாணிகத்தையும் இவை களைய வேண்டும். மூன்றாவதாக வளர்ச்சி பெற்ற, தற்காலத்திய பண

[1] Federal Reserve Bulletin, June 1967, pp. 958-61.

மூலதன மார்க்கட்டுகளைக் கொண்டுள்ள மைய வங்கிகளே இவ்வொப்பந்தங்களைச் செய்து கொள்ள முடியும்.

அரசாங்கங்களிடையே கூட்டுறவு

அரசுகளின் கூட்டுறவை விட மைய வங்கிகளுடைய கூட்டுறவு நெகிழ்ச்சியுடையதாக இருப்பதால் சிறப்பாக இருக்கின்றது.[1] மைய வங்கிகள் தம்மிடையே இருக்க வேண்டிய கூட்டுறவு பற்றிய அடிப்படை விதிகளை ஏற்ற பின் ஒப்பந்தம் என்ற சடங்கு தேவை இல்லை. தனி மைய வங்கிகளோ அல்லது மைய வங்கித் தொகுதிகளோ பரஸ்பர ஒத்துழைப்பு பற்றிப் பேச்சு வார்த்தைகள் நடத்தலாம். இவ்வேற்பாடுகள் தொடர்ந்து நீடிக்கும் வகையில் அமையலாம்; முடிவு பெற வேண்டிய நாளைக் குறிப்பிடத் தேவையில்லை. புதுப்பிக்க வேண்டியதையும் தொடர்ந்து நீடிப்பதையும் ஏற்பாட்டில் குறிப்பிடலாம். ஒரே பலனைக் கொடுக்கக்கூடிய பல ஒப்பந்தங்கள் ஒன்ருக இயங்கலாம். ஒவ்வொன்றையும் பங்கு பெறும் மைய வங்கிகளின் செயல் முறைகளுக்கும், நிலைக்கும் ஏற்ற முறையில் அமைக்கலாம். பரஸ்பரக் கணக்குகளை வைத்துக்கொள்வது மைய வங்கிகளுடைய ஒப்பந்தங்களின் பொது நிபந்தனையாகலாம். இவை நாடுகள் அமல் செய்யும் கட்டுப்பாடுகளுக்கும், எதிர்கால நாணய மதிப்புக் குறைப்புக்கும் அப்பாற்பட்டிருக்கவேண்டும். இந்த நிபந்தனைகள் இருந்தாலும் இல்லாவிடினும், இத்தகைய ஒப்பந்தங்களில் பங்கு பெறும் மைய வங்கிகள் மற்ற நாட்டின் மைய வங்கிகளுடன் தொடர்பு கொள்ள வேண்டும்; தத்தம் முறைகள் பற்றிய செய்திப் பரிவர்த்தனை செய்து கொள்ளவேண்டும்; மற்றவைகளைப் பற்றிய கருத்துக் கூறும் உரிமையும் பெற்றிருக்க வேண்டும்.

தள்ளுபடி வீதம் பற்றிய ஒருங்கிணைப்பு

தள்ளுபடி வீதக் கொள்கையில் ஒற்றுமை இருப்பது மைய வங்கிகளின் ஒத்துழைப்புக்கு ஏற்றதாக இருக்குமென்றும் சில நூலாசிரியர்கள் கூறுகின்றனர். இது ஆழத்திலும் (depth), பரப்பிலும் இருத்தல் வேண்டுமென்றும் அவர்கள் கருதுகின்றனர்.[2] கொள்கையின் ஆழத்தைக் காணும்போது ஒற்றுமையை ஏற்படுத்த நாட்டின் கடன் கொள்கையையும் நிதிக் கொள்கையையும் இதற்கேற்றவாறு அமைக்கவேண்டும். இக் கோணத்திலிருந்து பார்க்கும்போது மைய வங்கியின் அலுவல்

[1] F. M. Tamagna op, cit. p. 126.

[2] See Alberto Ferrari 'Current Problems of Co-operation Between Central Banks', in Banca Nazionale del Lavoro, March 1961, pp. 82-84.

பொருளாதார வளர்ச்சித் துறைகளையும் ஊடுருவுகின்றது. சில விதி முறைகளை வகுக்கவேண்டும். இவைகளல்லாமல் பேச்சு வார்த்தைக்கும் செய்திப் பரிவர்த்தனைக்கும் ஆதாரம் இருக்காது. செலாவணிப் பொருளாதாரத் துறைகளில் உள்ள ஒத்துழைப்பைத் தவிர, வேறு வழிகளிலும் ஒத்துழைப்பு ஏற்படலாம். இதைப் பரப்பளவு ஒத்துழைப்பு என்பதுண்டு. அதாவது நிதித் துறையில் எடுக்கும் முடிவுகள் மற்ற நாடுகளின் நன்மையைப் பாதிக்காமல் தடுப்பதற்குக் கொள்கை இணைப்பு உதவலாம். இத்தகைய செலாவணிக் கொள்கை பழைய காலப் பொன் திட்டம் அல்லது தற்காலப் பன்னாட்டு நாணய நிதித் திட்டம் இயங்குவதாக அனுமானம் செய்துகொள்கின்றது. உள்நாட்டு, வெளிநாட்டு விளைவுகள் என்ற இருவகை விளைவுகளைத் தள்ளுபடி வீதம் ஏற்படுத்துகின்றது. இவ்விரு விளைவுகள் இருப்பதால் பல்வேறு நாடுகளின் தள்ளுபடி வீதங்களை ஒருங்கிணைத்தல் கடினம். உள்நாட்டுத் தேவைகளுக்கும் பன்னாட்டு முறை ஒத்துழைப்புக்கும் முரண்பாடு இருந்தால் இதை நீக்கி ஒன்றுக்குள் மற்றொன்றை அடக்குவது கடினம். எனவே, பரப்பளவு ஒத்துழைப்பிலேயே கவனம் செலுத்துவது நல்லதாகும். அதாவது குறுகிய காலக் கடன் தொகைகள் நாடு கடந்து செல்வதைத் தடை செய்யும் நோக்கத்துடன் செயல்படவேண்டும். ஒத்துழைப்புக்கு இவ்வளவு குறைவான வாய்ப்பு இருந்தபோதிலும், குறுகிய காலத் தொகைகள் பற்றிய தொலைநோக்குக் கொள்கையை மைய வங்கிகள் கொள்வது நன்மை பயக்கும். வட்டிவீத வேறுபாடுகளைக் கவனிக்காமல் குறுகிய காலத் தொகைகளின் இடப் பெயர்ச்சியின் உண்மையான காரணங்களைக் காண வேண்டும்.[1]

[1] Alberto Ferrari, op cit. p. 92.

# 15. அண்மையில் விடுதலையடைந்த வளர்ச்சியடையும் நாடுகளில் வர்த்தக வங்கி முறை

அண்மையில் விடுதலை பெற்ற ஆப்பிரிக்க ஆசிய நாடுகளில் இருந்த மைய வங்கி முறையில் அன்னிய நாட்டு வங்கிகளும், உள்நாட்டில் பதிவான சில தேசீய வங்கிகளும் இடம் பெற்றன. லிபியா போன்ற நாடுகளில் தேசீய வங்கிகளே இல்லை. சில தேசீய வங்கிகள் அன்னிய வங்கிகளின் (Expatriate Banks) கிளைகளாக இருந்தன. நாடு விடுதலையடைந்த பின்னர் இவைகளைத் தேசீயமயமாக்கினர். சில தேசீய வங்கிகள் முழுவதும் தேசீய உடைமையில் இல்லை. பெரும் பகுதியே அல்லது ஓரளவோதான் தேசீய உடைமையில் இருக்கின்றன. உதாரணமாக நைஜீரியாவில் உள்ள வட ஆப்பிரிக்க வங்கி (Bank of North Africa Ltd.), லகோஸ் வங்கி (Bank of Lagos Ltd.) இரண்டும் கலப்பு உடைமையில் இருக்கின்றன. பெரும்பாலான நாட்டு வங்கிகள் அரசின் ஆதரவுடன் தோன்றின. அரசினர் பங்குகளை வாங்கினர் அல்லது டெப்பாசிட்டு கொடுத்து உதவினர்.

அன்னிய வங்கிகள் பெரும்பாலும் தம் தலைமை அலுவலகங்களைத் தத்தம் நாடுகளில் கொண்டிருந்தன, ஆனால், சில சமயம் அவை வேறு அயல்நாட்டு நகரங்களில் நிறுவப்பெற்றன. ஆங்கிலேய குடியேற்று நாடுகளில் லண்டன் வங்கிகள் இருந்தன. இவை 1835 முதல் 1857 வரை சாசனம் பெற்றவை, பழைய இம்பீரியல் வங்கியின் வாரிசுகள்; தம் தலைமை அலுவலகங்களைக் கனடா, அமெரிக்கா, எகிப்து, இந்தியா நாடுகளில் கொண்டிருந்தன. முன்னர் பிரெஞ்சு, இத்தாலிய ஆட்சியிலிருந்த மொராக்கோ, ட்யூனிசியா, லிபியா நாடுகளில் இருந்த வங்கிகள் வேறு நாடுகளில் நிறுவப்பெற்றவை.

இந்திய ஏற்றுமதி, இறக்குமதித் தொழிலுக்கு நிதியுதவியளிப்பதற்காக நிறுவப்பெற்ற லண்டன் வங்கிகளை 'மாற்று வங்கிகள்' (exchange banks) என்றழைத்தனர். இவை பின்னர் பல கீழ்த்

திசை நாடுகளில் அலுவலகங்களை நிறுவின. 'The Chartered Bank of India, Australia and China' என்ற வங்கி மேற்கு போர்னியோவில் ஒரு கிளையை ஆரம்பித்தது. ஈஸ்டர்ன் பாங்கு (The Eastern Bank) மலேயாவிலும், மெர்க்கன்டைல் பாங்கு (Mercantile Bank) மொரிஷியாவிலும் கிளைகளை நிறுவின. இங்கிலாந்துக்கு வெளியே தலைமையலுவலகங்களைக் கொண்டுள்ள வங்கிகள் இரண்டாம் வகையைச் சேர்ந்தவை. இவைகளுள் உள்ள கனடிய வங்கிகள் மேற்கிந்தியத் தீவுகள், பிரிட்டிஷ் கயானா பிரிட்டிஷ் ஹோண்டுராஸ் முதலிய நாடுகளில் கிளைகளைக் கொண்டுள்ளன. 15 கிளைகளைக் கொண்டிருந்த கனடிய ராயல் வங்கியும் (The Royal Bank of Canada) 3 கிளைகள் உள்ள கனடிய வர்த்தக வங்கியும் (The Canadian Bank of Commerce) இவ்வினத்தைச் சேர்ந்தவை.[1] நைஜீரியாவில் இயங்கிய அன்னிய வங்கிகளுள் லண்டனில் தலைமை அலுவலகங்களைக் கொண்ட இரு ஆங்கில வங்கிகள் மட்டுமன்றி இரு அமெரிக்க வங்கிகளும், ஓர் அராபிய வங்கியும், ஓர் இந்திய வங்கியும், ஒரு பிரெஞ்சு வங்கியும் இருந்தன. 1894-ல் தோன்றிய மேற்கு ஆப்பிரிக்க வங்கியும் (Bank of West Africa), 1912-ல் தோன்றிய பார்க்லேஸ் வங்கியும் (Barclays Bank D. C. O.) ஆங்கிலேய நிறுவனங்கள். இவ்விரு வங்கிகளும் அன்னிய வங்கிகளும் ட்ரெவர் அறிக்கை (Trevor Report) (1951) தயாரன பொழுது கயானாவிலும் இயங்கின. மேற்காப்பிரிக்க வங்கி 11 கிளைகளைக் கொண்டிருந்தது. பார்க்லேஸ் வங்கி 7 கிளைகளுடன் செயல்பட்டது. இவை கோல்ட் கோஸ்ட்டில் (Gold Coast) வர்த்தக வங்கியின் பணிகளனைத்தையும் செய்து தொண்டாற்றின.[2] மற்ற அன்னிய வங்கிகளுள் ஆப்பிரிக்க யுனைடெட் வங்கியையும் (United Bank of Africa) நைஜீரியாவிலுள்ள பரினி வங்கியையும் (Barini Bank Ltd.) குறிப்பிடலாம். உலக வங்கிக் குழுவினர் (World Bank Commission) லிபியாவுக்கு அதன் விடுதலைக்கு முன் சென்றபோது அங்கு அன்னிய வங்கிகளே செயல்பட்டன. இவை அன்னிய நாட்டில் தலைமை அலுவலகங்களைக் கொண்டிருந்தன. அவைகளுடைய கண்காணிப்புக்குட்பட்டிருந்தன. இவைகளுள் 3 தலைமை அலுவலகங்களை இத்தாலியிலும், 2 இங்கிலாந்திலும், ஒன்று பிரான்சிலும், ஒன்று எகிப்திலும், ஒன்று ஜோர்டானிலும் கொண்டிருந்தன. இவை மட்டுமே லிபியாவில் தம் முதலையும், காப்புநிதியையும்

[1] Ida Greaves, Colonial Monetary Conditions (H.M.S.O.) 1953), ch. III.

[2] Report by Sir Cecil Trevor on Banking Conditions in the Gold Coast and on the Question of a Central Bank (Accra, 1951), para. 34.

கொண்டிருந்தன.[1] இதே போல் பகாமாஸ், பெர்முடா, பிரிட்டிஷ் ஹோண்டுராஸ், பிரிட்டிஷ் கயானாபோன்ற மேற்கிந்தியத் தீவுகளிலும் அன்னிய வங்கிகளே வர்த்தக வங்கிகளாக இயங்கின. பெர்முடா மட்டும் ஒரு விதி விலக்காக இருந்தது. அங்கிருந்த இரு நாட்டு வங்கிகளும்பெர்முடா வங்கியும் (Bank of Bermuda), Bank of N. T. Butterfield & Son Ltd., என்ற வங்கியும் லண்டனில் தலைமை அலுவலகங்களைக் கொள்ள வில்லை.[2]

பழைய குடியேற்று நாடுகளின் உள்நாட்டு உடைமையுள்ள வங்கிகள் வெளிநாடுகளில் கிளைகளைக் கொள்ளவில்லை. இவைகளுள் சில நீண்ட நாட்களுக்கு முன்பே தொடங்கப் பெற்றவை. மற்றவை விடுதலைக்குப்பின் அரசு ஆதரவுடன் தோன்றியவை. மால்ட்டாவின் தேசீய வங்கி (National Bank of Malta), சைப்ரஸ் வங்கி (Bank of Cyprus), மொரீஷியஸ் வர்த்தக வங்கி (Mauritius Commercial Bank) முதலியவை பழைய வங்கிகள்.

குடியேற்று நாடுகளில் ஒருவகை வங்கியைக் காண வேண்டும். இந்த வங்கிகள் முதன் முதலில் அன்னிய வங்கிகளின் கிளைகளாகவே இயங்கின. பின்னர் இவைகளை நாட்டுடைமையாக்கித் தேசீயச் சட்டத்திற்குட்படுத்தினர். ட்யூனிசியாவில் 5 வங்கிகள் பிரெஞ்சு நிறுவனங்களாக இருந்தன. இவைகளில் (Credit Lyonnaise Societe Generale) என்பவை விடுதலைக்குப்பின் நாட்டுடைமையாக்கப்பட்டன. மொராக்கோவில் 20 வர்த்தக வங்கிகள் அன்னிய வங்கிகளுடன் இணைந்திருந்தன. இவை இப்பொழுது தேசீய வங்கிகளாக இயங்குகின்றன. லிபியாவிலும் அன்னிய வங்கிகளை நாட்டுடைமையாக்கியுள்ளனர். 'Banco di Sicilia, Societe de Banque, என்ற வங்கிகள் நாட்டுடைமையான பிறகு 'Sahara Bank, Societe Africaine Banque' என்ற பெயர்களில் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன.

குடியேற்று நாடுகளில் நாட்டு வங்கிகளின் (indigenous banks) வரலாறு விடுதலைக்கு முன்பும் பின்னரும் ஒரு தோல்வித் தொகுப்பாகவே இருக்கின்றது. உதாரணமாக நைஜீரியாவில் 18 வங்கிகள் 1952-61-ல் தோன்றின. இவைகளுள் ஐந்தே

[1] Economic Development, Libya (I.B.R.D.), p. 381.

[2] Commonwealth Banking Systems (ed. W. F. Crick), contributed by D. G. Morgan, p. 465.

இன்றும் செயல்படுகின்றன.[1] பிராந்திய அரசுகளின் ஆதரவே அவை மூழ்காமலிருப்பதற்குக் காரணம். இவைகளுடைய செயல்கள் தாய்நாடுகளுக் குட்பட்டிருந்தன. கிழக்கு நைஜீரியாவில் இயங்கிய ஆப்பிரிக்கன் கான்டினென்டல் வங்கியும் (African Continental Bank), மேற்கு நைஜீரியாவில் இயங்கிய நாஷனல் நைஜீரிய வங்கியும் (National Bank of Nigeria) சிறந்த எடுத்துக் காட்டுகள். அரசுகள் முதலில் டெப்பாசிட்டுகள் அளித்து இவைகளை ஆதரித்தன, பின்னர் இத்தொகைகளைப் பங்கு மூலதனமாக மாற்றிவிட்டனர். அரசியலாரின் ஆதரவு நிலைமையை மேலும் மோசமாக்கிவிட்டது என்பது விமர்சனம் செய்யும் ஒருவரின் கருத்து.[2] ஆனால், நைஜீரிய மக்கள் இவ்வாதரவின் காரணமாக வங்கிகள் நாட்டு வளர்ச்சிக்குக் கணிசமாக உதவியுள்ளன என்று கருதுகின்றனர். கானு வர்த்தக வங்கியும் (The Ghana Commercial Bank) அரசாங்க ஆதரவு பெற்றது. இது உள்நாட்டு மக்களுக்கு மட்டுமே தொண்டு புரிகின்றது. விடுதலைக்குப்பின் பல ஆண்டுகள் கழிந்த போதிலும் இவ் வங்கி திருப்திகரமாகப் பணிபுரியவில்லை என்று பாராளுமன்றத்தில் கூறியுள்ளனர். வங்கியின் சட்டத்தை ஆங்கிலேய வல்லுநர்கள் உருவாக்கினர். உள்நாட்டு மக்களின் நன்மைக்கெதிராக அவர்கள் சட்டத்தை அமைத்துள்ளனர் என்று குறை காண்கின்றனர்.[3] கானு நாட்டு மக்களுடைய நன்மையைவிட அன்னியத் தொழிலகங்களுக்குச் சலுகை காட்டுவதையே அவர்கள் விரும்பினர் என்று குறை கூறினர். இவ்வங்கி பல துறைகளில் முன்னேற முடியாதபடி இருக்கின்றது.

**தேசிய வங்கிகள் ஏன் வேண்டும்?**

அண்மையில் விடுதலை பெற்ற நாடுகளில் தேசிய வங்கிகளை உருவாக்கக் காரணங்கள் இருக்கின்றன. விரைவில் வளரும் பொருளாதாரங்களுக்கு வேண்டிய நிதி முழுவதையும் அன்னிய வங்கிகள் அளிக்க முடியவில்லை. நைஜீரியா போன்ற ஆப்பிரிக்க நாடுகளில் அன்னிய வங்கிகள் பாரபட்சம் காட்டுகின்றன. உள்நாட்டுத் தொழிலதிபர்களுக்கும், வியாபாரிகளுக்கும் [கடன் பெருமானமுள்ளவர்களாக இருப்பினும் (credit worthy)] கடன் வசதிகள் அளிப்பதில்லை என்ற எண்ணம் உருவாயிற்று. நாட்டுப் பொருளாதாரங்கள் வளர்ச்சியடையும்போது அன்னிய வங்கிகள்

[1] The Bankers' Magazine, January 1965, O. Olakanpo, 'Commercial Banking in Nigeria' pp. 17-19.

[2] C. V. Brown, 'Govt. and Banking in Western Nigeria (1964), pp. 34-42.

[3] Commonwealth Banking Systems (ed. W. F. Crick), p. 146. Art by David Williams.

அளிக்கும் பணிகளின் பற்ருக்குறை வெளியாயிற்று. அன்னிய வங்கிகள் சில குறிப்பிட்ட தொழில்களையே செய்கின்றன. அரசியலாருக்குக் கடன் கொடுப்பதுடன் வெளி நாட்டார் தொழிலுக்கும் ஏற்றுமதிக்கும் அவை நிதியளித்தன. அது பன்ஞட்டு மாற்று வங்கி முறையாகவே இருந்தது. அவை விவசாயக் கச்சாப் பண்டங்களைக் கப்பல்களில் செலுத்துவதற்கும் பன்ஞட்டு முறையில் அதிகப் பற்றுக் கடனைக் கொடுப்பதற்கும் முதன்மை இடம் கொடுத்தன. அன்னியர் வசமிருந்த விவசாயச் சுரங்க வேலைகளுக்கு உதவி புரிவதிலேயே அவை பெரும் அக்கறை காட்டின. ஆனுல் மேலை நாட்டினர் மட்டுமே இவைகளுடைய வாடிக்கைக்காரராக இருந்தனர் என்று கூறுவது தவருகும். மலேயாவில் ஆங்கிலேய வங்கியரும் மற்றவர்களும் சீனத் தொழிலதிபர்களுக்கு உதவியளித்தனர். வாடிக்கையின் அளவையே அவர்கள் எடுத்துக் கொண்டனர். அவர்கள் எந் நாட்டவர் என்பதைக் காணவில்லை. முன்னர் குறிப்பிட்டபடி ஆப்பிரிக்க ஆசியக் குடியேற்று நாடுகளில் பொருளாதாரம் வளர்ந்தபோது கடன் முறையில் உள்ள குறைகள் அதிகரித்தன. நாட்டு வங்கிகள் மட்டுமல்லாமல் புதியதாக நாட்டுடைமையான வங்கிகளும், இங்கிலாந்துக்கு வெளியே நிறுவப்பெற்ற அன்னிய வங்கிகளும் இக் குறைகளைத் தீர்க்க முனைந்தன. ஆங்கிலேய நாட்டு (அன்னிய) வங்கிகள் முன்னர் கொண்டிருந்த முன்னுரிமை நிலை கணிசமாக பாதிக்கப்பட்டது. ஆனுல் இன்றும் ஆங்கிலேய நிறுவனங்கள் அண்மையில் விடுதலை பெற்ற குடியேற்று நாடுகளில் முதன்மையான இடத்தைப் பெற்றிருக்கின்றன. உதாரணமாக இன்றும் மலேயாவில் ஆங்கிலேயர் செய்யும் வங்கித் தொழில் மொத்தத்தில் 50% ஆக இருக்கின்றது.[1] நைஜீரியாவில் 2 அல்லது 3 அன்னிய வங்கிகள் வங்கித் தொழிலில் 50%தைத் தம் வசம் கொண்டிருக்கின்றன. 1964-65-ல் இவை 125 கிளைகளைக் கொண்டிருக்கின்றன.[2]

தேசீய வங்கிகள் நிதியுதவி கொடுப்பதோடல்லாமல், புதிய தொழில் முனைவோருக்கு நிதி பற்றிய ஆலோசனைகள் வழங்குகின்றன. வளரும் நாடுகளில் இதை அன்னிய வங்கிகள் செய்யா. பன்ஞட்டு வளர்ச்சி–புனரமைப்பு வங்கிக் குழு (I.B.R.D. Mission) நைஜீரியாவுக்கு விஜயம் செய்தபோது, நாட்டு வங்கித்தொழிலின் வளர்ச்சியைப் போற்றியது. இந்த நாடுகள் அரசியல் சுதந்திரம் பெற்ற பிறகு தத்தம் நாடுகளில் நாட்டு வங்கித் தொழிலை நிறுவிய

[1] Ibid. p. 151.

[2] See S. K. Basu, Central Banking in the Emerging Countries, p. 21.

தோடு மட்டுமல்லாமல் வளர்ச்சிக்கான நிதியை அளிப்பதற்கும் ஏற்பாடுகள் செய்தன. பழைய குடியேற்று நாடுகளில் வங்கித் தொழில் விரைவில் வளர்கின்றது; வங்கிகளின் முரிவு குறைவாக இருக்கின்றது. இவைகளையும் அவை கொடுக்கும் கடன்களையும் பார்க்கும்போது வங்கி முறை விரைவில் வளர்ந்து கொண்டிருக்கின்றது என்றும், பொருளாதார வளர்ச்சிக்கு உதவுகின்றது என்றும் கூறலாம். வளரும் நாடுகளில் வங்கி முறையில் பெரும் மாறுதல் ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றது; மாறி வரும் பொருளாதார. அரசியல் சூழ்நிலையில் நாட்டுக்கு நியாயம் ஏற்படுவதற்குத் தகுந்தவாறு புதிய உருவெடுத்துக் கொண்டிருக்கின்றது என்று கிழக்கு ஆப்பிரிக்க வர்த்தக வங்கிகளைப்பற்றிப் பேசும்பொழுது டாக்டர் ப்ளுமெந்தால் (Dr. Blumenthal) அவர்கள் குறிப்பிட்டார்.[1]

நாட்டு வங்கிகளின் அளவு, பணிகள் முதலியவைகளில் ஏராளமான வேறுபாடுகள் இருக்கின்றன. வர்த்தகத்திற்கும், தொழிலுக்கும் நிதியுதவியளிப்பதே அவைகளுடைய முதன்மையான நோக்கம். மலேசிய நாட்டில் அவை ஏராளமான செலுத்திய முதலையும், சேமிப்பையும், தவணை டெப்பாசிட்டுகளையும் கொண்டிருப்பதால் தவணைக் கடன்களைக் கொடுக்கக் கூடிய நிலையில் இருக்கின்றன. ஆயினும் தவணைக் கடன் கொடுக்கும் வழக்கம் பரவலாக இல்லை. இயந்திரங்கள் மீது நடுத்தரக் காலக் கடன் கொடுக்கும் வழக்கம் மலேசியாவில் பொதுவாக இல்லை. இத்தகைய கடன்கள் வங்கிகளுடைய மொத்த முதலீட்டு நிதியில் 15%க்கு உயர்வாக இல்லை. ஆயினும் ஒரு சில மலேசிய வங்கிகள் வீடுகளை அடைமானமாகக் கொண்டு 5—10 ஆண்டுக்காலக் கடனளிக்கின்றன. சூடான் நாட்டு வங்கிகளும் ஓரளவு நடுத்தர, நீண்டகாலக் கடன்களைக் கொடுக்கின்றன. இது 1965ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் ஓரளவு குறைந்தது. ஆனால் அப்பொழுதும் 14.8 சதவீதமாக இருந்தது.[2] ஒரு வங்கிமட்டும் டெப்பாசிட்டு வங்கித் தொழிலுடன் வளர்ச்சி வங்கித் தொழிலையும் இணைத்துச் செய்கின்றது. இவ்வாறு செய்யும் ட்யூனிசிய S. T. B என்னும் வங்கியை வளர்ச்சி—வர்த்தக வங்கி என்றழைக்கலாம்.[3]

[1] Report of Dr. Erwin Blumenthal of the Deutsthe Bundesbank, who was invited by the Thanganyik Government to examine the possibility of establishing an East African Central Bank.

[2] Report of the Bank of Sudan (6) for the year ending 31st December 1965, pp. 80-81.

[3] See S. K. Basu, Central Banking in the Emerging Countries, pp. 210-11.

பல வளரும் நாடுகளில் வங்கிகள் கொடுக்கும் கடன்களைப் பகுத்தாய்வு செய்தால் அவை தேசீயப் பொருளாதார நலனை மனத்தில்கொண்டு தம் கடன் கொள்கைகளை அமைக்கின்றன என்பது தெளிவாகும். பழைய நடைமுறைகளைத் தீவிரமாகப் பின்பற்றும் போக்கு மூன்றாவது (tertiary) பகுதியில் கவனம் செலுத்துவதாகும், வங்கிகள் இப் போக்கை விடுத்துள்ளன. தாராளமாகவும், பரவலாகவும் கடனுதவியளிப்பது அவை களுடைய கொள்கையின் இயல்பாகிவிட்டன. கடன்-டெப்பாசிட்டு விகிதம் மிகவும் உயர்ந்துவிட்டது. அவைகளுடைய நிதிக்குப் புதிய முதலீட்டு வாய்ப்புகள் ஏற்பட்டன என்பதை இது காட்டுகின்றது. லிபியாவில் இவ் விகிதம் 1964-ல் 98.56% ஆக உயர்ந்தது. 1965-ல் மேலும் உயர் மட்டத்திலேயே 76% ஆக இருந்தது. கடன் கொடுப்பது மூன்றாவது (tertiary) பகுதியிலிருந்து முதல், இரண்டாம் பகுதிகளுக்குத் திரும்பியுள்ளன. ஆனால் இன்றும் வங்கிக் கடனில் மூன்றும் பகுதி முக்கிய இடத்தைப் பெற்றிருக்கின்றது. மலேசியாவில் வர்த்தகப் பகுதியின் பங்கு 1960-ல் 42.1% ஆக இருந்தது. இது 1965-ல் 48.3% ஆக உயர்ந்தது. ஆனால் பெரும்பாலான நாடுகளில் இச் சதவீதம் அண்மை ஆண்டுகளில் குறைந்து வருகின்றது. பொறிவழியாக்கப் பகுதியின் பங்கு அதிகரித்துக்கொண்டு வருகின்றது. கானா நாட்டைப் பொறுத்த வரையிலாவது விவசாயப் பகுதியின் (முதல் பகுதி) கடன் பங்கு கணிசமாகப் பெருகிவிட்டது என்று கூறலாம். பின்வரும் அட்டவணை இப்போக்கைத் தெளிவாகக் காட்டுகிறது.[1]

**அண்மையில் விடுதலைபெற்ற சில வளரும் நாடுகளில் பலதரப்பட்ட நிதியமைப்பு**

ரொடிசியா — நயாசாலாந்தின் கூட்டரசு (Federation), மாலவி, ஜாம்பியா, ரொடிசியா என்ற மூன்று நாடுகளாகப் பிரிவதற்கு முன்பே நாடு வளர்ச்சியடைந்த பலதரப்பட்ட நிதியமைப்பைக் கொண்டிருந்தது. 1965-ல் தோன்றிய மைய வங்கியைத் தவிர பல நிதிநிலையங்கள் இருந்தன. இவை வங்கிகளாகவும் மற்ற நிதியகங்களாகவும் இருந்தன. வர்த்தக வங்கிகளும், தள்ளுபடி நிலையங்களும், வியாபாரிகளுடைய வங்கிகளும், வளர்ச்சி நிதி வங்கிகளும், தவணைக் கடன் நிலையங்களும் இருந்தன. பலதரப்பட்ட நிதிநிலையங்களின் தொண்டு வளரும் நாட்டுப் பொருளாதாரத்திற்குப் பேருதவியாக இருந்தது. ஆப்

[1] See Annual Reports of the Central Banks of Nigeria, Ghana, Libya and Malaysia, 1956-58.

பிரிக்காவின் வளரும் நாடுகளின் பழக்கத்திற்கு மாறுக முதல், இரண்டு பகுதிகள் பெற்ற கடன் மூன்றுவது பகுதியின் பங்குக்குச் சமமாகவோ அல்லது அதைவிட அதிகமாகவோ இருந்தது. விவசாயத்தின் பங்கு 1961-ல் 15·8%; 1964-ல் இது 20·7%. பொறிவழியாக்கப் பகுதியின் பங்கு 1961-ல் 25·6%; 1964-ல் இது 21·[illegible]%. பங்கீட்டுப் பகுதி 19.4% பங்கை 1961-ல் கொண்டிருந்தது. 1964-ல் இது 20·5% ஆக உயர்ந்தது.[1]

வங்கிக் கடனின் பங்கீடு—சதவீதத்தில்

கானு

| | 1961 | 1962 | 1964 |
|---|---|---|---|
| பொது வாத்தகம் | 37·5 | 57·1 | 24·8 |
| பொறிவழியாக்கம் | 3·2 | 2·3 | 4·6 |
| விவசாயம், கூட்டுத் தொழில், மீன் பிடித்தல் | 4.6 | 4·2 | 22·2 |

நைஜீரியா

| | 1958 | 1961 | 1962 | 1964 | 1965 |
|---|---|---|---|---|---|
| பொது வர்த்தகம் | 34·98 | 33·40 | 36·00 | 27·33 | 28·88 |
| பொறிவழியாக்கம் | 4·79 | 5·49 | 7·60 | 10·73 | 13·72 |
| விவசாயம் | 30·73 | 21·03 | 23·42 | 24·69 | 17·02 |

லிபியா

| | 1958 | 1963 | 1964 | 1965 |
|---|---|---|---|---|
| பொது வர்த்தகம் | 52·4 | 40·2 | 41·2 | 34·7 |
| பொறிவழியாக்கம் | — | 8·0 | 7·9 | 7·8 |
| விவசாயம் | 12·1 | 3·4 | 3·3 | 2·5 |

மலேசியா

| | 1961 | 1962 | 1963 | 1964 | 1965 |
|---|---|---|---|---|---|
| பொது வர்த்தகம் | 35·2 | 35·1 | 51·5 | 46·5 | 48·3 |
| பொறிவழியாக்கம் | 9·8 | 11·6 | 9·6 | 13·1 | 14·4 |
| விவசாயம் | 8·7 | 9·1 | 5·9 | 5·9 | 4·7 |

இப்பொழுது விடுதலையடைந்துள்ள பல நாடுகளில் நிதியமைப்பு நவீனமாக இருக்கின்றது. முன்னர் பிரெஞ்சுக் குடியேற்று நாடுகளாக இருந்த மொராக்கோ, ட்யூனிசியா என்ற நாடுகளில் வங்கிகளல்லாத நிதி நிலையங்கள் பலதரப்பட்டிருக்கின்றன. இப்பொழுது விடுதலையடைந்துள்ள பல காலனி நாடு

[1] Reports of the Reserve Bank of Rhodesia of Nayasaland, 1960-4.

களில் நிதி நிலையங்கள் மிக அதிக அளவு முன்னேறியுள்ளன. முன்னர் பிரெஞ்சு ஆதிக்கத்திலிருந்த மொராக்கோ, ட்யூனிசியா என்ற காலனி நாடுகளில் பண, மைய வங்கி முறைகள் பரவலாக அமைந்துள்ளன. சுதந்திரமடைந்தபின் அவை மைய வங்கிகளை மட்டும் அன்றி, விவசாய, வர்த்தக, தொழில் துறைகளின் கடன் தேவைகளைப் பூர்த்தி செய்யச் சிறப்பு நிலையங்களை அமைத்தன. மொராக்கோவின் B. N. D. E. ட்யூனிசியாவின் S. T. B. என்ற நிலையங்கள் பொருளாதாரத்தில் சிறப்பான இடம் பெற்றன. மொராக்கோவின் விவசாயக் கடன் வங்கியும் (1961) (The National Bank of Agricultural Credit), ட்யூனிசியாவின் தேசிய விவசாய வங்கியும் (1959) (The National Agricultural Bank) விவசாயத்துறைக்குக் கடன் கொடுப்பதற்காக அமைக்கப் பெற்றவை.[1] இங்கிலாந்து, அமெரிக்க, கனடா, ஆஸ்திரேலியா முதலிய வளர்ச்சி நிறைந்த நாடுகளில் இருப்பது போல் சில வளர்ச்சி குன்றிய நாடுகளில் தவணைக் கடன் நிலையங்களை நிறுவி நுகர்வோர் கடன் வழங்க ஏற்பாடு செய்துள்ளனர். தவணைக் கடன் துறையில் நைஜீரியாவில் 13 நிறுவனங்கள் (3 நிதியகங்கள் உள்பட) இயங்குகின்றன. நைஜீரியாவில் 1964-ல் நுகர்வோர் கடன் 14·5 மிலியன் பவுனுக இருந்தது. 1965-ல் இது 15·3 மிலியன் பவுனுக உயர்ந்தது. நிதி நிறுவனங்கள் அளித்த நுகர்வோர் கடன் இரு ஆண்டுகளிலும் 41·0% ஆகவும் 38·9% ஆகவும் இருந்தது. நுகர்வோர் கடன் பெருகியதால் அயல் நாடுகளிலிருந்து நிலையான நுகர்வோர் பண்டங்களை (durable consumer's goods) இறக்குமதி செய்தனர். இதனுல் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை பாதிக்கப்பட்டது. 1965-ல் தவணைக் கடனளிப்பைக் குறிப்பாகத் தவணைக் கடன் நிலையங்கள் தனியாருக்கும், நுகர்வோர் பண்ட இறக்குமதியாளருக்கும் கொடுக்கும் கடனின் ஆண்டுப் பெருக்கத்திற்கு உச்சவரம்பு கட்டினர்.[2]

**வளர்ச்சி குன்றிய நாடுகளில் அன்னிய வங்கிகளின் பிரதான இயல்புகள்**

அன்னிய வங்கிகள் பிணைந்த இயக்குநர் முறை மூலமும் (interlocking directorships) மூலதன உடைமை மூலமும் தம் தாயக வங்கி முறையுடன் தொடர்பு கொண்டும் இணைந்தும் இருந்தன. இதுவே அவைகளுடைய மிக முக்கிய இயல்பாகும்.

[1] See Economic and Financial Review, Central Bank of Nigeria, vol. 5. No. 1, June 1967, pp, 4-7.

[2] Ida Greaves, Colonial Monetary Conditions, (H.M.S.O., 1953).

பிரிட்டிஷ் குடியேற்று நாடுகளிலும் சார்புடைய நாடுகளிலும் (dependeries) ஆங்கிலேய நிறுவனங்களால் வங்கிகள் இயக்கப் பட்டன. வங்கித் தொழில் நடத்த இந்த நிறுவனங்கள் தம் கிளைகளை அமைத்தன. டொமினியன்களிலும், குடியேற்ற நாடுகளிலும் தொழில் நடத்துவதற்காகப் பார்கிளேஸ் வங்கி (The Ba.clays) கிளையை நிறுவியது. பார்கிளேஸ் வங்கியின் தலைவரும், துணைத் தலைவரும் இதன் தலைவர், துணைத் தலைவர் பதவி வகித்தனர். மேற்காப்பிரிக்க வங்கியின் (Bank of West Africa) முதலில் பெரும் பகுதியை, லாயட்ஸ் வங்கி, வெஸ் மினிஸ்டர் வங்கி, நாஷனல் ப்ரொவின்ஷியல் வங்கி முதலியவை வைத்திருந்தன. அவை அதன் இயக்குநர் குழுவில் இடம் பெற்றன. 'கிளைகளை அமைக்கும் முறை வெவ்வேறு இடங்களில் பரவலாக உள்ள இடங்களுக்கு ஒரு தொடர்புள்ள ஒருங்கிணைந்த வங்கி முறையை அளிக்கின்றது.' என்று பார்க்ளேஸ் (Barclays D.C.O.) வங்கியின் தலைவர் குறிப்பிட்டுள்ளார். இக் கிளைகள் பணி புரிந்த நாடுகளில் அவைகளுடைய செலுத்திய முதலும், காப்பு நிதியும் எவ் விதிக்கும் உட்பட்டிருக்க வேண்டிய கட்டாயம் முதன்முதலில் இல்லை. பொதுவாகக் கிளையின் மேலாளர்கள் கடன் கொடுக்கும்போது தலைமை அலுவலகத்தைக் கலக்காமல் தாமே எவ்வளவு தொகை கொடுக்கலாம் என்பதைத் தீர்மானிக்கலாம். ஆங்கில வங்கிகள் கிளைகள் மூலம் பல்வேறு பிராந்தியங்களில் செயல் புரிந்தன. இவ்விடங்களில் பருவகால ஏற்றத் தாழ்வுகள் ஏற்படுவது வழக்கம். வங்கியின் மையக் கணக்கு பாதிக்கப்படாமல் ஒரு நிலையில் இருந்த போதிலும் பற்பல பிராந்தியங்களில் ரொக்கத் தேவையும் அளிப்பும் நிலையைப் பொறுத்து மாறின. பல்வேறு கிளைகளிடையே உள்ள தொகைகளை மாற்றுவதன் மூலம் இத்தகைய நிலைமைகளைச் சமாளித்தனர். அவை பணி புரிந்த வெவ்வேறு பிராந்தியங்களில் ஏற்பட்ட பருவ கால ஏற்றத் தாழ்வுகளை நிதித் துறை ஒருங்கிணைப்பு மூலம் சமாளித்தனர். பருவகால உற்பத்தித் தேவைகளைக் குடியேற்று நாடுகளில் பூர்த்தி செய்வதற்கேற்ற முறையில் உயர்ந்தபட்ச நெகிழ்வுடன் கூடிய குறைவான அடக்கச் செலவுக் கொள்கையைக் கையாண்டனர்.

லண்டன் ஒரு முதன்மையான நிதிக்கேந்திரமானதால் இங்கிலாந்துக்கும் குடியேற்று நாடுகளுக்கும் இடையே உள்ள வர்த்தகத்திற்கு மட்டுமல்லாமல் குடியேற்று நாடுகளிடையே உள்ள வர்த்தகத்திற்கும் இந்நகரத்தின் மூலமே நிதி திரட்டினர். பிராந்திய உடைமையில் இருந்த வங்கிகள் தம் குடியேற்று நாடுகளில் தம் தொழிலுக்கு வேண்டிய குறைவான தொகைகளைத்

தம் நாட்டில் கொண்டிருந்தன. மீதியை அதாவது உபரியை லண்டனில் கொண்டிருந்தன. வெளி நாடுகளில் இயங்கிய ஆங்கில வங்கிகளின் கிளைகள் மட்டுமல்லாமல் குடியேற்று நாடுகளில் உள்ள வங்கிகளும் லண்டன் பண மார்க்கட்டை நம்பியிருந்தன. இவ்வாறு இங்கிலாந்தின் தலைமை வங்கி மற்றக் குடியேற்று நாடுகளுக்கு ஒரு 'மையக் காப்பு நிதி வங்கியாக'ப் பணி புரிந்தது. பின்னர் டொமினியன் நாடுகளும், குடியேற்று நாடுகளும் தத்தம் நாடுகளில் மைய வங்கிகளை நிறுவின. லண்டன் மார்க்கட்டுடன் நெருங்கிய தொடர்பு கொண்டன. குடியேற்று நாடுகள் விடுதலை பெற்ற பின் இருந்த நிலை 1930–40-ல் இருந்த அவைகளின் நிலையிலிருந்து வேறுபடவில்லை.

அண்மைக் காலம் வரை அன்னிய வங்கிகள் சட்டக் கட்டுப்பாடு இல்லாத இடங்களில், தம் தலைமையலுவலகங்களுள்ள நாடுகளுக்கும் பணி புரியும் நாடுகளுக்கும் இடையே வேறுபாடு காட்டவில்லை. தலைமையலுவலகங்களுள்ள இடங்களில் கிளைகள் எவ்வாறு இயங்கினவோ அதே முறையில் குடியேற்று நாட்டுக் கிளைகளும் இயங்கின. 'ஒரே பன்முட்டு அமைப்புகள் போல்' அவை இயங்கின என்று ஒரு விமர்சகர் குறிப்பிட்டுள்ளார். முன்னர் அவை குடியேற்று நாடுகளில் திரட்டிய டெப்பாசிட்டுகளை இங்கிலாந்தில் திரட்டிய டெப்பாசிட்டுகளிலிருந்து பிரித்துக் காட்டவில்லை.[1] இவை எல்லாவற்றையும் ஒரே இருப்பு நிலைக் குறிப்பில் (balance sheet) காட்டினர். அண்மைக் காலத்தில்தான் அவை வெவ்வேறு இடங்களில் திரட்டிய டெப்பாசிட்டுகளைப் பிரித்துக் காட்டுகின்றனர். இவ்வாறு திரட்டிய தொகைகளை லண்டனுக்கு அனுப்புவதற்கு முன் ஆங்காங்கு உள்ள நிலைமையை இப்பொழுது பரிசீலனை செய்கின்றனர். பிராந்திய முதலீட்டுக்குத் தேவையானதைவிட அதிகத் தொகையைத் திரட்டினர். ஆகையால் உபரியை அவர்கள் லண்டனுக்கு இலாபகரமான, செம்மையான முதலீட்டுக்காக அனுப்ப வேண்டும். அன்னிய வங்கிகள் தேசீயப் பொருளாதாரத் தேவைகளைக் கவனிக்கும்போது சுரங்க ஏற்றுமதித் தொழில்களுக்கே கடனுதவியளித்தன. இத்தொழில்கள் அவைகளுடைய தாயகத்தினர் உடைமையில் இருந்தன. வேறு முதலீட்டு வாய்ப்புகள் இல்லாமையால் இவ்வாறு செய்ய வேண்டியதாயிற்று. வங்கிகளின் தொண்டை வேண்டிய தொழில்கள் பெரும்பாலும் அன்னியர் வசம் இருந்தன. நாட்டுத் தொழில்கள் (indigenous industries) சிறு தொழில்களாக இருந்தன. இவை

[1] E. Nevin, Capital Funds for Underdeveloped Countries, p. 46

வங்கி வசதிகளை நாடவில்லை; அல்லது செம்மையான முறையில் நடத்த சாத்தியக் கூறுகள் இல்லாமையால் இவைகளுக்குக் கடன் உதவியளிக்க முடியாத நிலை இருந்தது.

மேலும் இவ்வன்னிய வங்கிகளின் கொள்கைகள் தாயகத்தில் வகுக்கப்பட்டன. அங்கு உள்ள பண மார்க்கட்டின் இயல்புக் கேற்ப இவை அமைந்திருந்தன. பிராந்தியங்களில் உள்ள வாடிக்கைக்காரர்களையும் இக் கொள்கையை ஒட்டியே இவை நடத்தின. தாயகத்தில் வாடிக்கைக்காரர்களின் பெருமானத்தையும் அவர்கள் கொடுக்கும் எடைமானங்களையும் மதிப்பிடும் முறையிலேயே மற்றப் பின் தங்கிய, வளர்ச்சி குன்றிய நாடுகளிலும் மதிப்பிட்டனர்.[1] இந் நாடுகளில் மூலதன மார்க்கட்டு குறுகியுள்ளதால், தொழிலகங்களுக்கு நீண்டகாலக் கடன்கள் தேவைப் பட்டன. தாயகத்தில் உள்ள பழக்கம் நீண்டகாலக் கடன் கொடுப்பது முரணாக இருக்கலாம். ஆனால் வளரும் நாடுகளில் உள்ள சிறு தொழில்கள் தம் சொந்த நிதியைக் கொண்டு தொழில் நடத்த முயல்கின்றன. அன்னிய வங்கிகளின் கொள்கை இவைகளுடைய தேவையைப் பூர்த்தி செய்வதற் கிடையூறாக இருக்கின்றது.

குடியேற்று நாடுகளில் அன்னிய வங்கிகள் இயங்குவதால் எழும் தீமைகளை எடுத்துரைப்பது ஒருதலைப்பட்ச கருத்தாகவும் திரித்துக் கூறக்கூடிய கூற்றாகவும் இருக்கும். வளர்ச்சி குன்றிய நாடுகளுக்கு இவ் வங்கிகளால் ஏற்படும் நன்மைகள் கணிசமாக இருக்கின்றன என்பதில் ஐயப்பாடுகள் எழ முடியாது. இந்த வங்கிகளின் தரம், செம்மையான தொழில் முறை, நிருவாகத் திறன், நாணயம் முதலியவை நாட்டு வங்கிகளுக்கு வழிகாட்டி யாகவும் சிறந்த பழக்கங்களை ஏற்படுத்த உதவியாகவும் இருந் தன; வங்கிப் பழக்கங்கள் வளருவதற்கும் உதவியாக இருந்தன; நாட்டு வங்கிகளின் வரலாற்றில் நாணயமும், திறமையும் குறை வாக இருந்த நாடுகளில் தரமுள்ள வங்கிமுறை உருவாகக் காரண மாகவும் இருந்தன. இப்பொழுது இந்த நாடுகள் சுதந்திரம் அடைந்து விட்டன; அரசியல் அந்தஸ்தையும் பெற்றுவிட்டன. ஆகையால் அன்னிய வங்கிகள் நாட்டுத் தொழிலகங்களைப் பரி வுடன் நோக்கித் தம் கொள்கைகளைச் சற்று மாற்றியமைத்துக் கொள்ள வேண்டும்; மாறி வரும் நிலைமையை அனுசரித்து நடந்துகொள்ள வேண்டும். இந்தப் போக்கின் அவசியத்தை அன்னிய வங்கிகள் உணர்ந்துள்ளன என்பது மகிழ்ச்சிக்குரியது. அண்மையில் நடந்த பார்க்லேஸ் வங்கியின் [Barclays Bank

[1] See E. Nevin, op cit. p. 49.

(D. C. & O )] ஆண்டுக் கூட்டத்தில் (3 ஜனவரி, 1968. அதன் தலைவர், டான்சேனிய மக்களுடன் வங்கி நல்லுறவு கொண்டிருக்கின்றது. அதன் அரசுடனும் நல்லுறவு கொண்டிருக்கின்றது என்றும் குறிப்பிட்டார். ஆனால், அன்னிய வங்கிகளைத் திடீரென்று வங்கிகளுடன் கலந்து பேசாமல் நாட்டுடைமையாக்க அவர்கள் முடிவு செய்தனர். 'எம் தொழிலை அரசு நாட்டுடைமையாக்க விரும்பினால் அதை நாங்கள் ஆட்சேபிக்க முடியாது'.[1] பல நண்பர்களுடன் இருந்த தொடர்பை வெட்டிக் கொள்வதும், பிராந்தியங்களில் அமர்த்தப்பட்ட அலுவலர்களுடன் உள்ள தொடர்பையும் நீக்கிக்கொள்வது மிகவும் கஷ்டமானதாகும், ஆனால், நாட்டுக்கு ஒரு நவீன வங்கிமுறை யளித்தது பற்றித் தலைவர் தன் மகிழ்ச்சியை அறிவித்தார்.

அன்னிய வங்கிகள் அயல் நாட்டினர் வசமுள்ள விவசாயத் துறைத் தொழில்களுக்கு மட்டும் கடனுதவியளிக்கும் பழக்கத்தை மாற்றிக் கொள்ள வேண்டும். தம் உபரித் தொகை முழுவதையும் அயல் நாட்டில் முதலீடு செய்வதையும் மாற்றிக் கொள்ள வேண்டும். எந்த நாடுகளில் அவை இயங்குகின்றனவோ அவைகளுடைய நன்மையைக் கருதி தம் கொள்கைகளை அமைத்துக் கொள்ள வேண்டும். அதாவது தலைமை அலுவலகக் கொள்கைகளுடன் பிராந்தீயக் கொள்கைகளை இணைக்காமல் அல்லது இருக்கும் இணைப்பை வெட்டிவிட வேண்டிய தருணம் வந்துவிட்டது.[2]

### அன்னிய வங்கிகள் மீது சட்டக் கட்டுப்பாடு

குடியேற்று நாடுகள் சுதந்திரம் அடைந்த பிறகு அன்னிய வங்கிகள் மீது சட்டக் கட்டுப்பாடுகள் கொணர்ந்தன. இக் கட்டுப்பாடுகள் சுதந்திரத்திற்கு முன் இல்லை. சுதந்திரம் பெற்ற பின் இந்த நாடுகள் தம் உரிமைகளையும் தேவைகளையும் உணர்ந்தன. அவைகளுடைய வர்த்தகத்தையும், தொழிலையும் பாதிக்கும் முறையில் அன்னிய வங்கிகள் செயல்படக்கூடும் என்று அவை உணர்ந்தன. எனவே, இந்த வங்கிகளை நாட்டுச் சட்ட திட்டங்களுக்குட்படுத்த அவை முற்பட்டன. அண்மையில் விடுதலை பெற்ற நாடுகள் இதற்காக இயற்றிய சட்டங்கள் ஏறத்தாழ ஒரே மாதிரி இருக்கின்றன. அவைகளை எடுத்துக் காட்ட லிபியா, மலேசியா நாட்டுச் சட்டங்களை இங்குக் காணலாம். லிபியாவிலும், மலேசியாவிலும், எல்லா வங்கிகளும்

[1] Statement of Frederic Suboham at the 42nd Ordinary General Meeting 3 January, 1968.

[2] Nevin, op cit. pp. 54–55.

உரிமம் (licence) பெற்று இயங்குகின்றன. லிபியாவில் தலைமை அலுவலகங்களைக் கொண்டுள்ள வங்கிகள் 2,50,000 லிபியப் பவுன்களைச் செலுத்திய முதலாகக் கொள்ள வேண்டும். வேறு நாடுகளில் தலைமையலுவலகங்களைக் கொண்டுள்ள வங்கிகள் லிபியாவுக்கு 5,00,000 லிபியப் பவுனைச் செலுத்தவேண்டும். தகுந்த அளவு லிபியக் கிளைக்கு அல்லது கிளைகளுக்கு முதலையும் அனுப்பவேண்டும் [54ஆவது விதி]. மலேசியக் கூட்டரசில் வங்கித் தொழிலுக்கான உரிமம் பெற ஓர் அன்னிய வங்கி 5 மிலியன் மலேசிய டாலரைச் (1958ஆம் ஆண்டின் வங்கி பற்றிய ஆணைப்படி) செலுத்திய முதலாகக் கொள்ளவேண்டும்; பிராந்தியச் சொத்துகள் 2 மிலியன் டாலரையும் கொள்ளவேண்டும். ஆனால், உள்நாட்டில் நிறுவப்பெற்ற வங்கி 2 மிலியன் டாலரைக் கொண்டிருந்தால் போதும்.[1] வெளி நாட்டில் தலைமை அலுவலகத்தைக் கொண்டுள்ள ஒவ்வொரு வங்கியும் உள்நாட்டினர் ஒருவரைப் பிராந்தியக் கிளை மேலாளராக அமர்த்த வேண்டும். இவர் லிபிய அரசுக்குப் பணிந்து நடக்கவேண்டும் [விதி 56]. செலுத்திய முதலுக்குச் சமமான தொகையை எப்பொழுதும் லிபியாவில் வைத்துக்கொள்ள வேண்டும். இதைத் தவிர லிபியாவில் தீர்க்கவேண்டிய பொறுப்புகளுக்குச் சமமான தொகையையும் எந்நேரத்திலும் கொண்டிருக்க வேண்டும். வெளி நாடுகளில் சட்டப்படி அவை கொள்ளக்கூடிய சொத்துகளை உள்நாட்டுச் சொத்தைக் கணக்கிடும்பொழுது சேர்த்துக்கொள்ளலாம். அன்னிய வங்கிகளும் நாட்டு வங்கிகளும் ஒரு காப்பு நிதியைக் கொள்ளவேண்டும். இது செலுத்திய முதலில் பாதியாகும்வரை இலாபத்தில் 5%ஐ இதில் சேர்க்கவேண்டும்.[2]

[1] Commonwealth Banking Systems (ed. W. Crick), p. 147. Contributed by David Williams of the International Monetary Fund.

[2] Banking Law, No. 4, February 1963 (Libya).

# 16. வர்த்தக வங்கிக் கோட்பாட்டின் செயல் முறைகளின் போக்குகள்

வர்த்தக வங்கிகள் குறுகியகாலப் பத்திரங்களை—சுயநிறைவு பெறும் தாள்களை (self-liquidating papers)—உற்பதிக் கடன் கொடுக்கும் வகையில் பெறவேண்டும். வங்கிகள் ரொக்க நிலையில் இருக்கவேண்டு மென்பது பழைய கோட்பாடு. இதன்படி பண்ட உற்பத்திக்கும், அவைகளுடைய இடப் பெயர்ச்சிக்கும் அவை நிதியுதவி யளிக்கலாம். உற்பத்தியாகும் பண்டங்கள் மீதும், கப்பல்களில் செல்லுபவை மீதும் கொடுக்கப் படும் இத்தகைய கடன்களை, இப் பண்ட விற்பனை முற்றுப் பெற்றவுடன் கிடைக்கும் தொகையைக் கொண்டு தீர்ப்பர். இத்தகைய கடன்கள் இவ்வாறு சுயதீர்வு பெறக்கூடியவை. இதைத்தான் உண்மை உண்டிக் கோட்பாடு (real bills doctrine) என்றழைப்பர். 19ஆவது நூற்றாண்டு முழுவதும் இக் கோட்பாடு பிரபலமாக இருந்தது. இன்னும் சில நூலாசிரியர்கள் இதை ஆதரிக்கின்றனர்.

### உண்மை உண்டிக் கோட்பாடு

'கைகூடாத தத்து ரீதியான அழகை' (flovour of unattainable moral beauty) இக் கோட்பாடு கொண்டிருக்கின்றது என்று திரு ஹார்ட் (Mr. Hart) கூறியுள்ளார். ஆனால், பல போலி வாதங்கள் இதில் மறைந்திருக்கின்றன. அண்மை ஆண்டுகளில் இக் கோட்பாடு பல கோணங்களிலிருந்து வரும் குற்றச்சாட்டு களுக்கு இலக்காகியுள்ளது. எல்லா வங்கிக் கடன்களும் உண்மை உண்டியல்களினால் கடனுதவி கிட்டாதவர்களுடைய வாங்கும் திறன் பாதிக்கப்படும். வங்கிப் பகுதியின் ஒரு சாரார் கடனைத் தீர்க்கவேண்டுமென்றால் மற்றொரு பகுதியினர் கடனுதவி பெற வேண்டும். சுய தீர்வுடைய கடன்கள் தொழிலைப் பாதிக்காமல் முழுமையாகத் தீரமுடியாது.[1] 'வங்கியர் கடன்கள் முழுவதும் தீரவேண்டும் என்ற தவறான எண்ணத்துடன், புதிய உண்டியல் களைப் பெறாமல் வாளாக இருந்தால், வாங்கும் சக்தி குறையும்,

[1] L. W. Mints, 'A History of Banking Doctrines' pp. 258-64.

விலைகள் சரியும். இதனால் கடன்பட்டோர் உண்டிகளைத் தீர்க்க இயலாத நிலையிலிருப்பர்' என்று பேராசிரியர் சேயர்ஸ் கூறுகின்றார்.[1]

மந்தகாலத்தில் பண்டங்களின் இடப்பெயர்ச்சி விறுவிறுப்பாக நடைபெறுவதில்லை, அல்லது விலைகள் குறைகின்றன; இழப்பு ஏற்படுகின்றது. இந்த நிலையில் விற்பனை முற்றுப் பெற்ற, உண்டியல்கள் முதிர்வடைந்து அவைகளுடைய தொகை முழுவதும் கொடுக்கப்படும் என்று நினைக்க இடமில்லை.

நடைமுறையில் பல நடவடிக்கைகள் (transactions) தக்க பாதுகாப்புடன் இருக்கின்றன. ஆனால், நடவடிக்கைகள் முற்றுப் பெற்றவுடன் கடன் வாங்கியோர் பணம் பெற்று, அதைக் கொண்டு கடனைத் தீர்க்கவல்ல நடவடிக்கைகள் என்று இவைகளைக் கூறமுடியாது. தனியாருக்குக் கொடுக்கும் துணையீட்டுக் கடனும், தரகர் பெறும் கடனும் சில்லறை முறையில் நிலையான பண்டங்களை விற்பனை செய்ய ஏற்பாடு செய்யும் நிறுவனங்கள் பெறும் கடனும், குறைவான அளவில் வாங்கும் தனிக் கடன்களும் அண்மை ஆண்டுகளில் பெருகிவிட்டன; இவைகளைப் பழைய விளக்கப்படி வர்த்தகக் கடன்கள் என்று கூறமுடியாது.

### விலையாக்கவல்ல சொத்துகள் பற்றிய கோட்பாடு (Shiftability Theory)

ஒரு வங்கி விலையாக்கவல்ல சொத்துகளைக் கொண்டிருப்பின் (இவை எத்தகையதாகவும் இருக்கலாம்) ரொக்க நிலையில் இருக்கின்றது என்பதை இக் காலத்தில் ஏற்கின்றனர். இது வங்கிகளின் ரொக்கநிலை பற்றிய இரண்டாவது முக்கியமான கோட்பாடாகும். கடன்கள் முதிர்வடைவது வங்கிகளின் ரொக்கநிலையை நிர்ணயிப்பதில்லை. சொத்துகளைத் திருப்திகரமான விலைகளில் விற்பனை செய்யக்கூடிய தன்மையே ரொக்க நிலையைத் தீர்மானிக்கின்றது. நெருக்கடி காலங்களில்கூட ஒரு வங்கி கடன்பெற இடமிருந்தால் சொத்துகளின் முதிர்வுபற்றிய பேச்சுக்கே இடமில்லை. முதிர்வுக்கு முன்னரே மற்ற வங்கிகளுக்கு விற்பனை செய்யக்கூடிய சொத்துகளைக் கணிசமாகக் கொண்டிருப்பதே முக்கியமாகும். எனவே சொத்துகளின் விற்பனைத் தகுதியே ரொக்க நிலையைத் தீர்மானிக்கும்.[2]

[1] R. S. Sayers, 'Modern Banking' (3rd Edn.), p. 230.

[2] H. G. Moulson 'Commercial Banking and Capital Formation III', in the Journal of Political Economy, 1918, p. 723.

இக் கோட்பாட்டை ஆதரிப்போர், சொத்துகள் திருப்தி கரமான விலைகளில் விற்பனையாகக் கூடியவையா என்பதை மட்டும் கணக்கிடாமல் இவைகளை மைய வங்கியிடம் விற்க முடியுமா என்பதையும் கவனிக்கின்றனர். நெருக்கடி காலத்தில் எல்லா வங்கிகளும் பாதிக்கப்படும், ஒரு வங்கி தன் சொத்துகளை மற்றொன்றுக்கு விற்பனை செய்வது கடினம். இந்த நிலையில் சொத்துகளை மைய வங்கிக்கு விற்பனை செய்யக்கூடிய தன்மை—இறுதியில் கடனுதவி யளிக்கும் நிலையத்திற்கு (lender of the last resort) விற்பனை செய்வது — ரொக்க நிலையை நிர்ணயம் செய்யும். 'உற்பத்தியைப் பாதிக்கா வண்ணம், மொத்தச் சொத்தைக் குறைக்கக்கூடிய அளவுக்கு ரொக்கநிலை பெற்றுள்ள வங்கிச் சொத்துகளே இல்லை' என்று எல். டபிள்யு. மிண்ட்ஸ் (L.W. Mints) கூறுகின்றார். 'குறிப்பிட்ட சொத்துகளை ஒரு மைய வங்கி ஏராளமான அளவில் ஏற்கத் தயாராக இருப்ப தால் அவை ரொக்க நிலையைப் பெறுகின்றன. வங்கிமுறைக் கேற்றதாக இருக்கின்றன.'[1] அதாவது மைய வங்கிகள் ஏற்க விதிக்கும் நிபந்தனைகள்தான் ரொக்கநிலையை நிர்ணயிக்கின்றன. மைய வங்கிகள் ஏற்பு பற்றிய கட்டுப்பாடுகள் முழுவதும் நீங்கும் முறையில் ஏற்ற விதிகளை அண்மைக் காலத்தில் தளர்த்தி யுள்ளனர். ஏற்புத் தன்மையைவிட ஒரு சொத்து சிறந்ததாக இருக்கின்றதா, அதை எல்லோரும் ஏற்பரா, என்பதுதான் ரொக்க நிலையைத் தீர்மானிக்கின்றது. எனவே, சொத்துகளின் விற்பனைத் தன்மை விரிவடைந்திருக்கின்றது. இதனால் வர்த்தக வங்கிகள் நீண்டகாலக் கடன் கொடுத்தலுக்குத் தயாராக இருக்கின்றன.

கூட்டுப் பங்குத் தொழில் முறை வளர்ந்ததால் பழைய காலத்திய ரொக்கநிலை பற்றிய கோட்பாடு முறை மறைந்து, விலையாக்கவல்ல தத்துவம் அண்மையில் பிரபலமாகிவிட்டது. கூட்டுப் பங்குத் தொழில் முறையில் பங்குகளையும், டிபஞ்சர் பத்திரங்களையும் வெளியிடலாம். இத்தகைய பத்திரங்கள் குறிப்பாக முதன்மையான நிறுவனங்களுடையவை சிறந்த மார்க் கட்டுகளைக் கொண்டிருக்கின்றன. இவைகளை வங்கிகள் வாங்கு கின்றன. இவை துணையீட்டுக் கடன்களுக்குப் பயன்படுகின்றன. இவ்வை சாதாரண காலங்களில் எளிதில் விற்பனையாகக் கூடியவை. ஆனால், இக்கோட்பாட்டில் குறைபாடுகளும் இருக்கின்றன. ஆனால், எல்லா நிறுவனங்களும் இவைகளை விற்பனை செய்ய முனையும்போது, மந்த காலத்தில் இவைகளை வாங்க யாரும் முன்

[1] L. W. Mints, op cit, p. 263.

வருவதில்லை. ரொக்கநிலை பெறுவதற்குச் செய்யவேண்டிய அடக்கச் செலவு அதிகரிக்கின்றது.

பழைய கோட்பாடும், விலையாக்கவல்ல கோட்பாடும் தத்தம் சிறப்புகளைக் கொண்டிருக்கின்றன. ஆனால், வங்கி முறை முழுவதற்கும் இவைகளுடைய நன்மைகளை மிகைப்படுத்தலாகாது. பழைய காலத்தில் தனி வங்கியின் ரொக்க நிலைக்கும், வங்கி முறையின் ரொக்க நிலைக்கும் உள்ள வேறுபாட்டைக் காணத் தவறினர். பழைய முறைப்படியோ அல்லது புதிய கோட்பாட்டை ஒட்டியோ அதாவது தன் சொத்துகளை விற்பனை செய்வது மூலமோ ஒரு வங்கி தன் ரொக்க நிலையை உயர்த்திக் கொள்ள முனைந்தால் இதனால் வேறு ஒரு வங்கியின் ரொக்கநிலை பாதிக்கப்படும். சாதாரண சமயத்திலோ அல்லது நெருக்கடி காலத்திலோ எல்லா வங்கிகளும் தம் கடன்கள் முழுவதையும் வசூல் செய்ய முடிவு செய்தால் இதனால் நாட்டுப் பொருளாதாரத்திற்குப் பேராபத்து ஏற்படும். தொழில் ஓர் அளவு கடனுக்குப் பொருந்தியவாறு அமைந்திருக்கின்றது. கடன் கொடுப்போருக்கும் வாங்குவோருக்கும் பெரிய இடர்ப்பாடுகள் ஏற்படாமல் இக் கடனைத் தீர்க்கமுடியாது.[1]

எதிர்பார்க்கும் வருமானக் கோட்பாடு

தொழிலகங்களின் நீண்டகால நடுத்தரக் காலத் தேவைகளைப் பூர்த்தி செய்யும் வகையில் அவைகளுக்குத் தவணைக் கடன்கள் கொடுப்பது அண்மைக் காலத்தில் நடைபெற்றுள்ள அமெரிக்க வங்கிமுறையின் வளர்ச்சியாகும். தவணைக் கடன் என்பது தொழிலகங்களுக்கு அவைகளுடைய தேவைக்கேற்பக் கொடுக்கப்படும் ஓராண்டு காலத்திற்குப்பின் கொடுக்கப்படும் கடனாகும். நிபந்தனைகளைப் பத்திரத்தில் குறிப்பிடுகின்றனர். தவணைக் காலம் ஓராண்டுக்கு மேற்பட்டதாக ஆனால் பொதுவாக, ஐந்தாண்டுகளுக்குட்பட்டிருக்கின்றது. எதிர்கால வருமானத்திலிருந்து தவணைக் காலத்திற்குள்ளேயே கடன்தொகை திருப்பிக் கொடுக்கப்படும். கடன் ஒப்பந்தத்தில் இரு சாராரும் ஏற்கும் நிபந்தனைகளைக் குறிப்பிடுவது வழக்கம்.

இக் கடன்களைப் பொதுவாக இயந்திரங்கள்மீதும் தளவாடங்கள்மீதும், பங்குகள், பத்திரங்கள்மீதும், ஓரளவு நிலையான சொத்துகள்மீதும் கொடுக்கின்றனர். அன்றாட இயங்கும் முதலுக்காகவும் (working capital) வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுப்

[1] C. F. 'The Theory and History of Banking', pp. 82-3.

பதற்காகவும், தளவாடங்களைப் பெருக்கவும் இக் கடன்களைக் கொடுக்கின்றனர். கடன் கொடுத்தவர் அடைமானப் பண்டங்களில் அக்கறை கொள்வதில்லை. கடன் வாங்கியவர் உட்பட்டிருக்கும் நிதி பற்றிய நிபந்தனைகளையும் மற்றவைகளையும் மிக முக்கியமானவை என்று கருதுகின்றனர். ஒவ்வொரு கடனுக்கும் தகுந்தவாறு நிபந்தனைகளை அமைக்கின்றனர். தவணை முடிவில் கடன் தொகையைத் திருப்ப இயலாவிடில் தவணைக் காலத்தை நீடிக்கவும் வழிவகுத்துள்ளனர். பெரும்பாலான தவணைக் கடன்கள் அடைமானமற்ற தவணைக் கடன்களாக இருக்கின்றன. ஒப்பந்தங்கள்மீது வாங்கக்கூடிய கடன்கள் 1930—40-ல் தவணைக் கடன்கள் அமெரிக்காவில் பிரபலமாயின. இதற்குப் பின் அமெரிக்க வங்கித் தொழிலில் தவணைக் கடன்கள் முக்கிய இடம் பெற்றன. 1941ஆம் ஆண்டின் மத்தியில் மொத்தக் கடன் எண்ணிக்கையில் 30 சதவீதம் தவணைக் கடனாக இருந்தது. மொத்தத் தொகையில் 40% தவணைக்கடனாக இருந்தது. 1946-ல் ஓராண்டுக்கு மேற்பட்ட தவணை கொண்ட கடன் எண்ணிக்கை 20 சதவீதமாக இருந்தது. $33\frac{1}{3}\%$ கடன் தொகை தவணைக் கடனாக இருந்தது.[1]

இத்தகைய தொழிலை வங்கிகள் நாடிச் செல்லவில்லை. வாடிக்கையர் தம் குறுகிய காலத் தவணைக் கடன்களை மீண்டும் புதுப்பிக்க விரும்பியபோது வங்கியர் இவைகளைத் தவணைக் கடன்களாக மாற்றலாம் என்று யோசனை கூறினர். புதிய பங்குகளை வெளியிட்டுப் பங்கு மார்க்கட்டில் இவைகளைக் கொண்டு நிதி திரட்டுவது சிக்கல் நிறைந்ததாகவும், அதிகச் செலவு பிடிக்கக் கூடியதாகவும் இருந்தது. பத்திரங்களை வாங்குவோரை அணுகுவதைவிட வங்கிகளைச் சுலபமாக அணுகலாம். குறுகிய கால 90 நாள் தவணைக் கடன்களுக்குப் பதிலாக நீண்ட காலத் தவணைக் கடன்களைக் குறைவான வட்டி வீதத்தில் வாங்கலாம். வங்கிகளுடைய உபரித் தொகைகள் கூடியபோது மேலும் குறுகிய காலக் கடன் தேவையும் குறைந்தது. இத்தகைய கடன்கள் ஒரு முதலீட்டு வாய்ப்பை அளித்தன. ஏற்பு விதிகள் (eligibility rules) தளர்ந்தன. நெருக்கடி காலங்களில் நீண்ட காலக் கடன் பத்திரங்கள் மீது அவை மைய வங்கியில் கடனுதவி வாங்கலாம். தவணைக் கடன்கள் பிரபலமாவதற்கு இதுவும் ஒரு காரணமாகும்.

அமெரிக்க வங்கிக் கோட்பாட்டின்படி, வங்கிகள் இயங்கும் முதலுக்குக் (working capital) குறுகிய காலக் கடன்களைக் கொடுக்

[1] D. Mc Halthonsena, 'Term lending to Business by Commercial Banks in 1946', in Federal Reserve Bulletin, May 1947, pp. 498—517.

கலாம். இவை ஆண்டுதோறும் தீர்ந்துவிட வேண்டும். தவணைக் கடன்கள் இக் கோட்பாட்டுக்கு முரணானதாகும். வங்கிக் கடன் தீரும் முறையிலிருந்து தவணைக் கடன் தீருவது முற்றிலும் வேறுபட்டிருந்தது. பழைய கோட்பாட்டின்படி கடன் வாங்குவோர் தம் பண்டங்களை விற்பனை செய்வதால் வங்கிக் கடன்கள் தீர்ந்துவிடும். விலையாக்க வல்ல சொத்துகள் பற்றிய கோட்பாட்டின்படி கடனை வேறு ஒருவருக்குத் திருப்புவதால் அது தீர்ந்துவிடும். ஆனால், தவணைக் கடன்கள் தீருவதற்குக் கடன் வாங்குவோரின் எதிர்பார்க்கும் வருமானம் உதவும். எனவே, எதிர்பார்க்கும் வருமானக் கோட்பாடு என்னும் வங்கிகளின் ரொக்க நிலை பற்றிய புதிய கோட்பாடொன்று உருவாகியுள்ளது. இக் கோட்பாடு அமெரிக்காவின் அனுபவத்தை ஒட்டி வளர்ந்துள்ளது. நுகர்வோர் நிலையான பண்டங்களை வாங்குவதற்காகப் பெறும் கடன்களும் இக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டது.[1] கடன் வாங்குவோர் தம் பண்ட விற்பனை மூலம் இக் கடன்களைத் தீர்க்க முடியாது. இவைகளை வெளி மார்க்கட்டுக்கோ அல்லது மைய வங்கிக்கோ மாற்றவும் முடியாது. கடன் வாங்குவோர் எதிர்பார்க்கும் வருமானத்தைக் கொண்டே இவைகளைத் தீர்க்க முடியும்.

எதிர்பார்க்கும் வருமானக் கோட்பாடு மற்ற இரு கோட்பாடுகளிலிருந்து வேறுபட்டிருக்கின்றது, விலையாக்கவல்ல சொத்துகள் பற்றிய கோட்பாட்டின்படி கடன் வாங்கியோரின் பொறுப்புத் தீரவேண்டுமானால் அது மற்ற வங்கிக்குச் செலுத்தப் படவேண்டும். பழைய கோட்பாட்டின்படி கடன் தீரவேண்டுமானால் பழைய நிபந்தனைகளையும் ஒப்பந்தத்தையும் நீடிக்க முடியாது. எதிர்பார்க்கும் வருமானக் கோட்பாட்டின்படி கடன் வாங்கியவர் சேமிப்பு மூலமும், தன் எதிர்கால வருமானத்தைக் கொண்டும் கடனைத் தீர்க்கவேண்டும்.

நீண்டகாலக் கடன்கள் எதிர்பார்க்கும் வருமானத்தைக் கொண்டு தீர்க்கப்பட வேண்டுமாகையால், வங்கிகள் பத்திர முதிர்வைப் புறக்கணிக்கலாமா, நெருக்கடி காலத்தில் கடன்களை மைய வங்கிகளுக்கு மாற்றலாமா என்ற பிரச்சினைகள் எழுகின்றன. வங்கிகள் டெப்பாசிட்டர்களுக்குத் தம் கடமையை ஆற்றவேண்டும். பத்திர முதிர்வு முன்னர் இருந்ததைப்போல் அவ்வளவு முக்கியமல்ல. ஆனால், இதை அறவே புறக்கணிக்கவும் முடியாது, கடன் வாங்குவோருடைய திருப்பிச்

[1] H. V. Prochnow, 'Bank Liquidity and The New Doctrine of Anticipated Income', in Money and Economic Activity, ed. L. S. Ritters. pp. 57-9.

செலுத்தும் திறமை கடன் காலத்திஞல் பாதிக்கப்படுகின்றதா என்பதைக் காண ஒவ்வொரு கடனையும் பரிசீலனை செய்ய வேண்டும். தவணைக் காலத்தை நீடிப்பதால் கடன் வாங்குவோர் திவாலாவதற்கு இடம் இருக்கின்றதா என்பதை வங்கியர் பரிசீலனை செய்யவேண்டும். வாடிக்கையர் நிதிநிலை எதுகாறும் செம்மையாக இருக்கின்றது என்பதைக் காணவேண்டும். நல்ல வருமானம் ஈட்டும் ஒரு வாடிக்கையருக்குக் கொடுக்கும் மூன்ருண்டு காலத் தவணைக் கடன், தவணை முறையில் வட்டியுடன் திருப்பிக் கொடுக்கப்படும்; உயர்வட்டி பெறும்; இதே நபருக்குக் கொடுக்கப்படும் ஓராண்டுகாலக் கடனைவிட இது சிறந்ததாகலாம். நெடுங்காலத்திற்கு நிதி வசதி கிடைப்பதால் தவணைக் கடன், கடன் வாங்குவோருக்குப் பயனுள்ளதாக இருக்கும்.

# 17. வர்த்தக வங்கிகளின் மாறிவரும் பணிகள்

நாட்டுப் பொருளாதாரம் முதிர்வு பெற்று வரும்போதும், சிறப்பான நிதி நிலையங்கள் வளரும்போதும் பொருளாதாரத்தில் வங்கி முறை கொண்டுள்ள செல்வாக்கு குறைகின்றது. நீண்ட காலத்தில் வங்கிகளின் கடன்கள் பொருளாதாரத்தில் தன் முக்கியத்துவத்தை இழக்கின்றன. இது மேற் குறிப்பிட்டுள்ள கோட்பாட்டை விளக்குகின்றது என்று சிலர் குறிப்பிடுகின்றனர். வங்கிக் கடன்கள் பெற்றிருந்த இடம் அண்மைக் காலத்தில் தாழ்ந்துள்ளது. பொதுத்துறை வளர்ச்சி பெற்றுவிட்டது; அரசின் பணிகள் பெருகிவிட்டன; இடைநிலை நிதி நிலையங்கள் பல தோன்றியுள்ளன; கட்டடச் சங்கங்கள், தவணைக் கடன் முறை நிறுவனங்கள், தொழில்களுக்கு நிதியுதவி செய்யத் தோன்றியுள்ள சிறப்பான நிலையங்கள் முதலியவைகளும் கூட்டுப் பங்கு நிதி நிறுவனங்களின் மாறி வரும் பாணியும் நிலைமையை மாற்றிவிட்டன. எனவே, பெரும்பாலோர் சுய முயற்சியில் நிதி திரட்ட முனைகின்றனர். வங்கிகள் அளிக்கும் நிதி தன் முக்கியத்துவத்தை ஓரளவு இழந்துவிட்டது. நாட்டுடைமையாக்கப்பெற்ற தொழிலகங்கள் வங்கிகளை நிதியுதவிக்கு நாடுவதில்லை. தொழிலகங்கள் முன்போல் வங்கிகளைச் சார்ந்திருக்கவில்லை. தம் நிதித் தேவைகளைத் தாமே பூர்த்தி செய்துகொள்கின்றன. இங்கிலாந்தில் உள்ள நிறுவனங்களில் பாதி அதிகப் பற்றுக் கடனை வாங்குவதில்லை.[1] ஆனால், இவையனைத்தும் வங்கி முறையின் முக்கியத்துவம் குறைந்துவிட்டது என்பதைப் புலப்படுத்தவில்லை. தொழிலகங்கள் வங்கிகளைச் சார்ந்திருப்பதில் எத்தகைய நீண்ட கால மாற்றமும் ஏற்படவில்லை என்று திரு. டி. ஜே. ரோபர்ட்ஸ் (லண்டன் செக்குத் தீர்வக வங்கிகளின் தலைவர்) குறிப்பிட்டார்.[2] இவையனைத்தும் வர்த்தக வங்கி முறையில் அடிப்படை மாறுதல்கள் ஏற்படுகின்றன என்பதைக் காட்டுகின்றன. வங்கி முறை

[1] Radcliffe Committee Minutes of Evidence (oral) Questions 3932-3, put by Woodcock to Mr. D. G. Robarts, Chairman of the Committee of the London Clearing Banks, p. 290.

[2] Ibid., Q. 3929.

நலிவுறுவதை இவை காட்டவில்லை. வளர்ச்சியடைந்த நாடுகளிலும், வளரும் நாடுகளிலும், இங்கிலாந்து, ஆஸ்திரேலியா, இந்தியா போன்ற நாடுகளிலும் வங்கி முறை நாட்டில் நிகழும் மாறுதல்களுக்கேற்ப மாறி வருகின்றன; வலிமையும் பெற்றுள்ளன. பொருளாதாரத்தில் பெரும் மாறுதல்கள் நிகழ்கின்றன. வங்கி முறை இவைகளுக்கேற்றவாறு அமைந்துக் கொண்டிருக்கின்றது. இதன் விளைவாக வங்கிகளின் பணிகள் பரவலாக அமைந்துள்ளன. இன்று வர்த்தக வங்கிகள் மாறிவரும் செயல் முறைகளும், பரவலான செயல் பகுதிகளும், புதிய முயற்சிகளும் நிறைந்த புதிய தோற்றத்தை அளிக்கின்றன.

வங்கிப் பணிகளின் வகைப் பெருக்கம்

வங்கிப் பணிகளின் வகைகள் பெருகுவதால், அவை இடைக் கால, நீண்டகாலத் தவணைக் கடன்களைக் கொடுக்கின்றன. பங்குகள் வாங்குவதன் மூலம் தொழிலகங்களுக்கு நிதியுதவியளிக்கும் சிறப்பு நிதிநிலையங்களுக்கு அவை கடன் கொடுக்கின்றன. இங்கிலாந்தில், வங்கிகள் தொழில் முதலீட்டுக் கார்ப்பரேஷனுக்கும் (I. L. I. L.) தொழில் நிதிக் கார்ப்பரேஷன்களுக்கும் பங்குத் தொகை அளிக்கின்றன. தொழில் நிதிக் கார்ப்பரேஷனுக்கும் (I, F. C.) மாநில நிதிக் கார்ப்பரேஷன்களுக்கும் இந்திய வங்கிகள் கடன் கொடுக்கின்றன, இடைநிலை நிறுவனங்கள் மூலம் வர்த்தக வங்கிகள் தொழிலுக்குக் கடன் கொடுக்கின்றன. அமெரிக்க வங்கிகளைப்போல் நேரிடையாகவும் தொழிலுக்கும் வர்த்தகத்திற்கும் உதவியளிக்க முன் வருகின்றன. இரண்டாவது உலகப்போருக்குப்பின் வர்த்தக வங்கிகள் ஏராளமான உபரி ரொக்கத் தன்மை பெற்றிருந்தன. எனவே, வங்கிகளுடைய செயல் பகுதி விரிவடைவதும், தவணைமுறை வாங்கலுக்கு அவை நிதியளிக்கவேண்டுமென்பதும் பிரபலமாயிற்று. வர்த்தக வங்கிகள் பழைய முறையை விடுக்க வேண்டும், தொழிலுக்கு நீண்டகால உதவி யளிக்கவேண்டும். இதன்மூலம் இலாபமடையலாம் என்று இங்கிலாந்தில் லாயட்ஸ் வங்கியின் தலைவரான வாஷிங்கடன் பிரபுவும் அமெரிக்காவில் திரு. கோல்டன் வீசரும் (Mr. Golden Wisher) கூறினர். இக் கடன் மூலம் ஆபத்துகள் ஏற்படா என்றும் குறிப்பிட்டனர். வங்கியர் நிலையத் தலைவர் (Institute of Bankers) சர் ஜார்ஜ் எர்ஸ்கின் (Sir George Erskine) என்பவர் ஒரு படி மேலே சென்றார். வர்த்தக வங்கிகள் தம் செயல் பகுதிகளை விரிவாக்க

[1] 'Banking in a Developed Economy' by H. C. Coombs, Governor of the Bank of Australia, in Bankers, Magazine of Australia, January-February 1958, p. 146.

வேண்டும்; தொழிலகங்களுக்கு நீண்ட காலக் கடன்களை மட்டும் அளிக்காமல். நிரந்தர மூலதனத்தையும் அவை அளிக்க வேண்டும் என்றும் அவர் குறிப்பிட்டார். முதலிடுவோருக்கும், நிறுவனங்களுக்கும் வங்கிகள் கடன் கொடுக்கலாம்; புதிய பத்திரங்களை வாங்குவதற்கும் அவை நிதியளிக்கலாம்; டிபெஞ்சர் பத்திரங்களையும் முன்னுரிமைப் பங்குகளையும் அவை கொள்ளும் வகையில் முதலீட்டுக் கொள்கையை விரிவுபடுத்தலாம் என்று அவர் குறிப்பிட்டார். நாம் முன்னர் குறிப்பிட்டபடி அமெரிக்காவில் 1930-40-ல் தவணைக் கடன் கொடுக்கும் வழக்கத்தைத் தொடங்கி விட்டனர். இன்று அவர்கள் தொழிலில் தவணைக் கடன் முக்கிய இடம் பெற்றிருக்கின்றது. 1955ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் வர்த்தக வங்கிகளின் கடன்களில் இத்தகைய கடன்கள் 34% ஆக இருந்தது. 1946-ல் இருந்த அளவும் இதே யாகும். 1960—63-ல் 10 மிகப் பெரிய நியூயார்க் நகர வர்த்தக வங்கிகளின் தவணைக் கடன்கள் மொத்தத்தில் 55%, 57%, 58% ஆக இருந்தன. இன்று தொழிலகங்களுக்கு வேண்டிய முதலுக்காக வங்கிகள் கொடுக்கும் கடனும் முக்கியமாக இருக்கின்றன. மேற் குறிப்பிட்ட காலத்தில் இக் கடன்கள் 12 முதல் 13% வரை இருந்தன. இவை தளவாடங்களில் முதலிடுவதற்காகக் கொடுக்கப்பட்டவை. அமெரிக்காவில் காணும் உயர் விகிதத் தவணைக் கடன்களை மற்ற நாடுகளில் காண முடியாது. ஆனால், மற்ற நாடுகளிலும் இவ்விகிதம் கணிசமாக இருக்கின்றது. ஜெர்மானியக் கூட்டரசில் நீண்ட காலத் தவணைக் கடன்கள் 19-20% ஆக இருக்கின்றது. இடைக்கால, நீண்ட காலக் கடன்கள் 31.37% ஆக இருக்கின்றது. பிரான்சில் 7-18% ஆகவும், இத்தாலியில் 9-10%-ஆகவும் இருக்கின்றன. ஜப்பானில் இது 8-9% ஆக இருக்கின்றது. ஜெர்மனி, அமெரிக்காவைவிட மிகக் குறைவாக இருக்கின்றது. ஆனால், இது பிரெஞ்சு, இத்தாலிய நாட்டை ஒத்திருக்கின்றன.[1] தவணைக் காலங்கள் இந்த நாடுகளில் பல விதமாக இருக்கின்றன. அமெரிக்காவிலும், இத்தாலியிலும், இது ஓராண்டுக்கு மேல் இருக்கின்றது. பிரான்சில் 3 மாதத்திலிருந்து 5 ஆண்டுகள் வரை இருக்கின்றது. 6 மாதத்திலிருந்து ஜெர்மனியில் 4 ஆண்டுகளுக்குட்பட்டிருக்கின்றது. நீண்ட காலத் தவணைக்கடன் பிரான்சில் 5 அல்லது அதற்கு மேற்பட்ட ஆண்டு தவணை கொண்டிருக்கின்றது. ஜெர்மனியில் இதற்கு மேற்பட்டிருக்கின்றது. ஜப்பானில் தவணைக் கடன்கள் குறைவாக இருப்பதற்கு செலாவணி நிருவாகிகள் ஒரு விளக்கம் கொடுத்துள்ளனர். வங்கிகள் பெறும் தனியார் சேமிப்பில் பெரும்

[1] Jaochim Ahrendorf. 'Japanese Bank loans and Privase Fixed Investment', I.M.F. Staff Papers, March 1965.

பகுதியை நேரடியாக மூலதன மார்க்கட்டில் முதலீடு செய்ய வேண்டும். ஆஸ்திரேலியாவில் கொடுக்கப்படும் கடன்களில் தவணைக் கடன்கள் ஒரு குறைந்த பகுதியாகவே இருக்கின்றது. அமெரிக்கா, பிரான்சைப் போல் இல்லை. ஆனால், அங்குக் கூட இவை கணிசமாக இருக்கின்றன. 1964–65, 1965–66, 1966–67–ல் இவை 6.27%, 7·04%, 7·87% ஆக இருந்தன.[1] சூடான் ஒரு வளரும் நாடு. அங்கு 1958–ல் வங்கிக் கடன்களில் இடைக்கால, நீண்ட காலக் கடன்கள் 20·34% ஆக இருந்தது. 1965 ஆம் ஆண்டில் இது 14·77% ஆகக் குறைந்த போதிலும் இதையும் உயர்வான தொகையென்றே குறிப்பிட வேண்டும்.[2] இதற்கு மாறாக மற்றொரு வளரும் நாடாகிய மலேஷியாவில் வர்த்தக வங்கிகள் முன்னர்க் குறிப்பிட்டதுபோல இடைக்கால, நீண்ட காலக் கடன்களைத் தொழிலகங்களுக்குக் குறிப்பாக இயந்திரங்கள் மீது கொடுப்பதில்லை.[3] வளர்ச்சி குன்றிய நாடுகளில் அண்மையில் நிறைவேறிய சட்டப்படி வர்த்தக வங்கிகள் 3 ஆண்டுகளுக்குட்பட்ட தவணைக் கடன்களைக் கொடுக்கலாம். நிருவாகிகளுடைய சம்மதத்துடன் இதற்கும் உயர்வான தவணைக் கடன்களைக் கொடுக்கலாம். குவாடிமாலா, பராகுவே, டாமினிக்கக் குடியரசு நாடுகளும் இத்தகைய கடன்களைக் கொடுக்கலாம். இவைகளுடைய சட்டங்கள் இதற்கு இடம் கொடுக்கின்றது.

இங்கிலாந்தில் இன்று வர்த்தக வங்கிகளுக்குத் தவணைக் கடன்கள் புதிதல்ல. பெறுமானமுள்ள வர்த்தக நிறுவனங்களுக்கும் நடப்பு அதிகப் பற்றுக் கடனைவிட, தவணைக் கடன்களைக் கொடுப்பதே சிறந்ததென்று ராட்கிளிப் குழுவினர் குறிப்பிட்டுள்ளனர்.[4] ஒருகால அதிகப்பற்றுக் கடனுக்கு வசூல் செய்யும் வட்டி வீதத்தைவிட அதே காலத் தவணைக் கடனுக்குச் சற்று உயர்வான வட்டியை வசூல் செய்யலாம். அதிகப்பற்றுக் கடன் முறைப்படி அன்றாடம் எடுக்கும் தொகைக்குத்தான் கடன் வசூல் செய்யப்படும். அனுமதிக்கப்பட்ட தொகைக்கு வசூல் செய்யப்படாது. இந்த நிலையில் அதிகப்பற்றுக் கடன் தவணைக் கடனைவிட மலிவாகத் தோன்றலாம். ஆனால், கடன் நெருக்கம் (credit squeeze) போன்ற காலத்தில் அதிகப்பற்றுக் கடனை வங்கிகள் திரும்பக் கோரலாம். ஆனால், தவணைக் கடன்கள்

[1] Statistical Bulletin, Reserve Bank of Australia, Aug. 1967, p. 35.

[2] Report of the Bank of Sudan (6) for the year ending 31 December, 1965, pp 60-1.

[3] W. F. Crick (ed), Commonwealth Banking Systems, p. 151.

[4] Report of the Radcliffe Committee, paras 922 and 942.

இத்தகைய இடர்ப்பாடுகளை ஏற்படுத்தா. எனவே, பலர் இக் கடன்களை விரும்பலாம். ஆங்கிலேய வங்கிகள் சிறுதொழிலதிபர் களுக்கு ரூ. 10,000-க்கு மேற்படாத தவணைக் கடன்களைக் கொடுக்கின்றன. இவை இயந்திரங்கள் மீது கொடுக்கப்பட்டால் மூன்று முதல் 5 ஆண்டுகள்வரை தவணை கொண்டிருக்கின்றன. மற்றத் தொழில்களுக்காகக் கொடுக்கப்படும் கடன்கள் 10 ஆண்டுகளுக்கோ அல்லது மேற்பட்ட காலத்திற்கோ கொடுக்கப் படுகின்றது. வங்கி வீதத்தைவிட 3% உயர்வான வட்டியை—6%க்குட்பட்ட வீதமாக இருத்தல் வேண்டும்—இதற்கு வசூல் செய்கின்றனர். ஏற்றுமதிக் கடன் உறுதிகள்மீது (export credit guarantees) அவை கொடுக்கும் கடன் குறிப்பிடத்தக்க வளர்ச்சி யாகும், இயந்திரங்கள்மீது கோரும் இடைக்காலக் கடன்கள் புதியவை, போருக்குமுன் இதை யாரும் அறிந்ததில்லை. போருக்கு முன் லண்டன் நகரில் கடன் நிதி திரட்டுவதன் மூலம் நடுத்தரக் கடன்களை (இயந்திரங்கள்மீது பெறும் கடன்கள்) திரட்டினர். ஆனால், இன்று அயல் நாடுகளின் பொருளாதார வளர்ச்சிக்குத் தேவையாகும் தளவாடங்களைப் பெற, ஏற்றுமதிக் கடன் உறுதித் துறையின் உதவியுடன் கடன் தொகை பெறுகின்றனர். இக் கார்ப்பரேஷன் உறுதியளிக்கும் துறையில் வங்கிகள் நல்ல தொழில் நடத்துகின்றன. ஆனால், ஒவ்வொரு வங்கியும் தனித் தனியாக எவ்வளவு தொழில் செய்கின்றது என்பதை அவை பின்பற்றும் கொள்கையும், வாடிக்கையர் எத்தகைய தொழிலுக்கு இடம் கொடுக்கின்றனர் என்பதும் நிர்ணயிக்கின்றன. இத்தகைய தொழிலை வங்கிகள் பெருக்குவதற்கு இத்துறையில் வரும் தாள்களைச் செலாவணித் தன்மையுள்ளவையாகச் (negotiable) செய்திருக்கவேண்டும்.[1]

ஆனால், ஆங்கிலேய வங்கிகள் இந்தத் தொழிலைப் பெருக்க விரும்பவில்லை. திரு, ராபர்ட்ஸ் என்பவரும், பார்க்ளேஸ் வங்கியின் தலைவராகிய அந்தோணி ட்யூக்கும் (Antony Tuke) தவணைக் கடன்களை வங்கிக் கடன்களில் அதிகப்படுத்துவதை விரும்பவில்லை. 'எம் டெப்பாசிட்டுத் தொகையில் ஒரு பகுதி யையே நாங்கள் இத் தொழிலில் முதலீடு செய்ய முடியும்' என்று அவர்கள் குறிப்பிட்டனர்.[2] இத் துறையில் அதிக அளவு தொழில் நடத்த வாய்ப்புகள் இல்லை என்றும் ஆங்கில வங்கிகள் கருதுகின்றன. பழையகாலக் கடன்களைவிட இத் தவணைக் கடன்கள் உயர் வட்டியைப் பெறுகின்றன. பழைய கடனை

[1] Radcliffe Committee. Minutes of Oral Evidence.

[2] Ibid; Qs. 3950-4.

வங்கிகள் திரும்பிக் கோரலாம். பழைய முறையில் உள்ள குறைவான வட்டியின் சிக்கனத்தைப் புதிய முறையில் உள்ள வசதி (கடன்கள் திடீரென்று திரும்ப அழைக்கப்படா என்பது) ஈடு செய்யாது என்று கடன் வாங்குவோர் கருதுகின்றனர். சாதாரணமாக வங்கிகள் கடன்களைத் திடீரென்று திரும்பியழைப்பதில்லை. ஆண்டுதோறும் அவைகளைப் புதுப்பிக்கின்றனர். கேட்கும்பொழுது கடன்கள் திரும்பிக் கொடுக்கப்படவேண்டுமென்ற விதி இருந்தபோதிலும் நடைமுறையில் அவை புதுப்பிக்கப்படுகின்றன.

### ஆங்கிலேய வங்கிகளும் தவணை முறைக் கடனில் பொருள் வாங்க நிதியளித்தலும்

தற்காலத்தில் ஏற்பட்டுள்ள புதிய வளர்ச்சிகளுள் 1958ஆம் ஆண்டின் பிற்பகுதியில் ஆங்கிலேய வங்கிகள் தவணை முறைக் கடனில் பொருள் வாங்குவதற்கு நிதியளிப்பது குறிப்பிடத்தக்கது. இங்கிலாந்தில் வியாபாரிகளுடைய வங்கிகள் (merchant banks) இத்தகைய கடன் கொடுக்கத் தயங்கியதே கிடையாது. ஆனால், 1958ஆம் ஆண்டின் பிற்பகுதி வரை லண்டன் செக்குத் தீர்வக வங்கிகள் இத் தொழிலைச் செய்யவில்லை. 1958-ல் கடன் நெருக்கத்தைத் (credit squeeze) தளர்த்தினர். தவணை முறைக் கடனில் பொருள் வாங்குவதை, விரிவடையும் பொருளாதாரத்தில் நிலைப்படுத்த அரசு முனைந்தது. இந்த நிலையில் லண்டன் செக்குத் தீர்வக வங்கிகள் 11-ல் 9 இத் தொழிலை மேற்கொண்டன. கடன் நெருக்க காலத்தில் வங்கிகள் நிதியகங்களுக்கு அதிகப் பற்றுக் கடன் கொடுப்பது தடைபட்டிருந்தது. முதல் வெளியீட்டுக் கட்டுப்பாடு (capital issues control) அவை மூலதன மார்க்கட்டை அணுகுவதைத் தடை செய்தது. இந்த நிலையில் நிதியகங்கள் தம் நிதியையே நம்ப வேண்டியதாயிற்று. கவர்ச்சிகரமான வட்டி வீதம் அளித்துப் பொது மக்களிடம் டெப்பாசிட்டுத் தொகையை அவை வசூல் செய்தன. கடன் வாங்குவோர் வேறு வழியின்றி (அதிகாரிகளின் கட்டுப்பாடுகளின் காரணமாக) தவணை முறையில் பொருள் வாங்கும் நிலையங்களை அணுகிக் கடனுதவி கோர வேண்டியதாயிற்று. இத் தவணைத் தொழில் மிகவும் இலாபகரமாயிற்று. இவ்வாறு தீவிரக் கட்டுப்பாடுகளுக்குட்பட்ட வங்கிகளின் தொழில் குறையவே நிதியகங்கள் சிறந்த முறையில் வளர்ச்சியடைந்தன. தம் தொழில் கடன் நெருக்கத்தால் பாதிக்கப்பட்டமையால் வர்த்தக வங்கிகள் இழப்பு ஈடு கோரும் அல்லது தவணை முறைத் தொழிலில் பங்கு பெற அனுமதி கோரும் என்பது தெளிவாயிற்று. 1958ஆம் ஆண்டின் தொடக்கப் பகுதியில் சில வங்கிகள் தவணை முறைத் தொழிலில் அக்கறை காட்டின. இதை

நேரடியாகவோ அல்லது தவணை நிதியகங்களை வாங்குவதன் மூலமோ செய்ய முனைந்தன. கடன் நெருக்கம் தளர்ந்த பிறகு இத் தொழிலில் பங்கு பெற வங்கிகளுக்கு வாய்ப்பு ஏற்பட்டது. இதை நழுவவிடாமல் பயன்படுத்திக் கொண்டன. தவணைத் தொழிலகங்களுடன் தொடர்பு கொள்வதைப் பரஸ்பர நன்மை பயக்கக் கூடியதாக பல வங்கித் தலைவர்கள் கருதினர்.[1]

ஆங்கிலேய வங்கிகளுக்கும் தவணைத் தொழில் நிதியகங்களுக்கும் தொடர்பு வளர்ந்தது. இவைகள் உடைமையை வங்கிகள் பெற்றன; அல்லது பங்குகளைப் பெற்று இயக்குநர் அவையில் இடம் பெற்றன. எல்லாவகைத் தொழிலிலும் அனுபவம் பெற்ற நிதியகங்களையே இதற்குத் தேர்ந்தெடுத்தன. பழைய முறை வங்கித் தொழிலுடன் இப்புதிய தொழிலையும் செய்வதைப் பொதுவாக வங்கிகள் வரவேற்றன. இதற்கு வாய்ப்பு ஏற்பட்டபொழுது வங்கிகள் அதை மகிழ்ச்சியுடன் ஏற்றன.

### தவணைமுறைத் தொழிலும், வங்கித் தொழிலும்

ஆங்கில வங்கிகள் தவணைமுறைத் தொழிலில் இறங்கியதும் சில பிரச்சினைகள் தோன்றின. அமெரிக்காவில் இருப்பதுபோல் தவணைமுறைத் தொழிலில் வங்கிகள் நேரடியாக இறங்கலாம். இங்கிலாந்தில் தவணைமுறை நிதியகங்கள் பங்குத் தொகை மூலம் வங்கிகள் நிதியுதவி யளிக்கின்றன. ஒரு வங்கி முழுதும் தன் உடைமையில் உள்ள நிறுவனத்தின் மூலமோ அல்லது ஒரு சிறப்புத் துறைமூலமோ இத் தொழிலில் நேரடியாக ஈடுபடலாம். நேரடியாக இத் தொழிலைச் செய்வதைச் சில வங்கிகள் விரும்பலாம்; ஆகையால் இதை அறவே புறக்கணிக்க முடியாது. தவணை முறை நிதியகங்களுடன் வங்கிகள் கொள்ளக்கூடிய பல்வேறு வகைத் தொடர்புகளுள் எது மிகச் சிறந்தது என்பது தான் பிரச்சினை.

இதைப் பார்ப்பதற்குமுன் தவணைக்கடன் முறை எந்த அளவு வங்கித் தொழிலுக்குப் பொருத்தமானது என்பதைக் காணலாம். இருவகைத் தொழிலுக்கு மிடையே ஒரு நெருங்கிய தொடர்பு இருக்கின்றது; ஆனால், இரண்டும் ஒரேமாதிரியானவை யல்ல. ஒரு வியாபாரி தன் வாடிக்கையருக்குத் தவணைக் கடன் வசதி யளிக்க, வங்கியிடம் கடனுதவி பெறலாம். சில வகைகளில் இக் கடன் மற்ற வங்கிக் கடனிலிருந்து வேறுபடவில்லை. இத் தொழிலில் வங்கிகள் நேரடியாகத் தொடர்பு கொள்ளாதவரை

[1] Cf. Chairman, Lloyads Bank Ltd.

அவை தவணைமுறை நிதியகங்களுடன் ஒருவகைத் தொடர்பு கொள்ளும். இது மற்ற வங்கிகள் அதிகப்பற்றுக் கடன் பெறும் தவணை நிதியகங்களுடன் கொண்டிருக்கும் தொடர்பிலிருந்து வேறுபடவில்லை. தவணைமுறைத் தொழில் தானாகத்தீரும் கடன் பத்திரங்களை ஒத்திருக்கின்றது. வாடிக்கையர் தவணைகளில் செலுத்தும் தொகைகளைக் கொண்டு, நிதியகங்கள் வங்கிக் கடனைத் தீர்க்கலாம். ஆனால், தவணைமுறைத் தொழிலுக்கும் வங்கித் தொழிலுக்கும் ஓர் அடிப்படை வேறுபாடு இருக்கின்றது. வங்கியர் வாடிக்கையரின் பெறுமானத்தையும் நாணயத்தையும் கருதுகின்றனர், அவர்கள் அளிக்கும் துணையீட்டுப் பொருள்களுக்கு இரண்டாவது இடமே அளிக்கின்றனர். ஆனால், தவணைமுறை நிதியகத்தினர் துணையீட்டுப் பொருள்களுக்கே முதல் இடத்தையும் இரண்டாவது இடத்தையும் ஏன் முழு இடத்தையுமே அளிக்கின்றனர் என்று கூறலாம். தவணைமுறை நிதியகத் தொழிலில் தேர்ச்சிவேண்டும். வங்கியர் இத்தொழிலில் அனுபவம் பெறவில்லை; சிறப்புத் தேர்ச்சியும் பெறவில்லை. எனவே இதில் அனுபவமுள்ள நிலையங்கள் தொழில் நடத்துவதை வங்கிகள் அனுமதிக்கவேண்டும். அல்லது சிறப்புப் பயிற்சி பெற்றவர்கள் மூலம் இதற்கான ஒரு துறையை வங்கிகள் நிறுவ வேண்டும். பெரும்பாலான ஆங்கில வங்கியர் இரு தொழில்களை யும் வெவ்வேறென்று கருதி இவைகளைப் பிரித்து வைத்துள்ளனர். தவணைத் தொழில் நிதியகங்கள் வங்கிகளின் துணை நிறுவனங் களாக அவைகளின் ஆட்சியில் இயங்குவதை ஆங்கிலேய வங்கிகள் விரும்புகின்றன. தவணை முறை நிதியகத் தொழிலை வங்கிகள் மேற்கொள்ளுவது 'தம் பணியை ஒத்த தொழிலில் முதலிடுவதற்குச் சமம்' என்று திரு. ட்யூக் (Mr. Tuke) என்பவர் குறிப்பிட்டுள்ளார். 'ஆனல் வங்கியரே இதில் நேரடியாக ஈடுபடுவதில்லை. மளிகை வியாபாரம் எவ்வளவு வங்கித் தொழி லுக்குப் பொருத்தமற்றதோ அவ்வளவு தூரம் இதுவும் பொருத்த மற்றது.'

ஆங்கில முறைப்படி உள்ள தொடர்பு வங்கிகளுக்கும், தவணை முறை நிதியகங்களுக்கும் ஏதேனும் நன்மை பயக்குமா என்பது மற்றொரு பிரச்சினையாகும். அல்லது பொதுவாக நிதி முறைக்கு நன்மை பயக்குமா என்பது பிரச்சினை. வங்கிகளுடன் தொடர்பு கொண்ட தவணைமுறை நிதியகங்கள், மற்ற நிறுவனங்கள் மக்களிடம் கடனுதவியை நம்புவதைவிடக் குறைவாகவே அதைச் சார்ந்திருக்கின்றன. இதன் விளைவாகப் பொதுவாக வட்டி வீதங்கள் குறைய இடமிருக்கின்றது.[1]

[1] The Statist, 2 August 1958, pp. 157-60 Also 16 August 1958, pp. 237-8.

தொடர்பு கொண்டுள்ளதாய் வங்கியிடம் ஒரு துணை நிறுவனமாகிய தவணைமுறை நிதியகம் எளிய முறையில் நிதியுதவி பெற இயலாவிடினும், இத் தொடர்பைக் கொண்டு அது குறைவான வட்டியில் எளிய நிபந்தனைகளில் மக்களிடம் கடனுதவி பெறலாம். எனவே, அதன் வாடிக்கையருக்கு அது நல்ல முறையில் பணியாற்றலாம். எதனுடனும் தொடர்பில்லாதவர்களிடமிருந்து இத்தகைய நிலையங்கள் வாடிக்கையைப் பெறலாம். பணவீக்க காலத்தில் தவணைமுறை நிதியளிப்பதைக் கட்டுப்பாடு செய்ய நிதி நிருவாகிகள் விரும்புகின்றனர். வங்கிக் கடன் சிறந்த கட்டுப்பாடுகளுக்குட்பட்டிருக்கிறது என்பது தெளிவாகத் தெரிகின்றது. தவணைமுறைக் கடன் வங்கித் தொழிலாகி விட்டபடியால் இது மறைமுகமாக வங்கிக் கடன் கட்டுப்பாட்டுக் குட்படுகின்றது. வங்கித் தொழிலும் தவணை முறைக் கடனும் தொடர்பு கொண்டிருக்கும் விதத்தைச் செலாவணி நிருவாகிகள்; வரவேற்றுள்ளனர், இங்கிலாந்தின் தலைமை வங்கியின் ஆளுநர் வங்கியர் விருந்துரை ஒன்றில் வங்கியருக்கும், தவணை நிதியகங்களுக்கும் இடையே உள்ள உறவு பொது நன்மைக் குகந்தது என்று குறிப்பிட்டார். சிறப்புத் தேர்ச்சி பெற்ற நிலையங்கள் மூலம் தொடர்பு கொள்வதே, நேரடி நிருவாகத்தைவிடச் சிறந்தது என்று குறிப்பிட்டார்.

## தனி நபர்க் கடன்கள்

தனி நபர்க் கடன்கள் (personal loans) ஆங்கில வங்கி முறையின் மற்றொரு முக்கியமான வளர்ச்சியாகும். இரண்டாவது உலகப் போருக்குப் பின் பெரும் சமுதாய மாற்றங்கள் இங்கிலாந்தில் நிகழ்ந்துள்ளன. போருக்கு முன் இருந்த வருமானப் பங்கீட்டிலிருந்து போர்ப் பிற்காலத்தியப் பங்கீடு மாறுபட்டிருந்தது. நாட்டில் நிகழ்ந்த வருமான மறுபகிர்வு தொழிலாளர்களுக்குச் சாதகமாக இருந்தது. தொழிலாளர்கள் இருபது ஆண்டுகளுக்குமுன் வங்கிக் கணக்குகளைக் (bank account) கொள்ளவில்லை. ஆனால், இன்று பெரும்பாலானோர் வங்கிக் கணக்குகளைக் கொண்டிருக்கின்றனர். இவை அவர்களுக்குப் பயனுள்ளவையாக இருப்பதோடு மட்டுமல்லாமல் வங்கிகளுக்கும் லாபகரமாக இருக்கின்றன. தம்மிடம் நிலையான பண்டங்களை வாங்குவதற்கு வேண்டிய தொகை சேரும் வரை நுகர்வோர் காத்திருக்கவேண்டியதில்லை. இது தற்கால வளர்ச்சியின் விளைவாகும். இப் பண்டங்களை அனுபவித்துக் கொண்டே இவைகளுக்கான தொகையைச் செலுத்தலாம். நுகர்வோர் பண்ட விற்பனைக்கு வங்கிகள் முன்னர் நிதியுதவியளித்தன. ஆனால், மொத்த 'வியாபாரிகளே பயனடைந்தனர். சில்லறை

வியாபாரத்துக்கு நிதியுதவியளித்து, நுகர்வோருடன் நேரடித் தொடர்பு கொண்டு அவர்களுடைய நடவடிக்கைகள் அளிக்கும் இலாபத்தில் பங்கு பெறவில்லை.[1] வங்கிகளின் செயல் பகுதிகளில் பல புதிய நிறுவனங்கள் நுழைந்து அவைகளுடன் போட்டியிட்டன. கடன் சுருக்கம் அமலில் இருந்தபோது வங்கிகள் இப் போட்டியை ஒன்றும் செய்ய இயலாமல் பார்த்துக் கொண்டிருக்க வேண்டியதாயிற்று. ஆனால், அவை நிலைமையை கவனத்துடன் உற்று நோக்கிக் கொண்டிருந்தன. கடன் நெருக்கம் தளர்த்தப்பட்டவுடன், வங்கிகளுக்குச் சுதந்திரம் கிடைத்தது. இதைப் பயன்படுத்தி நுகர்வோர் கடன் கொடுக்க அவை முனைந்தன; இக் கடன் தேவையைப் பூர்த்தி செய்ய முன் வந்தன. அவை இரு நடவடிக்கைகளை எடுத்தன. முதன் முதலில் தவணை முறைக் கடன் தொழில் செய்யும் நிறுவனங்களின் பங்குகளை அவை வாங்கின. இரண்டாவதாகத் தனிக் கடன்களை அமெரிக்க வங்கிகள் போல் கொடுத்தன.

1958ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் முதல் தேதி இங்கிலாந்தில் மிட்லாந்து வங்கி (Midland Bank) தனிக் கடன் முறையைத் தொடங்கியது. ஆங்கில வங்கி முறையில் இது பெரும் வளர்ச்சியாகும். வங்கிகளின் வாடிக்கையர் செய்யக் கூடிய சில அசாதாரணமான செலவுகளுக்கு இக் கடன்கள் கொடுக்கப்படுகின்றன. மோட்டார் வண்டிகள், வீட்டுச் சாமான்கள், தொழில் தளவாடங்கள், வீடுகளைப் பழுது பார்ப்பதற்குரிய பொருள்கள், வீட்டு அலங்காரப் பண்டங்கள் முதலியவைகளை வாங்குவதற்கு இவை கொடுக்கப்படுகின்றன. இக் கடன்களின் குறைந்தபட்சத் தொகை £50. இதற்குமேல் உயரும் தொகை பத்தின் மடங்குகளாகவும் உயர்ந்தபட்சத் தொகை £500 ஆகவும் இருத்தல் வேண்டும். தவணைக்காலம் உயர்ந்தபட்சம் 2 ஆண்டுகள். கடன் தொகை மாதாந்திரத் தவணைகளில் திரும்பிக் கொடுக்கப்பட வேண்டும். ஆரம்பத்தில் வட்டி 5 சதவீதமாக இருந்தது. அவ்வப்போது விளம்பரம் மூலம் இதை மாற்றினர். வட்டித் தொகையை அசலுடன் கூட்டி மாதாந்திரத் தவணைத் தொகைகளுடன் சேர்த்துச் செலுத்த வேண்டும். வங்கி வீதத்துடன் ஒரு சிறு தொகையைச் சேர்த்து இக் கடனின் வட்டியைத் தீர்மானிக்கவில்லை, கொடுக்கப்படும் கடன் வாடிக்கையரின் வருமானத்தையும், அவர்பற்றிய (வங்கிகளின்) அறிவையும் பொறுத்திருக்கின்றது. நடப்புக்

[1] R. J. Clark, 'Three Months of Personal Loans' in Journal of the Institute of Bankers, August, 1958, p. 370.

கணக்குகளைக் (current deposits) கொண்டிருப்போருக்குத்தான் இச் சலுகை கொடுக்கப்பட்டது.[1]

மிட்லாந்து வங்கியும் மற்ற வங்கிகளும் கொடுத்த தனிக் கடன்கள் தவணை முறைக் கடனிலிருந்து வேறுபட்டிருந்தன. கடன் தொகை மூலம் வாடிக்கையர் வாங்கும் பண்டங்கள்மீது அவர்கள் காலத்திலோ அல்லது அவர்களுக்குப் பின்னே வங்கிகள் எவ்வித உரிமையையும் கொள்வதில்லை. வாடிக்கையர் மறைவுக்குப்பின் கடன் ரத்தாகிவிடும். இது தனிக் கடனின் சிறப்பு இயல்பு. அவர்கள் ஆயுள் காலத்தில் மட்டும் கடன் தொகைக்கு உயிர் உண்டு. மேலும் இக் கடனுக்குச் செலுத்தும் வட்டித் தொகை பற்றிய சான்றிதழைக் கொண்டு வரித் தள்ளுபடி (tax relief) பெறலாம். தவணைக் கடன் முறைக்கு இச் சலுகை கிடையாது. தவணை முறைக் கடனைவிட இதன் வட்டி வீதம் கவர்ச்சிகரமாக இருக்கின்றது.[2] மிட்லாந்து வங்கியும் க்ளைட்ஸ் டேல் அண்டு நார்த் ஆப் ஸ்காட்லாந்து வங்கியும் (Clydesdale and North of Scotland Bank), ஃபார்வர்ட் டிரஸ்ட் (Forward Trust) என்ற நிறுவனத்தின் முதல் முழுவதையும் பெற விரும்பின. இது இருவகைக் கடன்களுக்கும் உள்ள வேறுபாட்டைக் காட்டுகின்றது.

மிட்லாந்து வங்கி தொடங்கிய தனிக் கடன் முறையை வெஸ்ட்மின்ஸ்டர் வங்கியும் (Westminster Bank) மற்ற வங்கிகளும் பின்பற்றின. இத் தொழிலில் ஒரு திட்டவட்டமான பாணி உருவாகிக் கொண்டிருக்கின்றது. இக் கடன் தொகை சராசரி £ 150-லிருந்து £ 170 வரை இருக்க வேண்டுமென்ற வழக்கம் ஏற்பட்டுவிட்டது. இக் கடன்களை ஆய்வு செய்ததில் இவை பெரும்பாலும் மோட்டார் வண்டிகள் வாங்குவதற்கே கொடுக்கப்பட்டன என்பது புலனுகின்றது. மேஜை, நாற்காலி போன்றவை, வீட்டு அலங்காரம், வீடுகளைப் பழுது பார்த்தல் முதலிய மற்ற முக்கிய காரணங்களுக்கும் இத்தகைய கடன்களை வாங்கியுள்ளனர். சிறு தொழில்களுக்கும் தொழில் தளவாடங்களை வாங்குவதற்குமே பெரும்பாலும் பலர் கடன் வாங்கியுள்ளனர், தனிக் காரணங்களுக்காக அல்ல.[3] அயல் நாட்டுப் பயணங்களுக்காகவும் கடன் தொகைகளைக் கோரியுள்ளனர். தனிக் கடன்களின் காரணங்களை (எதற்காகக் கொடுக்கப்படலாம்

[1] The Statist, 30 August, 1958, p. 291. p. 300.

[2] Ibid, 24 July, 1959, p. 159.

[3] Ibid, 30 August, 1958, p. 284. Also Journal of the Institute of Bankers, December 1958, p. 371.

என்பவை) வங்கிகள் மிகவும் குறுக்கவில்லை, இப் புதிய திட்டங்களுக்கு வரவேற்புத் திருப்திகரமாக இருந்தது. ஏதேனும் பண்டங்களைப் பின்னணியில் கொள்ளாத கடன்கள் அயல் நாட்டுப் பயணம், கல்வி போன்றவை பற்றிய செலவுகளுக்காகக் கொடுக்கப்படும் கடன்கள் இங்கிலாந்திற்குப் புதியவை. இவை சாதாரணமாவதற்குச் சில காலம் செல்லும்.

தவணை விற்பனை முறையில் இங்கிலாந்திய வங்கிகள் மறைமுகமாகப் பங்கேற்கின்றன. தனிக் கடன்களை நேர்முகமாகக் கொடுக்கின்றன. இவை ஆங்கிலேயப் பழைய வங்கி முறையை மாற்றியமைத்துள்ளன. இனங்காண முடியாத அளவு இது மாறிவிட்டது. இத்தகைய தொழில்களும், இவைகளுடைய விளம்பரப் பாணிகளும் புதிய அம்சமுடையவை. ஆனால், அடிப்படை வங்கிக் கடன் முறை அடியோடு மாறவில்லை. ஆங்கில வங்கி முறையில் இவை புரட்சி ஏற்படுத்திவிட்டன என்று கூற முடியாது. புதிய சூழ்நிலைக் கேற்ற வளர்ச்சி என்றே இவைகளை அழைக்கவேண்டும்.

திரு. ஜோன்ஸ் அவர்களின் விலைகள், வருமானக் குழு

தம் முதன்மைப் பணி, குறுகியகாலக் கடன்களைக் கொடுப்பதும் சுய தீர்வுடைய கடன் பத்திரங்களைப் பெறுவதுமே ஆகும் என்றும் தவணைமுறை வாங்கலுக்குக் கடனுதவி யளிப்பதும், நீண்டகாலக் கடன் கொடுப்பதும் பொறுப்பல்ல என்றும் ஆங்கில வங்கிகள் கூறிவந்தன. புதிய கடன் பணிகளை அனுபவம் பெற்ற சிறப்பான நிறுவனங்களே ஏற்கவேண்டும் என்று அவை நம்பின. ஆகையால் இத்தகைய புதிய பணிகளை அவை பின்புற நுழைவாயில் வழியாக அனுமதித்தன. தவணைக் கடன் முறை நிறுவனங்கள் மூலமாகவும், ஏற்றுமதிக்கு நிதியுதவி யளிக்கும் நிறுவனங்கள் மூலமாகவும் இத்தகைய பணிகளை அவை மேற்கொண்டன.

அமெரிக்க வங்கிகள் பலவகைப் பணிகளைச் செய்கின்றன. இதேபோல் பிரிட்டிஷ் வர்த்தக வங்கிகள் பலவகை நிதியுதவிப் பணிகளை ஆற்ற முன்வரவேண்டும் என்று விலைகள், வருமானக் குழு பரிந்துரைத்தது. வர்த்தக வங்கிப் பணிகள் பற்றிய பழைய கருத்துகளிலிருந்து இக் குழுவின் கருத்துகள் வேறுபட்டிருந்தன. ஆங்கிலேயச் செக்குத் தீர்வக வங்கிகள் தம் பணிகள் பற்றிக் கொண்டிருந்த கருத்துகள் குறுகலாக இருந்தன. 'தற்காலத்திய தொழில்களின் தேவைகளுக்கேற்ப நவீனமுறை நிதிப்பணிகளை ஆற்றும் வகையில்' அவை தம் பணிகளைப் பரவ

லாக்கிக் கொள்ளவேண்டும் என்று இக்குழு கருதுகின்றது. பழைய தொழில்களிலிருந்து புதியவைகளைப் பிரித்து வைக்க வேண்டிய அவசியம் இல்லை. 'கூட்டு முறையில் இயங்குவதால் பரவலாகப் பல பணிகளைச் செய்ய இடம் இருக்கின்றது. தனித்து இயங்குவது இதைத் தடை செய்யும்.' தவணைமுறைக் கடன் போன்ற சில புதிய பணிகளைப் பழைய செக்குத் தீர்வகப் பணிகளுடன் சேர்த்துச் செய்வதால் சில செலவுகளை இருமுறை செய்ய வேண்டிய கட்டாயம் இல்லை. உதாரணமாக இருவகைத் தொழில்களுக்குக் கட்டங்கள் வேண்டாம். அடக்கச் செலவுகள் குறைகின்றன. வங்கிகளுக்கும் மற்ற நிதி நிலையங்களுக்கும் இடையே காட்டப்படும் பேதத்தை நீக்கவேண்டும். இதற்காக வங்கிக் கட்டுப்பாடுகளை இவைமீதும் அமலாக்கவேண்டும் என்று விலைகள், வருமானக் குழுவின் திரு. ஜோன்ஸ் அவர்கள் குறிப்பிட்டுள்ளார். இவைகளும் வங்கிகளைப்போலவே தம் டெப்பாசிட்டுகளில் ஒரு பகுதியைக் குறிப்பிட்ட ரொக்கத் தன்மையுடைய சொத்துகளாக வைத்துக்கொள்ளவேண்டும். இவைகளுடைய கடன் வாங்கும் திறனும் இந்த ரொக்க நிலைச் சொத்துகளுடன் தொடர்பு கொள்ள வேண்டும். எல்லா நிதி நிலையங்களும் வங்கிகளும், மற்றவையும் ஒரே முறைக் கட்டுப்பாடுகளுக்குட்பட வேண்டும் என்பது புதிய கருத்தாகும்.[1] திரு ஜோன்ஸ் அவர்களுடைய சிபாரிசை ஆங்கில வங்கிகள் எவ்வாறு வரவேற்கின்றன என்பதைக் காணுவது ருசிகரமாக இருக்கும். இப்புதிய முறை (திரு. ஜோன்ஸ் அவர்களுடைய சிபாரிசு) நடைமுறைப் பழக்கத்திலிருந்து பெரிதும் மாறுபட்டிருக்கின்றது.

### ஆஸ்திரேலிய வங்கிகளும் தவணை முறைக் கடன் தொழிலும்

இங்கிலாந்தைப் போலவே ஆஸ்திரேலியாவிலும் வங்கிகள் தவணை முறை நிறுவனங்களுடைய பங்குகளை வாங்கி அவைகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கின்றன. இது அண்மைக் காலத்தில் ஆஸ்திரேலிய வங்கி முறையின் முக்கிய இயல்பாகும். இத் தொழிலில் இவை ஈடுபடுவதற்கு வேறு காரணங்கள் உள. இரண்டாவது உலகப் போர் ஆரம்பமாகும் வரை நுகர்வோர் தவணைக்கடன் முறை இங்கிலாந்தைப் போலவே இருந்தது. ஆனால் போருக்குப் பிறகு இக்கடன் அளவு திடீரென்று பெருகியது. 1947-லிருந்து 1960 வரை இக் கடன் தொகை £ 13 மிலியனிலிருந்து £ 450 மிலியனுக்கு உயர்ந்தது. காமன்வெல்த் புள்ளி விவரக் குழுவின் (Commonwealth Bureau of Census and

[1] British Banking, A Special Survey' The Economist, 10 June 1967, p. XXXI. See National Board of Prices and Incomes, Report No 34. Bank Charges 1967. (Cmnd. 3292) p. 30.

Statistics) அறிக்கைப்படி இக் கடன் தொகை 1966-ல் 1008·9 மில்லியன் டாலராகவும் 1968-ல் 1381·8 மில்லியன் டாலராகவும் இருந்தது.[1] (இரு ஆஸ்திரேலிய டாலர்கள் ஓர் இங்கிலாந்தின் பவுனுக்குச் சமம்.) இங்கிலாந்தில் தவணை முறைக் கடன் நிறுவனங்கள் பெறும் நிதி மூலங்களிலிருந்து ஆஸ்திரேலிய நிதி மூலங்கள் வேறுபட்டிருக்கின்றன. ஆஸ்திரேலியாவில் 3 மாதத்திலிருந்து 20 ஆண்டுகளுக்குட்பட்ட டிபஞ்சர் பத்திர நிதி பிரபலமாக இருக்கின்றது. இது அடையாளமற்ற டெப்பாசிட்டுக்குக் குறிப்பாக வங்கிகளின் அதிகப் பற்றுக் கடனுக்கு (overdrafts) ஒரு பதிலியாக இருக்கின்றது. 30 நிதி நிலையங்களின் தொழிலுக்கான நிதி திரட்டல் பற்றிய விவரங்களை ஆய்வு செய்ததில் 1955-56-ல் இவைகளுடைய நிதியில் இடம் பெற்ற அதிகப் பற்றுக் கடன் 25% லிருந்து 15% ஆகவும் பின்னர் 13% ஆகவும் குறைந்தது என்பதும் டிபஞ்சர், டெப்பாசிட்டுத் தொகைகள் 28%, 33%, 40% என்று உயர்ந்தன என்பதும் புலனாயிற்று. மூலதன மார்க்கட்டில் பெற்ற தொகை அதிகரித்தது. வங்கிகளிடம் பெற்ற கடன் தொகை குறைந்தது. பணவீக்கத்தைக் கட்டுப்படுத்தும் நோக்கத்துடன் வங்கிக் கடனைக் குறைக்கவேண்டும் என்று மைய வங்கி உத்தரவிட்டதே இதற்குக் காரணமாகும். மைய வங்கியின் கட்டுப்பாட்டுக் கொள்கையின் விளைவாகத் தவணை முறைக் கடன் நிறுவனங்கள் மூலதன மார்க்கட்டில் கவர்ச்சிகரமான வட்டி வீதத்தில் டிபஞ்சர் பத்திரங்கள் மூலம் நிதி திரட்டவேண்டியதாயிற்று. தவணைமுறைக் கடன் தொழில் மற்றவைகளைவிட இலாபகரமாக இருந்ததால் இதைச் செய்த நிறுவனங்கள் கொடுத்த வட்டியைவிட உயர் வட்டியைக் கொடுத்தன. வர்த்தக வங்கிகள் புதிய சூழ்நிலைக்குத் தகுந்தவாறு நடந்துகொண்டன. தவணைமுறை நிறுவனங்களுடைய பங்குகளை வாங்கின. ஒரு வங்கி இத்தகைய நிறுவனமொன்றின் உடைமை முழுவதையும் பெற்றது.[2] இவைகளுக்கு வங்கிகள் கொடுத்த கடன் குறைந்த அளவுக்கு அவை இந் நிறுவனங்களுடைய உடைமையில் உரிமை பெற்றன. அநேகமாக எல்லா வங்கிகளும் தவணைமுறைக் கடன் நிறுவனங்களின் முதலில் பங்கு கொண்டிருந்தன. ஆஸ்திரேலிய வர்த்தக வங்கிகள் ஆறு உள. அவை இத்தகைய நிறுவனங்களின் சாதாரணப் பங்குகளை 14% முதல் 40-45% வரை கொண்டிருந்தன. ஒரு நிறுவனத்தின்

[1] Reserve Bank of Australia Statistical Bulletin, January, 1970, p. 199.

[2] The Changing Role of Trading Banks in the Australian Economy in Economic Record, April 1959, pp. 81-2.

பங்கு முழுவதையும் ஒரு வங்கி கொண்டிருந்தது.[1] திரு ஜோன்ஸ் அவர்களின் விலைகள், வருமானக் குழுவினருடைய கருத்துப்படி ஒரே வகை வங்கி இங்கிலாந்தில் எல்லாவிதப் பணிகளையும் அளிக்கவேண்டும். இக் கருத்தை ஒட்டியே ஆஸ்திரேலியா விலும் வங்கிகள் தவணைமுறை நிறுவனங்களுடைய உடைமை யைப் பெற்றன. அமெரிக்காவில் வங்கிகள் தவணைமுறைக் கடன் தொழிலுக்கென தனித் துறைகளை நிறுவின. ஆனல், ஆஸ்திரேலியாவில் வங்கிகள் ஆங்கில வழக்கத்தை ஒட்டி இத் தொழில் செய்யும் நிறுவனங்களுடைய உடைமையைப் பெற்றன. இரு காரணங்கள் இதற்கிருந்தன. அனுபவமில்லாத புதிய துறையில் அவை நுழையத் தயங்கின. மேலும் இத் தொழிலைச் செய்யும் மதிப்பிற்குரிய வாடிக்கையருடன் அவை போட்டியிட விரும்பவில்லை.[2] இத்தகைய தொடர்பு இரு சாராருக்கும் நன்மை பயக்கின்றது. ஆனல், நியூஜிலாந்தில் வர்த்தக வங்கிகளின் அலுவல்களைப் பரவலாக அமைக்கும் கொள்கையைப் பின்பற்றுகின்றனர். எனவே வர்த்தக வங்கிகள் தவணைமுறைத் தொழில் நடத்தும் நிறுவனங்களுடைய உடைமையைப் பெறுவதற்குத் தடை இருக்கின்றது.[3]

### வளர்ச்சிகுன்றிய நாடுகளில் தவணைக் கடன்கள்

பல வளர்ச்சிகுன்றிய நாடுகளில் வங்கிகள் நீண்டகால, நடுத்தரகாலத் தவணைக் கடன்கள் கொடுக்க அனுமதி பெற்றிருக்கின்றன. வங்கிச் சட்டங்கள் இதற்கிடம் கொடுப்பது குறிப்பிடத்தக்க வங்கி முறையின் இயல்பாகும். இந்த நாடுகளில் நீண்டகாலக் கடன் தேவைகள் எழுந்தன. முக்கியமாக விவசாயத் தேவைகளுக்கு இக் கடன்கள் வேண்டியிருந்தன. குறுகிய காலக் கடன் பத்திரங்களையே தாம் வாங்க வேண்டும் என்ற பழைய கோட்பாட்டைத் தளர்த்தி மேற்குறிப்பிட்ட தேவைகளையும் பூர்த்தி செய்யும் வகையில் வங்கிகள் நீண்ட காலக் கடன்களையும் கொடுக்க முனைந்தன. குவாடிமாலாவின் வர்த்தக வங்கிகள் ஓராண்டுக்கு மேற்பட்ட ஆனல் 3 ஆண்டு களுக்குட்பட்ட தவணைக் கடன்களை ஓரளவு கொடுக்கலாம். கச்சாப் பொருள்களை வாங்குவதற்கும் கால்நடைகள், விவசாயக் கருவிகள் முதலியவைகளையும், இடப்பெயர்ச்சியாகும் பொருள் களையும் வாங்குவதற்கும் இக் கடன் கொடுக்கலாம். இக் காரணங்களுக்கும் உற்பத்திக்கும் வாங்கும் இக் கடன்களுக்கு

[1] Ralph Harris and Arthur Seldon 'Hire Purchase in a Free Society', p. 164.

[2] Commonwealth Banking Systems, ed. W. A. Crick, pp. 102-3.

[3] Ibid, p. 138.

அசையும் பொருட்களையும் மற்ற துணையீட்டுப் பொருள்களையும் அடைமானமாகக் கொடுக்கலாம். இக் கடன்கள் டெப்பாசிட்டுத் தொகையில் ஒரு பகுதியாக இருக்கவேண்டும் அல்லது உபரித் தொகைக்கும் மூலதனத்திற்கும் உட்பட்டிருக்கவேண்டும் என்று செலாவணிக் குழு உத்தரவிடலாம். அசையாச் சொத்துகள் மீது கடன் கொடுப்பது தடை செய்யப்பட்டிருக்கின்றது. முதல் தரத் தொழிலகங்களின் டிபஞ்சர் பத்திரங்களையும் மற்றப் பத்திரங்களையும் அவை வாங்கலாம். ஆனால் டெப்பாசிட்டில் 20%க்கு மேற்படாத தொகையையே நிலத்திலும் 3 ஆண்டு களுக்கு மேற்பட்ட பத்திரங்களிலும் முதலீடு செய்யலாம்.[1] ஆனால் டாமினிக்கக் குடியரசின் சட்டப்படி வர்த்தக வங்கிகள் 3 ஆண்டுகளுக்கு மேற்பட்ட தவணைப் பத்திரங்களிலும் முதலீடு செய்யலாம். இது ஒரு வரம்பிற்குட்பட்டிருக்க வேண்டும். வங்கிகளின் மேலாளர் அனுமதியுடன்தான் இதைச் செய்யலாம். இவ்வனுமதியுடன் அசையாச் சொத்துகள்மீது கடன் கொடுக்க லாம். தனியார் வெளியிடும் கடன் பத்திரங்களையும் வாங்கலாம். டாமினிக்கக் குடியரசின் சட்டம் அரசு பத்திரங்களில் முதலீடு செய்வதை ஒரு வரம்புக்குட்படுத்துகிறது. நல்ல வளர்ச்சிபெற்ற பத்திர மார்க்கட்டு இல்லாமையால் இந்த முதலீடுகள் ஓரளவே ரொக்க நிலை பெற்றிருக்கின்றன என்று கருதுகின்றனர். கேட்பு டெப்பாசிட்டுகளாகப் பெற்ற தொகைகளை இத்தகைய பத்திரங் களில் முதலீடு செய்வதால் வங்கிகளின் ரொக்க நிலை பாதிக்கப் படும். ஆகையால் வங்கிகள் கொள்ளக்கூடிய இத்தகைய பத்திரங்களும், மற்ற நிறுவனங்களின் நிலையான வட்டிவீத மளிக்கவல்ல பொறுப்புகளும், ஓராண்டுக்கு மேற்பட்ட கடன் களும் ஒரு வரம்புக்குட்பட்டிருக்கவேண்டும் என்று சட்டம் கூறு கின்றது. வங்கியின் மொத்த மூலதனமும், காப்பு நிதியும், தவணை டெப்பாசிட்டுகளில் உள்ள சேமிப்புகளும், ஓராண் டுக்குள் திரும்பிப் பெற முடியாத தொகைகளும் இந்த வரம்பை நிர்ணயம் செய்கின்றன.[2] வங்கியின் ஆய்வாளர்களுடைய அனுமதி பெறாமல் பராகுவே நாட்டு வங்கிகள் 1944ஆம் ஆண்டுச் சட்டப்படி 3 ஆண்டுகளுக்கு மேற்பட்ட தவணைக் கடனைக் கொடுக்க முடியாது. தவணைக் கடன்கள் வங்கிகளின் மூலதனத்திற்கும் உபரித் தொகைகளுக்கும் உட்பட்டிருத்தல் வேண்டும்; அவை சேமிப்பு டெப்பாசிட்டில் 70%-க்கும் மற்றவைகளில் 75%-க்கும் உட்பட்டிருக்க வேண்டும்.[3]

[1] Arts. 41, and 43, Bank Law of Guatemala, 1946.

[2] If. C. Wallich and R. Triffin, Monetary and Banking Legislation of the Dominican Republic, 1947 p. 82.

[3] Art. 23, General Banking Legislation of Paraguay.

மந்தத்திற்குப் பிறகு நிறைவேறிய வங்கிச் சட்டத்தின் முக்கிய நோக்கம் 'கலப்பு வங்கி முறையை'க் (Mixed Banking) கட்டுப்படுத்துவதும் வங்கிகளுடைய ரொக்கத் தன்மையை வளர்ப்பதும் ஆகும். 1931ஆம் ஆண்டின் நெருக்கடி கலப்பு வங்கி முறையின் தீய விளைவுகளால் ஏற்பட்டது. இது பற்றிய நினைவுகளைச் சட்டமியற்றுவோர் கொண்டிருந்தனர். வர்த்தக வங்கி முறைக்கும் முதலீட்டு வங்கி முறைக்கும் இடையே பிரிவு ஏற்பட வேண்டும், மீண்டும் நெருக்கடி ஏற்படக் கூடாது என்று சட்டமியற்றுவோர் கருதினர். இவ்விரண்டு நோக்கங்களையும் மனத்தில் கொண்டு வங்கிகள் பங்குகளைக் கொள்ளக் கூடாது. மற்ற நிறுவனங்களில் பங்கு பெறக் கூடாது அல்லது அவைகளுடைய பங்குகள் வங்கியின் மூலதனத்தில் ஒரு பகுதிக்கு மேல் உயரக்கூடாது என்று சட்டமியற்றினர். முன் நாம் பார்த்தபடி அண்மைக்காலச் சட்டங்கள் பழைய வங்கி முறையிலிருந்து சற்று மாறுபட்டிருக்கின்றன. மந்தகாலக் கட்டுப்பாடுகளிலிருந்தும் வேறுபட்டிருக்கின்றன. தவணைக் கடன் முறையை அமெரிக்க வர்த்தக வங்கிகள் போர்ப் பிற்காலத்தில் பெருக்கின. மேற்குறிப்பிட்ட சட்டங்களில் இத்தகைய தொழிலுக்கு இடம் கொடுக்கப்படவில்லை. கொரிய வங்கிச் சட்டப்படி வங்கிகள் வர்த்தக வங்கித் தொழிலையும் நீண்டகாலக் கடன் கொடுக்கும் தொழிலையும் சேர்த்துச் செய்யலாம்.[1] குவாடிமாலாவின் வங்கிச் சட்டப்படி ஒரே வங்கி வர்த்தக வங்கித் தொழிலையும் அடைமான வங்கித் தொழிலையும் இணைத்துச் செய்யலாம். ஆனால் இரு தொழில்களையும் தனித்தனி துறைகள் செய்ய வேண்டும்.[2]

## இந்திய வங்கி முறையின் அமைப்பிலும் பணிகளிலும் மாறுதல்கள் : இந்திய வங்கிகளும் தவணைக் கடன்களும்

மற்ற நாட்டு வங்கிகளைப் போலவே இந்திய வங்கிகளும் அமைப்பிலும் பணிகளிலும் அடிப்படை மாறுதல்களைக் கொண்டிருக்கின்றன. தொழில்களுக்குத் தவணைக் கடன்கள் கொடுப்பது அவை செய்யும் பணிகளுள் மிக முக்கியமான ஒரு மாறுதலாகும். தவணைக் கடன்கள் மூலம் தொழிலகங்களுக்குத் தளவாடங்களுக்கான முதலைக் கொடுக்கவேண்டும் என்று மைய வங்கி வலியுறுத்துகின்றது. நாட்டின் வளரும் பொருளாதாரச் சூழ்நிலையில் வர்த்தக வங்கிகளும் இதனை உணர்ந்துள்ளன.

[1] The General Banking Act, Korea, Art. 19.

[2] Arts. 34 and 38, Banking Law of Guatemala, 1946.

அண்மைக் காலத்தில் இந்திய வங்கிகள் இதை நன்குணர்ந்து தவணைக் கடன் முறையில் அதிகம் பங்கு பெறுகின்றன.

இந்திய வங்கிகள் அண்மையில் ஆங்கில வங்கிகளைப்போலத் தாம் கொடுக்கும் குறுகிய காலக் கடன்களைச் 'சுழல் முறையில்' (rolling over) கொடுக்கின்றன. ஆண்டுதோறும் இவைகளைப் புதுப்பிப்பதால் இவை நடுத்தர, நீண்டகாலக் கடன்களாக மாறுகின்றன. திட்ட காலத்தில் தொழில் பெருக்கச் சூழ்நிலையில் நாட்டின் பெரும் தொழில்களுக்கு நிதியுதவி தேவைப்பட்டது. இந்த நிலையில் தவணைக் கடன்களை அவைகளுக்குக் கொடுக்கும் பிரச்சினை எழுந்தது. 'வளர்ச்சிக்கான நிதி முறையின் செயற்பகுதி விரிவடைகிறது. பலதரப்பட்டதாகவும் அமைகின்றது. இந்த நிலையில் செயற்பகுதிகளை விரிவாக்கித் தவணைக் கடன் தொழிலையும் மேற்கொள்வது பற்றிச் சிந்திக்குமாறு வர்த்தக வங்கிகளை அதிகாரிகள் கேட்டுக் கொண்டுள்ளனர்.'[1] இந்தத் தொழிலை இந்திய வங்கிகள் ஓரளவு மேற்கொள்ளலாம், தகுந்த பாதுகாப்புகளையும் இதற்காக எடுத்துக் கொள்ளலாம் என்பதில் ஐயமில்லை. பழைய காலத்திய இத் தொழிலை இந்திய வங்கிகள் செய்தபோது இடர்ப்பாடுகளும், மிகுந்த செலவும் ஏற்பட்டன. சர் ஜியார்ஜ் எர்ஸ்கின் (Sir George Erskine) அவர்கள் இங்கிலாந்தில் வங்கிகள் இத் தொழிலை ஏற்கவேண்டுமென்கிறார். அங்குச் செம்மையான வங்கி மரபுகள் வளர்ந்துள்ளன. இவை இல்லாத நம் நாட்டில் இத் தொழிலைப் பெரும் அளவில் வங்கிகள் மேற்கொள்ளவேண்டும் என்று பரிந்துரைப்பதற்கு நாம் தயங்க வேண்டியிருக்கிறது. ஆனால் திட்ட காலத்தில் நாட்டுப் பொருளாதாரம் பெருகி வருகின்றது. வங்கிகள் தனியார் துறை நிறுவனங்களுக்குக் கணிசமான முறையில் நிதியுதவி நல்க வேண்டும். இந் நிலையில் வங்கிகள் 'பழைய முறையிலிருந்து' ஓரளவு விடுபட்டு இத் தொழிலைச் செய்யலாம் என்று நாம் பரிந்துரைக்கின்றோம். திட்டமிட்ட வளர்ச்சிக்கும் தனியார் தொழில்களுக்கும் தற்காலத்தில் ஏராளமான நிதி தேவைப்படுகின்றது. வங்கிகள் தம் நிதியிலிருந்து ஓரளவை மட்டுமாவது இவைகளுக்குக் கொடுக்க வேண்டும். இந்த நிலையில் சில வர்த்தக வங்கிகள் தம் செயல்களைத் திருத்திக் கொள்ள முடியுமா, திட்டத்தில் முன்னுரிமை பெற்றுள்ள தொழில்களுக்கு நிதியுதவி நல்க முடியுமா என்பதைச் சிந்திக்கவேண்டும். வங்கிகளின் தவணை டெப்பாசிட்டுகள் மிகுதியடைகின்றன. இதில் ஒரு பகுதியைத்

[1] Dr. B. K. Madan (Executive Director, subsequently Deputy Governor, Reserve Bank of India), 'Banks and Medium-Term (Credit to Industry in Reserve Bank of India Bulletin' June 1957, pp. 521-7.

தவணைக்கடன்கள் கொடுக்கப் பயன்படுத்தலாம். இக் கடன்கள் தவணை டெப்பாசிட்டுத் தொகையில் ஒரு பகுதிக்குட்பட்டிருக்க வேண்டும். மூலதனம் காப்பு நிதியின், மொத்தம் டெப்பாசிட்டுகளுடன் எவ்வீதத் தொடர்பு கொண்டிருக்கின்றது. தேய்மானத்திற்கிலக்காகும் சொத்துகளுடன் எவ்வீதம் கொண்டிருக்கின்றது, மொத்த டெப்பாசிட்டில் சேமிப்பு டெப்பாசிட்டுகளும், தவணை டெப்பாசிட்டுகளும் எந்த வீதத்தில் இருக்கின்றன, ரொக்கநிலையற்ற சொத்துகளும் ரொக்கத் தன்மையுள்ளவையும் எவ்வளவு உள்ளன என்பதையும், [இவை இரண்டாம் நிலைப் (secondline) பாதுகாப்பில் உள்ளவை], சொத்துகளின் தவணைக்காலம் எவ்வாறு முதிர்வடைகின்றன என்பதையும் கவனிக்கவேண்டும். வங்கிகள் எக்காலத்திலும் கவனக் குறைவாக நடந்து கொள்ளக்கூடாது. இந்தியாவில் சில வர்த்தக வங்கிகள் தொழிலகத் தளவாடங்கள் மீது நீண்ட காலக் கடன்களை எவருமே காணாத முறையில் வழங்குகின்றன. இது கவலைக்குரிய வழக்கமாகும். சில வங்கிகள் தொழிலகங்களின் பங்குகளுக்கு உறுதியளிப்பதோடு மட்டுமல்லாமல் அவைகளுடைய இயந்திரங்கள் மீதும், கட்டடங்கள் மீதும் பன்னிரண்டு ஆண்டுகளுக்கும், அதற்கும் மேற்பட்டகாலத்திற்கும் தவணைக் கடன்கள் கொடுக்கின்றன. வர்த்தக வங்கிகள் அடைமானக் கடன்களைக் குறைந்த வட்டியில் கொடுப்பதால் இந்தியாவின் தொழில் நிதிக் கார்ப்பரேஷன் (Industrial Finance Corporation of India) நியாயமாகச் செய்யவேண்டிய தொழிலை இழக்கின்றது. இக் கார்ப்பரேஷன் தொழில் கடனில் அனுபவம் பெற்றுள்ளது.[1] வங்கிகள் தவணைக் கடன்களையும், உறுதியளிக்கும் தொழிலையும் ஓரளவுக்குமேல் (uuder writing) பெருக்கலாகாது என்பதை உணரும் காலம் வந்துவிட்டது. முன்னர் ரிசர்வ் வங்கி இத்தகைய தொழிலைப் பெருக்குமாறு மற்ற வங்கிகளைக் கேட்டுக்கொண்டது. ஆனால், அண்மைக் காலத்தில் வங்கிகள் ஏராளமான பணத்தை இத் தொழிலில் முடக்கலாகாது என்று ரிசர்வ் வங்கியின் ஆளுநர் குறிப்பிட்டுள்ளது வரவேற்கத் தக்கது.[2]

1962 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் ரிசர்வ் வங்கி, தொழிலகங்களுக்குத் தளவாடங்களைப் பெருக்கவும், புதுப்பிக்கவும் கொடுக்கப் பட்ட நடுத்தரத் தவணைக் கடன் பற்றிய ஒரு கணக்கெடுத்தது. சில வங்கிகள் அளித்த விவரப்படி (இவைகளுள் ரூ. 25 கோடிக்கு

[1] Long-terms loans have been sought to be repaid to the I.F.C. out of the bank finance provided for the purpose, The Hindu, 26 July 1960.

[2] Reserve Bank of India Bulletin, August 1964, pp 991–2.

மேல் அதிகமான டெப்பாசிட்டுகளைக் கொண்ட இந்த வங்கிகள் அனைத்தும் இடம் பெற்றன), 1962 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 27உ வங்கிகள் கொடுத்த நடுத்தரக் காலக் கடன்கள் ரூ. 78·6 கோடியாக இருந்தன. அவைகளுக்குச் சேர வேண்டிய கடன் தொகையில் 14% ஆக இருந்தது. இதில் தவணைக் கடன்கள் ரூ. 45·6 கோடியாக இருந்தன. மீதி ஆண்டுதோறும் புதுப்பிக்கப் படும் குறுகிய காலக் கடன்களாக இருந்தன.[1] ரிசர்வ் வங்கி மீள் நிதிக் கார்ப்பரேஷனை (Refinance Corporation) 1958-ல் தொடங்கியது. இது வர்த்தக வங்கிகள் தவணைக் கடன் கொடுப்பதை ஊக்குவிக்க வேண்டும். நீண்ட காலக் கடனின் இடைத்தர காலப் பகுதிக்கு இக் கார்ப்பரேஷன் மீள்நிதி வசதிகளைக் கொடுத்து வருகின்றது. (இடைத்தர காலத் தவணைக்கடன் 7 முதல் 10 ஆண்டுகளுக் குட்பட்டுள்ளது.) 1963ஆம் ஆண்டுவரை ரூ. 51.1 கோடியைக் கார்ப்பரேஷன் அனுமதித்தது. 1963ஆம் ஆண்டின் இறுதிக்குள் ரூ. 28.1 கோடியை வழங்கியது. அதற்குச் சேரவேண்டிய கடன் தொகை 1963ஆம் ஆண்டின் இறுதியில் ரூ. 24.6 கோடியாக இருந்தது.[2] தொழில் வளர்ச்சி தோன்றிய பிறகு மீள்நிதியளித்தல் அதன் பொறுப்பாயிற்று. 1971–72-ல் இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி கொடுத்த கடன் தொகை ரூ. 30·6 கோடியாக இருந்தது.[3] வங்கிக்குச் சேர வேண்டிய கடன் தொகை ஜூன் 1972-ல் ரூ. 73.9 கோடியாக இருந்தது.[4]

### இந்தியாவில் வங்கிகளும் தவணைக் கடன் முறை வாங்கலும் (hire purchase) : தனிக் கடன்கள்

இந்திய வங்கிகளுடைய பணிகளில் ஏற்பட்டுள்ள மற்றொரு மாறுதல் தவணைக் கடன் முறை வாங்கலுக்கு அவை நிதியளிப்பதாகும். அண்மையில் ஆங்கில வங்கிகள் இத் தொழிலில் இறங்கியதன் விளைவு இந்தியாவிலும் ஏற்பட்டது. இங்கிலாந்தின் வங்கிகளைப் போலவே இந்தியாவிலும் தவணை முறைத் தொழிலையும், தனிக் கடன் தொழிலையும் ஏற்கலாமா என்று பல வங்கிகள்

[1] Annual Report of the Trend and Progress of Banking in India during the year 1962, p. 33.

[2] Annual Report of the Trend and Progress of Banking in India during the year 1963, p. 21.

[3] Annual Report of the Trend and Progress of Banking in India during the year 1971-72, p. 65.

[4] Report of the Board of Directors, Industrial Development Bank of India for the year 1968-69, p. 17. Also Report on Currency and Finance, 1971-72, p. 147.

சிந்திக்கத் தொடங்கின.[1] சில இத் துறையில் செயல்பட ஆரம்பித்துவிட்டன.

வர்த்தக வங்கிகள் மறைமுகமாகத் தவணைக் கடன்களைக் கொடுப்பது இந்தியாவுக்குப் புதிதல்ல. சில சிறிய நிறுவனங்கள் தம் நிதியையும் வங்கிக் கடன்களையும் கொண்டே தொழில் நடத்தவேண்டும். சில வங்கிகள் இவைகளுக்குக் கடனுதவியளிக்கின்றன. மோட்டார் வண்டிகள், உற்பத்தித் தளவாடங்கள் போன்ற நிலையான பண்டங்களையும், நுகர்வோர் பண்டங்களையும் வாங்குவதற்குச் சில வங்கிகள் தனிக் கடன் கொடுக்கின்றன. விற்பனையாளர்கள் தம் வாடிக்கையர் எழுதிக் கொடுக்கும் பத்திரங்கள் வங்கியருக்குப் புறக் குறிப்புச் செய்து கடன் வாங்குவது வழக்கம். இந்தக் கேட்புப் பத்திரத்தின் மதிப்பில் (வாடிக்கையர் எழுதிக் கொடுக்கும் பத்திரம்) ஒரு பகுதியை ஒதுக்குவது வழக்கம். சில விற்பனையாளர்கள் துணையீட்டுப் பத்திரத்தையும் அளிக்கின்றனர். தவணை முறைத் தொழில் செய்யும் மோட்டார் வண்டி வியாபாரிகள் தம் வாகனங்களையும் அவைகளுடைய பகுதிகளையும், முதலீடுகளையும், பத்திரங்களையும், தவணைமுறை ஒப்பந்தங்களையும் (எதிர்கால, நிகழ்காலத்தியவை) அடைமானமாகக் காட்டிக் கடனுதவி பெறுகின்றனர்.[2] இந் நூலாசிரியர் கல்கத்தாவில் தவணைமுறைக் கடனில் பண்டங்கள் வாங்கும் முறை பற்றிய ஒரு கணக்கெடுத்தார். இப் பகுதியிலுள்ள வங்கிகள் இத் தொழிலிலும் தனிக் கடன் முறையிலும் அக்கறை கொள்ளவில்லை என்பதைக் கண்டார். இத்தகைய தொழிலில் வங்கிகள் அக்கறை கொள்ளாததற்குக் காரணம் இதில் உள்ள மிகுதியான ஆபத்தாகும். அடைமானமில்லாத தொழிலைப் பெருக்குவதை ரிசர்வ் வங்கி ஆட்சேபிக்கும் என்று சிலர் கருதினர். ஆனால் உண்மையில் வங்கிகள் பழைய முறைத் தொழிலுக்கு ஏராளமாக இடமிருந்ததால் புதியவைகளை ஏற்கவில்லை. புதிய தொழிலுக்கு வேண்டிய அளவு பயனாகாத தொகைகள் அவைகளிடம் இல்லை. கல்கத்தாவில் தவணைத் தொழிலை 6 வங்கிகளும் தனிக் கடன் தொழிலை 2 வங்கிகளும் செய்தன என்பதைக் கணக்குப் புலப்படுத்தியது. இவ்வாறு வங்கிகளும் தம் தவணைத் தொழிலை அவைகளுடைய பொதுக்

[1] தனிக் கடன் முறையைத் தொடங்கிய இந்தியன் ஓவர்சீஸ் வங்கியின் தலைவர் புதிய தொழில்கள் வங்கிகள் ஏற்பதை வரவேற்கின்றார். 'அது இதுகாறும் வங்கிப் பணிகளை அனுபவிக்காத நடுத்தரத் தாழ்ந்த நிலையிலுள்ளோருக்கு அவைகளை நல்கும். பலரக நுகர்வோர் பண்டங்களை வாங்குவதற்குதவும்' என்று வங்கியின் 21ஆவது ஆண்டு அறிக்கையில் 1959-ல் (மார்ச் மாதம்) குறிப்பிட்டார் p. 74.

[2] R. B. Vaze, 'Hire Purchase Finance by Banks in India', in the Journal of the Indian Institute of Bank, January, 1959.

கடன் துறைகள் மூலமே செய்தன என்று அறிவித்தன. தவணைத் தொழில் நிறுவனங்கள் வாடிக்கையரிடமிருந்து பெற்ற ஒப்பந்தப் பத்திரங்களைப் பெற்று அவைகளைத் துணையீட்டுப் பத்திரங்களாகக் கொண்டு நிறுவனங்களுக்கு மீள்நிதி வசதியளித்தன. இவைகளுடன் வங்கிகள் நெருங்கிய தொழில் தொடர்புகள் கொண்டிருந்தன. இழப்பு ஏற்பட இருக்கும் சாத்தியக் கூறுகளுக்கு எதிராகத் தடைகள் அமைக்கப் பெற்றிருக்கின்றன. வங்கிகள் தவணைத் தொகைகளை வசூல் செய்யவில்லை. இது நிறுவனங்களின் பொறுப்பு. மோட்டார் வாகனங்களே இதில் பெரிதும் பயனடைந்தன.[1]

தனிக் கடன் முறையை இந்தியன் ஓவர்சீஸ் வங்கியே முதன் முதலில் ஆரம்பித்தது. அமெரிக்காவில் முதலிலிருந்தே செய்து வருவதைப் போலும், இங்கிலாந்தில் அண்மையில் தொடங்கியதைப்போலும் இத் தொழிலைச் செய்வதன் நோக்கம் வங்கி வசதிகளை இதுகாறும் பெறாதவர்கள் இப்பொழுதாவது பெற வேண்டுமென்பதுதான். இக் கடனை வாங்குவோர் ஸ்திரமான வருமானம் பெறுவோராகவும் தவணைக் காலத்தில் இது தொடர்வதாகவும் இருக்கவேண்டும். அரசு அலுவலர்களும், சட்ட பூர்வமான நிலைய ஊழியர்களும், பெரிய நிறுவனங்களில் பணிபுரிவோரும், நிதி, வர்த்தக நிலையப் பணியாட்களும், ஸ்திர வருவாயுள்ள நகர்ப்புறச் சொத்துகளை உடையவர்களும் இக் கடன்களைப் பெறலாம். மோட்டார் வண்டிகள், தையல் எந்திரங்கள், மின் விசிறிகள், ரேடியோக்கள், வீட்டுச் சாதனங்கள், சைக்கில், ஸ்கூட்டர்கள், முதலிய நிலையான நுகர்வோர் பண்டங்களையும், தொழில் கருவிகளையும், விவசாயக் கருவிகளையும், எக்ஸ்ரே, மின்மோட்டார்கள் முதலியவைகளையும் வாங்குவதற்கு இக் கடன்களைப் பெறலாம். தனிக் கடன் துறையின் நோக்கம் நுகர்வோருக்கு நேரடிக் கடன் கொடுப்பதாகும், தவணைமுறைத் தொழிலகங்களுக்கு மீள்நிதியளிப்பதல்ல என்பதை வங்கிகள் தெளிவுபடுத்தியுள்ளன. ஐயப்பாடுகளுக்கப்பாற்பட்ட அனுபவத்தையும், பெயரையும் கொண்டுள்ள நிறுவனங்கள் மீள்நிதி வசதிகளைப் பெறலாம். நுகர்வோருக்கு இவ்வாறு நேரடிக் கடனுதவியளிப்பதால் அவர்கள் குறைவான வட்டியில் கடன் தொகை பெறலாம். தவிரவும் வங்கியும் பயனடையும். ஏனெனில் அதன் தற்போதுள்ள வாடிக்கையரும், பின்னர் ஏற்படும் வாடிக்கையும் அதிகரிக்கலாம். இவ்வாறு கொடுக்கப்படும் குறைந்தபட்சக் கடன் ரூ. 150. இது 150, 150ஆக ரூ. 5000

[1] S. K. Born and S. B. Mukherjee, Survey of Hire Purchase Finance in Greater Calcutta, 1964, ch. VI.

வரையிலும் அதற்கும் மேல் ரூ. 10,000 வரையிலும் (மிகச் சில சமயங்களில்) பெருகும். திருப்பிக் கொடுக்கப்படும் தவணைகள் இத் தொகையை நிர்ணயிக்கும். 6 மாதத்திலிருந்து 30 மாதங்களுக்குள் கடன் தவணைகளில் திருப்பிக் கொடுக்கப்பட வேண்டும். கடன்களுக்கு உறுதியளிக்கத் தேவையில்லை. சாத்தியமுள்ளதாக இருந்தால் கடன் வாங்குபவர் தன் ஆயுள் இன்சூரன்ஸ் பத்திரத்தைக் கடன் கொடுக்கும் வங்கிக்குப் புறக் குறிப்புச் செய்து தரவேண்டும். தவணைக் கட்டணங்களைச் செலுத்தத் தவறினுல் அபராதம் செலுத்தவேண்டும். இவ்வபராதம் எவ்வளவு காலமாகத் தவணைக் கட்டணங்கள் செலுத்தப்படவில்லை என்பதைப் பொறுத்திருக்கும். தவணைக் காலத்திற்குள் தொகையைச் செலுத்துவோருக்குச் சலுகை காட்டப்படும்.

இக் கடனை வாங்குவோர் பண்டத்தை வியாபாரம் செய்யும் ஒரு நம்பகமான வர்த்தகரைக் காணவேண்டும். இவர் பண்டத்தை நல்ல நிலையில் பொருளைக் கடன் பெறுவோருக்குக் கொடுக்கவேண்டும். வாங்குவோர் பண்ட விலையில் ஒரு சிறு பகுதியை வங்கியில் முன்பணமாகச் செலுத்தவேண்டும். எச்சத் தொகை முழுவதையும் வங்கி விற்பனையாளருக்குச் செலுத்தும். பண்டத்தின் உடைமையை வாங்குவோர் அடைவர். வங்கிக்கு அவர் தவணைக் கட்டணங்களைச் செலுத்துவார். கடனின் அடக்கச் செலவு 6% ஆகும்.[1]

### ஸ்டேட் வங்கியும் தவணைமுறைக் கடன் நிதியளித்தலும்

இந்தியன் ஓவர்சீஸ் வங்கி நுகர்வோருக்குத் தனிக் கடன் அளிக்கும் முறையை உருவாக்கியது. தவணைமுறைக் கடன் நிறுவனங்களுக்கு ஸ்டேட் வங்கி கடனுதவி யளித்து ஸ்டேட் வங்கிச் சட்டக்கூறு 33(1) திருத்தப்பட்டு ஒரு புதிய பகுதி அத்துடன் சேர்க்கப்பட்டிருக்கின்றது. இதன்படி தவணை முறைத் தொழில் செய்யும் நிறுவனங்களுக்கு ஸ்டேட் வங்கி; அதன் மையக் குழுவின் அறிவுரைப்படி ரொக்கக் கடனையும், மற்ற வகைக் கடன்களையும் அளிக்கலாம். இக் கடன்களை நிறுவனங்களின் புத்தகக் கடன்கள் (book debts) மீதும், அடைமானமாகக் காட்டப்பட்ட சொத்துகள் மீதும்' கொடுக்கலாம். திருத்தப்பட்ட சட்டப்பகுதிப்படி ஒரு திட்டத்தை வகுத்தனர். தொழிலுக்காக விற்கப்படும் வாகனங்களை விற்பனை செய்யும் நிலையங்களுக்கும், போக்குவரத்துத் தொழிலதிபர்களுக்கும் இத்

[1] இவ் விவரங்களை நல்கியதற்கு (தனிக் கடன் யற்றியவை) வங்கித் தலைவருக்கு நூலாசிரியர் கடமைப்பட்டிருக்கின்ருர்.

திட்டப்படி கடனுதவி யளிக்கலாம். தவணைத் தொழில் செய்யும் நிறுவனங்கள் அடைமானமாகப் பெற்ற பண்டங்களும், கடன் சொத்துகளும் வங்கிக் கடனுக்குச் செயல்படக்கூடிய ஆதாரங்களைக் குறிப்பிடவில்லை. கூடிய வரை நிறுவனங்கள் கொண்டிருக்கும் பத்திரங்களைக் கொண்டே வங்கிகள் கடனளிக்க விரும்புகின்றன. நிறுவனங்கள் கொடுக்கும் அடைமான சொத்துகளை ஆதாரமாகக் கொண்டு கடன் கொடுக்கின்றனர். இவைகளுக்கு நல்ல பெயருள்ள இன்சூரன்சு கம்பெனி அல்லது சிறந்த நிலையங்கள் உறுதியளிக்கவேண்டும். தவணைத் தொழில் நடத்தும் நிறுவனங்களின் ஒப்பந்தப் பத்திரத்தின்மீது கொடுக்கப்படும் கடன்கள் 18 முதல் 24 மாத காலத்திற் குட்பட்டிருக்கும். இந்த நிறுவனங்கள் 18 மாதத் தவணைகளில் செலுத்தக்கூடிய கடனை அளித்திருக்க வேண்டும் என்பது புலனாகின்றது. தவணைக் கட்டணங்களைச் செலுத்தத் தவறும் நிறுவனங்கள் புதிய கடன்களை வங்கியிடம் பெறமுடியாது. பிரிட்டிஷ், ஆஸ்திரேலிய வங்கிகளைப் போல ஸ்டேட் வங்கி இந்த நிறுவனங்களுக்குச் சாதாரணப் பங்குத் தொகையைக் கொடுப்பதில்லை.[1]

## பொருத்தமான தவணை முறை வாங்கல் தொழில்கள்

இந்தியாவில் ஐந்தாண்டுத் திட்டங்கள் நிறைவேற்றுகின்றனர். தொழில் வளர்ச்சியும் விரைவில் நடைபெறுகின்றது. இந்த நிலையில், வங்கிகள் தவணை முறைத் தொழிலிலும், தனிக் கடன் தொழிலிலும் ஈடுபடுவதை கவனிக்க வேண்டும். திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சியில் சிறு தொழில்கள் முக்கிய இடம் பெற்றுள்ளன. இடைக்காலக் கடன் கொடுப்பதைச் செம்மைப் படுத்த எவ்வளவோ முயற்சிகள் எடுத்தபோதிலும், இதில் குறைபாடுகள் உள. போதிய இடைக்காலக் கடன் வசதியின்மையால் பல சிறு தொழிலதிபர்கள் தமக்கு வேண்டிய இயந்திரங்களை வாங்க இயலவில்லை. இதே விதத்தில் நாட்டு உற்பத்தியாளர்கள் பலர் தாம் செய்யும் சிறு கருவிகளை விலையாக்க முடியவில்லை. ஏனெனில் இதை வேண்டுவோரிடம் போதிய நிதி வசதியில்லை. இந்த நிலையில் தவணை முறைக் கடனையும், தனிக் கடன் தொழிலையும் வங்கிகள் மேற்கொள்ளலாமா என்பதைச் சிந்திக்க வேண்டும். இந்த நிலையில் இந்திய வங்கிகள் தவணை முறைக் கடன் நிறுவனங்களுக்கு அவைகளுடைய சொத்து பத்திரங்கள் மீது (இவைகளை வங்கிகளுக்குப் புறக்குறிப்புச் செய்யவேண்டும்) கடன் கொடுக்கலாம் அல்லது அவைகளுடைய பங்குகளை வங்கிகள் வாங்கலாம். நிறுவனங்கள் கூட்டுப்பங்கு நிலையங்களாக இருக்கும். ஆனால்,

[1] இது பற்றிய செய்திகள் அளித்த ஸ்டேட் வங்கி நிருவாகிகளுக்கு என் நன்றி.

எந்தச் சந்தர்ப்பத்திலும் வங்கிகள் தவணை முறைத் தொழிலில் நேரடியாக இறங்கக்கூடாது. ஏனெனில் இது பற்றிய தொழில் நுட்ப அறிவு கொண்ட அலுவலர்கள் வங்கியரிடம் இல்லை.

மோட்டார் வாகனப் போக்குவரத்துத் தொழில் வங்கிகள் தவணைமுறைத் தொழில் செய்வதற்குரிய ஒன்றாகும். திட்ட காலத்தில் சாலைப் போக்குவரத்து முக்கியமான தொழிலாகும். விவசாயப் பண்டங்களைப் பல்வேறு இடங்களுக்குச் செலுத்து வதற்கும், கச்சாப் பொருள்களை உற்பத்தி நிலையங்களுக்கு அனுப்பு வதற்கும் இது முக்கியமானது. புகைவண்டிகளுடன் பல இடங்கள் தொடர்பு கொள்ளவில்லை. நாட்டுப் பொருளாதார வளர்ச்சி தூண்டும் சரக்குகளின் இடப்பெயர்ச்சி பெருகுகின்றது. புகை வண்டிகளால் இதைச் சமாளிக்க இயலவில்லை. இந்த நிலையில் மோட்டார் வாகனப் போக்குவரத்தை நம்பவேண்டியிருக் கின்றது. வங்கி வசதிகள் அளிக்கப்பட்டால் மோட்டார் போக்குவரத்துத் தொழில் அதிக வசதிகளை அளிக்கும். சரக்குகள் விரைவில் செலுத்தப்படும். போக்குவரத்துத் தொழிலுக்குத் தவணை முறை நிதி வழங்கிய நிறுவனத்திற்கு மீள் நிதியை வங்கி அளிக்கலாம். போக்குவரத்துத் தொழில் செய்வோருக்கு மோட்டார் வாகனங்கள் வாங்குவதற்குக் கடனுதவியளிக்க ஒரு திட்டத்தை ஏற்றுமதி இறக்குமதி வரிக்குழு (Tariff Commssion) பரிந்துரைத்திருக்கின்றது. இதற்காக அண்மையில் திருத்தப் பெற்ற ஸ்டேட் வங்கியின் சட்டம் சிறந்த நடவடிக்கையாகும். இச் சட்டப்படி வங்கி போக்குவரத்து நிறுவனங்களுக்குத் தொழி லுக்கான வாகனங்களை வாங்குவதற்கு நிதியுதவி நல்கி வரு கின்றது.

தவணை முறை வழியாகக் கொடுக்கப்படும் தொழில் கடன் இந்தியாவில் பெருகி வருகின்றது. 1971ஆம் ஆண்டு மார்ச்சு மாத இறுதியில் நாட்டுடைமையான வங்கிகள் போக்குவரத்து நிறுவனங்களுக்குக் கொடுத்துள்ள கடன்கள் ரூ. 39 கோடியாக இருந்தது. மாநில நிதிக் கார்ப்பரேஷன்கள் (S FCs) இத்தொழிலில் மிகுந்த அக்கறை காட்டுகின்றன. வர்த்தக வங்கிகளும் அக்கறை காட்டுகின்றன. இருந்தபோதிலும் தவணை முறைக் கடனின் தேவைக்கும் அளிப்புக்கும் இடையே வருங்காலத்தில் பெரும் இடைவெளி இருக்கும் என்று வங்கிக்குழுவினர் கருதுகின்றனர். வங்கிகளும், தனி நிறுவனங்களும் இத் தொழிலில் இறங்க, குறிப்பாக நாட்டின் கீழ்த் திசையில் இதைச் செய்ய ஏராளமான இடம் இருக்கின்றது.[1]

[1] Report of the Banking Commission, p. 418-19.

தவணைகளில் கடன் தொகையைத் திருப்பிச் செலுத்தும் முறையில் நுகர்வோருக்கு நிலையான பண்டங்களை வாங்குவதற்குக் கொடுக்கும் கடன் முறையின் மற்றோர் அம்சத்தைக் காணவேண்டும். மோட்டார் வாகனங்கள், குளிர் சாதனங்கள், அவைகளின் வெப்பத்தை ஒழுங்குபடுத்தும் சாதனங்கள் முதலியவைகளின் உற்பத்தி குறைவாக இருக்கின்றது. தவணை முறைக் கடன் மூலம் இவைகளுடைய தேவையைப் பெருக்குவதால் பண வீக்கத்தின் கொடுமை அதிகரிக்கும். நுகர்வோர் கடன் மூலம் நுகர்வோர் பண்டத் தேவைகளை உயர்த்தினால், திட்டத்தில் உயர் முன்னுரிமையுள்ள பண்ட உற்பத்தியிலிருந்து சாதனங்களை விடுவித்து நுகர்வோர் பண்ட உற்பத்திக்கு அவைகளைத் திருப்புவதாகும். பொருளாதார வளர்ச்சிக்குத் தேவையான அடிப்படைப் பண்டங்களின் உற்பத்தித் திறன் உபரியாக இருக்கும்போதுதான், தவணைமுறைக் கடனும், தனிக் கடனும் விரும்பத்தக்கதாக இருக்கும்.[1] வளர்ச்சித் திட்டங்கள் விறுவிறுப்படைந்து நுகர்வோர் பண்ட உற்பத்தி பெருகும்போது தவணை முறைத் தொழிலை ஊக்குவிக்க வேண்டும். அதிகரிக்கும் உற்பத்தியின் பலனை மக்கள் துய்ப்பதற்கு இது வழிவகுக்கும். வருமானங்கள் அதிகரிப்பதால் மக்களும் பண்டங்களை அதிக அளவில் வாங்க இயலும். மிகுந்த வளர்ச்சி பெற்றுள்ள நாடுகளின் அனுபவம் தவணைக் கடன் முறை, தனிக் கடன் முறை இவைகளுடைய பெருக்கத்தைக் காட்டுகின்றது. இந்தியாவில் தவணை முறைக் கடனின் வளர்ச்சியைக் கவனமாகச் செலாவணி நிருவாகிகள் பார்க்கவேண்டும். பணவீக்கம் ஏற்பட்டால் நுகர்வோர் கடனையும், தவணை முறைத் தொழிலையும் கட்டுப்பாடு செய்ய நடவடிக்கைகள் எடுக்க வேண்டும்.

### இந்தியாவில் வங்கிக் கடன்களின் புதிய பாணிகள்

இந்தியாவில் உருவாகும் வங்கிக் கடன்களின் புதிய பாணிகள் நம் நாட்டிலுள்ள மூன்றாவது வளர்ச்சிக் கூறாகும். 1951 முதல் 1967-க்குள் வங்கிக் கடன்களின் அளவு 4 மடங்கு பெருகிற்று. அவை எதற்காக வாங்கப்பட்டனவோ அவைகளும் பெரும் மாறுதல்கள் அடைந்தன.

[1] தனிக் கடன் முறையில் அதிக ஊக்கமுள்ள இந்தியன் ஓவர்சீஸ் வங்கியின் தலைவர்கூட அளிப்பில் குறைவில்லாத பண்டங்கள் வாங்குவதற்கே இக் கடன்களைக் கொடுக்கவேண்டும் என்று கருதுகிறார். பங்குதாரர்களின் ஆண்டுக் கூட்டத்தில் ஆற்றிய உரை, மார்ச் 59,

பட்டியல்[1]
வங்கிக் கடன்களின் பாணி (சதவீதத்தில்)

| | 1951 (டிசம்பர் 31-ல்) | 1961 | 1967 (மார்ச் 31-ல்) | 1970 (டிசம்பர் 31-ல்) |
|---|---|---|---|---|
| தொழில் | 34 | 54 | 64.1 | 63.5 |
| வர்த்தகம் | 41 | 29 | 19.4 | 17.3 |
| நிதித்துறை | 12 | 5 | 3.6 | 3.6 |
| தனிக் கடன், தொழில் கடன் | 7 | 9 | 4.4 | 4.4 |
| விவசாயம் | 2 | 1 | 0.3 | 7.1* |
| மற்றவை | 4 | 2 | 6.4 | 4.1 |
| | 100 | 100 | 100 | 100 |

* பெரும் தோட்டங்கள் (Plantations) உட்பட

முன்னர் வர்த்தகக் கடன்களையும், தனிக் கடன்களையும், நிதித் துறைக் கடன்களையுமே பெரும்பாலும் கொடுத்தவை இப்பொழுது தொழில் கடன்களையும் கொடுத்தன. மேலே உள்ள பட்டியல் இப்போக்கை எடுத்துக் காட்டுகின்றது; பொதுவான திட்டமிடலையும் காட்டுகின்றது. தொழிலை அடிப்படையாகக் கொண்டு ஏற்படும் பொருளாதார வளர்ச்சியைக் காட்டுகின்றது.

வர்த்தகக் கடன்கள் முதன்மையான இடம் பெற்றிருப்பதும், தொழில் கடன் பின்னணியில் இருப்பதும் வளர்ச்சி குன்றிய நாடுகளின் இயல்பாகும். நாட்டின் பொருளாதாரம் வளர்ந்து முதிர்வடையும்போது வங்கிக்கடன் வர்த்தகத் துறையிலிருந்து தொழில் துறையை நோக்கித் திரும்பும். வளரும் நாடுகளான கானு, லிபியா போன்ற ஆப்பிரிக்க நாடுகளின் (அண்மையில் சுதந்திரம் பெற்றவை) அனுபவம் இதை விளக்குகிறது.[2] இதேபோல் இந்தியாவிலும் தொழில் கடனின் சதவீதம் 1951-ல் 34ஆக இருந்தது. 1967-ல் 64·1ஆக உயர்ந்தது. இதே காலத்தில் வர்த்தகக் கடனின் சதவீதம் 41லிருந்து 19.4ஆகக் குறைந்தது.

அடைமானப் பொருள்களின் பாணிகள், தற்காலத்தில் மாறியதும் வங்கிக் கடன்களில் ஏற்படும் மாறுதலைக் காட்டுகின்றது. 1957, 1962ஆம் ஆண்டுகள் பற்றிய விவரங்கள், உணவு, விவசாயப் பொருள்கள் முன்போல் அடைமானப் பண்டங்களாக அதிக அளவில் இல்லை என்பதையும், மற்றப் பண்டங்கள் அதிக

[1] Source R.B.I. Statistical Tables relating to Banks in India for the year 1967. Table No. 8 (iii) p. 26. and for the year 19·0. Table No. 16, p. 28.

[2] See 'Central Banking in the Emerging Countries', by the present writer, chs. II and III.

அளவில் பயன்படுகின்றன என்பதையும் காட்டுகின்றது. உணவு, விவசாயப் பண்டங்களின்மீது கொடுத்த கடன் 51 சதவீதம் உயர்ந்தது. மற்றது 100.1% உயர்ந்தது. விவசாயத் துறையுடன் தொடர்பில்லாதவைமீது கொடுத்த கடன் பொது வாக 81 சதவீதம் உயர்ந்தது. புதிய தொழில்களின் முக்கி யத்துவத்தை இது காட்டுகிறது.[1]

## இந்திய வங்கி முறையின் அமைப்பு மாறுவது

மேற்குறிப்பிட்ட வங்கிப் பணிகள் மாறியதைத் தவிர்த்து அவைகளுடைய அமைப்பும் பலவிதங்களில் மாறின. வங்கி முறையில் ஏற்பட்டுள்ள பெருத்த மாறுதல்களை இவை காட்டு கின்றன. அமைப்பில் ஏற்பட்ட முக்கிய மாறுதல் வங்கிகளின் எண்ணிக்கையில் ஏற்பட்டதாகும். வலுவற்றவை நீக்கப்பட்டமை யாலும், தாமாகப் பல நிறுவனங்கள் ஒருங்கிணைந்ததாலும் (mergers) வங்கிகளின் எண்ணிக்கை குறைந்தது. இவ்வெண் ணிக்கை குறைந்ததால் வங்கிப் பணிகளின் அளவு குறையவில்லை. 1951–ல் 566 வங்கிகள் இருந்தன, 1969–ல் இது 89 ஆகக் குறைந்தது. ஆயினும் வங்கி வசதிகள் நாட்டில் குறையவில்லை. இக்காலத்தில் எண்ணிக்கை குறைந்ததைக் கிளைகளின் பெருக்கம் ஈடுசெய்தது, இவை 4,151 இலிருந்து 8,254 ஆக உயர்ந்தன. முன்னர் ஏற்பட்ட பெருக்கத்தில் குறைபாடு இருந்தது. நகர்ப் புறங்களிலேயே கிளைகள் தோன்றின. கிராமங்கள் புறக்கணிக்கப் பட்டன. இப்போக்கும் மாறி வருகின்றது. பழைய சமநிலை யின்மை நீங்கி செம்மையான முறையில் கிளைப் பெருக்கம் ஏற்பட்டு வருகின்றது. ரிசர்வ் வங்கி தான் பெற்றுள்ள அதிகாரத் தைச் சரிவரப் பயன்படுத்திச் சிறந்த முறையில் இணைப்புகளை ஏற்படுத்துகின்றது. இதே முறையில் புதிய கிளைகளைத் திறக்கவும் ஏற்பாடு செய்கின்றது. இம் மாறுதல்கள் இந்திய வங்கி முறை வலிமை பெறுவதை எடுத்துக் காட்டுகின்றன.[2] 1969–ல் 14 வர்த்தக வங்கிகள் நாட்டுடைமையானதிலிருந்து புரட்சிகர மான மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன, இந்த 14 வங்கிகளும் 3760 கிளைகளைக் கொண்டிருந்தன. அதாவது மொத்தத்தில் 49.02% கிளைகளைக் கொண்டிருந்தன, இவைகளுடைய டெப்பாசிட்டுகள் ரூ. 2742 கோடியாக, அதாவது 57.86% ஆக இருந்தன. இவை கொடுத்த கடன்கள் ரூ. 1744 கோடி யாக அல்லது 54·91% ஆக 1968ஆம் ஆண்டு டிசம்பர் 31ல இருந்தது.

[1] Dr. B. K. Madan in Commonwealth Banking Systems, pp. 208-9.
[2] See Gadgil Study Committee Report, June 1969.

நாட்டுடைமையின் விளைவாக வங்கித் தொழிலின் 83% அரசின் உடைமையில் 1969ஆம் ஆண்டு, ஜூன் மாதம் வந்தது. ஸ்டேட் வங்கி, அதன் 7 துணை நிறுவனங்கள். 14 நாட்டுடமையான வங்கிகள் முதலியவை பொதுத் துறையில் வந்தன. எஞ்சிய 17% தனியார் துறையில் இருந்தன. இவைகளுள் 36 இந்திய ஷெடியூல் வங்கிகள் இருந்தன. அதாவது 6 சதவீதம் இந்தியாவுக்கு வெளியே நிறுவப்பெற்றவை 15, அதாவது 10% ஷெடியூலல்லாத வங்கிகள் 1 சதவீதமாகும்.[1] ஒருங்கிணைந்த நிலையங்கள் வளர்ந்தன. இவைபற்றி முன்னர் நாம் குறிப்பிட்டுள்ளோம். இவை ஒன்றுடன் ஒன்று தொடர்பு கொண்டிருக்கின்றன. ஆனால், ஒவ்வொன்றும் தனித்தனித் துறையில் தேர்ச்சிபெற்றுள்ளது. வர்த்தக வங்கிகளைத் தொழில் வளர்ச்சி வங்கிகளுடனும். விவசாய மீள்நிதிக் கார்ப்பரேஷனுடனும் தொடர்பு படுத்தியுள்ளனர். இதனால் வங்கிகள் விவசாயக் கடன் துறையில் இறங்கியுள்ளன, கூட்டுறவு வங்கிகள் வங்கிக் கட்டுப்பாடுகளுக் குட்பட்டுவிட்டன. இதனால் இரு முறைகளும் இணைந்துவிட்டன. ஒருங்கிணைந்த நிதி முறையின் உள்ளமைப்பு நிறுவப்பெற்றது. தொழில், விவசாய வளர்ச்சிக்குப் பொருத்தமாக இருக்கின்றது. இதுவே ரிசர்வ் வங்கியின் நோக்கமாகும்.[2]

[1] Gadgil Study Committee Report, quoted in United Commercial Bank Review, July-October. 1969, p. 64.

[2] See Speech by the Governor at the Dinner Meeting of the Calcutta Banks' Association, R.B.I. Bulletin, 1967, pp 792-5.

# 18. வர்த்தக வங்கிகளுக்கு இரண்டாம்நிலைக் (Secondary) காப்பு நிதி

வங்கி முறை, செலாவணி முறை பற்றிய கோட்பாடுகளைப் பயிலும்போது நாம் சிறப்பு அல்லது இரண்டாம்நிலை டெப்பா சிட்டுகளைக் காப்பு நிதியில் கொள்ளும் பழக்கத்தைக் குறிப்பிட வேண்டும். போர்ப் பிற்காலத்தில் இதைச் செலாவணி நிருவாகத்திற்கு ஒரு வழியாகக் கொள்ளலாம் என்று சிலர் பரிந் துரைத்துள்ளனர். பொதுக் கடன் மிக அதிக அளவில் வளர்ந் துள்ளது. கடன் நிருவாகத்திற்கும் செலாவணிக் கொள்கைக்கும் இடையே இது முரண்பாட்டை ஏற்படுத்தியுள்ளது. இந்த நிலையில் இந்த யோசனை பலர் கவனத்தை ஈர்த்தது. இரண்டாம் நிலைக் காப்பு முறையில் பல வகைகள் உள. இந்த டெப்பா சிட்டு பற்றிய விதிகள் வர்த்தக வங்கிகளுக்கு மட்டும் அல்லது ஆயுள் இன்சூரன்சு, சேமிப்பு வங்கி போன்ற மற்ற நிதி நிலையங் களுக்கும் பொருந்தும். இந்த டெப்பாசிட்டுகள் மாறத்தக்கவை யாகவோ அல்லது ஒரே நிலையிலுள்ளவையாகவோ இருக்கலாம். மேலும் டெப்பாசிட்டு விகிதங்கள் வங்கிகளின் டெப்பாசிட்டு களுக்கும் மற்றக் குறிப்பிட்ட சொத்துகளுக்கும் பின்னணியாக இருக்கலாம்.

இத் திட்டம் பலர் ஆர்வத்தைமட்டுமல்லாமல் கருத்து வேற்றுமையையும் தூண்டியுள்ளது. ஏராளமான அளவில் பொதுக் கடன் திரட்டலையும் அதைச் செலாவணிக் கட்டுப் பாட்டுக் கருவியாகப் பயன்படுத்துவதையும் இத் திட்டம் சாத்தியமாக்கியுள்ளது என்று ஒருசிலர் இதைப் புகழ்ந்துள்ளனர். போர்ப் பிற்காலத்தில் சில காலம் இது சாத்தியமாக இருக்கும். ஆனல் மார்க்கட்டுச் சக்திகள் இயங்குவதை இது தடை செய்யும் என்று சிலர் கருதுகின்றனர்.

பெடரல் ரிசர்வ் குழுவின் தலைவரான திரு. எக்ளீஸ் (Mr. Eccles) 1947-ல் தீட்டிய திட்டத்தைப் பார்த்து இரண்டாம் நிலைக் காப்பு முறையின் இயல்புகளைப் பரிசீலனை செய்யலாம்.

போரை அடுத்து வந்த ஆண்டுகளில் 'பொதுக் கடன்களைச் செலாவணியாக்கம் மூலம் (monetisation)' ஏற்படுத்தும் வழக்கம் தீவிரமாக இருந்தது. பொதுக் கடன் பெருகியதாலும், கடன் மார்க்கட்டில் (market-in debt) ஒழுங்கை நிலைநாட்ட முனைந்ததாலும் வங்கிகளுடைய ரொக்க நிலையும் பொதுமக்களுடைய ரொக்க நிலையும் அதிகரித்தன. இதன் விளைவாக இரண்டாம் நிலைக் காப்பு முறை உருவாயிற்று. இதன் அடிப்படைக் காரணத்தைக் கண்டு பிரச்சினையைத் தீர்க்க எடுத்த நடவடிக்கையின் காரணமாகப் புதிய முறை உருவாயிற்று. இதன்படி வர்த்தக வங்கிகள் சட்டபூர்வமான இரண்டாம் நிலைக் காப்புகளைக் கணிசமான அளவில் கொள்ளவேண்டும். காப்புநிதியில் அரசு பத்திரங்களையோ அல்லது மைய வங்கிகளின் டெப்பாசிட்டுகளையோ கொள்ளவேண்டும். பழைய சட்டபூர்வமான காப்புகள் இருத்தல்வேண்டும், இவைகளைத் தவிர கேட்பு டெப்பாசிட்டில் 25 சதவீதத்தையும், தவணை டெப்பாசிட்டில் 10 சதவீதத்தையும் காப்பு நிதியாகக் கொள்ளவேண்டும். காப்பு நிதியில் குறுகிய கால அரசு பத்திரங்கள் (2 ஆண்டுகள் அல்லது அதற்குக் குறைவான முதிர்வுக் காலம் கொண்ட பத்திரங்கள்) அல்லது மற்ற ரொக்கச் சொத்துகள் இருக்க வேண்டும். மற்ற ரொக்கக் காப்பு நிதி கேட்பு டெப்பாசிட்டில் 20 சதவீதமும், தவணை டெப்பாசிட்டில் 6 சதவீதமும் இருக்க வேண்டும். இதற்குமேல் உள்ள தொகையை இரண்டாம்நிலைக் காப்பாகக் கொள்ளலாம். சிறப்பு டெப்பாசிட்டு முறையைப் படிப்படியாகப் புகுத்த வேண்டும். கடன் நிலைக்கேற்றவாறு இதை அமைக்க வேண்டும். ஆரம்பத்தில் இது 10%, 4%, என்று இருந்தது. இந்த ஆரம்ப நிலையில் வங்கிகள் போதுமான அளவு இரண்டாம் நிலைக் காப்பைக் கொண்டிருக்கும். ஆனால் சிறப்பு டெப்பாசிட்டு 25%, 10% என்ற முழு அளவு நிர்ணயம் ஆகும்போது வங்கிகள் கொண்டிருக்கும் டெப்பாசிட்டுகளில் பற்றுக்குறை இருக்கும். இதை நீக்குவதற்கு மைய வங்கி கருவூலப் பத்திரங்களை (Treasury Bonds) விற்பனை செய்யும். வங்கிகளிடமிருந்து குறுகிய காலப் பத்திரங்களை வாங்கி அவைகளுக்கு உதவி செய்யும். வங்கிகள் கொண்டுள்ள குறுகிய காலப் பத்திரங்களின் நிலை பெருகாத தன்மையை அடைந்துவிடும். அவை தனியார் துறைக்கு அளிக்கும் கடனைப் பெருக்க விரும்பினால் தம்வசமுள்ள பத்திரங்களை விற்பனை செய்யும். இதனால் கிடைக்கும் தொகையைக் கொண்டு அவை கொடுக்கும் கடனைப் பெருக்கலாம். அல்லது அவை கடன் கொடுக்க மறுக்க வேண்டும். சிறப்புக் காப்புத் தொகையை மாற்றும் அதிகாரமும் குழுவினர் யோசனையில் இருந்தது. அதாவது முதன்மைக் காப்பையும் (primary

reserves), இரண்டாம்நிலைக் காப்பையும் ஒரே நடவடிக்கை மூலம் மாற்றலாம். இத் திட்டம் அதிக வல்லமை படைத்தது என்று குழுவினர் கருதியதற்கு 3 காரணங்கள் உள. முதலில் முதன் மைக் காப்பு ஓரளவு கூடுவதால் கடன் பன்மடங்கு பெருகுவது தடையாகும். இரண்டாவதாக அரசு பத்திர மார்க்கட்டு மற்றக் கடன் பத்திர மார்க்கட்டிலிருந்து பிரியும். இதனால் மற்றத் தனி யாருக்குக் கொடுக்கப்படும் கடன் தொகையின் வீதத்தை உயர்த்தலாம், ஆனால், அரசு பத்திர வீதத்தை உயர்த்த வேண்டுமென்ற கட்டாயமில்லை. மூன்றாவதாக முதன்மைக் காப்புத் தொகையை மேலும் உயர்த்த வேண்டிய அவசியத்தை இந்த முறை நீக்குகின்றது.[1]

அண்மைக் காலத்திய நூலாசிரியர் ஒருவர் சிறப்புக் காப்புத் தொகை, மாறக்கூடியதென்றும் வங்கிகளுக்கு மட்டுமன்றி மற்ற நிதிநிலையங்களுக்கும் பொருந்தும் என்றும் ஒரு பரவலான விளக்கம் ஒன்று கொடுத்திருக்கின்றார். 'இத்தகைய காப்புத் தொகையை ஒரு சட்டபூர்வமான உச்சவரம்பு வரை உயர்த்த லாம். நிதியுலகிலுள்ள ஏராளமான அரசு பத்திரங்களைக்கொண்டு அமல் செய்யக்கூடியதாக இந்த உச்சவரம்பு இருக்கும்.' இவ்வாறு பார்க்கும்போது இரண்டாம்நிலைக் காப்புமுறை பொதுக் கடன் நிருவாகத்தின் செலவைக் கட்டுப்படுத்தக் கூடியதாகவும், சிறப்பீட்டுப் பத்திர மார்க்கட்டின் ஸ்திரநிலையைப் பேணக் கூடியதாகவும், பொதுக் கடனை விடுத்துத் தனியார் கடனை நோக்கி இயங்கும் ஊக வாணிகத்தைத் தடை செய்யக் கூடியதாகவும் இருக்கும்.[2]

இக்கருவியின் சிறப்பு இது பணத்தின் அளவையும் நடவடிக் கையையும் கட்டுப்படுத்துவதாகும். வேறு மாறுதல்கள் நிகழா விடில் காப்பு நிதியை உயர்த்தியோ அல்லது தாழ்த்தியோ கடன் அளவைக் கட்டுப்படுத்தலாம். 'கடன் நிலையங்கள் குறிப்பிட்ட தொகைகளைக் கொண்டிருக்கும்போது, குறிப்பிட்ட ரொக்கத்தையும் சட்டபூர்வமாகவோ அல்லது தொழில் நிமித்த மாகவோ கொள்ளவேண்டிய நிலையில் இருக்கும்போது, மற்ற மாறுதல்கள் நிகழாவிடில் உயர்காப்புநிதி கடன் தொகையைக் குறைக்கும், குறைவான காப்பு விகிதம் இதை அதிகரிக்கும்' இம் முறையில் குறைகள் ஏற்படாமலிருக்கும் பொருட்டு வங்கிகளை மட்டுமல்லாமல் மற்ற நிதி நிலையங்கள் இக் கட்டுப்

[1] Federal Reserve Bulletin, January 1958, pp. 14-23.

[2] Ervine Miller, 'Monetary Policy in a Changing World', Quarterly Journal of Economics, Feb. 1956, p. 39.

பாட்டுக் குட்படுத்தவேண்டும். நிதி நிலையங்கள் செலாவணி நிருவாகிகளின் கட்டுப்பாடுகளை மீறித் தனியாருக்குக் கொடுக்கும் கடனை உயர்த்தலாம். அரசு பத்திரங்களைக் குறைத்துக் கொள்ள லாம். இவ்வாறு செய்தால் அதிக அளவில் அரசு பத்திரங்கள் மார்க்கட்டில் விற்பனை செய்யப்பட்டால் அவைகளைப் பாது காப்பதற்காக மைய வங்கி நடவடிக்கை எடுக்கவேண்டும். இதனுல் வர்த்தக வங்கிகளின் காப்புத் தொகை பெருகும் பத்திரங்களை விற்போரும் மிகுதியான ரொக்கத்தைப் பெறுவர். தனியார் பெறும் கடனைக் கட்டுப்படுத்தும் நோக்கம் முறியடிக் கப்படும்.

சிறப்புக் காப்புநிதியின் பெரிய நன்மை இதைத் தேர்வுக் கட்டுப்பாடுகளுடன் சேர்த்து ஆளக் கூடியதாகும் சிறப்புக் காப்புத் தொகையைக் குறைக்கும்போது நுகர்வோர் கடன் பெருக்கவும், அசையாச் சொத்து வாங்கக் கொடுக்கும் கடனைப் பெருக்கவும் இடம் ஏற்படும். இதற்கு மாருகக் கட்டுப்பாடு இறுகும் போது சிறப்புக் காப்பில் அதிகத் தொகையைக் கொள்ள வேண்டும். கடைசியாக நிதிநிலையங்கள் இக் கட்டுப்பாட்டுக் குட்படுத்துவதால் தற்காலத்தில் வங்கிகளுடன் ஒப்பிடும் வகையில் முக்கியத்துவம் பெற்ற நிலையங்களும் ஓரளவு கண் காணிப்புக்குட்படுகின்றன.

உண்மை உண்டிக் கோட்பாட்டின்படி வர்த்தக வங்கிகள் தாமாகத் தீரக்கூடிய குறுகிய காலப் பத்திரங்களையே வாங்க வேண்டும். வங்கிகளுடைய நடைமுறைக் கொள்கைக்கு உதவி யாக இருந்த இக் கோட்பாடு நலிவுற்றுவிட்டது. இரண்டாம் நிலைக் காப்பு மிகக் குறைவான ஆபத்துள்ள தாள்கள் (low risk papers) நிறைந்தது. இது வங்கித் தொழிலிலுள்ள ஆபத்து களைக் குறைக்கும். வங்கி முறையில் சீர்திருத்தம் ஏற்படுத்த இக் கருவி உதவியுள்ளது.

பல நாடுகளின் வங்கிச் சட்டங்கள் முதன்மைக் காப்பு நிதியைத் தவிர, இரண்டாம்நிலைக் காப்புத் தொகையை அல்லது ரொக்க விகிதத்தை (liquidity ratios) வைத்துக் கொள்ள வழி வகுத்துள்ளன. சில நாடுகளில் உள்ள வங்கிகள் (இங்கிலாந்து உட்பட), ரொக்க விகிதத்தையும், முதன்மைக் காப்பையும் கொண்டிருக்கின்றன. வங்கிச் சட்டங்கள் உள்ள நாடுகளில் இரண்டாம்நிலைக் காப்புத் தொகையை மாற்றுவதற்குச் சட்டங்கள் வழிவகுக்கவில்லை. இரண்டாம்நிலைக் காப்புக் கட்டாயமாக இருக்கவேண்டுமாளுல், இது மாறும் தொகை யாகவும் இருக்கவேண்டுமாளுல் விகிதம் எப்படி நிர்ணயிக்கப்

படவேண்டும் என்பது பிரச்சினையாகிவிடும். இவ் விகிதத்தை முடிவு செய்வதற்குமுன் வங்கிகளுடைய நிலையைச் சரிவர கவனிக்கவேண்டும். பயனுள்ளதாக இருக்கவேண்டுமானால் இவ் விகிதம் உயர்நிலையில் இருக்கவேண்டும். 'சிறப்புக் காப்பு விகிதம் உயர்வாக இருந்தால்தான் இதைத்தவிர வங்கிகள் பெறக்கூடிய சொத்துகள் முதன்மைக் காப்புச் சொத்துகளாக மட்டுமே இருக்கும். பன்மடங்கில் பெருகக் கூடிய கடன் தொகை குறையும்.''[1]

மாறும் முதன்மைக் காப்பு நிதியுடன் மாறும் இரண்டாம் நிலைக் காப்பு நிதியையும் கொண்டால் வங்கி முறை குழப்பத்திற் குள்ளாகும் என்று சிலர் அஞ்சுகின்றனர். பெடரல் ரிசர்வ முறை முதன்மைக் காப்பு நிதியைக் கையாண்டபோது, இந்த நிதியை உயர்த்தும்போது வங்கி முறையில் கடுமையான அதிர்ச்சி ஏற்படு வதைக் கண்டது. இரு நிதிகளையும் ஒரே சமயத்தில் உயர்த்தி னால் வங்கிகள் அபாயகரமான அதிர்ச்சிக்குட்படும். மக்களுடைய நம்பிக்கை மிகவும் பாதிக்கப்படும். எனவே, இரண்டையும் இணைத்துக் கையாளக் கூடாது. அல்லது இரண்டாம்நிலைக் காப்பு நிதியை உயர்த்தும்போது முதன்மைக் காப்பு நிதியை யாவது மாற்றுமலிருக்க வேண்டும். மேலும் மாறும் காப்பு நிதி முறை அமலில் இருக்கும்போது, சிறப்புக் காப்பு முறையையும் பின்பற்றினால் பணமார்க்கட்டைச் சரிவரக் கட்டுப்படுத்த எந்த அளவு வங்கிகளின் ஒத்துழைப்பு வேண்டுமோ அந்த அளவு அதைப் பெற முடியாது.

பெடரல் ரிசர்வ் முறையின் இயக்குநர் குழு அளித்த யோசனை யைப் பரிசீலனை செய்து பார்த்தால் சில நிலைமைகளைச் சமாளிக்க அவை போதா. இதன்படி வங்கியர் நீண்டகாலப் பத்திரங்கள் வாங்குவதற்கு அல்லது கடன் கொடுப்பதற்காகக் குறுகிய காலப் பத்திரங்களை விற்பனை செய்ய முடியாது. ஆகையால் குறுகிய கால வீதங்கள் ஸ்திர நிலையடையும். ஆனால் நீண்ட காலப் பத்திர மார்க்கட்டில் என்ன ஏற்படும்? குறுகிய காலப் பத்திரங் களை விற்பனை செய்ய முடியாமையால் வங்கிகள் கருவூலப் பத்திரங்களை விற்பனை செய்து பணம் பெறும். சிறப்புக் காப்பு நிதியின் கட்டுப்பாட்டை நேரடிக் கடன் கொடுப்பதாலும் மற்ற வகையில் காப்புத் தொகை ஏற்படுத்துவதாலும் மீறலாம். இத் திட்டத்தில் மேலும் சில இடர்ப்பாடுகள் உள. கருவூலப் பத்திரங்கள் முதிர்வடையும்; அவைகளைக் கருவூலம் குறுகிய காலப் பத்திரங்களாக மாற்ற விரும்புகின்றதா என்பது சிறப்புக்

[1] E. C. Simmons, in American Economic Review, March, 1961.

காப்பு முறையின் வெற்றி தோல்வியை நிர்ணயம் செய்யும். கடன் முறை பற்றிய கருத்து வேற்றுமைகள் செலாவணி நிருவாகிகளிடையே இருக்கலாம். கடைசியாக நீண்ட காலப் பத்திரங்களை விற்பனை செய்வது கடினம் என்பதையும் குறிப்பிடலாம். இரண்டாம்நிலைக் காப்பு நிதிக்குரிய பத்திரங்களை விற்பனை செய்வதில் தொல்லைகள் ஏற்படா, ஆனால் நீண்ட காலப் பத்திரங்களை பெடரல் ரிசர்வ் முறையைத் தவிர வேறு யாருக்கும் விற்பனை செய்ய முடியாது. இவ்வளவு ஆட்சேபங்கள் இருக்கும் போது பெடரல் குழு ஏன் இதன்மீது அளவு கடந்த நம்பிக்கை கொண்டது என்று ஃபோர்ட் (Fforde) கேட்கின்றார்.[1]

வேறு ஒரு கோணத்திலிருந்து பார்க்கும்போது 'அரசு பத்திர வெளியீட்டின் காரணமாக வர்த்தக வங்கிகள் எதிர்பாராத இலாபம்' பெறுகின்றன.[2] எனவே அவை பத்திரங்களைக் கொள்வது இயற்கையே. வர்த்தக வங்கிகள் செலாவணியாக்கம் செய்வதற்காக ஒரு வெகுமதி பெறுகின்றன. புதியதாக ஆக்கப் பெற்ற செலாவணிக்கு ஒரு காப்பு நிதியையும் அவை இத் திட்டத்தின் விளைவாகப் பெறுகின்றன. மேலும் அதிக அளவு இலாபம் அளிக்கக்கூடிய தனியார் துறை முதலீட்டையும் எந்த நேரத்திலும் மேற்கொள்ளலாம். இந்த நிலையில் அரசு பத்திரங்களைக் கொள்ளவேண்டும் என்று அவைகளைக் கட்டாயப்படுத்துவது நியாயமானதே. அரசு பத்திரங்களின் தேவையை இவ்வாறு அதிகரிப்பதால், பொதுக் கடன் நிருவாகச் செலவு குறைகின்றது. இதற்காக இரண்டாம்நிலைக் காப்பு முறையை ஆதரிக்க வேண்டும். கனடா நாட்டின் வங்கி முறை, நிதி முறை பற்றிய ராயல் குழுவினர் (Royal Commission on Banking and Finance) 1964-ல் செய்த சிபாரிசு இங்குக் குறிப்பிடத்தக்கது. தற்போது உள்ள இரண்டாம்நிலைக் காப்பு முறையைக் கைவிட வேண்டும் என்பது குழுவின் கருத்து. ஏனெனில் இத் திட்டம் மைய வங்கி செலாவணியின் அளிப்பு மீது கொண்டுள்ள கட்டுப்பாட்டை அதிகரிக்கவில்லை. ஆனால், திருத்தப்பட்ட கனடா வங்கிச் சட்டப்படி இரண்டாம்நிலைக் காப்புத் தொகை வைத்திருப்பது கட்டாயமாகும், வங்கிகளுடைய விருப்பத்தை ஒட்டியதல்ல. மைய வங்கி இந்த விகிதத்தை 0-லிருந்து 6 சதவீதம் வரையிலும் 6-லிருந்து 12 சதவீதம் வரையிலும் உயர்த்த அதிகாரம் பெற்றிருக்கின்றது. இவ்வாறு இரண்டாம்நிலைக் காப்பு முறையை நீக்காமல் அமலில் வைத்திருக்கின்றனர்.[3]

[1] J. S. Fforde, 'The Federal Reserve System', 1945–9. Ch. XVIII.

[2] Ervine Miller, Quarterly Journal of Economics, February 1956. p. 42.

[3] G. L. Reuber, 'Recent Revisions in Canada's Banking Legislation II', Bankers' Magazine, January 1968, p. 25.

# 19. வங்கி டெப்பாசிட்டுகளை இன்சூர் செய்தல்: அமெரிக்க முறையை ஏன் இந்தியா பின்பற்ற வேண்டும்

வங்கியில் டெப்பாசிட்டுத் தொகையைக் கொள்வோருக்குப் பாதுகாப்பளிப்பதற்கும், வர்த்தக வங்கிகளுடைய செயல்களை ஒருங்குபடுத்தவும் ஒரு திட்டம்பற்றிப் பேசும்பொழுது அமெரிக்க டெப்பாசிட்டு இன்சூரன்சு திட்டத்தை விளக்கவேண்டும், மந்தகாலத்திற்குப்பின் இத் திட்டத்தை அமல் செய்தனர். 1933-ல் நிறைவேற்றிய வங்கிச் சட்டத்தில் இடம் பெற்ற இத் திட்டத்தில் 1935ஆம் ஆண்டின் வங்கிச் சட்டம் பெரிய மாறுதல்களைப் புகுத்தியது. பெடரல் டெப்பாசிட்டு இன்சூரன்ஸ் கார்ப்பரேஷன் (Federal Deposit Insurance Corporation) நிறுவப் பெற்றது. கருவூலமும், பெடரல் ரிசர்வ் வங்கிகளும் இதற்கு முதல் அளித்தன. கருவூலம் 150 டாலர் அளித்தது, 1934ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதல்தேதி பெடரல் ரிசர்வ் வங்கிகள் ஒவ்வொன்றும் கொண்டிருந்த உபரித் தொகையில் பாதியை, அதாவது, $139,299,556.99ஐ அவை அளித்தன.[1] இதற்கான தொகையை இறுதியில் திட்டத்தில் பங்குபெறும் வங்கிகள் ஏற்கவேண்டும். இவைகளுடைய மொத்த டெப்பாசிட்டு தொகையில் 1/12-ல் ஒரு சதவீதத்தை இவை கட்டணமாகச் (premium) செலுத்தவேண்டும். இத்தொகை இன்சூரன்சு டெப்பாசிட்டு தொகையிலிருந்து வேறுபட்டிருக்கின்றது. இதைத் தவிரக் கார்ப்பரேஷன் பங்கு முதல் 1936-ல் பெற்ற கட்டணத் தொகையைப்போல் 3 மடங்குத் தொகையைப் பத்திர வெளியீட்டின்மூலம் திரட்டலாம். இன்சூரன்சு காப்பு 100 சதவீதம் அல்ல, டெப்பாசிட்டில் ஒரு பகுதியேயாகும். ஒருவருக்கு ஒரு வங்கியில் இன்சூராகக் கூடிய தொகையின் உயர்ந்தபட்சம் $ 2500 ஆகும். இதை 1934ஆம் ஆண்டு ஜூலை மாதம் 1ஆம் நாள் $5000ஆக உயர்த்தினர். 1950ஆம் ஆண்டு

[1] அமெரிக்கக் கருவூலம் அளித்த முதலை 1947-48-ல் கார்ப்பரேஷன் திருப்பிக் கொடுத்தது.—Annual Report of the F.D.I.C. for the year ended 31st December 1957.

செப்டம்பர் மாதம் 21ஆம் நாள் $ 10,000 ஆக (ஒரு டெப்பாசிட்டருக்கு) உயர்த்தினர்.

பெ. டெ. இ. கார்ப்பரேஷனுக்கு இருவழிகளில் தொழிலுக்கான நிதி கிடைக்கும். இன்சூர் செய்த வங்கிகள் செலுத்தும் கட்டணத் தொகையும், அமெரிக்கா நாட்டுப் பத்திரங்களில் வங்கி செய்த முதலீடு கொடுக்கும் வருமானமும். இவ்வழிகள் 1935ஆம் ஆண்டுச் சட்டம் வகுத்துள்ள கட்டணத் தீர்வை மாற்றவே இல்லை. நடப்புக் கட்டணத் தொகையில் 60%க்குச் சமமான தொகையில் இன்சூரன்சு பணிக்கான செலவை நீக்கியபின் எச்சத்திற்குச் சமமான கடனைக் கார்ப்பரேஷன் பெறலாம். 1950இலிருந்து கட்டணத் தீர்வை டெப்பாசிட்டில் ஒரு சத வீதத்தில் 1/28 என்று நிர்ணயிக்கப்பட்டது.[1]

பெ. டெ. இ. கார்ப்பரேஷன் இன்சூரன்சு செய்துள்ள வங்கிகளை ஆய்வு செய்யலாம், அவைகளுக்கு அறிவுரையும் வழங்கலாம். கார்ப்பரேஷன் குறிப்பிட்ட குறைகளைக் கூடிய விரைவில் நீக்காவிடில் அது தன் ஆய்வறிக்கையின் முக்கியப் பகுதிகளை வெளியிடலாம். செம்மையற்ற வங்கிகளைக் கார்ப்பரேஷன் தன் திட்டத்திலிருந்து விலக்கலாம், அல்லது அவைகளைக் கலைக்கலாம். சமுதாயத்தின் நலன்களையும் தேவைகளையும் மனத்தில் கொண்டு செயல்படாத வங்கிகளுக்கு, இன்சூரன்சு வசதிகளை அளிக்க மறுக்கலாம். இன்சூர் செய்த ஒரு வங்கிக்குக் கார்ப்பரேஷன் கடனுதவியளித்து அது மற்றோர் இன்சூர் செய்த வங்கியைத் தன்னுடன் இணைத்துக்கொள்ள உதவலாம். இத்தகைய இணைப்புகள் கார்ப்பரேஷனுக்குத் திருப்திகரமாக இருந்தால் அது இணைப்பை ஆதரிக்கும். செம்மையற்ற வங்கிகளின் ஐயப்பாடுகளுக்குரிய சொத்துகள் கார்ப்பரேஷனுக்கு ஒரு பளுவாக இருக்கக்கூடாது என்பதுதான் இதன் நோக்கம்.[2] கார்ப்பரேஷனுடைய இவ்வதிகாரங்களை அது தாராளமாகக் கையாண்டது என்பதை அதன் அறிக்கை குறிப்பிடுகின்றது.

வங்கி டெப்பாசிட்டு முறை 1934ஆம் ஆண்டு ஜனவரி முதல் தேதி அமலில் வந்தது. அதன் பின் பெரும்பாலான வங்கிகள் இதில் சேர்ந்தன. 1958ஆம் ஆண்டின் இறுதியில் வங்கிகளில் 95% இன்சூரன்சு முறையில் சேர்ந்தன. வங்கி டெப்பாசிட்டில் 96% இன்சூரன்சு செய்யப்பட்டது.

[1] Annual Report of the F.D.I.C. for the year ended 31 December 1957. p. 14.

[2] R. B. Westerfield, 'The Banking Act of 1933', in Journal of Political Economy, December 1933, also H. H. Preston, 'The Banking Act of 1936' in Journal of Political Economy, December 1935.

இன்சூர் செய்த வங்கிகள் கவிழ்ந்தால் அதன் டெப்பாசிட்டர்கள் ஓரளவு பாதுகாப்புப் பெற்றனர். இத்தகைய பாதுகாப்பை முன்னர் அமெரிக்க வரலாறு கண்டதில்லை. 1959ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் தேதி பெடரல் டெப்பாசிட்டு இன்சூரன்சு கார்ப்பரேஷன் இயங்க ஆரம்பித்ததிலிருந்து 439 வங்கிகள் நிதி நெருக்கடியில் சிக்கின. இவை தம் டெப்பாசிட்டர்களுக்குப் பாதுகாப்பு நல்கக் கார்ப்பரேஷன் உதவியை நாடின. இவைகளில் பெரும்பாலான நெருக்கடிகள் முதல் 9 ஆண்டுகளில் நிகழ்ந்தன. இன்சூரன்சு தொகை இதே காலத்தில் பகிர்ந்து கொடுக்கப்பட்டன. இந்த வங்கிகள் 600 மிலியன் டாலர் டெப்பாசிட்டுகளையும் 1,400,000 டெப்பாசிட்டர்களையும் கொண்டிருந்தன. இந்தத் தொகைகள் முழுவதையும் கார்ப்பரேஷன் கொடுத்தது. முறிந்த வங்கிகளின் டெப்பாசிட்டுப் பொறுப்புகள் முழுவதையும் கார்ப்பரேஷன் ஏற்றது. டெப்பாசிட்டர்களுக்கு இழப்பு ஏதும் ஏற்படவில்லை. வங்கிகளின் பணிகளும் பாதிக்கப்படவில்லை.

### டெப்பாசிட்டு இன்சூரன்சு பணி

இரு கருத்துகளை இணைத்ததன் விளைவாக வங்கி டெப்பாசிட்டு இன்சூரன்சு முறை வளர்ந்தது. '1933-ல் வங்கிகள் பல கவிழ்ந்தமையாலும், வங்கி முறையே நீண்ட விடுமுறை எடுத்துக் கொண்டதாலும் 'இத் திட்டம் உருவாயிற்று என்று ஒரு விமர்சகர் அழகான நடையில் சித்திரிக்கின்றார். நெருக்கடியில் சிக்கிய பல வங்கிகள் முறிந்ததால் டெப்பாசிட்டர்களுக்கு ஏதேனும் ஒருவகைப் பாதுகாப்பு வேண்டும் என்று பலர் வாதித்தனர். வங்கிகள் பல கவிழ்ந்தமையால் மிலியன் கணக்கான டாலர்கள் இயங்காநிலைக் (frozen) குட்பட்டன. இதனால் பணவாட்ட நிலை ஏற்படும் என்று பலர் அஞ்சினர். எனவே டெப்பாசிட்டு இன்சூரன்சு மூன்று பணிகளைச் செய்ய வேண்டும். டெப்பாசிட்டர்கள் தம் தொகைகளை மீட்க முயல்வதால் வங்கிகளின் வீழ்ச்சி துரிதப்படும். இதைத் தவிர்க்க வேண்டும். இரண்டாவதாக வங்கிகள் கவிழ்ந்தால் பணப் புழக்கத்திற்கு வழி செய்யவேண்டும். மூன்றாவதாக வங்கிப் பணிகளைச் சீரமைக்க வேண்டும்; பொதுவாகப் பொருளாதார ஸ்திரநிலையை நிலைநாட்டவேண்டும்; வங்கிகள் கவிழ்வதையும், நிதி வற்றுவதையும் தடைசெய்ய வேண்டும்.[3]

[1] Report of the F.D.I.C. for the year ended 31 December 1959.

[2] Annual Report of the F.D.I.C. for the year ended 31 December 1958, pp. 3-4.

[3] Report of the Sub-committee on Monetary, Credit and Fiscal Policies of the Joint Committee on the Economic Report, 1950, pp. 44-6.

இந்தியாவில் டெப்பாசிட்டு இன்சூரன்சு முறையை அமல் செய்வது பலர் கவனத்தை அண்மையில் ஈர்த்துள்ளது. கிராமப்புற வங்கி ஆய்வுக் குழு (The Rural Banking Enquiry Committee) இதைப் பரிசீலனை செய்தது; ஆனால், இத் திட்டத்தைப் பரிந்துரைக்கவில்லை. பின்னர் ஷ்ராஃப் குழுவினர் (Shroff Committee) இதை மறு பரிசீலனை செய்தனர்; இதை உடனடி இந்தியாவில் அமல் செய்யவேண்டும் என்று சிபாரிசு செய்தனர். ஷ்ராஃப் குழுவினர் பரிந்துரைப்பதற்குப் பலகாலம் முன்னரே இந்நூலாசிரியர் இத்திட்டத்தைச் சிபாரிசு செய்து இதற்கான ஒரு முறையும் சமர்ப்பித்தனர். இந்திய அரசும், ரிசர்வ் வங்கியும் இதற்கான நடவடிக்கைகளை எடுக்கவில்லை. இப்பிரச்சினையில் அவர்கள் பராமுகமாக இருந்தனர். தென் இந்தியாவில் பலை சென்ட்ரல் வங்கி (Palai Central Bank) கவிழ்ந்தவுடன் அவர்கள் டெப்பாசிட்டு இன்சூரன்சின் சாத்தியக் கூறுகள் பற்றித் திடீரென்று சிந்திக்கத் தொடங்கினர். ரிசர்வ் வங்கியின் ஆளுநர் இந்திய வங்கியர் நிறுவனத்தில் (Indian Institute, Bankers) ஆண்டறிக்கை சொற்பொழிவாற்றும்போது இந்தியாவுக்கு டெப்பாசிட்டு இன்சூரன்சு திட்டம் வேண்டும் என்றும் இதுவே சிறிய டெப்பாசிட்டர்களுக்குப் பாதுகாப்பு நல்கும் என்றும் குறிப்பிட்டார்.

அமெரிக்காவைப் போலவே இந்தியாவிலும் வங்கி முறிவு அதிக அளவில் ஏற்பட்டது. நம் டெப்பாசிட்டர்கள் அடிக்கடி பெரும் இன்னல்களுக்காளானார்கள். எனவே, குறைவான பாதுகாப்புக் கொடுக்கக்கூடியதாயினும் இடர் நீக்கும் திட்டம் விரும்பத்தக்கது. போர்ப் பிற்காலத்தில் வங்கி டெப்பாசிட்டு இன்சூரன்சு முறை சிறப்பான முக்கியத்துவம் பெற்றது. போரின் விளைவாகக் குறைவான வருமானமுள்ளவர்கள் அதிக வருமானம் பெற்றனர், தம் சேமிப்புகளை அண்மையில் தோன்றிய சிறிய வங்கிகளில் டெப்பாசிட்டுச் செய்தனர். இந்த டெப்பாசிட்டர்கள் வங்கிகள் பற்றிய ஆழமான அறிவு படைத்தவர்களல்லர். செம்மையான வங்கிகளுக்கும், செம்மையற்றவைகளுக்கும் வேறுபாடுகளைக் காண இயலாதவர்கள், தம் வங்கிகளின் செயல்களை உற்று நோக்க முடியாதவர்கள். பொதுவாக வங்கி முறையைப் பாதுகாக்கச் சட்டங்கள் இயற்றுவதுடன், அமெரிக்கத் திட்டப்படி டெப்பாசிட்டு இன்சூரன்சு முறையும் அமலாக்குவது டெப்பாசிட்டர்களுக்குப் பாதுகாப்பளிக்கக் கூடியதாகும். மைய அரசின் கீழ் டெப்பாசிட்டு இன்சூரன்சு கார்ப்பரேஷனை நிறுவுவதால் கூட்டுப் பங்கு வங்கிமுறை ஊக்குவிக்கப்படும். இவ்வாறு செய்வதால் இந்திய அரசின் நற்பெயரும், ஆதரவும் இந்த வங்கிகளுக்கு அளிக்கப்படுகின்றன.

**இன்சூரன்சு 100% ஆக இருக்க வேண்டுமா அல்லது குறைவாக இருக்க வேண்டுமா ?**

வங்கி டெப்பாசிட்டு முறையை ஒரு நாட்டில் அமல் செய்யும் போது எந்த அளவு உறுதி கொடுக்க வேண்டும் என்பதை முதன் முதலில் முடிவு செய்தல் வேண்டும். உறுதி 100 சதவீதம் இருக்கலாமா அல்லது குறைந்திருக்க வேண்டுமா? அமெரிக்கா வில் இது குறைவாக இருக்கின்றது. இவ்வாறு இருப்பின் மக்கள் நம்பிக்கையையும், நிதிப் புழக்கத்தையும் வற்ருமல் நிலைப்படுத்து வதில் முழு வெற்றி கிடைக்காது. முரிந்த வங்கியின் அனுப வங்களை பெ.டெ.இ. கார்ப்பரேஷன் எவ்வாறு செய்ததோ அதைப் பொறுத்து இன்சூரன்சு உறுதியின் அளவும் வேறு பட்டது. வாங்கும் முறையைப் (receiver method) பின்பற்றும் போது உறுதி $10,000-க்குட்பட்டிருக்கும். இணைப்பு முறை (merger method) செயல்படும்போது அளிக்கப்படும் உறுதிக்கு வரம்பே கிடையாது. வரம்புக்குட்பட்ட உறுதியின்றி 100% உறுதியளிக்கும் முறையைப் பின்பற்றுவது சமுதாயத்திற்கு நன்மை பயக்கும். ஆனால், இம் முறையின் அடக்கச் செலவு மிக முக்கியமானதாகும். டெப்பாசிட்டுகளின் ஒரு பகுதிக்கு உறுதி யளிக்கும் முறை பல டெப்பாசிட்டர்களுடைய பெரும்பாலான தொகைக்குக் காப்பளிக்கலாம். ஆனால், முழு உறுதித் திட்டம் மிக அதிகச் செலவு பிடிக்கும் என்ற நிலையும் இருக்கலாம். ஒரு சில டெப்பாசிட்டர்களுக்கு மட்டும் இது உபரி நலன்களை அளிக் கும். எனவே, ஒரு பகுதிக்கு உறுதியளிக்கும் முறையே சிறந்த தாகும். உதாரணமாக, ஒரு வங்கியில் ரூ. 5000 வரை ஒரு டெப்பாசிட்டருக்கு உறுதியளிக்கும் திட்டம் 95% டெப்பாசிட்டுக் கணக்குகளுக்கு முழுப் பாதுகாப்பு இந்தியாவில் அளித்தால் மீதி 5 சதவீத டெப்பாசிட்டர்களுக்காகக் கார்ப்பரேஷனை ஏராளமான செலவை ஏற்கச் செய்வது முறையன்று. இவர்கள் பெரிய டெப்பாசிட்டர்கள், தம் நலனைத் தாமே கவனித்துக்கொள்ளக் கூடிய வல்லமை படைத்தவர்கள். மேலும் இவர்கள் வங்கிகளி லிருந்து அடிக்கடி கடன் வாங்கக்கூடியவர்கள். எனவே, வங்கிகள் முரிந்தால் இவர்களுடைய கடன்களைக் கொடுக்காமல் டெப்பாசிட்டுக் கணக்கைத் தீர்த்துக்கொள்ளலாம்.

இதிலிருந்து டெப்பாசிட்டு இன்சூரன்சு திட்டத்தை அமல் செய்வதற்குமுன், இத் திட்டத்தை ஏற்கும் வங்கிகளின் சராசரி டெப்பாசிட்டு எவ்வளவு என்பதைத் தீர்மானிக்க வேண்டும். இன்சூரன்சு தொகையைவிட இச் சராசரி டெப்பாசிட்டு மிக உயர்வாக இருந்தால் ஒரே டெப்பாசிட்டுக் கணக்கைப் பிரித்து உச்ச வரம்பை மீருத முறையில் வைத்துக்கொள்ள மக்கள்

முனைவர். இவ்வாறு கணக்குகளைப் பிரித்து வைப்பதால் வங்கி களின் அடக்கச் செலவு உயரும். பெரிய வங்கிகளில் சராசரி டெப்பாசிட்டுக் கணக்கு ரூ. 4,700 என்று ஒரு பிரபல வங்கியர் மதிப்பிட்டுள்ளார்.[1] இவ்வாறு இருக்கும்போது உறுதிக்குரிய தொகையை இந்த நிலையில் அமைக்க வேண்டும். டெப்பா சிட்டுகளைப் பிரித்து வைப்பதால் ஏற்படும் அதிக இயக்கச் செலவு தடைபடும்.

வேறு ஒரு பெரிய பிரச்சினையும் இருக்கின்றது. இன்சூரன்சு கட்டணத்தை எவ்வாறு நிர்ணயிப்பது? மொத்த டெப்பாசிட்டை அடிப்படையாகக் கொண்டு கட்டணத்தைத் தீர்மானிப்பதா அல்லது இன்சூரன்சு தொகையைக் கொண்டு இதைத் தீர்மானிப்பதா என்பது பிரச்சினை.

அமெரிக்க முறையில், இன்சூரன்சு கட்டணத்தை மொத்த டெப்பாசிட்டை அடிப்படையாகக் கொண்டு நிர்ணயித்தனர். இதைப் பல பெரிய வங்கிகள் எதிர்த்தன. இது நியாயமற்றது என்று அவை கருதின. காப்புக்குரிய தொகையைவிட இவை களுடைய சராசரி டெப்பாசிட்டுத் தொகை மிக அதிகமாக இருக் கின்றது. எனவே, மிகக் குறைவான தொகைக்கே காப்புக் கிடைக் கின்றது.[2] சிறிய வங்கிகளுடைய டெப்பாசிட்டுகள் முழுவதும் காக்கப்படுகின்றது. அவை தம் டெப்பாசிட்டுகள் முழுவதற்கும் இன்சூரன்சு கட்டணத்தைச் செலுத்துவதைப்போலப் பெரிய வங்கிகளும் செலுத்த நேர்ந்தால் இது நியாயமானதன்று. சிறிய வங்கிகள் பெறும் சலுகைக்கான தொகையைப் பெரிய வங்கிகள் ஏற்பதுபோன்ற நிலை ஏற்படும். எத்தகைய நெருக்கடி ஏற்படி னும் அதை ஏற்கவல்ல திறனை அவை கொண்டிருப்பதாகக் கருதலாம். தமக்குத் தேவையற்ற ஒரு திட்டத்திற்கு அவை கட்டணம் செலுத்த மறுக்கலாம். நாட்டின் நலனைக் கருதி ஓர் உயர் பொறுப்புணர்ச்சியுடன் அவை செயல்பட்டாலன்றி இன்சூரன்சு தொகையல்லாமல் மொத்தத் தொகையைக் கொண்டு கணக்கிடும் திட்டத்தை அவை ஏலா.

ஒரு வங்கி பெறும் நலனைக் கணக்கிடாமல் அதன் கட்டணம் செலுத்தும் திறனைக் கொண்டு கட்டணத்தை நிர்ணயம் செய்வது

[1] B. K. Dutt, 'Insurance of Bank Deposits', in Journal of Indian Institute of Bankers, October 1960, p. 243.

[2] நியூயார்க் மாநில வங்கிகள் முதல் திட்டத்தின்கீழ் தம் டெப்பாசிட்டுகளில் 23.7% மட்டும் உறுதிபெற்றன என்பதை உணர்ந்தன. ஆனால், வெர்மாண்டில் இது 84.07% ஆக இருந்தது. (H. H. Preston, Journal of Political Economy, December 1953.)

நூதனமாக இருக்கின்றது. ஆனால், இது நம் கவனத்தைப் பாதிக்க வேண்டாம். டெப்பாசிட்டு இன்சூரன்சின் முதன்மை நோக்கம் ஒரு பகுதியினருடைய நன்மையைக் குறிப்பிட்ட ஒரு துறையில் பாதுகாப்பதன்று. பணச் சுருக்கத்தின் விளைவை மாற்றித் தொழில்களுக்கு நன்மை பெற வழிவகுப்பதுதான் அதன் நோக்கமாகும், திட்டம் விளைவிக்கும் நன்மையை அடிப்படையாகக் கொண்டு அதன் அடக்கச் செலவை வசூல் செய்யத் தவறுவது மேலும் ஒரு வகையில் சிக்கலாக்கப்பட்டுள்ளது. அதாவது இறுதியில் திட்டத்தின் நன்மையைப் பெறும் டெப்பாசிட்டர்களிடம் கட்டணத்தை வசூல் செய்யாமல் வங்கிகளிடம் அதை வசூல் செய்கின்றனர். வங்கிகள் முறிவதால் ஏற்படும் இழப்பு உண்மையில் இன்சூர் செய்யக்கூடியதா என்பது விவாதத்திற்குரியது. இவ்வாபத்து பற்றிய கணக்கெடுத்து இதிலிருந்து பாதுகாப்பு அளிக்கக் கூடியதா என்பதனைக் காணவேண்டும். காப்புக் கட்டணம் இதை அடைவோரிடைப் பகிர்வு செய்யக்கூடியதன்று என்று ஒரு விமர்சகர் குறிப்பிட்டுள்ளார். ‘இதை இன்சூர் செய்வதற்குத் தடையாக இதில் புதைந்துள்ள பேராபத்திருக்கின்றது.’[1] ஆனால், டெப்பாசிட்டுகள் இன்சூரன்சு விரும்பத்தக்கதன்று என்று நாம் இதிலிருந்து பொருள் காணக்கூடாது. டெப்பாசிட்டு இன்சூரன்சு கார்ப்பரேஷனை நிறுவும்போது இன்சூர் செய்யக்கூடிய இடர்ப்பாட்டுக்குத் தடையாக நாம் எதையும் செய்யவில்லை என்பதை உணரவேண்டுமென்பதே பொருள்.

இன்சூரன்சுக்குரிய தொகையை நிர்ணயம் செய்வது மற்றொரு பிரச்சினையாகும். இந்தியாவுக்கு இத் தொகை எவ்வளவாக இருக்கவேண்டும்? அமெரிக்காவில் தற்போதுள்ள சட்டப்படி இன்சூரன்சுக்குரிய தொகை அல்லது அதன் விகிதம் குறிப்பிடப்படவில்லை. கார்ப்பரேஷன் கடன் வாங்குவதற்கு ஏராளமான அதிகாரம் பெற்றிருக்கின்றது. அமெரிக்கக் கருவூலத்தில் அது 3 பிலியன் டாலரைக் கடனாக வாங்கலாம். அதன் இயக்குநர் குழு இத்தகைய கடன் நிதி தேவை என்று கருதும் போது இதை வாங்கலாம்.[2]

[1] H. Jones, ‘Insurance of Bank Deposits in the U.S.A.’ in Economic Journal, December 1938.

[2] Annual Report of the F.D.I.C. for the year ended 31 December 1959. p. 22, notes 1, 2 and 3.

**இந்திய டெப்பாசிட்டு இன்சூரன்சு திட்டத்தின் முக்கிய இயல்புகள்**

இந்தியாவில் 1962-ல் ஒரு கோடி ரூபாய் அனுமதிக்கப்பட்ட முதலுடன் டெப்பாசிட்டு இன்சூரன்சு கார்ப்பரேஷன் நிறுவப் பெற்றது. இத் தொகையை 1968-ல் ரூ. 5 கோடியாக உயர்த்தினர். முதலில் புகுத்திய திட்டத்தின் இயல்புகளைக் கீழே காணலாம் : (1) ஒவ்வொரு டெப்பாசிட்டருக்கும் ஒவ்வொரு வங்கியிலும் இன்சூரன்சுக்குரிய தொகையை ரூ. 1500 என்று தீர்மானித்தனர். ஒரு பகுதிக்கே உறுதியளித்தனர். (2) டெப்பாசிட்டர் வங்கிக்குச் செலுத்தவேண்டிய தொகையை நீக்கிப் பின் உள்ள எச்சத்தையே உறுதிக் குரியதாகக் கணக்கிட்டனர். (3) மைய அரசின் அனுமதியுடன் இன்சூரன்சு தொகையை அவ்வப்போது மாற்றலாம். (4) கார்ப்பரேஷன் இன்சூரன்சு கட்டணமாக வங்கிகளிடமிருந்து பெறக்கூடியது ரூ. 100 டெப்பாசிட்டுக்கு 15 பைசாவாகும், அதாவது 1 சத வீத டெப்பாசிட்டில் 1/20 ஆகும். இது அமெரிக்கப் பழக்கத்தை ஒத்திருக்கின்றது.

முதல் திட்டத்தின்கீழ் ஐந்து டெப்பாசிட்டர்களில் 4 பேருக்கு உறுதி கிடைக்கும் என்று மதிப்பிட்டனர். 1965ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் மொத்த டெப்பாசிட்டுக் கணக்குகளில் 77% ரூ. 1500-க்கு மேற்படாதவை, கார்ப்பரேஷன் திட்டத்தில் முழுப் பாதுகாப்புப் பெற்றவை.[1] இடர்ப்பாதுகாப்பு நல்ல பயன் பயக்கக்கூடியதாக இருந்ததால் இன்சூரன்சுத் தொகையை 1968ஆம் ஆண்டு ஜனவரி மாதத்திலிருந்து ரூ. 1500-லிருந்து ரூ. 5000 ஆக உயர்த்தினர். பின்னர் டெப்பாசிட்டு இன்சூரன்சு கார்ப்பரேஷன் இத் தொகையை ரூ. 10,000 ஆக உயர்த்தியது. 1962-ல் கார்ப்பரேஷன் தோன்றியதிலிருந்து[2] இன்சூர் செய்துகொண்ட வங்கிகளின் எண்ணிக்கை குறைந்துள்ளது. சில வங்கிகள் மற்றவைகளுடைய பொறுப்புகளையும் சொத்துகளையும் ஏற்றமையால் கார்ப்பரேஷன் பதிவுசெய்த வங்கிகளின் எண்ணிக்கை 1970 ஜூன் இறுதியில் 86 ஆக இருந்தது. 1970 ஜூன் வரையிலும் கார்ப்பரேஷன் ரூ. 103.44 இலட்சத்தை 11 வங்கிகளுக்குச் செலுத்தியது.[3] 1968ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் முடிவுபெற்ற காலம்

[1] Annual Report on the Trend and Progress of Banking, 1965.

[2] Report of the Board of Directors, Reserve Bank of India, for the year 1 July 1968—30 June 1969.

[3] Seventh Annual Report of the Deposit Insurance Corporation for the year ended December 1968 (released on 30 May 1969).

வரை (ஏழாவது ஆண்டறிக்கைப்படி) டெப்பாசிட்டுகளில் 90.9 சதவீதமும் டெப்பாசிட்டு இன்சூரன்சுக்குரியவைகளில் 50.4 சதவீதமும் இத் திட்டத்தின் கீழ் வந்தன. அமெரிக்காவின் சத வீதங்கள் 99%; 58%. இவைகளுடன் ஒப்பிடும்போது நம் நாட்டுச் சாதனை நல்ல நிலையிலிருக்கின்றது என்று கூறலாம்.[1] கார்ப்பரேஷன் 11 வங்கிகளுக்காக மட்டுமே பொறுப்பேற்க வேண்டியதாயிற்று. இதுவும் ரூ. 103.44 இலட்சமாகவே இருந்தது.

இந்தியக் கார்ப்பரேஷனின் முதல் பணி வலுவற்ற வங்கிகளை, நாட்டிலிருந்து நீக்குவதாகும். இதற்காக இரு நடவடிக்கைகள் எடுக்கவேண்டும். வலுவற்ற வங்கிகளை இனம்கண்டு பல முள்ளவைகளுடன் இணைத்தல்வேண்டும். தொடர்ந்து இயங்கு வதற்குத் தகுதியற்ற செம்மையற்ற வங்கிகளை நீக்கும் நோக்கத் துடன் இன்சூர் செய்த வங்கிகளை நன்கு பரிசீலனை செய்ய வேண்டும். கடைசியாக இன்சூரன்சு திட்டத்தின் கீழ் வந்த போதிலும் வங்கிகள் மீதுள்ள கட்டுப்பாட்டை ரிசர்வ் வங்கி தளர்த்தக் கூடாது. ரிசர்வ் வங்கியோ, பொது மக்களோ எல்லா வங்கிகளும் சிறந்த பாதுகாப்புக் கொண்டிருக்கின்றன என்று மனப்பால் குடிக்கலாகாது.

திட்டம் சரிவரச் செயல்பட்டால் கார்ப்பரேஷன் சிறப்பான பணிகளை ஆற்ற முடியும். வங்கிப்பணி அதிகமாகத் தேவை யாகும் இடங்களில் உள்ள நெருக்கம் தளரும். வங்கிப் பழக் கங்கள் நன்கு வளரும். அமெரிக்கப் பெடரல் டெப்பாசிட்டு இன்சூரன்சு கார்ப்பரேஷன் குறிப்பிட்டுள்ளபடி, டெப்பாசிட்டு இன்சூரன்சு முறை 'ஓர் அதிசய மருந்தன்று.' வங்கி முறையின் குறைகள் முழுவதையும் இது நீக்க முடியாது; முன்னர் நெருக் கடிக்கும் காரணமாக இருந்த தொழில் நிலையிலுள்ள ஸ்திரமின்மை யையும் இது நீக்க முடியாது என்பதை உணரவேண்டும். கனடா, அமெரிக்காவையும் இந்தியாவையும் போல் டெப்பா சிட்டு இன்சூரன்சு திட்டத்தை அமல் செய்தது. டெப்பாசிட்டு இன்சூரன்சு திட்டத்திற்கான சட்டத்தைக் கனடா 1967-ல் இயற்றியது. இச் சட்டம் வங்கிகளுக்கும் அவைகளைப் போன்ற மற்ற நிதிநிலையங்களுக்கும் (டெப்பாசிட்டுகளை ஏற்பவை) பொருந்தும்.[2] அரசு ஏற்படுத்திய டெப்பாசிட்டு இன்சூரன்சு கார்ப்பரேஷனில் 20,000 டாலருக்குட்பட்ட டெப்பாசிட்டுகள் முழுவதையும் (ஒருவர் கணக்கிலுள்ளது) இன்சூர் செய்ய வேண்டும்.

[1] Southern Economist, June 1969, p. 35.

[2] G. L. Reuber, 'Recent Revisions in the Canada's Banking Legislation', in Bankers' Magazine, December, 1967, p. 290.

# 20. வர்த்தக வங்கிகள் நாட்டுடைமையாதல்

வர்த்தக வங்கிகளை நாட்டுடைமையாக்குதல் முக்கியமான அரசியல் பிரச்சினையாகிவிட்டது. குறிப்பாக இந்தியாவில் அண்மைக் காலத்தில் இது ஒரு முக்கியமான பிரச்சினையாகி விட்டது. நடப்புக்கால வங்கி முறையைப் பற்றிய நூல் இதை ஆராயாவிடில் முற்றுப்பெறாது. சட்டங்கள் மூலம் கட்டுப் படுத்துவது போதாது என்று சிலர் கருதுகின்றனர். வர்த்தக வங்கிகள் அனைத்தையும் பொது உடைமையிலும் கட்டுப்பாட்டி லும் கொணரவேண்டும் என்பது அவர்கள் விருப்பம். போர்ப் பிற்காலத்தில் முழுவேலை, திட்டக் கொள்கைகளை (full employment and planning) அரசுகள் நிறைவேற்றுகின்றன. இந்த நிலையில், குறுகிய காலக் கடன்களைக் கொடுக்கும் நிலையங்களான வங்கிகள் பொதுக் கட்டுப்பாட்டுக்குட்படுவது அதிக முக்கியத் துவம் பெற்றிருக்கின்றது.

வர்த்தக வங்கிகளை அரசுடைமை யாக்குவதற்குக் கீழ்க் காணும் காரணங்களை அளிக்கின்றனர்; (1) வங்கிகள் செலா வணியை உற்பத்தி செய்கின்றன. இது அரசின் தனியுரிமை யாகும்; அதன் கண்காணிப்புக்குட்பட்டிருக்கவேண்டும். (2) தனித்துள்ள வங்கிகள் மைய வங்கியின் கட்டுப்பாட்டுக்குட் படா. (3) இவ் வங்கிகள் நாட்டுடைமையான தொழில்களின் முன்னேற்றத்தைத் தடை செய்யும். (4) இதற்கு மாறாக அரசுடைமையான வர்த்தக வங்கிகள் கடனைத் தனி வங்கிகளை விடத் திறமையுடன் வழங்கும். இதற்காகச் செலவு செய்ய வேண்டிய தொகையும் குறையும்.[1]

மேற் குறிப்பிட்டவைகளைப் பேராசிரியர் சேயர்ஸ் பணமய மாக்கும் பிரச்சினை, இணைப்புப் பிரச்சினை, நாட்டுடைமைப் பிரச்சினை, திறமைப் பிரச்சினை என்று 4 வகைகளாகப் பிரித்துக் காட்டுகின்றார்.[2] அரசுடைமையை ஆதரிப்போருடைய வாதங்கள் அனைத்தையும் இவை தம்முள் கொண்டிருக்கின்றன.

[1] See A. B. White, 'The Nationalisation of Banking', pp. 43-59.

[2] R. S. Sayers, 'Modern Banking', pp. 304-5.

அரசுடைமையை எதிர்ப்போர் கீழ்க்காணும் காரணங்களை அளிக்கின்றனர். முதன் முதலில் வங்கிக் கணக்குகள் ரகசியமாக இரா. காவல் படையினரும் வருமான வரித் துறையினரும் பொதுமக்களைத் துன்புறுத்துவதற்கு இது உதவும். இரண்டாவதாக அரசாங்க வங்கிகள் கடன் கொடுப்பதில் பாரபட்சம் காட்டும்; அவைகளுடைய போக்கு அரசியல் சார்புள்ளதாகி விடும். மூன்றுவதாக அரசு வங்கிகள் திறமையற்றிருக்கும்; நெகிழ்ச்சியற்றிருக்கும்; டெப்பாசிட்டர்களுக்கு ஆபத்தானதாகவும் இருக்கும்.[1]

அரசுடைமைக்கு ஆதரவான வாதங்களும் எதிர்ப்பு வாதங்களும் மறுப்புக் கூறக்கூடியவை. ஒவ்வொன்றுக்கும் பதில் கொடுக்கலாம், பதிலும் கொடுத்துள்ளனர். இங்கிலாந்தில் மைய வங்கியை அரசுடைமைக்குட்படுத்தினர். ஆனால், வர்த்தக வங்கிகள் தனியார் துறையிலேயே இருக்கின்றன. ஆனல், இங்கிலாந்தின் தலைமை வங்கிச் சட்டத்தின் 4ஆவது கூறு (Clause 4 of the Bank of England Act) அதற்கு மற்ற வங்கிகளைக் கட்டுப்பாடு செய்வதற்குரிய அதிகாரங்களைக் கொடுக்கின்றது.

### அயல் நாடுகளில் வங்கிகளை அரசுடைமையாக்குதல்

இங்கிலாந்தின் சட்டக் கூறு நான்காவதைப் பிரெஞ்சு அரசு மறுத்தது. மைய வங்கியை மட்டுமல்லாமல் வர்த்தக வங்கிகளையும் அது அரசுடைமையாக்க முனைந்தது. இந்தப் பிரெஞ்சு வங்கிகள் Credit Lyonnaise, Societe General, Comptior National-d' Escompte de Paris, Banque National-d' pour le Commerce-et 'Industrie என்பனவாகும். இவைகளுடைய பங்குகள் உடனடியாக வாங்காமல், நீண்ட காலத்தில் (50 ஆண்டுகளில்) வாங்கக் கூடியவை. இவைகளுடைய விலைகளை மதிப்பீட்டுக் குழு (Valuation Board) நடப்பு மார்க்கட்டு மதிப்புகளைக் கொண்டு நிர்ணயம் செய்யும். இதற்கிடையில் பங்குதாரர்கள் தம் பங்குகளைக் கொண்டிருப்பர். அரசு உறுதியளிக்கும் இலாப ஈவு 1944ஆம் ஆண்டின் நிலையில் இருக்கும். 1945ஆம் ஆண்டு, டிசம்பர் 2ஆம் நாளில் சட்டம் எண் 45-015, பிரிவு 8-படி நாட்டுடைமையான நிலையங்களின் பங்குகள் 1946ஆம் ஆண்டு ஜனவரி 1ஆம் தேதியில் இருந்தபடி மாற்றப்பட வேண்டும். பதிவான பங்குகளுக்காக வங்கிகள் இலாப ஈவுக்குரிய தாளைக் (Scrip) கொடுக்கவேண்டும். இவை

[1] See G. D. H. Cole, 'Money, Its Present and Future', pp. 199-203.

1946-லிருந்து இயக்குநர் சபை நிர்ணயம் செய்யும் இலாப ஈவைப் பங்குதாரர்களுக்கு ஆண்டுதோறும் அரசு கொடுக்கும். இது 1944ஆம் ஆண்டின் தொகையைவிடக் குறைவாக இருக்கலாகாது. 1947-லிருந்து அரசு ஆண்டுதோறும் குறைந்த பட்சம் இலாப ஈவுத் தாளில் 1/5 பகுதியை வாங்கும். 1944ஆம் ஆண்டு செப்டம்பர் முதல் தேதியிலிருந்து 1945 அக்டோபர் 31ஆம் தேதி வரை பாரிஸ் பங்குமாற்று நிலையத்தில் நிலவிய சராசரி விலையை மதிப்பீட்டுக் குழு நிர்ணயிக்கும்.[1]

இத் திட்டம் முறையான அரசுடைமையாக்குவதன்று. மற்ற டெப்பாசிட்டு வங்கிகளை அரசு எடுத்துக்கொள்ளவில்லை. நாட்டுடைமையான 4 வங்கிகளும் மொத்தத்தில் 55 சதவீத டெப்பாசிட்டுகளைக் கொண்டிருந்தன. உண்மையில் தேசிய இயல்பு கொண்ட பல கிளைகளை இவை கொண்டிருந்தன. அவைகளுடைய தொகைகளில் பெரும்பாலானவை கருவூலப் பத்திரங்களில் முதலீடு செய்யப்பட்டிருந்தன. அவை ஏறத்தாழப் பொதுப் பணியில் ஈடுபட்டிருந்தன. அரசுடைமையான பகுதி அரசாங்கப் பாணியில் தீவிரமாக இயங்குவதைத் தடை செய்ய ஒரு தனியார் பகுதியையும் கொண்டிருந்தனர். அரசுடைமையானதன் விளைவாக நான்கு வங்கிகளின் பொதுக் கொள்கை அதிகம் மாறவில்லை. அவைகளுடைய தொழில் முறைகள் பழைய பாணியிலேயே இருந்தன. ஒரே ஒரு விதத்தில் பழைய முறையிலிருந்து அவை வேறுபட்டிருந்தன. பெரிய வங்கிகள் வர்த்தக உண்டியல்களை அதிக அளவில் தள்ளுபடி செய்தன.[2]

நாட்டுடைமை பற்றிய தீவிரமான கருத்து வேற்றுமைகள் ஆஸ்திரேலியாவில் இருந்தன எனக் கூறலாம். லேபர் கட்சியின் (Labour Party) கொள்கை வங்கிகளை அரசுடைமையாக்குதல். திரு. ஜே. பி. சிஃப்லே (J. B. Chifley) முதன் மந்திரியானபோது 1947-ல் இக் கொள்கையைச் செயல்படுத்த முனைந்தார். 1945ஆம் ஆண்டின் வங்கிச் சட்டம் அரசியலமைப்புக்கு முரணாக இருந்ததென்று உயர்நீதிமன்றம் அதை மறுத்தது. நாட்டுடைமைச் சட்டமும் இதனால் ரத்தாயிற்று. இச் சட்டத்தையும் (1947ஆம் ஆண்டுச் சட்டம்) 1948-ல் உயர்நீதிமன்றம் முறையற்றதென்று முடிவு செய்தது. 1949-ல் பிரிவி கௌன்சில் (Privey Council) இது பற்றிய மேல்வழக்கில் சட்டத்தின் சில கூறுகள் தவறானவை என்று தீர்ப்பளித்தது. இந்த நிலையில் இச் சட்டத்தை நீக்க ஆஸ்திரேலியப் பாராளுமன்றம் ஒரு மசோதா

[1] Federal Reserve Bulletin, May 1946, pp. 484-5.

[2] 'Banking Nationalisation in France', the Statist, International Banking Section, 7 December 1946, pp. 10-11.

வைக் கொணர வேண்டியதாயிற்று. பிரிவி கௌன்சிலின் தீர்ப்பை உற்று நோக்கினுல் அது அரசியலமைப்புப்படி வர்த்தக வங்கிகளை அரசுடைமையாக்கும் அதிகாரத்தைச் சரிவர விளக்க வில்லை என்பது புலனுகும். வங்கித் தொழில் செய்வதைத் தடை செய்து வர்த்தக வங்கிகளை நீக்குவது சட்ட விரோதம் என்று மட்டுமே குறிப்பிட்டது. வங்கிகள் நாட்டுடைமையாவதைப் பொதுமக்கள் ஆதரிக்கவில்லை. இப் பிரச்சினை லேபர் கட்சி பொதுத் தேர்தலில் தோல்வியடைவதற்குக் காரணமாக இருந்தது. அரசுடைமை கட்சியின் கொள்கையாக இருந்தபோதிலும், பொதுமக்களின் எதிர்ப்பைக் கருதி இது பற்றிய பேச்சை நீண்ட காலம் எழுப்பவேயில்லை. அரசியலமைப்பைத் தீவிரமாக மாற்றி ஞலன்றி இதைச் செய்ய முடியாது என்பதைச் சில கட்சித் தலைவர்கள் உணர்ந்தனர். சட்ட பூர்வமாகவும், அரசியல் ரீதியி லும், சாத்தியமுள்ளது அன்று என்பதாலும் இப் பிரச்சினை மறைந்துவிட்டது என்று அவர்கள் குறிப்பிட்டனர். சர் ராபர்ட் மென்ஜீஸ் (Sir Robert Menzies) பதவியேற்றதும் எதிர்க் கட்சி யினர் தடையையும் சட்டச் சிக்கலையும் நீக்கிப் பின்னர் அர சுடைமையைப் புகுத்தக்கூடும் என்று உணர்ந்தார். எதிர்க் கட்சி யினர் பதவிக்கு வரும்போது இதைச் செய்வர் என்று அஞ்சினுர். ஆஸ்திரேலியச் சிறப்புக் கணக்கு முறை வழியாகக் காமன் வெல்த் வங்கி வர்த்தக வங்கிகளின் முரிவை ஏற்படுத்தலாம். காமன்வெல்த் வங்கியின் பொது வங்கித் துறை தன் அதிகாரத் தைத் தாராளமாகப் பயன்படுத்தி வர்த்தக வங்கிகளை ஒழிக்கலாம். இத்தகைய ஆபத்துகளை நீக்கும் வகையில் திரு. மென்ஜீஸ் ஓர் ஆஸ்திரேலிய வங்கிச் சட்டத்தை இயற்றி ஞர். இது 1953-ல் கவர்னர் ஜெனரலின் ஒப்புதலைப் பெற்றது. சிறப்புக் கணக்குக் கருவியைக் கொடுமையான முறையில் அமலாக்குவதை இச் சட்டம் நீக்கியது. பொது வங்கித் துறையை மைய வங்கியிலிருந்து பிரித்தனர். அதைக் காமன்வெல்த் வர்த்தக வங்கி என்ற புதிய நிறுவனமாக அமைத்தனர்.[1] அது மற்ற வர்த்தக வங்கிகளைப் போல் சட்ட திட்டங்களுக்குட்படும் மைய வங்கியின் இரகசியச் செய்திகள் அதற்குக் கிட்டா. அண்மைக் காலத்தில் சில நாடுகள் வங்கிகளை நாட்டுடைமை யாக்கியுள்ளன. இதற்கு லட்சியக் காரணங்கள் உள ; பொருளா தாரக் காரணங்கள் இல்லை. கிழக்கு ஐரோப்பிய நாடுகளையும், ஐக்கிய அராபியக் குடியரசையும், இந்தோனேசியாவையும், பர்மா, டான்ஜேனியா, லிபியா நாடுகளையும் உதாரணமாகக் காட்டலாம்.

[1] Act 60, Commonwealth Bank Act, 1945–53.

**இந்தியாவில் வர்த்தக வங்கிகளை அரசுடைமை யாக்குதல் : அண்மைக் காலக் கருத்து வேற்றுமை**

வங்கிகளை நாட்டுடைமையாக்க வேண்டுமா என்பது பற்றிய கருத்து வேற்றுமைகளையும், சிந்தனையில் குழப்பத்தையும்போல் வேறு எப்பிரச்சினையையும் பற்றிய விவாதங்கள் அண்மைக் காலத்தில் கிடையா. அமைச்சர்கள் அடிக்கடி வேறுபட்ட கருத்துகளை வெளியிட்டுக் குழப்பத்தை மேலும் அதிகரித்து விட்டனர். ஆனால், நிதியமைச்சர்கள் ஒவ்வொருவரும் இதில் கலக்காமல் தனித்திருந்தனர். இதுபற்றிய அதிகாரபூர்வமான கொள்கையை அரசு வெளியிடவே இல்லை. அதிக அளவில் இழப்பு ஈடுகொடுப்பது தடையாக இருந்தது என்று முன்னாள் நிதியமைச்சர் ஒருவர் குறிப்பிட்டார். ஆனால், அவருக்குப்பின் பதவி யேற்றவர் அதை ஒரு தடையாகக் கருதவில்லை. இதற்கு மாறாக வங்கிகளை நாட்டுடைமை யாக்குவதால் ஏதேனும் நன்மை ஏற்பட்டால் அதை உடனடியாகச் செய்யத் தயாராக இருப்பதாக அவர் கூறினார்.

பின்னர்ப் பதவியேற்ற ஒரு நிதியமைச்சர் அரசு இதைச் செய்வதற்குத் தேவையாகும் நிதியைத் தற்போது கொண்டிருக்கின்றதா என்பதுதான் பிரச்சினை என்று குறிப்பிட்டார். அவர் நிதிச் சாதனங்களையும், உழைப்புத் திறனையும் மனத்தில் கொண்டு பேசினார் என்று புலப்படுகிறது. இத்தகைய தெளிவற்ற ஒன்றுக்கொன்று பொருத்தமற்ற கருத்துகளை அமைச்சர்கள் வெளியிட்டனர். இந்த நிலையில் திட்டக் குழுவின் துணைத் தலைவர் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழா உரையில் அபாயகரமான கருத்துகளை வெளியிட்டார். அரசியலார் இதை மறுத்துக் கூறுகையில் இவை திரு. மேத்தா (Mr. Metha) அவர்களின் சொந்தக் கருத்துகள் என்று குறிப்பிட்டனர். ஆனால், திரு. மேத்தா இவைகளை மறுக்கவோ திரும்பப்பெறவோ இல்லை. இதற்கு மாறாகப் 'பல்கலைக் கழக மாணவர்களான இளைஞர்கள் அறியவேண்டிய பிரச்சினைகள்' என்று தம் உரையைக் குறிப்பிட்டார். ஆளும் கட்சியில் தீவிர சித்தாந்தக் கருத்துகளைக் கொண்டிருப்போர் பலர் இருப்பது தெளிவாகும். கட்சியின் புவனேஷ்வர் கூட்டத்தில் இவர்கள் ஒரு தீர்மானத்தைக் கொணர்ந்தனர். இத் தீர்மானம் நிறைவேறும்வரை இவர்கள் ஓயமாட்டார்கள். இவ்வளவு இடர்ப்பாடுகளுக்கிடையில் இந்திய வங்கிகள் வாளாவிருந்ததற்கு விளக்கமே இல்லை. பிரச்சினை இவர்களுக்கு மனவேதனையை அளித்திருக்கவேண்டும். வங்கிகளுடைய தலைவர்கள் ஆண்டு உரையில் ஏதேனும் கருத்து வெளியிட்டுள்ளனரா என்று நான் கவனித்துப் பார்த்தேன்.

ஒரே ஒரு கூட்டத்தில் மட்டும் கருத்து வெளியிடப்பட்டது; 1966 மார்ச்சு மாதம் 31ஆம் தேதியில் இந்தியன் ஓவர்சீஸ் வங்கியின் தலைவர் இப் பிரச்சினையைச் சிறப்பான முறையில் விளக்கினர். இதைத் தவிர வங்கித் தொழிலையும், வளரும் பொருளாதாரத்தையும் எதிர் நோக்கியுள்ள ஆபத்தை யாரும் உணர்ந்ததாகத் தோன்றவில்லை. 'ஆளும் கட்சியின் சோஷலிச முகாம்' (Socialist camp of the party in power) கொண்டிருந்த சித்தாந்தங்களுக்கு அரசு அடிபணிவதால் மேற்குறிப்பிட்ட ஆபத்து ஏற்படுகின்றது.

## வங்கிகளை நாட்டுடைமையாக்குவதால் அரசாங்கத்திற்குக் கிடைக்கும் உபரித்தொகைகள் பற்றிய மதிப்பீடு

வங்கிகளை அரசுடைமையாக்குவதால் ஏராளமான வங்கிப் பணத்தை அரசியலார் பெறக்கூடும். இதைத் தற்காப்புக்கும், வளர்ச்சிக்கும் பயன்படுத்தலாம் என்பது நாட்டுடைமையை ஆதரித்தவர்களுடைய கூற்று. இதைப் பரிசீலனை செய்ய அரசு நாட்டுடைமை மூலம் எவ்வளவு உபரித் தொகையைப் பெறக் கூடும் என்பதைக் காணவேண்டும். இரண்டாவதாக இதே தொகையை வங்கிகள் மைய வங்கிக் கட்டுப்பாடுகள் மூலம் பெறக்கூடுமா என்பதையும் கவனிக்கலாம்.

இந்திய ஷெட்யூல் வங்கிகளின் இலாபம், மற்றத் தொகைகள் முதலியவை எவ்வாறு கையாளப்பட்டன என்பதைக் கீழ்க் காணும் 3 பட்டியல்களில் தெளிவாகக் காட்டப்படும்.[1]

பட்டியல் 1

(இலட்ச ரூபாயில்)

| | 1967 |
|---|---|
| இலாப/இழப்பு—மீதி ... | 3433·4 |
| முந்தைய ஆண்டின் துண்டு அல்லது உபரி இவ்வாண்டுக் கணக்கில் கொண்டு வரப்பட்டது. | 20·0 |
| காப்பிலிருந்து எடுத்தது ... | 48·7 |
| மொத்தம் ... | 3502·1 |

[1] Compiled from Tables Nos. 3 (ii) and 7 (i), Statistical Tables, relating to Banks in India for the year 1967, published by the Reserve Bank of India.

பட்டியல் 2

| நிதி ஒதுக்கீடு | (இலட்ச ரூபாயில்) 1967 |
|---|---|
| (a) இலாபத்தில் விதிக்கப்படும் வரிகள் ... | 1688·0 |
| (b) காப்பு நிதிக்குத் திருப்பிய தொகை ... | 313·2 |
| (c) இலாபத்தில் பணியாளர் பங்கு (போனஸ்) | 708·2 |
| (d) எதிர்காலத்தில் அளிக்கப்படவேண்டிய கிராசுவிட்டி | 92·5 |
| (e) மற்றச் சிறப்பான செலவுகள் ... | 72·1 |
| மொத்தம் ... | 2874·0 |

பங்குதாரர்களிடையே பகிர்வாகக்கூடிய தொகை ரூ. 3502·1 இலட்சம்—ரூ. 2874·0 இலட்சம் அல்லது ரூ. 628·1 இலட்சம்.

பட்டியல் 3

| | (இலட்ச ரூபாயில்) 1967 |
|---|---|
| பங்குதாரர்களுக்குக் கிடைக்கும் எச்சம் ... | 628·1 |
| பங்குதாரர்களுக்குக் கொடுக்கப்பட்ட இலாப ஈவு, போனஸ் முதலியவை ... | 616·6 |
| கணக்கேறிய எச்சம் ... | 11·5 |

தற்போது வர்த்தக வங்கிகளை உடனடியாக அரசு உடைமை யாக்கினுல் அரசுக்கு எவ்வளவு தொகை கிடைக்கும், உடனடி யாக எவ்வளவு இழப்பு ஈடு கொடுக்க வேண்டும் என்பதைக் காணலாம். செலுத்திய மூலதனத்தை அரசியலார் எடுத்துக் கொள்ளமாட்டார்கள் என்று வைத்துக்கொண்டு, ஸ்டேட் வங்கி, அதன் துணை நிறுவனங்களின் (முன்னரேஅரசுடைமையானவை) முதலைக்கழித்த பின்னர், 1967ஆம் ஆண்டின் கணக்குப்படி அரசு ரூ. 73·96 இலட்சத்தை இழப்பு ஈடாகக் கொடுக்க வேண்டும். இதை நீண்டகாலப் பத்திரங்கள் மூலம் கொடுக்கின்றனர் என்றும் நியாயமான வட்டி வீதத்தை—அதாவது குறைந்தபட்சம் $4\frac{1}{2}$%ஐ அளிக்கின்றனர் என்றும் வைத்துக்கொண்டால், பங்கு தாரர்கள் பெறும் தொகையான ரூ. 332·8 இலட்சத்தை அரசு பெறலாம். பொதுத் துறையில் தற்காப்புக்கும் வளர்ச்சிக்கும் செலவு செய்ய ரூ. 283·8 இலட்சத்தையே அரசாங்கம் பெறும்.

தனியார் துறையினர் பெறும் இலாபத்தை அரசு பெறுவது மட்டுமே நாட்டுடைமைக்கு முக்கிய காரணமன்று என்று இதை ஆதரிப்போர் கூறலாம். நாட்டுடைமை மூலம் அவர்கள் பெறும் டெப்பாசிட்டுத் தொகைகள் கணிசமானவை என்றும் வாதாடலாம். 1967-ல் ஸ்டேட் வங்கி நீங்கலாக மற்றவை பெற்ற டெப்பாசிட்டுகள் ரூ. 2,66,622 இலட்சமாகும். இதில் ரூ. 69,725 இலட்சத்தை முன்னரே வங்கிகள் அரசு பத்திரங்களில் முதலீடு செய்திருந்தன. ஆகையால், இத் தொகை அரசுக்கு முன்பே பயன்பட்டது. எஞ்சியது ரூ. 1,96,897 லட்சம் (அல்லது 1968·97 கோடி) அரசுக்கு உபரியாகக் கிடைக்கக் கூடியது. கலப்புப் பொருளாதாரத்தில் தனியார் துறை முக்கிய இடம் பெற்றுள்ளது. இதைப் பிரதம மந்திரி தம் முதல் உரையில் குறிப்பிட்டுள்ளார். நாட்டுடைமையான வங்கிகள் இத் துறைக்குத் தொண்டு புரிய வேண்டும்.

ரிசர்வ் வங்கி வெளியிட்ட விவரங்களைப் பார்த்தால் இந்திய வங்கிகள் 1965–ல் பல்வேறு பகுதிகளுக்குக் கொடுத்த கடனுதவி மொத்தம் ரூ. 2,095 கோடியாகும். இதில் 61·5 சதவீதத்தை அல்லது ரூ. 1,287 கோடியைத் தொழிலுக்கும், 25 சதவீதத்தை அல்லது ரூ. 537 கோடியை வர்த்தகத்திற்கும் கொடுத்தன. மொத்தம் ரூ. 1,824 கோடியாகும்.[1]

மேலும் தொழிலுக்குக் கொடுத்த கடனில் 4·4 சதவீதம் (அல்லது ரூ. 56 கோடி) அரசு துறையிலுள்ள தொழில்களுக்குக் கிடைத்தன. 3·2 சதவீதம் (அல்லது ரூ. 17 கோடி) அரசு துறையிலுள்ள வர்த்தகத்திற்குக் கிடைத்தது. எனவே, தனியார் துறைத் தொழிலுக்கும் வர்த்தகத்திற்கும் 1966–ல் ரூ. 1751 கோடி தேவைப்பட்டது என்பது தெளிவாகின்றது. இதே நிதியை இத் துறை நாடும் என்று வைத்துக்கொண்டால் பொதுத் துறைக்கு உபரியாகக் கிடைக்கக்கூடிய தொகை ரூ. 217·97 கோடியாகும், ஆனால், இங்கு விவசாயம், தனிக் கடன் (personal loan), தொழிலாளர் கடன் (professional loan), நிலையங்களுடைய தேவை முதலியவைகளை நாம் புறக்கணித்துப் பேசுகின்றோம். திட்டங்கள் விறுவிறுப்பாகச் செயல்படத் தொடங்கும்போது தனியார் துறையின் தேவைகள் பெருகும்; வங்கிகள் இத் துறைக்கு மேலும் அதிக உதவி செய்ய நேரிடும். எனவே, வங்கிகளை நாட்டுடைமை செய்வதால் அரசுக்குக் கிடைக்கக்கூடிய நன்மை கணிசமாக இருக்க முடியாது.

[1] Reserve Bank of India Bulletin, January, 1966,

## அரசுடைமைக்குச் சாதகமான மற்ற வாதங்கள்

வங்கிகளின் நாட்டுடைமையை ஆதரிப்போரின் மற்ற வாதங்கள் ஓரிரண்டை இங்குக் காணலாம். அரசுடைமையிலும், நிருவாகத்திலும் உள்ள கட்டுக்கோப்பான வங்கிமுறை இருந்தால் கடன் நிதிக்கான அடக்கச் செலவு கணிசமாகக் குறையும், நிருவாகத் திறமையும் சிக்கனமும் ஏற்படும் என்று இங்குக் கற்பனை செய்கின்றோம். ஆனால், இந்தியாவில் அரசின் (மைய, மாநில) உடைமையிலும், நிருவாகத்திலும் உள்ள தொழில்களின் அனுபவம் என்ன? பெரும்பாலான தொழிலகங்களில் நிருவாகச் செலவு மிகவும் கூடிவிட்டது. தனியார் துறையைவிட அரசு துறையில் பொதுவாகச் சராசரி நிருவாகச் செலவு உயர்ந்திருக்கின்றது; பல பொதுத் துறை நிறுவனங்கள் மிக அதிக அளவு இழப்பில் சிக்குண்டன. இந்த நிலையில் அரசு துறையிலுள்ள வங்கிகள் தனியார் வங்கிகளைவிடக் குறைவான அடக்கச் செலவில் நிதி வசதி பெற உதவும் என்று எவ்வாறு கூறமுடியும்! மேலும் இவ்வடக்கச் செலவு அரசின் வட்டி வீதக் கொள்கையுடன் பிணைந்திருக்கின்றது. இக் கொள்கையை அரசு அவ்வப்போது அறிவிக்கும். பணவீக்கத்தைக் கட்டுப்படுத்துவதற்காகத் தற்காலத்தைப்போல் செலாவணி அதிகாரிகள் உயர்வட்டி வீதக் கொள்கையைப் பின்பற்றினால் வங்கிகள் அரசுடைமையில் இருந்தாலும் தனியார் துறையில் இருந்தாலும் கடன் நிதிக்காகச் செய்யும் செலவு அதிகமாகிவிடும். ரிசர்வ் வங்கி தன் செலாவணிக் கொள்கையை நிறைவேற்றுவதற்காகத் தனியார் துறை வங்கிகளையும் வட்டிகளை உயர்த்துமாறு உத்தரவிடலாம் என்பது தெளிவாக இருக்கின்றது.

தனியார் வங்கிகள் தம் இயக்குநர்களுக்கும் அவர்கள் தொடர்பு கொண்டுள்ள நிறுவனங்களுக்கும் சலுகை காட்டுகின்றன என்று அவர்கள்மீது குற்றம் சாட்டப்படுகின்றது. இக் குற்றச்சாட்டு எவ்வளவு தவறானது என்பதை மேற் குறிப்பிட்ட உரையில் இந்தியன் ஓவர்சீஸ் வங்கியின் தலைவர் அளித்த விவரங்கள் புலப்படுத்துகின்றன. 1964-ல் ஸ்டேட் வங்கியின் கடன்களில் 22.8 சதவீதமும், அதன் துணை நிறுவனங்கள் அளித்த தொகையில் 14.6 சதவீதமும் அவைகளுடைய இயக்குநர்களுக்கும் அவர்கள் அக்கறை காட்டிய நிறுவனங்களுக்கும் கொடுக்கப்பட்டது. தனியார் வங்கிகளுக்கு இத் தொகை 8.8 சதவீதமாக இருந்தது.

மற்ற வாதங்களை இங்குக் குறிப்பிடவேண்டாம். ஏனெனில், அவை சித்தாந்தச் சார்புடையவையாக இருக்கின்றன; பொருளாதார அடிப்படையில் அமையவில்லை. அரசுடைமையின்

உட்கருத்து, வங்கித் தொகைகளை அரசின் கட்டுப்பாடுகள் மூலம் விரும்பத்தக்க பொதுத் துறைகளுக்குத் திருப்புவதுதான் என்று அதை ஆதரிப்போர் குறிப்பிடுகின்றனர். தக்க ஆணைகள்மூலம் வங்கிகளின் நிதிகளை ரிசர்வ் வங்கி வேண்டியபடி திருப்பலாம். இதற்காகத் தற்போதுள்ள முறையைத் தீவிரமாக மாற்றியமைக்க வேண்டாம். நாட்டுடைமை மூலம் வளரும் நாடுகளுள் உள்ள மிக அருமையான முறையைப் பாழாக்க வேண்டியதில்லை. குறிப்பிட்ட பொதுத் துறைகளில் முதலீடு செய்வதை ஆலோசனைகள் மூலமும் அளவுக் கட்டுப்பாடுகள், தேர்வுக் கட்டுப் பாடுகள் மூலமும் கண்காணிக்கலாம். மாறும் காப்புநிதி, வங்கிக் கடன்களின் திசைகளைக் கண்காணித்தல், இரண்டாம் நிலைக் காப்பு நிதியைக் கட்டுப்பாடு செய்வது முதலியவை சக்தி வாய்ந்த கருவிகள். இவைகளைப் பயன்படுத்தி வங்கி நிதியின் முதலீடுகளை ரிசர்வ் வங்கி கண்காணிக்கலாம்.

தனி வங்கியர்கள் நாட்டுப் பொருளாதாரத்தின் இயல்புகளை நன்கு புரிந்துகொண்டவர்கள். இவர்களுடைய பணிகளைப் புறக்கணித்தால் பொருளாதார வளர்ச்சி பாதிக்கப்படும். இவைகளை எல்லாம் மறந்து நாட்டுடைமைத் திட்டத்தை நிறை வேற்றுவதால் மேற் குறிப்பிட்ட வங்கியர்கள் தொடர்ந்து பணி புரிவது நீங்கிவிடும். நாட்டின் வளரும் பொருளாதாரத்திற் கேற்ப இந்திய வங்கிகள் (தனியார் வங்கிகள்) தம்மை அமைத் துக்கொள்ளும் சக்தி வாய்ந்தவை என்பதில் ஐயமில்லை. எனவே, இத்துறையில் தனியார் முயற்சியை முரியடிப்பதற்குத் தக்க காரணம் ஏதுமில்லை. தனியார் வங்கிகளை அரசாங்கம் எடுத்துக் கொள்ள முயன்றால் அதற்கு அரசியல், சித்தாந்தக் காரணங்கள் மட்டுமே இருக்க முடியும். நாம் முன்னரே குறிப்பிட்டுள்ளபடி அரசுடைமைக்கு அரசியல் மாறுதல்களும் சித்தாந்தக் காரணங் களுமே இருந்தன. சோஷலிசக் கொள்கையைச் செயல்படுத்து வதற்காக வங்கிகளை நாட்டுடைமையாக்க வேண்டுமென்றால் மற்றப் பெரிய தொழில்களையும் நிறுவனங்களையும் அரசுடைமை செய்த பின்னரே இவைகளை அரசியலார் எடுத்துக்கொள்ள வேண்டும்.

# 21. இந்திய வங்கிகள்மீது சமுதாயக் கட்டுப்பாடு

**கடன் திட்டமிடலுக்கு (Credit Planning) வகைசெய்யும் தேசியக் கடன் குழு (National Credit Council)**

நாட்டுடைமை செய்வதற்குமுன் அரசினர் இந்திய வங்கிகள் மீது சமுதாயக் கட்டுப்பாட்டை அமல்செய்ய விரும்பினர், இதற்கான ஒரு திட்டத்தை 1967-ல் ஆரம்பித்தனர்.

அன்று வங்கிகளின் உடைமையையும், நிருவாகத்தையும் தம் வசம் கொண்டிருந்த தனியார் துறையில் அரசியலாருக்கு நம்பிக்கைஇல்லாதது சமுதாயக் கட்டுப்பாட்டுக்குக் காரணம். ஆளும் கட்சியின் கொள்கை 'ஜனநாயக சோஷலிசமாகும்.' இதன் இலட்சியங்களை நிறைவேற்றும் வகையில் வங்கிமுறை இயங்கவில்லை என்பது அவைமீது சுமத்தப்பட்ட குற்றமாகும். வளர்ச்சித் தேவைகளின் முன்னுரிமைகளை (priorities) அவை அறியவில்லை. விவசாயம், ஏற்றுமதி, சிறுதொழில்கள் முதலிய துறைகளில் அவை கவனம் செலுத்தவில்லை. பொருளாதாரத்தின் பற்பல பகுதிகளிடையே கடனைப் பயனீட்டு முறையில் பகிர்வு செய்யவில்லை. இக் குறைகளை நீக்குவதற்குச் சமுதாயக் கட்டுப்பாடு தேவை என்று அரசு கருதியது. எனவே, அரசினர் படாடோபமான முறையில் சமுதாயக் கட்டுப்பாட்டைப் புகுத்தினர். வருமானங்களின் வளர்ச்சி சீராக அமைவதும், பொருளாதாரச் சக்தி பரவலாக அமைவதும், வேலைவாய்ப்புகளைப் பெருக்குவதும், அன்னியச் செலாவணி ஈட்டலும் சமுதாயக் கட்டுப்பாட்டின் நோக்கங்கள்.

இத் திட்டத்தின் முக்கிய அம்சம் தேசியக் கடன்குழு நிறுவப்பெற்றதாகும். பிரான்ஸ் நாட்டிலிருந்த சிறப்பான இயல்புகளும், சந்தர்ப்பங்களும் அங்கு இத்தகைய குழு அமைவதற்குக் காரணமாக இருந்தது. இவைகளை உணராமல் இதேபோன்ற குழுவை இந்தியாவிலும் அமைத்தனர். பிரெஞ்சு மைய வங்கியையும், நான்கு வர்த்தக வங்கிகளையும் 1946-ல் அரசுடைமை செய்ததை ஒட்டி இக் குழுவை அங்கு நிறுவினர்.

**பிரான்ஸ் நாட்டின் தேசியக் கடன் குழு**

பிரெஞ்சு வங்கிகளை நாட்டுடைமை செய்தபோது, அதன் ஒரு கூறாக அவைகளைக் கண்காணிப்பதற்காகத் தேசியக் கடன் குழுவை நிறுவினர். ஆனால், இந்தியாவில் இதை நாட்டுடைமைக்குப் பதிலாக அமைத்தனர். பிரெஞ்சு மைய வங்கியின் அமைப்பும், பாணியும் இந்திய ரிசர்வ் வங்கியின் அமைப்பிலிருந்து மாறுபட்டிருக்கின்றது. பிரெஞ்சு தேசியக் கடன் குழுவுக்கு நிறுவாக உறுப்புகளுக்கும் அதற்கும் இடையே இயக்குநர் சபை கிடையாது, மேலும் இது ஐரோப்பிய மைய வங்கி முறையை ஒட்டி அமைந்திருக்கின்றது. ஆனால், ரிசர்வ் வங்கி ஆங்கில முறையை ஒட்டி அமைந்திருக்கின்றது. 'Banques de depots, Banques d'affaires' என்ற இரு வகை வங்கிகள் பிரான்சில் இருக்கின்றன. இவை முறையே டெப்பாசிட்டு வங்கித் தொழிலையும், மூதலீட்டு வங்கித் தொழிலையும் செய்கின்றன. இரண்டாம் உலகப் போருக்குப்பின் இவைகளிடையே உள்ள வேறுபாடு மங்கி விட்டது. ஆயினும் இன்றும் ஓரளவு வேறுபாடு இருக்கின்றது. மூதலீட்டு வங்கிகள் அரசுடைமையாகவில்லை என்பது குறிப்பிடத் தக்கது.

நாட்டுடைமையான வங்கிகளைக் கட்டுப்படுத்துவதற்கு மட்டுமல்லாமல் நாடு முழுவதற்கும் ஒரு கடன் கொள்கையை அமுல செய்வதற்காக தேசியக் கடன் முழுவை நிறுவினர். வங்கிகளிடையே உள்ள சச்சரவுகளைத் தீர்ப்பது குழுவின் கடமை. குழு புதியதாக அமைக்கப்பெற்ற ஒரு நிறுவனமல்ல. முன்னர் இருந்த நிரந்தர வங்கி அமைப்புக் குழுவே இவ்வாறு வளர்ச்சியடைந்தது. இதைத் தவிர வங்கிக் கட்டுப்பாட்டுக் குழுவும், வங்கிப் பணிபுரிவோர் சங்கமும் (Bankers' Professional Association) இருந்தன. இவை யணைத்தும் பிரெஞ்சு மைய வங்கியைத் தலைமை இடத்தில் கொண்டிருந்தன; பற்பல அளவு அதிகாரமும் முக்கியத்துவமும் கொண்ட கண்காணிப்பு நிறுவனங்களைக் கொண்டிருந்தன.

கடன் வாங்குவோர், வங்கியர், பொதுமக்கள், கூட்டுத் துறை நிறுவனங்கள், தொழிலாளர்கள் சங்கங்கள், அமைச்சகம் முதலிய பகுதிகளைச் சார்ந்த பிரதிநிதிகள் இக் குழுவில் இடம் பெறுவர். குழு, பெரிய சபையாகையால் சிறிய குழுக்கள் மூலம் இயங்குகின்றது. நிதியமைச்சர் குழுவின் தலைவர்; மைய வங்கியின் ஆளுநர் இதன் துணைத் தலைவர்.

பிரெஞ்சு முறைப்படி குழு பரவலான அதிகாரங்களைக் கொண்டிருக்கின்றது. இவைகளை மூன்று விரிவான பிரிவுகளாகப்

பிரிக்கலாம். முதல் பிரிவு வங்கிப் பணியை ஒழுங்குபடுத்துவது பற்றியது. கிளைகளை எவ்வடிப்படையில் துவக்கலாம் என்பதையும், வங்கி டெப்பாசிட்டுகளின் உச்சவரம்பையும், குறைந்த பட்ச மட்டத்தையும் நிர்ணயிக்கும் பொறுப்பையும் இது கவனிக்கின்றது. இரண்டாவது பிரிவு ஆலோசனைக் குழுவாக இயங்கும்; பரந்த பலதரப்பட்ட பொறுப்புகளைக் கவனிக்கின்றது; கடன் நிலைமை, வங்கிமுறை பற்றிய சட்டம், சேமிப்புகளைத் திரட்டல் முதலியவை இதன் பொறுப்புகள். மூன்றாவது பிரிவு தனி வங்கிகளின் அதிகார எல்லை பற்றிய அலுவல்களைச் செய்கின்றது. தனி வங்கிகள், வங்கி முறை பற்றிய முடிவுகளை இது எடுக்கின்றது. கடன் குழு ஒரு துணை மைய வங்கியல்ல, மைய வங்கியுடன் இணைந்து செயல்படுகின்றது. கடன் கொள்கை வகுப்பது மைய வங்கியின் முக்கிய அலுவலாகும். ஆனால், கொள்கையின் கூறுகளை நிறைவேற்றுவது குழுவின் பொறுப்பாகும். மைய வங்கியின் கொள்கை நிறைவேறுவதற்குக் குழு உறுதுணையாக இருக்கின்றது.

வங்கிகளின் இடர்ப்பாடுகளை ஒருமுகப்படுத்துவதற்குப் பயன்படும் அமைப்பொன்று (Centre des Risques Bancaires) மேற்குறிப்பிட்ட குழு திறமையுடன் இயங்குவதற்குக் காரணமாக இருக்கின்றது. எல்லா வங்கிகளும் ஒரு குறிப்பிட்ட தொகைக்கு மேல் கொடுக்கும் கடன் பற்றிய விவரத்தையும், முன்னுரிமைப் பகுதிகளுக்கும் மற்றவைக்கும் கொடுக்கும் கடன் பற்றிய விவரங்களையும் இக்கேந்திரத்திற்கு அளிக்க வேண்டும். வாடிக்கையர் பற்றிய விவரங்களையும், அவர்கள் வாங்கியுள்ள கடன்கள் பற்றிய விவரங்களையும் வங்கிகள் இதனிடம் பெறலாம். தனி நபருக்குக் கொடுக்கும் கடன் அல்லது கடன் கொள்கை பற்றிய முடிவெடுப்பதற்கு இது துணையாக இருக்கின்றது.

கடன் பெருக்கத்தை எவ்வாறு செய்யலாம் என்பது பற்றிய வழி விதிகள் வகுக்கப்பட்டுள்ளன. கடன்கள் கட்டாயமாகத் திருப்பிக் கொடுக்கப்படுமா என்பதைக் கவனிக்காமல், அவை இன்றியமையாதவையா, பொருளாதாரத் தேவைகளுக்கு ஏற்றவையா என்பதைக் கவனிக்கவேண்டும். ஒரு குறிப்பிட்ட தொகைக்கு மேற்பட்ட கடனை மைய வங்கியின் அனுமதி பெற்ற பின்பே கொடுக்க முடியும். தேசியத் திட்டத்தில் இடம் பெற்றுள்ள உற்பத்தித் துறைகளுக்குக் கடன் வழங்குவதில் முன்னுரிமை காட்டவேண்டுமென்று குழு வங்கிகளுக்கு ஆணை பிறப்பிக்கலாம். கொள்கை விளக்க அறிக்கைகளை குழு ஆண்டு தோறும் விடுக்கலாம். போர்ப் பிற்காலத்தில் செலாவணியின்

மதிப்பு நீண்ட காலத்தில் தனி சேமிப்போருடைய நம்பிக்கைக் குரியது என்பதையும், அவர்களுடைய சேமிப்பு தளவாடங்களை நவீனமாக்குவதற்குப் பயன்பட வேண்டும் என்பதையும் குறிக்கோள்களாகக் கொண்டனர். அண்மையில் விடுதலை பெற்ற மொராக்கோ, ட்யூனிசியா நாடுகளின் வங்கி முறை பிரெஞ்சு முறையை அடிப்படையாகக் கொண்டிருந்தன. இவைகளும் இடர்ப்பாடுகளை ஒருமுகப்படுத்தும் கேந்திரங்களைக் கொண்டிருந்தன. இவ்விரு நாடுகளிலும் பிரெஞ்சு முறையை ஒத்த அமைப்பு உள்ளது. இந் நாடுகளிலும் பொதுக் குழுவுக்கும் நிருவாகத் துறைகளுக்கும் இடையே இயக்குநர் குழு ஒன்றும் இல்லை.

## இந்தியக் குழு—அதன் மூன்று பணிகள்

பிரான்ஸ் நாட்டைப்போல் இந்தியாவிலும் அமைக்கப்பெற்ற தேசியக் கடன் குழு கடன் திட்டமிடலுக்காக (credit planning) தோற்றுவிக்கப்பட்டது. அது கடன் கொடுப்பது பற்றிய ஆலோசனைகளை வழங்குகின்றது. தேசியத் திட்டத்தில் வகுத்துள்ளபடி முன்னுரிமைச் சலுகைகளைப் பற்பல பகுதிகளுக்கும் அவைகளின் தொழில்களுக்கு அளிக்கும் நோக்கத்துடன் தேசியக் கடன் குழு கடனின் அளவையும் தரத்தையும் பங்கீடு செய்வதை நிர்ணயிக்கும்.

குழுவுக்கு அளிக்கப்பட்ட மூன்று பணிகள் கீழ் வருவனவாகும்: (1) வங்கிக் கடனுக்கு எவ்வளவு தேவை இருக்கின்றது என்பதை மதிப்பிட வேண்டும். (2) விவசாயம், சிறு தொழில்கள், ஏற்றுமதி முதலியவைகளை மதிப்பிட்டபின் கடன் பங்கீட்டுக்கான முன்னுரிமையை நிர்ணயம் செய்தல். (3) வர்த்தக வங்கிகள், கூட்டுறவு வங்கிகள், சிறப்பு நிதி நிலையங்கள் முதலியவைகளின் முதலீட்டுக் கொள்கைகளை இணைத்தல், இதனால் சாதனங்கள் சிறப்பான முறையில் பயன்படவேண்டும்.[1] வங்கிக் கடன் உற்பத்தி ஏற்படுவதற்கும், இலாபம் ஏற்படுவதற்கும் காரணமாக இருக்கின்றது. கடனின் இவ்விரு யியல்புகளும் ஒரே திசையில் இருக்கவேண்டுமென்ற கட்டாயம் இல்லை. வங்கிக் கடன் எவ்வாறு தொழில்களிடையே, பல பகுதிகளிடையே பகிர்வாக வேண்டுமென்பதைத் தீர்மானித்தபின் அதன் இலாபம் பாதிக்கப்படுவதைக் காணலாம். கடனின் உபயோகம் அரைகுறையாகக் கூட இருக்கலாம். சோஷலிச முறையில் இலாப நோக்கை விடலாம். ஆனால், கடனின் உபயோகத்தை விடுக்க

[1] Annual Report on Currency and Finance, Reserve Bank of India, 1967-68, p. 3.

முடியாது. மேலும், லாபத்தின் சமுதாய, வர்த்தகத் தன்மைகளைக் காணவேண்டும். சமுதாய லாபம் குறைவாகவும் வர்த்தக அல்லது தொழில் லாபம் மிகுதியாகவும் உள்ள துறைகளிலிருந்து கடனின் உபயோகத்தைச் சமுதாய இலாபம் மிகுதியாகவும், தொழில் இலாபம் குறைவாகவும் உள்ள துறைகளுக்குத் திருப்ப வேண்டும்.

குழு வெற்றிகரமாகச் செயல் புரிவதற்கு இருக்க வேண்டிய நிபந்தனைகள்

பல்வகை கடன்கள், பிராந்தியப் பணிகள் முதலியவைகளைச் சேகரிக்கும் நிலையம் துரிதமாகச் செயல்பட வேண்டும். இது சேகரிக்கும் செய்திகளை உடனடியாகப் பகுத்தாய்வு செய்து குழுவினர் பார்வைக்கு வைக்கவேண்டும். இவ்வாறு செய்தால் கடன் குழு வெற்றிகரமாகப் பணி புரியலாம். செய்திகளைச் சேகரித்து ஆய்வு செய்து குழுவினருக்கு அளிப்பதில் அளவுக்கு மீறிய காலதாமதம் இருப்பின் இதனுல் நல்ல பயன் ஏற்படாது. தவருன முடிவுகள் எடுக்கப்படலாம். இந்த நிலையில் மையக் கேந்திரம் அல்லது 'பணியமைப்பு' (Central Service) பயனுள்ளதாக இருக்க முடியாது. ஐரோப்பிய மைய வங்கி முறைப்படி அமைந்துள்ள பிரஞ்சு மைய வங்கி நாடெங்கும் பல கிளைகளைக் கொண்டிருக்கின்றது. இதனுல் சிறு தொழிலகங்கள் வங்கிக் கடனுதவி பெறுகின்றன. இந்திய ரிசர்வ் வங்கி ஆங்கில முறைப்படி அமைந்திருக்கின்றது; ஆகையால், பல கிளைகளை அது கொள்ளவில்லை. பிரெஞ்சு முறையைப்போல் இந்திய ரிசர்வ் வங்கி பல பிராந்தியப் பணியமைப்புகளை (local services) நிறுவுவது கடினம். இவை இல்லாததால் பிராந்திய நிறுவனங்களுக்கு ஆங்காங்கே உள்ள வங்கிகள் தம் தொழில்கள் பற்றிய விவரங்களை அளிக்க வேண்டியதில்லை. குறிப்பிட்ட தொகைக்கு மேற்பட்ட கடன்களை (முன்னுரிமைப் பகுதிக்கும் மற்றதற்கும் கொடுக்கப்படும் கடன்கள்) இவைகளுக்குத் தெரிவிக்க வேண்டியதில்லை. இந்தியாவின் பல பகுதிகளில் பிராந்தியப் பணியமைப்புகளை அமைக்க வேண்டும். இவைகளுடைய செயல்களை ஒரு மையக் கேந்திரம் ஒருங்கிணைக்க வேண்டும். முக்கியமில்லாத சில துறைகள் சில நிலையங்களிடமிருந்து கடனுதவி பெறலாம். இவை வங்கிகளிடமிருந்து தொழில் நிதியைப் பெற்றிருக்கலாம். தேசியக் கடன் குழுவின் குறிக்கோள்களை இவ்வாறு மீறலாம். இதைத் தடை செய்வதற்கு வர்த்தகத் தாள்கள் யார் பெயரில் எழுதப்பெற்றுள்ளதோ அவர் இதற்கான உறுதியளிக்க வேண்டும். தாளை எழுதியவர் அளிக்க வேண்டியதில்லை.

ஆண்டுக்கொருமுறை அல்லது இரண்டு முறைகள் கூடும் தேசீயக் கடன் குழு பல்வேறு பகுதிகளுடைய கடன் தேவைகளை மதிப்பிட முடியுமா என்பது சர்ச்சைக்குரியது. வளரும் நாட்டில் பல பகுதிகளின் கடன் தேவைகள் விரைவில் பெருகும். ஆனால், குழு அடிக்கடி கூடினால் மைய வங்கிக்கு நிகரான மற்றொரு நிலையம் தோன்றுவதற்கு இடம் ஏற்படும்.

வங்கி முறையில் அரசியல்

இந்திய வங்கிகள் விவசாயத்திற்கும், சிறு தொழில்களுக்கும் சரிவர உதவி செய்யவில்லை என்ற குற்றச்சாட்டுக்கு வங்கிகள் காரணமில்லை. மூன்று திட்ட காலங்களிலும் பெரிய திட்டங்களிலும், அளவுச் சிக்கனத்திலும், கனரகத் தொழில்களிலுமே கவனம் செலுத்தினர். தனியார் வங்கிகளின் கடன் கொள்கை இவைகளுக்குத் தகுந்தவாறு அமைந்திருந்தது. இப்பொழுது வங்கிக் கடன் பகிர்வுக்குப் புதிய முன்னுரிமைகளை அமைக்கின்றனர், கடன் கொள்கை திருத்தியமைக்கப்படும்போது தொழிலுக்குக் கிடைக்கும் பகுதி குறையும். இதுகாறும் வளர்ந்துள்ள திட்டங்கள் பெறும் தொகையும் குறையும். இப் பகுதிகள் பெறும் கடனுதவி குறைவதால் இவைகளுடைய உற்பத்தி குறையும். முன்னரே உள்ள பணவீக்கம் மேலும் அதிகரிக்கும். இதுகாறும் சிறு தொழில்களுக்கும் விவசாயத்திற்கும் வர்த்தக வங்கிகள் கடனுதவி யளித்ததில்லை. இவைகளுக்கு உதவியளிக்கச் சில நிலையங்களை நிறுவியுள்ளனர். மாநில நிதிக் கார்ப்பரேஷன் சிறு தொழில்களுக்கும், கூட்டுறவுச் சங்கங்களும், நில அடைமான வங்கிகளும், விவசாய மீள்நிதிக் கார்ப்பரேஷனும் விவசாயத் துறைக்கும் நிதியுதவி யளிக்கின்றன. இந்த நிலையங்கள் ஏன் இப்பகுதிகளுக் குதவியளிக்க முடியவில்லை என்பதைச் சரிவர ஆராயாமல் வங்கிகள் இத்தொழிலை மேற்கொள்ளுவதற்குத் தகுந்தவாறு அவைகளை அமைக்கின்றனர். நல்ல பெயர்பெற்ற பெரிய நிறுவனங்களுக்குக் கடனுதவி யளிப்பதை விடுத்துச் சிறிய நிறுவனங்களுக்கும், நலிவுற்ற பகுதிகளுக்கும் அவை உதவியளிக்க வேண்டுமென்று கூறுகின்றனர். நெடுங்கால வளர்ச்சியின் பலனாக இந்திய வங்கி முறை வளர்ச்சி குன்றிய நாடுகளின் வங்கி முறைக்குள் மிகச் சிறந்த முறையாக வளர்ந்துள்ளது. சோஷலிச சமுதாயத்தை உருவாக்க முனைவதில் வங்கி முறையில் அரசியலைப் புகுத்துவது அதன் அமைப்பைப் பாதிக்கும். இவ்வமைப்பு அண்மைக் காலத்தில் வளர்ச்சி பெற்றுள்ளது.

கடன் திட்டமிடலைத் திசைக் கட்டுப்பாடுகள் மூலமும், தேர்வுக் கட்டுப்பாடுகள் மூலமும் செய்தல் வேண்டும். ஆப்பிரிக்

காவில் அண்மையில் விடுதலை பெற்ற நாடுகள் இக் கட்டுப் பாட்டுக் கருவிகளை வெற்றிகரமாகக் கையாளுகின்றன. ரிசர்வ் வங்கி தற்போது கொண்டுள்ள அதிகாரத்தைப் பயன்படுத்தி வங்கிக் கடன் அளவையும் ரகத்தையும் நன்கு கட்டுப்படுத்தலாம். ரிசர்வ் வங்கி வர்த்தக வங்கிகளுக்கு ஆணைகளைக் கொடுக்கலாம், தேர்வுக் கட்டுப்பாடுகள் அமலாக்கலாம், குறிப்பிட்ட தொகைக்கு மேற்பட்ட கடனை ரிசர்வ் வங்கியின் அனுமதியின்றி கொடுக்கக் கூடாது என்று உத்தரவிடலாம், இத்தகைய கட்டுப்பாடுகள் மூலம், ட்யூனிசியா, மொராக்கோ, சூடான் முதலிய நாடுகளைப் போல் வேண்டாத துறைகளிலிருந்து முக்கியமான துறைகளுக்கு வங்கிக் கடன்களைத் திருப்பலாம். குறிப்பிட்ட துறைகளின் கடன் மட்டத்தை உயர்த்தலாம், சிலவற்றின் கடன் வரம்பைக் குறைக்கலாம். வங்கியின் நிறுவாகக் குழு அனுபவம் வாய்ந்தது, தன் ஆய்வுத் துறையின் ஆலோசனையைக் கொண்டு தக்க நேரத்தில் சரியான நடவடிக்கை எடுக்கலாம், கடன் முறை சரிவர இயங்குமாறு செய்யலாம். தேசீய கடன் குழுவில் பல தரப்பட்ட உறுப்பினர்கள் இருக்கின்றனர். அது மிகப்பெரிய நிலையம். ஆண்டுதோறும் கூடும் இந் நிலையம் துல்லியமான முடிவுகளை எடுக்கமுடியு மென்பது வியப்பாக இருக்கின்றது. வங்கிகள் மீது கொண்டுவந்த சமுதாயக் கட்டுப்பாடு அரசியல் காரணங்களைக் கொண்டிருந்தன. நீண்டகாலமாக வங்கிகளை அரசுடைமையாக்க வேண்டுமென்று வாதாடிய ஆளும் கட்சியின் ஒரு பிரிவினரைத் திருப்தி செய்வதற்காகச் சமுதாயக் கட்டுப் பாட்டை அமல் செய்தனர். அரசியல் சித்தாந்தக் கருத்தே இதன் முக்கிய காரணமாகும். சித்தாந்தவாதிகளை இவ்வாறு திருப்தி செய்தபிறகு நாட்டுடைமை எவ்வாறு நடைமுறைக்கு உகந்ததல்ல என்பதை அரசினர் உணர்ந்தனர். இக்கட்டான நிலையிலிருந்து மீட்சி பெறுவதற்காக சமுதாயக் கட்டுப்பாட்டை அரசினர் அமல் செய்தனர். பிரச்சினைக்கு இதை இடைநிலைத் தீர்வாகக் கருதினர். அதை நாட்டுடைமையின் முதல் படிவமாகக் கருதினர். சமுதாயக் கட்டுப்பாட்டில் சித்தாந்தக் குறிக்கோள்கள் கைகூடா விடில், வங்கிகளை நாட்டுடைமை செய்வதற்கு ஏற்பாடுகள் செய்யவேண்டும் என்று அரசுடைமையை ஆதரித்தவர்கள் கூறினர். சித்தாந்தவாதிகள் நாட்டுடைமைக்காகப் போராடியதைச் சமுதாயக் கட்டுப்பாடு தற்காலிகமாக நிறுத்திவைத்தது; இது மட்டுமே இக் கட்டுப்பாட்டின் பலன் என்று கூறலாம்.

பல நிலையங்களைத் தொடங்குவதில் அரசியலார் அக்கறை காட்டினர். தேசியக் கடன் குழுவை நிறுவியது இதைக் காட்டு கின்றது. பல நிதிநிலையங்களை நிறுவவேண்டுமென்ற ஆர்வம்

சில ஆண்டுகளுக்கு முன் தொழில் வளர்ச்சி வங்கி தோன்று வதற்குக் காரணமாக இருந்தது. இதன் பணிகளைத் தொழில் நிதிக் கார்ப்பரேஷன் நன்கு செய்யலாம். இதற்கு அதன் சாசனத்தைச் சிறிது மாற்றியமைத்தால் போதும். கடன் திட்ட மிடலை ரிசர்வ் வங்கியே நல்லமுறையில் செய்யலாம். ஆனால், இதற்காகத் தேசீயக் கடன் குழுவை நிறுவினர். ரிசர்வ் வங்கி யின் மையக் குழுவின் உறுப்பினர்களுடைய திறமையை எவ்வளவு தூரம் அரசினர் நம்பினர் என்பதை இது காட்டு கின்றது. மையக் குழு பழைய கருவிகளையும், புதியவைகளையும் கொண்டிருக்கின்றது. இருந்த போதிலும் அது கடன் தொகை களைச் செம்மையான முறையில் விரும்பிய துறைகளில் வழிப் படுத்த இயலவில்லை என்று தோன்றுகின்றது. கடன் முறையில் தேசியக் கடன் குழு மேலும் ஓர் உபரி உறுப்பாக இருக்காதா என்று தோன்றுகிறது.

1967-ல் வங்கிச் சட்டத் திருத்தத்தைக் [Banking Laws (Amenment) Bill, 1967] கொணர்ந்தனர். இது வங்கிகளின் நிருவாகத்தில் முக்கியமான மாறுதல்களைப் புகுத்தியது. வங்கி களின் இயக்குநர் குழுவை மாற்றியமைக்க வேண்டும். கணக்கு முறை (Accountancy), விவசாயம், சட்டம், கிராமியப் பொருளா தாரம், நிதியியல், சிறு தொழில்கள் முதலியவை அனுபவமும், தேர்ச்சியும் கொண்டவர்கள் குழுவில் 51% இடம் பெற வேண்டும். முழு நேரப் பணி புரியும் தலைவர் ஒருவர் இருக்க வேண்டும்.

சமுதாயக் கட்டுப்பாட்டின் விளைவாக எத்தகைய நிருவாக அமைப்பு தோன்றும் என்பது தெளிவாக இல்லை. வங்கிகளின் உரிமையை அவைகளுடைய நிருவாக அமைப்பிலிருந்து பிரித் தனர். நிருவாகத்தை அதில் தேர்ச்சி பெற்றவர்களிடம் ஒப் படைத்தனர். சாதாரணமாகத் தொழிலதிபர்கள் நிருவாகிகளாக இருந்தனர். வங்கித்துறை அலுவலர்கள் நியமனமாயினர். அனு பவம் பெற்ற அலுவலர்கள் தலைமை பீடத்தில் இடம் பெற்றனர். இதுகாறும் தொழிலதிபர்கள் நிருவாக அமைப்பில் உயர் இடங் களைப் பெற்றிருந்தனர். பழைய முறைப்படி நிருவாக சபை உறுப்பினர்களும், தலைவரும் இவர்களுடைய அதிகாரத்தையும் செல்வாக்கையும் கட்டுப்படுத்தினர். உயர் அலுவலர்களும் இவர் களை ஓரளவு கட்டுப்படுத்தினர். ஆனால், இப்பொழுது உயர் அலுவலரே தலைமை பீடத்தில் இருப்பதால் பரஸ்பர கட்டுப் பாட்டுக்கு இடமில்லை. பழைய முறை நல்ல முறையாக இருந்தது. நிருவாக சபைத் தலைவர் உயர்மட்ட அதிகாரி. ஆகையால்,

அவருடைய சகாக்களின் ஆலோசனைகளைப் புறக்கணித்து அவர் தன்னிச்சைப்படி நடக்கலாம்.

பழைய இயக்குநர்கள் வங்கிகளில் முதலீடு செய்தமையால் விசேஷ அக்கறை கொண்டிருந்தனர். ஆனால் புதிய இயக்குநர் களுக்கு இத்தகைய நிலை இல்லை. அமெரிக்காவில் 1930-லிருந்து 1940-க்குள் பல வங்கிகள் முறிந்தமைக்கு இயக்குநர்கள் அவை களில் குறைந்த நிதியீடு செய்து குறைவான அக்கறை கொண் டிருந்தது காரணமாகும். மந்த காலத்திற்குப்பின் நிறைவேறிய வங்கிச் சட்டப்படி கட்டுக்கோப்பான, சிறிய இயக்குநர் குழு இருத்தல் வேண்டும். இயக்குநர்களும் கணிசமான அளவு வங்கிகளில் முதலீடு செய்திருக்கவேண்டும். இதன் விளைவு எப்படி இருக்கும் என்பதைப் பற்றி ஒன்றும் சொல்ல முடியாது.

வங்கி முறையைத் திருத்தி யமைக்கவும், தேசீயக் கடன் குழுவை நிறுவவும் முனைந்தவர்கள், நாட்டுச் செலாவணி முறை பற்றிய விவரங்களைச் சேகரித்து ஓர் ஆய்வு செய்யாமலே ஒரு முடிவெடுத்தனர். இது விந்தையானது. நாட்டு வங்கி பற்றிய விசாரணைக்குழு அமைத்து (அது தன் வேலையைப் பூர்த்தி செய்து) 30 ஆண்டுகள் கடந்துவிட்டன. இக் காலத்தில் பொருளாதாரத்திலும், நிதி முறையிலும் பெரிய மாறுதல்கள் நிகழ்ந்துவிட்டன. பெரும் மாறுதல்களைப் புகுத்தும் முன் ஓர் உயர்மட்ட விசாரணைக் குழுவை நியமித்திருக்கவேண்டும். இது செலாவணியின் நிதி முறையில் பல அம்சங்களைப் பயின்று தன் அறிக்கையைக் கொடுத்திருக்கவேண்டும்.

# 22. இந்திய வர்த்தக வங்கிமுறையில் அரசுத் துறை: 14 பெரிய ஷெடியூல் வங்கிகளை நாட்டுடைமையாக்குதல்

1969ஆம் ஆண்டு ஜுலை 19ஆம் தேதி பிரதம மந்திரி 14 பெரிய ஷெடியூல் வங்கிகளைக் குடியரசுத் தலைவரின் (President) ஆணைமூலம் நாட்டுடைமையாக்கவேண்டுமென்று முடிவு செய்தார். வங்கிகளை அரசு எடுத்துக்கொள்வது பற்றிய சட்டமொன்றை (Banking Companies Acquisition and Transfer of Undertaking Bill) 1969-ல் ஜுலை 25 தேதி பாராளுமன்றத்தில் கொணர்ந்தனர். பின்னர் இதை நிறைவேற்றினர். 1969 ஆகஸ்ட் 9 தேதி ஜனாதிபதி இதை ஏற்றார். சுப்ரீம் கோர்ட்டில் அரசியலமைப்பின், 14, 19, 31(2)-ஆம் கூறுகளுக்கு இச்சட்டம் முரணானது என்று 1970, பிப்ரவரி 10 தேதி வாதித்தனர். நீதிமன்றமும் சட்டத்தை நிராகரித்தது. அதன் கருத்துகளை மனத்தில் கொண்டு சட்ட விரோதமான அம்சங்களை நீக்கப் பார்லிமெண்டில் ஒரு மசோதாவைக் கொணர்ந்தனர். இச்சட்டம் நிறைவேறியது. 1969, ஜுலை 19 தேதியிலிருந்தே இது அமலில் வந்ததாகப் பாவித்தனர். 1969-ல் செய்த நாட்டுடைமை செல்லுபடியாகும் என்பது பொருள்.

**அரசுக்குக் கிடைத்த நிதி பற்றிய மதிப்பீடு**

வங்கிகளின் நாட்டுடைமை பற்றிய கருத்து வேற்றுமைகளும், காரசாரமான விவாதங்களும் இப்பொழுது அடங்கிவிட்டன. எனவே இப்பொழுது இந்திய வங்கி முறையில் பொதுத் துறையிலுள்ள வங்கியமைப்பு பற்றிய மாறுதல்களைக் காணலாம். இதில் மிக முக்கியமானது 14 வங்கிகள் அரசுடைமையானதின் விளைவாக முன்னுரிமைப் பகுதிகளாகிய, விவசாயம், ஏற்றுமதி முதலியவைகளுக்கு அரசு எவ்வளவு தொகையைப் பெற்றது என்பதுதான். இந்த வங்கிகளுடைய இலாப-இழப்புக் கணக்கு (profit and loss account) இருப்புநிலைக் குறிப்பு (balance sheet) பற்றிய விவரங்களைப் பின்வரும் பட்டியலில் பார்க்க

லாம். 1968ஆம் ஆண்டு டிசம்பர் 31 தேதி வரை உள்ள காலத்திற்கு இந்த விவரங்கள் உரியவை.

பட்டியல் (கோடி ரூபாயில்)

| வங்கிகளின் எண்ணிக்கை | செலுத்திய முதல் | காப்பு நிதி | அவைகளுடைய நிதி | டெப்பாசிட்டுகள் | முதலீடுகள் | அவை கொடுத்த கடன்கள் |
|---|---|---|---|---|---|---|
| 14 | 28.50 | 36.62 | 65.12 | 2741.75 | 781.63 | 1743.66 |

அரசுடைமையை ஆதரிப்பவர்கள் தனியாருக்குச் சேர வேண்டிய இலாப ஈவு நாட்டுடைமைக்குப் பிறகு அரசினரைச் சேரும் என்று வாதிக்கின்றனர், வங்கிகளை அரசு பறித்துக் கொள்ள முடியாது. ஏதேனும் ஒரு தொகையை இழப்பு ஈடாகக் கொடுக்கவேண்டும். இதை அரசின் நீண்டகாலப் பத்திரங்களாகக் கொடுக்கின்றனர் என்றும் 4½% வட்டி இதற்குக் கொடுக்க வேண்டுமென்றும் வைத்துக்கொண்டால் நாட்டுடைமையான வங்கிகளின் முதல் ரூ. 65.12 கோடிக்கு ஆண்டுதோறும் ரூ. 293.04 லட்சம் கொடுக்கவேண்டும். முன்னர் 1968-ல் கொடுக்கப்பட்ட லாப ஈவு ரூ. 436.4 இலட்சத்தில் இத்தொகையைக் கழிக்கவேண்டும். எனவே இலாபம் முழுவதையும் அரசினர் முன்னுரிமைப் பகுதிகளுக்காகச் செலவு செய்ய முடியாது. இதில் ரூ. 436.4—293.04 லட்சத்தை, அதாவது ரூ. 143.36 லட்சத்தையே அரசினர் பெறமுடியும். அண்மையில் நாட்டுடைமையான வங்கிகளுக்குக் கொடுக்கவேண்டிய இழப்பு ஈடு பற்றிய குறிப்பொன்றை இவ் வதிகாரத்தின் இறுதியில் காணலாம்.

அரசுடைமையின் விளைவாக அரசினர் எவ்வளவு வங்கிகளின் டெப்பாசிட்டுத் தொகைகளைப் பெறக்கூடும் என்பதைக் கவனிக்கும்போது, 1968ஆம் ஆண்டின் இறுதியில் டிசம்பர் மாதம் நாட்டுடைமையான 14 வங்கிகள் ரூ. 2741.75 கோடியை டெப்பாசிட்டாகக் கொண்டிருந்தன. அதே நாள் பத்திர முதலீடு ரூ. 781.63 கோடி. இத் தொகை முழுவதையும் கருவூல உண்டியல்களிலும் அரசு பத்திரங்களிலும் முதலீடு செய்திருந்தனர் என்று வைத்துக்கொள்ளலாம். ரூ. 2741·45 கோடியில் ரூ. 781.63 கோடியை நீக்கினல் கிடைக்கக்கூடிய ரூ. 1960.62 கோடியையே அரசினர் பெறமுடியும்.

மேலும் 14 நாட்டுடைமையான வங்கிகள் கொடுத்த கடன் தொகை 1968ஆம் ஆண்டு டிசம்பர் 31ஆம் நாள் ரூ. 1743·66 கோடியாக இருந்தது. இத் தொகை முழுவதையும் தனியார் துறைக்கே கொடுத்திருந்தனர் என்று வைத்துக் கொண்டால்

ரூ. 1960.62—1743,66 அரசு தம் விருப்பப்படி செலவுசெய்யக் கூடிய தொகை ரூ. 216.96 கோடியாக இருக்கும். தேசீய முன்னுரிமைப் பகுதியில் இதை மட்டுமே செலவு செய்ய முடியும். தேச உடைமை செய்த பின்னரும் வர்த்தகம், தொழில் முதலிய துறைகளின் தேவைகளைக் கவனிக்கலாம் என்று பிரதம மந்திரி பாராளுமன்றத்தில் உறுதி கூறினர். நாம் கலப்புப் பொருளாதார முறையைக் கொண்டிருக்கும்வரை, இதில் தனியார் துறை முக்கிய இடம் பெற்றிருக்கும். பிரதம மந்திரி நாட்டுக்குத் தன் முதல் உரையில் குறிப்பிட்டபடி நாட்டுடைமையான வங்கிகள் தனியார் துறையின் நிதித் தேவைகளைப் பூர்த்திசெய்ய வேண்டும். பொதுத் துறையின் முதலீட்டுக்குத் திட்டப்படி ரூ. 14,000 கோடி தேவை. இத்துடன் ஒப்பிடும்போது ரூ. 216.96 கோடி மிகக் குறைவாக இருக்கின்றது.

நாட்டுடைமைத் திட்டத்தில் வங்கிகள் சிறு தொழில்களுக்கு நிதியுதவியளிப்பது முக்கிய இடம்பெற்றுள்ளது. வளரும் பொருளாதார அமைப்பில் சிறு தொழில்களைப் பெருக்குவதற்கு நியாயமான காரணம் இருக்கின்றது. ஆனால், சிறு தொழில்களுக்கு அளவுக்கு மீறிய இடம் கொடுக்கலாகாது, ஒவ்வொன்றையும் பற்றிய முழு நோக்கையும் நாம் இழக்கலாகாது. சிறு தொழில்கள் பற்றிய சித்தாந்தக் கொள்கை காந்தியடிகளின் தத்துவத்தை அடிப்படையாக கொண்டிருக்கிறது. ஆனால், இது திட்டமிடுவோரைத் தொடக்க காலத்தில் குழப்பிவிட்டது. தவருன கொள்கையை வகுப்பதற்கு இது காரணமாகவும் இருந்தது. மூன்று திட்டங்களில் சித்தாந்தக் கருத்துகள் அதிக இடம் பெற்றபோதிலும் நான்காவது திட்ட காலத்தில் அரசினர் உண்மை நிலையைப் புரிந்து கொண்டனர். சிறு தொழில்களையும், கிராமீயத் தொழில்களையும் சித்தாந்தக் காரணங்களுக்காக ஏற்கலாகாது என்று பாராட்டுதலுக்குரிய முறையில் வெளிப்படையாகவே ஒத்துக் கொண்டனர். இத்தகைய துறைகளுக்கு நிதியுதவியளிக்கும்போது தேர்வு முறையைப் பின்பற்றவேண்டும். உற்பத்தியின் அளவைப் பெருக்குவதாலோ அல்லது எந்திரங்களைப் பயன்படுத்துவதாலோ அதிக சிக்கனங்கள் (economics) ஏற்படாதா என்பதைக் கவனிக்க வேண்டும். சில குறிப்பிட்ட சிறு தொழில்களில் நவீன முறை உற்பத்தியைப் புகுத்தவும், திட்டமிட்டு எந்திரங்களை இவைகளில் பயன்படுத்தவும் முனைந்துள்ளனர். இது இந்தியப் பொருளாதாரச் சிந்தனையில் ஒரு திருப்பமாகும். இந்த நிலையில் எதிர் காலத்தில் திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சிக்கு வழி வகுக்கும்போது உணர்ச்சிவசப்பட்டோ சித்தாந்த அடிப்படையிலோ சிறு தொழில்களை ஆதரிப்பது சரியல்ல.

இந்தியத் திட்டப்படி கனரகத் தொழில்கள் வளர்ச்சியின் அடிப்படையாகும். திட்டமிடலின் தலைவரான பண்டித நேரு அவர்களே கனரகத் தொழிலின் முக்கியத்துவத்தை உணர்த்தினர். சிறு தொழில்களை ஆதரிக்கவேண்டும் என்ற ஆர்வத்தில் பெரிய தொழில்களைப் புறக்கணித்து, அவைகளுக்குரிய நிதிகளைச் சிறு தொழில்களுக்குத் திருப்புவது சரியல்ல. நம் வங்கி நிதி குறைவாக இருக்கின்றது. இவ்வாறு செய்வது பல ஆண்டுகள் செய்த முயற்சியின் விளைவாக எழும்பியுள்ள தொழிலமைப்பின் அடித்தளத்தையே தகர்த்துவிடுவதற்குச் சமானமாகும்.

வங்கி முறை சிறு தொழில்களை அறவே புறக்கணித்து விட்டது என்று கூறுவது தவறு. ரிசர்வ் வங்கி எடுத்த ஒரு கணக்குப்படி 1960ஆம் ஆண்டு டிசம்பர் முதல் 1967ஆம் ஆண்டு மார்ச் வரை ஷெட்யூல் வங்கிகள் சிறு தொழில்களுக்குக் கொடுத்த கடன் ரூ. 27·54 கோடியிலிருந்து ரூ. 178·55 கோடியாக உயர்ந்தது. மொத்தக் கடனில் இது 66% ஆகவும், தொழில்களுக்குக் கொடுத்ததில் 10·2% ஆகவும் இருந்தது.[1]

வங்கிகளை நாட்டுடைமை ஆக்குவதால் சிறு தொழில்களுக்குக் கிடைக்கும் கடனை, மந்திரக்கோல் மூலம் செய்வதுபோல் பெருவாரியாக உயர்த்த முடியாது. மார்ச் 1968ஆம் ஆண்டின் இறுதியில் ஸ்டேட் வங்கியும் அதன் துணை நிறுவனங்களும் ரூ.63·64 கோடியைச் சிறு தொழில்களுக்கு, இயங்கும் முதலுக்காக (working capital) நடுத்தரகாலக் கடனாகக் கொடுத்தன.[2] இவ் வங்கிகளின் மொத்தக் கடன் தொகை ரூ. 955 கோடியில் (டிசம்பர் 1968-ல்) இக் கடன்கள் 6·6% ஆக இருந்தன.

முடிவாகக் கூறும்போது வங்கி முறையின் திறனை அதன் நெகிழ்ச்சியும், போட்டித் திறனும் தீர்மானிக்கின்றன என்று கூறலாம். இங்கிலாந்தின் பத்திரிகைச் செய்தி நிறுவனம், கனடா நாட்டின் செலாவணி நிருவாகத்தையும், வங்கிக் கட்டணங்களைப் பற்றி கூறும்போது நெகிழ்ச்சியுள்ள, போட்டித் திறன் வாய்ந்த வங்கிகள் மிக முக்கியம் என்பதை வலியுறுத்தியது. டெப்பாசிட்டுகளின் வீதங்கள் கடன் வீதங்கள் பற்றிய வங்கிகளின் ஒப்பந்தத்தை ரத்துச் செய்ய வேண்டுமென்றுகூடப் பரிந்துரைத்தனர். ஆனால், இந்தியாவில் சிறப்பான வளர்ச்சி பெற்ற தனியார் வங்கிகளை நாட்டுடைமையாக்கியது வருந்தத்தக்கதாகும். டெப்பா

[1] Reserve Bank of India Bulletin, January 1961, pp. 42–43.
[2] Report on Currency and Finance, Reserve Bank of India 1967-68, pp. 108—110.

சிட்டு வீதங்களிலும், கடன் வீதங்களிலும் இருந்த கடைசி நிலைப் போட்டியின் அறிகுறிகளையும் நீக்கிவிட்டனர்.

நாட்டுடைமைக்குமுன் அதை ஆதரித்தவர்கள், ஸ்டேட் வங்கியின் திறமையைச் சுட்டிக் காட்டினர். ஆனால், இதுகாறும் ஏதேனும் போட்டியிருந்தால் முதிர்வு பெற்ற தனியார் வங்கிகளே அதற்குக் காரணமாக இருந்தது என்று கூறலாம். பெரிய தனியார் வங்கிகள் அரசுடைமையான பிறகு போட்டித் திறன் அறவே நீங்கிவிடும். தனியார் வங்கிகளைவிட அரசு வங்கிகள் டெப்பாசிட்டர்களுக்கும். கடன் வாங்குவோருக்கும் இதர வாடிக்கையருக்கும் அதிக நன்மை பயக்கும் என்று நம்புவது தவறு. போட்டியற்ற வங்கி முறை பெறக்கூடிய டெப்பாசிட்டுகளை மற்ற நிதி நிலையங்கள் பெறும். இவைகளைக் கட்டுப்படுத்த முடியாது. இவை அதிகாரிகளின் பிடியிலிருந்து நழுவிவிடும். பொருளாதார வளர்ச்சி பற்றிய கோட்பாட்டினர் இடைநிலை நிதிநிலையங்களை நவீனமயமாக்க வேண்டும் என்றும் இவ்வாறு செய்வது வளர்ச்சிக்குதவும் என்றும் கூறுகின்றனர்.

அரசியல் ரீதியில் பெரிய வர்த்தக வங்கிகள் பலவீனமாக இருக்கின்றன. அவை மிகப் பெரியவை, சித்தாந்தச் சீர்திருத்தவாதிகளின் இலக்கை அவை தப்பமுடியாது. சீர்திருத்தவாதிகள் தீட்டும் பல பெரிய கவர்ச்சிகரமான திட்டங்களுக்கும் (காலைச் செய்தித் தாளில் விளம்பரம் பெறும் வகையில் இவர்கள் செயல் புரிகின்றனர்) அப்பாவிப் பொதுமக்களின் கற்பனைகளுக்கும் இவை இலக்காகும்.

**நாட்டுடைமையான வங்கிகளின் சாதனை பற்றிய மதிப்பீடு**

பெரிய வங்கிகளின் அரசுடைமையின் நோக்கங்கள், வங்கிப் பணிகளை நாட்டின் பல பகுதிகளுக்குப் பரப்புவதும், இதுகாறும் புறக்கணிக்கப்பட்ட முன்னுரிமைப் பகுதிகளுக்குக் கடனுதவி நல்குவதும் ஆகும். எனவே, நாட்டின் சோஷலிசப் பொருளாதாரத் திட்டமிடலில் வங்கிகளை நாட்டுடைமை செய்வது ஒரு படிவமாகும்.

வங்கிகள் இல்லாத இடங்களிலும் அவை போதிய அளவு இல்லாத இடங்களிலும் கிளைகளை நிறுவ அரசுடைமையான வங்கிகள் நடவடிக்கை எடுத்தன. 1969ஆம் ஆண்டு ஜூன் மாதத்திலிருந்து 1972 ஜூன் வரை ஸ்டேட் வங்கி 1449 கிளைகளை நிறுவியது. மற்ற 14 வங்கிகள் 3058 கிளைகளை ஆரம்பித்தன. இவைகளில் 1958 கிளைகள் அதாவது 64 சதவீதம் முன்னர்

வங்கிகள் இல்லாத இடங்களில் தோன்றின. வங்கி வசதி பெறும் மக்கள் தொகையின் சராசரி டிசம்பர் 1960-ல் 92,000 ஆக இருந்தது. இது 1969 டிசம்பரில் 65,000 ஆகவும், 1971-ல் 46,000 ஆகவும் குறைந்தது. 'தலைமை வங்கி முறையின்கீழ் (Lead Bank Scheme) கிளைகளை நிறுவுதல் மேலும் ஊக்கமடைந்தது. வங்கிகள் இத் திட்டத்தின்கீழ் தங்களுக்கு ஒதுக்கப்பட்ட மாவட்டங்களில் விரைவில் கணக்கெடுக்க முனைந்தன. 335 மாவட்டங்களில் இத்தகைய கணக்கெடுத்தன. இதைக் கொண்டு பிராந்தியத் திட்டங்களுக்கு அவை நிதியுதவி நல்க வேண்டும்.

சமுதாயக் கட்டுப்பாட்டை அமல் செய்ததிலிருந்து வங்கிகள் விவசாயக் கடன் கொடுப்பதைச் செம்மைப்படுத்திவிட்டன; இத் துறைக்குக் கொடுத்த கடன் தொகை தொடர்ந்து பெருகிவிட்டது. வங்கிகள் பரவலான பகுதிகளில் நிதிகளை விரையமாக்காமல் குறிப்பிட்ட பகுதிகளில் தீவிரமாகச் செயல்புரிகின்றன. கிராமங்களை ஏற்கின்றன (village adopter). பல இடங்களில் அவை சிறு விவசாயிகளின் வளர்ச்சிக் கழகத்துடனும் (Small Farmers Development Agency) இறுதிநிலை விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்கள் சங்கத்துடனும் (Marginal Farmers and Agricultural Labours) சேர்ந்து இயங்குகின்றன, விவசாயத் துறைக்குக் கொடுத்த மொத்தக் கடன் ரூ. 342 கோடியாக (1971 ஜூன் இறுதியில்) இருந்தது. இத்தொகை 1971 டிசம்பர் இறுதியில் 395 கோடியாக உயர்ந்தது. இதில் விவசாயிகளுக்கு நேரடியாகக் கொடுத்த தொகை ரூ. 184 கோடியிலிருந்து ரூ. 263 கோடியாக உயர்ந்தது. வர்த்தக வங்கிகளின் மொத்தக் கடனில் விவசாயத்திற்குக் கொடுத்த கடனின் விகிதம் 1969ஆம் ஆண்டில் ஜூன் இறுதியில் 5·4 சதவீதமாக இருந்தது. 1971ஆம் ஆண்டு மே மாத இறுதியில் இது 8·4 சதவீதமாக உயர்ந்தது.

சிறு தொழில்கள் துறையிலும் வர்த்தக வங்கிகள் கணிசமாக முன்னேறியுள்ளன. அவை 1972 மார்ச் இறுதியில் சிறுதொழில்களுக்கு ரூ. 573·1 கோடி நிதியுதவி செய்தன. 1971 மார்ச் இறுதியில் இத் தொகை ரூ. 493.5 கோடியாக இருந்தது. அவை கொடுத்த மொத்தக் கடனில் சிறு தொழில்களின் பங்கு 1971-ல் 10·6% ஆக இருந்தது; 1972 மார்ச் மாதம் இது 11% ஆக உயர்ந்துவிட்டது. தொழிலில் அமர்ந்திருப்போர்க்கும், தாமே தம் தொழிலைச் செய்வோருக்கும் சில்லறை ர்த்தகத்தில் ஈடுபட்டிருப்போருக்கும் வர்த்தக வங்கிகள் கணிசமாக உதவியுள்ளன. விவசாயம், சிறுதொழில்கள், புறக்கணிக்கப்பட்ட துறைகள் முதலியவைகளுக்கு வர்த்தக வங்கிகள் கொடுத்த

கடனுதவி 1971 டிசம்பர் மாதம் ரூ. 608 கோடியாக இருந்தது. 1970 டிசம்பரில் இது ரூ. 523 கோடியாகவும் 1969 ஜூனில் ரூ. 236 கோடியாகவும், இரண்டரை ஆண்டுகளில் இத்தொகை 158% உயர்ந்துவிட்டது.

இதே காலத்தில் டெப்பாசிட்டுகளும் கணிசமான அளவு பெருகிவிட்டன. ஜூன் 1969-ல் ஷெடியூல் வர்த்தக வங்கிகளின் டெப்பாசிட்டு ரூ. 4645.8 கோடியாக இருந்தன. இது 1972 ஜூன் இறுதியில் ரூ. 7523.5 கோடியாக உயர்ந்துவிட்டது, அதாவது 62% உயர்ந்துவிட்டது. 14 நாட்டுடைமையான வங்கிகளின் டெப்பாசிட்டுகள் 1969-ல் அரசுடைமையாகும்போது ரூ. 2,625 கோடியாக இருந்தது. 1971ஆம் ஆண்டின் இறுதியில் இது ரூ. 3829·1 கோடியாக உயர்ந்துவிட்டது. 30 மாதத்தில் இது 50 சதவீதம் கூடிவிட்டது.

இதுகாறும் புறக்கணிக்கப்பட்ட பகுதிகளுக்கு வர்த்தக வங்கிகள் அளித்த கடனுதவி பெருமளவு கூடிவிட்டது. ஆனால், நகர்ப்புறங்களிலும் கிராமங்களிலும் இப்பொழுதும் அதிக டெப்பாசிட்டுகளைத் திரட்டிக் கடனுதவியைப் பெருக்க இடமிருக்கின்றது. நாட்டுடைமையான வங்கிகள் செம்மையான வர்த்தக வங்கிப் பழக்கங்களைப் பின்பற்றவேண்டும். திட்டங்கள் நிறைவேற்றக்கூடியவையாகவும், செம்மையாகவும் இருக்கின்றனவா என்று பார்க்கவேண்டும். கடன் வாங்குவோரின் செலுத்தும் திறனும் சொத்துகளும் சரியாக இருக்கின்றனவா என்றும் காணவேண்டும். வங்கிகள் சரிவர இயங்க இவ்விரு விஷயங்களையும் கவனிக்கவேண்டும். இவைகளைப் புறக்கணித்தால் ஆபத்துகள் ஏற்படலாம். நாட்டுடைமையான வங்கியின் பொறுப்பாளர் ஒருவர் திட்டங்களின் நிறைவேறும் தன்மையை விளக்கியுள்ளார். (திட்டங்களின்) 'நிறைவேறும் தன்மை முக்கியமானது. எனவே ஒரு திட்டம் வங்கியின் நிதியுதவிக்கு ஏற்றதா என்பதைக் காணவேண்டும். திட்டம் நாட்டுக்குகந்ததா என்று பார்ப்பதைவிட அது நிதியுதவிக்குரியதா என்று கவனிப்பதே முக்கியமானதாகும்.'[1]

### வங்கிக் கம்பெனிச் சட்டத்தின் கீழ் கொடுக்கவேண்டிய இழப்பு ஈடு பற்றிய ஒரு குறிப்பு

ஒவ்வொரு நாட்டுடைமையான வங்கிக்கும் அதன் விருப்பத்திற்கேற்ப இழப்பு ஈட்டை ரொக்கமாகவோ அல்லது மாற்றக்கூடிய வெண்ணிலைக் கடன் பத்திரமாகவோ, மைய அரசின்

[1] Speech delivered by R. B. Shah, Chairman of the Indian Banks Association, 17 April 1970 in Bombay.

பத்திரமாகவோ கொடுக்கலாம். ரொக்கத்தை ரிசர்வ் வங்கி செக்காக மூன்று சம தவணைகளில் கொடுப்பர். தவணைத் தொகைக்கு 4 சதவீதம் வட்டி கிடைக்கும். பத்திரங்கள் மூலம் கொடுக்கப்படும் தொகைகளை 10 ஆண்டு தவணை கொண்டுள்ள பத்திரங்களாக 4½% வட்டியுடன் கொடுத்தனர்; அல்லது 5½% வட்டியுள்ள 30 ஆண்டுத் தவணையுள்ள பத்திரங்களாகக் கொடுத்தனர். ஒரு பகுதியை ரொக்கமாகவும், மற்றதைப் பத்திர மாகவும் கொடுக்கலாம். இடைக்காலத் தொகை 75%-ஐ (செலுத்திய முதலில்) ஒவ்வொரு வங்கிக்கும் அவை வேண்டினால் கொடுக்க ஏற்பாடு செய்தனர். மொத்த இழப்பு ஈட்டில் இதை நீக்கிவிடுவர். வங்கிக் கம்பெனிச் சட்டப்படி [Banking Companies (Acquisition and Transfer of Undertaking) Act of 1969] கொடுக்கப்பட்ட தொகையை இழப்பு ஈட்டுத் தொகையில் கழித்துவிடுவர்.

14 நாட்டுடைமையான வங்கிகளுக்கும் ரூ. 87.4 கோடியை ஈட்டாகக் கொடுத்தனர். ஒவ்வொன்றின் பங்கையும் கீழே காணலாம்.

பட்டியல் * (லட்ச ரூபாயில்)

| | வங்கியின் பெயர் | தொகை |
|---|---|---|
| 1. | தி. சென்ட்ரல் பாங்க் ஆப் இந்தியா | 1,750 |
| 2. | பாங்க் ஆப் இந்தியா | 1,470 |
| 3. | தி பஞ்சாப் நாஷனல் பாங்க் | 1,020 |
| 4. | தி பாங்க் ஆப் பரோடா | 840 |
| 5. | தி யுனைடெட் கமர்சியல் பாங்க் | 830 |
| 6. | கனரா பாங்க் | 360 |
| 7. | யுனைடெட் பாங்க் ஆப் இந்தியா | 420 |
| 8. | தினு பாங்க் | 360 |
| 9. | சிண்டிகேட் பாங்க் | 360 |
| 10. | தி யுனியன் பாங்க் ஆப் இந்தியா | 310 |
| 11. | அலகபாத் பாங்க் | 310 |
| 12. | தி இண்டியன் பாங்க் | 230 |
| 13. | தி பாங்க் ஆப் மகாராஷ்டிரா | 230 |
| 14. | தி இந்தியன் ஓவர்சீஸ் பாங்க் | 250 |
| | மொத்தம் ரூ. | 8,740 |

* Source: The Gazette of India Extraordinary Part II, Sec. I, Tuesday, March 31, 1970, New Delhi.

# 23. இந்திய வங்கிக் குழு சிபாரிசுகளின் ஆய்வு

1963ஆம் ஆண்டு இந்த நூலாசிரியர் இந்தியப் பொருளாதார மாநாட்டின் தலைமையுரையை ஆற்றும்போது, உயர் அதிகாரம் பெற்ற வங்கிக் குழு ஒன்றை நியமனம் செய்து செலாவணிக் கடன் முறையை ஆய்வு செய்யும்படி ஏற்பாடு செய்ய வேண்டுமென்று குறிப்பிட்டார். வேலை, விலைகள், வளர்ச்சி முதலியவைகளைச் செலாவணி முறை எவ்வாறு பாதிக்கும் என்பதை இக் குழு கவனிக்க வேண்டுமென்று கூறினார். இங்கிலாந்தின் ராட்கிளிப் குழுவும், அமெரிக்கச் செலாவணிக் கடன் குழுவும் செய்த அலுவல்களை இந்தியக் குழு செய்யலாம்.

நாற்பது ஆண்டுகளுக்கு முன் வங்கித் தொழிலின் நிலை பற்றி இந்திய மைய வங்கி விசாரணைக் குழு விரிவான விசாரணை நடத்தியது. மாநில வங்கி விசாரணைக் குழுக்கள் இதற்குத் துணை செய்தன. இக் குழுவின் அறிக்கை வெளியானதிலிருந்து செலாவணி வங்கி முறையில் பெரிய மாறுதல்கள் நிகழ்ந்துள்ளன. ஒரு மைய வங்கி நிறுவப்பெற்றுள்ளது. வளரும் பொருளாதாரத்திற்கேற்ற முறையில் இது இயங்கி வருகின்றது. வர்த்தக வங்கி முறை பெருமளவு பெருகிவிட்டது. இதன் அமைப்பிலும், பணியிலும் குறிப்பிடத்தக்க மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. வங்கிகளை ஒத்த இடைநிலை நிதி நிலையங்கள் பல தோன்றியுள்ளன. ஐந்தாண்டுத் திட்டங்களைத் தொடங்கியதன் மூலம் பொருளாதாரத்தில் பெரும் மாறுதல்களைப் புகுத்தியுள்ளனர். இந்திய வங்கி முறை அதன் வளர்ச்சியில் ஓர் உச்ச நிலையை அடைந்து விட்டது. தெளிவான ஆய்வுப் பகுதிகளுடன் ஓர் உயர் வங்கிக் குழுவை நிறுவ வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சியைப் பின்னணியாகக் கொண்டுள்ள வங்கிச் செலாவணி முறையை ஆய்வு செய்வதற்கு ஒரு குழு தேவை. 1930—1940 காலத்திலிருந்து 1960—1970 காலம் பல வழிகளில் மாறுபட்டிருந்தது. பொருளாதாரக் கோட்பாடுகளிலும், கொள்கையிலும், செலாவணி முறை பற்றிய ஆய்வுக் கருவிகளிலும் இரு காலங்களுக்கும் பல வேறுபாடுகள் உள. முன்னர் செய்த ஆய்வு முதல் காலத்தில் நடைபெற்றது.

ஆர். ஜி. சரய்யாவைத் தலைவராகக் கொண்டுள்ள ஒரு குழுவை 1969-ல் அமைத்தனர். அது நடத்த வேண்டிய விசாரணை கீழ்க்காண்பவை பற்றியவை: (1) தற்போதுள்ள வர்த்தக வங்கிகள் பற்றிய விசாரணை செய்யவேண்டும். அவைகளுடைய அளவு, பணிப் பகுதி முதலியவைகளை விசாரித்து வங்கிகளைச் சீரமைப்பதற்கு வேண்டிய சிபாரிசுகளை வழங்க வேண்டும். (2) வங்கிகள் பணி புரியும் பிராந்திய வளர்ச்சிக்கும் அவைகளுடைய பணி புதிய வகுப்பினருக்குக் கிடைப்பதற்கும் சிபாரிசுகளைக் கொடுக்கவேண்டும். (3) வங்கிகளுடைய செய்முறைகளை நவீனமாக்குவதற்கும் அவைகளுடைய கொள்கைகளைச் சீரமைப்பதற்கும் வழிகளைக் கூறவேண்டும். (4) அவைகளுடைய வளர்ச்சித் தேவைகளை எங்ஙனம் பூர்த்தி செய்யலாம், மூலதனம், அடக்கச் செலவு முதலியவைகளை எவ்வாறு அமைக்கலாம், உபரித் தொகையும் காப்பு நிதியும் போதிய அளவில் உள்ளனவா என்பவைகளைக் கவனிக்கவேண்டும். (5) இடைநிலை நிதி நிலையங்களையும் நாட்டு வங்கியர் (Indigenous Bankers) தொழிலையும் பரிசீலனை செய்து முடிவுகளை அறிவிக்கவேண்டும்.

வங்கிக் குழு தன் அறிக்கையை பிப்ரவரி 9ஆம் தேதி அளித்தது. அறிக்கையில் கூட்டுறவு வங்கிகள், வர்த்தக வங்கிகள். இடைநிலை நிதிநிலையங்கள், நாட்டு வங்கிகள், சட்டச் சீர்திருத்தங்கள், வங்கிகளின் அடக்கச் செலவு இலாபம் பற்றிய விவரங்கள் முதலியவைகளைக் காணலாம். கூட்டுறவு வங்கிகள், வர்த்தக வங்கிகள் முதலியவை பற்றிய தீவிரப் பரிந்துரைகளைக் குழுவினர் செய்துள்ளனர். ஆனால், பொருளாதாரக் கொள்கையைச் செயல்படுத்துவதில் வங்கிகள் ஆற்றவேண்டிய தொண்டைப் பற்றியும், வங்கிக் கொள்கை பற்றியும் அறிக்கை தெளிவான முடிவுகளைக் கூறவில்லை. வங்கிகளின் அன்றாட அலுவல்களையும், வழிமுறைகளையும் பற்றிய சிபாரிசுகளைக் கொடுத்துள்ளனர். அடக்கச் செலவைக் கணக்கிடும் முறை, கடன் பற்றிய செய்திகளைச் சேகரிக்கும் நிறுவனம் (Credit Intelligence Bureau), வியாபாரிகளின் வங்கிகள், வங்கிப் பணிகளுக்கு அலுவலர்களைத் தேர்வு செய்யும் குழுவை நியமனம் செய்வது முதலிவை பற்றிய கருத்துகளைக் குழு அளித்துள்ளது.

'கூட்டுறவுத் துறையில் கிராமிய வங்கிகளை' (rural banks) நாட்டுப்புறங்களில் அமைக்கவேண்டும் என்பது குழுவின் முக்கிய யோசனைகளுள் ஒன்று. கூட்டுறவுப் பாணியில் அமையும் இவை கூட்டுறவுச் சங்கங்கள் செய்யத் தவறிய அலுவல்களைச் செய்யும். இவை வங்கிகளின் சாதாரண அலுவல்களைச்செய்யும்.

சேமிப்புகளைத் திரட்டும்; இது இடைநிலை விவசாயிகளுக்குக் கடனுதவி செய்யும்; மேற்பார்வைக் கடன் முறைத் திட்டத்தையும் இவை ஏற்கும்; துணை வங்கிப் பணிகளைச் செய்யும்; கிடங்குகளைக் கட்டும்; பராமரிக்கும்; விவசாயக் கருவிகளை வைத்துக் கொள்ளும்; விவசாயப் பண்டங்களை விற்பனை செய்ய உதவும். பொதுவாக கிராமப் பகுதிகளின் வளர்ச்சிக்கு உதவி புரியும்.

5000 முதல் 20,000 வரை மக்கள் தொகை உள்ள கட்டுக்கோப்பான கிராமங்களுக்குப் பணிபுரியும் நிறுவனமே கிராமிய வங்கியாகும். குறைவான மக்கள் தொகையுள்ள இடங்களில் ஒரு வளர்ச்சிப் பகுதிக்கு ஒரு கிராமியவங்கி இருக்கலாம். வலிமையள்ள மையக் கூட்டுறவு வங்கிகள் (மாவட்ட அல்லது மாநில நிறுவனங்கள்) இயங்கும் இடங்களில் அவைகளுடைய ஆதரவில் செயல்படும் அடிப்படைக் கூட்டுறவுச் சங்கங்களை கிராமிய வங்கிகளாக மாற்றலாம். வர்த்தக வங்கிகள் இவைகளுக்கு மூலதனம், அனுபவம் வாய்ந்த அலுவலர்கள் முதலிய வசதிகளை அளிக்கலாம். பிராந்திய மக்கள் இத்திட்டத்தில் கலந்து கொள்ளவேண்டு மென்பதற்காக இவைகளை ஆரம்பிக்கும் வங்கி இவர்களிடமிருந்து 49% முதலைத் திரட்டலாம். பிராந்திய மக்கள் மூலதனம் அளிக்க விரும்பாத இடங்களில் கிராமிய வங்கிகளைத் தொடங்கும் வங்கியே முதல் முழுவதையும் அளிக்க வேண்டும்.

தொடக்கச் சங்கங்களை மாற்றி யமைப்பதன் மூலமோ அல்லது வர்த்தக வங்கிகளே புதிய நிறுவனங்களை அமைப்பதன் மூலமோ கிராமிய வங்கிகளை ஆரம்பிக்க இரு காரணங்கள் உள. பயிற்சிபெற்ற அலுவலர் இல்லாமையால் வர்த்தக வங்கிகள் கிராமங்களில் விரைவில் வேண்டிய அளவு கிளைகளை நிறுவுவது கடினம். இரண்டாவதாகப் பிராந்திய மக்கள் பங்கேற்கின்றனர், இச் சங்கங்கள் கூட்டுறவு அடிப்படையில் அமைகின்றன; பிராந்தீயத் தேவைகளைப் பூர்த்தி செய்கின்றன; கூட்டுறவு முறையிலும், ஜனநாயகப் பாணியிலும் நிருவகிக்கப்பட்டால் இவை கிராமப்புறங்களுக்கு மிகவும் ஏற்றவைகளாகிவிடும். கூட்டுறவு நிறுவனங்களின் நன்மைகளையும், வர்த்தக வங்கிகளுடைய அனுகூலங்களையும் இணைப்பது குழுவின் யோசனையாகும்.

முதலில் கிராமிய வங்கிகளைப் பரீட்சார்த்த முறையில் டெப்பாசிட்டுகளைத் திரட்டுவதற்கு வாய்ப்புள்ள இடங்களில் 5 ஆண்டுகளுக்கு ஆரம்பிக்கவேண்டும். இவைகளைச் சாத்திய

மாக்குவதற்காகச் சில சலுகைகளையும் வசதிகளையும் அளிக்க வேண்டும் என்று குழுவினர் குறிப்பிட்டுள்ளனர். இவை கடன் வாங்கும் தொகைக்கு உச்சவரம்பு இருத்தல் கூடாது. ஆனால், இவை அளிக்கும் இலாப ஈவுக்கு வரம்பு இருத்தல் வேண்டும், ஏனெனில் இவைகளுடைய நிதி நிலைமை முன்னேறவேண்டும். ரிசர்வ் வங்கியிடம் உள்ள தேசீய விவசாயக் கடன் (நீண்டகாலச் செயல்கள்) நிதியிலிருந்து வர்த்தக வங்கிகளுக்குக் கிராமிய வங்கிகளை ஆரம்பிப்பதற்காக நிதியுதவி கொடுக்கவேண்டும். கிராமிய வங்கிகள் இலவசமாகப் பணம் செலுத்த உரிமை கொள்ளவேண்டும். அவைகளுடைய அலுவலர்கள் இலவசமாகப் பயிற்சி பெறல் வேண்டும். அவை டெப்பாசிட் இன்சூரன்சு திட்டத்தின் கீழ் வரவேண்டும். அவைகளுடைய மூல வங்கிகளைவிட (present banks) அவை சற்று உயர்வான வட்டி வீதம் அளிக்க அனுமதி பெறவேண்டும். கடைசியாக ரிசர்வ் வங்கி கிராமிய வங்கிகளின் செயல்களையும் கூட்டுறவு வங்கிகளின் செயல்களையும் இணைத்து அமல் செய்வதற்கான திட்டங்களை வகுக்கவேண்டும். இதற்குரிய அதிகாரத்தைச் சட்டங்கள் மூலம் ரிசர்வ் வங்கிக்குக் கொடுக்கவேண்டும்.

குழுவினர் நான்கு அதிகாரங்களில் நீண்ட கடினமான ஆராய்ச்சி செய்து கூட்டுறவின் அவசியத்தை உணர்த்தியுள்ளனர். ஏனெனில் அடிமட்ட அளவில் கூட்டுறவு பல துறைகளில் முக்கிய பணி புரிந்திருக்கின்றது. சரியான சூழ்நிலை இருந்தால் கூட்டுறவு நிறுவனமே லட்சிய நிலையமாக இருக்கும்.

விவசாயத் துறையின் தேவைகளைக் கூட்டுறவு இயக்கம் பூர்த்தி செய்யவில்லை என்பதைக் கூட்டுறவு பற்றிய பல அறிக்கைகளும், அகில இந்திய கிராமாந்திரக் கடன் கணக்கும் (All India Rural credit Survey) கிராமாந்திரக் கடன் ஆய்வுக் குழுவும் (Rural Credit Review Committee) குறிப்பிட்டுள்ளன. எனவே நாட்டுடைமையான வர்த்தக வங்கிகள் விவசாயக் கடன் வழங்க ஏற்பாடு செய்யப்பட்டது, புதிய நிறுவனங்களை இதற்காகக் கூட்டுறவு முறையிலோ அல்லது வர்த்தக வங்கிகள் வாயிலாக நிறுவுவதால் விவசாயத் துறையில் வளர்ந்துவரும் வங்கிப் பணிகள் தூண்டுதல் இழக்கும். தற்போதுள்ள அவைகளுடைய செயல்கள் விவசாயத் துறையில் பெருகிக் கொண்டிருக்கின்றன. தொடக்கச் சங்கங்களில் 15 சதவீதமே கிராமீயக் குடும்பங்கள் அங்கம் வகிக்கின்றன என்பதைக் குழுவினரே ஒத்துக்கொள்ளுகின்றனர். நூற்றுக் கணக்கான மாநில, மைய வங்கிகள் சீரமைக்கப்படவேண்டிய நிலையில் இருக்கின்றன. அவை, கிளைகளை

நிறுவும் நிலையில் இல்லை. இந்த நிலையில் தொடக்கச் சங்கங்களைக் கிராமிய வங்கிகளாக மாற்றுவதோ அல்லது மாநில, மையக் கூட்டுறவு வங்கிகளின் ஆதரவில் கிளைகளை நிறுவுவதோ செம்மையான திட்டமாகாது. இது பற்றிய ஐயப்பாட்டைக் குழுவினரே கொண்டிருக்கின்றனர். அதனால்தான் இதை ஐந்தாண்டுகளில் பரீட்சார்த்தமாகச் செய்து பார்க்கவேண்டும் என்று குறிப்பிட்டிருக்கின்றனர். கிராமிய வங்கிகள் இயங்குவதற்குச் சாத்தியக் கூறுகள் தொடக்கச் சங்கங்களைவிட அதிகமாக இல்லை. ஆகையால் குழு இவைகளுக்குப் பல சலுகைகளைக் கொடுக்கவேண்டுமென்று பரிந்துரைத்திருக்கின்றது.

தொடக்கச் சங்கங்கள் தம் பிராந்தியப் பகுதிகளில் நிதி திரட்டத் தவறிவிட்டன; உயர்நிலையங்களைச் சார்ந்திருக்கின்றன. கிராமிய வங்கிகளும் பொது மக்களின் நம்பிக்கையைப் பெருவிடில் உயர்மட்ட நிலையங்களை நம்பி இருக்க வேண்டிய நிலை ஏற்படும். டெப்பாசிட்டுகளை அவை ஈர்க்க வேண்டுமென்பதற்காக அவை உயர் வட்டியைக் கொடுக்கலாம் என்று குழு பரிந்துரைத்துள்ளது. கிராமியக் கடன் பத்திரங்கள் மூலம் (rural debentures) பிராந்தியக் கூட்டுறவு முறையிலும், வளர்ச்சித் திட்டங்களிலும் பொதுமக்கள் ஈடுபடச் செய்வதுபற்றிய திட்டம் வெற்றி பெறவில்லை என்பதை இங்குக் குறிப்பிடலாம். ரிசர்வ் வங்கி பெருமளவு நிதி யுதவி யளித்தபோதிலும், கூட்டுறவு நிலையங்கள் சரிவர இயங்கும் நிலையங்களாகவில்லை; பல குறைபாடுகளும் தோல்வியும் காணப்படுகின்றன. ஆயினும் டெப்பாசிட்டுகளைத் திரட்டுவதற்கும், கடன் வசதிகளை விவசாயத் துறைக்கு அளிப்பதற்கும் கூட்டுறவு முறையைப் பயன்படுத்த வேண்டுமென்று குழுவினர் குறிப்பிட்டிருக்கின்றனர். கிராமிய வங்கிகள் பழைய பன்னேக்குச் சங்கங்களைப் போலிருக்கின்றன. ஆனல் டெப்பாசிட்டுகளைத் திரட்டும் உபரிப் பொறுப்பையும், கிராமப் பகுதிகளில் வங்கிப் பணிகளை ஆற்றும் பொறுப்புகளையும் (பன்னேக்குச் சங்கங்கள் செய்யாதவை) ஏற்கவேண்டும். ஆனல் பன்னேக்குச் சங்கங்கள் (multipurpose societies) நன்கு பணியாற்றின. ஆனல் பலதரப்பட்ட பணிகளைக் கிராமிய வங்கிகள் ஆற்ற வேண்டுமென்பது அவைகளிடம் மிக அதிகமான சேவையை எதிர்பாத்தலாகும். வர்த்தக வங்கிகளைக் கிராமப்புறங்களில் பணிபுரியவைப்பதற்காக நாட்டுடைமை செய்தனர். அவைகளும் விவசாயத் துறைக்கேற்றவாறு தம்மை அமைத்துக் கொண்டு வருகின்றன. புதுத் திட்டத்தில் அவைகளுக்கு இத்தகைய சிறப்புத் தொண்டாற்றும் வாய்ப்பு நீக்கப்படும். இதற்குப் பதிலாக வர்த்தக வங்கிகளும் கூட்டுறவு வங்கிகளும் இணைந்து

செயல்படுவதற்குக் குழு வழி வகுத்துள்ளது—முன்னர் அகில இந்தியக் கிராமாந்திரக் கடன் கணக்கின் பரிந்துரைகளை ஒட்டி இதை முயற்சி செய்து தோல்வியடைந்தனர்.

கூட்டுறவு வங்கிகளுக்கும் வர்த்தக வங்கிகளுக்கும் இடையே இணைப்பும் கூட்டுறவும் ஏற்படக் குழுவினர் பல யோசனைகளைக் கொடுத்துள்ளனர். இதனால் பரவலான நிதி நிலைய அமைப்புத் தொடக்க நிலையில் ஏற்படும். வேண்டும்போது, நியாய மானவை வட்டி வீதத்தில் கடனுதவி தொடக்க நிலையில் (primary level) கிடைக்கும்; சேமிப்பு கவரப்பட்டுக் கூட்டுறவு வங்கி முறை வலுவடையும்; கூட்டுறவு முறையின் அலுவலர் பயிற்சி பெறவும் இடமேற்படும். கூட்டுறவு முறையைச் சீர் திருத்த வேண்டும், மையக் கூட்டுறவு வங்கிகள் பலவீனமாக இருக்கும் பகுதிகளில் உச்ச நிலை வங்கிகள் (apex banks) கிளைகளை நிறுவவேண்டும். பலமாக உள்ள மைய வங்கிகள் தொடர்ந்து செயல்படலாம்; வர்த்தக வங்கிகளைப்போல் இவைகளைப் பாவிக் கலாம். ரிசர்வ வங்கியின் விவசாயக் கடன் குழு கூட்டுறவு வங்கி களின் நிதிகளும் வர்த்தக வங்கிகளின் நிதிகளும் சரிவரப் பயன் படுகின்றனவா என்பதை ரிசர்வ் வங்கி கவனிக்க வேண்டும்.

கிராமிய வங்கிகளைப் பரிந்துரைத்த குழுவினர் மற்ற வழி களில் விவசாயக் கடன் வழங்குவதையும் ஆதரிக்கின்றனர். அதாவது வர்த்தக வங்கிகள் மேலும் அதிகமான கிளைகளை ஆரம்பிக்கலாம்; கிராமங்களை ஏற்கலாம், தொடக்கச் சங்கங் களுக்கு நிதியுதவியளிக்கலாம். தற்போதுள்ள நிலையில் இவை எல்லாவற்றையும் செய்யலாம் என்பது குழுவின் கருத்து. கூட்டுறவுத் துறை குறுகிய காலக் கடனைக் கொடுக்கும். வர்த்தக வங்கிகள் வளர்ச்சிக்கான நிதியை நல்கும். கூட்டுறவுத் துறைக்கும் வர்த்தக வங்கிகளுக்கும் இடையில் மாவட்ட நிலையில் பரஸ்பர ஒத்துழைப்பும் நல்லுறவும் இருத்தல் வேண்டும். இதற் காக ஒவ்வொரு மாவட்டத்திலும் ஓர் இணைப்புக் குழு இருக்க வேண்டும். கூட்டுறவுத் துறை, வர்த்தக வங்கிகள் முதலியவை களின் பிரதிநிதிகளும் மாவட்ட வளர்ச்சித் துறை உயர் அதிகாரியும் இதில் அங்கம் வகிக்க வேண்டும். கடன் திட்ட மிடல் மாவட்ட வளர்ச்சித் திட்டத்தின் கூறாக இருக்க வேண்டும். மாவட்ட வங்கிகள் இதற்குரிய நிறுவனங்களாகப் பணிபுரிய வேண்டும்.

குழுவினர், கூட்டுறவு வங்கிகள் குறைவான ரொக்க நிலை விகிதத்தைக் கொள்ளலாம் என்றும் வர்த்தகப் பணிகளை வங்கித் தொழிலுடன் சேர்த்துச் செய்யலாம் என்றும் கூறியுள்ளனர்.

இரு பணிகளையும் இணைப்பதால் ஆபத்துகள் நிகழலாம். கூட்டுறவு நிறுவனங்களில் திறமையின்மையும், ஓரம் காட்டுதலும் சிலருக்குச் சலுகைகள் கொடுப்பதும், ஏராளமான தொகை வசூலாகாமல் நிற்பதும் நிறைந்துள்ளன. இவைகளை வர்த்தக வங்கிகளுடன் இணைப்பதால் அவைகளுடைய முன்னேற்றமும் தடைப்படும். கூட்டுறவை மைய அரசின் அதிகாரத்திற்கோ அல்லது மைய, மாநில அரசுகளின் இரட்டைக் கண்காணிப்புக்கோ உட்படுத்துவதால் நிலைமை முன்னேறும் என்று கூற முடியாது. கூட்டுறவுத் துறைபற்றிக் குழுவினர் அளித்துள்ள யோசனைகள் குழப்பம் நிறைந்தும், முற்றுப்பெருதவையாகவும் இருக்கின்றன. தொடக்க நிலையில் கிராமிய வங்கிகளை நிறுவ வேண்டுமென்றும், உயர் நிலையில் மைய, உச்சநிலை வங்கிகளை வைத்துக் கொள்ளலாம் என்றும் அது குறிப்பிட்டுள்ளது. உச்சநிலை வங்கிகளும், மைய வங்கிகளும்கூட கிராமக் கடன்களை வழங்கும் ஆற்றல் பெறவில்லை. வர்த்தக வங்கிகள் அரசுடைமையாகிவிட்டன. அவை பல கிளைகளை நிறுவிவிட்டன. குழுவினரின் கருத்துப்படி வர்த்தக வங்கிகள் வளர்ச்சிகான நிதியுதவியை மட்டும் அளிக்கலாம். விவசாயக் கடன் வழங்கல் பெரிய பிரச்சினையாகும். நிலைமையும் சிக்கல் நிறைந்ததாக இருப்பதால் ஒரே ஒரு வழியின் மூலம் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண முடியாது. கிராமப்புறப் பிரச்சினைகளைத் தீர்க்க பல வழிகளைப் பின்பற்றலாம். எனவே கிராமிய வங்கிகள் இருக்க வேண்டும் என்பது குழுவின் கருத்தாகும். கூட்டுறவுத் துறை நீண்ட காலத்தில் பலதரப்பட்ட அனுபவங்களைப் பெற்றிருக்கின்றது. ஆனல் இதைக்கொண்டு இத்துறையைக் கொண்டு கிராமியக் கடன் பிரச்சினைகளைத் தீர்க்கலாம் என்று கருதுவது தவருகும். குழுவினர் சில தற்காலிக யோசனைகளை அளித்துள்ளனர். பரிசோதனை செய்தபின் சரியான முடிவுகளை எடுக்கலாம் என்பது குழுவின் கருத்து. நலிவுற்ற கூட்டுறவுத் துறை பற்றிய குழுவின் கருத்தை நாம் காணுகின்றோம்.

சிறப்பான நிதி நிலையங்கள் பற்றிய பரிந்துரைகளைக் குழு அளித்துள்ளது. இவை வீட்டுவசதி, சிறு தொழில்கள், தொழிலகங்கள் முதலியவை பற்றியவை. இணைப்பு, கண்காணிப்பு என்ற இரு தத்துவங்களின் அடிப்படையில் குழு அதன் யோசனைகளை அமைத்துள்ளது. சிறப்பு சேமிப்பு வங்கிகள், சிறு தொழில்களுக்கும், குறைவான அளவு கடன் வாங்குவோருக்கும் உரிய வங்கிகள், ஏற்றுமதி–இறக்குமதி வங்கிகள் முதலியவைகளைத் தொடங்குவதைக் குழுவினர் ஆதரிக்கவில்லை. வீட்டுவசதித் துறைக்கு நிதியளிப்பதற்காக இரு நிலை (Two-tier) அமைப்பைப்

பரிந்துரைத்துள்ளனர். தேசீய அளவில் ஓர் உச்ச நிலையமும் (apex institution), மாவட்ட நிலைகள் பிராந்திய நிலையங்களும் இருத்தல் வேண்டும். பிராந்திய வீட்டுவசதி நிதியகங்கள் மாவட்ட நிலையங்களைத் தொடங்கும். இவை உச்சநிலை நிறுவனத்தின் ஆதரவைப் பெறும். நகர்ப்புற வீட்டுவசதி வளர்ச்சிக் கார்ப்பரேஷன் (Urban Housing Development Corporation) உச்சநிலை நிறுவனமாகப் பணிபுரியலாம். அல்லது ரிசர்வ் வங்கி இதற்கான நிறுவனம் ஒன்றை ஆரம்பிக்கலாம். இரண்டாம் நிலை அடைமான மார்க்கட்டு ஒன்றையும் ஆரம்பிக்க அது யோசனை கூறியுள்ளது. வீட்டுக் கடன்முறை இதனால் ரொக்கத் தன்மை பெறும். கூட்டுறவு வீட்டு வசதிச் சங்கங்களையும் ஒரு மாநில உச்சநிலைச் சங்கத்தையும் நிறுவவேண்டுமென்று பரிந்துரைத்தனர். இவை தொடக்கச் சங்கங்களுக்கு மீள்நிதி வசதியளிக்கும். உச்சநிலைச் சங்கமும், வீட்டுவசதி நிதியளிக்கும் வங்கிகளும் உச்சநிலை நிறுவனத்திடமிருந்து மீள்நிதி வசதி பெறலாம். வர்த்தக வங்கிகளின் நிதிகளைப் பெருமளவு வீட்டுவசதித் துறையில் செலவிடலாம் என்ற யோசனை பரிசீலனை செய்ய வேண்டும். ஆனால், வங்கிகளின் நிதிகளைத் தக்கமுறையில் கூட்டுவதற்கு எந்த ஏற்பாட்டையும் செய்யவில்லை.

குறைவான தொகைகளையும், இடைநிலைத் தொகைகளையும், சேமிப்பவர்களுக்கு அவர்களுடைய தொகைகள் சரிவரப் பயன் படுவதற்காக நிறுவனங்களை அமைத்தல், அவைகளை நிருவகித்தல் பற்றிய கருத்துகளைக் குழு அளித்துள்ளது. இதற்காகச் சென்னை, பம்பாய், கல்கத்தா, புது டெல்லி முதலிய நகரங்களில் வர்த்தகர்களுடைய வங்கிகளை ஆரம்பிக்கலாம் என்பது அவர்களுடைய முடிவு. இவை தற்போது ஏற்புத் தொழிலையும், தள்ளுபடித் தொழிலையும் செய்யக்கூடாது. தற்போது இவைகளை வர்த்தக வங்கிகளே செய்யவேண்டும். தற்போது சிறப்பான ஏற்பு–தள்ளுபடி நிலையங்களுக்குத் தேவையில்லை. இந்த நிறுவனங்கள் கூட்டுப் பங்கு அடிப்படையில் ஆரம்பிக்கப்படலாம். காலப்போக்கில் நாட்டு வங்கியரும் (indigenous bankers) தள்ளுபடி தொழிலை நடத்தலாம். வர்த்தக வங்கிகள் இக் கருத்தைக் கொள்ளவில்லை. இந்தியப் பண மார்க்கட்டில் (money market) தனித் தள்ளுபடி நிலையங்கள் இல்லை; ஏற்பகங்களும் இல்லை. ஏற்பு-தள்ளுபடித் தொழிலை ஊக்குவிக்கவும், பண மார்க்கட்டைச் சீரமைக்கவும் குழுவினர் எவ்வித யோசனைகளையும் தரவில்லை.

வங்கிகளல்லாத இடைநிலை நிதிநிலையங்கள் அமைப்புள்ள நிதிமுறையில் சேரவேண்டும், அவைகளுடைய செயல்கள்

கண்காணிப்புக் குட்படவேண்டும் என்று குழு கருதுகின்றது. இ.நி. நிதியகங்களை ஒப்புதல் பெற்றவை என்றும் ஒப்புதல் பெறுதவை என்றும் இருவகைகளாகப் பிரித்துள்ளனர். ஒப்புதல் பெற்றவை மூலதனம், காப்புநிதி, நிருவாக அமைப்பு முதலியவை பற்றிய சில தேவைகளைப் பூர்த்தி செய்யவேண்டும். இவை மீள்நிதி வசதி கடன் உறுதி (credit guarantee) டெப்பாசிட்டு இன்சூரன்ஸ் முதலிய வசதிகளைப் பெறலாம். இ. நி, நிலையங்களைக் கூட்டுப் பங்கு நிறுவனங்களாக மாற்றத் தூண்டுதல் அளிக்கவேண்டும் ; தவணைக் கடன் முறையில் பொருள் வாங்கல் முறையை நிறுவனங்கள் மூலம் செய்வதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என்பது குழுவின் முடிவு. இந்த நிறுவனங்கள் கட்டாயமாக உரிமம் (licence) பெறவேண்டும். நுகர்வோருக்குப் போதிய அளவு கடன் வசதி, இதற்காகத் தனியார் துறையில் சிறப்பான நிலையங்களை அமைக்கவேண்டுமென்பது. குழுவின் கருத்து. நாட்டின் கிழக்குப் பகுதியில் இத்தகைய கடன் வசதிகளை நிலையங்கள் மூலம் அளிப்பதில்லை. இங்கு தவணைக் கடன் நிறுவனங்கள் வர்த்தக வங்கிகளுடன் இணைந்து செயல் படலாம் என்ற தேசீயக் கடன் குழுவின் ஆய்வுப் பிரிவின் (Study Group of the National Credit Council) குழுவினர் ஆதரிக்கின்றனர். முதலீட்டுக் கம்பெனிகளைக் கண்காணிப்பதற்காக இயற்றும் சட்டங்கள் அமெரிக்க முதலீட்டுக் கம்பெனிச் சட்டத்தை (Investment Companies Act) ஒத்திருக்க வேண்டும். சீட்டுக் கம்பெனிகளை (Chit Funds) ஒழுங்குபடுத்த விதிகளைக் குழு பரிந்துரைத்துள்ளது. வர்த்தக வங்கிகள் சீட்டுப் பிடிக்கலாம். இவை ரிசர்வ் வங்கியின் கண்காணிப்புக்குட்பட்டிருக்க வேண்டும். வங்கிகளை ஒத்த நிதிக் கார்ப்பரேஷன்கள் செயல் புரியும் பிராந்தியங்களை நன்கு அறிந்துள்ளன. இவைகளும் உரிமம் பெறவேண்டும். சில விதிமுறைகளுக்குட்பட வேண்டும். வங்கிக் கட்டுப்பாடுகளை டெப்பாசிட்டுகளை ஏற்கும் இவைமீது ஒரு தனி நிறுவனம் அமல் செய்ய வேண்டும். அல்லது இக் கட்டுப்பாடுகள் ரிசர்வ் வங்கியுடன் தொடர்பு கொண்டிருத்தல் வேண்டும். கண்காணிப்பு நிலையம் மாநில அளவில் ஓர் அலுவலகத்தையும், அனைத்திந்திய அளவில் ஓர் உச்ச நிறுவனத்தையும் கொள்ளவேண்டும்.

நாட்டு வங்கியர் பற்றிய குழுவின் கருத்துகள் நகர்ப்புறங்களிலுள்ள அல்லது ஒழுங்கான பண மார்க்கட்டின் எல்லையிலுள்ளவை பற்றியவை. நாட்டு வங்கியருடைய செயல்களை ஒழுங்கமைப்புச் செய்வது எவ்வாறு நடைபெறும் என்பதைக் குழுவினர் சிந்தித்தனர். இவ்வாறு செய்வதால் அமைப்புள்ள

பண மார்க்கட்டு விரிவடையும். இதனால் கிடைக்கும் உபரித் தொகையையும் கடனுதவியளிக்கப் பயன்படுத்தலாம். இந்த வங்கியர்களின் செயல்களைக் குறிப்பிட்ட நிதி, சமூகக் கட்டுப்பாடுகளுக்குட்படுத்துவது நோக்கம், நாட்டு வங்கித் தொழில் நிலையங்கள் எடுத்துக்கொள்ள வேண்டும். செலாவணித் தன்மை பொருந்திய உண்டி போன்ற (hundis) கருவிகளைக் கொண்டு தொழில் செய்வோரைச் சில கட்டுப்பாடுகளுக்குட்படுத்தவேண்டும்; முறையான சட்ட திட்டங்களுக்குட்படுத்தவேண்டும். மைய அரசின் சட்டங்கள் இவைகளுக்குத் தேவை என்பது குழுவின் கருத்து. வர்த்தக வங்கிகள் மூலம் இவைகளைக் கண்காணிப்பதே நல்லதாகும். வர்த்தக வங்கிகள் மூலம் இவைகளுக்கு மறைமுகமாக அறிவுரை வழங்கலாம். கீழ்க்காணும் முறையில் கட்டுப்பாடுகளை அமல் செய்யவேண்டும். அவைகளுடைய கணக்குகளைப் பார்க்கலாம்; தணிக்கை செய்யலாம், சொந்த முதலை ஒரு குறைந்தபட்ச அளவுக்குக் குறையாமல் வைத்துக்கொள்ள வேண்டுமென்று ஆணையிடலாம்; அவைகளுடைய வர்த்தகத் தொழில்களை அவை கைவிடவேண்டும் என்று வற்புறுத்தலாம். ரிசர்வ் வங்கிகள் அவ்வப்போது கணக்குகளை அனுப்பவேண்டுமென்று உத்தரவிடலாம்; வட்டி வீதங்களையும், மற்ற சேவைக் கட்டணங்களையும் ஒழுங்குபடுத்தலாம்; வர்த்தக வங்கிகளுக்கு அவை அளிக்கும் நிதியறிக்கைகளைப் பரிசீலனை செய்யலாம். தகுதியுள்ள நாட்டு வங்கிகளுக்குத் தடையற்ற முறையில் நிதியுதவி நல்க ஏற்பாடு செய்யலாம். உண்டித் தொழில் பற்றிய சட்டங்களைத் தொடுக்கலாம். திறமையுள்ள நாட்டு வங்கிகளை ஏற்பகங்களாகவும் (acceptance houses) தள்ளுபடி நிலையங்களாகவும் (discount houses) மாற்றியமைக்கலாம். முன்னர் ரிசர்வ் வங்கிக்கும் நாட்டு வங்கிகளுக்கு மிடையே நேரடித் தொடர்பு அமைக்க எடுத்த முயற்சி தோல்வியடைந்தது. ஆகையால் அவைகளை அமைப்புள்ள பண மார்க்கட்டுடன் மறைமுகமாக வர்த்தக வங்கிகள்மூலம் இணைக்கவேண்டுமென்று குழு யோசனை கூறியது. நேரடித் தொடர்பு சாத்தியமல்ல, விரும்பத் தக்கதுமல்ல. ஆனால் வர்த்தக வங்கிகள் ரிசர்வ் வங்கியிடம் ஓரளவு மீள்நிதி (refinance) பெற்றால்தான் நாட்டு வங்கிகளுக்கு நிதியுதவி நல்க முடியும். குழு இத்தகைய மீள்நிதியளிப்பதை ஆதரிக்கவில்லை.

தற்போது வர்த்தக வங்கிகள் பலதரப்பட்டவையாக இருக்கின்றன. நாட்டுடைமையான வங்கிகளைச் சீரமைப்பதற்குப் புதிய திட்டமொன்றைக் குழு கொடுத்துள்ளது. இரண்டு அல்லது மூன்று பெரிய அகில இந்திய வங்கிகள் இருக்க

வேண்டும். ஐந்து அல்லது ஆறு வேறு வங்கிகள் பரந்த பகுதிகளில் வளர்ச்சி வங்கித் தொழிலைச் (development banking) செய்ய வேண்டும். 22 வங்கிகளையும் ஒரே அமைப்பில் கொண்டுவர வேண்டுமென்று குழு விரும்பவில்லை. இது ஏராளமான இணைப்புப் பிரச்சினைகளையும் இவைகளைத் தீர்க்கப் போதுமான சக்தியின்மையையும் ஏற்படுத்திவிடும். மேலும் நுகர்வோர் தமக்கு வேண்டிய வங்கியைத் தேர்ந்தெடுத்துக்கொள்ள இடம் இருக்கவேண்டும். வங்கிப் பணிகளைப் பிரித்து அவைகளை அடிப்படையாகக்கொண்டு வங்கி முறையைச் சீரமைப்பதையும் குழு ஆதரிக்கவில்லை. இவ்வாறு செய்தால் வங்கி முறையின் புதிய அமைப்பு தீவிரமான பிரச்சினைகளை ஏற்படுத்தும். இவைகளை நீக்க எவ்வித அனுகூலமும் ஏற்படாது.

கீழ்க்காணும் முறையில் பொதுத் துறையின் வங்கிகளைச் சீர் திருத்தியமைக்கலாம் என்பது குழுவின் முடிவு: (a) முன்னேற்ற மடைந்த பகுதிகளும், பிற்போக்கான பகுதிகளும் நியாயமான முறையில் வங்கிகளிடையே பகிர்வாக வேண்டும். வங்கித் தொழிலின் தன்மையும் அளவும் அவைகளிடையே சரியான முறையில் பங்கீடாக வேண்டும்; (b) உறுப்புகள் (வங்கிகள்) கட்டுக்கோப்பாகவும் அருகிலுள்ள பகுதிகளில் பணி புரியக் கூடியவையாகவும் இருக்கவேண்டும்; (c) மக்கள் தொகை மிகுதியாக உள்ள இடங்களில், பொதுமக்கள் விருப்பத் திற்கேற்ப தேர்ந்தெடுத்துக்கொள்ளக் கூடிய வங்கிகள் 2 அல்லது 3 இருத்தல் வேண்டும். ஸ்டேட் வங்கியும், பல கிளைகளைக் கொண்டுள்ள பெரிய வங்கிகளையும் எவ்விதத்திலும் மாற்றக் கூடாது. அனைத்திந்திய வங்கிகள் மக்கள் பெருக்கம் உள்ள எல்லா இடங்களிலும், மாவட்ட ஊர்களிலும். இவைகளுக்கும் மேற்பட்ட இடங்களிலும் கிளைகளைக் கொள்ள வேண்டும். மற்ற வங்கிகள் ஒவ்வொன்றும் 2 அல்லது 3 மாநிலப் பகுதிகளில் சிறிய ஊர்களில் செயல் புரியலாம். பெரிய பட்டணங்களில் அனைத்திந்திய வங்கிகளும், மற்ற வங்கிகளும் கிளைகளைக் கொள்ளவேண்டும். இவை இப் பகுதியிலுள்ள தொழிலைப் பகிர்வு செய்துகொள்ள வேண்டும். மாவட்ட ஊர்களில் வசிப்போர் பெரிய அனைத்திந்திய வங்கிகளில் ஒன்றையோ அல்லது பிராந்திய வர்த்தக வங்கிகளில் ஒன்றையோ தம் தேவைகளுக்கெனத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம், சிறிய ஊர்களில் உள்ளவர்களுக்கு 2 வங்கிகளும், கூட்டுறவு வங்கிகளும், கிராமியத் துணை வங்கிகளும் தொண்டு புரியும்.

வங்கிகளின் புனரைமைப்பு அவைகளுடைய வளர்ச்சிக்குகந்த நெகிழ்ச்சி கொண்டிருக்கவேண்டும்; நிருவாகத் திறமை வளர்

வதற்கேற்றதாக இருக்கவேண்டும்; வாடிக்கையருக்குச் சீரிய முறையில் தொண்டு புரிய உகந்ததாகவும் இருக்க வேண்டும். முக்கியமான முடிவுகளைப் பற்பல துறைகள் எடுக்க வல்லதாகவும் இருக்கவேண்டும். மேற் பார்வைக்கும் கண்காணிப்புக்கும் புதிய அமைப்பில் இடமிருக்கவேண்டும். நிருவாகப் படிவங்களுக்கு நிருவாகம் பற்றிய செய்திகளை உடனடியாகவும் முறைப்படியும் செலுத்துவதற்கு வசதி இருக்கவேண்டும். இவைகளை மனத்தில் கொண்டு பொதுத் துறை வங்கிகள் புதிய கிளைகளை நிறுவ வேண்டும். கிளைகளைச் சீரமைக்கவேண்டும், வேண்டுமளவு அலுவலர்களை வெவ்வேறிடங்களுக்கு மாற்றல் வேண்டும். 200 முதல் 300வரை உள்ள கிளைகளைக் கண்காணிப்பதற்கும், வழி நடத்துவதற்கும் ஒரு மண்டல அலுவலகம் (Zonal Office) வேண்டும். வங்கிகளிடையே இணைப்பை ஏற்படுத்த ஓர் இணைப்புக் குழுவையும் (coordination committee) நிறுவ வேண்டும். தேசீய வங்கிகளின் தலைவர்கள் இதில் அங்கம் வகிக்க வேண்டும். கொள்கை வகுப்பது இக் குழுவின் அலுவலல்ல. தொகைகளைச் செலுத்துவது, செக்குத் தீர்வக வேலைகள் உண்டித் தொகைகளை வசூல் செய்தல், அலுவலர்களைப் பரிவர்த்தனை செய்தல், தலைமை வங்கி முறையைக் கண்காணித்தல் முதலியவைகளை இக்குழு கவனிக்க வேண்டும்.

அயல் நாட்டினர் வங்கிகள் எவ்வித இடையூறுமின்றி தொடர்ந்து இயங்க வேண்டுமென்பது குழுவின் யோசனையாகும். நன்கு இயங்காத தனியார் துறை வங்கிகளைப் பெரிய நிறுவனங்களுடன் இணைக்க வேண்டும்.

ஒரு வங்கியின் அளவு கணிசமாகப் பெருகிய பின்தான் சிக்கனமின்மை (diseconomies) ஏற்படும். ஆதலின் வங்கிகளின் அளவு பெருக வேண்டுமென்பதை அளவுச் சிக்கனங்கள் பற்றிய ஆய்வு தெளிவுபடுத்தியது. இதை ஒட்டியே குழுவினர் 2 அல்லது 3 அனைத்திந்திய வங்கிகளையும், 5 அல்லது 6 பிராந்திய வங்கிகளையும் நிறுவ வேண்டும் என்று சிபாரிசு செய்தனர். பெரிய நிறுவனங்களின் நிருவாகச் சிக்கனமின்மையை இன்று தவிர்க்க முடியும். புதிய பணிகளை மேற்கொள்ளுவதற்கு ஏராளமான வளர்ச்சி வேலைகள் செய்ய வேண்டும். எனவே வங்கிப் பணிகளைப் பெருக்குவதற்கு அவைகளுடைய அளவு பெருக வேண்டும். ஆனால் இதற்காகக் குழுவினர் 2 அல்லது 3 அனைத்திந்திய வங்கிகள் இருக்கவேண்டுமென்று ஏன் கூறினர் என்று புரியவில்லை. வாடிக்கையருக்கு அளிக்க வேண்டிய தொண்டு வங்கி அலுவலரின் போக்கு, தன்மை முதலியவைகளைப் பொறுத்திருக்கும். இது பற்றிக் குழுவினர் ஒன்றும் கூறவில்லை. 'மனித

ரிடையே நல்லுறவு வங்கித் தொழிலுக்கு முக்கியம். 22 வங்கிகள் இருக்கின்றனவா அல்லது அதிகமான வங்கிகள் இருக்கின்றனவா என்பது இதை பாதிக்காது', என்று குழு கருதுகின்றது. எனவே பொதுத் துறை வங்கிகளை 2 அல்லது 3 நிறுவனங்களாக அமைப்பது நல்ல யோசனையின்றித் திடீரென்று எடுக்கப்பட்ட முடிவாகும். தற்போது உள்ள பணிகளை நன்கு ஆற்ற முடியாது. ஆனால் திறமை எவ்வாறும் முன்னேறாது. வர்த்தக வங்கிக ளிடையே தற்போது உள்ள போட்டியை இத்தகைய புனரமைப்பு நீக்கிவிடும். கட்டுப்பாட்டுக்குட்பட்ட ஒரே முறைப் பாணி வளரும். பிரான்ஸ் நாட்டில் நாட்டுடைமையான பிறகும் வங்கி களிடையே பெருமளவு போட்டி இருக்கின்றது; பெருமளவு நிரு வாகத் திறனும் இருக்கின்றது.

தனி நிறுவனங்களாக வங்கிகள் இருப்பதால் 'செம்மையான முறையில் செலாவணிக் கடன் கொள்கைகளை அமல் செய்ய முடியவில்லை என்று குழு குறிப்பிட்டுள்ளது. 1949ஆம் ஆண்டின் வங்கிக் கட்டுப்பாட்டுச் சட்டப்படி (Banking Regulations Act) ரிசர்வ் வங்கி, வங்கி முறை முழுவதின் மீதும் சிறப்பான ஆதிக்கம் செலுத்துகிறது. கூட்டுறவு வங்கிகளும் இதற்குட்பட் டுள்ளன. வங்கிகளின் எண்ணிக்கை ரிசர்வ் வங்கியின் கண் காணிப்பைப் பாதிக்கவில்லை. தம் இச்சை போல அரசு செயல் புரிவதும், அரசாங்க நிலையங்களின் கடன் கொள்கைகளும், செலா வணிக் கொள்கையைப் பாதிக்கின்றது. செலாவணிக் கொள் கையை அமல் செய்யும் பிரச்சினையைக் குழுவினர் சரியான முறையில் ஆராயவில்லை. இக் கொள்கையை மேலும் சீரிய முறையில் அமலாக்க குழுவினர் சிறப்பான கருத்தொன்றையும் வழங்கவில்லை. தனியார் துறை வங்கிகளையும், அயல் நாட்டினர் வங்கிகளைப் பற்றியும் குழு சிறப்பான யோசனை கொடுக்கவில்லை.

வர்த்தக வங்கிகளைச் சீரமைக்கக் குழு அளித்த யோசனை களில் ஸ்டேட் வங்கியும் அதன் துணை நிறுவனங்களும் அடங்க வில்லை. அனைத்திந்திய வங்கியாவதற்கு ஸ்டேட் வங்கியின் அளவு சரியாக இருக்கின்றதென்றும், 'புதிய வங்கி'களின் அளவு இதற்குகந்ததாக இல்லை என்றும் குழு கருதுகின்றது. கடந்த சில ஆண்டுகளில் ஸ்டேட் வங்கி பல்வேறு துறைகளில் செயல் பட்டு அனுபவம் பெற்றிருக்கின்றது. ஆனால் அதன் அமைப்பில் குறைபாடுகள் உள. செய்திகளை அனுப்புவதிலும், வாடிக்கை யாளர்களுக்குப் பணிபுரிவதிலும், பொது உற்பத்தியிலும் நிலை திருப்திகரமாக இல்லை. சில தனியார் துறை வங்கிகளின் செயல் திறன் ஸ்டேட் வங்கியையும் அதன் துணை நிறுவனங்களையும்விட

உயர்வாக இருக்கின்றது. ஸ்டேட் வங்கியின் துணை நிறுவனங்கள் அதன் ஆட்சியில் இருந்தபோதிலும் அவைகளைத் தனி நிறுவனங்களாகக் கருதுகின்றனர். அரசுடைமையான வங்கிகளுக்கு ஒரு புனரமைப்புத் திட்டத்தை சிபாரிசு செய்த குழு அதன் வழிமுறைகளை அரசே முடிவு செய்ய விட்டது. புனரமைப்பு ஸ்டேட் வங்கியின் அமைப்பை ஒத்திருக்க வேண்டும் என்று முடிவு செய்தது. ஆனால் ஸ்டேட் வங்கியின் அமைப்பே திருப்திகரமாக இல்லை. பொதுத் துறை வங்கிகள் பொதுவான செய்முறைகளையும் பொறுப்புகளையும் கொள்ளவேண்டும் என்றும் இவைகளை உடனடியாக அவைகள்மீது திணிக்கலாகாது. நாளடைவில் இவை வளரவேண்டும் என்றும் குழு கூறியது. குழுவின் புனரமைப்புத் திட்டமே புரட்சிகரமாகவும் தீவிரமாகவும் இருக்கின்றது. புனரமைப்பு செய்தபின் ஆண்டுகளுக்குப் பிறகு அனைத்திந்திய வங்கிகளும் பிராந்திய வங்கிகளும் இயங்கிய முறையைப் பரிசீலனை செய்யவேண்டும். அவைகளுடைய அளவையும், மேலும் எத்தகைய அமைப்பு பற்றிய மாற்றங்களைச் செய்யலாம் என்பதையும் பரிசீலனை செய்யவேண்டும். திறமையாக இயங்கும் வங்கிகளைத் தொடர்ந்து மாற்றியமைத்துக்கொண்டே சென்றால், தொண்டு புரியவேண்டுமென்ற அவைகளுடைய விருப்பம் பாதிக்கப்படும் என்பதை நாம் நினைவில் கொள்ளவேண்டும். வாடிக்கையர் அவைகளிடம் கொண்டுள்ள நம்பிக்கையும் பாதிக்கப்படும். இறுதியாகக் குறைவான பிராந்திய வங்கிகளைவிட அதிகமான பிராந்திய வங்கிகள் இருப்பின் நாட்டுடைமையின் சமுதாய நோக்கங்கள் மேலும் நல்ல முறையில் நிறைவேறும். ஆனால் ஸ்டேட் வங்கிக்கும் அரசுடைமையான மைய வங்கிகளுக்கும் குழு சில நல்ல யோசனைகளை அளித்துள்ளது. மைய அரசு தன் பிரதிநிதிகளை நியமிக்கும்போது அரசு அலுவலர்களை மட்டுமே நியமிக்க வேண்டுமென்ற கட்டாயம் இல்லை. 33, 34 பகுதிகள் விளக்கும் கட்டுப்பாடுகள் இனி ஸ்டேட் வங்கியைக் கட்டுப்படுத்தக் கூடாது. மற்ற வங்கிகளும் அதன் துணை நிறுவனங்களும் செய்யும் எல்லாப் பணிகளையும் ஸ்டேட் வங்கி செய்ய இடமிருத்தல் வேண்டும்.

தலைமை வங்கி முறையைக் (Lead Bank Scheme) குழுவினர் விளக்கிய பிறகு இதற்கான பகுதிகளை வங்கிகள் தொலைவான இடங்களில் கொள்ளக் கூடாது என்றும், மாவட்டக் கணக்கு (district survey) புதிய கிளைகளை நிறுவுவதற்காக மட்டும் எடுக்கப்படக் கூடாது என்றும் குறிப்பிட்டனர். தலைமை வங்கிகள் நுட்பமான பொருளாதாரக் கணக்கெடுப்புகளைச் செய்ய முடியாது. இதற்கான பயிற்சி பெற்ற அலுவலர்கள் அவர்களிடம் இல்லை.

திட்டமிடலும், வங்கிப் பணியை ஆற்றுவதும் வெவ்வேறு பணிகள். மாவட்ட அதிகாரிகள் முதலீட்டுக்கும் உற்பத்திக்கும் உரிய திட்டத்தை வகுக்கவேண்டும். அவர்களே இதைச் செய்ய உரியவர்கள் ஆவர். இவ்வாறு செய்தால்தான் திட்டப்படி கடன் திட்டமும் சரிவர நடைபெறும். கிளைகளை நிறுவுவது பற்றிக் குழு எதையும் கூறவில்லை.

டெப்பாசிட்டுகளைத் திரட்டுவது பற்றியும் குழு சிறப்பான யோசனைகளை அளிக்கவில்லை. தற்போது உள்ள நிலையங்கள் இயங்குகின்றன. இவைகளைத் தவிர டெப்பாசிட்டர்களின் விருப்பங்களுக்கேற்றவாறு ரொக்க நிலைத் தேவைகளைப் பூர்த்திசெய்யும் வசதிகளும் இருக்கவேண்டும். குழு இதற்கான உருப்படியான திட்டங்களை அளிக்கவில்லை. மாருக, வட்டி வீதங்களை நிருவகிக்கையில், போட்டி மிகுந்துள்ள மார்க்கட்டில் டெப்பாசிட்டுப் பெருக்கம் எவ்வாறு ஏற்படும் என்பதை ஆய்வு செய்ய வேண்டுமென்று கூறியுள்ளது. கிராமப் பகுதியில் சேமிப்பு–வருமான விகிதம் குறைவாக இருக்கின்றது. ஆகையால் சேமிப்பைப் பெருக்கத் தீவிரமான நடவடிக்கை வேண்டும். குறிப்பாக இப் பகுதியில் வங்கி டெப்பாசிட்டு உருவில் சேமிப்புப் பெருகுவதற்குச் சிறப்பான நடவடிக்கைகள் தேவை. கூட்டுறவு வங்கிகள் இதுகாறும் நல்ல முறையில் பணிபுரியவில்லை. எனினும் கிராமப் பகுதிகளின் சேமிப்பைத் திரட்டுவது இவைகளுடைய பொறுப்பு என்று குழுவினர் கருதுகின்றனர்.

சிறு தொழில்களுக்கும், சிறு கைவினைஞர்களுக்கும் அளிக்கப்படவேண்டிய உதவி பற்றிப் பேசுகையில் குழு, கடன் உறுதித் திட்டத்தை (credit guarantee scheme) சிறு நிறுவனங்களுக்கும் பொருந்துமாறு செய்யவேண்டும் என்றும் கைவினைஞர்கள் கடனளிப்புக்கு ஏற்றவர்களா என்று பார்க்கும்போது அவர்களிடமே நவீன முறையில் கணக்குப் புத்தகங்களை வைத்திருப்பதை எதிர்பார்க்கக் கூடாது என்றும் குறிப்பிட்டுள்ளனர். கைவினைஞர்களும் சிறு தொகையைக் கடன் வாங்குவோரும் கடன் வாங்குவதற்கும், சேமிப்பதற்கும் உரிய திட்டங்களைத் தீட்டவேண்டும். நிதியளிக்காத பன்னேக்கு நிறுவனங்கள் இருத்தல் வேண்டும். இவை எங்குக் கச்சாப் பொருள்கள் கிடைக்கும் என்பது பற்றியும் வியாபார வசதிகள் பற்றிய விவரங்களையும் அளிக்கவேண்டும். வர்த்தக வங்கிகளுக்கும், கூட்டுறவு வங்கிகளுக்கும் பயன்படக்கூடிய இவைகளை நிறுவ மாநில அரசுகள் நடவடிக்கை எடுக்கவேண்டும். சிறு தொழில்களின் பணியை மனத்தில் கொண்டு அதாவது அவைகளுடைய

உற்பத்தித் திறனைப் பார்த்து அவைகளுக்கு உதவியளிக்க வேண்டும்.

விவசாயக் கடன் கொடுப்பதற்குச் சரியான இணைப்புள்ள மேற்பார்வைக் குட்பட்ட கடன் முறை வேண்டும், தேசீயவிஸ்த ரிப்புத் திட்டத்தைக் (extension service) கொண்டு விவசாயப் பண்ணைகளுக்கு அறிவுரை வழங்கவேண்டும். விவசாயக் கடன் களைத் திருப்பி வாங்கும் முறையில் நெகிழ்ச்சி இருக்க வேண்டும். கூட்டுறவு நிறுவனங்களும் வர்த்தக வங்கிகளும் மேற்பார்வைக் குட்பட்ட கடன் முறையை ஆரம்பிக்கவல்லவையாக இருக்கும் இடங்களில் கடன் வசூல் 2 அல்லது 3 ஆண்டுகளில் பரவலாக இருக்கலாம், மாநில அரசுகளின் சட்டங்கள் விவசாயிகள் தம் நிலங்களை வர்த்தக வங்கிகளின் பெயருக்கு மாற்றுவதைக் கட்டுப்படுத்துகின்றன. இது பற்றிய டால்வர் (Talwar) குழுவின் ஆலோசனைகளை வங்கிக் குழு ஆமோதித்தது. முன்னுரிமைப் பகுதிகளுக்குக் (priority sector) கடன் வழங்குவதற்காக மற்றப் பகுதிகளின் தேவைகளைப் புறக்கணிக்கக் கூடாதென்று குழு எச்சரித்தது. நிருவாகத்தைப் பொறுத்தவரை மாவட்ட அளவில் இணைப்புக் குழுக்கள் இருக்கவேண்டும். கடன் கொடுக்கும் நிலையங்கள் இதில் அங்கம் வகிக்கவேண்டும்; மாவட்ட வளர்ச்சித் துறையின் மூத்த மாநில அதிகாரி குழுவின் தலைவராக இருக்க வேண்டும் என்று குழு பரிந்துரைத்துள்ளது.

புதிய கிளைகளை நிறுவுவது, டெப்பாசிட்டுகளைத் திரட்டுவது, சிறு தொழில்களுக்கும், கைவினைஞர்களுக்கும், விவசாயிகளுக்கும் கடனுதவி யளிப்பது முதலியவை பற்றிய குழுவின் யோசனைகள் குறைவாகவும், ஆழம் குன்றியதாகவும் இருக்கின்றன. கிளைகளை அமைப்பது பற்றி அது உருப்படியான கருத்துகளை அளிக்க வில்லை. டெப்பாசிட்டுகளைக் கூட்டுறவு வங்கிகள் திரட்டலாம் என்பது அவைகளின் கருத்து. கிராமப் பகுதிகளில் டெப்பா சிட்டுகளைத் திரட்டுவதும், கடன்களை வழங்குவதும் சேர்ந்து இயங்கவேண்டும்; மேலும் இவை இப்பகுதியில் வருமானப் பெருக்கத்துடன் பிணைந்திருக்கின்றது. எதிர்காலத்தில் உதவி யாக உள்ள கடன் தொகை நிறுவுவதுபற்றிக் குழுவினர் ஆய்வு செய்துள்ளனர்.

மற்ற இரு பகுதிகள் வங்கிகள் இயங்குவது, அவைகளுடைய அலுவலர்கள், ஆராய்ச்சி முதலியவை பற்றியது. இவ்விரு பகுதிகளும் நன்கு அமைந்திருக்கின்றன. பொதுத்துறை வங்கிகளின் இலாப நோக்கு தொடரவேண்டும். இந்திய

அரசின் முதலீட்டுக்கு நியாயமான வருமானம் இருக்கவேண்டும். இது சீரமைப்புச் செலவுகள் போக எச்ச வருமானமாக இருக்க வேண்டும். மூலதனத்தின் இடர்ப்பாடுகளுக்கு ஈடு செய்வ தாகவும் இருக்கவேண்டும். வங்கிகள் கொடுக்கும் கடன்களை மூன்று வகைகளாகப் பிரிக்கவேண்டும். (1) முறையாக வாங்கும் கடன்கள்; (2) தரக்குறைவான (sub-standard) கடன்கள்; (3) மீளாக் கடன்கள் (bad debts). பொது மக்கள் வங்கிகளுடைய நிலைமையை ஒளிவு மறைவின்றி அறிய வேண்டும். ஆகையால் அவை இரகசியக் காப்பு நிதிகளைக் கொள்ளக் கூடாது. எதிர்பாராத நிலைகளைச் சமாளிப்பதற்காக வங்கிகள் இவைகளைக் கொள்ளுவது வழக்கம். இந்நிலை பொதுத் துறை வங்கிகளுக்கு ஏற்படாது. வங்கிகளின் இருப்புநிலைக் குறிப்பு (balance sheet), இலாப இழப்புக் கணக்கு (profit and loss account) முதலியவை பற்றிய வங்கிக் கட்டுப்பாட்டுச் சட்டத் தைத் (Banking Regulations Act) தளர்த்தலாம். இதனால் வங்கிகள் தம் சொத்துகள், பொறுப்புகள் பற்றிய முழு விவரங் களையும் வெளியிட வேண்டும்.

வங்கிகளுடைய கொள்கைகளை மனத்தில் கொண்டு பார்க்கும் போது ஒரு கிளையின் இலாப ஈட்டலைச் சரிவர மதிப்பிடும் முறையை வகுக்கவேண்டும் என்று குழுவினர் கூறியுள்ளனர். பொதுத்துறை வங்கிகள் குறிப்பாக மாற்று விலைகள் (transfer prices) பற்றிய பொருத்தமான கொள்கையைப் பின்பற்ற வேண்டும். டெப்பாசிட்டுக் கணக்குகளுக்கு ஒரு விலை முறையை வகுக்க வேண்டும்; வங்கிகளின் அளவு, தொகுதி, சராசரி அடக்கச் செலவு முதலியவைகளுக்கேற்ப கொடுக்கும் கடன் களின் வீதங்களை நிர்ணயம் செய்ய வேண்டுமென்ற யோசனை கடன் கொடுப்பதில் ஒழுங்கு முறையை உருவாக்கும். முக்கிய வங்கிகளிடமிருந்து கிடைக்கும் விவரங்களைக் கொண்டு அன்னியச் செலாவணித் தொழிலின் அடக்கச் செலவையும் இலாபத்தையும் கணக்கிடும் வழி முறைகளை வகுக்க வேண்டும். பல கிளைகளில் உள்ள ரொக்கத்தைச் சரிவரப் பயன்படுத்து வதால் வங்கிகள் பெறும் இலாபத்தைப் பெருக்கலாம். ரொக்கம் வைத்துக்கொள்வது பற்றிக் குழுவினர் சரக்குக் கட்டுப்பாட்டு முறையைச் சிறு திருத்தங்கள் செய்து பின்பற்றலாம் என்று கூறுகின்றனர்.

வர்த்தக வங்கிகள் செய்முறைகளைச் சீர்திருத்த வேண்டும், நவீனமாக்கவேண்டும். இதற்காக அதிகாரத்தைப் பரவலாக்க வேண்டும். இதனால் கால தாமதம் தவிர்க்கப்படும், இரட்டை முறைக் கட்டுப்பாட்டை நீக்க வேண்டும், வாடிக்கையருக்கு

அளிக்கும் பணிகள் சீராகவேண்டும் என்று குழு குறிப்பிட்டுள்ளது, வாடிக்கையருக்கு அளிக்கும் பணியைச் சீரமைப்பதற்குப் பிராந்திய மொழியை நமூனுக்களில் பயன்படுத்த வேண்டும் என்றும் அதிகமான செக்குத் தீர்வகங்களையும் வங்கிகளின் பரஸ்பரக் கடன்களைத் தீர்க்கும் தீர்வகங்களையும் நிறுவ வேண்டுமென்றும் குழு கருதுகின்றது. கடன் முறைகளைச் சீர்திருத்துவதற்குக் கடன் செய்தி நிறுவனத்தை (Credit Intelligence Bureau) அமைக்கவேண்டும். அமைப்புச் செய்முறைத் துறையை (Organisation and Methods) நிறுவவேண்டும்; பொருளாதாரப் புள்ளி விவரத் துறையை (Economic and Statistics Dept.)யும், நிருவாகச் செய்தியமைப்பையும் (Management Information System) ஒவ்வொரு வங்கியும் ஏற்படுத்தவேண்டும். ரிசர்வ் வங்கியின் கண்காணிப்பில் கணக்கெடுப்புத் துறை (Survey Organisation) ஒன்றை ஏற்படுத்த வேண்டும். பெருமளவில் நடத்த வேண்டிய கணக்கெடுப்புகளை இது செய்ய வேண்டும். இவைகளுக்குத் திட்டம் வகுக்க ஒரு நிரந்தரக் குழு இருக்க வேண்டும். சிறு தொகைகளைக் கடன் வாங்குவோருக்குக் கடன் கொடுக்கக் கிளைகள் போதிய அதிகாரம் பெற்றிருக்க வேண்டும்.

நிருவாக முன்னேற்றத்திற்கான ஆலோசனைகள் கீழ்க்கண்டவை பற்றியன: அலுவலர் தேர்வு, அவர்கள் பதவியுயர்வு, பயிற்சித் தேர்வு, பணி புரிபவர்க்கு நிருவாகத்தில் பங்கு, நிருவாக அமைப்பு, வளர்ச்சி முதலியவை. தற்போது உள்ள பல படிவங்களில் பணிபுரியும் அலுவலர் பற்றிய விவரங்களை முறையாகக் கொள்ள வேண்டும். நீண்டகால, குறுகிய காலத் தேவைகளை மதிப்பீடு செய்து அவைகளைப் பூர்த்தி செய்ய அலுவலர் நியமனத்திற்கான திட்டங்களை வகுக்க வேண்டும். வங்கிப் பணிகளுக்கு அலுவலர்களைத் தேர்வு செய்யும் பொதுக் குழு ஒன்றை (Banking Service Commission) நியமனம் செய்ய வேண்டும். அவர்களுடைய வயது, கல்வித் தகுதி, அவர்களுக்கு நடத்த வேண்டிய தேர்வு முதலிய பற்றிய விவரமான சிபாரிசுகளைக் குழுவினர் அளித்துள்ளனர். தேசீய வங்கி நிருவாக நிலையம் (National Institute of Bank Management) பல்கலைக் கழகம்போல் இயங்க வேண்டும் என்பது குழுவின் முடிவு. முக்கியமான செயல்களுக்குப் பல நிலைகளில் கமிட்டிகள் அமைக்க வேண்டும். அதிகாரிகள் இவைகளில் கலந்து கொள்ள வேண்டும். அலுவலர்களுடைய ஆற்றலுக்குத் திருப்தியளிக்கும் வகையில் நிருவாகப் பங்கேற்புக்கு வழி செய்ய வேண்டும். நிருவாக வளர்ச்சித் திட்டங்களுக்கு வங்கிகளில் தனித் துறைகளை அமைக்க வேண்டும்.

குழுவின் பல யோசனைகள் அமலாக வேண்டும். இதற்காக சட்டத்தையும் அரசியலமைப்பையும்கூடக் கணிசமாகத் திருத்தி யமைக்க வேண்டும். கடன் கொடுக்கும் நிலையங்கள்மீது உள்ள கட்டுப்பாட்டைப் பிரித்தோ அல்லது இரட்டைக் கண்காணிப் பாகவோ அமல் செய்யக் கூடாது. வங்கித் தொழிலைச் செய் வோருடைய செயல்களையும், கடன் கொடுப்போர் (ஆனால் மற்ற வங்கிப் பணிகளை ஆற்றுதவர்கள்) செயல்களையும் தனித் துறைகள் தற்போது கண்காணிக்கின்றன. கடன் கொடுப்போர் செயல்களை மைய அரசும், மற்றதை மாநில அரசுகளும் கட்டுப் படுத்துகின்றன. தற்போதுள்ள முறைப்படி கூட்டுறவு வங்கிகளை மைய அரசும் மாநில அரசுகளும் கண்காணிக்கின்றன. கடன் கொடுப்போர் (money lenders) மாநில அரசின் சட்ட திட்டங் களுக்குட்படுகின்றனர். வர்த்தக வங்கிகளை மைய அரசின் சட்டங்கள் ஒழுங்குபடுத்துகின்றன. இதனால் நாட்டின் வங்கி, கடன் முறை ஒழுங்கற்ற முறையில் வளர்ந்துள்ளன. மேலும் கூட்டுறவு வங்கிகள் மீதுள்ள இரட்டைக் கட்டுப்பட்டு முறை நிருவாகத் திறமையைப் பாதித்துள்ளது. தற்போது விவசாயத் துறையின் நிதி நிலையங்கள் கூட்டுறவு நிறுவனங்கள் இவை பெரும்பாலும் தமக்கு வேண்டிய தொகைகளை ரிசர் வங்கியிட மிருந்தும் மைய அரசினரிடமிருந்தும் பெறுகின்றன. ஆகையால் கடன் கொடுப்போர், நாட்டு வங்கியர் முதலியோர் பற்றிய அதிகாரங்களை யூனியன் பட்டியலுக்கோ (Union list) அல்லது பொதுப் பட்டியலுக்கோ (Concurent list) மாற்ற வேண்டும் எனபது குழுவின் வாதம். மேலும் கிராமிய வங்கிகளைத் தொடங்கவேண்டும் என்றும், வங்கிகளின் விளக்கத்தை விரி வாக்க வேண்டுமென்றும் குழு குறிப்பிட்டுள்ளது.

தொழிலுக்கு வேண்டிய எந்திரங்களை வங்கிகள் வாங்கி உற்பத்தியாளருக்கு வாடகைக்குக் கொடுக்க வேண்டும், மைய அரசின் அனுமதியுடன் இத்தகைய அலுவல்களை மேற்கொள்ள லாம் என்ற குழுவின் யோசனை வங்கி முறைக்கும், 1936 முதல் உள்ள வங்கிப் பழக்கத்திற்கும் முரணானது. இதைக் கவனமாகப் பரிசீலனை செய்ய வேண்டும். உற்பத்தி நிலையங்களுடைய பிரச்சினைகளை இத் தொழில்கள் மூலம் வங்கிகள் தீர்க்க வேண்டிய நிலை ஏற்படும். டெப்பாசிட்டுகளை ஏற்கும் எல்லா நிறுவனங் களையும் ஒழுங்குபடுத்துவதற்கு ஒரு விரிவான வங்கி முறை பற்றிய சட்டத் தொகுப்பு நம் நாட்டுக்குத் தேவை. டெப்பா சிட்டுகளை ஏற்கும் நிலையங்களை ரிசர்வ் வங்கியோ, அல்லது அதனுடன் தொடர்பு கொண்டுள்ள ஒரு தனி நிறுவனமோ கண்காணிக்க வேண்டும். இதற்காக ரிசர்வ் வங்கி எல்லா

மாநிலங்களிலும் கிளைகளை நிறுவலாம். செலாவணிக் கருவிகள் (negotiable instruments) பற்றிய சட்டங்களை மறு பரிசீலனை செய்ய வேண்டும், கடன் பத்திரங்கள், டிபெஞ்சர் பத்திரங்கள் முதலியவை பற்றிய சட்டங்களைத் தொகுக்க வேண்டும். அமெரிக்காவைப்போல் வர்த்தகம், தொழில் பற்றிய விரிவான சட்டத் தொகுப்பை ஏற்படுத்த வேண்டும். இந்திய நிலையையும், வங்கி முறை சாதிக்க வேண்டிய சமுதாயப் பொருளாதார நோக்கங்களையும் மனத்தில் கொண்டு வங்கிச் சட்டத்தை அடிக்கடி மறுபரிசீலனை செய்வதற்கு ஒரு நிறுவனத்தை ஏற்படுத்தவேண்டும். ஒரு நீதிபதி இதன் தலைவராக இருத்தல் வேண்டும்.

மூலதனம், நிருவாகம், கணக்கு வைத்துக்கொள்ளும் முறை, தொழில்வகை முதலியவை பற்றிய ஒரேவிதமான சட்டங்களை ஸ்டேட் வங்கிக்கும், அதன் துணை நிறுவனங்களுக்கும், நாட்டுடைமையான மற்ற வங்கிகளுக்கும் பொருந்துமாறு அமைக்க வேண்டுமென்று குழுவினர் கூறியுள்ளனர். ஸ்டேட் வங்கியின் இயக்குநர்கள் நிருவாகத்தைத் தொழில் தத்துவ அடிப்படையிலும், பொதுநல நோக்குடன் அமைக்க வேண்டுமென்ற வாதம் மற்ற நாட்டுடைமையான வங்கிகளுக்கும் பொருந்தும். நிருவாகக் குழுவை எவ்வாறு அமைப்பது, பொதுத்துறை வங்கியின் முழு நேரத் தலைவரின் அலுவல்கள் யாவை என்பவைகளைப் பற்றிக் குழு ஆலோசனை நடத்தியது. சில பொதுத்துறை வங்கிகள் ஒன்றுடன் ஒன்று மோதும்வகையில் பணிபுரிகின்றன. இவைகளை நீக்கக் குழுவின் கருத்துகள் முக்கியம்; ஒரே சீரான வழிமுறை சட்டத்தில் இருப்பது பயனளிக்காது; வங்கிகளின் நிருவாகத்திலும் வழிமுறைகளிலும் இருக்கவேண்டும்.

வர்த்தக வங்கி முறையின் தொழிலை அறியவும் சமுதாயப் பொருளாதார முன்னேற்றத்திற் கேற்றவாறு அதை அமைக்கவும் தொடர்ந்து ஆராய்ச்சி நடத்தவேண்டும். முன்னேற்றத்திற்கும் வழி வகுக்கவேண்டும். இந்திய வங்கிகளைப் பல நிலைகளில் நவீனமாக்கவேண்டும். வளர்ச்சி நிறைந்த நாடுகளில் வாடிக்கையருக்கு ஆற்றும் தொண்டு சீர்திருத்தப் பெற்றிருக்கின்றது; நிருவாகம் முன்னேறியுள்ளது, இயங்கும் முறையில் எந்திரங்களைப் பயன்படுத்துகின்றனர். இவை வங்கியின் திறமையை உயர்த்தியுள்ளன. வங்கி முறையின் ஆராய்ச்சியை (இத்துறைகளில்) குழு ஆதரிக்கின்றது.

வங்கித் துறையின் பிரச்சினைகள் எல்லாவற்றையும் ஒரே நூலில் அடக்குவதற்குக் குழு செய்த முயற்சியின் விளைவாகச் சில

பிரச்சினைகள் குழுவின் கவனத்திலிருந்து நழுவிவிட்டன. சில வற்றை மேலெழுந்தவாரியாகக் குழுவினர் பார்த்துள்ளனர். கிளைகளை நிறுவுதல், பணிகளை நிறைவுபடுத்துதல் (functional coverage), டெப்பாசிட்டுகளைத் திரட்டுவது, இடைநிலை நிதி நிலையங்கள் முதலியவை பற்றிய குழுவின் ஆய்வு முற்றுப்பெற வில்லை. நிதி முறை பெருமளவு பெருகிவிட்டது; இந்தியப் பொருளாதாரத்தில் கடன் தேவைகள் பலதரப்பட்டிருக்கின்றன. இந்த நிலையில் வங்கிக் குழுவினர் இவை பற்றிய திட்டவட்ட மான கருத்துகளை அளித்திருக்கவேண்டும். இவை கடன் ஒதுக்கீட்டில் (credit allocation) எவ்வாறு இடம்பெறும் என்பதும் தெளிவாக வேண்டும். அமைப்பு பற்றியும், பணிகளை நிறைவு படுத்துதல் பற்றியும் தனி இதழில் (volume) ஆய்வறிக் கையை அளித்திருந்தால் குழுவின் பணி சிறப்பாகச் செய்யப்பட் டிருக்கும். செய்முறை, சட்டங்கள், ஆராய்ச்சி முதலியவை பற்றிய முடிவுகள் விரிவாக இருக்கின்றன. இவையனைத்தையும் வேறு ஓர் இதழில் கொடுத்திருக்க வேண்டும்.

ரிசர்வ் வங்கியைப் பற்றிய ஆய்வைக் குழுவின் பார்வைக் குட்படுத்தாதது பெரிய குறைபாடாகும். இதனால் பண மார்க் கட்டு, கடன் கொள்கை முதலியவைகளும் அறிக்கையிலிருந்து நீங்கிவிட்டன. முதன் முதலில் ரிசர்வ் வங்கிச் சட்டம் அதற்கு அளித்த பணிகளையும் அதிகாரங்களையும் இன்றய நிலையில் அதன் செயல்கள் மீறிவிட்டன. 'புதுப் பாணியில்' இயங்கும் மைய வங்கிகளைப் போல் அது செயல்படுகின்றது. தொன்மை விளக்கத்திலிருந்து (classical concepts) அது விலகியுள்ளது. நாட்டின் பொதுப்பொருளாதார வளர்ச்சியிலும், வங்கிப்பணிகளை நிறைவுபடுத்துவதிலும், அவைகளுடைய அமைப்பை நிர்ண யிப்பதிலும் ரிசர்வ் வங்கி முக்கியப் பணிகள் புரிகின்றது. இங்கி லாந்தில் ராட்கிளிப் குழுவினரையும், கனடாவில் போர்ட்டர் குழுவினரையும் (Porter Commission) செலாவணி - கடன் கொள்கைகளை ஆய்வு செய்யுமாறு அவ்வரசுகள் பணித்தன. ஆனால், ரிசர்வ் வங்கியின் பணிகளையும் கொள்கைகளையும் இந்திய வங்கிக் குழுவின் பார்வைக் குட்படுத்தாதது விந்தை யாகும்!

# 24. வளர்ச்சி வங்கிகள் கடன் கொடுக்கும் நிலையங்களை அமைத்தல்-போர்ப்பிற்கால ஏற்பாடு

நீண்டகாலக் கடனுதவி வழங்கும் நிலையங்களைப் பழங் காலத்தினர் அறியத்தவறவில்லை. ஆயினும் தொழில் வளர்ச்சிக்கு இவ் வளர்ச்சி வங்கிகள் கணிசமான ஊக்கம் அளிக்கக்கூடியவை என்பது போர்ப் பிற்காலத்தில்தான் புலனா யிற்று. சில நாடுகள் தொழில் வளர்ச்சியைத் தூண்ட நிதி நிலையங்களை நிறுவும் பணியில் ஈடுபட்டிருந்தன. பிரான்சு நாட்டின் கிரெடிட் மொபிலையர் (1852) (Credit Mobilier), ஜப்பானிய தொழில் வங்கி (1902), ஜெர்மானிய தொழில் வங்கி என்று அழைக்கப்படும் நிலையங்கள் முதலியவை மேற் குறிப்பிட்ட நாடுகளுக்குச் சிறந்த நிறுவனங்களாகத் தோன்றின. ஆனால் இவை போர்ப் பிற்காலத்திய 'வளர்ச்சி வங்கிகளி'லிருந்து வேறுபட்டிருந்தன. இவை அனைத்தும் ஒரே வகையில் அமைய வில்லை. மேலும் இவை பின்பற்றிய நிதி முறைகளும், ஆற்றிய பணிகளும் ஒரே பாணியில் அமையவில்லை. ஆனால் இவைக ளுடைய ஒரு முக்கிய நோக்கம் பொருளாதார வளர்ச்சியை ஊக்குவித்தல்; அதுவும் குறிப்பாகத் தொழில் வளர்ச்சி மூலம் பொருளாதார வளர்ச்சியைத் தூண்டுவதே இவைகளுடைய நோக்கம். அண்மையில் விடுதலை பெற்ற ஆசிய, ஆப்பிரிக்க, லத்தீன் அமெரிக்க நாடுகள் தமக்கென ஒரு மைய வங்கியை (Central Bank) நிறுவ முனைந்திருக்கின்றன. ஏனெனில் இவை மைய வங்கி இருப்பதைப் பெருமையாகவும், ஓர் உயர் பதவியை நாட்டுக்கு அவை அளிப்பதாகவும் கருதுகின்றன. இதேபோல் துரிதமான பொருளாதார முன்னேற்றத்தை ஏற்படுத்த வளர்ச்சி வங்கிகளை அமைக்கவும் முனைந்திருக்கின்றன. போருக்கு முன் நிறுவப்பெற்ற நிலையங்கள் தொழில் வளர்ச்சிக்குச் சாதாரணப் பங்குத் தொகை மூலமோ (equity capital) அல்லது கடன்கள் மூலமோ உதவியளிக்கின்றன. ஆனால் போர்ப் பிற்கால நிலை யங்கள் நிதியுதவி மட்டும் வழங்காமல், தொழில்நுட்ப அறிவுரை, தொழிலமைப்பு, மேற்பார்வை முதலியவை பற்றிய ஆலோசனை கள் முதலியவைகளையும் அளிக்கின்றன. தொழில் முனைவு,

நாட்டின் துரித வளர்ச்சிக்குத் தக்க திருத்தியமைப்பு முதலியவை பற்றிய ஆலோசனைகளையும் அவை அளிக்கின்றன. இத்தகைய நிலையங்கள் நிதியுதவி வழங்காவிடினும், பொறியியல் துறை, நிறுவனத்தின் கணக்குகளைச் செம்மையாக வைத்துக்கொள்வது, மேலாளர் பொறுப்பு முதலிய துறைகளில் அறிவுரை வழங்கலாம்.[1]

**வளர்ச்சி வங்கிகளின் அமைப்பு**

வளர்ச்சி வங்கிகளுடைய அமைப்பை நோக்கும்போது அவைகளை அரசினர், அல்லது மைய பாங்கு அல்லது தனி முதலிடுவோர் கொண்டிருக்கலாம் என்பது தெளிவாகின்றது. சில வங்கிகள் 'கூட்டுத் துறையில்' (Mixed Ownership) இருக்கின்றன. அதாவது அரசினர், தனியார், மைய வங்கி இம் மூவரில் ஏதேனும் இருவர் அல்லது மூவரும் வளர்ச்சி வங்கியைக் கூட்டுப் பொறுப்பில் கொள்ளலாம். பெரும்பாலான நிலையங்கள் கூட்டுப் பொறுப்பிலேயே இருக்கின்றன. இவற்றில் அரசின் பொறுப்பே மிகுதியாக உள்ளது. இப் பொதுவிதிக்கு இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கியும் (Industrial Development Bank of India), கனடியத் தொழில் வளர்ச்சி வங்கியும் விலக்குகள். இவ்விரண்டையும் மைய வங்கிகளே தம் முழுப் பொறுப்பில் கொண்டுள்ளன. வளர்ச்சி வங்கிகளை மைய வங்கிகள் தம் முழுப் பொறுப்பில் கொள்ளலாமா என்பது சர்ச்சைக்குரியது. மைய வங்கியின் நிருவாகக் குழுவினர் அவர்களது துறையில் கொண்டுள்ள ஆற்றலையும், தொழிலார்வத்தையும் யாரும் குறைத்துக் கூறமுடியாது. ஆனால் வளர்ச்சி வங்கிகளுடைய அன்றாட அலுவல்களுக்கேற்ற கொள்கையைத் தீட்டுவதற்கும் இவ் வங்கிகளின் தொழிற்கடன்களை நிருவாகம் செய்வதற்கும் வேறு வகைத் திறமையும், அனுபவமும் வேண்டும். இவ்வனுபவத்தையும் ஆற்றலையும் மைய வங்கியின் நிருவாக உறுப்பினர் கொண்டிருக்க வாய்ப்பேதுமில்லை.[2] மேலும் நாட்டின் பொருளாதாரம் வளர்ச்சியடையும்போது மைய வங்கி முன்னர் ஆற்றி வந்த சில பணிகளை (மைய வங்கியின் பொறுப்புக்கப்பாற்றப்பட்டவை) விட்டுக் கொடுக்கவேண்டிய நிலை வரும். அது முழுவதும் மைய வங்கியின் தொழிலையே செய்யவேண்டிய நிலை வளரும். ஆஸ்திரேலியாவின் காமன்வெல்த் வங்கியை (Commonwealth Bank of Australia) 1959-ல் ஆஸ்திரேலியாவின் ரிசர்வ் வங்கி (Reserve Bank

[1] வில்லியம் டயமண்ட் (William Diamond) எழுதியுள்ள 'Development Banks'; ஷிர்லே போஸ்கி (Shirley Boskev) எழுதியுள்ள Principles and Practices of Development Banks', எஸ். கே. பாசு (S. K. Basu) எழுதியுள்ள 'Theory and Practice of Development Banking' என்ற நூல்களைப் பார்க்கவும்.

[2] எஸ். கே. பாசு (S. K. Basu) எழுதிய Theory of Practice of Banking என்ற நூலைப் பார்க்கவும்

of Australia) என்று மாற்றியமைத்தனர். மாறுதலுக்குப் பிறகு இந்த வங்கி தொழிலுக்கான நிதி வழங்கும் பழக்கத்தை நிறுத்தி விட்டன.

பல வளர்ச்சி வங்கிகளை அரசே தன் முழுப் பொறுப்பில் கொண்டிருக்கின்றது. கீழ்க் காணும் வங்கிகள் இவ்வினத்தைச் சார்ந்தவை: நேபாளத்தின் தொழில் வளர்ச்சி வங்கிகள் (Industrial Development Bank of Nepal) 1959; இந்தோனேசிய வங்கிகள் [1960); பிரேசில் நாட்டு வளர்ச்சி வங்கி (The National Development Bank of Brazil) ; The Libyan Industrial and Real Estate Bank, The Development Corporation of Chile, இராக் நாட்டின் தொழில் வளர்ச்சி வங்கி (The Industrial Development Bank of Iraq), ப்யூர்டோரிகோ நாட்டின் தொழில் வளர்ச்சிக் கம்பெனி (The Industrial Development Company of Peurto Rico) முதலியவை. கூட்டுப் பொறுப்பிலும் பல வங்கிகள் உள. இவைகளுடைய பங்கு முதலை (equity capital) அரசும், மைய வங்கியும், தனியாரும் கொண்டிருக்கின்றனர். கீழ்க்காணும் நிலையங்கள் இவ்வினத்தைச் சார்ந்தவை: இந்தியத் தொழில் நிதிக் கார்ப்பரேஷன் (இ.தொ.நி.கா.) (The Industrial Finance Corporation of India). பாக்கிஸ்தானிய தொழில் வளர்ச்சி வங்கி (The Pakistan Industrial Development Bank), கானாவின் தேசீய முதலீட்டு வங்கி (The National Investment Bank of Ghana, 1963), மொராக்கோவின் பொருளாதார வளர்ச்சிக்கான தேசீய வங்கி (The National Bank for Economic Development of Morocco, 1959), மலேசியாவின் தொழில் வளர்ச்சி (நிதி) கார்ப்பரேஷன் (The Indusrrial Development (Finance) Corporation of Malaysia), The National Financiera of Mexico, நைஜீரியாவின் தொழில் வளர்ச்சி வங்கி (The Industrial Development Bank of Nigeria), சூடானின் தொழில் வளர்ச்சி வங்கி (The Industrial Bank of Sudan) முதலியவை. முற்றிலும் தனியார் வசமே உள்ள பல நிலையங்களும் உள. பின் வருபவை இந்த வகையைச் சார்ந்தவை: இந்திய, பாக்கிஸ்தானியத் தொழில் கடன், முதலீட்டுக் கார்ப்பரேஷன்கள் (The Industrial Credit and Investment Corporations of India and Pakistan), இரானின் தொழில், சுரங்க வங்கி (Industrial and Mining Development Bank of Iran), துருக்கியின் தொழில் வளர்ச்சி வங்கி (Industrial Development Bank of Turkey), சிலோன் வளர்ச்சிக் கார்ப்பரேஷன் (The Industrial Development Bank of Ceylon), தாய்லாந்தின் தொழில் நிதிக் கார்ப்பரேஷன் (The Industrial Finance Corporation of Thailand).

இந்த நிலையங்களுடைய, மூலதனத்தை நோக்கும்போது இவை வேண்டிய முதலைப் பங்குத் தொகை, கடனுதவி முதலியவை மூலம் திரட்டுகின்றன என்பதை அறியலாம். அரசினரைத் தவிர இன்சூரன்சு நிறுவனங்கள் போன்ற உள் நாட்டு வெளி நாட்டு முதலீட்டு நிறுவனங்களும் தனியாரும் வளர்ச்சி வங்கிகளுக்கு நிதி யளிக்கின்றன. துருக்கி, சிலோன், மலேசியா, நைஜீரியா முதலிய நாடுகளின் நிலையங்களிலும், இந்தியப் பாக்கிஸ்தானியத் தொ. க. மு. கா. (தொழில் கடன் முதலீட்டுக் கார்ப்பரேஷன்) அயல் நாட்டு நிதி யுதவியைப் பெற்றிருக்கின்றன. வளர்ச்சி வங்கிகள் உள் நாட்டு அரசாங்கங்களிடமும், மைய வங்கிகளிடமும், உலக வங்கி அதன் கிளை நிறுவனங்கள் (தொழில் நிதிக் கார்ப்பரேஷன், பன்னாட்டு வளர்ச்சிக் கழகம், ஜெர்மானிய Kreditanstalt என்ற நிலையம் போன்றவை) முதலியவைகளிடமும் நிதியுதவி பெறுகின்றன. நாட்டின் தொழில் முன்னேற்றத்துக்கு இன்றியமையாத அயல் நாட்டுத் தளவாடங்களை இறக்குமதி செய்ய இவை அன்னியச் செலாவணியை அளிக்கின்றன.

அரசு, மைய வங்கி, பன்னாட்டு நிதிநிலையங்கள் முதலியவைகளிடமிருந்து வாங்கும் கடனுதவி, பங்குத் தொகை முதலியவைகளைத் தவிர இவை பத்திரங்களை வெளியிட்டும் பணம் திரட்டலாம். நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தில் இவைகளுடைய பங்கு கணிசமாகப் பெருகும்போது பத்திர வெளியீடு மூலம் நிதி திரட்டல் முக்கியத்துவம் பெறும். இவை பெறும் கடன் தொகைக்கும் பத்திர வெளியீட்டுக்கும் ஒரு வரம்பு வேண்டும் என்பது ஒரு வெளிப்படை உண்மை. பத்திர வெளியீட்டின் உச்சவரம்பும், இவை பெறும் கடன் தொகையின் உச்ச வரம்பும் இவைகளுடைய செலுத்திய மூலதனம் காப்பு நிதியில் ஒரு சதவீதமாக இருத்தல் வேண்டும். பொதுவாகக் கடன்–பங்குத் தொகையின் வீதத் தொடர்பு 2:1லிருந்து 10:1 வரை இருக்கும். பாக்கிஸ்தானின் தொழில் வளர்ச்சி வங்கியின் (தொ. வ. வ.) 5:1 ஆக இருக்கின்றது. இந்தியத் தொழில் நிதிக் கார்ப்பரேஷனும், மொராக்கோவின் பொருளாதார வளர்ச்சிக்கான தேசீய வங்கியும் 10:1 என்ற வீதத் தொடர்பைக் கொண்டிருக்கின்றன. இவை வாங்கும் கடனுக்கு உச்ச வரம்பு கட்டுவதன் மூலம் சில நாடுகளின் இக் கட்டுப்பாட்டைச் செயல்படுத்துகின்றன. தொ. க. மு. கார்ப்பரேஷன் (இந்தியத் தொ. க. மு. க) இத்தகைய கடன் வரம்பைக் கொண்டிருக்கின்றது. ஆனால், இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கிக்கு (Industrial Development Bank) (இ. தொ. வ. வ.) இத்தகைய வரம்பு கிடையாது.

இது வளர்ச்சி வங்கி முறைக்கு முரணானது. இதை ஒரு குறை யாகக் குறிப்பிடவேண்டும்.

**வளர்ச்சி வங்கிகளின் இரு பொறுப்புகள்: நிதியளித்தலும் தொழில் நிறுவனங்களை ஊக்குவித்தலும்**

வளர்ச்சி வங்கிகளுக்கு இரு பொறுப்புகள் உள. தொழில் நிறுவனங்களுக்குப் பல்வேறு வழிகளில் நிதியுதவி யளிக்கும் நிலையமாக அவை செயலாற்றவேண்டும். அவை நிறுவனங்களுக்குப் பங்குத் தொகை யளிக்கலாம்; நடுத்தர, நீண்டகாலக் கடனுதவி யளிக்கலாம்; நிறுவனங்களுடைய பத்திரங்களையும் டிபஞ்சர்களையும் வாங்கலாம்; அவை வெளியிடும் சாதாரண, முன்னுரிமைப் பங்குகளுக்கும், பத்திரங்களுக்கும் உறுதியளிக்கலாம்; உள்நாட்டிலும் வெளி நாட்டிலும் அவை திரட்டும் கடன் தொகைக்கும் காப்பளிக்கலாம். வளர்ச்சி நிதி நிலையங்கள் மேற்கூறிய வழிகளில் பொதுவாக நிறுவனங்களுக்கு நிதியுதவி புரிகின்றன. இவ் வழிகளைத் தவிர இவை நிறுவனத் தொடக்கப் பணியிலும் பங்கேற்கின்றன. ஒரு பிரபல ஆசிரியர் கூறியுள்ளது போல் இவை தற்காலத்திய தொழில் வளர்ச்சிக்கு முக்கியமான அம்சம் ஏதேனும் ஒரு நிலையத்தில் இல்லாவிடில் இக் குறையை நீக்கும் பொறுப்பை வளர்ச்சி நிலையங்கள் ஏற்கின்றன. வளர்ச்சிக்கு முக்கியமானவைகளை அளிப்பதன்மூலம் இவை நிறுவனத்தின் முன்னேற்றத்தைத் துரிதப்படுத்துகின்றன. சில சமயங்களில் நிதியுதவியைவிடத் தொடக்கப் பணியில் பங்கேற்றலே முக்கியமாக இருக்கின்றன. இப் பணியைக் கீழ்க்கண்ட முறைகளில் செய்யலாம்: தொழில் நிலையங்களை நிறுவுதல்; அவைகளுக்குத் தொழில் நுட்ப, மேலாளர் துறைபற்றிய ஆலோசனைகள் கூறுவது; தொழில் துறை விவகாரங்களைச் சேகரிப்பது; மூலதன மார்க்கட்டைப் பரிசீலனை செய்து அதற்கு உதவியளிப்பது.

வளர்ச்சி வங்கிகளுடைய சாசனங்கள் அல்லது விதிகள்படி முன்பத்தியில் குறிப்பிட்டுள்ள எல்லா வழிகளிலும் அவை நிறுவனங்களுக்கு நிதியுதவி புரிய முடியாது. உதாரணமாகச் சில நிலையங்கள் நிறுவனங்களுடைய சாதாரணப் பங்குகளை வாங்க முடியாது. அவை கடன் தொகையை மட்டுமே அளிக்கலாம். இ. தொ. நி. கார்ப்பரேஷன் கடன் கொடுக்கலாம். வெளியிடும் பங்கு, பத்திரங்களுக்கு உறுதியளிக்கலாம், ஆனால், சாதாரணப் பங்குகளை அது வாங்கக் கூடாது, இ. தொ. நி. கார்ப்பரேஷனின் சாதாரணப் பங்குகள் வாங்கக் கூடாதென்ற இத் தடை இதன் செயல்முறையைப் பாதிக்கும் ஒரு குறைபாடாகும். இதன் உதவியை நாடுவோரின் நிலைக்கேற்றவாறு தன் பணியை

அமைத்துக் கொள்வதற்கு இக் குறைபாடு இடம் கொடுக்க வில்லை. மேலும் சட்டம் பங்கு வெளியீட்டுக்கு உறுதி கொடுப் பதை அனுமதிக்கின்றது; ஆனால் நேரடியாகப் பங்குகள் வாங்கு வதை அனுமதிக்கவில்லை. எனவே, சட்டத்தின் கூறுகளிடையே முரண்பாடு இருக்கின்றது. இ. தொ. நி. கார்ப்பரேஷனின் தொடக்கத்திலிருந்து இந்த நூலாசிரியர் இம் முரண்பாட்டைச் சுட்டிக் காட்டி வருகின்றார். இதை நீக்கவேண்டும் என்றும் கூறி வருகின்றார்.[1] கடைசியில் 1960-ல் இ.தொ.நி. கார்ப்பரேஷன் சட்டத்தைத் திருத்தினர்; தொழில் நிறுவனங்களுடைய சாதாரணப் பங்குகளைக் கார்ப்பரேஷன் வாங்க முடியும்.

### அவை செய்யக்கூடிய பணிகள்

வளர்ச்சி வங்கிகள் செய்யக்கூடிய பணிகளில் வேறுபாடுகள் பல இருக்கின்றன. சில நாடுகளில் பொதுத் துறை நிறுவனங் களும் தனியார் துறை நிறுவனங்களும் கடன் பெறுகின்றன. சில நாடுகளில் தனியார் துறை நிறுவனங்கள் மட்டுமே உதவி பெறுகின்றன. இரானின் தொழில் சுரங்க வங்கி, இந்தியப் பாக்கிஸ்தானியத் தொ. நி. கார்ப்பரேஷன், இந்தியப் பாக்கிஸ் தானிய தொழில் கடன் முதலீட்டுக் கார்ப்பரேஷன்கள், துருக்கியின் தொழில் வளர்ச்சி வங்கி முதலியவை தனியார் துறை நிலையங்களுக்கு மட்டுமே உதவிபுரிகின்றன, தாய்லாந்து, சிலோன் நாடுகளில் உள்ளவை பொதுவாகத் தனியார் துறை யினருக்கே உதவி புரியவேண்டும். பொதுத் துறைகள் பங்கு குறைவாக உள்ள தனியார் துறைகளுக்கும் அவை நிதியுதவி யளிக்க சட்டம் இடம் கொடுக்கின்றது. சில வளர்ச்சி வங்கிகளை, நிறுவனத் தொடக்கம் அவைகளுக்கு நிதியளிப்பது, அரசின் நிறுவனங்களை மேற்பார்வையிடல் முதலிய சிறப்பான பணிகளுக் காகவே அமைத்திருக்கின்றனர். பொலிவியாவிலுள்ள ஃபோ மெண்டோகார்ப்பரேஷன் (The Bolivian Fomento Corporation), இந்திய தேசிய வளர்ச்சிக் கார்ப்பரேஷன் (Indian National Industrial Develpment Corporation) முதலியவை மேற்கூறிய வகையைச் சார்ந்தவை. வளர்ச்சி வங்கிகளை வேறு ஒரு கோணத்திலும் பார்க்கலாம். அதாவது அவை தொழிலுக்கு மட்டும் உதவியளிக்கக் கூடியவையா அல்லது விவசாயத் திற்கும் உதவி கொடுக்கக் கூடியவையா என்பதையும் காணலாம். இந்தியத் தொழில் நிதிக் கார்ப்பரேஷன் தொழிலுக்கு மட்டும் உதவி புரிகின்றது. இரானின் தொழில் சுரங்க வங்கியும்,

[1] எஸ். கே. பாசு (S. K. Basu) எழுதியுள்ள 'Industrial Finance in India, 4-வது பிரதி பக்கம் 432-33ஐப் பார்க்கவும்.

சிலோன் வளர்ச்சி நிதி வங்கியும் பரவலான துறைகளில் செயல் புரிகின்றன. இரானின் நிலையம் சுரங்கத் தொழிலுக்கும், விவசாயத்திற்கும் உதவியளிக்கின்றது. சிலோன் நிலையம் விவசாயத்திற்கும் நிதி வசதியளிக்கின்றது.

தொழில் துறையிலும்கூட இவை பெரிய நிறுவனங்களுக்கு மட்டும் நிதியளிக்க வேண்டும்; அல்லது சிறு நிறுவனங்களுக்கு மட்டும் உதவி புரியவேண்டுமா, அல்லது இருவகைகளுக்கும் உதவியளிக்கலாமா என்ற வினா எழும்புகிறது. இந்தியாவில் தொ. நி. கார்ப்பரேஷன் பெரிய நிறுவனங்களுக்கும், மாநில நிதிக் கார்ப்பரேஷன்கள் (State Financial Corporation) சிறிய நிலையங்களுக்கும் நிதி வசதியளிக்கின்றன. இருவகைகளுக்கும் உதவி புரியும் வங்கிகளும் உள. உதாரணமாக மலேசியாத் தொழில் வளர்ச்சி நிதி இருவகை நிலையங்களுக்கும் கடனுதவி புரிகின்றது, இது சிறு தொழிலகங்களுக்காக ஓர் ஆலை வளர்ச்சித் துறையை நிறுவியுள்ளது.

குறிப்பிட்ட சில தொழில் கூறுகளின் முன்னேற்றத்துக்காக உதவி யளிக்கும் நிலையங்களையோ அல்லது ஒரே வகை உதவி யளிக்கும் பல நிறுவனங்களையோ அமைத்தல் வளர்ச்சி குன்றிய நாடுகளில் சாத்தியமல்ல. பொருளாதார நிறைவு பெறக்கூடிய புதிய தொழில் திட்டங்கள் மிகுதியாக இல்லாமை, தகுதிவாய்ந்த மேலோர்கள் போதிய அளவு இல்லாமை, உள்நாட்டுச் சேமிப்புப் பற்றுக்குறை முதலியவை ஒவ்வொரு துறையிலும் சிறப்பு நிறுவனங்கள் தோன்றுவதற்குத் தடையாக இருக்கின்றன. விவசாயம், தொழில், வாணிகம் முதலியவை வெவ்வேறு தொழில் நுட்ப, அமைப்பு பற்றிய பிரச்சினைகளைக் கொண்டிருக்கின்றன என்பதையும் நாம் உணரவேண்டும். ஒரே நாட்டிலுள்ள பல்வேறு பகுதிகளின் வளர்ச்சித் தேவைகள் வேறுபட்டிருக்கலாம். சிறு தொழில்களுக்கும், பெரிய நிறுவனங்களுக்கும் தேவையாகும் தொழில்நுட்ப உதவியும், அவைகளுடைய நிருவாகப் பிரச்சினைகளும் வேறுபட்டிருக்கும். இந்த நிலையில் ஒரேவகை உதவி யளிக்கும் பல்வேறு நிலையங்கள் இருக்கவேண்டும். ஒவ்வொரு நாடும் விரும்பும் சமுதாயப் பொருளாதார அரசியல் அமைப்பு எவ்வகையில் வளரவேண்டுமோ அதற்குத் தகுந்த முறையில் வளர்ச்சி வங்கிகளை அமைத்துக் கொள்ளவேண்டும்.

**வளர்ச்சி வங்கிகள் வர்த்தக வங்கிகளின் பொறுப்புகளை ஏற்கலாமா?**

வளர்ச்சி வங்கிகள் தம் அலுவல்களுடன் வர்த்தக வங்கிகளுடைய பணிகளையும் ஏற்கலாமா என்பது மற்றொரு பிரச்சினை

யாகும். வளர்ச்சி வங்கிகள் குறுகியகால நடைமுதலைக் (working capital) கடனுகக் கொடுக்கலாமா என்பது பற்றிய கருத்து வேற்றுமை இருக்கின்றது. கோட்பாட்டளவில் இந்தத் தற்காலிக நடைமுதலை நிறுவனத்தின் செலுத்திய பங்குத் தொகையி லிருந்தே அளித்தல் வேண்டும். ஆனுல் வளர்ச்சி குன்றிய நாடு களில் வங்கி முறை முழு வளர்ச்சி பெறவில்லை; சரியான அமைப்பும் பெறவில்லை, கடன் வசதிகள் குறைவாக உள்ளன. இந்த நிலையில் வளர்ச்சி வங்கிகள் நாட்டிலுள்ள குறையை நீக்கி வாடிக்கைக்காரர்களுக்குக் குறுகியகாலக் கடனுக நடைமுதலுக்கு வேண்டிய தொகையைக் கொடுக்கவேண்டும். நேப்பாள நாட்டில் வணிக வங்கி முறை வளரவில்லை. ஆகையால் தொழில் வளர்ச்சிக் கார்ப்பரேஷன் தொழில் துறை வாடிக்கைக்காரர் களுக்குக் குறுகியகாலக் கடனுதவியளிக்கின்றது. மெக்சிகோவி லுள்ள தேசீய நிதி நிலையமும் (National Financiers), தென் ஆப்பிரிக்காவின் தொழில் வளர்ச்சிக் கழகமும் இத்தகைய உதவி புரிகின்றன. அவைகளுடைய வாடிக்கை நிறுவனங்கள் மற்ற இடங்களிலிருந்து நிதி வசதிபெற இயலாத சமயம் அவைகளிட மிருந்து நிதி வசதி பெறுகின்றன. இந்தியத் தொழில் நிதிக் கார்ப்பரேஷன் தொடக்க நிலையில் நடைமுதலை அளிக்க விரும்ப வில்லை. ஆனுல், வாடிக்கை நிறுவனங்களுடைய ரொக்கநிலைச் சொத்துகள் கார்ப்பரேஷனிடம் அடைமானமாக வைக்கப்பட் டிருக்கும்போது அவைகளுடைய நிதிப்பிரச்சினை இக்கட்டான நிலையில் இருக்கின்றது என்பதைக் கார்ப்பரேஷன் உணரு கின்றது. வளர்ச்சி வங்கிகள் நடைமுதலைக் கடனுகக் கொடுத்தால் அவை வாணிக வங்கிகளுடன் போட்டியிடும் என்று தொ. க. மு. கார்ப்பரேஷன் கருதுகின்றது. பொதுவாக வளர்ச்சி வங்கிகள் நடைமுதல் கடனை அளிக்கத் தயங்குகின்றன. மிக அரிய சந்தர்ப்பங்களிலேயே அவை இக் கடன் தொகையை வழங்குகின்றன. இரானின் தொழில், சுரங்க வங்கி இத்தகைய கடன்களை வழங்குகின்றது.

நடைமுதல் அளிப்பதைத் தவிர டெப்பாசிட்டுத் தொகைகளை ஏற்பது, உண்டியல்களைத் தள்ளுபடி செய்தல், பற்றுத் திருமுகத் தொழில் செய்தல் முதலிய பணிகளை வளர்ச்சி வங்கிகள் மேற் கொள்ளலாமா என்ற வினுவும் எழுகின்றது. இந்தியத் தொழில் நிதிக் கார்ப்பரேஷன், மாநில நிதிக்கார்ப்பரேஷன்கள், இந்திய பாக்கிஸ்தானிய, பர்மியத் தொழில் வளர்ச்சிக் கார்ப்பரேஷன்கள் முதலியவை ஓராண்டு முதிர்வுக்கு மேலான தவணை டெப்பா சிட்டுகளை ஏற்கலாம். ஆனுல் ஒரு சில வளர்ச்சி வங்கிகளே டெப்பாசிட்டுகளை ஈர்த்திருக்கின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

தவணை டெப்பாசிட்டுகளுக்கு இவை மிகக் குறைவான வட்டியைக் கொடுப்பதே இதற்கு முக்கிய காரணமாகும். நீண்ட கால முதலீடுகளில் ஒரு நிறுவனத்தின் நிதி சிக்கியுள்ளபோது அது குறுகியகால டெப்பாசிட்டுகளை ஏற்கலாகாது என்பதை சித்தாந்தம் (Theory) தெளிவாகக் காட்டுகின்றது.

பற்றுத் திருமுகத் தொழில், உண்டியல் தள்ளுபடித் தொழில் போன்ற இதர வங்கிப் பணிகளைப் பொறுத்தவரை நாம் ஒரே மாதிரியான வழக்கத்தை எங்கும் காணமுடியாது. இரானின் தொழில் வங்கி முன்னர் பற்றுத் திருமுகத் தொழிலைச் செய்து வந்தது. ஆனால் இதை இப்பொழுது கணிசமாகக் குறைத்து விட்டது. ஆனால் இந்திய, பாக்கிஸ்தானிய, பர்மியத் தொழில் வளர்ச்சி வங்கிகளும், தொ. க. மு. கார்ப்பரேஷனும், உண்டியல்களையும் வெண்ணிலைக் கடன் பத்திரங்களையும் தள்ளுபடி செய்தல், ஏற்றல், பற்றுத் திருமுகத் தொழில் செய்தல் முதலிய வங்கிப் பணிகளைச் செய்கின்றன.

## ட்யூனிசியாவின் S.T.B. என்ற நிலையம் வர்த்தக வங்கியாகவும் வளர்ச்சி வங்கியாகவும் பணிபுரிதல்

வளர்ச்சி வங்கியாகவும் வர்த்தக வங்கியாகவும் பணி புரியும் நிலையத்துக்கு எடுத்துக் காட்டாக ட்யூனிசியாவின் S.T.B.யைக் குறிப்பிடலாம். இது டெப்பாசிட்டுகளை ஏற்கின்றது. குறுகிய காலக் கடன் கொடுக்கின்றது. தேசீய நிறுவனங்களுக்குத் தவணைக் கடன்களைக் கொடுக்கின்றது. பங்குத் தொகையையும் கொடுக்கின்றது. ஒரு முறை அதன் கேட்பு டெப்பாசிட்டு மற்ற வங்கிகளின் டெப்பாசிட்டுத் தொகையில் 38.2 சதவீதமாக இருந்தது. மூலதனப் பொருளுற்பத்தி செய்யும் தொழில்களுக்கு மட்டுமன்றி, வர்த்தகத் துறை, அயல் நாட்டு வர்த்தகத் துறை முதலியவைகளிலுள்ள நிறுவனங்களுக்கும் அது உதவி புரிகின்றது. நாட்டின் பொருளாதார முன்னேற்றத்துக்கு அது கணிசமான அளவு உதவி செய்திருக்கின்றது. நாட்டின் 3வது, 4வது திட்டங்களை நிறைவேற்றுவதில் அது சிறந்த பங்கேற்றது. அதன் உதவி பெறாத பெரிய திட்டமேதும் இல்லை என்றே கூறலாம். அரசின் திட்டக் கொள்கையை நிறைவேற்றுவதில் S.T.B. மிகத் திறமையான கருவியாக அமைந்துள்ளது என்று அதைக் குறிப்பிட்டிருக்கின்றனர்.[1]

## உலக வங்கியும் அதன் துணை நிறுவனங்களும்

வளர்ச்சி குறைந்த நாடுகளில் தனியார் துறையில் நிறுவனங்களைத் துவக்க வேண்டும். அவைகளுக்கு நிதியுதவியளிக்க

[1] S.T.B.யின் நிருவாகக் குழுவினருடைய அறிக்கை 1963, பக்கம் 29.

வேண்டும். இதற்கு உலக வங்கி ஆற்றும் பணியை இங்குக் குறிப்பிடலாம். உலக வங்கியின் சாசனப்படி அரசாங்கங்களின் உறுதி பெருமல் அவைகளுடைய நாட்டிலுள்ள தனியார் துறை நிறுவனங்களுக்கு உலக வங்கி கடன் கொடுக்கமுடியாது. ஆனுல் அரசியல், ஆட்சி முறையமைப்புக் காரணங்களை ஒட்டி அரசாங்கங்கள் உறுதி கொடுக்க இயலவில்லை. தொழிலதிபர்களும் தத்தம் அரசுகளை அணுகி உறுதி கேட்கத் தயங்கினர். மேலும் பெரும்பாலான தனியார் துறை நிறுவனங்கள் பங்கு முதலையும், கடனுதவியையும் நாடுகின்றன. சில நிறுவனங்கள் மிகச்சிறியவை யாக இருக்கின்றன. அவைகளுடைய நிதிப் பிரச்சினைகள் கடின மாகவும் உலக வங்கியின் ஆய்வுத் திறனுக்கு அப்பாற்பட்டவை யாகவும் இருக்கின்றன. அரசாங்கங்களுடைய உறுதியின்றித் தனியார் துறை நிறுவனங்களுக்கு உதவியளிக்கவும், குறைந்த தொகைகளை நாடும் நிறுவனங்களுக்கு அவைகளுடைய மனுக்களை ஆய்வு செய்யாமல் கடனுதவி யளிக்கவும் உலக வங்கி புதிய முறைகளைக் கண்டுபிடிக்க வேண்டியதாயிற்று. 'பிராந்திய வளர்ச்சி முறை' என்பது இத்தகைய முறைகளுள் ஒன்ருகும். மேற்கு ஐரோப்பிய நாடாகிய ஹாலந்தில் இதைச் செயல் படுத்தினர். பின்னர் இதை மெக்சிகோவிலும் பின்பற்றினர். ஒரு பிரபல வங்கி அல்லது பல வங்கிகள் இம்முறைப்படி ஏரான மான டாலர்களை உலக வங்கியிலிருந்து பெறும். பின்னர் இவை சிறு நிறுவனங்களுக்கு உதவி யளிக்கும். கடன் மனுக்களைப் பிராந்திய வங்கியோ அல்லது பல வங்கிகளோ பரிசீலனை செய்யும். ஆனுல் கடன்கள் உலக வங்கியின் இலட்சி யங்களை ஒட்டியுள்ளனவா என்று முடிவு செய்யும் அதிகாரத்தை உலக வங்கி கொண்டிருந்தது.

ஆனுல் துருக்கி நாட்டில் மட்டும் இக் கொள்கையைப் பின் பற்றவில்லை. அங்குத் தனியார் துறையில் ஒரு தொழில் வளர்ச்சி வங்கியை உலக வங்கி நிறுவி, அதற்கு மூலதனப் பண்டங்களை இறக்குமதி செய்ய நிதியுதவியளித்தது. இப்பண்டங்களைக் கொண்டு நாட்டிலுள்ள தனியார் துறை நிறுவனங்கள் முன்னேற வேண்டும். இவ் வளர்ச்சி வங்கி தனியார் துறை நிறுவனங் களுக்கு நிதியுதவி செய்யும். இவை மூலதனப் பண்டங்களை இறக்குமதி செய்து தொழில் முன்னேற்றத்தைத் தூண்ட வேண்டும். வளர்ச்சி குன்றிய நாடுகளாகிய இந்தியா, பாக்கிஸ் தான், இஸ்ரேல், எதியோப்பியா, மலேசியா போன்ற நாடு களிலும் இம்முறையைக் கையாண்டனர், தொழில் நிதி நிறுவனங்களுக்கு உலக வங்கி அளிக்கும் கடன் முறை சீரிய வழியில் வளர்ந்துள்ளது. தொழில் வளர்ச்சிக் கார்ப்பரேஷன்,

தொழில் வளர்ச்சிக் கழகம் (I.D.A.) முதலிய் துணை நிறுவனங்கள் மூலம் உலக வங்கி கடனுதவி யளிக்கும் பழக்கம் பரவியுள்ளது.

**தொழில் நிதிக் கார்ப்பரேஷன் (உ): உலக வங்கியின் துணை நிறுவனம் [The Industrial Finance Corporation (w) ]**

வளர்ச்சி பெறும் நாடுகளுடைய பொருளாதார வளர்ச்சிக்கு உதவும் மற்றொரு நிறுவனம் தொழில் நிதிக் கார்ப்பரேஷனுகும். உலக வங்கி இதன்மூலம் நிதியுதவியளிக்கின்றது. உலக வங்கி அதன் சாசனத்தின்படி தனியார் துறை நிறுவனங்களுக்கு உதவி யளிப்பதற்கு முன் அந்தந்த அரசுகளிடமிருந்து கடனுக்கு உறுதி வாங்கவேண்டும். தனியார் துறைத் தொழிலதிபர்கள் உறுதி மொழி வாங்க அரசுகளை அணுக மறுத்தனர். அரசுகளும் உறுதி யளிக்க முன்வரவில்லை. உலக வங்கியை முதலீட்டு நிலைய மென்று கருதாமல் கடன் கொடுக்கும் நிலையம் என்றே கருதினர். மேலும் அது பங்குத் தொகை மூலம் உதவி யளிப்பதற்குத் தடை இருந்தது. இதனுல், அது தன் பொறுப்புகளைச் சரிவர ஆற்ற முடியவில்லை. இவ் விடர்ப்பாடுகளை நீக்கும் வகையில் தொழில் நிதிக் கார்ப்பரேஷனை (உ) நிறுவினர். இது 3 நோக்கங்களைக் கொண்டிருக்கின்றது. (1) அரசியலாரின் உறுதி பெருமல், தனி முதலாளிகளுடன் கூட்டாக உற்பத்தித் துறையில் முதலீடு செய்தல். (2) பன்னுட்டு முறையில் தனியார் மூலதனத்தின் இடப்பெயர்ச்சியை ஊக்குவித்தல். (3) வளர்ச்சி குன்றிய நாடுகளில் மூலதன மார்க்கட்டு வளர்ச்சியடைவதை ஊக்குவித்தல். ஒன்றுடன் மற்றவை இணைந்துள்ள இந்த நோக்கங்களை நிறைவேற்றுவதில் தொழில் நிதிக் கார்ப்பரேஷன் ஈடுபட்டிருக்கின்றது. நாடுகளுடைய திட்டங்களில் முன்னுரிமை கொண்ட, இரும்பு, எஃகு உற்பத்தி, காகிதக்கூழ், காகித உற்பத்தி, துணி, சிமென்ட், எரு போன்றவைகளுடைய உற்பத்தி முதலிய துறைகளிலுள்ள தொழில்களுக்கே கார்ப்பரேஷன் பெரும்பாலும் உதவி புரிகின்றது. முன்னுரிமைத் தொழில்களில் முதலீடு செய்வதோடு மட்டுமல்லாமல் தனியார் துறைகளிலுள்ள முதலீட்டு நிதி நிலையங்களுக்குப் பங்குத் தொகை மூலமும் கடன் மூலமும் உதவி யளிக்கின்றது. கார்ப்பரேஷனுடைய முதலீட்டுப் பகுதிகளில் அன்னிய மூலதனத்தைவிட ஆங்காங்கே உள்ள பிராந்திய மூலதனமே பயனுகியுள்ளது. 1971-ல் கார்ப்பரேஷன் 332 மிலியன் டாலர் முதலீடு செய்தது. இதில் 120 மிலியன் டாலரை அன்னிய மூலதன ஏற்றுமதியாளர்கள் அளித்தனர். எஞ்சியுள்ள 212 மிலியன் டாலரை வளர்ச்சி பெறும் நாடுகளிலுள்ள முதலாளிகள் முதலீடு செய்தனர்.[1]

[1] தொழில் நிதிக்கார்ப்பரேஷனின் ஆண்டறிக்கை, 1971, பக்கம் 11.

முதன் முதலில் கார்ப்பரேஷன் பங்குகளை வாங்குவதற்குத் தடை இருந்தது. அது கடனுதவி மட்டுமே அளிக்கலாம். குறிப்பிட்ட வட்டியைக் கொடுக்கவல்ல சாதாரணக் கடன்களாக அவை இல்லாவிடினும், கடன்களை மட்டுமே அது கொடுக்கலாம். நிறுவனங்களுடைய மூலதனப் பெருக்கத்திற்கு உதவி செய்யும் வகையில் அது மாற்றத்தக்க டிபெஞ்சர் பத்திரங்களை வாங்கலாம். தொ. நி. கார்ப்பரேஷனுடைய சாசனம் இருமுறை திருத்தப் பெற்றிருக்கின்றது. முதல் திருத்தப்படி அது பங்குகளைப் பெற முடியும். எனவே அது பங்கு முதலையும் நீண்டகாலக் கடனுதவியையும் அளிக்கலாம். இத்திருத்தத்திற்குப் பிறகு கார்ப்பரேஷன் பங்குகளில் முதலீடு செய்து வருகின்றது. 7 முதல் 12 ஆண்டுகள்வரை தவணை கொண்ட கடன்களையும் கொடுக்கின்றது. ஒவ்வொரு நிறுவனத்திற்கும் அது செய்யும் தொழிலுக்கும் உகந்த முறையில் பங்கு முதலீடு அமைந்துள்ளது. சில நிறுவனங்களிலிருந்து பங்குகளை மட்டுமே அது பெற்றிருக்கின்றது. அவை வேறு நிலையங்களிடமிருந்து கடனுதவி பெறுகின்றன. சில நிறுவனங்களிடம் மாற்றக்கூடிய டிபெஞ்சர் பத்திரங்களைப் பெற்றிருக்கின்றது. மிகச் சில நிறுவனங்களுக்கே பங்குகளைப் பெருமல் கடனுதவி மட்டும் கார்ப்பரேஷன் அளித்துள்ளது. அண்மைக் காலத்தில் பங்கு முதலைக் கொடுத்துதவுவது அதன் இயல்பான பழக்கமாகிவிட்டது. நிதி ஆண்டின் இறுதியில் கார்ப்பரேஷன் 349.9 மிலியன் டாலர் முதலீட்டுத் தொகையைக் கொண்டிருந்தது. இதில் 243·8 மிலியன் கடன் தொகையாகும்.[1] பங்குகள் வாங்குவதில் முதலீடு செய்வதைத் தவிர 50.1 மிலியன் டாலர் பெறுமானமுள்ள உறுதி கொடுக்கும் தொழிலையும் (under writing business) செய்திருக்கின்றது. இந்த வழியில் மூலதன மார்க்கட்டுகளை ஊக்குவித்துள்ளது. நேரிடையாகப் பங்கு முதலீடுசெய்வதைவிடப் பல நிறுவனங்களுக்கு உறுதி மொழியளித்து உதவி செய்திருக்கின்றது. புதியதாக வெளியிடப்பட்ட பங்குகள் பக்குவமடைந்து பொது முதலீட்டுக் குகந்தவையாவதற்கு முன் அவைகளைக் கார்ப்பரேஷன் தன்வசம் வைத்துக் கொண்டு நிறுவனங்களுக்கு உதவி நல்கியது. கார்ப்பரேஷன் இந்த வழியிலேயே உறுதி கொடுக்கும் தொழிலைச் செய்திருக்கின்றது.

**தொழில் நிதிக் கார்ப்பரேஷனும் தேசிய வளர்ச்சி வங்கிகளும்**

1966ஆம் ஆண்டு ஜூன் 30உ தொ. நி. கார்ப்பரேஷன் 25 வளர்ச்சி நிதி நிறுவனங்களுடைய மூலதனத்தில் 14·1

[1] தொழில் நிதிக் கார்ப்பரேஷனின் ஆண்டறிக்கை, 1971, பக்கம் 13.

மிலியன் டாலரைக் கொண்டிருந்தது. நிறுவனங்களுடைய மொத்த முதல் 270 மிலியன் டாலராகும். குறிப்பாக அமெரிக்க, ஜப்பானிய, ஐரோப்பிய நிதி நிறுவனங்கள் 53மிலியன் டாலரைக் கொண்டிருந்தன. ஆங்காங்கே உள்ள பிராந்திய முதலாளிகள் 203 மிலியன் டாலரை முதலீடு செய்திருந்தனர். இவ் வடிப்படை மூலதனத்தைக்கொண்டு நிறுவனங்கள் ஒரு கணிசமான தொகையைப் பல்வேறு மூலங்களிலிருந்து பெற்றன. உலக வங்கியிடமிருந்து பெற்ற 477.7மிலியன் டாலர் இதில் அடங்கியுள்ளது. இந்தச் சாதனங்களைத் தவிர பிராந்திய அரசாங்கங்களிடமிருந்து குறைந்த வட்டியுள்ள நெடுங்காலக் கடன்களையும் அவை பெற்றன. தம்மிடமுள்ள நிதியைக் கொண்டு இவை 1500 மிலியன் டாலர் பெறுமானமுள்ள தொழிலைச் செய்து வருகின்றன. துணி உற்பத்தி, ரசாயனம், இரும்பு, எஃகு, காகிதம், காகிதக்கூழ், உணவுப்பண்டங்களைப் பக்குவப்படுத்தல்முதலிய துறைகளிலுள்ள நிறுவனங்கள் பயனடைந்தன. 1968ஆம் ஆண்டு ஜூன் 30வ. கார்ப்பரேஷனுடைய முதலீட்டுத் தொழில், உறுதிப் பொறுப்பு இவைகளுடைய பெறுமானம் 27.4 மிலியன் டாலராக இருந்தது. 17 வளர்ச்சி வங்கிகள் மூலம் இத் தொழில் நடைபெற்றது.[1] 1962-லிருந்து தொ. நி. கார்ப்பரேஷன், வளர்ச்சி நிதியளிக்கும் நிறுவனங்களைத் தோற்றுவித்தல், அவைகளுக்கு வலிமை கொடுத்தல், அவைகளுடைய செயல்களை மதிப்பிடுதல், குறிப்பாகத் தனியார் துறை நிறுவனங்களுக்கு உதவி செய்தல் போன்ற பொறுப்புகளை உலக வங்கியின் துணை நிறுவனமாகவே செய்து வந்துள்ளது. உலக வங்கியின் உதவியை நாடிய நிறுவனங்களுக்கு இத்தகைய உதவிகளைச் செய்து வருகின்றது. கார்ப்பரேஷனுடைய பொறுப்புகள் கணிசமாகப் பெருகியுள்ளன. நிறுவனங்கள் பற்றிய தொழில்நுட்ப ஆய்வுகளைச் செய்தல், தொழில் சுரங்கங்கள் முதலியவை பற்றிய புதிய திட்டங்களை மேற்பார்வையிடல் முதலிய பொறுப்புகளையும் ஏற்றுள்ளது.[2] பழைய நிதிநிலையங்களை விரிவுபடுத்தி வலிமை பெறச் செய்துள்ளது, புதியவைகளைத் தோற்றுவித்து மூலதன மார்க்கட்டு இல்லாத குறையை நீக்கியது. நேரிடையாகச் செய்யும் உதவியைத் தவிர தொழில்நுட்ப மேற்பார்வை பற்றிய ஆலோசனைகளையும் அளித்துள்ளது. கார்ப்பரேஷன் பங்கு கொண்டிருக்கும் நிறுவனங்களில் குறைந்தது 10 நிறுவனங்கள் அதை நிருவாகக் குழுக்களில் பங்கேற்குமாறு கேட்டுக்கொண்டன. சாதாரணமாக இக்குழுக்களில் பணி புரிய விரும்பாவிடினும், இது சில குழுக்களில் அங்கம்

[1] அதே அறிக்கை 1967-68, பக்கம் 12.

[2] தொ.நி.கா. (உ) ஆண்டறிக்கை, 1964-65, பக்கம் 5

வகிக்கின்றது. ஆங்காங்கே உள்ள பிராந்திய மூலதன மார்க்கட்டுகளும், வளர்ச்சி வங்கிகளும் அளிக்க முடியாத பெருந் தொகை மூலதனத்தை தொ.நி. கார்ப்பரேஷனுடன் சேர்ந்து கூட்டு முயற்சியின் விளைவாகப் பல நிறுவனங்கள் பெற்றுள்ளன. இது வளர்ச்சி நிதி நிலையங்களுக்கும் கார்ப்பரேஷனுக்கும் உள்ள நெருங்கிய தொடர்பைப் புலப்படுத்துகிறது. 1966-ல் 9 நாடுகளில் 16 நிறுவனங்கள் இக் கூட்டு முயற்சியைப் பெற்றன.[1]

பன்னாட்டு வளர்ச்சிக் கழகம் (International Development Association) பொருளாதார வளர்ச்சியூட்டும் நிலையமாக

பன்னாட்டு வளர்ச்சிக் கழகம் (ப.வ.க.) உலக வங்கியின் துணை நிறுவனமாக அமைக்கப்பட்டது. வளர்ச்சி குன்றிய நாடுகளின் வளர்ச்சியைத் தூண்டும் நிலையங்கள் பலவற்றை உலக வங்கி கொண்டிருக்கின்றது. இவைகளுள் ப.வ.க. ஒன்றாகும். வளர்ச்சிக்கான மூலதனத்தை அளிக்கும்போது உலக வங்கிக்குப் பல பிரச்சினைகள் எழுகின்றன. சாதாரணக் கடன்கள் மூலம் வளர்ச்சிக்கு நிதி வழங்கும் பொறுப்பைப் பல நாடுகள் அவர்களது ஏழ்மையின் காரணமாக ஏற்க முடியவில்லை. சில நாடுகள் செய்யும் வளர்ச்சிப் பணிகளின் விளைவாக அவை அயல் நாட்டு மூலதனத்தைக் கணிசமாக ஈர்க்கும். ஆனால் அதைச் சாதாரண முறையில் பராமரிக்கும் சக்தி அவைகளுக்குக் கிடையாது. வளர்ச்சி குன்றிய பல ஆசிய நாடுகளுடைய புறக் கடனும் (external debt) லத்தீன் அமெரிக்க (Latin American) நாடுகளுடைய புறக்கடனும் கணிசமாகப் பெருகிவிட்டன. பொருளாதார வளர்ச்சி தொடர்ந்து நடைபெற மேலும் அயல் நாட்டு மூலதனம் தேவை. ஆனால் இது அந்த நாடுகளுடைய செலுத்து பளுவை (transfer burden) மிகுதியாக்கும். அயல் நாட்டுச் செலுத்தலில் ஏற்படும் பளுவைத் தணிக்கும் வகையில் உதவி நல்க வேண்டும் என்பதை உலக வங்கி உணர்ந்தது. தொழில் நுட்பத் தகுதி பெறாத காரணத்தால் பல வளர்ச்சித் திட்டங்களை உலக வங்கி ஏற்றுக் கொள்ள இயலவில்லை. அடிப்படைச் சாதனங்களை அளிக்கும் திட்டங்களுக்கே நிதியுதவி யளிப்பது வங்கியின் கொள்கையாகும். எனினும் மருத்துவமனை, சுகாதாரம் முதலியவை பற்றிய திட்டங்களுக்கும் அது உதவி நல்குகின்றது.

மேலே குறிப்பிட்ட சிக்கல்களைத் தீர்க்கும் வகையில் ப. வ. கழகம் தோன்றியது. உலக வங்கியின் நிருவாகத்திற்கு உகந்த முறையில் அதன் அமைப்பு நிறுவப் பெற்றிருக்கின்றது.

[1] தொ. நி. கா. (உ) 1965-66, பக்கங்கள் 11-12.

ஆளுநர் குழுவில் (Board of Governors) உள்ளவர்களும், நிருவாக இயக்குநர்களும் (Executive Directors), தலைவரும் (President) உலக வங்கியில் ஏதேனும் பதவி வகிப்பவர்கள்.

ப.வ.க. 1960ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 26ஆம் தேதி தோன்றியது. வளர்ச்சி குன்றிய நாடுகளின் பொருளாதார வளர்ச்சியைத் தூண்டுவதும், அவைகளுடைய மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயத்துவதும் கழகத்தின் நோக்கங்கள். இந்த நோக்கங்களைச் செயல்படுத்துவதற்காக அது நெகிழ்ச்சியுடைய நிபந்தனைகளை அடிப்படையாகக் கொண்டு கடன் கொடுக்கும். கடன்கள் நாட்டின் அயல் நாட்டுச் செலுத்தல் நிலையைச் (Balance of Payments) சாதாரணக் கடன்களைப் போல பாதிக்கா. இந்த முறையில் பணி புரியும் கழகம் உலக வங்கியின் வளர்ச்சித் திட்ட வேலைகளை விரிவுபடுத்தும்.'[1]

ப.வ. கழகம் கொடுக்கும் கடன்களுடைய நிபந்தனைகளும், அது உதவும் திட்டங்களுடைய இயல்புகளும் நெகிழ்ச்சியுடையனவாக இருக்கும். ஒரு பகுதியின் வளர்ச்சிக்கு ஏற்ற எத்தகைய திட்டத்திற்கும் ப. வ. கழகம் நிதியளிக்கலாம். இத்திட்டம் நேரடி உற்பத்தித் திட்டமாகவோ அல்லது வருவாய் கொடுக்கக் கூடியதாகவோ இருக்க வேண்டிய கட்டாயம் இல்லை. நீர் வசதியளித்தல், முன்னோடி வீட்டு வசதித் திட்டம் (pilot housing) போன்றவையும், மற்ற வழக்கமான திட்டங்களைப் போலவே நிதியுதவி பெறலாம். (வழக்கமான திட்டங்கள் இது காறும் வங்கியின் உதவியைப் பெற்றன.)[2]

தனியாரிடமிருந்து நியாயமான வட்டியில் நிதிவசதி கிடைத்தாலோ அல்லது வங்கிகள் நிதியுதவியளிக்க இடமிருந்தாலோ ப. வ. க. உதவிபுரியாது. ப. வ. க. கொடுக்கும் நிதியைக் குறிப்பிட்ட நாடுகளில் செலவிட வேண்டும் என்று கழகம் உத்தரவிடாது. தொடக்கத்தில் பெற்ற கட்டணங்களைக் கொண்டு கழகம் கடனுதவியையே அளித்தது. கடன்களுக்குக் கழகம் 'தான் சரியானவை' என்று கருதும் நிபந்தனைகளை ஏற்படுத்துகின்றது. கீழ்க்கண்ட முறைகளில் சுலபமான முறையில் கடனைத் திருப்பிக் கொடுக்கும் விதிகளை வகுத்துள்ளது. (1) நீண்டகாலக் கடன்கள்—நெடுங்கால முதிர்வும் (maturity) நீண்ட கருணைக் காலமும் (period of grace) கொண்டவை.

[1] International Bank for Reconstruction and Development. Press Release No. 621.

[2] International Financial News Survey, 12-2-1960. p. 245.

(2) கொடுக்கப்பட்ட கடனில் ஒரு பகுதியையோ அல்லது முழுவதையுமோ பிராந்தியச் செலாவணியில் திருப்பிக் கொடுக்கலாம். (3) மேலே குறிப்பிட்ட இரு வகைகளையுமே சேர்த்து ஒரு மூன்றாவது வகையைப் பின்பற்றலாம். கழகம் அதில் அங்கம் வகிக்கும் ஓர் அரசுக்கோ, அல்லது அதன் துணை அரசியல் உறுப்புக்கோ, அல்லது தனியார், பொதுத் துறை நிறுவனங்களுக்கோ அல்லது பன்னாட்டு நிலையத்துக்கோ அல்லது பிராந்திய நிலையத்துக்கோ உதவிபுரியலாம்.[1]

ப. வ. க. பற்றிய திறனாய்வு

ப. வ. கழகம் அதன் அலுவல்களைத் தொடங்குவதற்கு முன்பே அதன் நெகிழ்ச்சித் தன்மையைக் குறை கூறினர். உலக வங்கியுடன் ஒப்பிட்டு விளக்கும்போது அதை 'a lady of easy virtue' என்றும் உலக வங்கியை 'spinsterish' என்றும் ஜெர்மானிய நிதி வல்லுநர்கள் குறிப்பிட்டனர். கீழ்க்காணும் குறைபாடுகளைக் குறிப்பிட்டுள்ளனர்: அது சுலபத் தவணைகளில் திருப்பிக் கொடுக்கக் கூடிய 'மென்மைக் கடன்களை' (soft loans) அது கொடுப்பதால் நிதிக் கட்டுப்பாடு (financial discipline) தளர்ந்துவிடுகிறது. இதனால் உலக வங்கி இதுவரை செய்துள்ள பணிகளின் மதிப்புக் குறைந்துவிடுகின்றது. மேலும் குறைவான வட்டியில் நீண்டகாலக் கடன்களைக் கொடுப்பதால் மூலதன மார்க்கட்டு பாதிக்கப்படுகின்றது. மூன்றாவதாக ப. வ. கழகம் விற்பனை செய்ய முடியாத மென்மைச் செலாவணியைத் (Soft Currencies) தன்வசம் ஏராளமாகக் கொள்ளலாம். இவைகளைப் பயன்படுத்தும்போது வர்த்தகத்தின் பாணியைத் தாறுமாறாக மாற்றலாம். கடைசியாகக் கொடுத்த கடன் தொகைகளைக் கழகம் திருப்பி வாங்கும்போது, கடன் பெற்ற நாடுகளுடைய செலாவணிகளைப் பெறும். கழகம் கொண்டுள்ள மாற்றத்தக்க செலாவணியின் அளவு பெருகாது; மேலும் அடிக்கடி இத்தகைய செலாவணியை மிகுதியான அளவில் பெற இயலாது.

ஆனால் மேலே குறிப்பிட்டுள்ள குறைபாடுகளில் பெரும்பாலானவை சரியானவை அல்ல. கடன் பெறும் நாடுகளுடைய மாற்றும் பளுவை (transfer burden) உயர்த்தக்கூடிய முறையில் கழகம் மென்மைக் கடனைக் கொடுப்பதில்லை. இதிலிருந்து கழகத்தை மிகச் சுலபமான முறையில் கடன் கொடுக்கும் நிலையமெனவும் கணக்கிடலாகாது. உலக வங்கியின் தலைவர் கழகத்தின் தலைவரும் ஆவார். அவர் கடன் முறையின் தரம் எவ்விதத்

[3] International Financial News Survey, 12. February, 1960, p. 246.

திலும் தாழ்வடையாது என்று தெளிவாக எடுத்துரைத்துள்ளார். திட்டங்களின் சிறப்புகளையும் அவைகளுடைய நிறைவையும் சீர்தூக்கிப் பார்க்கும்போது, உலக வங்கி எவ்வாறு அவைகளுடைய நிறை குறைகளை எடை போடுமோ அதே முறையில் கழகமும் ஆய்வு செய்யும். இத்தகைய பரிசீலனைக்குப் பிறகே நிதியுதவியை அது கொடுக்கின்றது. கழகத்தில் அங்கம் வகிக்கும் நாடுகளுடைய உள்நாட்டுச் செயல்களும் இத்தகைய கண்காணிப்புக்குட்பட்டிருக்கின்றன. வளர்ச்சிக்கான நிதியுதவி செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டபோது இத்தகைய நிலையமொன்று தேவையாயிற்று. இந்த நிறுவனம் உலக வங்கி கொண்டுள்ள (புறம் காட்டும்) ஜன்னலாகச் சேவை புரிகின்றது. ஆதலின் தன் மூத்த சகோதரியைவிடப் பரவலாக உள்ள அடித்தளத்தைக் கொண்டுள்ளது.[1]

கடந்த ஆண்டுகளில் கழகம் அளித்துள்ள கடன் தொகைகள் பரவலாக இருக்கின்றன. போக்குவரத்து, தொழில், விவசாயம், நீர் வசதி, கல்வி முதலிய திட்டங்களுக்கு அது உதவியளித்துள்ளது.

வங்கியின் மூன்று உறுப்புகள் 1971 நிதியாண்டில் 2,581 மிலியன் டாலர் பெறுமானமுள்ள நிதியளித்தன. இதில் 1,896 மிலியன் டாலரை 78 கடன்களாக 41 நாடுகளில் பாங்கு அளித்தது. 584 மிலியன் டாலரை 53 கடன்களாக 34 நாடுகளுக்குக் கழகம் அளித்தது.[2]

### உலக வங்கியின் சாதனைகள்

தனியாக அயல் நாடுகளுக்குக் கடன் கொடுப்போரை உலக வங்கி அகற்றிவிடும் என்பது முதன் முதலில் அதன் மீது சுமத்தப்பட்ட குறைபாடுகளுள் ஒன்றாகும். ஆனால் வங்கியை நிறுவியவர்களுக்கு இந்த எண்ணம் அறவே இல்லை. வங்கி பற்றிய ஒப்பந்தம் தனித்துறை கடன்களைப் போல் மேலும் உதவி நல்கவும், அவைகளை ஊக்குவிக்கவும் வழி வகுத்தது. தனித்துறையுடன் போட்டியிடும் எண்ணம் சிறிதுமில்லை. நியாயமான நிபந்தனைகளில் (வங்கியின் கருத்துப்படி) கடனுதவியை நாடுவோர் அதை பெறத் தவறினால்தான் உலக வங்கி உதவி புரியும். மூலதனமளிப்போர் அமித ஊக வாணிக இலாபம் ஈட்டும் வாய்ப்புகள் சிலவற்றை இழக்க நேரிடலாம். ஆனால் அவர்களுக்கு ஒரு பண்ணுட்டு

[1] Annual Reports of the I.B R.D. and I.D.A , 1964-65 p. 14, and 1965-6.

[2] Annual Report of the World Bank and I.D.A. 1971 p. 6.

நிலையத்தின் அங்கீகாரம் பெற்றுள்ள புதிய பன்னாட்டு பத்திரம் (international security) கிடைக்கின்றது. உள் நாட்டுப் பத்திரங்களை விட பத்திரமாகவும் கவர்ச்சிகரமாகவும் உள்ள அயல் முதலீடுகளை விரும்புவோருக்கு அரிய வாய்ப்புகள் கிடைக்கின்றன.

உலக வங்கி கொடுக்கும் தொகையில் கணிசமான பகுதி தனியாரிடமிருந்து வந்துள்ளது என்பதைப் பலர் உணர்வதில்லை. முதல் எட்டு ஆண்டுகளில் வங்கி 2,262 மிலியன் டாலரைக் கொண்டிருந்தது. இதில் பாதித் தொகை தனியாரிடமிருந்து வந்தது. வங்கி ஆற்றிய தொண்டைத் தனி உள் நாட்டு, அயல் நாட்டு முதலிடுவோருடைய செயலுடன் ஒப்பிடும்போது ஒரு சிறிய பகுதியாகவே காண்கின்றோம்.[1]

பன்னாட்டு நாணய நிதியைப் போல் உலக வங்கியும் கடன் வாங்குவோர் சார்பாகவும், கொடுப்போருக்கு எதிர்ப்பாகவும் இருக்கின்றது என்பதும் மற்றொரு குறைபாடாகும். கடன் கொடுப்போருடைய நிதியைப் பயன்படுத்தும் நிலையம் அதைப் பெறுவோருடைய கண்காணிப்பில் உள்ளது என்று குறை கூறுகின்றனர். தொடக்கத்தில் கடன் வாங்கும் நாடுகள் நிருவாகக் குழுவில் பெரும்பான்மை இடங்களைப் பெற்றிருக்கலாம். ஆனால் பெரும்பான்மை வாக்குரிமை பெற்றிருக்க வேண்டுமென்ற அவசியமில்லை. கடன் வாங்குவோர் ஓரம் காட்டுவார்கள் என்பது பொருள் அல்ல. வங்கி வாங்குவோர், கொடுப்போர் என்ற இரு பாலருக்கும் நன்மையளிக்கின்றது. கீன்ஸ் பிரபு கூறியுள்ளபடி கடன் கொடுக்க இயலாத பல நாடுகள், முதலீட்டைப் பெருக்கி அதன் மூலம் உலக வளத்தைப் பேணும் நோக்கத்தைக் கொண்ட பற்பல பொறுப்புகளில் பங்கேற்கலாம். போர்ப் பிற்கால ஆண்டுகள் ஆபத்துள்ளனவாகவும் கடினமாகவும் இருக்கும். கடன் கொடுப்போர் சமாளிக்க வேண்டிய இடர்ப்பாடுகள் மிகுதியாகவும், கணக்கிட முடியாதவையாகவும் இருக்கும். தொழிலை அடிப்படையாக வைத்து இடர் கட்டணத்தை வசூல் செய்தால் கடன் வாங்குவோர் அதைச் செலுத்த முடியாத நிலை ஏற்படலாம். கடனே ரத்தாகக்கூடிய நிலையும் எழலாம். பொருளாதார மீட்சிக்கும் உலகின் நன்மைக்கும் தேவையான கடன்களை ஏதேனும் ஒரு வகையில் உறுதி பெறுமல் கொடுப்பது சாத்தியமல்ல. தி எகானமிஸ்ட் (The Economist) என்னும் பத்திரிகை கூறியது போல் இடர் ஏற்கும் (risk taking) பொறுப்பை யாவரும் செய்ய

[1] Tenth Annual Report of the International Bank, 1954-5, p. 30.

லாம்; ஆனால் ரொக்கத்தைக் கொடுப்பதை அதற்குத் தகுதி வாய்ந்தவர்களே செய்ய முடியும்.[1]

வங்கி இயங்கி வந்ததை நோக்கியவர்கள் அண்மையில் அதன் செயல் முறைகளில் குறை காணுகின்றனர். உதாரணமாகக் குறிப்பிட்ட திட்ட உதவி முறையில் குற்றம் காண்கின்றனர். இந்த முறைப்படி புனரமைப்பு, வளர்ச்சித் திட்டங்களுக்கு வங்கிக் கடனை அல்லது உறுதி மொழியை அளிக்கின்றது. 'பொது வளர்ச்சிப் பணிகளுக்கு' வங்கி நிதியுதவியளிக்க வேண்டுமென்று கூறியுள்ளனர். வங்கியின் கொள்கையைத் தவருகப் புரிந்து கொண்டதாலேயே இவ்வாறு கூறியுள்ளனர். குறிப்பிட்ட திட்டங்களைக் கடன் வாங்கும் நாட்டின் பொது வளர்ச்சித் திட்டங்களிலிருந்து பிரித்து வங்கி பார்ப்பதில்லை. பொது வளர்ச்சியைத் தூண்டுவது என்பதைப் பல தொடர்புள்ள திட்டங்களை ஊக்குவித்தல் என்று நாம் பொருள் கொண்டால், வங்கி குறிப்பிட்ட தனித் திட்டங்களுக்குக் கொடுக்கும் உதவி மூலம் இதைச் செய்கின்றது என்பதைக் காணலாம். ஆனால், பொது நோக்கங்களுக்கே வங்கி ஊக்கம் கொடுக்கவேண்டும் என்று கூறினால், நிதி முதலீடு சரியாகச் செயல்பட்டுத் தக்க பலனைக் கணிசமான அளவில் கொடுக்குமா என்பதைக் கணக்கிடுவதற்கு ஆதாரம் ஏதும் வங்கிக்குக் கிட்டுவதில்லை.[2] போரினால் பாதிக்கப்பட்ட ஐரோப்பிய நாடுகளுடைய மீட்சிக்கே உலக வங்கி உதவியளித்தது, வளர்ச்சி குன்றிய ஆசிய, தென் அமெரிக்க நாடுகளை அது புறக்கணித்தது. ஆனால், இந்த நாடுகளில் நிதியுதவி மிகவும் தேவைப்பட்டது என்றும் குறிப்பிட்டிருக்கின்றனர். வங்கியின் தொடக்கத்திற்குக் காரணமாக இருந்த நோக்கங்களை அது புறக்கணிப்பதாகத் தோன்றுகிறது என்று சிலி நாட்டு அதிபர் (Chilean President) குறிப்பிட்டுள்ளார்.[3]

புனரமைப்புக்கும், மீட்சிக்கும் இடையே வேறுபாடு காணுவது எப்பொழுதும் சாத்தியமல்ல. மேலும் இந்த வேறுபாடு நன்மை பயக்காது. உலகின் உற்பத்தியை விரைவில் கூடிய மட்டிலும் உயர்ந்தபட்ச நிலைக்கு உயர்த்துவதே வங்கியின் கடமை. முற்றிலும் புதிய உற்பத்தி நிலையங்களை அமைப்பதற்கு ஆகும் செலவைவிடக் குறைந்த செலவில் பழுதானவைகளைப் புனரமைப்புச் செய்யலாம். மேலும் புனரமைப்பு விரைவில் நடைபெறும்.

[1] The Economist, 9 September 1944.

[2] Fifth Annual Report of the International Bank, 1949—50, pp. 7-8.

[3] The Statesman, 5 March. 1951.

உற்பத்தி எந்த அளவுக்குப் பெருகுகின்றது என்பதுதான் முக்கியம், அது புனரமைப்பின் விளைவாக ஏற்படுகின்றதா அல்லது வளர்ச்சித் திட்டமாகச் செயல்படுகின்றதா என்பது முக்கியமல்ல. தொடக்கத்தில் வங்கி ஐரோப்பிய மீட்சியில் அக்கறை செலுத்தியது. ஏனெனில் போர் விளைவித்த நாசவேலையை அகற்றுவது உடனடித் தேவையாக இருந்தது. ஏனெனில், உற்பத்தித் திறமை இருந்தது. பழுதான தளவாடங்களுக்குப் பதிலாகப் புதியவைகளைக் கொடுத்து, அவற்றைச் செப்பனிட்டு, குறைவாகக் கிடைக்கும் கச்சாப் பொருள்களை ஏராளமாகக் கொடுப்பின் அங்கு (ஐரோப்பாவில்) உற்பத்தியை விரைவில் பெருக்கலாம். மேலும், ஐரோப்பிய மீட்சி வளர்ச்சி குன்றிய நாடுகளுடைய முன்னேற்றத்துக்கு உதவும்; அவை தம் வளர்ச்சிக்கு வேண்டிய தளவாடங்களையும் தொழில்நுட்ப அறிவையும் ஐரோப்பாவிலிருந்து பெறலாம்.[1]

ஐரோப்பிய மீட்சியின் உடனடித் தேவை ஆசியா, ஆஸ்திரேலியா, லத்தீன் அமெரிக்கா முதலிய நாடுகளுடைய வளர்ச்சியின் முக்கியத்துவத்தை எவ்வகையிலும் குறைக்கவில்லை என்பதையும் இந்த நாடுகளுக்கும் உதவி தேவை என்பதையும் வங்கி உணர்ந்தது. தொடக்க காலத்தில் வளர்ச்சி குன்றிய நாடுகளுக்கு வளர்ச்சிக்கான கடன்களை வங்கி கொடுக்காததற்கு இந்த நாடுகளில் நிலவிய விசித்திரமான சூழ்நிலையே காரணமாகும். வங்கி உதவி நல்க விரும்பவில்லை என்று கருதலாகாது. இந்த நாடுகளுடைய பொருளாதார அமைப்புகள் இளம் பருவத்திலிருந்தன; தக்க முதிர்ச்சியடையவில்லை; பெருவாரி உற்பத்தித் தொழில்களுக்கு வேண்டிய மூலதனத்தில் ஒரு பகுதியைக் கொடுக்கக் கூடிய அளவுக்குக்கூட சேமிப்பு உருவாகவில்லை. ஏனெனில், இத்தகைய நோக்கங்களைச் செயல்படுத்துவதற்கு வேண்டிய அயல்நாட்டு மூலதனத்தில் ஒரு பகுதியை மட்டுமே வங்கி கொடுக்கும். உயர்மட்ட விவசாய, தொழில்நுட்பத் துறைகளில் தொழிலாளர்கள் பயிற்சியற்றவர்களாகவே இருந்தனர். அயல் நாட்டுக் கடன்களும், வரவு செலவுத் திட்டம், செலாவணி இவைகளுடைய நிலையும் திருப்திகரமாக இல்லை. தன் வசம் உள்ள தொழில்நுட்பத் திறனையும், பணத்தையும் ஓரளவு கொடுத்து இத் தடைகளை நீக்க வங்கி இசையும். ஆனால், நிதிச் சீரமைப்பு நடைபெறாவிடில் வங்கி நிதியுதவி நிச்சயமாக அளிக்க முடியாது. ஆனால், பல நாடுகளில் செலாவணி, நிதிபற்றிய சீரமைப்பு (பொருளாதார வளர்ச்சியின் முன்னோடியாக) நடை

[1] Second Annual Report of the International Bank, pp. 8-9.

பெறவில்லை. மேலும் இவை திட்டவட்டமான வளர்ச்சித் திட்டங்களைக் கொள்ளவில்லை.

1947-லிருந்து மீட்சிக்கான கடன்களை வங்கி ஐரோப்பிய நாடுகளுக்கு அளிக்கவில்லை என்பதை ஒத்துக்கொள்ளவேண்டும். அது பற்பல நாடுகளிடையே பகிர்ந்து கொடுத்த தொகையைப் பார்க்கும்போது, ஐரோப்பாவுக்கு அதிகச் சலுகை காட்டிவிட்டதென்று கூறமுடியாது. தொழில் துறையில் பின்தங்கிய நாடுகளுக்கும், வளர்ச்சி குன்றிய நாடுகளுக்கும் துணைபுரிவதில் உள்ள தடைகளைத் தாண்டி அவைகளுக்குதவ, வங்கி துணை உறுப்புகளை நிறுவிற்று என்று முன்பே குறிப்பிட்டோம். வளர்ச்சி குன்றிய நாடுகளுடைய தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காக அது புதிய கடன் முறைகளைக் கையாண்டு வருகின்றது; வளர்ச்சி பற்றிய ஆலோசனைகளை நாடுவோருக்கு வங்கி உடனடியாகக் கொடுக்கின்றது. வங்கியின் முதலீட்டுடன் தொடர்பு கொள்ளாத திட்டங்களுக்கும் கூட அது ஆலோசனை யளிக்கின்றது. வங்கி பற்பல வளர்ச்சி குன்றிய நாடுகளுக்கு வங்கி வல்லுநர்களை அனுப்பியுள்ளது. அங்கம் வகிக்கும் நாடுகளில் சாதனங்கள் பற்றிய கணக்கெடுத்துள்ளது. குறிப்பிட்ட பொருளாதாரப் பிரச்சினைகளைப் பரிசீலனை செய்ய ஏற்பாடு செய்துள்ளது. பற்பல தொழில் நுட்பப் பிரச்சினைகள் பற்றிய ஆலோசனைகள் கொடுத்திருக்கின்றது. நிதிப் பிரச்சினை பொருளாதார வளர்ச்சிக்கு மிகப் பெரிய தடையல்ல; திட்டமிடுவதிலும், நிருவாகத்திலும் அனுபவமின்மையே பெரிய தடை என்பதை அது அனுபவ வாயிலாக உணர்ந்தது, ஆலோசனை கூறும் வகையில் வங்கி 1955-ல் பொருளாதார வளர்ச்சி நிலையத்தை [Economic Development Institute) அமைத்தது. அலுவலர் கல்லூரியாகத் தொண்டாற்றும் இது வளர்ச்சி குன்றிய நாடுகளிலுள்ள மூத்த அதிகாரிகளுக்கும், வங்கியின் அலுவலர்களுக்கும் வளர்ச்சித் திட்டங்களைப் பரிசீலனை செய்ய வாய்ப்புகளை நல்கும். வளர்ச்சி குன்றிய நாடுகளுடைய வளர்ச்சிக்கு நிதியை மட்டுமல்லாமல் தன் தொழில் அனுபவத்தையும் வங்கி கொடுக்கின்றது.

வழக்கமான கடன்களைச் சாதாரண முறையில் கொடுப்பதோடு மட்டுமல்லாமல் வங்கி புதிய துறைகளிலும் பணிபுரிகின்றது. வங்கியின் தலைவர் கூறுவதுபோல்,

தண்டு விரைவில் வளர்ந்துள்ளது; முன்னர் எதிர்பார்க்க
களில் கிளைகள் பல பிரிந்துள்ளன,'[1] இத்தாலியில் செ

[1] வங்கியின் தலைவர் திரு. யுஜின் ப்ளாக் (Mr. Eugene Blac
கூட்டத்தில் நிகழ்த்திய உரை 1959, International Financial Ne
2 October, 1959, p. 113.

திற்கு (Senn project) அது முதலில் அணுசக்தி இயந்திரத்தை நிறுவக் கொடுத்த கடனை அதன் இயக்கத்தின் ஒரு சிறப்பான வளர்ச்சியென்று கருதலாம். அங்கத்தினர் நாடுகளிடையே ஏற்படும் பொருளாதாரச் சச்சரவுகளைத் தீர்ப்பது வங்கியின் மற்றொரு புதிய அலுவலாகும். பழைய சூயெஸ் கால்வாய்க் கம்பெனி (Suez Canal Company) பெறவேண்டிய இழப்பு ஈடு பற்றிய பேச்சுவார்த்தைகளில் வங்கி முதன்மையான பங்கேற்றது. இங்கிலாந்தும் ஐக்கிய அராபிய நாடும் கொண்டிருந்த கால்வாய்க் கம்பெனி பற்றிய தகராறை இது தீர்த்துவைத்தது. இதே முறையில் இந்தியாவும் பாகிஸ்தானும் கொண்டிருந்த சிந்துநதித் தகராறையும் தீர்த்தது. பரவலாகப் பலதுறைகளில் வங்கி ஆற்றி வரும் தொண்டுகளுக்கு இவைகளை எடுத்துக் காட்டுகளாகக் குறிப்பிடலாம். தொழில்நுட்பத் துறையில் தொண்டு புரிய வங்கி ஏராளமாக வழி வகுத்திருக்கின்றது. ஐ. நா.வின் சிறப்பு நிதியிலிருந்து செலவு செய்து ஆற்றுப் பணிகளை இது ஏற்பாடு செய்கின்றது, பொதுக் கணக்கெடுப்பு, விசேஷ சேவைகளை அளிப்பது முதலியவைகளை வங்கி நீடித்துச் செய்து வருகின்றது. பொதுத் துறையிலும், தனியார் துறையிலும் இயங்கும் வளர்ச்சி வங்கிகளுடன் இது நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கின்றது. வளர்ச்சி குன்றிய நாடுகளின் வளர்ச்சிக்கு, இவைகளைக் கணிச மான முறையில் வங்கி யளிக்கும் தொண்டாகக் குறிப்பிடலாம்.

சமாளிக்க முடியாத பொருளாதார வளர்ச்சிப் பிரச்சினையை வங்கியும் அதன் துணை நிறுவனங்களும் பல கோணங்களிலிருந்து செயல் புரிந்து தீர்க்க முயல்கின்றன என்று முடிவாகக் கூறலாம். வங்கி நெகிழ்ச்சியுள்ள நிதியீட்டு முறையைப் பின்பற்றுகிறது. உள்நாட்டு, அயல்நாட்டு மூலதனத்தைத் திரட்டுவதற்கும் உற்பத்திக்குப் பயன்படுத்துவதற்கும் ஆங்காங்கே நிதி நிலையங்களை நிறுவுகின்றது; வளர்ச்சித் திட்டங்களைத் தீட்டு வதற்கு அங்கம் வகிக்கும் நாடுகளுக்கு உதவி புரிகின்றது; அயல் நாட்டு உதவித் தொகைகளை இணைத்து திட்டப்படி பயன்படுத்த பல நாடுகளின் குழுக்களை அமைக்கின்றது; தொழில்நுட்ப ஆலோசனைகளை அளிக்கின்றது. இவ் வழிகளில் அது சாச னத்தில் கண்டுள்ள பணிகளைச் செய்ய முனைகின்றது.

### வளர்ச்சித் திட்டங்களை உலக வங்கி பரிசீலனை செய்யும் முறைகள்

வளர்ச்சி குன்றிய நாடுகள் வங்கியின் உதவியை நாடும் போது அளிக்கும் செயல் திட்டங்களை அது எவ்வாறு பரிசீலனை செய்கின்றது என்பதைக் காண்பது நம் ஆர்வத்தை ஈர்க்கும் ஒரு செயலாகும். இச் செயல் திட்டங்களை உலக வங்கி, 'பணி

களையும், பண்டங்களையும் அளிப்பதற்காக முதலீடு செய்யும் ஏற்பாடு' என்றழைக்கின்றது. செயல் திட்டங்கள் பற்பல அளவுகளையும், தன்மைகளையும், அமைப்புகளையும் கொண்டிருக்கலாம். நாடுகளிலுள்ள வசதிகளைப் பெருக்கவோ சீரமைக்கவோ அல்லது புதிய வசதிகளை நிறுவவோ அல்லது பொதுவான முதலீடுகளைச் செய்து பல புதிய வசதிகளை ஏற்படுத்தவோ திட்டங்கள் தீட்டலாம்.

திட்டங்களை 'ஏற்கத் தயங்கும்' போக்கு கடன் கொடுப்போரின் நல்ல அம்சமென வங்கி கருதுகிறது. செயல் திட்டங்களுடைய பொருளாதார, தொழில்நுட்ப, வர்த்தக நிதியீடு பற்றிய அம்சங்களை ஏற்பதில் தயக்கம் காட்டலாம், பொருதார அம்சத்தைச் சீர்தூக்கிப் பார்க்கும்போது மூன்று 'ஆதாரமான' பிரச்சினைகளை மனுதார்கள் (நிதியைக்கோருவோர்) கவனிக்க வேண்டும். செயல் திட்டம் குறிப்பிட்ட துறையில் கணிசமான முன்னேற்றத்தை ஏற்படுத்துமா? திட்டம் விளைவிக்கும் முன்னேற்றம் அதைச் செயல்படுத்தத் தேவையான உள்நாட்டு, அயல்நாட்டு முதலையும், நிருவாகத் திறனையும், பயிற்சி பெற்ற தொழிலாளர்களுடைய உழைப்பு முதலியவற்றையும் ஈடு செய்யும் வகையில் அமையுமா? கடைசியாக அது நாட்டின் முன்னுரிமைப் பகுதியைச் சார்ந்ததா? செயல் திட்டத்தின் உள்ளீடு அது நாட்டுக்கு அளிக்கும் உற்பத்தி பற்றிய கணக்கெடுப்பு நடைபெறும். திட்டம் தூண்டுவதால் ஏற்றுமதி பெருகி அன்னியச் செலாவணி மிகுதியாக நாட்டுக்குக் கிடைக்குமா அல்லது இறக்குமதிக்குப் பதிலீட்டுப் பண்டங்கள் உற்பத்தியாவதால் அன்னியச் செலாவணியின் செலவு தவிர்க்கப்படுமா அல்லது திட்டத்தின் விளைவாகத் தொடர்ந்து அன்னியச் செலாவணி, கச்சாப் பண்டங்கள், எண்ணெய் தளவாடத் துணை உறுப்புகள் முதலியவைகளுடைய இறக்குமதிக்காகத் தேவையாகுமா என்பவைகளைத் தீவிரமாகக் கவனிக்க வேண்டும். மாற்றுத் திட்டங்களுடைய உள்ளீடு, உற்பத்தி முதலியவைகளையும் கண்டால்தான் குறைந்தபட்ச அடக்கச் செலவு முறை புலனாகும். பல திட்டங்களைப் பரிசீலனை செய்யும்போது அவை உடனடியாகப் பலன் கொடுக்குமா அல்லது நீண்ட காலத்தில் பலனளிக்குமா என்பதையும் கவனிக்க வேண்டும். எதிர்காலப் பலனையும், செலவையும் 'தள்ளுபடி' (discounting) செய்வது வழக்கம்.

தொழில் நுட்பக் கோணத்திலிருந்து ஒரு செயல் திட்டத்தைப் பார்க்கும்போது அது தொழில்நுட்பப் பொறியியல் நிறைவு

பெற்றிருக்கின்றதா என்பதை கவனிக்க வேண்டும். திட்டத்திற்கு வேண்டிய ஆலோசனையாளர்கள், உற்பத்தியின் அளவு, நிறுவனம் இருக்கும் இடம், அதன் அமைப்பு முதலியவைகளையும் கவனிக்க வேண்டும். வளர்ச்சி குன்றிய நாடுகளில் போதிய அளவு நிருவாகத் திறமையின்மையால் திட்டம் கொண்டுள்ள நிருவாக அமைப்பையும் பரிசீலனை செய்ய வேண்டும். நிருவாகம் என்பது இயந்திரத்தை ஓட்டுவது மட்டுமல்ல; இதைவிடப் பரவலானது. விற்பனை, வாங்கல், நிதியீடு, தொழிலாளர் நிருவாகம் பற்றிய உறவு முதலியவைகளையும் நிருவாகம் என்ற சொல் குறிக்கின்றது. திட்டத்தை இயங்கும் நிலைக்குக் கொண்டு வருவதோடு மட்டுமல்லாமல் அதற்குப் பின்னரும் அதை நடத்துவதற்கு உகந்த நிருவாகத்தை திட்டம் பெற்றிருக்கின்றதா என்பதை வங்கி கவனிக்கும். செம்மையான வரவு–செலவுத் திட்டத்தையும், கையிருப்புச் சரக்குக் கொள்கையையும், அலுவலர் பயிற்சி திட்டத்தையும் ஒரு செயல் திட்டம் கொண்டிருக்கின்றதா என்பதையும் வங்கி கவனிக்க வேண்டும். நிதி பற்றிய அம்சத்தைப் பரிசீலனை செய்யும்போது செயல்திட்டத்தைத் தொடங்கி அதை இயக்குவதற்கு வேண்டிய பொருளை மனுதாரர் கொண்டிருக்கின்றாரா என்பது முக்கியமாகக் கவனிக்கப்படவேண்டிய விஷயமாகும். திட்டத்தைச் செயல்படுத்துவதற்கு வேண்டிய தொகை, இதை நிறுவனம் எவ்வாறு திரட்டும் என்பது, இதற்காகச் செலவாகும் நடைமுறைச் செலவு, கிடைக்கும் வரவு, எதிர்கால ரொக்கத் தன்மை, திட்டம் செயல்படும்போது நிறுவனம் பெறும் வரவின் வீதம் முதலியவைகளை மதிப்பிடவேண்டும். செயல் திட்டம் அமைக்கப்படும்போது அதன் வரவு எதிர்கால நிலையையும் ரொக்க ஈட்டலையும் காட்டும் இருப்புநிலைக் குறிப்பு பற்றிய மதிப்பீடு, தற்சமயம் உள்ள நிதிநிலை முதலியவை முக்கியமாகக் கவனிக்கப்படவேண்டியவையாகும்.[1]

## ஆசிய வளர்ச்சி வங்கி (Asian Development Bank)

உலக வங்கி பொருளாதார வளர்ச்சித் திட்டங்களை வளர்ச்சி குன்றிய நாடுகளில் துவக்குவதற்குக் கணிசமாக உதவி செய்துள்ளது. ஆயினும், வளர்ச்சிக்கு வேண்டிய நிதியும், தொழில் நுட்ப அறிவும் உலகில் போதிய அளவில் இல்லை. இச் சாதனங்களுக்கு ஏராளமான கிராக்கியும், இவைகளை அடைவதற்குப் போட்டியும் இருக்கின்றன. பிராந்தியப் பகுதிகளுடைய தொடர்ச்சியான பொருளாதார வளர்ச்சியை ஊக்குவிக்கவும்,

[1] John A. King, Jr. 'Economic Development Projects and their Appraisal cases and principles from the experience of the World Bank, (John Hopkins Press 1967).

குறிப்பிட்ட பகுதிகளின் நிதிப் பற்றுக்குறையை நீக்குவதற்கும் உலக வங்கியின் பாணியில் பிராந்திய நிலையங்கள் தேவை என்பது தெளிவாயிற்று. 1954-ல் தோன்றிய இக் கருத்தின் விளைவாகவே ஆசிய வளர்ச்சி வங்கி தோன்றியது. ஆசிய தூரக் கிழக்கு நாடுகளுக்கு வளர்ச்சி நிதியளிக்கவும், தொழில்நுட்ப உதவி புரியவும், ஐ.நா. சார்பில் ஆசிய வங்கி 1916ஆம் ஆண்டு டிசம்பர் 19ஆந் தேதி தொடங்கப்பட்டது. அதன் நோக்கங்கள் வருவனவாகும்:

(1) ஆசிய, தூரக்கிழக்கு நாடுகளுடைய பொருளாதாரக் குழு (ECAFE)வின் பகுதியில் தனியார், பொதுத்துறையின் முதலீட்டை ஊக்குவித்தல்.[1]

(2) இப் பகுதியிலுள்ள பின்தங்கிய (less developed) நாடுகளுடைய முன்னேற்றத்தைத் துரிதப்படுத்தி அவை மற்றப் பகுதிகளுடன் சமமான வளர்ச்சியடையும் வகையில் கிடைக்கும் சாதனங்களைப் பயன்படுத்துவதற்கு நிதியுதவி நல்குவது.

(3) இப்பகுதியிலுள்ள அங்கத்தினர்கள் விருப்பத்திற்கிணங்கி அவர்களுடைய வளர்ச்சிக் கொள்கைகளையும், திட்டங்களையும் இணைத்தல்.

(4) வளர்ச்சித் திட்டங்களுக்கான தொழில்நுட்ப ஆலோசனைகளையும், நிதியும் அளித்தல்.[2]

முதன் முதலில் இருந்த அனுமதிக்கப்பட்ட முதல் 1000 மிலியன் டாலர். நிருவாகக் குழுவினருடைய முதல் கூட்டத்தில் 1966ஆம் ஆண்டு நவம்பர் மாதம் இதை 1,100 மிலியன் டாலராக உயர்த்தினர். இதில் 978 மிலியன் டாலரை அங்கத்தினர்கள் கொடுத்துவிட்டனர்.

ஆசிய வங்கியின் நிதிச் சாதனங்கள் இரு வகைப்படும். (1) அங்கத்தினர்கள் செலுத்திய முதல் தொகையும், அது வாங்கும் கடன் தொகையும். (2) நாடுகள் அளிக்கும் விசேஷக் கொடை 'சிறப்பு நிதிகள்'. இந்த நிதியை வங்கியின் நோக்கங்களை மனத்தில் கொண்டு செலவு செய்ய வேண்டும். அதிகமான முன்னுரிமை கொண்ட நீண்டகாலச் செயல் திட்டங்களைச் செயல்படுத்துவதற்கு இந்த நிதியைப் பயன்படுத்தலாம்.

[1] இதை ESCAP (Ecnomic & Social Commission for Asia & Pacific) என்று இப்பொழுது அழைக்கின்றனர்.

[2] ஆசிய வளர்ச்சி வங்கியின் விதிகள் 1, 2ஐப் பார்க்கவும், 22 August, 1966.

முதன் முதலில் ஏற்படுத்திய அமைப்புப்படி வங்கிக்கு ஓர் ஆளுநர் குழுவும் (Board of Governors), இயக்குநர் குழுவும் (Board of Directors), ஒரு தலைவரும், ஓரிரு துணைத் தலைவர்களும், மற்ற அதிகாரிகளும், அலுவலர்களும் உண்டு.

1968-ன் இறுதியில் வங்கியில் 32 அங்கத்தினர்கள் இருந்தனர். இவர்களில் 19 ஆசிய தூரக் கிழக்குப் பகுதியினராகவும், 13 மற்றப் பகுதியினராகவும் இருந்தனர். பகுதியின் அங்கத்தினர்கள் 615 மிலியன் டாலரை, அதாவது 63.39 சதவீதம் பங்கு முதலைக் கொண்டிருந்தனர். இவர்களுடைய வாக்குரிமை (voting power) 62.58 சதவீதமாக இருந்தது. பகுதிக்கப்பாற்பட்ட அங்கத்தினர்களுடைய கட்டணம் 970 மிலியன் டாலராக (அதாவது 36·61 சதவீதமாக) இருந்தது; வாக்குரிமை 37.42 சதவீதமாக இருந்தது. இந்தியா செலுத்திய கட்டணம் 93 மிலியன் டாலர்; இது 9·59 சதவீதமாக இருந்தது. இதன் வாக்குரிமை 8.30 சதவீதம். ஜப்பானுடைய (பகுதியைச் சார்ந்த நாடு), அமெரிக்காவின் (பகுதிக்கப்பாற்பட்ட நாடு) பங்கும் முறையே 200 மிலியன் டாலர்களாக இருந்தன. ஜப்பானுடைய வாக்குரிமை 20.62 சதவீதமாகவும், அமெரிக்காவின் வாக்குரிமை 17.12 சதவீதமாகவும் இருந்தன.[1] ஆசியப் பகுதியின் பொருளாதார வளர்ச்சிக்குத் திட்டங்களைத் தீட்டி அவைகளைச் செயல்படுத்துவதில் அமெரிக்காவும் ஜப்பானும் சேர்ந்து செயல் புரிவதை இவ் வங்கி எடுத்துக் காட்டுகின்றது என்று வங்கியின் தலைவர் குறிப்பிட்டுள்ளார்.[2] அமெரிக்காவும், ஜப்பானும் இரு பெரிய பங்குதாரர்களாயினும் அவை தனித்தனியாகவோ அல்லது சேர்ந்தோ வங்கியின் நிருவாகத்தைக் கண்காணிக்க முடியாது. முதலின் பெரும் பகுதியை ஆசிய நாடுகளே செலுத்தியுள்ளன. அதன் தலைவரும், இயக்குநர்களும், அலுவலர்களும் பெரும்பாலும் ஆசிய நாட்டினரே ஆவர். அதன் தலைமை அலுவலகம் ஆசியாவிலுள்ள பிலிப்பைன்ஸ் நாட்டில் இருக்கின்றது.

மேலே குறிப்பிட்டுள்ளபடி சாதாரணச் சாதனங்கள் மட்டுமன்றி வங்கி 'சிறப்பு நிதிச் சாதனங்களையும்' (Special Fund Resources) கொண்டிருக்கின்றது. இவைகளைக் கீழ்க்காணும் முறைகளில் திரட்டுகின்றனர். (1) செலுத்திய முதலிலிருந்து

[1] Annual Report of the Asian Development Bank for the year ending December 31, 1968. Appendix 1-IV, p. 53. (1968 ஆம் ஆண்டின் அறிக்கை).

[2] ஜப்பான் அமெரிக்க சங்கத்தில் 1969ஆம் ஆண்டு ஆகஸ்டு 7ஆம் தேதி வங்கியின் தலைவர் திரு. வட்டநபி (Mr. Watanabe) ஆற்றிய உரை.

இந்த நிதிக்கு ஒரு பகுதியை ஒதுக்குகின்றனர். (2) இச் சிறப்பு நிதிக்கெனச் சில நாடுகள் கொடுக்கும் தொகை. (3) இந் நிதியி லிருந்து கொடுத்த கடன், உறுதி முதலியவைகளைத் திருப்பும் போது பெறும் தொகை. (4) மேலே குறிப்பிட்ட தொகைகளை முதலீடு செய்யும்போது கிடைக்கும் வருமானம். (5) சிறப்பு நிதியில் வங்கி சேர்க்கும் மற்றத் தொகைகள்.[1]

செலுத்திய முதலில் 10 சதவீதத்தை, அதாவது 14.5 மிலியன் டாலரைச் சிறப்பு நிதியில் சேர்த்துள்ளனர். பற்பல திட்டங்களுக்காகப் பல நாடுகள் சிறப்பு நிதிக்கு நன்கொடைகள் அளித்துள்ளன. ஜப்பான் 20 மிலியன் டாலரையும், டென் மார்க் 2 மிலியன் டாலரையும், நெதர்லாந்து 1.1 மிலியன் டாலரையும், கனடா 25 மிலியன் டாலரையும் கொடுத்துள்ளன. மேலும் இங்கிலாந்து, மேற்கு ஜெர்மனி, ஃபின்லாந்து முதலிய நாடுகளும் சிறப்பு நிதிக்கு இத்தகைய கொடையளித்துள்ளன. மற்ற நாடுகள் கொடையளிப்பதாக வாக்களித்துள்ளன.[2]

சிறப்பு நிதியைச் சில குறிப்பிட்ட திட்டங்களுக்குச் சலுகை முறையில் கடன் கொடுக்க வேண்டும். உதாரணமாக அதி முன்னுரிமை கொண்ட செயல் திட்டங்கள் நீண்டகாலத்தில் செயல்படும். இவைகளுக்குக் கொடுக்கும் தொகை நீண்ட காலத்தில் திருப்பிக் கொடுக்கப்படும். வட்டியும் சாதாரணக் கடன்களின் வீதத்தைவிடக் குறைவாக இருக்கும். ஒரு பகுதியின் வளர்ச்சிக்காகும் மூலதனத்தைச் சிறப்பு நிதியாகத் திரட்டுவது வங்கியின் சிறப்பான செயல்முறையாகும். சாதா ரணக் கடன்களின் நிபந்தனைகளை ஏற்கமுடியாத நிலையைப் பல நாடுகளுடைய அனுபவம் எடுத்துக் காட்டுகின்றது. விவசாயத் துக்கும் அடிப்படைச் செயல் திட்டங்களுக்கும் தேவையாகும் கடன்களைச் சாதாரண முறையில் திருப்பிக் கொடுப்பதோ அல்லது சாதாரண வட்டியை அவைகளுக்குக் கொடுப்பதோ கடினமாகும். பொருளாதார அம்சங்கள் அனைத்தும் சரிவர வளர்ச்சியடைய 'மென்மைக் கடன்கள்' தேவை. இவை மூலம் செய்யும் வளர்ச்சிக்கே நடைமுறையில் சாத்தியக்கூறு இருக் கின்றது. கடனின் 'மென்மை' கடனுதவியின் நிபந்தனைகளைப் பொறுத்திருக்கின்றது, செயல் திட்டத்தைக் கடுமையான

[1] Art. 20, Articles of Agreement establishing the Asian Development Bank, 1966.

[2] பாங்காக்கில் (Bangkok) ஏப்ரல் 4, 1969–ல் தெ. கி. ஆசிய நாடுகளின் நான்காவது அமைச்சர்கள் மாநாட்டில் திரு வட்டநபி நிகழ்த்திய உரை (வட்டநபி ஆசிய வளர்ச்சி வங்கியின் தலைவர்.)

முறையில் மதிப்பீடு செய்வதைப் பொறுத்தோ அல்லது உதவித் தொகையை எவ்வாறு பயன்படுத்தவேண்டும் என்ற விதி முறைகளைப்பொறுத்தோ இல்லை என்று ஆசிய வங்கியின் தலைவர் குறிப்பிட்டுள்ளார்.[1] மென்மைக் கடன் கொடுக்கும் பழக்கம் உலக வங்கியின் உறுப்பாகிய தொ. வ. கழகத்தை நினைவூட்டுகிறது. 'மென்மைக் கடன்' கொடுப்பது வளர்ச்சியின் ஒரு கூறுகவே இன்று கருதப்படுகிறது.

வங்கி சலுகைக் கடன் கொடுப்பதை 1969ஆம் ஆண்டு ஜூன் 30உட முடிவடையும் ஆண்டின் பகுதியில் தொடங்கிற்று. அப்பொழுது இந்தோனேசியாவுக்கு 990.000 டாலர் கடனைக் கொடுத்தது. சிறப்பு நிதியிலிருந்து கொடுத்த இக்கடன் இந்தோனேசியாவுக்கு டாட்ஜம் நீர்ப்பாசனத்திட்டத்தை (Tadjum Irrigation Project) மத்திய ஜாவாவில் அமைக்கவேண்டிய அன்னியச் செலாவணியைப் பெற உதவியது. திருப்பிக் கொடுக்கவேண்டிய காலம் 24½ ஆண்டுகள், 7 ஆண்டுகள் கருணைக்காலமும் (grace period) உண்டு. வட்டிவீதம் 3 சதவீதமாகும். சாதாரணக் கடன்களுக்கு வங்கி வசூல் செய்யும் ஆண்டின் வட்டி வீதம் 6⅞ சதவீதமாகும்.[2] மென்மைக் கடன்களைத் தவிர, சாதாரணக் கடன்களையும், திரும்பிப் பெறக்கூடிய, இவ்வாறு பெறமுடியாத தொழில்நுட்ப உதவிகளையும் வங்கி அளிக்கின்றது. ஆளுநர் குழுவின் அனுமதி பெற்று அது பங்கு முதலையும் அளிக்கலாம். தொடக்க காலத்திலிருந்து ஜூலை 14, 1969 வரை வங்கி 77.4 மிலியன் டாலர் மதிப்புள்ள 13 கடன்களைக் கொடுத்துள்ளது. அது கொடுத்த நிதியுதவி பரவலாகப் பலதுறைகளில் பயனளித்தது. நீர் வசதி வழங்கல், நீர்ப்பாசனம், மீன் பிடித்தலுக்கான கலங்களைக் கட்டுவது, சாலைப்போக்குவரத்து, தொழில் துறை எந்திரங்களை நிறுவுதல் முதலிய துறைகளில் கடன் வசதி உதவியது. இந்தோனேசியா, சிலோன், கொரியா, மலேசியா, பாக்கிஸ்தான், சிங்கப்பூர், பிலிப்பைன்ஸ் நாடு, தாய்லாந்து முதலிய வளர்ச்சியடையும் நாடுகள் அதன் உதவியைப் பெற்றன. அது கொடுத்த கடன்களைக் கீழ்க்காணும் 4 வகைகளாகப் பிரிக்கலாம் : (1) தேசீய வளர்ச்சி வங்கிகளுக்கும், இடைநிலை வங்கிகளுக்கும் கொடுக்கும் கடன்கள்; (2) தொழிற் கடன்கள்; (3) விவசாயக் கடன்கள்; (4) உள்ளமைப்பு நிறுவக் கொடுக்கும் கடன்கள். முதல் வகைக் கடன்கள், 32 மிலியன் டாலர் மதிப்புள்ளவைகளை வங்கி அனுமதித்தது. இதில் தாய்லாந்தின்

[1] மணிலாவில் (Manila) ஏப்ரல் 26–28. 1967–ல் தெ. கி. ஆசிய நாடுகளின் இரண்டாவது மாநாட்டில் வங்கியின் தலைவர் ஆற்றிய உரை.

[2] Asian Development Bank, Quarterly News letter, July 1969, pp. 1-2.

தொழில் வளர்ச்சி வங்கி (Industrial Development Bank of Thailand) 5 மிலியன் டாலரையும், பாக்கிஸ்தானின் தொழில் வளர்ச்சி வங்கி (Industrial Development Bank of Pakistan) 10 மிலியன் டாலரையும், சிலோன் நாட்டின் மைய வங்கி (Central Bank of Ceylon) 2 மிலியன் டாலரையும், சிங்கப்பூரின் வளர்ச்சி வங்கி (Development Bank of Singapore) 10 மிலியன் டாலரையும், பிலிப்பைன் தேசீய வங்கி (Phillippine National Bank) 5 மிலியன் டாலரையும் பெற்றுள்ளன.[1] இரண்டாவது வகைக் கடனில் 12 ஆண்டுகள் 10.2 மிலியன் டாலரைச் சீனப் பெட்ரோலியம் கார்ப்பரேஷன் (Chinese Petrolium Corporation) பெற 1968 டிசம்பர் மாதம் அனுமதி பெற்றது. மலேசியா பனை எண்ணெய் ஆலையை நிறுவ, வேண்டிய அன்னியச் செலாவணியைப் பெற 1969ஆம் ஆண்டு பிப்ரவரியில் 2.8 மிலியன் டாலர் மதிப்புள்ள 20 ஆண்டுக் கடனைப் பெற்றது.[2] மூன்றுவது வகைக் கடனில் 10 மிலியன் டாலரைச் சீனநாடு, ஆழ்கடல் மீன்பிடித்தலுக்கான விசைப்படகு அமைக்கப் பெற்றது. இந்தோனேசியா 0.99 மிலியன் டாலரைப் பெற்றது. கொரியக் குளிர் சாதனக் கம்பெனி (Korea Cold Storage Company) 7 மிலியன் டாலரைப் பெற்றது. உள்ளமைப்பு நிறுவுவதற்காகப் பெறும் கடனில் கொரிய, சீன, மலேசியக் குடியரசுகள், துரிதப் போக்குவரத்து (6.8 மிலியன் டாலர்கள்), தடையற்ற போக்குவரத்தின் சாத்தியக்கூறு பற்றிய கணக்கெடுப்பு, (0·4 மிலியன் டாலர்); நீர்வசதித்திட்டம் (7.2 மிலியன் டாலர்) முதலியவைகளுக்காக நிதியுதவிபெற்றன.[3]

ஆசிய வளர்ச்சி வங்கியின் சாசனப்படி அது செய்து வரும் பணியில் குறிப்பிடத்தக்கது. அது அளிக்கும் தொழில்நுட்ப உதவி. இதைத் திரும்பிப் பெறும் வகையிலோ அல்லது மானியமாகவோ அல்லது ஓரளவு மானியமாகவும், ஓரளவு திரும்பிப் பெறக்கூடியதாகவும் அது அளிக்கலாம். குறிப்பிட்ட செயல் திட்டங்களைத் தீட்டுவதற்கும் குறிப்பிட்ட தேசீய அல்லது சில பகுதிகளின் பொருளாதாரப் பிரச்சினைகள் பற்றிய ஆய்வுகளைத் தொடங்குவதற்கும் இவ்வுதவியை அளிக்கின்றனர். வங்கியின் விதிகள்படி அது அளிக்கும் தொழில்நுட்ப உதவிக்காக ஒரு கட்டணத்தை வசூல் செய்யலாம். இந்த வரவு அதன் எச்ச இலாபத்தில் சேரும். தான் செலுத்தும் கட்டணத்தை உதவி

[1] Second Annual Report of the Asian Development Bank for the year 1968, p. 91 and p. 23,

[2] Second Annual Report of the Asian Development Bank, 14 July 1969, p. 14.

[3] அதே நூல். பக்கம் 15.

பெறும் நாடு திரும்பிப் பெற முடியாது. முதல் 5 ஆண்டுகளில் செலுத்திய மூலதனத்தில் 2 சதவீதத்தை இதற்காக வங்கி செலவு செய்யலாம். 1968-ல் தொழில்நுட்ப உதவித் திட்டங்கள் அனுமதி பெற்றன. பின்னர் வங்கி கடன் கொடுப்பது பற்றிய சாத்தியக் கூறுகளை ஆய்வு செய்ய இத் திட்டங்கள் தீட்டப் பெற்றன. கடன் சம்பந்தப்படாத தொழில்நுட்ப உதவித் திட்டங்கள் 7 அனுமதி பெற்றன. மேற்கண்ட 11 திட்டங்களும் உறுப்பினர்களுக்கானவை. அவைகளுடைய மொத்த அடக்கச் செலவு 1,137,000 டாலர்கள்.[1]

பொருளாதார வளர்ச்சியைத் தொடங்கி அதற்கு நிதி வசதி யளித்தல் ஒரு மாபெரும் பொறுப்பாகும். நிதியுதவி மட்டு மல்லாமல், அதற்குத் தொழில்நுட்ப அறிவையும், தொழில் துணி வையும் (entrepreneurship) அளிக்க வேண்டும். 'மட்டற்ற மக்கள் பெருக்கம்' (mushrooming masses) உள்ள ஆசிய நாடு களில் தற்போதுள்ள பொது நலத் திட்டங்களைப் பேணுவதற்கே ஏராளமான பிரயாசை வேண்டும். இதற்காக மொத்த தேசீய உற்பத்தியை (Gross National Product) ஆண்டுதோறும் 4 முதல் 5 சதவீதம் வரை பெருக்க வேண்டும். இந்த இலக்கை நிறை வேற்றுவதற்காக தேசீய வருமானத்தைப்போல் 3 மடங்குத் தொகையைப் புதிய முறையில் முதலீடு செய்ய வேண்டுமென்று ஆசிய வளர்ச்சி வங்கியின் தலைவர் குறிப்பிட்டுள்ளார்.[2] வங்கியின் அதிகாரிகள் வளர்ச்சியடையும் நாடுகளுடைய பொரு ளாதார முன்னேற்றத்தை விரைவுபடுத்தும் நிலையமாக வங்கி வளரும் என்று நம்புகின்றனர். இதற்காக ஆசியப் பகுதிக் கப்பாலுள்ள 12 வளர்ச்சி மிகுந்த நாடுகளுடைய நிதிகளையும், தொழிலறிவையும் அது பயன்படுத்தும்; அதன் பகுதியிலுள்ள உறுப்பினர்களுடைய பன்னாட்டு வர்த்தகத்தைச் சீரான முறையில் வளர்க்கவும் வழி வகுக்கும் என்று நம்புகின்றனர். அடுத்து வரும் ஆண்டுகளில் ஆசிய வளர்ச்சி வங்கி உலக வங்கியின் இரு துணை நிறுவனங்களாகிய தொழில் வளர்ச்சிக் கார்ப்பரேஷன் பன்னாட்டு வளர்ச்சிக்கழகம், இரு நிலையங் களுடைய இயங்கும் முறைகளைத் தன்னகத்தே கொண்டிருக்கும். ஆ. வ. வங்கி ஆசியாவின் தனி நிலையம். இது தன் பகுதியின் முன்னேற்றத்தில் அக்கறை கொண்டிருந்தபோதிலும், தன் எல்லைக்கப்பாலுள்ள வளர்ச்சி நிறைந்த நாடுகளுடைய சாதனங்

[1] Second Annual Report of the Asian Development Bank for the year 1968, p. 8.

[2] 1967, ஜனவரி 24ந்தேதி மகடி ரோட்டரிக் கழகத்தில் (Makati Rotary Club) திரு. வட்டநபி நிகழ்த்திய உரை.

களைத் தாராளமாகப் பயன்படுத்தும் ஒரு தனி இயல் கொண்ட நிறுவனமாகும்.[1]

மேற்கிந்திய நாடுகளிடமிருந்து சிறப்பு நிதிக்காகப் பெறும் தொகைகள் வங்கியின் உண்மையான ஆசியத் தன்மையைப் பாதிக்கும் என்ற சிலருடைய ஐயப்பாட்டைக் கிளப்பியுள்ளது. இக்கூற்று தவறானது. ஏனெனில் ஆசிய நாடுகள் மிகுதியான வாக்குரிமையைப் பெற்றிருக்கின்றன. வங்கியின் தலைவரும் பெரும்பாலான அலுவலர்களும் ஆசியப் பகுதியினரே. பல்வேறு நாடுகள் பற்பல அரசியல் தத்துவங்களைப் பின்பற்றுவதால் வங்கியின் கொள்கையைச் செயல்படுத்துவதில் இடர்ப்பாடு இருக்கின்றது. அவை வெவ்வேறு வளர்ச்சித் திட்டங்களைக்கொண்டிருக்கின்றன. இதுவே வங்கியின் உண்மையான பிரச்சினையாகும். பலதரப்பட்ட அரசியல் தத்துவங்களை அடிப்படையாகக் கொண்ட திட்டங்களைச் செயல்படுத்துவது ஒரு மிகக் கடினமான பொறுப்பாகும்.

உலக வங்கியைப் போன்ற ஒரு பிராந்திய வங்கியாகிய ஆசிய வளர்ச்சி வங்கியை நிறுவுவதைச் சிலர் ஆதரிக்கவில்லை. இத்தகைய உபரியான நிலையமொன்று தேவை இல்லை என்று அவர்கள் கூறினர். உலக வங்கியின் ஆசியப் பிரிவுக்கு வலிமை யூட்டினால் இதன் நோக்கம் சிக்கனமாகவும், திறமையாகவும் கைகூடுவதற்கு இடம் உண்டு. ஆனால் பிரச்சினை பெரியதாகவும், சிக்கலாகவும் இருப்பதால் இருவகை நிறுவனங்கள் செயல்படுவதற்கு (உலக வங்கியும், பிராந்திய நிலையமும்) இடம் இருக்கின்றது என்று நாம் கருதுகிறோம். பிராந்திய நிலையம் திட்டங்களுக்கு அருகில் செயல் புரிவதால், ஓர் அனுகூலத்தைக் கொண்டிருக்கின்றது. கடன் வாங்குவோருடைய முன்னுரிமைகளைக் கவனித்து எவை முதலில் கவனிக்கப்பட வேண்டியவை என்று திட்டங்களை ஆய்வு செய்து அவைகளைத் தேர்ந்தெடுப்பதற்கு உகந்ததாக இருக்கின்றது. இக் கோணத்தில் பார்க்கும் போது அமெரிக்க நாடுகளின் வளர்ச்சி வங்கியும் (Inter American Development Bank), ஆப்பிரிக்க வளர்ச்சி வங்கியும் (The African Development Bank), ஆசிய வளர்ச்சி வங்கியும் சிறப்பாகப் பணி புரியலாம். ஆனால், இவ் வங்கிகள் ஆராய்ச்சி செய்தலும், ஆலோசனை கூறுதலும் தங்களுடைய முக்கியமான பொறுப்புகள் அல்ல என்பதையும், உலக வங்கி இதுகாறும் உதவி நல்காத

[1] 1967-ல் ஆகஸ்ட் 9உ மணிலாவில் நடைபெற்ற முதல் ஆசியப்பணிப் பயிற்சியில் (First Asian course) திரு வட்டநபி நிகழ்த்திய உரை.

அல்லது போதிய உதவியளிக்காத திட்டங்களுக்குத் துணை புரிவதே தம்முடைய பிரதான பணி என்பதையும் உணரவேண்டும்.

வங்கி கடந்த நான்காண்டுகளாக இயங்கி வருகின்றது. பன்னாட்டு நிலையமாகிய வங்கியின் அலுவல்களையும் சாதனைகளையும் இக் குறுகிய காலத்தில் பரிசீலனை செய்வது இயலாதது. இது நல்ல முறையில் தொடங்கிற்று. எதிர்காலத்தில் வங்கி செம்மையாகச் செயல் புரிவது அது சுதந்திரமாக இயங்குவதையும், அதன் பகுதியுடைய தன்னிறைவை வளர்க்கும் அங்கத்தினர்களுடைய வர்த்தகத்தையும் பொறுத்திருக்கின்றது.

குறைவான சாதனங்களைக் கொண்டுள்ள ஒரு நிலையம் பிரமிக்கத்தக்க வளர்ச்சியை விளைவிக்கும் என்று கருதமுடியாது. வங்கியின் தலைவராகிய திரு. வட்டநபி அவர்களே அது விரைவில் செயல்களைப் பெருக்கும் என்ற தவறான நம்பிக்கை கொள்ளக்கூடாது என்று குறிப்பிட்டுள்ளார். இதற்கு மாறாக, 'மூலதனம் அகாலத் தேய்மானம் பெற்று அதன் விளைவாக நம் ஆர்வம் பாதிக்கப்படும் அவல நிலை ஏற்படக் கூடாதென்று' குறிப்பிட்டுள்ளார். ஒரு நாட்டின் ஒரு செயல் திட்டம் நம்பிக்கை யூட்டக் கூடியதாகவும், அதைச் செயல்படுத்தும் சாத்தியக் கூறுகள் உள்ளனவாகவும், தற்போது அதன் அயல் நாட்டுச் செலுத்தல் நிலை பாதகமாக இருந்தபோதிலும் எதிர் காலத்தில் வளம் பெருகும் சாத்தியங்கள் உள்ளனவாகவும் இருந்தால் ஒரு பன்னாட்டு வளர்ச்சி நிலையம் இத்தகைய திட்டத்திற்கு உதவி நல்கலாம். அதாவது ரொக்க உதவியைவிட நல்ல ஆலோசனை கூறுவதே சாலச் சிறந்ததாகும்.[1] ஆசிய நாடுகளின் கூட்டுறவுக்கு ஆசிய வளர்ச்சி வங்கி ஒரு சிறந்த எடுத்துக் காட்டாகும் என்று உலக வங்கியின் முன்னாள் தலைவர் திரு. யூஜீன் பிளாக் (Mr.Eugene Black) கூறியுள்ளார். அது தன் பகுதியில் முதலீடு செய்வதோடு மட்டுமல்லாமல் சிறப்புப் பணிகள் மூலம் 'வளர்ச்சியைத் தூண்டும்' ஒரு கருவியாகவும் பயன்படுகின்றது.[2]

**வளர்ச்சி வங்கிகளை நிறுவுதல்—இந்தியாவில் பரிசோதனை**

இரு உலகப் போர்களுக்குமிடையே உள்ள காலத்தில் தொழில் வங்கிகளை நிறுவ இந்தியாவில் முயற்சி செய்தனர். நாட்டுத் தொழில்களுக்கு (indigenous industries) நிதியும் மற்ற

[1] Address delivered by Mr. Watanabe of the Second UNCTAD at New Delhi.

[2] Eugene R. Black, Art. entitled Regional Cooperation and Development Policy: 'The Asian Example', The Virginia Quarterly Review, 1968. Reprinted in the American Review, July 1968.

உதவியும் அளித்து அவைகளை வளர்க்க வேண்டிய புதிய நிறுவனங்கள் 'வளர்ச்சியுடனே அல்லது 'வங்கித் தத்துவத் துடனே' எவ்விதத் தொடர்பும் கொள்ளவில்லை.[1] ஜெர்மானியத் தொழில் வங்கிகள் என்று கருதப்படும் வங்கிகள் நாட்டின் தொழில் வளர்ச்சியில் ஏற்ற பங்கை இந்திய வங்கியர்களும் (Bankers) தொழிலதிபர்களும் உணர்ந்தனர். ஜெர்மானிய முறையை இந்தியாவில் புகுத்த அவர்கள் விரும்பினர். இந்த வங்கிகளை நிறுவியவர்கள் எக்கருத்தை மனத்தில் கொண்டு இவைகளை நிறுவியபோதிலும் இவை நன்கமைந்த தொழில் வங்கிகளாக இல்லை. அவர்கள் தொழில் வங்கி முறைகளை நன்கறியவில்லை. முதலீட்டு இடர்களைப் (risks) பரவலாக்கும் வழி முறைகளையும்; நீண்ட, நடுத்தரகாலத் (டெப்பாசிட்டு) தொகைகளை மட்டுமே நீண்ட கால முதலீட்டுக்குப் பயன்படுத்த வேண்டுமென்ற தத்து வத்தையும் அவர்கள் உணரவில்லை. எனவே இந்த முதல் முயற்சி களில் பெரும்பாலானவை தோல்வியுற்றன. ஜப்பானின் தொழில் வங்கிகள் (The Industrial Bank of Japan) (1902) பிரெஞ்சு கிரெடிட் மொபிலியர் (French Credit Mobilier) போல் அமைப்புப் பெற்றது. இந்தியத் தொழில் குழுவினர் (Indian Industrial Commission) [1916-18] ஜப்பானிய வங்கியைச் சிறந்த நிறுவனமென்றும் கருதினர், இந்தியாவுக்கு உகந்ததென்றும் கருதினர். ஆனால், ஜப்பானிய வங்கி வளர்ச்சி வங்கியிலிருந்து வேறுபட்டிருக்கின்றது.

விடுதலைக்குப் பின்னரே பல வளர்ச்சி வங்கிகள் இந்தியாவில் வளர்ந்தன. முதன் முதலில் தோன்றிய நிறுவனம் (1948-ல்) இந்தியாவின் தொழில் நிதிக் காப்பரேஷன் (தொ. நி. கா.) (Industrial Finance Corporation). கலப்புத் துறையில் (Mixed Ownership) நிறுவப்பெற்ற இந்த நிலையத்தின் முதலை மத்திய அரசும், ரிசர்வ் வங்கியும். ஷெடியூல் பாங்குகள், இன்சூரன்சு கார்ப்பரேஷன், கூட்டுறவு நிறுவனங்கள் போன்ற முதலீடு செய்யும் நிலையங்களும் செலுத்தின. இந்தியாவின் தொழில் வளர்ச்சி வங்கி (Industrial Development Bank of India) [இ. தொ, வ. வ.] நிறுவனம் ஆனபின் மத்திய அரசின் பங்குகளையும் ரிசர்வ் வங்கியின் பங்குகளையும் இதற்கு மாற்றிவிட்டனர். இ.தொ. வ. வங்கியின் பங்குகள் இப்பொழுது எவ்வாறு பகிர்வாகியுள்ளது என்பதை அடிக் குறிப்பில் காணவும்.[2] அதன் சாசனப்படி

[1] Prospectus of the Calcutta Industrial Bank Ltd., 25 Sept. 1919.

[2] மொத்தத்தில் சதவீதம் இ.தொ.வ.வ. 50%; இன்சூரன்சு நிலையங்கள் 22%; ஷெடியூல் வங்கிகள் 20%; கூட்டுறவு வங்கிகள் 8%; [தொ. வ. வ இன் 21 ஆவது அறிக்கை 1968-69-

தனியார் துறையிலுள்ள வரையிட்ட பொறுப்புள்ள பொதுக் கம்பெனிகளுக்கும் (Public Limited Companies) கூட்டுறவுச் சங்கங்களுக்கும் அது நீண்டகால, நடுத்தரகாலக் கடன்களைக் கொடுக்கலாம். குறிப்பாக அவை ‘சாதாரண வங்கி கடன்களைப் பெற இயலாத நிலையிலும், மூலதன மார்க்கட்டை அணுக முடியாத நிலையிலும் இ. தொ. வ. வங்கியின் உதவியைப் பெறலாம். முதன்முதலில் பொதுத்துறை நிறுவனங்கள் அதன் உதவியைப் பெற முடியாமலிருந்தன. ஆனால், 1969ஆம் ஆண்டு அரசு எடுத்த முடிவை ஒட்டி பொதுத்துறை நிறுவனங்களும் தம் தொழிலை விரிவாக்க அதன் உதவியைப் பெறலாம். ஆனால், இந்த நிறுவனங்கள் தம் முதல் இலாப ஈவை அளித்திருக்கவேண்டும்; போதிய உள் சாதனங்களைக் (internal resources) கொண்டிருக்கவேண்டும்; மேலும் அவை அரசின் வரவு செலவுத் திட்டத்தில் தமக்கு வேண்டிய நிதியைப் பெற்றிருக்கக் கூடாது.[1]

அதன் சட்டப்படி கார்ப்பரேஷன் கொண்டிருந்த அமைப்பில் ஒரு குறைபாடிருந்தது. தொழில் நிறுவனங்களுடைய பங்குகளுக்கும், டிபஞ்சர் பத்திரங்களுக்கும் கார்ப்பரேஷன் உறுதி கொடுக்கலாம். ஆனால் அவைகளுடைய பங்குகளை வாங்குவதன் மூலம் அவைகளுக்கு நிதியுதவியளிக்க முடியாது. சட்டத்தின் இக்கூறு மற்றதுடன் முரண்பாடு கொண்டிருக்கின்றது. கார்ப்பரேஷன் இடர் முதல் (risk capital) பெறுவதைத் தடை செய்வது நோக்கமாயின், பங்கு முதலுக்கு உறுதி கூறுவது நேரடியாகப் பங்குகளை வாங்குவதைவிட ஆபத்தானது என்பது நம் கருத்து. கார்ப்பரேஷன் உறுதி கொடுக்கும் தொழிலைச் செய்வதன்மூலம் பெற்ற பங்குகளைக் குறிப்பிட்ட காலத்திற்குள் விற்பனை செய்துவிட வேண்டும் என்ற நிபந்தனை மேலும் அபத்தமானதாகும், வளர்ச்சி குன்றிய ஒரு நாட்டில் கடனுதவியைவிட இடர் முதலே (risk capital) அதிகம் தேவைப்படுகின்றது. முரண்பாடுள்ள சட்டத்தின் இப்பகுதியை இந்நூலாசிரியர் தீவிரமாகக் கடிந்திருக்கின்றார்.[2] அவருடைய நூல்கள் மூலமும், இ. தொ. நி. கார்ப்பரேஷனுடைய இயக்குநர் என்ற முறையிலும் அவர் கார்ப்பரேஷனுடைய சட்டத்தை மாற்றுவதற்கு 1962-ல் ஏற்பாடு செய்தார். இவர் வாதத்தின் பலனாக மத்திய அரசும், கார்ப்பரேஷனுடைய நிருவாகக் குழுவும்

[1] இ தொ.வ.வ.-யின் 21ஆவது ஆண்டறிக்கை, ஜூன் 30, 1969 வரை உள்ள காலம் பற்றியது. பக்கம் 27.

[2] நூலாசிரியர் எழுதியுள்ள ‘Industrial Finance in India’ (4ஆவது பதிப்பு) என்ற நூலைப் பார்க்கவும்-பக்கங்கள் 431-33.

இவரது கருத்தை ஏற்றனர். மாற்றத்திற்குப் பிறகு தொழில் கம்பெனிகளின் சாதாரணப் பங்குகளைக் கார்ப்பரேஷன் வாங்க முடிந்தது.

தொ. நி. கார்ப்பரேஷனுடைய செயல்கள் பரவலாக அமைந்திருக்கின்றது. உணவு உற்பத்தி, துணி, காகிதம், கண்ணாடி, உலோகப் பொருள்கள், மின்சாரத் தளவாடங்கள், மோட்டார் வண்டிகள், மின்சாரம், வாயு, நீராவி முதலிய எரி பொருள்கள் முதலிய துறைகளுக்கு அது உதவி புரிந்துள்ளது. அண்மையில் உணவு விடுதிகூட அதன் உதவியை அடைந்து வருகின்றது. அதன் உதவியில் மிகப் பெரிய பகுதியை அடைந்த தொழில் சர்க்கரைத் தொழில் என்பது நம் கவனத்தை ஈர்க்கும் செய்தியாகும். கார்ப்பரேஷன் நல்கிய மொத்தக் கடனில் 32.3 சதவீதத்தை (1963ஆம் ஆண்டு ஜூலை 30 தேதி) சர்க்கரைத் தொழில் கொண்டிருந்தது. இவ்வளவு மிகுதியான உதவியை ஒரு குறிப்பிட்ட தொழிலுக்குக் கொடுத்தது முதலீட்டின் வாயிலாகத் தோன்றும் இடர்ப்பாட்டைப் (risk) பரவலாக அமைக்க வேண்டிய தத்துவத்திற்கு ஒவ்வாததாகும். தொழில்களுக்கு முன்னுரிமை கொள்ளாத சர்க்கரைத் தொழிலுக்கு இவ்வளவு மிகுதியாக உதவி புரிந்தது மேலும் வருந்தத் தக்கதாகும். குறைவான அளவு முன்னுரிமையைக் கொண்ட இத் தொழிலுக்குக் கணிசமாக உதவி புரிவதை இந் நூலாசிரியர் ஒருபோதும் ஆதரிக்கவில்லை.[1] 1964ஆம் ஆண்டு இ.தொ.நி. கார்ப்பரேஷன் சர்க்கரைத் தொழிலிலிருந்து தன் கவனத்தை வேறு திசையில் திருப்பியது மிகவும் திருப்திகரமாக இருந்தது. 1963–64-ல் இத் தொழில் பெற்ற உதவி 3.4 சதவீதமாக இருந்தது. 1962–63-ல் இச்சதவீதம் 15.1 ஆக இருந்தது. ஆனால் இந்த நல்ல போக்கு அண்மை ஆண்டுகளில் மீண்டும் மாறிவிட்டது. 1967—68-ல் சர்க்கரைத் தொழிலின் பங்கு மீண்டும் 41.52 சதவீதமாக உயர்ந்துவிட்டது.[2] ஆனால் 1970–71-ல் இச் சதவீதம் 23.5 ஆகக் குறைந்துவிட்டது.[3]

கடனைத் தாமதித்துத் திருப்பிச் செலுத்துவதற்கும், அயல் நாட்டுக் கடன்களுக்கும் இ. தொ. நி. கா. உறுதியளிக்கின்றது; தவிரக் கீழ்க்காணும் உதவிகளையும் செய்கின்றது: (1) ரூபாய்க்

[1] இந் நூலாசிரியர் எழுதியுள்ள 'Theory and Practice of Development Banking' என்ற நூலைப் பார்க்கவும், பக்கம் 167.

[2] Twentieth Annual Report of the I.F.C. 30 June 1968, p. 14.

[3] Reserve Bank of India, 'Report on Currency and Finance', 1971–72. Statement 48.

கடன்களையும், அன்னியச் செலாவணிக் கடன்களையும் கொடுக்கின்றது. (2) (a) சாதாரணப் பங்குத் தொகைகள், (b) முன்னுரிமைப் பங்குத் தொகைகள் (preference shares), (c) டிபெஞ்சர் பத்திரத் தொகைகள் முதலியவைகளைத் திரட்டுவதற்கும் நிறுவனங்களுக்கு உறுதி கொடுக்கின்றது. (3) நேரடியாகவும், சாதாரனப் பங்குகள், முன்னுரிமைப் பங்குகள், டிபெஞ்சர் பத்திரங்கள் முதலியவைகளை வாங்குகின்றது. 1962ஆம் ஆண்டின் திருத்தப்படி இ. தொ. வ. க. நேரடியாகச் சாதரணப் பங்குகளை வாங்கலாம். ஆனால் பாதுகாப்புடன் இருக்கவேண்டுமென்ற பழைய போக்கு அதைவிட்டு அகலவில்லை. நேரடியாக டிபெஞ்சர் முதலீட்டைச் செய்துள்ளது, ஆனால் தொழில் நிறுவனங்களுடைய சாதாரணப் பங்குகளை வாங்க அது முன் வரவில்லை. 1969, ஜுன் 30 தேதி வரை அது ரூ. 1.82 கோடி பெறுமானமுள்ள டிபெஞ்சர் பத்திர முதலீடு செய்தது. ரூ. 0.16 கோடி மதிப்புள்ள சாதாரணப் பங்கு முதலீட்டையும், ரூ. 0.03 கோடி மதிப்புள்ள முன்னுரிமைப் பங்கு முதலீட்டையுமே செய்தது.

1948, ஜுலை 1 ஆம் தேதி முதல் 1969 ஜுலை 30 வரை கார்ப்பரேஷன் செய்த பல்வகை நிதி யுதவி பற்றிய விவரங்களைக் கீழ்க் காணும் பட்டியலில் காணலாம்.

### பட்டியல்[1]

### அனுமதிக்கப்பட்ட எச்ச நிதியுதவி.

| கடன்கள் (ரூபாயிலும் அன்னியச் செலாவணியிலும்) | உறுதி கூறல் | நேரடி செலுத்திய கட்டணங்கள் | தாமதித்துத் திருப்பிக் கொடுப்பதற்கும் அயல் நாட்டுக் கடனுக்கும் கொடுத்த உறுதி |
|---|---|---|---|
| 243·03 | 25·10 | 2·01 | 51·33 |

(கோடி ரூபாயில்)

### கொடுக்கப்பட்ட தொகை

| மொத்தம் | கடன்கள் (ரூபாயிலும் அன்னியச் செலாவணியிலும்) | உறுதிமொழி | நேரடி செலுத்தல் தொகைகள் | தாமதித்து திருப்பிக் கொடுப்பதற்கும், அயல் நாட்டுக் கடனுக்கும் கொடுத்த உறுதி | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| 321·47 | 211·20 | 19·01 | 1·96 | 50·41 | 192·46 |

[1] Twenty-first Annual Report of the Industrial Finance Corporation of India for the year ending 30 June 1969, p. 10, p. 16.

குறிப்பிட்ட திட்டங்களுக்காக நாடுகள் கார்ப்பரேஷனுடைய உதவியை நாடும்பொழுது கீழ்க்காணும் குறிக்கோள்களைக் கொண்டு அது திட்டங்களை மதிப்பீடு செய்கின்றது. நாட்டின் பொருளாதாரத்தில் திட்டம் பெற்றிருக்கும் முன்னுரிமை, கச்சாப் பொருள்கள் கிடைக்கும் இடங்களும், அவை போதிய அளவில் கிடைக்கின்றனவா என்பதும், திட்டத்தின் தொழில்நுட்ப, நிதி, பொருளாதார சாத்தியக்கூறுகள், உற்பத்தியாகும் பண்டங்களுக்கு இருக்கும் மார்க்கட்டு, அதைத் தொடங்குவோருடைய நேர்மை, திறமை, நிருவாக ஆற்றல் முதலியவை, இறுதியாகத் திட்டத்தின் இலாப ஈட்டும் திறமை. உதவி செய்வதற்குத் திட்டங்களைத் தேர்ந்தெடுக்கும்போது தொழில்கள் பரவலாக அமைந்துள்ளனவா, கூட்டுறவுத் துறை சரிவர வளர்ந்துள்ளதா என்பவைகளையும் கார்ப்பரேஷன் கவனிக்கும்.[1]

கார்ப்பரேஷன் தொழில் துறையில் பரவலான பகுதிக்குக் கடனுதவியளித்து வருகின்றது. 1968-69-ல் சர்க்கரை, சணல், துணி முதலிய தொழில்கள் அதன் உதவியின் பெரும் பகுதியைப் பெற்றன. இரும்பு அல்லாத மற்ற உலோகங்கள், ரப்பர் பண்டங்கள், காகிதம், காகிதப் பண்டங்கள், பொறியியல் பண்டங்கள் முதலிய தொழில்களும் கார்ப்பரேஷனுடைய உதவியைக் கணிசமாகப் பெற்றன. 1971-ல் கார்ப்பரேஷனுடைய உதவியில் 47.8 சதவீதம் புதிய தொழில்களுக்குக் கிடைத்தது. எஞ்சிய 52.2 சதவீதத்தைப் பழைய தொழிற் கூடங்களை விஸ்தரிக்கவும் நூதனப்படுத்தவும் கொடுத்தனர்.

உதவியின் மாநில வரிப்பகிர்வைப் பார்க்கும்போது, மகாராஷ்டிரம், தமிழ்நாடு, மேற்கு வங்கம். இம் மூன்று மாநிலங்களும் இன்றும் மற்றவைகளைவிட மிகுதியாக உதவி பெற்றுள்ளன. வளர்ச்சி குன்றிய ஆந்திரப் பிரதேசம், அஸ்ஸாம், பீகார், மத்தியப் பிரதேசம், ஒரிசா, உத்திரப்பிரதேசம் போன்ற மாநிலங்களில் கார்ப்பரேஷன் இப்பொழுது அதிக கவனம் செலுத்தி வருகின்றது. 1968-69-ல் இந்த மாநிலங்கள் மொத்தத்தில் 22.9 சதவீதம் உதவியைப் பெற்றன. இந்த மாநிலங்களில் தொழில் வளர்ச்சிக்குத் தவிர்க்க முடியாத அவசியம் இருக்கின்றது என்பதைக் கார்ப்பரேஷன் உணர்ந்து இதற்குத் தக்க ஏற்பாடுகளைச் செய்து வருகின்றது. இந்த மாநிலங்களுக்குக் கார்ப்பரேஷன் 'மென்மைக் கடன்களை'க் கொடுக்கின்றது; வட்டிச் சலுகைகளையும் கொடுக்கின்றது; அடைமானப் பண்டங்களின் தள்ளுபடிப் பகுதியைக் குறைத்துள்ளது; கடன் அடைபட

[1] Twenty first Annual Report of the I.F.C., 30 June 1969.

வேண்டிய காலத்தையும் அதிகரித்துள்ளது.[1] மென்மைக் கடன் கொடுப்பது 'வளர்ச்சிப் படத்தின் முழு வடிவில் இணைந்துள்ள ஒரு பகுதியாகிவிட்டது.[2] பன்னாட்டு வளர்ச்சிக் கழகமும், ஆசிய வளர்ச்சி வங்கியும் மென்மைக் கடன் கொடுக்கும் பழக்கத்தைப் பின்பற்றுகின்றன. கார்ப்பரேஷனும் இவைகளைப் பின்பற்றுவது சாலச் சிறந்ததாகும். ஆனால், மென்மைக் கடன் கொடுக்கும் ஆர்வத்தில் அது திட்டங்களைப் பரிசீலனை செய்யும் போது தன் மதிப்பீட்டைத் தளர்த்தலாகாது. நிதிபற்றிய நிபந்தனைகளை மட்டுமே அது தளர்த்தலாம். மாநில அரசாங் கங்களின் ஒத்துழைப்பையும் அது பெறவேண்டும். உள் ளமைப்புச் சாதனங்களை வளர்க்கவேண்டும், தொழில் துணிவுத் திறமையையும் பரவலாக அமைத்தல் வேண்டும். கார்ப்பரேஷ னுடைய செயல்களை மதிப்பீடு செய்யும்போது சர்க்கரை, துணித் தொழில்களுக்குக் கூட்டுறவுத் துறையில் அது கடனுதவிசெய்யும் போது நிகழ்ந்த அதன் கடிய அனுபவத்தைக் குறிப்பிடல் வேண்டும். 1969ஆம் ஆண்டு ஜூன் 30வ வரை கார்ப்ப ரேஷன் கொடுத்த எச்சக் கடன் தொகை ரூ. 64.14 கோடி யாகும். மொத்தத் தொகையாகிய ரூ. 321.47 கோடியில்மேலே குறிப்பிட்ட தொகை 20 சதவீதமாகும். 9 சர்க்கரை ஆலைகள் 1959ஆம் ஆண்டு ஜூன் 30 முடிய ரூ. 38.77 லட்சம் முதலையும், ரூ. 63.26 லட்சம் வட்டியையும் செலுத்தத் தவறி விட்டன. துணி உற்பத்திக் கூட்டுறவுச் சங்கங்கள் கடனுத விக்கு மனுச்செய்தன. இவைகளுடைய நிதி, வர்த்தக சாத்தியக் கூறுகள் பற்றிய ஐயப்பாடுகள் எழுந்தன. எனவே இத்தகைய கூட்டுறவுச் சங்கங்களுக்கு மாநில, மைய அரசுகளின் உறுதியை 50:50 என்ற சதவீதத்தில் பெருமல் கார்ப்பரேஷன் கடன் கொடுக்க மறுக்கின்றது.[3] சர்க்கரை உற்பத்திக் கூட்டுறவுச் சங்கங்களுக்கு மாநில அரசு உதவிபுரிய, அதாவது உறுதி கொடுக்க முன்வரவில்லை. வாங்கிய நிறுவனங்கள் கடனைத் திருப்பிக்கொடுக்கத் தவறியவுடன், கார்ப்பரேஷனுடைய அழைப்புக்கிணங்கி உறுதிகொடுத்த சில மாநில அரசுகள் அத் தொகையைக் கார்ப்பரேஷனுக்குக் கொடுக்கத் தவறிவிட்டன. அடைமானம் வைத்த பொருள்களை விற்பனை செய்வதற்காகக் கார்ப்பரேஷன், உறுதிகொடுத்த மாநிலங்கள்மீது சட்டபூர்வமான

[1] Statement of the Chairman at the Twenty-first Annual General Meeting of the I.F.C. Sept. 25, 1969, p. 6.

[2] Speech of the President, Asian Development Bank at Makati Rotary Club, January 24, 1967.

[3] Statement of the Chairman at the 21st Annual General Meeting of the I.F.C. September 25, 1967.

நடவடிக்கை எடுக்கவேண்டிய இக்கட்டான நிலை ஏற்பட்டது.[1] கூட்டுறவு நிறுவனங்களுக்குக் கொடுத்த கடனைத் திருப்பிப்பெற கார்ப்பரேஷனுக்கு மாநில அரசுகள் உதவி புரியவேண்டும். அவை கொடுத்த உறுதி நிபந்தனையற்ற முறையில் காப்பாற்றப் படவேண்டும். அவை இறுதி நிலையில் ஏற்கக்கூடிய பொறுப்பாக இருத்தல் கூடாது.

தொ. நி. கா. வளர்ச்சி வங்கித் தொழிலை முதன் முதலில் ஆரம்பித்த ஒரு தொடக்க காலத்து நிறுவனம். 21 ஆண்டுக் காலம் பணி புரிந்த காரணத்தால் ஏராளமான அனுபவத்தையும் திறமையையும் கொண்டிருக்கின்றது. பயிற்சிபெற்ற, திறமை வாய்ந்த அலுவலர்கள் பலர் பணி புரிகின்றனர். ஆயினும் பொதுத்துறை நிறுவனங்கள் பற்றிய பார்லிமெண்டுக் குழுவும், (Parliamentary Committee on Public Undertaking 1968-69), லைசென்ஸ் கொள்கை விசாரணைக் குழுவும் (Licensing Policy Enquiry Committee) கார்ப்பரேஷன் இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கியுடன் இணைய வேண்டும் என்று பரிந்துரைத்துள்ளன. இது ஒரு விந்தையான சிபாரிசாகும்.[2] இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி (Industrial Development Bank of India) (இ. தொ. வ. வ.) ஒரு புதிய நிறுவனம். அனுபவத்தையும் ஆற்றலையும் அது இனித்தான் பெற வேண்டும். தொ.வ. கார்ப்பரேஷனையும், இ. தொ. வ. வங்கியையும் இணைப்பதால் ரிசர்வ் வங்கியின் பொறுப்பு மேலும் மிகுதி யடையும். ஏற்கெனவே ரிசர்வ் வங்கி அதிக வேலைப் பளுவைக் கொண்டிருக்கின்றது. மைய வங்கி, வளர்ச்சி வங்கியைத் தன் நிருவாகத்தில் கொண்டிருப்பதை இந்நூலாசிரியர் வன்மையாகக் கண்டித்திருக்கின்றார். கனடா நாட்டைத் தவிர இப் பழக்கம் உலகில் வேறெங்கும் கிடையாது. இந்தியாவில் இது மைய வங்கியின் இயக்கத்தைப் பாதித்துவிட்டது என்று நூலாசிரியர் குறிப்பிட்டுள்ளார். இ. தொ. வ. வங்கி தோன்றிய காலத்திலிருந்தே இவ்விணைப்பு ஏற்படலாம் என்று நாங்கள் அஞ்சுகிறோம். இ. தொ. வ. வங்கிச் சட்டத்தின் 38ஆவது ஷரத்தும், இரண்டாவது ஷெடியூலின் முதல் 4 பகுதிகளும் அவை பற்றிய குறிப்புகளும் ஆபத்தாக இருந்தன. அவை இ. தொ. நி. கார்ப்பரேஷன் இ. தொ. வ. வங்கியுடன் இணைவதற்கு இடம் கொடுத்தன. இ. தொ. வ. வங்கி தோன்றிய பிறகு கார்ப்பரேஷனுடைய தலைவர், அதன்

[1] Statement of the Chairman at the 20th Annual General Meeting of the I.F.C. 26 September, 1968, pp 6 7.

[2] தொ. நி. கார்ப்பரேஷனுடைய 21–வது பொதுக் கூட்டத்தில் தலைவர் விடுத்த அறிக்கை, 25 செப்டம்பர், 1969, p. 10.

சாசனம் திருத்தப்படும், கார்ப்பரேஷன் முன்னிலும் அதிகப் பொறுப்பை ஏற்கக்கூடும் என்று நம்பினர். ஆனால் நாங்கள் அவரை (அதிக நம்பிக்கை கொள்ள வேண்டாமென்று) எச்சரித்தோம். தலைவர் தவறான எண்ணம் கொண்டிருக்கின்றார். தொ. நி. கா. இனி இராது' என்றோம்.[1] நாங்கள் கொடுத்த இவ்வெச்சரிக்கை தீர்க்கதரிசனமாயிற்று. வளர்ச்சியடையும் நாடுகளிலுள்ள நிதி நிலையங்களுள் மிகச் செம்மையானதைச் சேதப்படுத்தும் இயல்பை நாட்டின் அரசு கொண்டிருக்கின்றது. பதினான்கு பெரிய வங்கிகளை நாட்டுடைமையாக்கினர். மிகவும் வளர்ச்சி குன்றிய நாடுகளிலுள்ள நிதி நிலையங்களுள் நேர்த்தியான தொ. வ. வங்கியை இப்பொழுது இ. தொ. வ. வ. யுடன் இணைத்தனர். இ. தொ. வ. வ. தொழில் நிதிக் கார்ப்பரேஷனைத் தன்னுடன் இணைப்பதைவிடக் கார்ப்பரேஷன் வங்கியைத் தன்னுடன் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று நாம் பரிந்துரைக்கின்றோம். தொ. வ. வங்கி தோன்றியதால் பற்பல நிதி நிலையங்கள் கிளம்பும் நிலை ஏற்பட்டுள்ளது. இக் குறைபாட்டை மேற்குறிப்பிட்டுள்ள சிபாரிசு நீக்கும்.

### இந்தியத் தொழில் கடன், முதலீட்டுக் கார்ப்பரேஷன் (இ. தொ. க. மு. கா) (The Industrial Credit and Investment Corporation of India I.C.I.C)

இ. தொ. க. மு. கார்ப்பரேஷன் முற்றிலும் தனியார் துறையிலுள்ள வளர்ச்சி நிதி நிறுவனம். ஆகையால் இதன் அமைப்பு தொ. நி. கார்ப்பரேஷனுடைய அமைப்பிலிருந்து மாறுபட்டிருக்கின்றது. வளர்ச்சியடைந்து கொண்டிருக்கும் நாடுகளிலுள்ள தனியார் நிறுவனங்களுக்கு நிதியுதவி நல்க உலக வங்கி அண்மையில் ஒரு புதிய முறையைக் கையாளுகின்றது என்று நாம் குறிப்பிட்டோம். இ. தொ. க. மு. கார்ப்பரேஷன் புதிய முறையைப் பின்பற்றுகின்ற நிறுவனம். அதன் தொடக்க கால மூலதனம் ரூ. 5 கோடியை ஆங்கிலேய, அமெரிக்க முதலீட்டு நிலையங்களும், இந்தியப் பாங்குகளும், இன்சூரன்சு கார்ப்பரேஷனும், பொது மக்களும் செலுத்தினர். இந்திய அரசு வட்டி இல்லாத கடன் ரூ. 7.5 கோடியையும், உலக வங்கி 10 மிலியன் டாலர் கடனையும் இதற்கு அளித்துள்ளன. தொடக்க காலத்தில் தொ. நி. கா. போதிய அன்னியச் செலாவணியைக் கொள்ளாததால் தன் வேலையைச் சரிவர ஆற்ற முடியவில்லை. உலக வங்கி இ. தொ. க. மு. கார்ப்பரேஷனுக்கு ஆரம்ப காலத்தில் கொடுத்த

[1] இந் நூலாசிரியர் எழுதியுள்ள 'Theory and Practice of Developmen Banking' (1965) என்ற நூலைப் பார்க்கவும். பக்கம் 147.

கடனுதவி அதற்குத் தொழில் நிதிக் கார்ப்பரேஷன் பெருத தனி வசதியைக் கொடுத்தது. 1968ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் முடிய இ. தொ. க. மு. கார்ப்பரேஷன் உலக வங்கியிடம் 153.93 டாலரைக் (ரூ. 11995 லட்சம்) கடனுகப் பெற்றது. ஜெர்மானியக் கிரெடிட்டன்ஸ்டால்ட் (Kreditanstalt) என்ற நிலையத்திடமிருந்து 72.50 மிலியன் டாலர் (ரூ. 1.359 லட்சம்) மதிப்புள்ள ஏழ கடன்களைப் பெற்றது. தொ. க. மு. கார்ப்பரேஷன் கையாண்ட முறைகள் நெகிழ்ச்சியுடையனவாக இருந்தன. தொடக்க காலத்திலிருந்தே அது கடன் கொடுப்பது மட்டுமல்லாமல் பங்குத் தொகையை அளிக்கும் தொழிலையும் மேற்கொண்டது. தன் வாடிக்கைக்காரர்களாகிய தொழிலகங்களுக்கு அது தொழில்நுட்ப ஆலோசனைகளையும், துணைப் பணிகளையும் அளிக்கவேண்டிய அமைப்புப் பெற்றிருந்தது. தொ. நி. கார்ப்பரேஷனைத் தொடங்கியவர்கள் அதற்கு இவ்வதிகாரங்களைக் கொடுக்கவில்லை. இக் கோணத்திலிருந்து தொ. க. மு. கா. தொழில் நிதிக் கார்ப்பரேஷனைவிடச் சிறந்த வளர்ச்சி வங்கி என்று கூறலாம். தொ. க மு. கா. நிதியுதவி மட்டும் அளிக்கும் ஒரு நிலையமல்ல; முதலீட்டுத் திட்டத்தில் சிறந்த பங்கேற்கும் ஒரு பங்குதாரர் என்று அதன் தலைவர் கருதுகிருர்.[1] மேலும் தொ. க. மு. கா. தான் கொடுக்கும் கடனுக்கு அடையாளமாக, இத்தகைய பத்திரங்களைத்தான் கொள்ள வேண்டும் என்ற கட்டுப்பாடில்லை.

1955 முதல் 1964 வரை அது கொடுத்த மொத்தக் கடன் ரூ. 102.29 கோடியாகும். இத்தொகை தொ. நி. கா. கொடுத்ததைவிடக் குறைவாக (அந்நிலையில்) தோன்றலாம். ஆனல் அப்போது தொ. நி. கா. 16 ஆண்டு அனுபவத்தைப் பெற்றிருந்தது. தொ.க.மு. கா. 10 ஆண்டுகளே பணிபுரிந்திருந்தது. தொ. க. மு. கார்ப்பரேஷனுக்கும், தொ. நி. கார்ப்பரேஷனுக்கும் திட்டவட்டமான மாறுபாடுகள் உள. 1955 முதல் '64 வரை தொ. க. மு கா. ரூ. 3.42 கோடியைப் பங்கு முதலாகக் கொடுத்திருந்தது, தொ. நி. கா. பங்கு முதலையே அளிக்கவில்லை. 1963, 1964ஆம் ஆண்டுகளில் தொ. க. மு. கா. கொடுத்த நிதியுதவியில் சர்க்கரைத் தொழில் 2.67, 2.2 சதவீதங்களையே பெற்றது. ஆனல் தொ. நி. கா. 32.3, 22.3 சதவீதங்களைச் சர்க்கரை ஆலைகளுக்குக் கொடுத்தது என்ற உண்மை நம் கவனத்தை ஈர்க்கின்றது. தொ. க. மு. கார்ப்பரேஷனிடம் உதவி பெற்ற தொழில்களுள் உலோகத் தொழில் உச்ச நிலையி

[1] இ. தொ.க.மு. கார்ப்பரேஷனுடைய தலைவர் பங்குதாரர்கள் ஆண்டுக் கூட்டத்தில் (1963. நிகழ்ந்திய உரை. பக்கங்கள் 4–9.

லுள்ளது; மேற்குறிப்பிட்ட காலத்தில் 22.72, 22.8 சதவீதக் கடன்களைப் பெற்றன. அடுத்த இடத்தைப் பெற்றுள்ள இரசாயனத் தொழில் 16.0, 14.7 சதவீதக் கடன்களைப் பெற்றது.[1] அண்மையில் (1969) வெளிவந்த இருப்புநிலைக் குறிப்பிலிருந்து (Balance Sheet) கீழ்க் கண்ட விவரங்களைப் பெறலாம். இரசாயனத் தொழிலும், அதன் பண்டங்களும் பெற்ற பங்கு 20.6% ; உலோகத் தொழில் 10.0% ; பொறிவழியாக்க எந்திரங்கள் 6.5%; மோட்டார், சைக்கிள் தொழில் 6.6%; துணி 6.5%. தொ. க. மு. கா. தொடங்கிய காலத்திலிருந்து 1972ஆம் ஆண்டு மார்ச் மாதம் முடிய 702 நிறுவனங்கள் ரூ. 344.7 கோடி நிதியுதவி பெற்றன.[2] இதைத் தொழில் நிதிக் கார்ப்பரேஷனுடன் ஒப்பிடும்போது, நுகர்வோர் பண்டத் தொழில்கள் குறைவான அளவு உதவியையே இதனிடம் பெற்றுள்ளன. இது மூலதனத் தொழில்களுக்கே பெரும்பாலும் உதவி செய்துள்ளது. தொ. நி. கார்ப்பரேஷனைவிட இது மூலதன மார்க்கட்டின் நடவடிக்கைகளில் அதிகப் பங்கேற்றது. சிறந்த முதலீடுகளைச் செம்மையான முறையில் செய்ய இது முனைந்தது.

**மாநில நிதிக் கார்ப்பரேஷன்கள் (மா.நி.கா) (State Financial Corporations—S.F.C's)**

தொ. நி. கார்ப்பரேஷனும், தொ. க. மு. கார்ப்பரேஷனும் பெரிய தொழிலகங்களுக்கு நீண்டகாலக் கடன்களைக் கொடுப்பதற்காக நிறுவப்பெற்றன. மாநில நிதிக் கார்ப்பரேஷன்கள் (மா. நி. கா.) சிறு, நடுத்தரத் தொழில்களுக்குத் தவணைக் கடன்களை வழங்குவதற்காக மாநில அளவில் அமைக்கப்பெற்றவை. இவைகளுக்கான சட்டம், 1948ஆம் ஆண்டு நிறைவேறிய தொ. நி. கார்ப்பரேஷன் சட்டத்தை ஒத்திருக்கின்றது. பிராந்தியக் கார்ப்பரேஷன்களை அமைக்க வழி வகுக்கும் இச் சட்டம், 1948 ஆம் ஆண்டுச் சட்டத்தின் குறைபாடுகளைக் கொண்டிருக்கின்றது. சென்னைத் தொழில் முதலீட்டுக் கார்ப்பரேஷன் உள்பட (Madras Industrial Investment Corporation) [செ.தொ.மு.கா] 18 கார்ப்பரேஷன்கள் 1968-ல் இயங்கின. அவை செய்யக்கூடிய அலுவல்களும், கையாளும் செயல்முறைகளும் தொழில் நிதிக் கார்ப்பரேஷனை ஒத்திருந்தன. ஆனால் சில மாறுதல்களும் உள. தனி வரையிட்ட கம்பெனிகளும் (Private Limited Companies), கூட்டுக் கம்பெனிகளும் (Partnerships) தனி முதலாளிகளும்

[1] இ. தொ. க. மு. கா. 9ஆவது, 10ஆவது ஆண்டறிக்கைகள் 1963, 1964, பக்கம் 31. பக்கம் 37.

[2] Reserve Bank of India, Report on Currency and Finance 1971.72, பக்கம் 150.

மா. நி. கார்ப்பரேஷன்களிடமிருந்து உதவி பெறலாம். மா. நி. கா. சட்டத்தைப் பலமுறை திருத்தியுள்ளனர். இதன் மூலம் இச் சட்டத்தை, தொ. நி. கா. சட்டத்தைப் போல் அமைத்தனர். ஆனால் இவை பங்கு முதலை அளிக்கும் உரிமையை இன்றும் பெற வில்லை; 'சரியான முதலை' மட்டுமே இவை கொடுக்கலாம். மா. நி. கார்ப்பரேஷன்களுடைய அமைப்பு மாறாமல் இருக்கின்றது. தொ. நி. கார்ப்பரேஷனுடைய கவுரவத் தலைவர் (Honoraty Chairman) இருந்த இடத்தில் இப்பொழுது முழு நேர ஊதியம் பெறும் தலைவர் இருக்கின்றார். நிருவாக இயக்குநருக்குப் பதிலாக இப்பொழுது பொது மேலாளர் (General Manager) இருக்கின்றார். நிருவாகக்குழுவுக்குப்பதிலாக இப்பொழுது பொதுக்குழு (Central Committee) இயங்குகின்றது. ஆனால் மா. நி. கார்ப்பரேஷன்களின் அமைப்பில் மாறுதல்கள் ஒன்றும் இல்லை.

மா. நி. கா. தம் தொழிலுக்கான தொகைகளை, மூலதனம். பத்திரங்கள், டிபெஞ்சர் வெளியீடு, ரிசர்வ் வங்கி கொடுக்கும் கடன், காப்பு நிதிகள், தவணைடெப்பாசிட்டுகள் முதலியவைகள் மூலம் பெறுகின்றன. 1972ஆம் ஆண்டின் இறுதியில் 18 மா. நி. கார்ப்பரேஷன்களுடைய மொத்தச் செலுத்திய முலதனம் ரூ. 23.2 கோடியாக இருந்தது. மா. நி. கார்ப்பரேஷன்கள், மாநில மைய அரசுகள் தம் பொதுக் கடன் திட்டங்களை முடித்த பின், தம் பத்திரங்களை வெளியிடும். இந்த நிலையில் அவை தம் பணிகளை ஆற்றுவதற்குத் தேவையான தொகைகளைத் திரட்டுவது கடினம். இ. தொ. வ. வ. தோன்றியபின் அது உச்சநிலை வங்கியாகப் பணிபுரிகின்றது. எனவே அது மா. தொ. நி. கார்ப்பரேஷன்களுடைய பத்திரங்களை வாங்குகின்றது. 1972ஆம் ஆண்டு மார்ச் மாதம் இ. தொ. வ. வ. ரூ. 24.5 கோடி மதிப்புள்ள மீள்நிதியை மா. நி. கார்ப்பரேஷன்களுக்குக் கொடுத்தது. அதே ஆண்டு அவை ரிசர்வ் வங்கியிடமிருந்து ரூ. 4.68 கோடியையும், மற்றக் கடன்கள் ரூ. 46.83–ஐயும் பெற்றன.[1] மா. நி. கார்ப்பரேஷன்கள் முன்னர் 5 ஆண்டுத் தவணை டெப்பாசிட்டுகளை ஏற்றன, இப்பொழுது ஓராண்டு டெப்பாசிட்டையும் ஏற்கின்றன. உபரி நிதி திரட்டுவதற்குப் பெரும்பாலான மாநில நிதிக் கார்ப்பரேஷன்கள் பத்திர வெளியீட்டைவிடத் தவணை டெப்பாசிட்டையே விரும்புகின்றன. பத்திர வெளியீட்டுக்குச் செலவு அதிகம் பெய்யவேண்டும். மேலும் இவ்வாறு திரட்டும் நிதியைப் பயன்படுத்தும்வரை வங்கி

[1] Report on Currency and Finance, Reserve Bank of India for the year 1971-72, Statement 45.

களில் வைத்திருப்பதில் இடர்ப்பாடுகள் உள. மா. நி. கார்ப்பரேஷன்கள் பற்றிய ஆய்வு செய்த குழு ஒன்று அவை நிதி திரட்டுவதற்கு மேலும் அதிகமான அளவில் டெப்பாசிட்டுகளை ஏற்க வேண்டும் என்று குறிப்பிட்டுள்ளது. ஆனால், அவைகளுடைய டெப்பாசிட்டுகள் கொண்டுள்ள நிபந்தனைகள் பொது மக்களுக்குக் கவர்ச்சிகரமாக இல்லை. மா. நி. கார்ப்பரேஷன்கள் ஏற்கும் டெப்பாசிட்டுகளுக்கு அவை கொடுக்கும் ரசீதுகளை, டெப்பாசிட்டர்கள் பிறருக்குச் சட்டபூர்வமாக மாற்றும் உரிமையை வழங்கலாம்.[1] இவ்வாறு செய்தால் டெப்பாசிட்டுகள் கவர்ச்சிகரமாகிவிடும் என்று ஆய்வுக் குழு குறிப்பிட்டிருக்கின்றது. இச் சிபாரிசைப் பரிசீலனை செய்யலாம்.

அமெரிக்காவிலும், ஆஸ்திரேலியாவிலும் வர்த்தகப் பாங்குகள் தவணை டெப்பாசிட்டுகளை ஏற்றுச் செலாவணித் தன்மையுள்ள இரசீதுகளைக் கொடுக்கின்றன. இதே முறையில் மாநில நிதிக் கார்ப்பரேஷன்கள் குறைந்தபட்சத் தொகைகளுக்கு இத்தகைய இரசீதுகளைக் கொடுக்க அனுமதி பெறலாம். மா. நி. கார்ப்பரேஷன்களுடைய டெப்பாசிட்டுகள் அண்மையில் பெருகியுள்ளன. 1964ஆம் ஆண்டு மார்ச் மாதம் அவை ரூ. 9.59 கோடியாக இருந்தன. 1972 மார்ச்சுக்குள் அவை ரூ. 13.1 கோடியாகப் பெருகிவிட்டன.

சென்னை முதலீட்டுக் கார்ப்பரேஷன் உள்பட எல்லா மா. நி. கார்ப்பரேஷன்களும் கடந்த 3 ஆண்டுகளில் கொடுத்த கடன் பற்றிய விவரங்களைப் பின்வரும் பட்டியலில் காணலாம்.

பட்டியல்[2]

(கோடி ரூபாயில்)

| | 1971·72 | 1966·67 | 1967·68 |
|---|---|---|---|
| அனுமதித்த தொகை | 69·54 | 19·96 | 18·80 |
| வழங்கிய தொகை | 38·84 | 17·30 | 15·30 |

1966-67-லிருந்து அனுமதி பெற்ற கடன் தொகை தொடர்ந்து கூடியுள்ளது என்பதைக் காணலாம்.

தொழில்வாரிப் பங்கீட்டைப் பார்க்கும்போது, கார்ப்பரேஷன்கள் கொடுத்த உதவி பெரும்பாலும் துணி உற்பத்தித்

[1] Report of the working group on State Financial Corporations (Reserve Bank of India) for the year 1964, p. 1.

[2] Report on Currency and Finance, Reserve Bank of India, 1971-72, Statement 46.

தொழிலுக்கே சென்றது (22·40%). உணவுப் பண்டங்களைப் பதப் படுத்தும் தொழில் 18·25% உதவி பெற்றது. இயந்திர உற்பத்தி 8·46 சதவீதத்தையும், இரசாயனப் பண்டத் தொழில் 7·84 சத வீதத்தையும், அடிப்படை உலோகத் தொழில் 7·11 சதவீத தையும் பெற்றன.[1]

### இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி (The Industrial Development Bank of India)

இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி (இ. தொ. வ. வ) 1964ஆம் ஆண்டு நிறுவப்பெற்றது. மற்ற வளர்ச்சி வங்கிகள்போல் அல்லாமல் இ.தொ.வ. வங்கியை இந்திய மைய வங்கியாகிய ரிசர்வ் வங்கி தன் வசம் கொண்டிருக்கின்றது. சுமார் 70 வளர்ச்சி வங்கிகள் உலகின் பற்பல இடங்களில் இயங்குகின்றன. இவைகளுள் இ. தொ. வ. வங்கியையும், கனடாவின் வங்கியையும் தவிர வேறென்றும் மைய வங்கியின் நிருவாகத்தில் இல்லை. கனடா நாட்டின் உதாரணத்தை நம் நாடு பின்பற்றுகிறது. ஆனால் இவ்வாறு கனடாவுடன் நம் முறையை ஒப்பிடுவது முற்றிலும் சரியல்ல. கனடா வளர்ச்சி மிகுந்த நாடாகும், ஆகையால் அந் நாட்டின் வளர்ச்சி வங்கித் தொழில் வளர்ச்சியைத் துரிதப்படுத்த வேண்டிய அவசியம் இல்லை. நாட்டின் வளர்ச்சியைத் தூண்டுவதோ அல்லது பெரு வாரித் தொழில்களுக்கு நிதியுதவி யளிப்பதோ அதன் சிறப்பான நோக்கமல்ல. இரண்டாவது உலகப்போருக்குப்பின் நிறுவி யதைப்போல், சிறு தொழிலகங்களை அமைத்துப் போரிலிருந்து விடுபட்டு வருவோருக்கு வேலை லாய்ப்புகளை ஏற்படுத்துவதே கனடிய நிறுவனத்தின் முக்கியமான நோக்கமாகும். மேலும் கனடிய ரிசர்வ் வங்கி இந்திய ரிசர்வ் வங்கி செய்வதுபோல் மைய வங்கித் தொழிலுடன் தொடர்பற்ற வேலைகளை ஏற்கவேண்டாம். நாம் முன்னர் குறிப்பிட்டதைப்போல் நாட்டின் மைய வங்கி வளர்ந்து முதிர்வு பெறும்போது மற்ற மைய வங்கித் தொழிலல் லாத அலுவல்களைக் கைவிட வேண்டும். இவ்வாறு ஆஸ்திரேலிய மைய வங்கி செய்கின்றது. ஆனால் இந்திய ரிசர்வ் வங்கி செய்யவில்லை. இதற்கு மாறாகத் தொடர்பற்ற பொறுப்பு கள் பலவற்றை மேற்கொண்டு தன் பிரதானத் தொழில் நலிவுறுவதற்கு ரிசர்வ் வங்கி இடம் கொடுத்துள்ளது. ரிசர்வ் வங்கியின் நிருவாகக் குழுவினர் திறமையையும், அனுபவத் தையும். வேலையில் ஆர்வத்தையும் கொண்டிருக்கின்றனர் என்பதில் ஐயப்பாடேதுமில்லை. ஆனால் முழு நேர வளர்ச்சி

[1] மா தி. கா. பற்றிய ஆய்வுக் குழுவின் அறிக்கை பட்டியல் IX, பக்கங்கள் 94–95.

வங்கியை உருவாக்கி அதை இயக்கத் தேவையான கொள்கைகளை வகுக்கத்தக்க அனுபவத்தையோ அல்லது திறமையையோ அவர்கள் பெறவில்லை.[1]

இ. தொ. நி. கார்ப்பரேஷன் தொ. க. மு. கார்ப்பரேஷன் என்ற இரு நிலையங்கள், பெருவாரித் தொழிலகங்களுக்கு நிதியுதவி செய்வதற்கென அமைக்கப்பெற்றபோதிலும் நாட்டின் 4ஆவது, 5ஆவது ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றுவதற்குத் தக்க அமைப்பையும் தகுதியையும் இவை பெறவில்லை என்ற கருத்து நிலவியது. அடுத்து வரும் ஆண்டுகளில் நீண்ட, நடுத்தரகாலக் கடனுதவியளிக்க ஓர் உச்சநிலை நிலையத்தை நிறுவவேண்டியிருந்தது. விரைவில் வளர்ச்சி பெறுவதற்கு இத்தகைய வங்கி தேவையாயிற்று.

இ. தொ. வ. வ. மூன்று வகைப் பணிகளைச் செய்ய வேண்டும் : (1) தொழில் கடன்களுக்கு மீள்நிதி (refinance) யளிப்பது. (2) நடுத்தரகால ஏற்றுமதிக் கடன்களுக்கு மீள் நிதி வசதியளிக்கும் நிலையமாகத் தொண்டு புரிவது. (3) தனியார் துறைத் தொழிலகங்களுக்குக் கொடுக்கும் கடன்களுக்கு உறுதியளிப்பது. தவணைக் கடன்கள் கொடுக்கும் நிலையங்களுடைய பங்குகளையும், கடன் பத்திரங்களையும் நேரிடையாக வாங்குதல்.

மீள்நிதியளிக்கும் நிலையம் என்ற முறையில், தொழில் நிதிக் கார்ப்பரேஷன், தொ. க. மு. கா, மா. நி. கார்ப்பரேஷன்கள், ஷெட்யூல் வங்கிகள், மாநிலக் கூட்டுறவு வங்கிகள் முதலியவை கொடுக்கும் தவணைக் கடன்களுக்கு அது மீள்நிதி யளிக்கின்றது. நிலையான சொத்துகளை அடைமானமாகக் கொண்டு, ஏழாண்டுகளுக்கு மேற்படாத முதிர்வு (maturity) கொண்டிருக்கும் தவணைக் கடன்களுக்கே மீள்நிதி கொடுக்கலாம். சில அசாதாரணச் சந்தர்ப்பங்களில் தவணைக் காலம் 10 ஆண்டுகளாக இருக்கலாம். ஷெடியூல், கூட்டுறவு வங்கிகளுடைய தவணை காலம் 10 ஆண்டுகளாக இருக்கலாம். மீள்நிதித் தொகை குறைந்தபட்சம் ரூ. 5 லட்சமாக இருத்தல் வேண்டும். 'கடன் உறுதித் திட்டத்தின்' கீழ் (Credit Guarantee Scheme) சிறு தொழில்களுக்குக் கொடுக்கப்படும் தொகைகள் ரூ. 5 லட்சத்திற்குக் குறைவாக இருக்கலாம். ஒரு தனி நிறுவனத்திற்கு ரூ. 100

[1] இந் நூலாசிரியர் எழுதியுள்ள 'Theory and Development Banking' (1965), "Central Banking in Emerging Countries. (1967), என்ற நூல்களைப் பார்க்கவும்.

லட்சத்திற்குமேல் கடன் கொடுக்கக்கூடாது. தகுதியுள்ள கடன்கள் எல்லாவற்றிற்கும் 80 சதவீதம்வரை இ. தொ. வ. வ. கடன் கொடுக்கின்றது. அதன் கடனுதவி பரவலாக இருக்க வேண்டும் என்பதற்காக இவ்வேற்பாட்டைச் செய்துள்ளனர். அது வசூல் செய்யும் வட்டி வீதம் 6½ சதவீதம். இரண்டாவது வகையில் பொறியியல், மூலதனப் பண்டங்களை ஏற்றுமதி செய்யும் தொழில்களுக்கு 6 மாதம் முதல் 5 ஆண்டுகளுக்குக் கொடுக்கும் கடன்களுக்கு மீள்நிதி வசதியளிக்கலாம். மீள்நிதி பெறத் தகுதியுள்ள கடன்களுக்கு அவைகளை வாங்கியோர் ஏற்றுமதிக் கடன் உறுதிக் கார்ப்பரேஷனுடைய (Export Credit Guarantee Corporation) பத்திரத்தைப் (Policy) பெற்றிருக்க வேண்டும். உச்சநிலை நிலையம் என்ற முறையில் அது தவணைக் கடன் கொடுக்கும் நிலையங்களுடைய பங்குகளையும், பத்திரங்களையும் பெற்று அவைகளுக்குக் கடன் கொடுக்க அதிகாரம் பெற்றிருக்கின்றது. தொ. க. மு. கார்ப்பரேஷனுக்கும், மாநில நிதிக் கார்ப்பரேஷன்களுக்கும் அது, தொடக்க காலத்திலிருந்து 1968-69 வரை ரூ. 19.7 கோடி உதவி செய்துள்ளது.[1]

தொ. வ. வங்கியுடைய சாசனப்படி அது கீழ்க்காணும் உதவிகளைச் செய்யலாம்: நேரடிக் கடன் கொடுத்தல், உறுதி கொடுத்தல் (underwriting), பங்குகள், பத்திரங்கள் முதலியவைகளை வாங்குதல், கடன்களுக்கும் தாமதித்துச் செலுத்தும் கட்டணங்களுக்கும் உறுதிகொடுத்தல். இந்த வகையில் புரியும் பணியை அது இறுதிநிலைக் கடன் கொடுப்போராகச் (lender of the last resort) செய்யும் தொண்டாகக் கருதலாம். இ.தொ.நி.கா, இ.தொ.க.மு.கா, ஆயுள் இன்சூரன்சு கார்ப்பரேஷன் முதலியவைகளுடன் அது கூட்டுறவு கொண்டு பணிபுரிகின்றது. பெட்ரோ இரசாயனத் தொழில், கலவை (alloy), சிறப்பு எஃகு (special steel), எரு உற்பத்தி முதலிய நவீனத் தொழில்களுக்கு அதன் உதவி கிடைத்துள்ளது. பழைய தொழில்கள் மற்ற நிலையங்களுடைய உதவியைப் பெற்றன.

1964 ஜூலை முதல் 1971 ஜூன் வரை அது கொடுத்த கடனுதவி பற்றிய விவரங்களைப் பின்வரும் பட்டியலில் காணலாம்.[2]

[1] தொ. வ. வங்கியின் இயக்குநர் குழுவுடைய 7ஆவது ஆண்டு அறிக்கை.

பட்டியல்

(கோடி ரூபாயில்)

| | | அனுமதித்தது | வழங்கியது |
|---|---|---|---|
| 1. | நேரடிக்கடன் (ஏற்றுமதி நீங்கலாக மற்றவைக்கு) | 148.1 | 89.6 |
| 2. | ஏற்றுமதிக் கடன் | 29.1 | 14.9 |
| 3. | உறுதிகொடுத்தும் தொழில் பங்கு, பத்திர முதலை யளித்தது | 28.5 | 19.5 |
| 4. | தொழில் கடனுக்குக் கொடுத்த மீள்நிதி | 123.3 | 118.1 |
| 5. | ஏற்றுமதிக்கு மீள்நிதி | 24.0 | 16.6 |
| 6. | தள்ளுபடி செய்த உண்டியல்கள் | 89.9 | 77.0 |
| 7. | நிதிநிலையங்களுக்கு அளித்த பங்கு, பத்திர முதல் | 23.3 | 22.6 |
| | மொத்தம் 1 முதல் 7 வரை | 466.2 | 358.4 |

கடன்களுக்கும், தாமதித்துச் செலுத்தவேண்டிய தொகைகளுக்கும் அளித்த உறுதித் தொகை ரூ. 29.3 கோடி (அனுமதித்தது), ரூ. 19.1 கோடி (வழங்கியது) — இதையும் மேற்குறிப்பிட்டதுடன் கூட்டிக்கொள்ளவேண்டும்.

எரு உற்பத்தி, அலுமினியத்தொழில், துணி, எந்திர உற்பத்தி, எலக்டிரானிக் உறுப்புகள், பித்தளை, செயற்கை ரெசின் (synthetic resins) முதலிய தொழில்கள் இ.தொ.வ. வங்கியின் உதவியைப் பெற்றன. எந்திர உற்பத்திக்கே (மின் எந்திரங்கள் நீங்கலாக மற்றவை) மிக அதிகமான உதவி — 43 சதவீதம் — 1968-69 கிடைத்தது.[1] முந்தைய ஆண்டுகளுடன் ஒப்பிடும்போது இராசயன துணித் தொழில்களுக்குக் கொடுத்த உதவியின் சதவீதம் கணிசமாகக் குறைந்துவிட்டது.

தனியார் துறை நிறுவனங்களுக்கும், பொதுத் துறை நிறுவனங்களுக்கும் உதவியளிப்பதற்காகவே இ. தொ. வ. வங்கியை அமைத்தனர். தொடக்க காலத்தில் பொதுத் துறை இதன் உதவியை அதிகம் நாடவில்லை. ஆனால் இன்று பழுதான இயந்திரங்களுக்குப் பதிலாகப் புதியவைகளை அமைக்கவும், உற்பத்தியைப் பரவலாக்கவும், பெருக்கவும் மாநில அரசுகள் இதன் உதவியை நாடுகின்றன. தொழில்நுட்ப வல்லுநர் தொழில்களைத் தொடங்கும்போது அவர்களுடைய திட்டங்களை

[1] இயக்குநர் குழுவின் அறிக்கை 1968–69, பட்டியல் 1, பக்கம் 7.

சாத்தியமுள்ளவையாக அமைக்க இது அவர்களுக்கு உதவி புரிகின்றது. மொத்த அடக்கச் செலவில் ஒரு பகுதியை அவர்களுக்குக் கொடுக்கவும் அது முனைகின்றது. எலக்டிரானிக்ஸ், எரு உற்பத்தி இவ்விரு துறைகளிலும் இத்தகைய திட்டங்கள் இரண்டுக்கு உதவி கொடுத்திருக்கின்றது.

இ. தொ. வ. வ. மாற்றத்தை விரும்பாத தன் பழைய கொள்கையைத் திருத்திக்கொண்டுவிட்டது என்பதைக் கடந்த மூன்றாண்டுகளின் ஆண்டறிக்கைகள் புலப்படுத்துகின்றன. 1971-72-ல் நேரடியாகக் கொடுத்த கடனும் உறுதி கூறும் தொகையும் ரூ. 51.3 கோடி, ரூ. 14.6 கோடியாகப் பெருகி விட்டன. மீள்நிதியுதவி ரூ. 30.6 கோடியாக உயர்ந்து விட்டது. நேரடிக் கடன் 1969-70-ல் ரூ. 16.3 கோடியாக இருந்தது. 1971-72-ல் இது ரூ. 65.9 கோடியாக உயர்ந்து விட்டது. 1972ஆம் ஆண்டு ஜூன் வரை அது தொடக்க காலத்திலிருந்து ஏற்றுமதிக்காகக் கொடுத்த கடன் ரூ, 77.4 கோடியாகக் கூடிற்று.[1] அண்மைக் காலத்தில் அது பல இடங்களில் கிளைகளை நிறுவியுள்ளது. 1970-ல் அது பின் தங்கிய மாநிலங்களில் தொழில் கூடங்களை நிறுவும் சாத்தியக் கூறுகளை ஆய்வு செய்யவும், திட்டங்களைத் தீட்டவும் ரிசர்வ் வங்கி, இ.தொ.நி.கா., இ.தொ.மு.கா. தலைமைப் பாங்குகள் (Lead Banks) முதலியவைகளுடன் சேர்ந்து கணக்கெடுப்பு (survey) நடத்தியது. நாட்டின் கீழ்த் திசையில் நலிவுற்ற தொழில்களுக்கு வலிமை யூட்டத் தொழில் சீரமைப்புக் கார்ப்பரேஷனை (Industrial Reconstruction Corporation) அமைத்தது.

[1] எட்டாவது ஆண்டறிக்கை, 1971-72.

# 25. பன்னாட்டுச் செலாவணி முறை : சீர்திருத்தத் திட்டங்கள்

## பன்னாட்டு நாணய நிதி : அதன் செய்முறை பற்றிய மதிப்பீடு

பன்னாட்டு நாணயநிதி முறிந்துவிட்டதா என்பது பற்றிக் கடந்த சில காலத்தில் கருத்து வேற்றுமைகள் இருக்கின்றன. 'பன்னாட்டுச் செலாவணிக் கொள்கையை ஊக்குவித்துச் சச்சரவுகளைத் தீர்க்கும் நிலையமாக' ப்ரெட்டன்வுட்ஸ் (Brettonwoods) வழிமுறை இயங்கத் தவறிவிட்டது, மடிந்துவிட்டது என்றுகூட ஓர் எழுத்தாளர் அண்மையில் குறிப்பிட்டுள்ளார். ப. நா. நிதி பழைய காலத்திய கருவி என்றும் அதில் அங்கம் வகிக்கும் நாடுகள் அதற்காக மிலியன் கணக்கான டாலர்களைச் செலவு செய்துள்ளன என்றும் அவர் குறிப்பிட்டார்.[1] நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளை இடைக் காலத்திற்குப் பிறகு கூட நிதி நீக்க முடியவில்லை. 1950-51-ல் அது சரிவரச் செயல்படவில்லை. மேற்குறிப்பிட்ட பழிச்சொல்லை இதன் விளைவு எனக் கருதலாம். நாணய மாற்றுக் கட்டுப்பாட்டை நீடிக்க விரும்பினால் அங்கத்தினர்கள் உடன்பாட்டின் சரத்துப்படி நிதியைக் கலந்தாலோசிக்கவேண்டும். 'கலந்தாலோசிக்க வேண்டும்' என்ற சொல்லுக்குப் பல முறைகளில் விளக்கம் காண்கின்றனர். அங்கம் வகிக்கும் ஒரு நாடு எடுக்கப் போகும் முடிவைத் தெரிவிக்க வேண்டும் என்பது இங்கிலாந்து நாட்டின் கருத்தாகும். ஆனால் புதிய கட்டுப்பாட்டை அமல் செய்வதற்கோ அல்லது தற்போது உள்ளதை நீடிப்பதற்கோ அனுமதி பெறவேண்டும் என்பது நிதியின் கருத்தும், அமெரிக்கக் கனடா நாடுகளின் கருத்துகளும் ஆகும். நிதியின் பொன் கொள்கை வரலாறு வெற்றிகரமாக இல்லை. அதன் ஆலோசனையை அங்கத்தினர்கள் மறுத்தனர். அவர்கள் அதன் கொள்கையை நிறைவேற்றுவதற்கு நடவடிக்கை எடுக்கவில்லை. அதன் கொள்கை தொழில்நுட்பப் பொருளாதார அடிப்படையில் அமையவில்லை என்று நம்புவதற்கு இடம் இருக்கின்றது. நாணய மாற்றுக் கட்டுப்பாட்டுக் கொள்கை, பொன் கொள்கை,

[1] The Banker, 1951.

தொடக்க நிலை மாற்றுவீதக் கொள்கை முதலிய துறைகளில் அது உடனடியாகச் செயல்படவில்லை, உலக நிறுவனம் காட்ட வேண்டிய அளவு முனைப்பையோ, ஆற்றலையோ துரிதச் செயலையோ அது காட்டவில்லை. லத்தீன் அமெரிக்க நாடுகளில் சில சந்தர்ப்பங்களில் அது செலாவணி வீதத்தை ஸ்திரப் படுத்தியது. இதைத் தவிர அது எப்பொழுதாவது சிறப்பு நிறுவனமாகச் செயல்பட்டுள்ளதா என்று கேட்கவேண்டிய நிலை இருக்கின்றது.

இருபது ஆண்டுகள் நிதி இயங்கிய பின்பு உலகம் 'அசல் பன்னாட்டுநிதி (ப.நா.நி.) யுலகில்' இறங்கவில்லை என்பது வருந்தத் தக்கது என்று பேராசிரியர் சேயர்ஸ் கூறுகின்றார்.[1] நாம் இன்று இறுக்கமான மாற்றுவீத அமைப்பில் (rigid exchange rates) இருக்கின்றோம். ப. நா. நிதியின் உபாயம் இந்த அமைப்பில் பலிக்கவில்லை. நாணய மாற்றுக் கட்டுப்பாடுகளை நீக்கிவிடுவர் என்ற நிதியின் நம்பிக்கை கைகூடவில்லை. இறுதியில் பன்னாட்டு ரொக்க நிலைக்கு (international liquidity) நிதி கணிசமான உதவி புரியவில்லை.

இறுதியில் குறிப்பிட்ட பன்னாட்டு ரொக்க நிலை அண்மை ஆண்டுகளில் பலர் கவனத்தை ஈர்த்துள்ளது. இது பற்றிப் பேசும்போது ப. நா. நிதியைச் சீர்திருத்த வேண்டுமென்றும் அல்லது நிதியைவிடத் திறம்படப் பணிபுரியும் வேறு ஒரு நிறுவனத்தை ஏற்படுத்தவேண்டுமென்றும்கூடச் சிலர் கூறு கின்றனர். தற்போதுள்ள முறையைச் சீரமைக்கப் பல யோசனைகளை அளித்துள்ளனர்.[2] இவைகளில் சில தற்போதுள்ள அல்லது இனி இருக்கக்கூடிய பன்னாட்டுக் காப்பு நிதி எவ்வாறு போதாத நிலையில் இருக்கின்றன என்பதைக் காட்டுகின்றன. அடுத்துவரும் 10 ஆண்டுகளில் உலகப் பொன் உற்பத்தியின் அளவைவிட 5 முதல் 15 மிலியன் டாலர் வரை மிகுதியான அளவு காப்புநிதி தேவைப்படலாம் என்பது ஒரு மதிப்பீடாகும். எவ்வித திட்டமும் இல்லாத நிலையில் பன்னாட்டுப் பணவீக்கமும் நாணய மதிப்புக் குறைப்பும், 1929-ல் இருந்த வர்த்தகக் கட்டுப் பாடுகளும் மீண்டும் ஏற்படலாம்.[3] இங்கிலாந்து, அமெரிக்கா நாடுகளின் பெருகிவரும் வெளிநாட்டுச் செலுத்தும் நிலையின்

[1] R. S. Sayers 'Co-operation between Central Banks', in Three Banks, Review, September, 1963.

[2] Schemes associated with the names of Robert Triffin, E. M. Bernstein, Sir Roy Harrod, Sir Maxwell Stamp, etc.

[3] R. Triffin, Gold and the Dollar Crisis, p. 70.

பற்றுக்குறை ப. நா. நிதிக்கு அபாயகரமாக இருக்கின்றது. அமெரிக்க டாலர் ஊகவாணிகத்தில் சிக்கி வீழ்ச்சியடைந்துள்ளது. டாலரைப் பொன்னாக மாற்றுவதற்குப் பலர் முனைந்தனர். ப. நா. நிதி தோன்றியதிலிருந்து அதுவரை ஏற்படாத பொன் நெருக்கடி 1968-ல் ஏற்பட்டது. நிதியின் முக்கிய உறுப்புகளாகிய நாடுகள் டாலரைக் காத்து, நிதியைச் சீராக அமைத்து நெருக்கடியைத் தீர்க்க முனைந்தன.

**அண்மையில் நிகழ்ந்த பொன் நெருக்கடி : இதைத் தீர்க்க நடவடிக்கைகள்**

அண்மைக்காலம் வரை டாலர் நலிவுறாத செலாவணி என்று எல்லோரும் கருதினர். 1958, 1959, 1960 ஆம் ஆண்டுகளில் நிகழ்ந்த பற்றுக் குறையைத் தவிர முன்னர் அமெரிக்காவில் அயல் நாட்டுக் கொடுப்பல்நிலை (balance of payments) பிரச்சினை இருந்ததில்லை. இந்த நிலை 'மகிழ்ச்சியான அமைதி நிலையாகும்.' டாலர் வலிமையுள்ள ஒரு செலாவணி என்ற நம்பிக்கையைச் சில சக்திகள் பாதித்தன. ஆனால், வேறு சில சக்திகள் இதற்கு எதிராக அதாவது நம்பிக்கையைப் பாதுகாக்கும் வகையில் இயங்கி வந்தன. அமெரிக்கப் பொருளாதாரத்தின் வளர்ச்சி மொத்தத் தேசீய உற்பத்தி [மொ.தே.உ. (G.N,P.)] 1967ஆம் ஆண்டின் இறுதியில் 807.3 பில்லியன் டாலராகக் கூடியது.[1] இந்த முன்னேற்றம் எல்லா ஐயப்பாடுகளையும் நீக்கிவிட்டது. வியட்நாம் போர் மூண்டதால் டாலரில் மக்கள் கொண்டுள்ள நம்பிக்கை பாதிக்கப்பட்டிருக்கலாம். இந்த நிலையில் டாலரைக் காப்பு நிதியாகக் கொண்ட நாடுகளும், அல்லது சில நாடுகளும்—டாலர் நிதியைக் கொண்டிருந்த தனியாட்களும் அவைகளைப் பொன்னாக மாற்ற முனைந்தனர். பொன் விலையின் உயர்வை வைத்து இலாபம்பெற ஊகவணிகரும் முனைந்தனர். இவ் விலை உயர்வை இவர்களே ஏற்படுத்த முனைந்தனர். டாலரைப் பொன்னாக மாற்ற முயன்ற நாடுகளுள் பிரான்ஸ் குறிப்பிடத்தக்கதாகும். அமெரிக்க டாலரும் இங்கிலாந்தின் பவுனும் மட்டும் ஏன் உலகக் காப்புநிதியாக இருக்கவேண்டும் என்று பிரான்ஸ் எப்பொழுதுமே கேட்டுக்கொண்டிருந்தது. பழைய பன்னாட்டுப் பொன் நிதியை மீண்டும் பின்பற்றவேண்டும் என்று தலைவர் டிகால் (de Gaulle) கூறினர். நாட்டின் வர்த்தகநிலை அளிக்கும் உபரியைப் பொன்னாக மாற்றினர். பொன்னை உற்பத்திசெய்யும் நாடுகள் அதன் விலையை உயர்த்தவேண்டும் என்று கேட்டுக் கொண்டன. அண்மையில் ஏற்பட்ட பொன் நெருக்கடி (gold crisis) பொன்னின் தேவையைப் பெருக்கியது. மேற்குறிப்பிட்டவை எல்லாம் அதன் விளைவாகும். நெருக்கடியைத் தீர்க்கப்

பொன்னின் இரட்டைவிலை முறையைப் (dual price) பின்பற்றினர். நடப்பு நிலையிலுள்ள பற்றுக்குறையைத் தீர்ப்பதற்காக மைய வங்கிகள் மட்டும் அதிகார பூர்வமான விலையில் பொன்னை வாங்கலாம் என்று பணித்தனர். டாலரின் மதிப்பைப் பொன் விலையை உயர்த்துவதன் மூலம் அதிகார பூர்வமாகக் குறைக்காவிடினும் அதன் சிறப்பான இயல்பை நீக்கிவிட்டனர். அது பிரெஞ்சுப் பிராங்கைப்போல் அல்லது மற்றப் பெரிய செலாவணியைப் போல் இருந்தது. நடப்புக் கணக்கில் குறிப்பிட்ட அளவுக்கு மாற்றுத் தன்மை கொண்டிருந்தது.

1968ஆம் ஆண்டு வாஷிங்டனில், மார்ச் 16, 17-ல் கூடிய பொன் நிதியின் (gold pool) அங்கத்தினர்கள் டாலரில் நம்பிக்கை தெரிவித்தனர். மைய வங்கிகளின் ஆளுநர்கள் அமெரிக்க அரசு டாலரின் மதிப்பைப் பாதுகாக்கும் என்றும் இதற்கான செலாவணி, நிதி நடவடிக்கைகளை எடுக்கும், நாட்டின் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை உயர் முன்னுரிமை பெறும் என்றும் கூறினர். பெடரல் ரிசர்வ் செலாவணித் தாள்களுக்கு 25% பொன் காப்பு இருக்கவேண்டும். இவ் விதியைக் காங்கிரஸ் (சட்டசபை) ஆதரிக்கும் போக்கை மாற்றிக்கொண்டு இதை நீக்குவதற்கு இசைந்தது. அமெரிக்க அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையில் ஏற்படும் பாதக நிலையைச் சமாளிக்கப் பொன் காப்பு முழுவதையும் பயன்படுத்தலாம். இந்தியா உள்படப் பல நாடுகள் சட்டபூர்வமான பொன் காப்பு முறையை விடுத்தபோதிலும் அமெரிக்கா பழைய வழக்கத்தை விடுக்க முன்வரவில்லை.

பெடரல் ரிசர்வ் முறையின் தலைவர் திரு. மக் மார்ட்டின் (Mr. Mc C Martin) பொன்னுக்கும், டாலருக்கும் இடையே ஒரு சட்டபூர்வமான இணைப்பு இருக்கவேண்டும் என்றும், குறைந்த பட்சம் 15 சதவீதப் பொன் காப்பு நிதியாவது இருக்கவேண்டுமென்றும் முன் கூறியதை இங்கு நினைவுபடுத்திக் கொள்ளலாம். இதே தலைவர் இப்பொழுது சட்டபூர்வமான பொன் காப்பு முறையை ரத்துசெய்ய ஒரு சட்டம் உடனடியாக இயற்ற வேண்டும் என்றும் வலியுறுத்தினர். பொன் காப்பு முறையை ரத்துசெய்தால். வெளியுலகம் அமெரிக்கப் பொன் முழுவதும் பன்னாட்டுச் செலாவணிக் காப்பு நிதியாகப் பயன்படும் என்பதைத் தெளிவாக அறியும்; ஊக வாணிகமும் டாலர் நிதியைப் பொன்னாக மாற்ற முனைவதும் நின்றுவிடும் என்று காங்கிரஸ் சபை முன் கூறினர். பொன் காப்பு நிதி ஓரளவு பொன்னை இயங்கா நிலையில் (immobilisation) வைத்தால் ஊக வாணிகம்

ஊக்கம்பெறும். டாலரின் மாற்றுத் தன்மையை (convertibility). நிலைநாட்டுவதே பொன் காப்புநிதியின் முதன்மையான நோக்கம். காப்புத் தொகையின் ஒரு பகுதியை சுதந்திரமானது (free) என்று கூறினால் மற்றப் பகுதி முதன்மை நோக்கத்தைச் செயல் படுத்துவதற்குக் கிடைக்காது என்பது தெளிவு. உள் நாட்டில் பெடரல் ரிசர்வ் செலாவணித் தாள்கள் பொன்னாக மாற்றக் கூடியதாக இருந்த காலத்தில் பொன் காப்பு நிதியை அமைத்தனர். ஆனால், தற்காலத்திற்கு இம்முறை ஒவ்வாதது.[1]

மேலும் பொன் நிதியின் (gold pool) அங்கத்தினர்கள் லண்டன் மார்க்கட்டுக்கோ எந்தப் பொன் மார்க்கட்டுக்கோ பொன்னை அளிப்பதில்லை என்று முடிவு செய்தனர். மேலும் இந்த மார்க்கட்டுகளில் பொன் வாங்கத் தேவை இல்லை என்றும் கருதினர்; ஏனெனில் உலகச் செலாவணியை (special drawing rights) ஏற்படுத்துவதால் இத் தேவை எழாது என்று அவர்கள் கருதினர்.[2]

1970-ல் அமெரிக்காவின் அன்னியக் கொடுப்பல் நிலை தொடர்ந்து பாதக நிலையில் சென்றது, உள் நாட்டில் பண வீக்கம் ஏற்பட்டது. இதனால் பொன், டாலர் நெருக்கடி உச்ச நிலையை அடைந்தது. இதுவரை காணாத அளவு ஊகவாணிகம் ஏற்பட்டது. வர்த்தகத்தின் பாதகமான இப் போக்கைத் தடை செய்ய வேண்டும். வேலையின்மையை நீக்கி, டாலரில் மக்கள் கொண்டிருந்த நம்பிக்கையை மீட்க வேண்டும். ஜனாதிபதி நிக்சன் டாலரின் மாற்றுத் தன்மையை (conversibility) நீக்கினார்; அமெரிக்காவில் இறக்குமதியாகும் சரக்குகளுக்கு 10% கட்டணத்தை வரியுடன் சேர்த்தார். 1971 டிசம்பரில் செல்வம் மிகுந்த 10 நாடுகள் ஸ்மித்ஸோனியன் உடன்பாடு (Smithsonian Agreement) என்னும் ஒப்பந்தம் செய்து கொண்டனர். அதிகார பூர்வமான பொன்னின் மதிப்பை உயர்த்துவதன் மூலம் 7·9% டாலரின் மதிப்பைக் குறைத்தனர். ஓர் அவுன்ஸ் பொன் 35 டாலராக முன்னர் இருந்தது; இப்பொழுது இதன் மதிப்பு $38 ஆக உயர்ந்தது. ஜெர்மானிய மார்க் (mark) ஜப்பானிய யென் (yen) உள்பட மற்றச் செலாவணிகளின் மதிப்புகளை மாற்றியமைத்தனர். இதனால் ஸ்திர நிலை மீளவில்லை. டாலரில் ஊகவாணிகம் நடந்துகொண்டிருந்தது. இதனால் நிச்சயமற்ற நிலை உருவாயிற்று. எல்லாச் செலாவணிகளையும் மிதக்க விட்டனர். (மிதக்க விடுதல்

[1] See Federal Reserve Bulletin, February, 1968 (Statement of William Mc C. Martin, Jr., Chairman, before the Congress), pp, 122-6.

[2] Federal Reserve Bulletin, March 1968, p. 254.

என்றால் நிலையான மாற்று வீதம் அமைக்காமல் செலாவணியின் மதிப்பை நிலைமைக் கேற்றவாறு மாற விடுவதாகும்). 1973-ல் பிப்ரவரி மாதம் அமெரிக்கா டாலரின் மதிப்பை மேலும் 10% குறைத்தது. இந்த மூன்று படிவங்களில் டாலரை பொன் இணைப் பிலிருந்து நீக்கி விட்டனர். முதலில் நடை முறையில் (அதிகார பூர்வமாக இல்லை என்பது பொருள்) டாலரின் மாற்றுத் தன்மையை நீக்கினர். பிறகு அதன் மதிப்பைக் குறைத்தனர். மாற்றுத் தன்மையை முறையாக நீக்கினர்.

உலகச் செலாவணி முறை பற்றிய விவரங்களைக் கீழே காணலாம். ஆனால் இதைப் பார்ப்பதற்கு முன் யூரோ டாலர் மார்க்கட்டு (Euro-dollar Market) என்ற ஒரு குறுகிய காலப் பண மார்க்கட்டு எவ்வாறு வளர்ந்தது என்பதைக் காணலாம்.

## யூரோ டாலர் மார்க்கட்டு

தற்போதுள்ள யூரோ டாலர் மார்க்கட்டைப் போன்ற ஒரு மார்க்கட்டு இரண்டாவது உலகப்போருக்கு முன்பே இருந்தது. ஆனால் எல்லா நாடுகளும் பொன் திட்டத்தைக் கைவிட்டதை ஒட்டி விளைந்த குழப்பத்தில் இந்த மார்க்கட்டு மறைந்தது. 1930-40-ல் மாறும் மாற்று வீதங்கள் (fluctuating exchange rates) அமலில் இருந்தன. போர் முடிந்தவுடன் இந்த மார்க்கட்டு மீண்டும் தோன்றவில்லை, ஏனெனில் அன்னியச் செலாவணிக் கட்டுப்பாடும் மற்றக் கட்டுப்பாடுகளும் அமல் செய்யப்பட்டன. 1958-க்குள் நாணயமாற்றுக் கட்டுப்பாடுகள் பல நாடுகளில் நீங்கின; செலாவணிகளின் மாற்றுத் தன்மை மீட்சியடைந்தது. ஆகையால் இந்த மார்க்கட்டு மீண்டும் தோன்றியது. 1957-ல் சூயஸ்கால்வாய் நெருக்கடி ஏற்பட்டபோது இங்கிலாந்துடன் தொடர்பில்லாத வர்த்தகத்திற்கு ஸ்டர்லிங் கடன் கிடையாது என்றனர். மேற்குறிப்பிட்ட மார்க்கட்டு மீண்டும் தோன்றுவதற்கு இதுவே உடனடியான காரணமாகும். வியாபாரிகள் கேட்ட கடனுதவி புரிவதற்கு ஆங்கிலேய வங்கியர் வழி தேடிக்கொண்டிருந்தனர். அவர்கள் டாலரை இதற்குப் பயன்படுத்தினர். அமெரிக்காவுக்கு வெளியே உள்ளவர்கள் பலர் அமெரிக்க டாலரைக் கொண்டிருந்தனர். இதனால்தான் இதை யூரோ டாலர் மார்க்கட்டு என்று அழைக்கின்றனர். அதாவது அமெரிக்க டாலருக்கு ஐரோப்பாவில் உள்ள டாலர் மார்க்கட்டு என்பது பொருள். இந்த மார்க்கட்டு லண்டனைக் கேந்திரமாகக் கொண்டதில் வியப்பில்லை. டாலர் டெப்பாசிட்டுத் தொழிலைத் தொடங்குவதற்கு வேண்டிய அனுபவத்தை லண்டன் வங்கியர் பெற்றிருந்தனர்.

யூரோ டாலர் மார்க்கட்டு ஒரு குறுகியகாலப் பண மார்க்கட்டு. டாலரை வங்கிகள் இதில் கடனாக வாங்கலாம், கொடுக்கவும் செய்யலாம். இந்த நடவடிக்கைகள் அமெரிக்கா வுக்குள் நடைபெறுவதில்லை; வெளியே நடைபெறுகின்றன; பெரும்பாலும் ஐரோப்பாவில் நடைபெறுகின்றன. அமெரிக்க வங்கிகளிலுள்ள டாலர் டெப்பாசிட்டுகள் கடன் வாங்க லுக்கும், கொடுப்பதற்கும் உட்படுகின்றன. அண்மை ஆண்டு களில் செலாவணித்தன்மை கொண்டுள்ள டெப்பாசிட்டுச் சான் றிதழ்களும் வர்த்தகத்திற்குட்பட்டிருக்கின்றன. நடவடிக்கை களில் ஈடுபட்டுள்ள வங்கிகள் ஐரோப்பாவில் இருக்கவேண்டு மென்ற கட்டாயமில்லை. ஆனால் அவை ஐரோப்பிய அடிப்படையில் அமைந்துள்ளன. நடவடிக்கைகளின் காலம் குறுகியதாக, அதாவது ஒன்று முதல் ஆறுமாத காலத்திற்குட்பட் டிருக்கின்றன. ஓராண்டு யூரோ–டாலர் டெப்பாசிட்டுகளும் சில சமயங்கள் தோன்றுகின்றன. டெப்பாசிட்டின் அளவு சாதாரண மாக ஒரு மிலியன் டாலருக்கு மேற்பட்டிருக்கின்றது. கடன் வாங்கலுக்கு அங்கத்தினர்களிடையே துணையீட்டுப் பண்டம் சாதாரணமாகக் கொடுக்க வேண்டியதில்லை. வாங்கிய கடன் தொகைக்கு மேல் செலுத்தும் தொகை வட்டியாகும். இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளுக்கு யூரோ டாலர்க் கடன் ஓரளவு கொடுக்கப்பட்டபோதிலும் குறுகிய கால யூரோ டாலர் மார்க் கட்டுக்கும் நீண்ட கால யூரோ பத்திர மார்க்கட்டுக்கும் (Euro–bond market) வேறுபாடு இருக்கின்றது. யூரோ பத்திர மார்க்கட்டு நீண்டகால மூலதன மார்க்கட்டாகும். அமெரிக்காவுக்கு வெளியே உள்ள வங்கிகள் கடன் கொடுப்பதற்குப் பயன்படுத்தும் நிதி யூரோ டாலராகும். கடனை நேரடியாகவோ அல்லது வேறு செலாவணி மூலமோ கொடுக்கின்றன.[1]

1957-ல் மீட்சியடைந்ததற்குப் பிறகு இந்த மார்க்கட்டு மிக விரைவில் வளர்ந்தது, இத்துடன் யூரோ ட்யூட்ச் மார்க்கட்டு (Euro–Deutsche Market) யூரோஸ்டெர்லிங் மார்க்கட்டு (Euro-sterling Market) முதலியவைகளும் வளர்ந்துள்ளன. எனவே யூரோ செலாவணி மார்க்கட்டு என்ற ஒரு பொது மார்க்கட்டு வளர்ந்துள்ளது. யூரோ டாலரைப்போலவே மற்றச் செலாவணி களையும், அவைகளுடைய நாடுகளுக் கப்பால் கடன் கொடுத்தல் வாங்கலுக்குட்படுத்துகின்றனர். இது ஒரு பன்னாட்டு மார்க்கட் டாக வளர்ந்துள்ளது. 1957-ல் யூரோ டாலர் மார்க்கட்டின் நடவடிக்கைகள் மிகக் குறைவாக இருந்தன. இதன் எச்சமதிப்பு

[1] Thirty-fifth Annual Report of the B. I. S., June 1965, p. 132.

1966-ல் 13 பிலியன் டாலராக உயர்ந்தது. இது உலகின் குறுகிய காலப் பண மார்க்கட்டுகளுள் மிகப் பெரிய ஒன்ருகத் தோன்றியது; 8 வங்கிகளின் அறிக்கைப்படி யூரோ செலாவணிக் கடன் 1967-ல் தொடர்ந்து பெருகியது. 1967ஆம் ஆண்டின் இறுதியில் இதன் டாலர் பகுதி 16 பிலியன் டாலராக உயர்ந்தது. 1967ஆம் ஆண்டின் டிசம்பர் இறுதியில் டாலர் பகுதி உள்பட மொத்த நடவடிக்கைகளின் மதிப்பு 19 பிலியனுக உயர்ந்தது. யூரோ செலாவணி மார்க்கட்டின் டாலர் தன் உச்சநிலையைத் தக்கவைத்திருந்தது. 1967ஆம் ஆண்டின் டிசம்பர் இறுதியில் மார்க்கட்டின் சொத்துகளும் (assets), பொறுப்புகளும் (liabilities) 81% டாலராக இருந்தது. டியூட்ச் மார்க் (Deutsche Mark) 80 சதவீதத்துடன் இரண்டாவது இடம் பெற்றிருந்தது. இதற்கடுத்த இடத்திலுள்ள ஸ்விட்ஜர்லாந்தியப் பிராங் (Frank) தொலைவான நிலையிலிருந்தது, ஸ்டெர்லிங்கின் முக்கியத்துவம் அண்மைக் காலத்தில் குன்றிவிட்டது.[1]

வர்த்தகத்திற்கு நிதியளிப்பதே யூரோ டாலரின் முக்கியப் பணியாகும். மற்ற வழிகளில் நிதியைப் பெற்ருல் அளிக்க வேண்டியதைவிடக் குறைவான வீதத்தில் இறக்குமதியாளர்களும், ஏற்றுமதியாளர்களும் இந்த மார்க்கட்டில் நிதி பெறலாம். சரக்குகளைக் கப்பல்களில் செலுத்தத் தொடங்கியதிலிருந்து அவைகளுக்குப் பணம் செலுத்தவேண்டிய காலம்வரை ஏற்றுமதியாளர்களுடைய தொழிலுக்கு வேண்டிய தொகைகளை அவர்கள் இந்த மார்க்கட்டில் வாங்குகின்றனர். இதேபோல் இறக்குமதியாளர்கள் தம் நாட்டுச் செலாவணியைவிட யூரோ மார்க்கட்டில் வர்த்தக நிதியைப் பெறுவது இலாபகரமாகவும் எளிதாகவும் இருந்தால் இந்த மாற்றவல்ல (conversible) நிதியையே பயன்படுத்துகின்றனர். ஆனுல் தொகையைத் திருப்பிக் கொடுக்கும்போது டாலரில் செலுத்தவேண்டும். மாற்றுவீதம் (exchange rate) மாறினுல் ஆபத்து ஏற்படலாம். ஐரோப்பிய மைய வங்கிகள் முன்னேக்கிய காப்பை (forward cover) குறைவான கட்டணத்தை ஏற்று அளித்தால் இவ்வாபத்து நீங்கும். அமெரிக்க அரசு முதன் முதலிலிருந்தே யூரோ டாலர் மார்க்கட்டை ஆதரித்தது. 1950-60-ல் இருந்த வர்த்தகப் பாதக நிலை அயல் நாட்டினர் வசம் ஏராளமான டாலர் சிக்குவதற்குக் காரணமாக இருந்தது. வர்த்தக நிதியளிப்பில் டாலரைப் பயன்படுத்துவதால் அமெரிக்க மைய வங்கியில் பொன்னுக மாற்றுவதற்குக் கொடுக்கப்படும் தொகையைக் குறைக்கலாம். எனவே மைய

[1] Thirty-eighth Annual Report of the B.I.S., June 1968, pp. 145, 147, 150.

வங்கிகள் முன்னோக்கிய காப்பைக் (forward cover) கொடுப்பதில் அமெரிக்கர்கள் அக்கறை கொண்டிருந்தனர். இக் காப்பைக் கொடுப்பதை அவர்கள் ஆதரித்தனர். இதற்கு உதவி புரிந்தனர். ஜெர்மானிய, இத்தாலிய, ஸ்விட்ஜர்லாந்திய மைய வங்கிகள் முன்னோக்கிய காப்பைத் தம் நாடுகளில் அளிக்க ஏற்பாடு செய்தன. மாற்று முறை ஆபத்தை இவ்வாறு குறைக்க உதவினர்.

யூரோ டாலரை வர்த்தக நிதி முறைக்கு மட்டும் பயன் படுத்தவில்லை. சில நாடுகளில், குறிப்பாக விறுவிறுப்பான உள் நாட்டு மூலதன மார்க்கட்டு இல்லாத நிலையில் டெப்பா சிட்டுகளை உள் நாட்டில் பெருக்க விரும்பின. இவை ஏராள மான அளவில் டாலரைக் கடன் வாங்கின. இவைகளை உள் நாட்டுச் செலாவணியாக மாற்றுவதற்காக இக் கடன்களை வாங்கின. 1962ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் இத்தாலிய வர்த்தக வங்கிகள் யூரோ டாலர் மார்க்கட்டில் பெருமளவு கடன் வாங்கின. ஆங்கிலேய நிதியகங்களும், ஸ்தல நிறுவனங்களும் (local authorities) யூரோ டாலர் மார்க்கட்டில் குறுகிய காலக் கடனைப் பெற்று அவைகளை ஸ்டெர்லிங்காக மாற்றிக் கொண்டன.

அண்மைக் காலம் வரை அமெரிக்கர்கள்கூட பெருமளவு, யூரோ டாலரைக் கொண்டிருந்தனர். உள் நாட்டில் குறுகிய காலத் தொகைகளுக்குச் சரியான வட்டி வீதம் கிடைக்காவிடில் அமெரிக்க நிறுவனங்கள் டாலரை ஐரோப்பாவில் கடன் கொடுத்தன. டெப்பாசிட்டுகளை ஈட்ட அமெரிக்க வங்கிகள் உள் நாட்டில் போட்டியிட முடியாது, ஏனெனில் Q என்ற விதி அவர்கள் கொடுக்கக்கூடிய வட்டியைக் கட்டுப்படுத்தியது. ஆகையால் அவை யூரோ டாலர் மார்க்கட்டில் அன்னியக் கிளைகள் மூலம் அல்லது கனடிய வங்கிகள் மூலம் போட்டி யிட்டன. இன்று இந்திய நிலை ஓரளவு மாறியுள்ளது. மூல தனத்தின் இடப் பெயர்ச்சியை ஜனாதிபதி ஜான்சன் கட்டுப் படுத்துவதன் காரணமாக ['சுயக் கட்டுப்பாடு' (voluntary restriction)] ஏராளமான அளவு டாலர் தாயகம் மீள்கின்றது. அமெரிக்க வங்கிகளின் ஐரோப்பியக் கிளைகள் டாலரைப் பெறக் கடுமையாகப் போட்டியிடுகின்றன. இத்தொகைகளை அமெரிக் காவுக்குத் திருப்பியனுப்புகின்றனர். இதனால் அமெரிக்கா யூரோ டாலர் மார்க்கட்டில் கடன் பட்டிருப்பதன் அளவு கூடியுள்ளது.

யூரோ டாலர் மார்க்கட்டில் வர்த்தக வங்கிகள் வசமுள்ள யூரோ டாலரையும், மற்றச் செலாவணிகளையும் கொண்டிருப்ப

வர்கள் மைய வங்கிகளும் ஆங்காங்கே வசிப்பவர்களும் வெளி நாட்டினருமாவர். பன்னாட்டுத் தீர்வக வங்கியின் (Bank of International Settlements) கணக்குப்படி அதற்குச் செய்தி யனுப்பிய 8 வங்கிகளின் தொகைகளில் 40 சதவீதத்திற்கு மேற் பட்டதொகை 1966-ஆம் ஆண்டின் இறுதியில் அதிகார பூர்வ மான செலாவணி நிறுவனங்களுடையதாகும். 1966ஆம் ஆண்டின் இறுதியில் அதிகார பூர்வமான செலாவணி நிறு வனங்களுடையதாகும். 1966ஆம் ஆண்டின் இறுதியில் 'தி எக்கானமிஸ்ட்' (The Economlst) அளித்த புள்ளி விவரப்படி கடன் கொடுத்த $ 13 பிலியன் மொத்தத்தில் மைய வங்கிகளும் மற்ற அதிகார பூர்வமான நிலையங்களும் 2·8 பிலியன்களையும், வங்கிகளல்லாத வெளி நாட்டவர்கள் $1.5 பிலியன்களையும், வங்கிகளல்லாத உள் நாட்டவர் $2·5 பிலியன்களையும், அமெரிக்க நாடு $1.1 பிலியன்களையும், மற்ற நாடுகள் $5.1 பிலியன்களையும் கொடுத்தனர்.[1]

இந்த மார்க்கட்டு உலகின் ரொக்க நிலைப் பிரச்சினையைக் கணிசமாகத் தீர்த்துள்ளது என்று நம்ப இடம் இருக்கின்றது. டாலரைக் கொள்வதாலும், பயன்படுத்துவதாலும் இலாபம் கிடைப்பதால் அதன் நிலை வலிமையுள்ளதாக இருக்கின்றது. தொகைகள் செலுத்துவதிலேற்படும் உபரியையும், பற்றுக் குறையையும் இந்த மார்க்கட்டு நடவடிக்கை மூலம் தீர்க்க முடியும். 1960-70-ல் மேற்கு ஜெர்மனியும், 1965-6-ல் இத்தாலியும் அவைகளுடைய வங்கிகளை யூரோ டாலர்களை டெப்பாசிட்டாகக் கொள்ளுமாறு தூண்டின. இவ்வாறு அவை களுடைய செலுத்தலில் ஏற்படும் உபரியைத் தீர்க்க வழி வகுத்தன.

யூரோ டாலர் மார்க்கட்டு பெருமளவு பெருகிவிட்டது. பல நாடுகளுடைய வங்கிகளிடையே தொடர்புகளையும், போட்டி யையும் ஏற்படுத்தியுள்ளது. எனினும் இதில் உள்ள சில குறை பாடுகள் நம் கவனத்தை ஈர்க்கின்றன. குறிப்பிட்ட நேரத்தில் குறிப்பிட்ட வாடிக்கையருக்கு ஒரு வங்கி அதனுடன் போட்டி யிடும் மற்ற வங்கிகள் எவ்வளவு கடன் கொடுத்திருக்கின்றன எனபதைக் காண முடியாது. ஒரு நிறுவனம் தன் முதலீட்டைப் பரவலாக்க முடியாததால் ஆபத்து ஏற்படலாம். டெப்பாசிட்டுத் தொகைகளைக் கடனாகக் கொடுக்கும்போது அது பல இடைநிலை யாளர்கள் மூலம் சென்று இறுதியில் பயன்படுகின்றது. கடன்

[1] The Economist, 8 July, 1968, p. 127.

வாங்கும் ஒருவர் யூரோ டாலரைத் தன் உள் நாட்டுச் செலாவணி யாக மாற்றும்பொழுது அல்லது அதை வர்த்தகத்திற்குப் பயன் படுத்தும்பொழுது மீண்டும் மீண்டும் அது யூரோ டாலர் மார்க்கட்டில் சேருகின்றது. கடன்பெருக்கி (Credit Multiplier) செயல்படுவதைப்போல் இதுவும் இயங்குகின்றது.[1] இதன் விளைவாகப் பெருமளவு யூரோ டாலர் நிதியில் இழப்பு ஏற்படு கின்றது. இத்தகைய விளைவுகளை ஜெர்மனியிலும், அமெரிக்கா விலும், லெபனானிலும் கண்டிருக்கின்றனர். இரண்டாவதாக இது மைய வங்கியின் செலாவணிக் கட்டுப்பாட்டுக்குத் தடையாக இருக்கின்றது, உள் நாட்டில் பண வீக்கத்தைத் தணிக்க, மைய வங்கிகள் வட்டி வீதங்களை உயர்த்தும்போதும், உள்நாட்டுக் கடனைக் குறைக்கும்போதும் உள் நாட்டவர் யூரோ டாலர் மார்க்கட்டில் கடன் வசதி பெறுகின்றனர். அதிகாரிகள், தம் செலாவணிக் கொள்கை முறியாமலிருக்கவும் உள்நாட்டவர் வெளி மார்க்கட்டில் கடன் பெறுவதைத் தடை செய்யவும் பல விதிகளையும் கட்டுப்பாடுகளையும் அமல் செய்ய வேண்டும். இந்த மார்க்கட்டின் வளர்ச்சி பன்னாட்டு முறைக்கு நன்மை பயக்கக் கூடியதா அல்லது தீமை விளைவிக்கக்கூடியதா என்று கூடச் சிலர் சந்தேகப்படுகின்றனர்.

யூரோ டாலர் மார்க்கட்டின் பெரும் வளர்ச்சி பன்னாட்டு நாணய அமைப்பின் ஸ்திர நிலையைப் பாதித்துள்ளது. கடந்த சில ஆண்டுகளில் உலகில் பல செலாவணி நெருக்கடிகள் நிகழ்ந்துள்ளன. உலகின் பெரிய செலாவணிகள் பெருமளவு வாங்கப்பட்டன, அல்லது விற்கப்பட்டன. இதனால் அவை களுடைய செலாவணிகள் மீள்மதிப்பிடல் (revaluation), மதிப்புக்குறைப்பு அல்லது மிதப்பு–இவைகளுக்குட்பட்டன. 1969–ல் பிரெஞ்சுச் செலாவணி பிராங்கை (Franc) ஜெர்மானிய மார்க்குகளாக மாற்ற முனைந்தனர். இதனால் பிராங்கின் மதிப்புக் குறைந்தது. மார்க்கின் மதிப்பு உயர்ந்தது. அண்மையில் ஊகவாணிக முறையில் யூரோ டாலர்கள் பெரு மளவு விற்பனை செய்யப்பட்டன. இதனால் 1971 ஆம் ஆண்டில் டிசம்பர் மாதம் டாலரின் மதிப்புக் குறைந்தது. 1973 ஆம் ஆண்டு மார்ச் மாதம் பெரிய செலாவணிகளைக் கூட்டு முறையில் மிதக்கவிட்டனர் (joint float) அல்லது மீள் மதிப்பிட்டனர். இதிலிருந்து யூரோ டாலர் மார்க்கட்டின் ஆபத்துகளை இவை காட்டுகின்றன.

[1] Brian Reading. "Euro-dollars: Tonio or Toxic, The Bankers' Magazine, November 1967, p. 236.

அடியிற் காணும் பட்டியலில் யூரோ டாலர் மார்க்கட்டின் அளவை 1965–67-ல் பன்னாட்டுத் தீர்வக வங்கியின் மதிப்பீடு காட்டுகின்றது. யூரோ டாலரின் மூலங்களையும் பயன்பாட்டையும் அதில் காணலாம். ஆனால், விவரங்களைக் கவனமாகப் புரிந்துகொள்ளவேண்டும். பல காரணங்களால் துல்லியமான புள்ளி விவரங்களைப் பெறமுடியாது. பொதுவாக மொத்தத்தை எவ்வாறு எடுத்துக்கொண்டாலும் விவரங்கள் இரண்டாவது முறை சேருவதைத் தவிர்க்க முடியாது. டாலர்கள், வங்கியரல்லாத வாடிக்கையரைச் சேருவதற்கு முன் மீண்டும் வங்கிகளிடையே டெப்பாசிட்டு செய்யப்படும். இதனால் விவரங்கள் உயர்வாகக் காணப்படும். எனவே மொத்தப் புள்ளி விவரத்தில் ஏற்படும் மாற்றம் யூரோ டாலர் மார்க்கட்டின் நிலையைப் பிரதிபலிக்காது. இதை வாடிக்கையர் பெறும் கடனாகக் கருதமுடியாது. இரண்டாவதாக அமெரிக்காவுக்கு வெளியே உள்ள வங்கிகளின் இருப்புநிலைக் குறிப்புகளில் (Balance sheet) இருபுறமும் — சொத்துகள், பொறுப்புகள் என்ற புறங்களிலும் யூரோ டாலரைக் காணலாம்; ஆனால், இவைகளில் சமநிலை இருக்காது. ஏனெனில் நாட்டவரிடம் பெறும் டாலர்களைக் கணக்கில் காட்டுவதில்லை. மேலும் மற்ற நாடுகளிடம் பரிவர்த்தனை மூலம் (Swaps) பெறும் அல்லது அதற்காகக் கொடுக்கப்படும் டாலர்களைக் கணக்கில் காட்டவில்லை. மூன்றாவதாக அமெரிக்காவுக்கு வெளியே உள்ள வங்கிகளின் அன்னிய டாலரின் நிலை அவைகளுடைய ஐரோப்பிய டாலர்த் தொழிலைவிட அதிகமாக இருக்கின்றது. அவைகளுடைய அமெரிக்க டாலர்த் தொழில் நீங்கலாக மற்ற வெளிநாட்டு டாலர்த் தொழில் யூரோ டாலர்த் தொழிலைவிடக் குறைவாக இருக்கின்றது. இறுதியாகச் சில விஷயங்களில் விவரங்கள் ஒருமைப்பட்டிருக்கவில்லை.[1] மேலும் யூரோ டாலர்த் தொழில் புரியும் 8 நாடுகளின் வங்கிகள் கொடுத்ததைக்கொண்டு மதிப்பீடு தயார் செய்யப்பட்டிருக்கின்றது. இந்த நிதிகள் அளிக்கப்பட்டதிலிருந்து இறுதிப் பயன்பாட்டுக்குச் செல்வதற்குள் மேற்குறிப்பிட்ட 8 வங்கிகளில் ஏதேனும் ஒன்றின் வழியாக எந்த நிலையிலும் செல்லாவிடில் பட்டியலில் இடம்பெறா. தம் போக்கில் ஒரு படிவத்திலாவது டாலர் வடிவெடுக்கும் தொகைகள் பட்டியலில் இடம்பெறும். பட்டியலைப் புரிந்துகொள்ளும்போது இக்குறைபாடுகளை மனத்தில் கொள்ளவேண்டும்.[2]

[1] Thirty-fifth Annual Report of the B.I.S., 14 June 1965, p 132.

[2] Thirty-eighth Annual Report of the B.I.S., 10 June 1968. pp. 153-4.

**பட்டியல்[1]**

**யூரோ டாலர் மார்க்கட்டின் அளவு பற்றிய மதிப்பீடு**

**இறுதியாண்டு விவரங்கள்—அமெரிக்க டாலர்களில் மிலியன்களில்**

| இனங்கள் | மூலங்கள் | | | பயன்கள் | | | எச்சம் | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 1965 | 1966 | 1967 | 1965 | 1966 | 1967 | 1965 | 1966 | 1967 |
| **வெளிப்பகுதி** | | | | | | | | | |
| அமெரிக்கா | 0·8 | 1·1 | 1·7 | 1·8 | 4·1 | 4·8 | +1·0 | +3·0 | +3·1 |
| மற்ற நாடுகள் | 4·2 | 5·1 | 6.3 | 3·2 | 3 9 | 5·6 | 1·0 | —1·2 | —0·7 |
| மொத்தம் | 5·0 | 6·2 | 8·0 | 5·0 | 8·0 | 10·4 | ... | +1·8 | +2·4 |
| **உட்பகுதி** | | | | | | | | | |
| அதிகாரபூர்வ நிதி நிலையங்கள் | 2·2 | 2·8 | 3·1 | ... | ... | ... | —2·2 | —2·8 | —3·1 |
| அயல் நாட்டினர், வங்கிகளல்லாதவர்கள் | 1·0 | 1·5 | 1·9 | 0·6 | 0·8 | 0·7 | —0·4 | —0·7 | —1·2 |
| வங்கிகளல்லாத உள்நாட்டினர் + பரிவர்த்தனைகள் உட் செலாவணியில் பெற்றது அல்லது அதிலிருந்து வெளிச் செலாவணிக்கு அல்லது மூன்றும் நிலைச் செலாவணிக்குச் சென்றது* | 1·8 | 2·5 | 3·0 | 4·4 | 4·2 | 4·9 | +2·6 | +1·7 | +1·9 |
| மொத்தம் | 5·0 | 6·8 | 8·0 | 5·0 | 5·0 | 5.6 | ... | —1·8 | —2·4 |
| மொத்த மார்க்கட்டின் அளவு | 10·0 | 13·0 | 16·0 | 10·0 | 13·0 | 16·0 | ... | ... | ... |

[1] Thirty-eight Annual Report of the B.I.S., 10th June 1968, page 154,

* அதிகார பூர்வமான நிதி நிலையங்களுடன் சிறப்பான ஏற்பாடுகள் மூலம் செய்யப்பட்ட பரிவர்த்தனைகள் நீங்கலாக, ஆனால் செய்தியளித்த வங்கிகளுடைய 'பயன்கள்' உட்பட அவை சொந்த முறையில் ரொக்க நிலையைப் பேணுவதற்காகவும், புறச் சோதனைக்காகவும் window ressing) பயன்படுத்திய யூரோ டாலர் உட்பட (டாலரைத் தற்காலிகமாக உள்நாட்டுச் செலாவணியாக மாற்றுதல்).

உலகச் செலாவணி (Special Drawing Rights)

உலகின் பணக் காப்புநிதி அண்மை ஆண்டுகளில் நல்ல முறையில் வளரவில்லை. இது கவலைக்குரியதாகும். ஆனல். சில நாடுகளில் காப்புநிதியைப் பெருக்கும் போக்கு இருக்கின்றது. உலகின் பணக் காப்பு நிதியில் சேரும் பொன்னின் அளவு குறைந்துள்ளது. இப்போக்கு மாறிவிட்டது. உலகின் பொன் உற்பத்தி குறைந்து வருகின்றது. மேலும் தனியாருடைய பொன் தேவையும் பெருகிக்கொண்டிருக்கின்றது. 1959-க்குப் பிறகு ஓராண்டுக்கு 8 சதவிதம் கணக்கில் உலக வர்த்தகத்தின் அளவு பெருகி வருகின்றது. ஆனுல், பொன் அளவு கணிசமாகப் பெருகவில்லை. 1967-ல் உலகின் காப்புநிதிகள் இறக்குமதியில் 35½% ஆக இருந்தது; 1967-68-ல் 109% ஆக இருந்தது. எதிர் காலத்தில் அதிக அளவு காப்புநிநிகளே தேவைப்படும்; குறைவான அளவு தேவைப்படாது, ஏனெனில் அரசுகள் வேலை நிறைவுக் கொள்கையை அமல்செய்ய முனைந்துள்ளன. வர்த்தக நிலை பாதகமாக இருந்தால் அதை நேராக்குவதற்குப் பணச் சுருக்க முறையைப் பின்பற்ற முடியாது. முன்னர் நாணய மாற்றுக் கட்டுப்பாடுகள் மூலமும் வர்த்தகக் கட்டுப்பாடுகள் மூலமும் வர்த்தகப் பாதக நிலையை நேர்செய்தனர். இக் கட்டுப்பாடுகளை இப்பொழுது கணிசமாகத் தளர்த்தியுள்ளனர். இறுதியாகக் குறுகியகால மூலதன இடப் பெயர்ச்சி இப்பொழுது முன்னிலும் மிக அதிக அளவில் நடைபெறுகின்றது.[1] 1959-க்குப் பிறகு பெருகியுள்ள காப்பு நிதிகளில் 50 சதவீதம் அமெரிக்க டாலராக இருக்கின்றது. 1968ஆம் ஆண்டு மார்ச் முதல் புதிய பொன் கொள்கையைப் பின்பற்றுகின்றனர். செலாவணிகளைக் காப்புத் தொகையில் கொண்டுள்ள நாடுகள் தம் வர்த்தகப் பாதக நிலையை நீக்கவிரும்பின. பன்னுட்டு ரொக்க நிலையில் பற்றுக்குறை ஏற்பட்டு அதனுல் உலக வர்த்தகமும், பொருளாதார வளர்ச்சியும் தடைபடும் நிலை ஏற்படுவதைத் தடுக்க ஒரு திட்டம் தேவை என்பதை மேற் குறிப்பிட்டவை தெளிவாக்குகின்றன.

1967-ல் ரியோடி ஜனிரோவில் (Rio dc Janeiro) பன்னுட்டு நாணய நிதியின் ஆண்டுக் கூட்டம் நடந்தது. இயக்குநர் குழு, ஒரு புதிய காப்பு நிதியை [சிறப்பு எடுப்பு முறையை (Special Drawing Rights) அடிப்படையாகக் கொண்டது] நிறுவ முடிவு செய்தனர். 'பத்து உறுப்பினர் குழு' (group of ten) நான்

[1] Sir Roy Harrod, 'The Rio Agreement' in Bankers' Magazine, March 1968, p. 178.

காண்டுகள் விவாதித்ததின் விளைவாக இது தோன்றியது. 1968ஆம் ஆண்டு மே மாதம் 31ஆம் நாள் உடன்பாட்டின் திருத்தத்தை இயக்குநர் குழு ஏற்றது. பின்னர் இதை உறுப்பினர்களாகிய நாடுகளின் பரிசீலனைக்கும் ஒப்புதலுக்கும் அனுப்பியது. மொத்த உறுப்பினர்களில் $\frac{3}{4}$ பகுதி வாக்குரிமை பெற்றுள்ள $\frac{3}{5}$ பகுதி அங்கத்தினர்கள் இதை ஏற்கும்போது இது அமலில் வரும்.

திருத்தம் சிறப்பு எடுப்பு உரிமையை நிறுவ வழி வகுத்துள்ளது. உலகச் செலாவணியாகிய இதை ப. நா. நிதியின் உறுப்பினர்கள் காப்பு நிதியாகப் பாவிக்கலாம். கடன்களைத் தீர்த்துக்கொள்ள அவை இதைப் பயன்படுத்தலாம். இவ்வுலகச் செலாவணியைக் கொண்டுள்ள நாடுகள் இதைக் கொண்டு மாற்றக்கூடிய (conversible) மற்றச் செலாவணிகளைப் பெற்று வர்த்தகப் பாதக நிலையை நீக்கலாம். நிதியின் உறுப்பினர்களாகிய நாடுகளுக்கு அவைகளுடைய கட்டண (நிதிக்குச் செலுத்துவது) அடிப்படையில் இச் செலாவணியைப் பங்கீடு செய்துள்ளனர். உலகச் செலாவணிக்குக் குறிப்பிட்ட மதிப்பு (பொன்னுக) நிறுவப்பெற்றுள்ளது. மாறும் செலாவணிக்கு ஈடாகப் பரிவர்த்தனையில் இதை ஒவ்வொரு நாடும் ஓரளவு ஏற்க வேண்டும். ஒரு நாட்டுக்கு ஒதுக்கப்பட்டிருக்கும் அளவைவிட அது அதிகமாக உலகச் செலாவணியைக் கொண்டிருந்தால் அதற்காக ஓரளவு வட்டியைப் பெறலாம். ஆனால் இவ் வட்டி அதன் எச்சத்திறன் தொகையைக் (net cumulative accumulation) கொண்டு கணக்கிடப்படும்.[1]

தற்போதுள்ள உறுப்பினர்களுடைய எடுப்புரிமையை (drawing rights) அவை செலுத்தும் கட்டணத்தைக் கொண்டு கணக்கிடுகின்றனர். சிறப்பு எடுப்புரிமை அல்லது உலகச் செலாவணி இதிலிருந்து வேறுபட்டிருக்கின்றது. உலகச் செலாவணியின் கணக்கு முறையும், அதன் பயன்பாடும் சாதாரண எடுப்புரிமையிலிருந்து வேறுபட்டிருக்கின்றன.[2] இவ்வுடன்படிக்கை பன்னாட்டு ரொக்க நிலையின் பற்றுக் குறையைத் தீர்ப்பதில் பெரும் சாதனையாக வந்தது. பெடரல் ரிசர்வ் முறைக் குழுவின் தலைவர் திரு. வில்லியம் மக்மார்ட்டின் (இளையவர்) (Mr. McC Martin Jr.) என்பவர் இதைப் பன்னாட்டு வரலாற்றின் ஒரு பெரிய திருப்பம், முன்னேற்றம் என்று குறிப்பிட்டுள்ளார். இது ஒரு

[1] Reserve Bank of Australia Report and Financial Statement, 1968, p. 8.

[2] Thirty-eight Annual Report of the Bank of International Settlement, June, 1968, p. 117.

திருப்பம், ஏனெனில் இது ஒரு புதிய கருத்தாகும். தற்போதுள்ள பொன்னும், மற்றச் செலாவணிகளும் உருவாக்கியுள்ள காப்பு நிதியைத் தவிர மற்றுமோர் காப்புத் தொகையை நிறுவியுள்ளனர்.[1] தற்போதுள்ள முறைப்படி எடுப்புரிமை நிபந்தனைக்குட்பட்டது; இவை கடன் நிதிகள், பன்னாட்டுச் செலாவணியல்ல. சிறப்பு எடுப்பு உரிமை உறுப்பினர்களின் சொந்தக் காப்பு நிதியாகும், இவை நிபந்தனைக்குட்பட்டவையல்ல; திருப்பிக் கொடுக்க வேண்டியவையல்ல. உறுப்பினர்கள் தம் சிறப்பு எடுப்பு உரிமை அல்லது உலகச் செலாவணியனைத்தையும் பயன்படுத்தலாம். ஒரு நாடு தன் இருப்பிலுள்ள இத் தொகையில் 70%-ஐ 5 ஆண்டுகள் பயன்படுத்தாவிடில் மீதித் தொகையைச் செலுத்தி முழுக் காப்பை மீண்டும் அமைக்க வேண்டிய கட்டாயமில்லை. 70%-க்கு மேலான தொகையை ஒரு முறையேனும் பயன்படுத்தி விட்டால் மீதத்தையும் செலுத்தி முழு அமைப்பை நிறுவ வேண்டும்.

கடன் கொடுத்த ஒரு நாடு பிற நாடுகள் கடனைத் தீர்ப்பதால் (ப. நா. நிதியின் மூலம்) பெறும் தொகை நிதிக்கு அது செலுத்திய கட்டணத்தைவிட உயர்வாக இருக்கக்கூடாது. இந்த விதியின் விளைவாக நிதி தடங்கலின்றிச் செயல்படுவது கடினமாக இருந்தது. இவ்விடர்ப்பாட்டைத் தீர்க்கும் வகையில் 'கடன் வாங்குவது பற்றிய பொது உடன்பாட்டை'க்(General Agreement of 4 Borrow) கையெழுத்திட்டனர். இதன்படி கடனளித்த நாடு தன் கட்டணத்திற்கும் உயர்வான ஒரு தொகையைப் பெறலாம். இதைக் கொண்டு தன் இன்னல்களைத் தீர்க்கலாம். இத் திட்டப்படி ஒரு நாடு முதலில் ஒதுக்கப்பட்ட தொகையைப் போல் மூன்று மடங்கு தொகையைப் பெற்றால் அதற்குமேல் சிறப்பு எடுப்பு உரிமையைப் பெற மறுக்கலாம்.

இப் புதிய காப்புநிதி எந்த அளவில் இருக்கவேண்டும் என்பதை அதிகார பூர்வமாக அறிவிக்கவில்லை. எனினும் 1,000 மில்லியன் டாலரிலிருந்து 2,000 மில்லியன் டாலர் வரை ஓர் ஆண்டுக்குத் தேவை என்று பேச்சு வார்த்தைகளின் போக்கு குறிப்பிடுகின்றது.[2] உலகின் காப்பு நிதியை ஆண்டுதோறும் 1·4%-லிருந்து 2.8% வரை இத் திட்டப்படி பெருக்கலாம். சிறப்பு எடுப்பு உரிமையின் மதிப்பு தற்போது உள்ள டாலரின் பொன் மதிப்புக்குச் சமமாகும்.

[1] Federal Reserve Bulletin, February 1968, p. 119.

[2] Thirty-eight Annual Report of the B.I.S., 1968, p. 118.

தற்சமயம் பன்னாட்டுக் காப்பு நிதியில் போதாமை இருக்கின்றது என்பதை நிதியின் அதிகாரிகள் வெளிப்படையாக ஒரு போதும் ஏற்கவில்லை. தற்போது பற்றுக்குறை இல்லை என்ற அடிப்படையில்தான் பேச்சுவார்த்தைகள் நடைபெற்றன. அடுத்து வரும் ஆண்டுகளில் பற்றுக்குறை ஏற்படலாம் என்று கருதினர். தற்போது எவ்விதத்திலும் காப்பு நிதிப் பற்றுக்குறை இல்லை என்ற அடிப்படையில்தான் சிறப்பு எடுப்புரிமைத் திட்டத்தை வகுத்தனர். ரியோ டி ஜனிரோ (Rio de Janeiro)வில் தற்போதுள்ள காப்பு நிதிகள் போதுமான அளவில் இருக்கின்றனவா, அல்லது பற்றுக்குறை உளதா என்பதைச் சரிவரக் கணக்கிடாதது வருந்தத் தக்கதாகும்.

ரியோ கூட்டத்தில் புதிய முறை என்றிலிருந்து அமலில் வரும் என்பது 3 நிபந்தனைகளுக்குட்பட்டிருக்கின்றன என்று பிரெஞ்சு நிதியமைச்சர் அறிவித்தார். இவை கடுமையாகவும் அமலாகும் நாளைத் தள்ளிப்போடும் வகையிலும் இருக்கும். கீழ்க் காணும் நிபந்தனைகள் நிறைவேறினால்தான் புதிய திட்டம் இயங்கும் என்பது அவர் கருத்து.

(1) இங்கிலாந்து, அமெரிக்க நாடுகளின் துண்டுகள் (deficits) நீங்கவேண்டும், (2) தற்போது உள்ள சரிக்கட்டு முறை (adjustment process) மேலும் திருப்திகரமாக இயங்க வேண்டும். இறுதியாக (3) உலகின் ரொக்க நிலையில் உள்ள போதாமை அல்லது பற்றுக்குறையை அனைத்து நாடுகளும் உணர்தல் வேண்டும். பிரெஞ்சுக் கருத்தைத் தவிர வேறு சிலரும் இத் திட்டம் இயங்குவதில் ஏற்படும் கால தாமதம் பற்றிக் கவலை கொண்டனர். அடுத்து வரும் ஆண்டுகளில் ஒரு நிச்சய மற்ற நிலை தோன்றும். எவ்வளவு பொன்னும், டாலரும் மைய வங்கிகளின் செலாவணிக் காப்பு நிதியில் சேரும், அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையில் மாறுதல்களை விளைவிக்கும் எத்தகைய மாறுதல்கள் ஏற்படும் என்பவை பற்றி நிச்சயமற்ற நிலை ஏற்படும்.[1]

ஆனால் சிறப்பு எடுப்பு முறை 1970ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் தேதி அமலில் வந்தது. 104 நாடுகளுக்கு ஒதுக்கப்பட்ட இவ்வுலகச் செலாவணி உலகக் காப்பு நிதிகளை மேலும் 3,414 மிலியன் டாலர் அளவுக்கு உயர்த்தியது. 1969, டிசம்பர் ஒவ்வொரு நாடும் செலுத்திய கட்டணத்தில் 16·8%ஐ அவை தம் பங்குகளாகப் பெற்றன. இந்தியா 126 மிலியன் டாலரையும், அமெரிக்கா 866.88 மிலியன் டாலரையும், இங்கிலாந்து 409,92 மிலியன் டாலரையும் பெற்றன.

[1] Sir Roy Harrod, 'The Rio Agreement," The Bankers' Magazine, March 1968, pp. 173–81.

தற்போது பொன் பற்றுக்குறை இருக்கின்றது என்பதை ப. நா. நிதியின் நிருவாகம் ஒத்துக்கொள்ளவில்லை; நிதியின் அமைப்பு முழுவதையும் நீக்கி வேறு ஒன்றை நிறுவவேண்டும் என்றும் ஒத்துக்கொள்ளவில்லை. ஆனால் நிதி பொன்னை முன்னிலும் அதிக அளவில் சார்ந்திருப்பதையும் விரும்பவில்லை. பொன்னை மட்டுமே செலாவணிக் கருவியாகக் கொள்ளும் பழக்கம் மறைந்து வருவதை உள்நாட்டுப் பன்னாட்டு வரலாறுகள் புலப்படுத்துகின்றன. உள்நாட்டில் பொன்னுக்குப் பதிலாக மற்றவைகளைப் பரிவர்த்தனைச் சாதனங்களாகவும், கட்டுப்பாட்டுக் கருவியாகவும் பயன்படுத்துகின்றனர். பன்னாட்டு அளவில் ப. நா. நிதியின் காப்புத் தொகைகளும் அன்னியச் செலாவணிகளும் காப்பு நிதியில் 50 சதவீதப் பகுதியாக இருக்கின்றன; பொன் எஞ்சிய 50 சதவீதமேயாகும். பொன்னைச் சார்ந்திருக்கும் பழக்கத்தை சிறப்பு எடுப்பு முறை மேலும் நீக்குகின்றது. சிறப்பு எடுப்பு உரிமை காப்புநிதிப் பெருக்கத்திற்குப் பெரும் பகுதி உதவுவதால், பன்னாட்டுச் சொத்து (International asset) என்ற முக்கியத்துவத்தைப் பொன் மேலும் இழக்கின்றது. பிரெட்டன் உட்ஸ் அமைத்துள்ள பொன் பரிவர்த்தனைத் திட்டம் (gold exchange standard) தொடர்ந்து இயங்குகின்றது. சிறப்பு எடுப்பு உரிமை பன்னாட்டுச் செலாவணி பற்றிய கூட்டு முயற்சிக்கும், அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையில் சமநிலை காண்பதற்கும் உதவுகின்றது. பன்னாட்டு அளவில் ரொக்கநிலை பெருகுவதற்கும் இது உதவும்.[1] சிறப்பு எடுப்பு உரிமை எந்த அளவுக்கு வளரும் நாடுகளின் புறக்காப்பு நிதிகளைப் பெருக்கும் என்பது சர்ச்சைக்குரியது. இப்பிரச்சினையைத் தீர்க்கும் வகையில் திட்டம் நீண்டகால உதவியளிக்கும் வழியினையும் வகுக்க வேண்டும். இவ்வாறு செய்தால் ஒரு பொருளாதாரம் தானாகவே வளர்ச்சி பெறக்கூடியதாகும். தொடக்க நிலையில் இத் திட்டத்திற்குப் பெரிய இடையூறு ஒன்று ஏற்பட்டது. மத்தியக்கிழக்கு நாடுகள் தம் சிறப்பு எடுப்பு உரிமைகள் அனைத்தையும் அல்லது பெரும் பகுதியை ரொக்கமாக்கிவிட்டன.

**சீரமைப்புத் திட்டங்கள்: பன்னாட்டு மைய வங்கி ஒன்றைப் பன்னாட்டுச் செலாவணி முறையின் அடிப்படையாக அமைத்தல்**

தற்போதுள்ள பன்னாட்டு நாணய முறையைச் சீர்திருத்தி மேலும் வலிமைகொண்டதாக அமைக்கப் பல திட்டங்களைத்

[1] William McC. Martin. Jr., 'The Price of Gold is no Problem', Federal Reserve Bulletin, March 1968.

தீட்டியுள்ளனர். இவைகளைப் பரிசீலனை செய்யும் நிலைக்கு இப்பொழுது நாம் வந்துள்ளோம். இவைகளுள் ஒரு திட்டம் பலர் கவனத்தைக் கவர்ந்தது, பெரும் கருத்து வேற்றுமை களையும் கிளப்பியது. இதன்படி தற்போதுள்ள முறையை நீக்கி அதன் இடத்தில் ஒரு மைய வங்கி நிலையத்தை நிறுவுதல் வேண்டும். இத் திட்டத்தின் பல பாணிகளையும் (சிறு மாறுதல் கள் கொண்டவை) அளித்துள்ளனர். புதிய முறைப்படி ப. நா. நிதிக்குப் பதிலாக ஒரு பன்னாட்டு மைய வங்கியை (Supranational Central Bank) அல்லது பன்னாட்டு மாற்றுச் சமநிலைக் கணக்கை (Supranational Exchange Equalisation Account) நிறுவ வேண்டும்.

ப. நா. நிதியைச் சீர்திருத்துவதற்கு அளிக்கப்பட்ட திட்டங் களைப் பரிசீலனை செய்வதற்கு முன் பன்னாட்டு நிதி முறையாக இயங்கவேண்டிய மைய வங்கியைப் பரிசீலனை செய்வது நல்ல தாகும். பன்னாட்டு நிதிமுறை சரிவர இயங்குவதற்குச் சில நிபந்தனைகள் உள. முதலில் இந்த முறை ரொக்க நிலையைப் பெருக்கி வர்த்தகம் வளருவதற்கு வழி வகுக்கவேண்டும்; இரண்டாவதாகப் பல உறுப்பினர்களாகிய நாடுகளிடையே செலாவணி மாற்று நிலை (exchange rate) ஸ்திர நிலையில் இருக்க ஏற்பாடு செய்யவேண்டும்.[1] ஸ்திர நிலையும் (stability), ரொக்க நிலையும் (liquidity) ஒன்றுடன் ஒன்று பிணைந்துள்ளன. ஆயினும் இவைகளைப் பிரித்தாய்வு செய்தல் நன்மை பயக்கும். அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையில் தற்காலிகப் பாதகநிலை ஏற்படுவ தாலும், குறுகிய காலத்தில் மூலதனத்தை மீட்பதால் எழும் நிலையைச் சமாளிக்க வேண்டியதாலும், நாடுகளிடையே செலுத்தவேண்டிய தொகைகளுக்குப் பணிபுரிய வேண்டியிருந்த தாலும் பன்னாட்டு ரொக்க நிலை பற்றிய பிரச்சினை எழுகின்றது. பன்னாட்டு ரொக்க நிலையை நிதி சரிவரப் பெருக்கவில்லை என்று சிலர் கூறுகின்றனர். வழக்கமான சாதாரணக் கட்டணங் களுக்கும், நடப்புக் கணக்கின் தற்காலிகப் பற்றுக்குறைக்கும் இப்போதுள்ள ரொக்கநிலைபோதும் என்றாலும்; விரைவில் வளரும் நாடுகளுடைய பொருளாதாரத் தேவைகளை எதிர்காலத்தில் சமாளிப்பதற்கு இது போதுமா என்பது ஐயப்பாட்டுக்குரியது. பெரிய தொழில் முன்னேற்றமுள்ள நாடுகளின் நெருக்கடி நிலை களைச் சமாளிக்கவும் இது போதுமா என்பது சர்ச்சைக்குரியது, பெருகிவரும் உலகப் பொருளாதாரத்திற்கும் ஏற்ற முறையில் வசதிகள் பெருகுவதற்கும் இம் முறை வழிவகுக்கும் என்ற உறுதி இல்லை.

[1] Per Jacobsson quoted in H. G. Grubal's 'World Monetary Reform,' p. 227.

இரு நோக்கங்களுடன் ப. நா. நிதியை நிறுவினர். ரொக்க நிலையை ஏற்படுத்துவதும், நாணய மாற்று வீதங்களை ஸ்திர நிலையில் வைப்பதும் இந் நோக்கங்களாகும். அது பொன் பரிவர்த்தனைத் திட்ட அடிப்படையில் அமைந்துள்ளது. அத் திட்டத்தின் குறைபாடுகளனைத்தும் நிதிக்குப்பொருந்தும். அதன் நல்ல அம்சங்களையும் ப. நா. நிதி கொண்டிருக்கின்றது.

பன்னாட்டு நாணய நிதியின் பொன் பரிவர்த்தனைத் திட்டத்தில் (gold exchange standard) பொன் பற்றிய முரண்பாடு இருக்கின்றது. (1) பொன் பல உறுப்பினர்களாகிய நாடுகளின் காப்பு நிதியாக இருக்கின்றது. (2 இறுதியில் நாடுகளிடையே பணம் செலுத்தும் சாதனமாகவும் அது பயன்படுகின்றது. (3) அவ்வப்போது ஊக வாணிகர்களுடைய தேவைகளையும், பொன்னைப் பதுக்குவோர் (hoarders) தேவைகளையும் அது சமாளிக்கவேண்டும். உலகின் பொன் அளிப்பு இத் தேவைகளுக்கெல்லாம் போதுமான நிலையில் இல்லை.

மொத்தத் தேவையின் ஒரு பகுதியைச் சமாளிப்பதற்குக் கூட மொத்த அளிப்பு போதாது என்று சிலர் குறிப்பிடுகின்றனர். ஆயினும் நாம் விடாமல் பிடித்துக்கொண்டிருக்கின்றோம். அண்மையில் நிகழ்ந்த சில கடுமையான நெருக்கடிகளைத் தீர்க்க நல்ல சந்தர்ப்பங்களும் அவ்வப்போது எடுத்த அவசர நடவடிக்கைகளும் உதவின, வானிலை சாதகமாக இருக்கும்போது இது சரிவர இயங்கும். திறமையுடன் நிருவகிக்கும்போது இது நன்கு இயங்கும். வானிலையில் புயல் வீசும்போது முன்னறிவிப்பின்றி இது முரிந்துவிடும். எனவே சூழ்நிலை பாதிக்கப்பட்டாலும் நன்கு இயங்கும் ஒரு செலாவணி முறையை நிறுவவேண்டும்.

தற்போதுள்ள முறையில் ஸ்திர நிலையைப் பாதிக்கும்தன்மை ஒன்று இருக்கின்றது. முக்கியமான செலாவணிகளின் (key currencies) குறுகியகாலக் கடன்கள் குறிப்பாக டாலர், ஸ்டெர்லிங் பவுன் போன்றவை—இப்போது இருக்கும் பன்னாட்டு ரொக்க நிலையின் பெரும் பகுதிக்குக் காரணமாக இருக்கின்றன. தனி நாடுகள் தொடர்ந்து சில செலாவணிகளைக் காப்பு நிதியாகக் கொள்வதைப் பொறுத்து தற்போதுள்ள பன்னாட்டுச் செலாவணி முறை இருக்கின்றது. எனவே பன்னாட்டு வர்த்தகத்திலும் நிதி முறையிலும் முக்கியமாக உள்ள ஸ்திரநிலை கொண்ட உலக நாடுகளின் சில செலாவணிகளையே இன்றைய முறைக்குப் பயன்படுத்த வேண்டியிருக்கின்றது. ஒரு செலாவணியின் ஸ்திர நிலை பற்றிய ஐயப்பாடுகள் எழுந்தால் பலமிழந்த செலாவணியை

விடுத்து வலிவுள்ள செலாவணிகளை நாடுகின்றனர். இவைதான் காப்புள்ளதாகவும் இருக்கின்றன. இத்தகைய இயல்புகள் கொண்ட செலாவணி எதுவும் இல்லாவிடில் பொன்னை நாடுகின்றனர். இந்த நிலையில் காப்புச் செலாவணிகளைப் பொன்னாக மாற்ற எல்லோரும் போட்டியிடுகின்றனர். காப்புச் செலாவணிகளை வேண்டும்பொழுது பொன்னாக மாற்ற இருக்கும் உரிமையே இம்முறையின் பிரதானக் குறைபாடாகும். இவ்வியல்பு இரு போர்களுக்கும் இடையே உள்ள காலத்தில் தேசீயப் பொன் பரிவர்த்தனைத் திட்டத்தைப் (national gold standard) பாதித்தது. பன்னாட்டுப் பொன் பரிவர்த்தனைத் திட்டத்தின் (international gold exchange standard) வீழ்ச்சிக்கும் இதே காரணங்கள் இருந்தன.

தேசீய வங்கிகள் மற்ற வங்கிகளை ஆதாரமாகக் கொண்டு இயங்குவதைப்போல், மைய வங்கிகள் பன்னாட்டு மைய வங்கியை ஆதாரமாகக் கொண்டு இயங்க வேண்டும். பன்னாட்டு மைய வங்கிக்கும் மற்ற மைய வங்கிகளுக்கும் இடையே உள்ள தொடர்பு ஒரு நாட்டின் மைய வங்கிக்கும் மற்ற வங்கிகளுக்கும் இடையே உள்ள தொடர்பை ஒத்திருக்கும். பெடரல் ரிசர்வ் முறையில் உள்ள தொடர்பைப் போலிருக்கும். எல்லா நாடுகளுடைய பொறுப்புகளையும் அவை பகிர்ந்துகொள்வதற்குப் பன்னாட்டு மைய வங்கி வழி வகுக்கும். இதுவே அதன் நன்மையாகும்.[1] தேசீய நிதிகளை அது திரட்டி, அவைகளை டெப்பாசிட்டுகளாக ஏற்று அவைகளுக்கு ஈடாகப் பொன் சான்றிதழ்களை (gold certificates) அளிக்கும். இவை பன்னாட்டுச் செலாவணிகளாக இயங்கும். இனி மைய வங்கிகள் பொன் சான்றிதழ்களை மட்டுமே (இம் முறைப்படி) காப்பு நிதியாகக் கொள்ளலாம். தனியார் மார்க்கட்டுகள் ஏற்காத புதியதாக உற்பத்தியாகும் பொன் முழுவதையும் பன்னாட்டு மைய வங்கியில் செலுத்த வேண்டும். பல மைய வங்கிகளிடையே அவை பன்னாட்டு மைய வங்கியில் கொண்டுள்ள டெப்பாசிட்டுகளைச் செலுத்துவதன் மூலம் அவைகளுடைய கடன்களைத் தீர்க்கலாம். நாடுகளுடைய வரவு, பற்றுகளிடையே (credit and debit) உள்ள வேறுபாட்டை ஒரு மையத் தீர்வகம் (clearing house) என்ற முறையில் இவ் வங்கி தீர்க்கும். இதற்காக அவைகளுடைய வரவு — பற்றுகளை மாற்றினால் போதும். பொன்னை ஒரு நாடு மற்றொன்றுக்கு அனுப்பத் தேவையில்லை. டாலரோ அல்லது ஸ்டெர்லிங்கோ இப்பொழுதுபோல் காப்பு நிதியாகப் பயன்படவேண்டாம். தற்போதுள்ள முக்கியச் செலாவணி முறை (key currency) நீங்கி

[1] James Angelli The Economic Journal LXXI, December 1916.

விடும். தற்போதுள்ள பன்னாட்டுப் பொன் பரிவர்த்தனைத் திட்டத்தின் குறைகள் மறைந்துவிடும். ஒரு பன்னாட்டுக்கணக்குச் செலாவணி (International monetary unit of account) தேசிய மைய வங்கிகளுடைய டெப்பாசிட்டுகளைப் பின்னணியாகக் கொண்டு காப்பு நிதியிலுள்ள செலாவணியின் அலுவல்களைச் செய்யும். இச் செலாவணிக்கு எப் பெயர் வேண்டுமானாலும் கொடுக்க வேண்டும்.

காப்பு நிதிகளைக் கொண்டிருக்கும் ஒரு நாடு, தொடர்ந்து குறுகிய காலச் செலாவணிப் பொறுப்புகள் பெருகுவதாலும், அதன் மொத்தக் காப்புத் தொகை பெருகாததாலும் தன் எச்சக் காப்புத் தொகை குறைவதை அனுமதிக்கவேண்டும். மேற் குறிப்பிட்ட புது முறைக்கு இது வேண்டியதில்லை. இத்தகைய நிலை ஏற்பட்டால் அயல் நாட்டினர் காப்புச் செலாவணியில் கொண்டிருக்கும் நம்பிக்கை குறையும். இந்த முறையும் தானாகவே வீழ்ச்சியடையும். இங்கிலாந்தும் அமெரிக்காவும் தம் குறுகிய காலச் செலாவணிப் பொறுப்புகள் தாறுமாறான முறையில் பெருகுவதை அனுமதிக்கும்வரை தற்போதுள்ள முறை சுலபமாக இயங்குவதற்குத் தடையேதும் இருக்காது. இதற்கு மாறாக உலகின் ரொக்க நிலையில் பெருமளவு பெருக்கம் ஏற்பட்டது. ஆனால் இப்போதுள்ள அவைகளுடைய அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையைப் பார்க்கும்போது இப்போக்கை நம்பிக்கையுடன் பார்த்துக்கொண்டிருக்க முடியாது.

புதிய பன்னாட்டு வங்கி முறையின் முக்கியமான இயல்புகளைக் கீழே காணலாம்:—(1) தொடக்கநிலையில் உறுப்பினர்களாகிய நாடுகள் தம் காப்புத் தொகையில் பெரும் பகுதியை இவ் வங்கியில் டெப்பாசிட்டாகக் கொள்ளவேண்டும். பின்னர் காப்புத் தொகை முழுவதையும் டெப்பாசிட்டாகக் கொள்ள வேண்டும். (2) 'முக்கியச் செலாவணிகளை' (key currencies) வெளியிடும் நாடுகளிடம் உறுப்பினர்கள் எதையும் கோர முடியாது. மைய வங்கியிடம் உதவியை நாடலாம். (3) உறுப்பினர்களுக்கு வங்கி ரொக்கத்தை அளிக்கும். அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையில் விழும் துண்டுகளைச் சமாளிக்க அதிகப் பற்றுக் கடனைக் (overdraft) கொடுக்கும்; கடனுதவியைக் கொடுக்கும். (4) குறிப்பிட்ட நாடுகளின் மார்க்கட்டுகளில் வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளை இவ்வங்கி செய்யும். எந்த நாடுகளுக்கு உபரிக் காப்பு நிதியும் ரொக்கத் தொகையும் தேவை என்று இவ் வங்கி கருதுகின்றதோ அவைகளுக்கு வெளி மார்க்கட்டு நடவடிக்கைகள் மூலம் உதவியளிக்கும்.[1] (5) இவ்

[1] R. Triffin, Gold and the Dollar Crisis.

வங்கி ஒரு மாற்றுச் சமநிலைக் கணக்ககமாகவும் (exchange equalisation account) பணி புரியும்.[1] ஒரு செலாவணியின், உதாரணமாக ஸ்டெர்லிங் மற்றொன்றுடன் கொண்டுள்ள வீத மதிப்பு (உதாரணமாக டாலருடன் கொண்டுள்ளது) குறைக்கப் பட்டால் இம் மைய வங்கி ஸ்டெர்லிங்கை வாங்கி அதற்கீடாகப் பொன் சான்றிதழ்களைக் கொடுக்கும். டாலரை விற்பனை செய்யும். சில தேசீயச் செலாவணிகளை ஏற்றுப் பொன் சான் றிதழ்களை அவைகளுக்கீடாக வங்கி அளிக்கலாம். அல்லது அவை களைக் கொடுத்துப் பொன் சான்றிதழ்களை அது வாங்கலாம். இவ்வாறு அதன் வசமுள்ள பொன் சான்றிதழ்களை அது கண்காணிக்கலாம். ஒரு செலாவணிக்கெதிராக மற்றொன்றுக்கு வங்கி தற்காலிகமாக ஆதரவளிக்கலாம். இதற்காக அது தன் வசமுள்ள தேசீயச் செலாவணிகளைப் பயன்படுத்தலாம்.

**ட்ரிஃபின் திட்டம் (Triffin Plan) அல்லது அனைத்துலக மைய வங்கி (International Central Bank)[2]**

ட்ரிஃபின் திட்டத்தின் சாரம் தேசீயச் செலாவணிகள் காப்பு நிதியாக இருப்பதை நீக்குவதாகும். காப்பு முழுவதையும் அனைத்துலகத் தொகைகளாக்கவேண்டும். உலகச் செலாவணி முறையில் தற்போதுள்ள குறையை இது நீக்கும். ஒரு தேசீயச் செலாவணிக்குப் பதிலாக மற்றொன்றை அல்லது பொன்னைத் தற்போது பயன்படுத்துவதால் குறை ஏற்படுகின்றது. இத் திட்டப்படி பன்னாட்டு நாணய நிதி உண்மையான அனைத்துலக மைய வங்கியாக வேண்டும். உறுப்பினர்கள் மற்ற நாடுக ளுடைய செலாவணிகளைத் தம் காப்பு நிதியாகப் பயன்படுத்தக் கூடாது. புதிய பன்னாட்டு நாணய நிதியில் பொன்னாகத் தம் காப்புகளை வைத்துக்கொள்ள விரும்பாவிடில் பன்னாட்டு டெப்பாசிட்டுகளாகக் கொள்ளலாம். இவை பொன்னாக மாற்றக்கூடியவை. இந்த டெப்பாசிட்டுகள் பொன்னாக மாற்றக்கூடிவை மட்டுமல்ல. நாணய மாற்று வீதக் காப்பும் (exchange rate guarantees) இதற்குண்டு. நிதி தன் முதலீடு களின், கடன்கள் மூலம், பெறும் வருமானத்தைப் பொறுத்து. இந்த டெப்பாசிட்டுகளுக்கு வட்டி கொடுக்கும். வட்டி வீதத்தை அவ்வப்போது அறிவிக்கும். டெப்பாசிட்டுகளின் மதிப்பைப் பொன் அலகுகளில் (gold units) கணக்கிடுவர். செலாவணிகளின் மாற்று வீதங்களைத் திருத்தினாலும் அல்லது அவைகளைப் பொன்னாக மாற்றும் தன்மையைத் திருத்தினாலும்

[1] J. E. Meade, 'The Future of International Payments,' in the Three Banks' Review, June 1961.

[2] See R. Triffin, 'Gold and the Doller Crisis,' pp. 102-20.

இந்த டெப்பாசிட்டுகள் பாதிக்கப்படா. இவைகளைக் கொண்டிருக்கும் நாடுகள் தம் செலுத்து பாதக நிலையைத் தீர்க்க இவைகளைத் தாராளமாகப் பயன்படுத்தலாம். நிதியில் அங்கம் வகிக்காத நாடுகளுக்கும் இவைகளைச் செலுத்தலாம். உறுப்பினர்கள் தம் நாட்டுக் காப்பு நிதி பற்றிய சட்டங்களையொட்டி நடக்க விரும்புகையில் டெப்பாசிட்டுகளைக் காப்பாகப் பாவிக்க முடியாது. தொடக்க நிலையில் உறுப்பினர்கள் தம் வசமுள்ள மொத்தப் பொன்னிலும், அன்னியச் செலாவணியிலும் 20 சதவீதத்தை நிதியில் டெப்பாசிட்டாகக் கொள்ளவேண்டும் என்று ட்ரிஃபின் கூறுகின்றார். உறுப்பினர்கள் நிதியில் குறைந்த பட்சத் தொகைக்குமேல் உள்ள டெப்பாசிட்டைப் பொன்னாக மாற்றிக்கொள்ளலாம். நாளடைவில் குறைந்தபட்ச விகிதத்தை உயர்த்தவேண்டிய அவசியம் ஏற்படலாம். இவ்வாறு செய்தால் தான் நிதி முழு ரொக்க நிலையும், போதிய அளவு மாற்றுத் தன்மையையும் (conversibility) பெறும். நாளடைவில் எல்லாக் காப்புத் தொகைகளையும் புதிய நிதியில் நாடுகள் சேர்த்துவிடும் என்று ட்ரிஃபின் நம்புகிறார். ஏனெனில் நிதி பாதுகாப்பையும், டெப்பாசிட்டுக்கு வட்டியையும் அளிக்கும். நிதி இவ்வாறு அடையும் சொத்துகளில் 5 சதவீதத்தை ஆண்டுதோறும் தீர்த்துவிடுவதற்கு உரிமை பெறவேண்டும். உறுப்பினர்களின் அயல்நாட்டுப் பாதகக் கொடுப்பல் நிலையைச் சரிக்கட்டுவதற்காக நிதி வெளி மார்க்கட்டு நடவடிக்கைகளில் ஈடுபடலாம். பன்னாட்டுக் காப்பு நிதிகளை உயர்த்துவதற்காகவும் இதை மேற்கொள்ளலாம்.

(1) கீன்ஸ் அவர்களுடைய திட்டத்திற்குத் தெரிவித்த ஆட்சேபத்தை இத்திட்டத்திற்கும் தெரிவிக்கலாம். நிதி பெறும் கடன் கொடுக்கும் அதிகாரம் சரிவரப் பயன்படுத்தப்படாவிடில் உலகப் பொருளாதாரத்தில் கடுமையான பணவீக்கம் ஏற்படலாம். புதிய நிதி டெப்பாசிட்டுகளை ஏற்கலாம், புதிய பன்னாட்டுச் செலாவணியைக் கடன் கொடுக்கலாம். ஆகையால் அது தீமை பயக்கக்கூடிய கடுமையான பண வீக்கத்தை விளைவிக்கலாம். இவ்வாபத்தைச் சிலர் மிகைப்படுத்திக் கூறியிருக்கலாம். ஆனால், ஆபத்து இருக்கின்றது.[1] பன்னாட்டு ரொக்க நிலையைக் காப்பதற்குத் தேவையான அளவு மட்டும் நிதிக்கடன் கொடுக்கலாம் என்று அதன் அதிகாரத்தைக் கட்டுப்படுத்தி இந்த லாபத்தைத் தவிர்க்கலாம் என்று ட்ரிஃபின் கூறுகின்றார். மொத்த

[1] James Angell, 'Reorganisation of the Monetary System', in the Economie Journal, LXXI, December, 1965.

உலகக் காப்பு நிதியின் [செலாவணிப் பொன்னின் (monetary gold) அளவு உயர்வது உட்பட] அளவை வெளி மார்க்கட்டு நடவடிக்கை மூலம் ஆண்டுதோறும் 3 முதல் 5 சதம் வரை உயர்த்தலாம். இதை உலக நாடுகள் முடிவு செய்துகொள்ளலாம்.

(2) நிதியின் வெளி மார்க்கட்டு நடவடிக்கை முன்னேற்ற மடைந்த நாடுகளின் மூலதன மார்க்கட்டுகளில்தானிருக்கும். இவை வளரும் நாடுகளல்ல. நிதி செய்யும் (அனைத்துலகக் காப்பு நிதிகளைப் பெருக்க) முயற்சிகளால் இவை மட்டுமே பெரும் பாலும் பயனடையும்.

(3) தற்போதுள்ள திட்டத்தைவிட ட்ரிஃபின் முறை சிறந்தது. ஆயினும் அயல்நாட்டுக் கொடுப்பல்நிலை செலுத்தல் களைத் தீர்க்க வல்லதாக இல்லை. இதைப் பின்பற்றுவதால் அயல் நாட்டுச் செலுத்தல் பாதகநிலை நீங்காது. இவை உறுப்பினர் களுடைய காப்பு நிதிகளைக் குறைத்துக் குறுகியகால டாலர் பொறுப்புகளைப் பெருக்கின.[1]

(4) ட்ரிஃபின் திட்டம் எந்திர விசைபோல் இருக்கின்றது. இம் முறையின்கீழ் பன்னாட்டுக் காப்பு நிதிகள் இறக்குமதியுடன் நேர்த்தியற்ற தொடர்பு கொண்டிருக்கின்றன. 'பன்னாட்டு வர்த்தகத்தைக் காட்டும் பட்டியலைக் கொண்டு கணக்குச்செய்து காப்புத் தொகை எவ்வளவு வேண்டும் என்று நிர்ணயம் செய்ய முடியாது.'[2]

(5) சிலர் ட்ரிஃபின் திட்டம் பண வீக்கத்தை விளைவிக்கும் என்று கருதுகின்றனர். திரு. பர்ன்ஸ்டீன் ( Mr, Bernstein) இது பணச் சுருக்கத்தை ஏற்படுத்த அதிக சாத்தியக் கூறுகள் இருக்கின்றன என்று கருதுகின்றார். செலாவணிக் காப்புநிதிகள் பெருகவேண்டிய அளவுக்குக் கடன் வாங்குவோரைக் காண்பது அறிதாகும். கடன் வாங்கும் நாடுகள் பெருமானம் உள்ளவை, செம்மையான செலாவணி, வங்கிக் கொள்கைகளைப் பின்பற்று கின்றன என்பதைப் பன்னாட்டு மைய வங்கி உறுதி செய்து கொள்ளவேண்டும். இந்த நிலையில் இருந்தாலும் ஒரு நாடு தன் அயல் நாட்டுக் கொடுப்பல்நிலை பாதகமாக மாறும்போது கட்டாயம் கடன் வசதி பெறமுடியும் என்ற நிச்சயம் இல்லை.[3]

[1] L. B. Yeager, 'The Triffin Plan Diognosis, Remedy and Alternative' in Kykols, 1961.

[2] Oscar L. Artman, 'Triffin on International Liquidity and the Role of the Fund,' I.M.F. Staff Papers, April 1961.

[3] E. M. Bernstein, 'Proposed Reforms in the International Monetary System' Hearings, Joint, Economic Committee, Sub-committee on International Exchange and Payments (Washington, 1962). Quoted by H.G Gurbal World Monetary Reforms, p. 201.

(6) பொன் பரிவர்த்தனைத் திட்டத்திற்கும், பொன்னை அறவே நீக்கிய பன்னாட்டுக் கடன் முறைக்கும் இடையே உள்ள நடுநிலையில் ட்ரிஃபின் திட்டம் இருக்கின்றது. பொன் பரிவர்த்தனைத் திட்டத்தின் பெரும் குறைபாட்டை நீக்காமல் பெருக்கியுள்ளனர் என்று இதைக் குறைகூறியுள்ளனர். பொன்னைப் பன்னாட்டு நாணய நிதிக்கு மாற்றி இக்குறையை மிகைப்படுத்தியுள்ளனர். இறுதியில் பொன்னைத் தற்போதுள்ள இடத்திலிருந்து நீக்கிப் பன்னாட்டுக் கடன் செலாவணியை அந்த இடத்தில் அமர்த்துவதுதான் சரியான பிரச்சினைத் தீர்வாகும். ஆனால், பெரிய நாடுகள் இப்பொழுது கொண்டுள்ள செலாவணி உயர் நிலையை (monetary sovereignty) அவை விட்டுக்கொடுக்க வேண்டும். அயல்நாட்டுப் பாதகக் கொடுப்பல் நிலையை நீக்குவதற்காகப் பன்னாட்டு வங்கியிடமிருந்து உதவி பெறுவதற்கு முன் தம் உள்நாட்டு நிலையை இவ் வங்கி பார்வையிடுவதற்கு அனுமதிக்கவேண்டும்.[1]

## காப்பிலுள்ள பொன்னின் மதிப்பை உயர்த்துவதற்குத் திரு. ஹாராட் திட்டம் (The Harrod Plan)

பல பொருளியலாருள் திரு. ஹாராட் அவர்கள் எல்லாப் பெரிய பிரச்சினைகளையும் தீர்ப்பதற்குப் பொன்னின் மதிப்பைத் (காப்பிலுள்ள பொன்) திருத்தியமைத்தல் உத்தமமாகும் என்று முறையாக விளக்கியுள்ளார்.[2] அவருடைய வாதங்களைக் கீழே காணலாம்.

(1) பொன்னின் டாலர் விலையை (dollar price) உயர்த்தினால் நீண்டகாலத்தில் அதன் உற்பத்தியும் அளிப்பும் அதிகரிக்கும். (2) உடனடியாக உலகுக்குக் கிடைக்கும் காப்பு நிதியும் அதிகரிக்கும். ஏனெனில் பொன்னின் மதிப்பு உயருகின்றது. இரண்டாவதாகப் பதுக்கலிலிருந்து பொன்னை உயர் மதிப்பு மீட்கும். (3) மூன்றாவதாக மதிப்பு உயர்வதால் தேசீயச் செலாவணிகளைப் பொன்னாக மாற்றுவதற்கு உள்ள போட்டி குறையும். (4) தற்போது அமெரிக்க முதல் ஐரோப்பாவுக்குச் செல்கின்றது. இது ஐரோப்பாவுக்கு நன்மை பயக்காது. அமெரிக்காவுக்கும் உகந்ததல்ல, அதன் அன்னியக் கொடுப்பல் நிலையைப் பாதிக்கின்றது. ஆனால், அமெரிக்க அரசு இதுகாறும்

[1] See H. G. Johnson, 'International liquidity : Problems and Plans' in Malayan, Economic Review, April 1962.

[2] A Review by Sir Roy Harrod of Triffin's, 'Gold and the Dollar Crisis' entitled 'A Plan for Iocreasing Liquidity' in Economics, May 1961, pp.195-202. Also two papers, 'Liquidity' and 'Growth and Liquidity', published in 1961 and 1962 in 'Revista di Politica Economica.

டாலரின் மதிப்பைக் காத்தனர், இது ஒரு கவுரவப் பிரச்சினை யாகிவிட்டது. ஆதலின் டாலரின் மதிப்பைக் குறைக்கும் நடவடிக்கை எதையும் எடுப்பதைத் தவிர்த்தனர்.

திரு. ட்ரிஃபின் இத் திட்டத்தைக் கடுமையாகத் தாக்கியுள்ளார். முதலில உற்பத்தியை ஊக்குவிக்கத் தேவையாகும் விலையுயர்வு (பொன்னின்) மிக அதிகமாக இருக்கும். இரண்டாவதாக உலகப் பொருளாதார வளர்ச்சியை ஒட்டி அடிக்கடி பொன்னின் மதிப்பை உயர்த்தவேண்டி யிருக்கும். மூன்ருவதாக ஒவ்வொரு முறையும் செய்யப்படும் விலையுயர்வு தற்காலிகமாகவே ரொக்கநிலையைப் பெருக்கும். இறுதியாக முதலில் பொன்னின் மதிப்பை உயர்த்துவதால் ஏற்படும் நன்மை. பின்னர் தாறுமாருக பாதிக்கப்படும். நியாயமற்ற முறையிலும் மாறுதல்கள் ஏற்படும். அதிகக் காப்பைக் கொண்டுள்ள நாடுகளுக்கு அதிக நன்மையும், குறைந்த தொகை வைத்திருப்போருக்குக் குறைவான நன்மையும் ஏற்படும்.[1] பொன் விலையுயர்வு வானிலிருந்து பொழியும் 'அமுதம்' போல் இருக்கும். இப்போதுள்ள பணவீக்கத்தை மேலும் கடுமையாக்கும் என்று ஒரு விமர்சகர் குறிப்பிட்டுள்ளார்.[2]

பர்ன்ஸ்டீன் திட்டம் (The Bernstein Plan)

பர்ன்ஸ்டீன் திட்டத்தைப் பழைய முறையை ஆதரிப்போர் வரவேற்கின்றனர். ஐரோப்பிய மைய வங்கியரில் பெரும்பாலோர் இத்தகையவர்கள். உலகில் பெரும் ரொக்கப் பற்றுக்குறை இல்லை என்றும் 'முக்கியச் செலாவணி முறை' (key currency system) வெப்பச்செலாவணியின் (hot currency) துரித இடப் பெயர்ச்சி இல்லையெனில் நன்கு இயங்கும் என்றும் அவர்கள் கருதுகின்றனர். உபரித் தொகைகளைக் கொண்டுள்ள நாடுகள் மற்றவைகளுக்குக் கடன் கொடுக்கும் ஒரு திட்டம் மேற்குறிப்பிட்ட முறைக்கு உதவும். பன்னாட்டுக் குறுகிய கால முதலில் ஏற்படும் ஏற்றிறக்கங்கள் தற்போதுள்ள முறையின் பலவீனத்துக்குக் காரணம். இக் குறைகளை நீக்குவதே பர்ன்ஸ்டீன் திட்டத்தின் முக்கிய நோக்கமாகும். இவை முறையே :[3]

(1) உறுப்பினர்களுடைய கட்டணத் தொகையை (பன்னாட்டு நாணய நிதிக்கு அவர்கள் செலுத்தியது) இயங்கும் தொகையுடன் சேர்த்தல். இவ்வாறு செய்வதால் பன்னாட்டுக் காப்பு நிதிகள் கூடும்.

[1] R. Triffin, op cit.. pp. 81–2.

[2] I. M. F. Staff Papers, April 1960.

[3] The Economist, 6 May, 1961.

(2) காப்புத் தொகைத் தீர்வுக் கணக்கு ஒன்றை (கா. தீ. க— Reserve Statement Account) நிதிக்குத் துணையாக நிறுவுவது. விசேஷ முறையில் கடனுதவியளிக்க இது ஏற்பாடு செய்யும். ப.நா. நிதியின் பத்திரங்களை முக்கிய நாடுகள் வாங்குவதன் மூலம் கா. தீ. கணக்குக்குக் கடனளிக்கும். அவை குறிப்பிட்ட தொகையை விண்ணப்பத்தின் பேரில் இவ்வாறு கொடுக்கும். இம் முறையில் விடுவிக்கப்பெற்ற தேசீயச் செலாவணியை, நிதி, வெப்பச் செலாவணிப் பிரச்சினையின் விளைவாக ஏற்படும் தொல்லைகளைச் சமாளிப்பதற்கு உறுப்பினர்களுக்குக் கொடுக்கும். பத்திரங்கள் பொன் உறுதியைக் (gold guarantee) கொண்டிருக்கும், வட்டியை ஈட்டும், குறுகிய தவணை கொண்டிருக்கும். அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை பிரச்சினைகளைச் சமாளிக்க வேண்டிய ஒரு நாடு அதன் பத்திரங்கள் முதிர்வடையும் முன்பே அவைகளையும் மாற்றலாம்.

தற்போதுள்ள முறையைத் தீவிரமாக மாற்றவேண்டாம். இது இத் திட்டத்தின் நன்மையாகும். ப. நா. நிதியின் அமைப்பு இன்றும் மாருமல்தான் இருக்கின்றது. அதிகக் காப்பு நிதியைக் கொண்டுள்ள, பெருமளவு பன்ஞட்டு வர்த்தகம் கொண்டுள்ள நாடுகளுடைய போக்கே பன்ஞட்டுச் செலாவணி முறையின் போக்கை நிர்ணயிக்கின்றது என்பதை இத் திட்டம் ஏற்கின்றது.

ஆனுல் இத் திட்டம் சில பிரச்சினைகளைக் கிளப்புகின்றது :

(1) கடன் கொடுக்கும் மார்க்கட்டுகளுக்கும் அதை வாங்கும் மார்க்கட்டுகளுக்கும் இடையே வட்டி வீதத்தில் பேதம் இருந்தால் இதைக் காப்புத் தொகைத் தீர்வுக் கணக்கு (கா. தீ. க.) ஏற்கும். இதனுல் கா. தீ. கணக்குக்கு இழப்பு ஏற்படும். உறுப்பினர்கள் மார்க்கட்டு வீதத்தைவிடக் குறைவான வீதத்தில் கா. தீ. கணக்குக்கு நிதியுதவி செய்தல்வேண்டும் அல்லது இதிலிருந்து கடன் பெறுவோர் மார்க்கட்டு வீதத்தை விட உயர்வான வீதத்தை இதற்குக் கொடுக்கவேண்டும்.

(2) காப்புத் தொகையைப் பெருக்கி அதன் மூலம் ரொக்கத்தைப் பெருக்குவது இம்முறையின் முக்கியக் குறைபாடாகும். பெருமளவு காப்புநிதியைக் கொண்டிருக்கும் முக்கிய நாடுகளுடைய விருப்பமே இத்தொகை எவ்வளவு அதிகரிக்கும். எப்போது அதிகரிக்கும் என்பவைகளை நிர்ணயம் செய்யும். எனவே, இவை மிகக் குறைவாக இருக்கும் அல்லது அதிகரிப்புக்குக் காலதாமதம் ஏற்படும்.

(3) நிதியின் கட்டணத் தொகைகள் முதல் காப்பு அணியாக (first line reserves) இருந்தபோதிலும் பொன்னை இறுதிக் காப்பாகக் கொண்டுள்ள பன்னாட்டு முறையில் இது ஒரு துணை நிலையில்தான் இருக்கும்.[1] ட்ரிஃபின் திட்டம் (Triffin plan) மறுக்கப்பட்டதற்கு முக்கியக் காரணம், 'அது பொலிவிய நாணயத்தையும், ரூபாய்களையும், ரூப்பியர்களையும் (Rupiahs) கயட்டுகளையும் (Kyats) மற்றப் பயனற்ற பன்னாட்டுச் செலாவணிகளையும் நிதியில் சேர்க்கும்' என்பதாகும்.[2]

### ஸ்டாம்புத் திட்டம் (The Stamp Plan)[3]

ப நா. நிதியின் முன்னாள் ஆங்கிலேய இயக்குநர் உருவாக்கிய இத்திட்டம் இரு கூறுகளைக் கொண்டிருக்கின்றது. ஒன்று பழையது; மற்றது புதியது. முதல் திட்டப்படி ப.நா. நிதி அடுத்து வரும் 12 மாதங்களில் குறிப்பிட்ட அளவு பொன் சான்றிதழ்களை வெளியிட அனுமதி பெற வேண்டும். இதன் மதிப்புப் பொன்னில் வெளியிடப்படும்; ஆனால் இதைப் பொன்னாக மாற்ற இயலாது. ஒவ்வோர் உறுப்பின நாடும் இதை நிதியிடமிருந்து அல்லது மற்ற நாடுகளின் மைய வங்கிகளிடமிருந்து (குறிப்பிட்ட வீதத்தில்) பெற்று அதற்கு ஈடாகத் தன் செலாவணியைக் கொடுக்கச் சம்மதிக்க வேண்டும். எனவே சான்றிதழ்களைக் கொண்டுள்ள நாடு மற்ற நாட்டுச் செலாவணியை அதற்கு ஈடாகக் குறிப்பிட்ட வீதத்தில் பெறலாம். நிதி இச் சான்றிதழ்களை உதவி இணைப்பகத்திற்கு (Aid Coordinating Agency) ஒதுக்க, அது இவைகளை வளரும் நாடுகளுக்கு ஒதுக்கும். வளரும் நாடுகள், இங்கிலாந்து, அமெரிக்கா, மேற்கு ஜெர்மனி போன்ற நாடுகளுடைய செலாவணியாக இதை மாற்றி அவைகளிடம் தளவாடங்களை வாங்கிக் கொள்ளலாம். உபரி உள்ள நாடு சான்றிதழ்களை மேலும் காப்பு நிதியில் சேர்க்கும். பற்றுக்குறை நாடுகள் தம் சான்றிதழ்களைப் பயன்படுத்திக் கொள்ளலாம். பொன்னை இழக்காமல் பற்றுக்குறையைச் சமாளிக்கலாம். சான்றிதழ்கள் பல இடங்கள் சென்று இறுதியில் உபரி நாடுகளை அடையும். அவை தம் உபரித் தொகைகளை மற்ற நாடுகளுக்குக் கடன் கொடுக்கும்.

[1] The Economist, 6 May 1961. Also H. G. Johnson in Malayan Economic Review, op. cit.

[2] L. B. Yeager, 'International Monetary Relation—Theory, History and Policy (1966)', p. 473.

[3] 'The Stamp Plan—1962 Version', reprinted in H. G. Grubal, 'World Monetary Reform' pp. 80–89.

தற்போதுள்ள ரொக்கப் பற்றுக்குறைக்காக இத் திட்டம் பரிந்துரைக்கப்படவில்லை; மற்றக் காரணங்கள் இதற்கு உள. முன்னேற்றமடைந்த நாடுகள் எல்லாம் ஏற்றுமதி உபரியை (export surplus) அமைக்கவும் விரும்புகின்றன. இதனால் பல நாடுகளின் சக்தி முழுவதும் பயன்படாத நிலை ஏற்படலாம். வளரும் நாடுகளுக்குப் பயன்படக்கூடிய அளவில் உலகம் மேலும் அதிக அளவு உற்பத்தி செய்யலாம். இவ்வாறு பன்னாட்டு உற்பத்தியைப் பெருக்கப் பன்னாட்டுக் கடன் செலாவணியாக்கம் தேவை. உள்நாட்டில் உற்பத்தி பெருகுவதற்கு வங்கிச் செலாவணியாக்கம் உதவுவதுபோல் இதுவும் இருக்கின்றது. நிதிக்குச் செலுத்தும் கட்டணத்தை உயர்த்துவதன் மூலம் அல்லது கடன் வாங்குவதன் மூலம் அல்லது ட்ரிஃபின் திட்டப்படி கடன் கொடுக்க நிதியை அனுமதிப்பதன்மூலம் காப்புத் தொகையை அதிகரிப்பதால் பிரச்சினை தீர்ந்துவிடாது. உறுப்பினர்கள் இன்னல்களுக்கு இலக்காவதும், காப்புச் சாதனங்களைப் பயன்படுத்துவதும் குறைய வேண்டும்.

முதல் திட்டத்தின் குறைபாடுகளை நீக்கும் வகையில் சர் மாக்ஸ்வெல் ஸ்டாம்ப் (Sir Maxwell Stamp) 1962-ல் சில திருத்தங்களைப் புகுத்தினர். தொடர்ந்து உபரித் தொகைகளை ஈட்டும் நாடுகள் நிதியிலிருந்து வெளிச் செல்ல உரிமை பெற வேண்டும். நிதியின் சான்றிதழ்களை வளரும் நாடுகளுக்கு இலவசமாகக் கொடுக்க வேண்டாம், அவைகளைப் பன்னாட்டு வளர்ச்சிக் கழகத்தின் மூலம் (International Development Association) கடனாகக் கொடுக்கலாம். வேறு ஒரு நாட்டின் மைய வங்கி செலுத்தும் தொகையை உறுப்பினர்கள் ஏற்கவேண்டும். ஆனால் இத் தொகைக்கு ஒரு வரம்பு வேண்டும்.

முதலில் நிதி 2000 மிலியன் டாலர் வரை சான்றிதழ்கள் மூலம் கடன் செலாவணியாக்கம் செய்யலாம். இது அமெரிக்க டாலரில் ஓர் அவுன்ஸ் பொன் $ 35 என்ற வீதத்தில் அமைக்கப் பெறும். உரிய மாற்று வீதத்தில் மற்றச் செலாவணிகளாக மாற்றக்கூடியதாகவும் இருக்கும். சான்றிதழ்களை அவைகளுடைய வடிவத்தில் வைத்துக்கொள்ள வேண்டாம். நிதியின் கணக்கில் இவைகளைக் குறித்தால் போதும். உறுப்பினர்களுக்குச் சேரவேண்டிய தொகையில் ஒரு பகுதியை மைய வங்கிகளிடமிருந்து சான்றிதழ்கள் மூலம் வாங்கிக்கொள்வர். இப் பகுதி நிதிக்கு அவர்கள் செலுத்திய கட்டணத்திற்குச் சமமாக இருக்கும். இவ்வாறு பெறும் தொகைக்கு முதல் திட்டத்தில் வரம்பு கிடையாது. நிதியின் சான்றிதழ்களை உறுப்பினர்கள் வரம்பற்ற முறையில் ஏற்கவேண்டும். இச் சான்றிதழ்களை உறுப்பினர்கள்

தம் பொன் காப்புக்குத் துணையாகக் கொள்ளமுடியாது. அவை செலுத்தவேண்டிய தொகைகளுக்காக நிர்ப்பந்தம் ஏற்படும் போது இவைகளைப் பயன்படுத்தலாம். நிதி இச் சான்றிதழ்களைப் பன்னாட்டு வளர்ச்சிக் கழகத்திற்கு (International Development Association) 50 ஆண்டுகளுக்குக் கடனாகக் கொடுக்கும். கழகம் இவைகளைப் பல நாடுகளில் முதலீடுசெய்து பெறும் வருமானத்தை அந்தந்தச் செலாவணிகளில் நிதிக்குச் செலுத்தும். சான்றிதழ்களைக் கொண்டிருக்கும் நாடுகள் அவைகளுடைய அளவுக்குச் சமமாக இத் தொகைகளைப் பெறும். பன்னாட்டு வளர்ச்சிக் கழகத்தின் கடன்கள் சாதாரண முறையில் கொடுக்கப்படுகின்றன. ஒரு நாட்டுக்குச் சான்றிதழ்களைக் கொடுக்கும்போது அது அவைகளுக்கீடாகத் தன் செலாவணியைக் கொடுக்க மறுக்கலாம். அது முழு அளவு சான்றிதழ்களைக் கொண்டிருப்பதால் மேலும் அவைகளை ஏற்க மறுக்கலாம். இந்த நிலையில் பன்னாட்டு நாணயநிதி தன் கையிருப்பிலிருக்கும் தொகையைக் கொண்டு அல்லது பொன்னைக் கொண்டு சான்றிதழ்களை மீட்கவேண்டும். நிதியிலிருந்து பொன்னைப் பெறும் நாடு கூடிய விரைவில் மீண்டும் பொன்னை நிதிக்குச் செலுத்தவேண்டும். இறுதியாக ஒரு நாட்டின் பொருளாதாரம் 'அதிவெப்பநிலையை' அடைந்தால், முழு வேலை நிலையைக் கடந்தால் ஏற்றுமதிக்கான கோரிக்கைகளை ஏற்க முடியாது. இந்த நிலையில் பன்னாட்டு வளர்ச்சிக் கழகத்தின் தொகைகளை உள் நாட்டில் செலவு செய்தல் கூடாதென அறிவிக்க வேண்டும்.

ஸ்டாம்ப் திட்டம் வளரும் நாடுகளுக்கு உதவியளிப்பதுடன் ஒரே முறையில் பன்னாட்டுக் காப்புத் தொகையை உயர்த்தவும் முனைகின்றது. நீண்ட காலக் காப்பு நிதிப் பிரச்சினையையும், திடீரென்று பெருமளவு இடப்பெயர்ச்சியாகும் குறுகியகால முதல் பற்றிய பிரச்சினைகளையும் தீர்ப்பதற்கு இத்திட்டம் எவ்வித ஏற்பாட்டையும் செய்யவில்லை என்பது பேராசிரியர் ஹாரி ஜான்சன் சுட்டிக் காட்டியுள்ள குறைபாடாகும். அடிக்கடி நிதி சான்றிதழ்களை வெளியிட்டு முதல் பிரச்சினையைத் தீர்க்கலாம். நிதி வெளியிடும் $ 2000 மிலியன் (முதல் திட்டப்படி இது $ 3000 மிலியன்) சான்றிதழ்கள் தொடக்க காலத்திய வெளியீடு மட்டுமாகும். இரண்டாவது குறையைப் பொறுத்தவரை குறுகிய கால முதலின் இடப்பெயர்ச்சி தற்காப்பு முறையில் அமைந்துள்ளது. தற்போதுள்ள நிலையில் இதை முழுமையாகக் கட்டுப்படுத்த இயலாது. ஊக வாணிகத் தாக்குதலுக்கிலக்கான ஒரு செலாவணியைக் காப்பதற்குப் பெருமளவு பன்னாட்டுக் காப்புத் தொகையைக் கொள்ளுதல் அல்ல. நடப்புக் கணக்கில்

அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையில் சாதக நிலையை ஏற்படுத்து வதுதான் இதற்குச் சிறந்த தீர்வாகும். 'ஒரு நாடு நடப்புக் கணக்கில் சாதக அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையைக் கொண் டிருக்கும்போது அதன் செலாவணி இடர்ப்பாட்டுக்குட்படுவது சாதாரணமாக நடக்கக்கூடியதல்ல' என்று அவர் குறிப்பிடு கின்றார். ஒரு நாடு பாதகச் செலுத்தல் நிலையைக் கொண் டிருந்தால் அது பணச் சுருக்கம் செய்ய முடியாது. இதைச் சரிக் கட்டுவதற்கு வரிகளையும், பங்கு முறையையும் (quotas) கையாள முடியாது. ஓரளவுக்கு மேல் பணச் சுருக்கம் அபாயகரமாகவும் வீண்விரயத்தை விளைவிக்கக்கூடியதாகவும் இருக்கும். பண வீக்கத்தைவிடத் தீமை பயக்கக்கூடியது. விரும்பும் பலன்களைக் கொடுக்கத் தவறும், அரசியல் ரீதியில் சாத்தியமற்றது. வர்த்தகத்தைக் கட்டுப்படுத்தும் வழக்கங்களைப் பன்னாட்டு ஒப்பந்தங்கள் தடை செய்கின்றன. எனவே செலாவணியின் மாற்று வீதத்தைத் திருத்துவதே சிறந்த வழியாகும். ஆனால் ஊக வாணிகத் தீயை மூட்டும் ஒரு கனலாக இது செயல்படும். இதனால் செலாவணிகள் வீழ்ச்சியடைகின்றன. அண்மையில் நிகழ்ந்த நெருக்கடிகளை இது விளக்விக்கும்.

ஒவ்வொரு நாடும் ஏற்றுமதி உபரியையே (export surplus) விரும்புகின்றது. ஒரு நாட்டின் உபரி மற்றொன்றின் பற்றுக்குறை யாகும். 'இது இசை நாற்காலி (musical chair) விளையாட்டை ஒத்திருக்கின்றது. பற்றுக்குறை விளையாடுவோர்களிடையே அடுத்தடுத்துச் செலுத்தப்படுகின்றது—ஒவ்வொரு நாடும் தன் நிலையைச் சரியாக வைக்க முனைகின்றது. இவ்வாறு செய்யும் போது அடுத்த நாட்டின் நிலையைச் சீர்குலைக்க முயல்கின்றது' என்று சர் மாக்ஸ்வெல் (Sir Maxwell) அழகாகக் குறிப்பிடு கின்றார். நிதி ஆக்கும் கடன் செலாவணியைப் பன்னாட்டு வளர்ச்சிக் கழகம் (ப. வ. க.) மென்மைக் கடனாக வளரும் நாடுகளுக்குக் கொடுக்கும்போது அவை அதைத் தொழில் முதிர்வு பெற்ற நாடுகளில் செலவு செய்யும். இதனால் வளரும் நாடுக ளுடைய அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை பாதக நிலையையும், முன்னேற்றமடைந்த நாடுகளில் சாதகக் கொடுப்பல் நிலையும் ஏற்படும், ஆனால் வளரும் நாடுகளுடைய பாதகக் கொடுப்பல் நிலை அவைகளுடைய செலாவணியைப் பாதிக்காது. ப. வ. கழ கத்தின் மென்மைக் கடன்கள் (soft loans) செலாவணிகளைக் காக் கும். பற்றுக்குறை நாடுகள்தான் பன்னாட்டு நாணய முறைக்குக் கேடு விளைவிக்கலாம். ஸ்டாம்ப் திட்டப்படி அவைகளுடைய எண்ணிக்கை குறையும். ஸ்டாம்ப் திட்டம் ட்ரிஃபின், பான்ஸ்டீன் திட்டங்களின் சிறந்த அம்சங்களைக் கொண்டிருக்கின்றது.

ப. நா. நிதி வெளியிடும் பொன் சான்றிதழ்கள் ட்ரிஃபின் திட்டத்தின் கடன் செலாவணியை ஒத்திருக்கும். இச் சான்றிதழ்களை வளரும் நாடுகளுக்கு மீள்கடன்களாகக் (relent loans) கொடுக்கவேண்டும். தொழில் முதிர்வு பெற்ற நாடுகள் இவைகளைத் தம் மூலதன ஏற்றுமதிக்காகச் செலுத்திய தொகையாக ஏற்க வேண்டும். பர்ன்டீன் திட்டப்படி உள்ள பழக்கத்தை இது ஒத்திருக்கின்றது. அதாவது காப்புத் தொகைத் தீர்வுக் கணக்கைப் (Reserve Settlement Account) பின்னணியாகக் கொண்டு வெளியிடும் டிபெஞ்சர்களை இது ஒத்திருக்கும். சிறப்பு எடுப்பு உரிமை முறையை (special drawing rights) ப. நா. நிதி ஏற்கலாம்; செயல்படுத்தவும் செய்யலாம். இம்முறை மட்டும் பன்னாட்டு ரொக்கப் பிரச்சினையைத் தீர்க்காது, இது சர் மாக்ஸ்வெல் (Sir Maxwell) அவர்களுடைய திட்டத்தில் பாதியாகும். நிதியின் சான்றிதழ்களை ப. வ. கழகத்தின் மூலம் மென்மைக் கடனாகக் கொடுக்கவேண்டிய மற்றொரு பகுதி அமலாகவில்லை. இப்பகுதி சிறப்பு எடுப்பு உரிமை முறையுடன் இணைக்கப்படவில்லை என்று சர் மாக்ஸ்வெல் வருந்துகிறார். இறுதியாக அவருடைய திட்டத்தை முற்றிலும் ஏற்றாலும்கூடப் பிரச்சினைகள் முழுவதும் தீரா என்று அவர் கருதுகின்றார். இடப்பெயர்ச்சியாகும் தொகை பீதியின் விளைவாகத் தாறுமாறாகச் செல்வது தவிர்க்கப்படும். ஆனால் இதை முற்றிலும் தடுக்க இயலாது. இடப் பெயர்ச்சியை ஓரளவு கட்டுப்படுத்த வேண்டும். டாக்டர் வில்லியம்சன் (Dr. Williamson) தீட்டியுள்ள 'கிடை முட்டு முறை'யை (Crawling Peg), அதாவது மாறும் நாணய மாற்றுவீத முறையைக் கையாண்டு ஊக வாணிகத்தைச் சமாளிக்க வேண்டும்.[1]

### பன்னாட்டுப் பொன் நிதித் திட்டம் (International Gold Pool)

அமெரிக்க அரசு 1962ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் வெளியிட்ட ஒரு பொன் நிதித் திட்டத்தைப் பற்றி ஒன்றும் கூறாமல் நம் ஆய்வு முற்றுப்பெறாது. அமெரிக்கா தன் பொன் காப்பு நிதியைப் பாதுகாக்கும் நோக்கத்துடன் இத் திட்டத்தை வகுத்தது. 1960-லிருந்து பொன்னின் தேவை தொடர்ந்து அதிகரித்தது. அதன் வெளி மார்க்கட்டு விலை ஓர் அவுன்ஸ் 40 டாலர் என்ற அளவுக்கு உயர்ந்தது. முதலில் நிர்ணயமான டாலர்-பொன் வீதம் $ 35 = ஓர் அவுன்ஸ் சுத்தப்பொன். இத் திட்டப்படி உறுப்பினர்கள் அளிக்கும் பொன்னைக்கொண்டு ஒரு மையப் பொன் நிதியை நிறுவவேண்டும். பொன்-டாலர்

[1] Sir Maxwell Stamp, How Fourther World Monetary Crises may be Avoided' in Times, London quoted by the New Statesman, December 1968.

வீதத்தின் அடித்தளத்தை அல்லது உச்ச வரம்பை விலை கடக்கும் போது இந்த நிதி பொன்னை வாங்க அல்லது விற்கவேண்டும். அந்த நேரத்தில் பொன்னுக்கு அதிகத் தேவை இருந்தபடியால் உலகப் பொன் நிதி பொன்னை விற்பதைவிட வாங்கும் பொறுப்பையே ஏற்கவேண்டியிருந்தது. பொன்னின் மதிப்பை நிலை நிறுத்தும் முழுப் பொறுப்பையும் இதுகாறும் அமெரிக்காவே மேற்கொண்டிருந்தது. இப் பளுவைப் பொன் நிதி நியாயமான முறையில் எல்லா உறுப்பினர்கள் மீதும் சுமத்தும். பல நாடுகள் டாலர்களைப் பொன்னாக மாற்றவில்லை; டாலருக்கு ஏற்பட்ட இன்னல்களை இவ்வாறு பல நாடுகள் குறைக்க முனைந்தன. ஆனால், புதிய திட்டப்படி இவை மேலும் ஒருபடி முன்னேற வேண்டும். தம் டாலர்களைப் பொன்னாக மாற்றாமல் இருப்பது மட்டும் போதாது. அவைகளுடைய பொன் உலோகத்தை நிதிக்குக் கொடுக்கவேண்டும். அளிப்பைவிடப் பொன்னுக்கு லண்டன் மார்க்கட்டில் தனியார் தேவை மிகவும் அதிகரித்தால் உறுப்பினர்கள் இங்கிலாந்தின் தலைமை வங்கிக்குத் தம் பொன்னைச் செலுத்த வேண்டும். அமெரிக்கப் பொன்னைமட்டும் பெறாமல் மற்ற உறுப்பினர்களுடைய பொன்னையும் பெற்று இவ் வங்கி அதன் விலையை நிலைநிறுத்தவேண்டும். அதாவது தனியார் டாலர்களைப் பொன்னில் மீட்கும் பொறுப்பை மற்ற மைய வங்கிகள் ஏற்கவேண்டும். பொன் விலையின் ஏற்றத் தாழ்வுகளை நீக்குவதற்கு அவசியம் ஏற்படும்போதெல்லாம் அவை இதைச் செய்யவேண்டும். அவை தம் டாலர் நிதியையும் பெருக்கிக் கொள்ளவேண்டும்.

டாலருக்கு இரு விலைகள் — ஒன்று சட்டபூர்வமானது, சாதாரணப் பன்னாட்டுச் செலுத்தல்களுக்குப் பொருத்தமானது. மற்றொன்று, குறைவானது. தம் டாலர்களைப் பொன்னாக மாற்ற முனைவோருக்கான விலை — நிர்ணயம் ஆவதைத் தடுப்பதே இத் திட்டத்தின் நோக்கமாகும். மைய வங்கிகள் பொன் நிதியை இயக்கும்போது மாற்ற முடியாத டாலர்களை அதிக அளவில் பெறலாம். அவை தம் வசமுள்ள டாலரைக் கொடுத்துப் பொன்னாக அதை மாற்றி அமெரிக்காவுக்கு இக்கட்டான நிலையை ஏற்படுத்துவதைத் தடுக்க முனைந்தன. ஆனால், தொடர்ந்து மாற்றாத டாலரைப் பெறுவதற்கும் ஒரு வரம்புண்டு. கால வரம்பின்றி, உச்ச வரம்பின்றி அவை டாலரை ஏற்க மறுக்கலாம். ஆனால், பன்னாட்டுக் கூட்டுறவு இருக்கின்றது என்பதே நாணய மாற்று வீதங்களை அமைதியாக்கும், நம்பிக்கை பாதிக்கப்படுவதையும் தவிர்க்கும்.[1] ஆனால், 'பேசிலில் உள்ள வங்கிகள்

[1] Speech of Dr. Per Jacobsson to the United Nations Economic and Social Council, April 1962.

மாஜினாட் கோட்டின் (Maginot Line) வலிமையை மிகைப் படுத்தக் கூடாது' என்று லண்டன் பத்திரிகை 'எக்கானமிஸ்ட்' (Economist) எச்சரித்துள்ளது.[1] இவ்வெச்சரிக்கையின் உண் மையை 1961 ஆம் ஆண்டின் பொன் நெருக்கடி மெய்ப் பித்தது. பொன் நிதியின் உறுப்பினர்கள் இந்த நெருக்கடியின் கொடுமையைத் தணிப்பதற்கு ஒரு புது முறையை உருவாக்க வேண்டியதாயிற்று. இத் திட்டப்படி தனியாருக்குப் பொன் மார்க்கட்டில் பொன் வாங்குவதற்குப் பொன் நிதியுறுப்பினர்கள் உதவியளிக்க மாட்டார்கள். மைய வங்கிகளுக்கு மட்டும் அவர்கள் பொன்னை விற்பார்கள். தனியாருக்குப் பொன்னின் மார்க்கட்டு விலையில் மாறுதல்கள் ஏற்படலாம். அதன் விலை அவுன்ஸ் $ 35–க்கும் உயரலாம் இது தேவை, அளிப்பைப் பொறுத்திருக்கும். எனவே டாலர் இரு மதிப்புகளைக் கொள்ளும். இதையே பொன் நிதி தவிர்க்க விரும்பியது.

## முடிவுரை

ப. நா. நிதியைச் சீரமைப்பதற்கும் உலக ரொக்கநிலையைப் பெருக்குவதற்கும் அளிக்கப்பட்ட யோசனைகளை இதுவரை பார்த்தோம். இவைகளைப் பொருளியலார், வங்கியர், அரசினர், ப. நா. நிதியினர் முதலியோர் அளித்துள்ளனர். இவைகளைத் தவிர பலர் கவனத்தை ஈர்க்காத அல்லது பிரபலம் குன்றிய சில யோசனைகளும் உள. ஹெய்ல்பெரின் திட்டம், ரூயஃப் திட்டம், ஜொலாட்டோஸ் திட்டம் (Heilperin Plan, Rueff Plan and the Zolotas Plan) முதலியவைகளை இங்குக் குறிப்பிடலாம். பொன் பரிவர்த்தனைத் திட்டத்தின் விளைவாக நீண்ட காலத்தில் காணப்படும் குறைகளை நீக்கவேண்டுமானால் அமெரிக்காவுக்கு வெளியே மைய வங்கிகள் கொண்டுள்ள டாலர் தொகைகளைப் பொன் மூலம் திருப்பிக் கொடுக்க வேண்டும் என்று ரூயஃப் (Rueff) கூறுகின்றார். இதற்காக அமெரிக்காவில் உள்ள 25 சதவீதப் பொன்காப்பு விதி தளர்த்தப்படும். அவர் முறை யாகவும் படிப்படியாகவும் பொன் திட்டம் (gold standard) நிறுவப்பட வேண்டுமென்று வலியுறுத்தினார். ஹெய்ல்பெரினும் தற்போதுள்ள பொன் பரிவர்த்தனைத் திட்டம் கைவிடப்பட்டு, புதியதொரு பொன் திட்டம் உருவாக்கப்பட வேண்டுமென்று குறிப்பிட்டார். அட்லாண்டிக் சமுதாயம் மட்டுமல்லாமல் உலகம் முழுவதும் இத்திட்டத்தை ஏற்க வேண்டும். இதற்கான பொன்னை அமெரிக்க நிதியிலிருந்து பெறாமல் பொன்னின்

[1] The Economist, 21, April, 1962, p. 268.

விலையை உயர்த்தி அதன் மூலம் பெறவேண்டும். ரூயஃபும், ஹெய்பெரினும் பொன் பரிவர்த்தனைத் திட்டத்தை நீக்கிவிட வேண்டுமென்று கருதுகின்றனர். ஆனால் இதற்குமாருக ஜொலாட்டோஸ் அமெரிக்காவும் இங்கிலாந்தும் மற்றச் செலா வணி நிதியை ஈட்டவேண்டும். மாறும் திறன் கொண்ட இச் செலாவணிகள் பொன் உறுதி (gold guarantee) கொண்டிருக்க வேண்டும். தற்போதுள்ள பொன் பரிவர்த்தனைத் திட்டத்தைப் பரவலாக்குவதே நோக்கமாகும்.[1]

உலக வர்த்தகம் விரைந்து பெருகி வருகின்றது. இதற்கு உதவும் நேர்த்தியான பன்னாட்டுச் செலுத்தல் முறையைக் கூடுமானவரையில் உருவாக்குவதே மேற்குறிப்பிட்ட திட்டங் களின் நோக்கம் என்பது அவைகளை ஆராயும்போது புலனு கின்றது. இந்த நோக்கம் ஈடேறுவதற்குத் திட்டங்களை வகுத்த வர்கள் பற்பல வழிகளைப் பரிந்துரைத்துள்ளனர். ப. நா. நிதியை நீக்கி அதற்குப் பதிலாக ஓர் உயர் பன்னாட்டு வங்கியை அமைக்கவேண்டும் என்ற யோசனையிலிருந்து, பன்னாட்டுப் பொன் நிதி ஒன்றை நிறுவவேண்டும் அல்லது நிதியின் கட் டணங்களை (quotas) உயர்த்த வேண்டும் என்ற சாதாரண யோசனைவரைப் பல கருத்துகளை அளித்துள்ளனர். ஊக வாணிகக் குறுகிய கால முதலின் இடப்பெயர்ச்சியும், சில நாடு களில் அவ்வப்போது தோன்றும் அயல்நாட்டுக் கொடுப்பலின் பற்றுக்குறையும் பிரச்சினைகளை விளைவிக்கின்றன. பன்னாட்டு ரொக்கத்திலுள்ள பற்றுக்குறையை ஹாராடும், மற்றவர்களும் குறிப்பிட்டுள்ளபடி ஒரே படியில் பொன்விலையுயர்வு மூலம் தீர்க்க முடியாது. பொன் நிதி முறை (gold pool system) மூலமும் பன்னாட்டுக் கடன் செலாவணியை அவ்வப்போது ஏற்படுத்தி பிரச்சினையைத் தீர்க்கமுடியாது. இவை தற்காலிகத் தீர்வையே கொடுக்கும், நிரந்தரத் தீர்வை கொடுக்காது. தாக்குண்ட நாடுகள் தீர்வுக்காகக் காத்திருக்கவேண்டும். நிரந்தரக் காப்பு கிடைக்காது. குறுகிய கால முதலின் இடப்பெயர்ச்சி திடீரென்று அதிகரிக்கக்கூடும். தற்போதுள்ள பன்னாட்டு ரொக்கத்தைப் பெருக்கினாலும் அல்லது பன்னாட்டுக் கடன் செலாவணியை இரட்டித்தாலும் பிரச்சினை தீராது. இதே காரணங்களினால் சிறப்பு எடுப்பு முறை இதற்கு ஒரு தீர்வு நல்காது, பன்னாட்டுச் செலாவணி முறையின் குறைகளைத் தீர்க்காது.

நடப்புக் கணக்கில் விழும் துண்டு குறுகியகால முதலின் இடப் பெயர்ச்சிக்குக் காரணமாகும். 'அது முதலின் இடப்

[1] H. C. Grubal op. cit., pp. 292–8, 320-8, 329–42.

பெயர்ச்சி என்னும் வெடிக்குத் தீ வைக்கின்றது' என்று சர் மார்க்ஸ்வெல் ஸ்டாம்ப் கூறியுள்ளார். பன்னாட்டு நாணய நிதியின் 'அனுசரித்து உயர்த்தும் முறை' (the adjustable peg system) நாணயமாற்று மார்க்கட்டுக்குக் காப்புக் கொடுக்க அல்லது அதற்கு எதிர்மறைச் செயலைச் செய்ய முனையும்போது ஊக வாணிக நடவடிக்கை தொடங்குகின்றது. பொன் திட்டக் (gold stardard) காலத்தில் செலுத்துப் பிரச்சினைகளைச் சமாளிக்க நாணய மதிப்பை அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற நாடுகள் குறைக்கும் என்று மார்க்கட்டு எதிர்பார்க்க முடியாது. நாணய மதிப்பைக் குறைப்பதற்கு முன் செலுத்துப் பிரச்சினைகளைக் கொண்டுள்ள இந் நாடுகள் தம்மைக் காப்பாற்றிக்கொள்ள முயற்சி செய்யும் என்று எல்லோரும் எதிர்பார்த்திருப்பர். 'அனுசரித்து உயர்த்தும் முறை' நாணய மதிப்புக் குறைப்புக்கு இப்பொழுது மதிப்பளித்துள்ளது. நாணய மதிப்புக் குறைப்பு ஒரு எல்லைக்குட்பட்டிருந்தால் சில சந்தர்ப்பத்தில் அதை நிதி ஆதரிக்கும் பன்னாட்டு நாணய முறை சீராக இயங்குவதற்கு 'அனுசரித்து உயர்த்தும் முறையை' நீக்குவது இன்றியமையாத குறைந்தபட்சத் தேவையாகும். இரு வழிகள் இருக்கின்றன. போருக்கு முன் இருந்த நிலையான மாற்றுவீத (fixed exchange rates) முறையை அல்லது நெகிழ்வுள்ள சுதந்திரமாக இயங்கும் மாற்றுவீத முறையைப் பின்பற்ற வேண்டும். ஒரு சிலரைத் தவிர இந்த முறைகளை வேறு எவரும் விரும்பமாட்டார்கள். இந்த நிலையில் அனுசரித்து உயர்த்தும் முறையைக் கையாள வேண்டிய கட்டாயம் ஏற்படுகின்றது. இத்துடன் நிதியின் காப்புத் தொகைகளை உயர்த்த வேண்டும். அதை மைய வங்கிகளுக்கோர் மைய வங்கியாக அமைக்க வேண்டும். பன்னாட்டு அளவில் இறுதியில் கடன் கொடுக்கும் நிலையமாகவும் அது இயங்கவேண்டும்; நிதி ஆக்கும் கடன் செலாவணியை வளரும் நாடுகளுக்குக் கடனாகக் கொடுக்கும் ஸ்டாம்ப் திட்டத்தையும் செயல்படுத்தவேண்டும்.

நாணய மாற்று வீத விதிகளைத் தளர்த்தும் வகையில் பன்னாட்டு நாணய நிதியின் ஒப்பந்தப் பத்திரத்தைத் திருத்த வேண்டும் என்று அமெரிக்கா குறிப்பிட்டது. இத் திருத்தங்களைக் கீழே காணலாம் ; (1) பன்னாட்டு நாணய மாற்று மார்க்கட்டில் மாற்று வீதங்களின் ஏற்றத் தாழ்வுகள் விரிவான எல்லைகளுக்குட்பட்டிருக்கவேண்டும். (2) செலாவணிகள் தற்காலிகமாக மிதப்பதைப் ப. நா. நிதி ஏற்கவேண்டும். (3) 'கிடைமுட்டு முறையின்' (crawling peg) மாறுதல்களை நிதி ஏற்கவேண்டும்.

தற்போதுள்ள முறையின் குறைகளை நீக்கப் பழைய தானுக இயங்கும் பொன் முறையை மீட்கவேண்டும் என்று பிரெஞ்சு நாட்டுத் தலைவர் டிகாலும், மற்றச் சிலரும் கூறுகின்றனர். ஆனால், இது பிற்போக்கான முடிவாகும். புதிய முறையில் பொன் அணிவர் விருப்பத்தை ஒட்டித் தலைமை இடத்தைவிட்டு ஒரு துணை இடத்திற்குச் செலுத்தப்பட்டுள்ளது. ஆனால், டிகால் யோசனை பின் நோக்கியதாகும். 1930–40-ல் பொன் திட்டத்தின் குறைபாடுகள் அதன் வீழ்ச்சிக்குக் காரணமாக இருந்தன. இத் திட்டத்தை மீண்டும் நிறுவும் யோசனை ஒரு கனவாகும் என்று பெர் ஜாக்கோப்ஸன் (Per Jacobsson) கூறுகின்றார். அது ஓர் 'அழகிய கனவாக'க் கூட இருக்காது என்றும் குறிப்பிடுகின்றார்.

அண்மை ஆண்டுகளின் நிகழ்ச்சிகள் பிரட்டன் உட்ஸ் திட்டத்தைத் தாக்கியுள்ளன. சுயேச்சையான செலாவணிக் கொள்கை, தடையற்ற மூலதன இடப்பெயர்ச்சி, நிலையான நாணய மாற்று வீதங்கள் 'இவை மூன்றும் ஒன்றுடன் ஒன்று ஒவ்வாதவை.' ஊக வாணிக மூலதன இடப்பெயர்ச்சியும், ஏராளமாக யூரோ டாலரும், அமெரிக்காவின் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையின் தொடர்ந்துவரும் பற்றுக்குறையும் பெரிய பெரிய நாடுகளின் செலாவணி நெருக்கடியை விளைவித்தன; காப்புச் செலாவணி என்று டாலர் மீது மக்கள் கொண்டிருந்த நம்பிக்கையைத் தகர்த்தது. அடுத்தடுத்து டாலரின் மதிப்பைக் குறைத்தனர். ஜெர்மன் மார்க்கின் மதிப்பையும், ஜப்பானிய யென்னின் மதிப்பையும் உயர்த்தினர்; பல செலாவணிகளின் கூட்டு மிதப்பு (joint float) நெகிழ்வுள்ள மாற்றுவீத சகாப்தத்தை ஆரம்பித்துவிட்டது. ப. நா. நிதி பின் தள்ளப்பட்டுவிட்டது. 1971-ல் ஸ்மித் ஸோனிய ஒப்பந்தப்படி (Smith Sonian Agreement) பன்னாட்டு நாணய உறவுகளை மீட்க முனைந்தனர். ஆனால் இம் முயற்சி வெற்றிபெறவில்லை. ஊக வாணிகம் அதிகரித்து விட்டது. 1972ஆம் ஆண்டு ஜூன் 27ஆம் நாள் ப.நா. நிதி ஒரு தற்காலிக இயக்குநர் குழுவை—இருபது உறுப்பினர்கள் கொண்ட குழு என்று இதை அழைத்தனர் — அமைத்தது. இது பன்னாட்டு நாணய நிதியைச் சீரமைத்துப் பிரச்சினைகளைத் தீர்க்கவேண்டும். ப. நா. நிதி இரு அடிப்படைக் குறைபாடுகளைக் கொண்டிருக்கின்றது. நிதி ஒரு பன்னாட்டுச் செலாவணியை அனைவரும் ஏற்கக்கூடிய, மற்றச் செலாவணிகளுடன் (டாலர் உள்பட) தொடர்பு வீதங்கள் கொண்டுள்ள — ஒன்றை உருவாக்கத் தவறிவிட்டது. கீன்ஸ் பான்சர் (Bancor) என்றழைத்த இத்தகைய செலாவணியைத்தான் இன்று சிறப்பு எடுப்பு உரிமை

அல்லது உலகச் செலாவணி என்று கூறுகின்றோம். இரண்டாவதாகப் பன்னாட்டு வர்த்தகத்தைக் கண்காணிக்கத் தற்போது நிறுவனம் ஒன்றும் இல்லை. சில நாடுகள் மிக அதிகமான வர்த்தக உபரியையும், சில பற்றுக்குறையையும் கொள்வதைத் தடுத்து உலக வர்த்தகத்தை ஒழுங்குபடுத்துவதற்கு ஒரு நிறுவனம் தேவை. இருபது உறுப்பினர்களின் குழு புதிய பன்னாட்டு நாணய முறையை உருவாக்க முயற்சி செய்யும்போது கீழ்க்கண்டவற்றைக் கருத்தில் கொள்ளவேண்டும். (1) தடையற்ற முறையில் பன்னாட்டு வர்த்தகம் நடைபெறுவதற்குகந்த முறையில் போதிய ரொக்கநிலை இருத்தல் வேண்டும். (2) இரண்டாவதாக, தடையற்றவாறு மாற்று வீதங்களில் ஏற்படும் ஏற்றத் தாழ்வுகளை நிறுத்தவேண்டும். செலாவணிகளை ஒன்றுக்கொன்று எளிய முறையில் மாற்றிக்கொள்வதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். (3) மூன்றாவதாக யூரோ டாலர் அடிக்கடி ஸ்திர நிலையைக் கெடுக்கின்றது. இக் கணக்கைத் தீர்க்க வழிவகுக்க வேண்டும். (4) இறுதியாகப் பொருளாதாரத் துறையில் பின் தங்கியுள்ள நாடுகள் முன்னேறுவதற்கு உதவி நல்கவும் வழி வகுக்கவேண்டும்.

---

# மேற்கோள் நூற்பட்டியல்

## Books


Allen, A. M., Cope, S. R. and Dark, L. H., etc. 'Commercial Banking Legislation and Control', 1938.

Arndt, H. W., 'The Australian Trading Banks', 1958.

Aschheim, J., 'Techniques of Monetary Control', 1961.

Aufricht, Hans, 'Central Banking Legislation', 1961 (IMF Publication).

Bagehot, Walter, 'Lombard Street' (John Murray and Sons, London, 1873).

Balogh, T., etc., 'The Economics of Full Employment' (Studies Prepared at Oxford University Institute of Statistics), 1944.

Basu, S. K., 'Industrial Finance in India', (4th Edition), 1961 (Calcutta University).

Basu, S. K., 'Theory and Practice of Development Banking' (Asia Publishing House, Bombay), 1965.

Basu, S. K., 'Economics of Hire Purchase Credit' (Asia Publishing House, Bombay), 1970.

Basu, S. K., 'Central Banking in the Emerging Countries' (Asia Publishing House, Bombay), 1967.

Basu, S. K. and Mukherjee, S. B., 'Survey of Hire Purchase Finance in Greater Calcutta' (Oxford Book and Stationery), 1964.

Beckhart, B. H., 'Banking Systems', 1954.

Boskey, Shirley. 'Principles and Practices of Development Banking'.

Brown, C. V., 'Government and Banking in Western Nigeria', 1964.

Chandler, L. V., 'Benjamin Strong, Central Banker', 1958.

Chandler, L. V., 'Central Banking and Economic Development', Bombay University, 1962.

Clapham, Sir John. 'The Bank of England. A History', Vols. I-II, 1945.

Cobbold, Lord., 'Some Thoughts on Central Banking', 1964.

Coombs, H. C., 'Development of Monetary Policy in Australia', 1956.

Crick, W.F. (Ed.), 'Commonwealth Banking Systems' (Clarendon Press, Oxford), 1965.

Davies, S. G. (Ed.), 'Central Banking in South and East Asia' (Hongkong University Press), 1960.

Deshmukh, C.D., 'Central Banking in India, A Retrospect, 1948.

Diamond, William., 'Development Banks'.

Dunbar, C. F., 'The Theory and Practice of Banking'.

Exter, John, 'Report on the Establishment of a Central Bank for Ceylon', 1949.

Fernandes, May, 'The Arguments on Nationalisation of Banks in India', 1964.

Fforde, J. S., 'The Federal Reserve System', 1945-49, 1954.

Fisher, J.L., 'Report on the Desirability and Practicability of a Central Bank in Nigeria', 1952.

Fousek, P. G., 'Foreign Central Banking: The Instruments of Monetary Policy', 1957.

Goldsmith, R. W., 'Financial Intermediaries in the American Economy since', 1900.

Goodbar, J. E., 'Managing People's Money', 1935.

Greaves, I. D. A., 'Colonial Monetary Conditions' (H.M.S.O.), 1953.

Grove, D. L., 'New Guatemalan Bank Law'.

Grubal. H. G. (Ed.), 'World Monetary Reform: Plans and Issues'.

Gurley, J. G. and Shaw, E. S., 'Money in a Theory of Finance', 1960.

Haberler, G., 'Consumer Instalment Credit and Economic Fluctuations', (NBER), 1942.

Harris, Ralph, Noylor, M. and Seldon, Arthur, 'Hire Purchase in a Free Society' (Hutchinson), 1961.

Hart, A. G., 'Money Debt and Economic Activity', 1953.

Hicks, Ursula. 'Development Finance'.

Iengar, H. V. R., 'Monetary Policy and Economic Growth', 1962.

'Income, Employment and Public Policy', (Essays in Honour of Prof. Hansen).

Jacobsson, Per. Lectures, 1965-1969.

Jacoby, N. H. and Saulneir, R. G., 'Term Lending to Business', 1942.

Johnson, G.G., 'The Treasury and Monetary Policy', 1933-38.

Keynes, J. M., 'A Treatise on Money,' Vols. I-II, 1930.

Keynes, J. M., 'The General Theory of Employment, Interest and Money', 1936.

King, John A., 'Economic Development Projects and their Appraisal' (John Hopkins Press), 1937.

Kisch, Sir Cecil and Elkin, W.A., 'Central Banks' (Macmillan), 1928.

Kock, De., 'Central Banking', 1954.

Loynes, J.B., 'Report on the Establishment of a Nigerian Central Bank', 1957.

Mints, L. W., 'A History of Banking Theory', 1945.

Nevin, E., 'Capital Funds in Underdeveloped Countries', 1961.

Newlyn, W. T. and Rowan, D. C., 'Money and Banking in Colonial Africa' (Oxford), 1954.

Northrop, M. B., 'Control Policies of the Reichsbank, 1938.

Oliver, F. R., 'The Control of Hirc Purchase', (George Allen and Unwin, London), 1961.

Patrick, H. T., 'Monetary Policy and Central Banking in Contemporary Japan'.

Plumptre, A.F.W., 'Central Banking in the British Dominions', 1940.

Prochnow, H. V. (Ed.), 'The Federal Reserve System'.

Ritter, L. S. (Ed.), 'Money and Economic Activity'.

Sayers, R. S., 'Modern Banking'.

Sayers, R. S., 'American Banking'.

Sayers, R. S., 'Central Banking after Bagehot', 1957.

Scammell, W. M., 'International Monetary Policy', 1961.

Schlesinger, E. R., 'Multiple Exchange Rates and Economic Development'.

Sen, S. N., 'Central Banking in Undeveloped Money Markets', 1952.

Triffin, R., 'Monetary and Banking Reform in Paraguay'.

Triffin, R., 'Gold and the Dollar Crisis', 1961.

Viner, J., 'Studies in the Theory of International Trade', 1937.

Wallich, H. C. and Triffin, R., 'Monetary and Banking Legislation of the Dominican Republic'.

Watkins, L. L., 'Commercial Banking Reform in the United States'.

White, A. B., 'The Nationalisation of Banking'.

Whittlesey, C. R. and Wilson, J.S.G. (Ed.), 'Essays in Money and Banking in Honour of Prof. R. S. Sayers', (Clarendon Press, Oxford), 1968.

Wills, Parker., 'Theory and Practice of Central Banking with special reference to the Federal Reserve System'.

Yeager, L. B., 'International Monetary Relation in Theory, History and Policy', 1966.

**Bank Publications and Reports**

Annual Reports of the Central Banks of Malaysia, Ceylon, Pakistan, Rhodesia and Nyasaland, Libya, Ghana, Nigeria, Sudan, Moroco, Tunisia, etc.
Annual Reports of the Board of Governors, Federal Reserve System.
Report of D. R. Gadgil Study Committee, 1969.
Report by Sir Cecil Trevor on Banking Conditions in the Gold Coast on the question of a Central Bank, Accra, 1951.
'Federal Reserve Bulletin'.
'Federal Reserve Bank of New York Monthly Review'.
'Reserve Bank of India Bulletin'.
'Banca Nazionale Del Lavoro (Quarterly Review)'.
'Lloyds Bank Review'.
'Midland Bank Review'.
'National and Grindlays Bank Monthly Review'.
Reports of the Federal Deposit Insurance Corporation.
Reports on Currency and Finance, Reserve Bank of India.
Reports of the Central Board of Directors, Reserve Bank of India.
Members of the Board of Governors, 'Federal Reserve Policy', Economic Studies. No. 8.
Annual Reports of the Asian Development Bank.
Articles of Agreement establishing the Asian Development Bank, 1966.
United Commercial Bank Quarterly Review and Fortnightly Business Letter (India).
Report of the Working Group on State Finance Corporations, 1964.
Annual Reports of the Commonwealth Bank and of the Reserve Bank of Australia.
Annual Reports of the Bank of Canada.
Annual Reports of the Bank of England.
Statistical Tables relating to Banks in India (Published by the Reserve Bank of India).
Union Bank of Burma Act, 1952.

Organic Laws of the Central Banks of the Dominican Republic (1947), Gautemala (1946), Paraguay (1944), and Costa Rica (1953).
State Bank of Pakistan Act, 1956.
Central Bank of Nigeria Act, 1958 (as amended in 1962).
The Bank of Ghana Act, 1959 (as amended in 1963).
The Bank of Rhodesia and Nyasaland Act, 1950.
Central Banking Law of Cuba.
Law of the Central Bank of Honduras, 1950.
Monetary Law Act of Ceylon, 1949.
The Philippines Central Bank Act, 1948.
Bank of Korea Act, April 21, 1950.
Report of Dr. Erwin Blumenthal of the Deutsche Bundesbank.
Law No. 30 of 1955 establishing the Bank of Libya (as amended by the Banking Law No. 4, February 1963).

**League of Nations and United Nations Publications and Official Reports**

Memorandum on Commercial Banks 1913-29.
Memorandum on Commercial Banks 1925-33.
Money and Banking, 1936-37, Vols. I-II.
Money and Banking, 1937-38, Vol. I
Money and Banking, 1938-39, Vol. II.
Money and Banking, 1939-40, Vol. I (Monetary Review).
Money and Banking, 1940-42.
Money and Banking, 1942-44.
'International Currency Experience', 1944'.
Report on the G ld Delegation Committee, 1932.
World Economic Survey.
Annual Reports of the IMF, World Bank, IFC(W) and IDA.
'International Reserves and Liquidity (IMF)'.
'Staff Papers (IMF)'.
Annual Reports of the IFCI, ICICI, NIDC, IDBI.
'Consumer Instalment Credit' (Board of Governors of the Federal Reserve System), 1957.
Report of the Committee on the Monetary System (Radcliffe Report). Also Evidences (Oral and Written).
National Board for Prices and Incomes Report No. 32.
'Bank Charges' (H.M.S.O. Cmnd. 3292, 1967).

## Journals and Periodicals

'American Economic Review'.
'Arthaniti', (Calcutta University).
'Artha Vijnana', (Poona).
'The Bankers, Magazine'.
'The Banker', (London).
'Capital', (Calcuta).
'Economical, (London).
'The Economic Journal', (London).
'Journal of Finance', (U.S.A).
'The Economic Record' (Australia).
'The Economist', London.
'The Economist', Banking Supplement.
'Indian Economic Journal' (Bombay).
'Indian Economic Review' (Delhi).
'Journal of the London Institute of Bankers'.
'Journal of the Institute of Bankers' (Pakistan).
'Journal of Political Economy'.
'Malaysian Economic Review'.
'Quarterly Journal of Economics'.
'Review of Economics and Statistics'.
'Review of Economic Studies'.
'The Statist', (London).
'The Statist, British Banking Section'.
'The Statist, International Banking Section.
'International Financial News Survey'.

# பொருட்குறிப்பு அகராதி

ச

---